வம்பு அவிழ் - வாசனையோடு விரிகின்ற, மலர் - தாமரை மலர்போலும், அடி - திருவடியை, மனத்து - எமதுள்ளத்தில், இருத்துவாம் - இருத்திக் கொள்வோம் (யாம்) எ - று.

செம்பொருள் என்றது வீடு பேற்றுக்குக் காரணமாகிய பொருள். தெரிவித்து எனற்பாலது தெரித்து என்றாயிற்று. விகாரவகையான். பவம் - வடசொல். உம்பர் இடவாகு பெயர். மலர் எனப் பொதுப்படக் கூறினாரேனும் திருவடியென மேல்வருதலால் தாமரைமலரையே குறித்தது. "பூவிற்சிறந்தது பொறிவாழ் பூவே," "பூவிற்குத் தாமரையே" என்றற் றொடக்கத்தன வற்றானும் இவ்விஷயம் இனிது விளங்கும். இருத்துவாம் என்றது மறவேம் என்றவாறு. (எ)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

மேற்படி வேறு

மேவ ரும்பர மானந்த வீட்டி னுட்
டாவி னன்மணங் காணிய சார்ந்தவர்
யாவ ரும்புகு வித்தருள் செந்தமிழ்ப்
பாவ லன்மலர்த் தாண்முதல் பற்றுவாம்.

(இ - ள்.) தாவு இல் - கெடுதலில்லாத, நல்மணம் காணிய - சிறந்த மணக்கோலத்தைக் காணும்பொருட்டு, சார்ந்தவர் யாவரும் - வந்தவரெல்லாரையும், மேவு அரு-அடைதற்கரிய, பரமம் ஆநந்தம்-பேரின்பமயமாயிருக்கிற, வீட்டினுள் - முத்தியுலகில், புகுவித்தருள் - செலுத்தியருள்கிற, செந்தமிழ் பா - செந்தமிழ்ப் பாடல்களைப் பாடுவதில், வல்லன் - வல்லவராகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரது, மலர் தாள் - தாமரை மலர்போலுந் திருவடியை, முதல் - முதற்பொருளாக, பற்றுவாம் - ஆசிரயிப்போம் (யாம்) எ - று.

தாவு - கெடுதல். இதற்குத் தா பகுதி உகரம் தொழிற்பெயர் விகுதி. "தாவாத வின்பம்" என்றார் பிறரும். மணக்கோலம் - விவாஹ வேஷம். பரமாநந்த வீடு என்றது முத்தியுலகை. இது அந்தமி லின்பத் தழிவில் வீடாதலால் மேவரு என்னும் விசேடணங் கொடுத்தார். புகுவித்தல் - புகச்செலுத்தல். வல்லன் வன்மைப் பண்படியாகப் பிறந்த பெயர். மேவரும் பரமாநந்த வீடு "புற்றுமாய் மரமாய்ப் புனல்காலே யுண்டியா யண்டவாணரும் பிறரும் வற்றி"யும் அடைதற் கரிய முத்தியுலகு. இதனை யடையச்செய்தன வாதலால் இவரது செந்தமிழ்ப் பாவினது ஈடெடுப்பில்லாத மேன்மையானது விளங்கிற்று. பற்றுதல் - இறுகப் பிடித்தல். முதல் ஆகுபெயர். (அ)

## திருநாவுக்கரசுநாயனார்

**வேற்று ருக்கொள் விதியறி யாவரன்**
**கீற்று வெண்பிறைக் கேழ்கிளர் செஞ்சடை**
**யாற்று ணைச்சுமை யேற்று மருந்தமிழ்**
**மாற்ற ருந்தவத் தோனை வழுத்துவாம்.**

(இ - ள்.) வேற்றுருக்கொள் - வேறு வடிவங்கொண்ட, விதி - பிரமன், அறியா - கண்டறியாத, அரன் - சிவபெருமானது, கீற்று - கீற்றுருவாகிய, வெள் - வெண்மையாகிய, பிறை - பிறையினது, கேழ் - நிறம், கிளர் - விளங்குகின்ற, செஞ்சடை - செவந்த சடாபாரத்தின் மீது, ஆற்றுணை - கட்டமுதின், சுமை - சுமையை, ஏற்றும்-ஏற்றின, அரு - அருமையாகிய, தமிழ் - தமிழ்ப் பாடல்களை யருளிச்செய்த, மாற்று அரு - ஒப்பற்ற, தவத்தோனை - தவத்தையுடையவனாகிய திருநாவுக்கரசு நாயனாரை, வழுத்துவாம் - துதிசெய்வாம் (யாம்) எ - று.

வேற்றுரு என்றது அன்னவுரு. இது சிவபிரானது திருமுடியைக் காண்டற் பொருட்டுக் கொள்ளப்பட்டது. கீற்று - துண்டு. (கண்டம்) பிறை - ஒரு கலையாகிய சந்த்ரகண்டம். ஆற்றுணை - யாற்றைக் கண்டவிடத் தவிழ்த்துண்ணு முணவு. இதற்குத் தோட்கோப்பு என்றும் ஒரு பெயர் வழங்கும். இதற்குத் தோளில் கோத்துக்கொண்டு செல்வதென்பது பொருள். வழுத்தல் - துதித்தல். பிரமன் அன்ன வுருக்கொண்டு பறந்துங் காணவொண்ணாத சிவபெருமானது திருமுடிமீது வாற்றுணைச் சுமையை யேற்று மருந்தமிழ் என்றதனால் பாடலின் மகிமை விளங்கிற்று. தவத்தான் முடியாத காரியம் ஒன்றில்லை என்பதை யறிவுறுத்தற்கு மாற்றருந் தவத்தோன் என்றார். "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம், ஈண்டு முயலப் படும்" என்றார் மாதானுபங்கியார். வழுத்தல் - துதித்தல். (௧)

## சுந்தரமூர்த்திநாயனார்

**மாத ரிற்கண் மழுவலத் தேந்திய**
**வாதி யைத்திரு மாலு மறிகலாப்**
**பாத முற்றுஞ் சிவந்திடப் பண்டோர்நா**
**டூது விட்ட புலவற் றொழுவமால்.**

(இ - ள்.) பண்டு - பூர்வகாலத்தில், ஓர் நாள் - ஒரு தினம், மழு - மழுப்படையை, வலத்து ஏந்திய - வலக்கரத்தில் தாங்கின, ஆதியை - முதல்வனாகிய சிவபிரானை, திருமாலும் அறிகலா - விட்டுணுவும் கண்டறியாத, பாதம் முற்றும் - திருவடிமுழுதும், சிவந்திட - சிவக்கும்படி, மாதர் இல்கண் - பெண்கள் வீட்டுக்கு, தூதுவிட்ட - தூதனுப்பின, புலவன் - புலவராகிய சுந்தரமூர்த்தி நாயனாரை, தொழுவம் - வணங்குவோம் (யாம்) எ - று.

தனக்கு முற்பட்டவ னொருவனையிலனாதல்பற்றிச் சிவபெருமானை ஆதி யென்றார். திருமாலும் என்னும் உம்மை உயர்வு சிறப்பு. திருமாலும் அறிகலாப் பாதம் என்றது அத் திருமால் முற்காலத்தில் ஏனரூபமாய் நிலந்தொட்டதைக் குறித்தது. மாதர் என்றது பரவையாரையும் சங்கிலியாரையும். இல்கண் உருபு மயக்கம். புலவன் என்றார் கல்வியறிவிற் சிறந்தோனாதலால். புலம் - அறிவு. (க0)

### மாணிக்கவாசக சுவாமிகள்

வஞ்சி நுண்ணிடை மால்வரை மங்கைபூண்
டுஞ்சு வெம்முலைத் தொய்யி லெழுதுகைக்
கஞ்ச நோவக் கடவு ளெழுதுமச்
செஞ்சு வைத்தமி ழோனடி சேர்குவாம்.

(இ - ள்.) வஞ்சி - வஞ்சிக் கொடிபோலும், நுண் இடை - நுட்பமாகிய இடையையுடைய, மால் - பெரிய, வரை மங்கை - மலை மடந்தையின், பூண் துஞ்சு - ஆபரணங்கள் தூங்கப்பெற்ற, வெம் - விருப்பத்தையுண்டாக்குகிற, முலை - தனதடத்தில், தொய்யில் எழுது - சந்தனக்கோலத்தை யெழுதுகிற, கை - திருக்கரமாகிய, கஞ்சம் - தாமரைமலர், நோவ - வருந்தும் வண்ணம், கடவுள் - சிவபிரானனவர், எழுதும் - எழுதின, அ - அந்த, செஞ்சுவை - மிக்க சுவையையுடைய, தமிழோன் - தமிழ்ப் புலவராகிய மாணிக்கவாசக சுவாமிகளுடைய, அடி - திருவடியை, சேர்குவாம் - அடைவோம் (யாம்) எ - று.

வஞ்சி யென்பது கொடிக்குப் பொதுப்பெயரெனக் கோடலுமாம். வரைமங்கை யென்றது உமாதேவியை. பூண் ஆகுபெயர். பூணினது இன்றியமையாமை விளக்குதற்குப் பூண்துஞ்சு என்றார். கடவுள் தொழிலாகுபெயர். இதற்குத் தத்துவாதீதர் என்பது பொருள். அதீதர் - கடந்தவர். செஞ்சுவை யென்பதில் செம்மை மிகுதிப் பொருட்டு. (கக)

### காரைக்காலம்மையார்

தோற்ற மில்பரஞ் சோதிதன் வாய்திறந்
தாற்ற வன்புட னம்மையே யென்றுமோர்
பேற்றை முன்பெறப் பேயுரு வெய்திய
சாற்ற ரும்புகழ்த் தாயை வணங்குவாம்.

(இ - ள்.) தோற்றம் இல் - (ஒரு பொருளினின்றுந்) தோன்றுதலில்லாத, பரஞ்சோதி - சிவபிரான், தன் வாய் திறந்து - தன் திருவாய் மலர்ந்து, ஆற்ற அன்புடன் - பேரன்புடனே, 'அம்மையே என்னும் - தாயேயென்றழைத்த, ஓர் பேற்றை - ஒப்பற்ற பேற்றினை, முன்பெற - முத்

காலத்தில் பெறும் பொருட்டு, பேய் உரு எய்திய - பேய் வடிவை யடைந்த, சாற்று அரு - சொல்லுதற் கரிய, புகழ் - புகழையுடைய, தாயை - காரைக்காலம்மையாரை, வணங்குவாம் - வணக்கம் செய்வோம் (யாம்) எ - று.

பேரொளி யுருவினனாதலால் சிவபிரானை பரஞ்சோதி யென்றார். "ஆற்றவறஞ்செய் தருளுடையீ ராகுமின்" என்புழிப்போல ஈண்டும் ஆற்ற என்பது மிகுதிப் பொருடந்து நின்றது. பேறு - பெறற்குரியது. (இலாபம்) 'பேயுரு வெய்திய காரணத்தானே இவ் வம்மையார்க்குக் காரைக்காற்பேய் என்றொரு திருப்பெயரும் வழங்கலாயிற்று. (கஉ)

## சேரமான் பெருமாணுயனூர், காடவர்கோனுயனூர்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

**வெள்ளியங் குன்றத் துச்சி வீற்றிருந் தருள்வோன் கேட்பத்**
**தெள்ளமு தனைய தீஞ்சொற் றிருவுலாச் செய்யுள் செய்தோன்**
**றள்ளுடம் பிழித்து முன்னோன் றலந்தொறும் புனைவெண் பாட்டு**
**வள்ளலென் றிவர்கள் செம்பொன் மலரடி வணக்கஞ் செய்வாம்.**

(இ - ள்.) வெள்ளியங் குன்றத்து - வெள்ளிமலையின், உச்சி - சிகரத்தில், வீற்றிருந் தருள்வோன் - வீற்றிருந் தருள்வோனாகிய சிவபிரான், கேட்ப - கேட்க, தெள் அமுது அனைய - தெளிவாகிய அமிர்தத்தை நிகர்த்த, தீ சொல் - இன்சொற்க ளமைந்த, திருவுலா செய்யுள் - திருவுலாவென்னும் பெயரையுடைய பிரபந்தத்தை, செய்தோன் - செய்தவன், தள் உடம்பு இழித்து - ஒழிக்கத்தகுந்த உடலையிழித்து, முன்னோன் தலம்தொறும் - சிவாலயந்தோறும், புனை - அலங்கரித்துப் பாடின, வெண்பாட்டு - வெண்பாக்களை யுடைய, வள்ளல் - உதாரசீலர், என்ற இவர்கள் - என்று சொல்லப்பட்ட இவ் விருவருடைய, செம்பொன் - செம்பொன்னை னியன்ற, மலர் - தாமரை மலர்போலும், அடி - நவடியை, வணக்கம் செய்வாம் - வணங்குவோம் (யாம்) எ - று.

வெள்ளியங் குன்றம் என்பதில் அம் சாரியை. அழகு என்றலு மொன்று. தெள்ளமு தனைய தீஞ்சொற் றிருவுலாச் செய்யுள் என்றது திருக்கைலாய ஞானவுலாவை. திருவுலாச் செய்யுள் செய்தோன் என்றது சேரமான் பெருமாணுயனாரை. முன்னோன் றலந்தொறும் புனை வெண் பாட்டு வள்ளல் என்றது காடவர்கோனுயனாரை. வெண்பாட்டு - வெண்பா. இது தொகையால் இருபத்துநான்கு. என்ற இவர்கள் எனற்பாலது என்றிவர்கள் என நிலைமொழி யீறு தொகுத்தலாயிற்று. பொன்மலர் - பொற்றாமரைமலர். பொன் அழகு எனினுமாம். (கங)

## தமிழ்த்தெய்வம்

**மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி**
**யிறைவர்தம் பெயரை நாட்டி யிலக்கணஞ் செய்யப் பெற்றே**
**யறைகடல் வரைப்பிற் பாடை யனைத்துமவென் றாரி யத்தோ**
**டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை யுண்ணினைந் தேத்தல் செய்வாம்.**

(இ - ள்.) மதிமுகிழ் - சந்த்ரகண்டத்தை, முடித்த - சூடின, வேணி - சடாபாரத்தையுடைய, இறைவர்-சிவபெருமானனவர், மறை - வேதமாகிய, முதல் - முதனூலை, கிளந்த - சொல்லியருளின, வாயால் - திருவாயினால், தம்பெயரை நாட்டி - தமது பெயரையிட்டு, இலக்கணஞ் செய்யப் பெற்று - இலக்கணநூலொன் றருளிச் செய்யப்பெற்று, அறை - சத்திக்கிற, கடல் - கடல் சூழ்ந்த, வரைப்பில் உலகத்திலுள்ள, பாடை அனைத்தும் வென்று - எல்லாப் பாடைகளையுஞ் செயித்து, ஆரியத்தோடு - ஆரிய பாடையோடு, உறழ்தரு - ஒத்திருக்கிற, தமிழ்த் தெய்வத்தை - தமிழாகிய தெய்வத்தை, உள் - மனத்தால், நினைந்து - தியானித்து, ஏத்தல் செய்வாம் - துதித்தல் செய்வோம் (யாம்) எ - று.

மதி - மது இ எனப் பிரித்து அமிர்தத்தை தன்னிடத்திலுடையது எனப் பொருள் கொள்ளப் படுவதோர் சொல்லாதலால் இது காரணப் பெயர். மது - அமிர்தம். இ வினைமுதற் பொருண்மை விகுதி. வேணி - வடசொல். இறைமைத் தன்மையில் மிக்காராதலால் சிவபிரானை இன்னதற்கு இறைவர் என்னுது வாளா இறைவரென்றே மொழிந்தார். இறைவர் தம்பெயரை நாட்டி யிலக்கணஞ் செய்யப்பெற்ற நூல் இறையனு ரகப்பொருள் என்பது. இது திருவாலவாயி லெழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுள் தாம் மதுரைச் சங்கத்துத் தலைவரா யெழுந்தருளி யிருந்து பாண்டியன் வேண்டுகோளால் அருளிச் செய்யப் பெற்றது. இதனைக் களவியல் எனவுங் கூறுப. இதற்குக் கடைச்சங்கத்துப் புலவர்களிற் சிறந்த நக்கீரதேவர் உரையிட்டருளினர். மற்றைப் புலவர்களிற் சிலரும் உரையெழுதி, தாங்கள் வரைந்த வுரையே சிறந்ததென்று வாதிடலாயின காலத்தில், முருகவேளின் அம்சராய் அவதரித்திருந்த ஊமைப்பிள்ளையாகிய உருத்திரசன்மர் சங்கப்பலகையில் அமர்ந்திருந்து பதந்தோறும் கேட்டுப் புளகித்துக் கண்ணீர்வார விருந்தனர். அதுகண்ட எல்லாரும் அன்போடு ஏற்றுக்கொண்டனர். இது அறுபது சூத்திரங்களடங்கின நூல். இதன் முதற் சூத்திரம் "அன்பினைந்திணை"யெனத் தொடங்குவது.

## பொய்யடிமையில்லாப்புலவர்

**தடவரை முனிவ னீன்ற தமிழ்க்கொழுங் குழவி தன்னைப்**
**படர்வெயி லுமிழுஞ் சங்கப் பலகையந் தொட்டி லேற்றி**
**நடைவர வளர்த்து ஞால நனந்தலை மறுகில் விட்ட**
**மடனறு புலமை யோரை மனத்தியா னினைத்து மன்றே.**

(இ - ள்.) தடம் - பெரிதாகிய, வரை - பொதியமலையில் வாழ்கிற, முனிவன் - அகத்திய முனிவன், ஈன்ற - பெற்ற, தமிழ் - தமிழாகிய, கொழுங் குழவிதன்னை - கொழுவிய குழந்தையை, படர் - பரவிய, வெயில் உமிழும் - ஒளியைக் கக்குகிற, சங்கப்பலகை - சங்கப்பலகை யென்கிற, அம் - அழகிய, தொட்டில் ஏற்றி - தொட்டிலில் ஏற்றி, நடைவர வளர்த்து - நடத்தல்வரும் வண்ணம் வளர்த்து, ஞாலம்-உலகத்தின், நனந்தலை - நடுவில், மறுகில் விட்ட - தெருவில் விட்ட, மடன் அறு - அறியாமை யில்லாத, புலமையோரை - புலவரை, யாம் - நாம், மனத்து - மனத்திலுல், நினைத்தும் - தியானிப்போம் எ - று.

தடவரை முனிவனீன்ற தமிழ் என்றமையால் வரை பொதியமலையையும் முனிவன் அகத்திய முனிவனையுங் குறித்தது. வெயில் உமிழும் சங்கப்பலகை என்றமையால் அது மணிமயமாயிருப்ப தென்பது பெறப் பட்டது. நனந்தலை ஒரு சொல். நடுவென்பது இதன் பொருள். மறுகு தெரு - மடன் இறுதிப்போலி. புலவர் - அறிஞர். புலம்-அறிவு. (கரு)

## குருதேவர்

**புனிற்றிளந் திங்கள் வேய்ந்த புரிவளர் சடையு நெற்றிக்**
**கனற்றிரு விழியு மானுங் கரந்துவந் தென்னைப் பாச**
**மனைத்தையு மறுத்தாட் கொண்ட வருட்குரு தேவ னென்னுந்**
**தனிப்பெருங் கருணை வள்ள றன்னடி மனத்துள் வைப்பாம.**

(இ - ள்.) புனிற்று இளந்திங்கள் - பாலசந்த்ரனை, வேய்ந்த - சூடின, புரி-முறுக்கப்பட்டு, வளர் - வளராநின்ற, சடையும் - சடாபாரத்தையும், நெற்றி-நெற்றியிலுள்ள, திரு-அழகாகிய, கனல்விழியும் - நெருப்புக் கண்ணையும், மானும் - மானையும், கரந்துவந்து - மறைத்து வந்து, பாசம் அனைத்தையும் அறுத்து - பாசத்தளையை முற்றும் சேதித்து, என்னை ஆட்கொண்ட - என்னை யாட்கொண் டருளின, அருள் - அருளுருவாகிய, குருதேவன் என்னும் - குருதேவன் என்கிற, தனி - ஒப்பற்ற, பெருங்கருணை வள்ளல் - பெருங்கருணை வள்ளலாருடைய, அடி - திருவடியை, மனத்துள் - (எமது) மனத்தின்கண், வைப்பாம் - இருத்திக் கொள்வோம் எ - று.

புனிறு - ஈன்றணிமை. புரிதல் - முறுக்குதல். நெற்றிக்கண்ணுடைமை இயற்கைக்கு மாறுபாடாமென்பாரது ஐயமறுத்தற்கு நெற்றித் திருக்கனல்விழி என்றார். "தில்லையோர் கொண் முக்கண்" என்றார் மணிவாசகரும். கரத்தல் - மறைத்தல். அருள்-கருணை. வள்ளல்-உதார சீலன். பாசம் - கயிறு. தளை - கட்டு. அது ஈண்டைக் கேற்பப் பிறவிக் கட்டினை யுணர்த்திற்று. "தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி" என்றும், "பாசத்தளை யறுத்தாண்டு கொண்டோன்" எனவும் ஆன்றோர் கூறுதலுங் காண்க. (கசு)

## சிவப்பிரகாசசுவாமிகள்

**புனையெழில் வடிவி னாளோர் பொதுமகட் கண்ட மைந்தர்**
**மனமெனப் புலவர் நெஞ்ச மருளுமின் றமிழ்ப்பா மாலை**
**சினவிடை யவற்கே சாத்துஞ் சிவப்பிர காச னென்னு**
**முனைவனெம மடிகள் பாத முளரிகள் சென்னி சேர்ப்பாம்.**

(இ - ள்.) புனை - அலங்கரிக்கப்பட்ட, எழில் - அழகோடு கூடிய, வடிவினாள் - உருவத்தையுடையவளாகிய, ஓர்-ஒரு, பொதுமகள் கண்ட - பொதுமாதைப் பார்த்த, மைந்தர் - யௌவன புருஷர்களுடைய, மனம் என - மனம்போல, புலவர் நெஞ்சம் - புலவர்களுடைய மனமானது, மருளும் - மருளுதற்குரிய, இன் தமிழ்ப் பாமாலை - இனிய தமிழ்ப் பாமாலைகளை, சினம் - கோபத்தையுடைய, விடையவற்கே - இடபவாகநனாகிய சிவபிரான்மீதே, சாத்தும் - சாத்துகிற, சிவப்பிரகாசன் என்னும் - சிவப்பிரகாசன் என்கிற, முனைவன் - முதல்வனாகிய, எம் அடிகள் - எமது சுவாமிகளது, பாதமுளரிகள் - பாததாமரை மலர்களை, சென்னிசேர்ப்பாம் - எமது சிரத்திற் சூடிக்கொள்வோம் (யாம்) எ - று.

புனைதல் - கைசெய்தல், ஒப்பனை செய்தலுமாம். வேசையைப் பொதுமகளென்றார் பொருட்டருவோர் யாவர்க்கும் ஒரு நிகரதாகிய போக சுகத்தைத் தருதலான், இதுபற்றியன்றே இவளைப் பொருட் பெண்டிர் என வழங்குவர். "பொருட்பெண்டிர் பொய்ம்மைமுயக்க மிருட்டறையில், ஏதில் பிணந்தழீஇ யற்று" என்பது திருக்குறள். மனம்போல என்றது மனமருள்வதுபோல என்றவாறு. பாமாலையென்றது பல்வகைப் பாக்களாகிய மலர்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட மாலை. (பிரபந்தம்) விடையவற்கு உருபுமயக்கம். சாத்தல் - சமர்ப்பித்தல். (கஎ)

**எவனொரு நொடியி லெண்ணா திசைத்ததோர் செய்யுண் மற்றைக்**
**கவிகள்பன் னாணி னைந்த காப்பியங் கட்கு மேலா**
**மெவனிறை முதனா மத்தோ டிசைதரும் விளக்கப் பேரோ**
**னவனுடை பிறப்பெ மக்கீண் டளித்தபால் வாழ்க மன்னோ.**

(இ - ள்.) எவன் - யாவன், ஒரு நொடியில் - ஒரு மாத்திரைப்பொழுதில், எண்ணாது - ஆலோசியாமலே, இசைத்தது - செய்ததாகிய, ஓர் செய்யுள் - ஒரு கவியானது, மற்றை கவிகள்-ஏனைப் புலவர்கள், பன்னாள் நினைந்த - பல நாள் ஆலோசித்துச் செய்த, காப்பியங்கட்கும் - காவியங்களினும், மேல் ஆம் - சிறந்ததாகுமோ, எவன் - யாவன், இறை - இறைவனது, முதல் நாமத்தோடு - முதற் றிருநாமத்துடன், இசைதரும் - இசைந்த, விளக்கம் - பிரகாசம் என்கிற, பேரோன் - திருநாமமுடைய

வன் ஆவனே, அவனோடு - அவனுடன், பிறப்பு - பிறத்தலை, ஈண்டு - இவ்வுலகத்தில், எமக்கு அளித்த - எமக் கருள்செய்த, பால் - எமதூழானது, வாழ்க - வாழ்வதாக எ - று.

எவனொருவ னொடியி லெண்ணு திசைத்ததோர் செய்யுள், மற்றைக் கவிகள் பன்னூணினைந்த காப்பியங்கட்கு மேலாம், எவனிறை முதனு மத்தோ டியைதரும் விளக்கப் பேரோன் அவன், என்றது வடநூலார் வழக்கு, இதனைத் தமிழறிஞரும் வழங்குவாராயினர். "உயர்வற வுயர்நல முடையவ னெவனவன், மயர்வற மதிநல மருளின னெவனவன், அயர்வறு மமரர்க ளதிபதி யெவனவன், துயரறு சுடரடி தொழுதெழென் மனனே" என்றார் குருகைச் சிறுமுனிவரும். இறைமுதற் றிருநாமம் சிவம் என்பது. அதனோ டியைதரும் விளக்கப் பேரோன் என்றதனால் சிவப்பிரகாசன் என்னுந் திருநாம முடையவன் என்றாயிற்று. பால் - ஊழ். அது ஆகூழ் போகூழ் என் றிருவகைத்து, அது ஈண்டைக் கேற்ப ஆகூழைமேய யுணர்த்திற்று. "பான்முளை தின்று மறலியுயிர் குடித்த, கான்முளையே நல்ல கரி" என்றார் பிறரும். (கஅ)

## அவையடக்கம்

**நூற்றுறை பயின்று பெற்ற நுண்ணுணர் வுடைய னல்லேன்**
**சாற்றுமிப் போலிச் செய்யுள் சான்றவ ரிகழ்தல் செய்யார்**
**மேற்படு முணர்வின் மூத்தோர் மென்னடைச் சிறுவர் செவ்வாய்ப்**
**பாற்கடி கமழு மென்சொற் பழிப்பவ ருலகி லுண்டோ.**

(இ - ள.) நூல்துறை பயின்று - அறிவு நூல் வழியிற் பழகி, பெற்ற- அதனாலடைந்த, நுண் உணர்வு - நுண்ணறிவை, உடையன் அல்லேன்- உடையனல்லேனாகிய நான், சாற்றும் - சொன்ன, இ - இந்த, போலிச் செய்யுள் - போலிப் பாடலை, சான்றவர் - பெரியவர், இகழ்தல் செய்யார் - அவமதியார், மேற்படும் - மேன்மையடைந்திருக்கிற, உணர்வின் மூத்தோர் - அறிவால் முதிர்ந்தவர், மெல்நடை - தளர்நடையையுடையவனும், சிறுவன் - சிறுவனுமாய், செவ்வாய் - சிவந்த வாயினிடத்தே, பால் கடி - பால்மணமானது, கமழும் - மணக்கின்ற, என் சொல் - என் சொல்லை, பழிப்பவர் - இகழ்பவர், உலகில் உண்டோ - இவ்வுலகத்தில் உளரோ எ - று.

போலிச்செய்யுள் - செய்யுள்போல்வது. இகழ்தல் செய்யார் ஒரு சொன்னீரதாய் இகழார் எனப் பொருள்பட்டு நின்றது. கடி - மணம். உண்டோ வென்னும் ஓகாரம் எதிர்மறை. (கக)

**முரிதிரைக் கங்கை நீத்த முனையினஞ் சுமிழெயிற்று
வெருவரு சினத்த பாம்பை வெண்டலை முழையிற் சேர்க்கும்
புரிசடைக் கடவுள் வாழும் பொருவிறென் கயிலா யத்தின்
பெருமையிற் சிறித றிந்த பெற்றிசெந் தமிழாற் சொல்வேன்.**

(இ - ள்.) முரி - ஒடிகின்ற, திரை - அலைகளையுடைய, கங்கை நீத்தம் - கங்கையாற்றுப் பெருக்கோடு, முனையின் - கூர்மையையுடைய, நஞ்சு உமிழ் - விடத்தைக் கக்குகிற, எயிற்று - பற்களோடு கூடிய, சினத்த பாம்பை - கோவத்தையுடைய பாம்பை, வெள் - வெண்மையாகிய, தலைமுழையில் - தலையாகிய குகையில், சேர்க்கும் - நிறைக்கிற, புரிசடை கடவுள் - சிவபெருமான், வாழும் - வாழ்கின்ற, பொருவு இல் - ஒப்பற்ற, தென் கயிலாயத்தின் - தென்கயிலாயத்தினது, பெருமையில் - மேன்மையில், சிறிது - கொஞ்சம், அறிந்த பெற்றி - அறிந்தவண்ணம், செந்தமிழால் - செந்தமிழ்ப் பாக்களால், சொல்வேன் - (யான்) சொல்லத் தொடங்கினேன் எ - று.

முனையினெயிறு நஞ்செயிறு என்றியையும். சேர்த்தல் - நிறைத்தல். புரிசடை - முறுக்கப்பட்ட சடை. தென் கயிலாயம் - சீகாளத்தி. செந்தமிழ் அடையடுத்த ஆகுபெயர். (உ0)

## பாயிரம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உக.

# சிறப்புப் பாயிரம்

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பொன்றிகழ் சடிலப் புனிதனெம் பெருமான்
புலமலர்க் கோதையோ டமர்ந்த
தென்றிருக் கயிலைப் புகழமு ததனைத்
தீங்கவித் தாரைபெய் ததுவாற்
குன்றலி லிசையார் சிவப்பிர காசக்
கோதிலாத் தமிழ்க்கடன் முகந்தே
யென்றுநின் றுறவே பொழிதரு கருணை
விளக்கமென் றியம்புமா முகிலே.

(இ - ள்.) பொன் - பொன்போல, திகழ் - பிரகாசிக்கிற, சடிலம் - சடாபாரத்தையுடைய, புனிதன் - பரிசுத்தனாகிய, எம்பெருமான் - எம்பிரான், புலமலர்க் கோதையோடு - ஞானப்பூங்கோதையோடு, அமர்ந்த - வீற்றிருக்கிற, திரு - அழகாகிய, தென் கயிலை - தென் கயிலாயத்தின், புகழ் - சீர்த்தியாகிய, அமுததனை - அமிர்தத்தை, தீ கவி தாரை - இனிய கவிகளாகிய தாரையுருவாக, பெய்தது - வருடித்தது, (எதுவெனின்) குன்றல் இல் - அழியாத, இசை ஆர் - புகழமைந்த, சிவப்பிரகாசம் - சிவப்பிரகாசமென்கிற, கோது இல்லா - குற்றமற்ற, தமிழ்க்கடல் - தமிழ்க்கடலில், முகந்து - மொண்டு, என்றும் - எந்நாளும், நின்று - நிலைபெற்று, உற - மிகுதியாக, பொழிதரு - சொரிகிற, கருணை விளக்கம் என்று - கருணைப் பிரகாசமென்று, இயம்பும் - சொல்லப்படுகிற, மாமுகில் - பெரிய மேகம் எ - று.

பொன்திகழ் என்பதற்கு அழகோடுகூடி விளங்குகிற என்றலுமாம். புலம் - ஞானம். தாரை - ஒழுக்கு. பெய்தல் - சொரிதல். இசை - முதனிலைத் தொழிலாகு பெயர். உற - உறு என்னும் உரியடியாகப்பிறந்த வினையெச்சம். இது பொழிதரு என்னும் வினைகொண்டு முடிந்தது. மாமுகில் - கரியமேகம் எனினு மமையும். முகில் பெய்தது என முடித்துக்கொள்க.

# விடசங்கமச் சருக்கம்

கலித்துறை

கடலு டைப்பெரு மாநில மடந்தைக்குக் கவின்ற
சுடர்வி ழிக்கரு மணியினுட் பாவையாய்த் தோலா
விடையு யர்த்தவற் குட்புற மாகிய வியன்சீ
ரொடிவில் காளத்தி நகரணி யறிந்தவா றுரைப்பாம்.

(இ - ள்.) கடல் - சமுத்திரமாகிய, உடை-ஆடையை யுடுத்த, பெரு மாநில மடந்தைக்கு - பெரிதாகிய அழகமைந்த பூதேவிக்கு, கவின்ற - அழகுமிக்க, சுடர்விழி - ஒளியுள்ள கண்ணின்க ணிருக்கிற, கருமணியினுள் - கருவிழியிலுள்ள, பாவையாய் - பாவைபோல, தோலா-தோல்வி யடையாத, விடை உயர்த்தவற்கு - இடபக்கொடியை யுயர்த்தவனாகிய சிவபெருமானுக்கு, உள்புறம் ஆகிய - உள்ளும் புறமும் அமைந்திருக்கிற, சீர் - சிறப்பானது, ஒடிவு இல் - அழியாத, காளத்தி நகர் - சீகாளத்தி நகரத்தின், அணி - அழகை, அறிந்தவாறு - யாமறிந்த வண்ணம், உரைப்பாம் - சொல்வோம் எ - று.

உடை-ஆகுபெயர். கவின்-அழகு. இதனடியாகப் பிறந்த பெயரெச்சம் கவின்ற என்பது. பாவை-பிரதிமை. ஒடிவு-அழிவு. அறிந்தவாறு-கண்டுங் கேட்டும் அறிந்த வண்ணம். (க)

மகர மைக்கட னிலவல யத்திடை வளங்கூர்
துகளில் சீர்த்திரு நாட்டினுட் டொண்டைநா டென்னத்
திகழ்ம ணிக்கணங் குயின்றொளிர் செம்பொனீண் மாட
நகரெ வற்றினுஞ் சிறந்தது காளத்தி நகரம்.

(இ - ள்.) - மகரம்-மகரமீன்கள் சஞ்சரிக்கிற, மைகடல் - கருங்கடல் சூழ்ந்த, நிலவலயத்திடை - பூமண்டலத்தில், வளம் கூர் - வளமிகுந்த, துகள் இல் - குற்றமற்ற, சீர் - மேன்மையமைந்த, திருநாட்டினுள் - திருநாடுகளுள்ளே, தொண்டைநாடு என்ன - தொண்டை நாடுபோல, திகழ்-விளங்குகிற, மணிகணம் - அரதனத் தொகுதி, குயின்று-பதிக்கப்பெற்று, ஒளிர் - பிரகாசிக்கிற, நீள் - நீண்ட, செம்பொன் மாடம் - செம்பொன்னானியன்ற மாளிகைகளமைந்த, நகர் எவற்றினும் - எல்லா நகரங்களினும், காளத்திநகரம் - சீகாளத்தி நகரமானது, சிறந்தது - சிறந்துளது எ - று.

வளம் என்றது நிலவளம் நீர்வளம் முதலியவற்றை. தொண்டைநாடு போல என்றது தொண்டைநாடு சிறந்திருத்தல்போல என்றவாறு. கணம் - கூட்டம். குயின்று என்பதற்குப் பகுதி குயில். (உ)

**ஒருவில் போகமும் வீடுமென் றிரண்டையு மொருங்கு**
**தருபெ ரும்புகழ்க் காளத்தி மாநகர் தனக்குப்**
**பொருவில் வீடொழித் துறழ்வுடைப் போகமொன் றுதவும்**
**விரிக டுஞ்சுடர்ப் பொன்னக ரொக்குமோ விளம்பின்.**

(இ - ள்.) ஒருவு இல் - நீங்குதலில்லாத, போகமும் - இகபர போகங்களும், வீடும் - முத்தியும், என்ற - என்று சொல்லப்பட்ட, இரண்டையும் - இரண்டினையும், ஒருங்குதரு - ஒருங்கே தருகிற, பெரும்புகழ் - பெருங்கீர்த்தி யமைந்த, மா - பெரிய, காளத்தி நகர் தனக்கு - திருக்காளத்தி நகரத்துக்கு, பொருவு இல் - ஒப்பற்ற, வீடு ஒழித்து - முத்தியை நீக்கி, உறழ்வு உடை - ஒப்புள்ள, போகம் ஒன்று உதவும் - போகம் ஒன்றையே தருகிற, விரி - விரிந்த, கடுஞ்சுடர் - பேரொளியையுடைய, பொன் நகர் - பொன்னுலகானது, விளம்பின் - சொல்லுமிடத்து, ஒக்குமோ - சமானமாகுமோ (ஆகாது) எ - று.

ஒருவுதல் - நீங்குதல். பகுதி ஒருவு. இது தொழிற்பெயர். போகம் வடசொல். இதற்கு அநுபவிப்ப தென்பது பொருள். இகபரம் - இம்மை மறுமை. (இம்மை மறுமை இன்பங்கள்) வீடு முதனிலைதிரிந்த தொழிலாகு பெயர். அகப்புறப் பற்றுக்க ளெல்லாவற்றையும் விடுதலாலுளதாகு மின்பம். அகப்பற்று யான் என்பது, புறப்பற்று எனது என்பது. இதற்குப் பகுதி விடு. இதனை முத்தியென்பர் வடநூலார். முத்தம் - விடுதல். ஒருங்கு தருதலாவது ஒரு பிறப்பிலேயே தருதல். நகர் தனக்கு என்பதில் தன் சாரியை. பொருவு - ஒப்பு. பொருவுதல் - ஒப்பாதல். உறழ்வு - ஒப்பு. போகமொன்று என்பத னீற்றில் பிரிநிலை யேகாரம் தொக்கது. தேற்றேகார மெனினுமாம். உதவல் - கொடுத்தல். கடுஞ்சுடர் என்பதில் கடுமை மிகுதிப்பொருட்டு. ஒக்குமோ வென்னு மோகாரம் ஒவ்வாதென்னும் பொருள் தரலால் எதிர்மறை. கடுஞ்சுடர் பொன்னையே யன்றி நகரை விசேடியாமையானும், ஒருவில் போகமும் வீடுமென் றிரண்டையு மொருங்குதரு பெரும்புகழ்க் காளத்திமாநகர் என்றமையானும், பொருவில் வீடு என்றமையானும், உறழ்வுடைப் பொன்னகர் என்றமையானும், பொன்னகர்க்கும் இந்நகர்க்குமுள்ள சிறுமை பெருமைகள் இனிது விளங்கும். பொன்னகர் அழியும் போகமொன்றையே தரும். காளத்திநகர் அழியாத வீட்டின்பமும் போகமுமாகிய இரண்டையும் தரும் என்பது இச்செய்யுட் கருத்து. (௫)

**பொருபெ ருந்திரை யகழிசூழ் பொன்னெயில் வட்டம்**
**விரிக ருங்கட லுலகினில் விழைபொரு ளனைத்தும்**
**பெரிது துன்றிய வொருபரு மரக்கலம் பெயரா**
**தொருக யத்திலு ணிற்பதுண் டேலதை யொக்கும்.**

(இ - ள்.) பொரு - மோதுகிற, பெருந்திரை - பேரலைகளையுடைய, அகழிசூழ் - அகழியைச் சுற்றியிருக்கிற, பொன் - பொன்னொலியன்ற, எயில்வட்டம் - வட்டவடிவாகிய மதில் வட்டமானது, விரி - விரிந்த, கருங்கடல் - கரிய கடல்சூழ்ந்த, உலகினில் - இவ்வுலகத்தில், விழை - விரும்பப் படுகிற, பொருள் அனைத்தும்-எல்லாப் பொருள்களும், பெரிது துன்றிய - மிகவும் செறிந்துள்ள, ஒரு பெருமரக்கலம் - ஒரு பெரிய கப்பலானது, பெயராது - அசையாமல், ஒரு கயத்தினுள் - ஒரு தடாகத்தினுள்ளே, நிற்பது உண்டேல் - நிற்றலுண்டாயின், அதை ஒக்கும் - அதை நிகர்த்திருக்கும் எ - று.

பொருதல் - கரைமேல் மோதுதல். திரை-முதனிலைத் தொழிலாகு பெயர். அகழி - தொழிலாகுபெயர். அகழ் பகுதி. இ - தொழிற்பெயர் விகுதி. அகழ்தல் - தோண்டப்பட்டதனால் இப்பெயர் உண்டாயிற்று. கடல் - தொழிலாகு பெயர். கடு பகுதி. அல் தொழிற்பெயர் விகுதி. கடுத்தல் - கைத்தல் (கசக்குதல்) கைத்தலால் இப்பெயர் உண்டாயிற்று. விழைதல் - இச்சித்தல். விழைபொருள் - வினைத்தொகை நிலைத்தொடர். துன்றுதல் - செறிதல். (மிக்கிருத்தல்) மரக்கலம் - மரத்தாற் செய்யப் பெற்ற பாத்திரம். பொன் வெள்ளி முதலியவற்றாற் செய்யப்பெற்ற பாத்திரங்கள் தம்மிடத்திட்ட பொருள்களைத் தாங்குதல்போல, இது தன்னிடத்திட்ட மக்கள் முதலிய பொருள்களைத் தாங்குதலால் இதற்கு இப் பெயர் உண்டாயிற்று. கயம் என்பதனை கசம் என்றும் வழங்குவர். எந்நாளும் நீர் சுரந்துகொண்டே யிருப்பதென்பது பொருள். உண்டேல் என்பதில் ஏல் செயினென்னும் வாய்பாட்டு வினை யெச்சத்தின் மரூஉ. (ச)

**அகழு மிஞ்சியு மண்டத்தி னடிமுடி காறும்**
**புகுது மென்றுதம் மாற்றலான் முரணுபு புகுதா**
**விகலும் வெஞ்சினச் சேடனே டிராகுவென் றுரைக்கு**
**நிகரில் பாம்புக ணெறியிடைக் காண்டலு நின்ற.**

(இ - ள்.) அகழும் - அகழியும், இஞ்சியும் - மதிலும், அண்டத்தின்- பிரமாண்டத்தின், அடிமுடிகாறும் - அடிமுடிகளின் எல்லைவரையும், புகுதும் என்று - போவோமென்று, தம் ஆற்றலால் - தமது வல்லமையால், முரணுபு - ஒருவர்க்கொருவர் மாறுபட்டு, புகுதா-புகத் தொடங்கி, இகலும்-பகைக்கிற, வெஞ்சினம் - கடுங்கோபத்தையுடைய, சேடனோடு- ஆதிசேடனோடு, இராகுவென்று உரைக்கும்-இராகுவென்று சொல்லப் படுகிற, நிகர் இல் - உவமையில்லாத, பாம்புகள் - சர்ப்பங்களை, நெறியிடை - வழியில், காண்டலும் - கண்டவுடன், நின்ற - போகாமல் நின்றுவிட்டன எ - று.

அண்டம் முட்டை, இதுபோல உருள்வடிவா யிருப்பதனால் உலகத்தை அண்டம் என்றார். இது வடசொல். உவமையாகுபெயர். அகழு

மிஞ்சியும் அண்டத்தி னடிமுடிகாறும் புகுது மென்று தம்மாற்றலால் முரணுபு புகுதா இகலும் வெஞ்சினச் சேடனே டிராகுவென் றுரைக்கும் நிகரில் நெறியிடைக் காண்டலு நின்ற என்றமையால், அகழ் பாதாளத்துக்குப் போகக்கருதிச் சென்று வழியில் சேடனென்னும் பாம்பைக்கண் டஞ்சி, அப்பாற் செல்லாது நின்றுவிட்டதென்றது. அகழ் பாதலத்தளவும் சூழ்ந்திருப்பதென்பதும், இஞ்சி மேலுலகத்தின் முடியை காணக்கருதிச் சென்று வழியில் இராகுவென்னும் பாம்பைக் கண்டஞ்சி அப்பாற் செல்லாது நின்றுவிட்டதென்றது. மதில் மிகவும் உயர்ந்திருப்ப தென்பதும் கூறியவாறாயிற்று. முரணுபு - செப்பு என் னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சம். இது புகுதா என்னும் வினைகொண்டு முடிந்தது. புகுதா செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். இராகு கரும்பாம்புருவா யிருப்பதோர் கிரகம். நின்ற அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை வினை முற்று. இதற்குப் பகு திநில். இது நின்றன எனவும் வழங்கும். (௬)

**அரச வன்னங்கள் கமலநின் றஞ்சிறைப் பெடையோ**
**டிரிய வெந்திறற் கராம்பகு வாயின்வந் தெய்தப்**
**புரிசை யுள்ளினின் றெழுமுடத் தாழைமுப் புடைக்காய்**
**கரைபெ ரும்புன றுளும்பவீழ் கம்பலைத் தகழி.**

(இ - ள்.) அகழி - அந்த அகழியானது, அரச அன்னங்கள் - ராஜ ஹம்ஸங்கள், அம்சிறை - அழகிய சிறகுகளையுடைய, பெடையோடு-தமது பேடுகளுடன், கமலம் நின்று - தாமரை மலர்களிலிருந்து, இரிய - பறந் தோடும்படி, வெம்திறல் - கொடிய ஆற்றலையுடைய, கராம் - முதலைகள், பகுவாயின் - பிளந்த வாய்களுடன், வந்து எய்த - வந்து சேர, புரிசை யுள்ளில் நின்று - மதிலினுள்ளிருந்து, எழும் - மேலெழுந்த, முடம் - வளை வாகிய, தாழை - தாழையின், முப்புடைகாய் - முப்புடைக் காய்கள், பெரும்புனல் - மிக்க நீரானது, கரை துளும்ப - கரையின்மீது ததும்பும் படி, வீழ் - விழுகிற, கம்பலைத்து - பேரொலியை யுடையது எ - று.

கமலம் வடசொல். இதற்கு நீரை யலங்கரிப்பதென்பது பொருள். இரிதல் - ஓடுதல். பகுவாய் - வினைத்தொகை நிலைத்தொடர். துளும்பல் - ததும்பல். கம்பலை - ஒலி. வீழ் கம்பலை வினைத்தொகை நிலைத்தொடர்.

**இருநி லத்தவர் கவர்ந்தன நம்பொரு ளெல்லா**
**மொருமதிற்சிறை யகத்துவந் துற்றன யாம்போய்த்**
**தருது மற்றுமென் றறைகடல் வந்துவிண் டடவும்**
**புரிசை முற்றிய தொக்குமாற் பொருதிரை யகழி.**

(இ - ள்.) பொருதிரை அகழி - மோதுகிற அலைகளையுடைய அகழி யானது, இருநிலத்தவர் - பெரிய நிலவுலகத்தினரால், கவர்ந்தன -

கவர்ந்து கொண்டனவாகிய, நம் பொருள் எல்லாம் - நமது பொருள்களெல்லாம், ஒரு மதில் சிறையகத்து - ஒரு மதிலின் சிறையில், வந்து உற்றன - வந்திருக்கின்றன, மற்றும் - மேலும், யாம் போய் - நாம் சென்று, தருதும் என்று - அவற்றை வாரிக்கொண்டு வருவோமென்று, அறைகடல் வந்து - ஒலிக்கின்ற கடல் வந்து, விண் தடவும் - ஆகாயத்தைத் தீண்டுகிற, புரிசை - மதிலை, முற்றியது ஒக்கும் - வளைந்ததை நிகர்க்கும் எ - று.

இருமை - பெருமை. கவர்தல் - கொள்ளை கொள்ளல். அறைகடல் வினைத்தொகை நிலைத்தொடர். முற்றுதல் - வளைத்தல். சிறை - காவல். மதிற்சிறை - மதிற்காவல். (எ)

**வெங்க ளிக்களி றுழக்கலின் விரிதிரை யகழிப்**
**பங்க யத்தம ரோதிமம் வெரீஇமிசைப் பறந்து**
**மங்கு லிற்புகு மணிமதின் ஞாயின்மேல் வதிவ**
**பொங்கொ ளித்தர ளக்குடை நிரைத்தன போலும்.**

(இ - ள்.) வெங்களி - மிகு களிப்பையுடைய, களிறு - யானைகள், உழக்கலின் - கலக்குதலால், விரி - பரந்த, திரை - அலைகளையுடைய, அகழி - அகழியின்கண் உள்ள, பங்கயத்து - தாமரைமலர்களில், அமர் - அமர்ந்திருக்கிற, ஓதிமம் - அன்னங்கள், வெரீஇ - பயந்து, மிசை பறந்து - மேலே பறந்து, மங்குலில் புகும் - மேக மண்டலத்தில் நுழைகிற, மணி - ரத்நகசிதமான, மதில் - மதின்மேலுள்ள, ஞாயில்மேல் - மதிலுறுப்புக்களின்மேல், வதிவ - தங்கியிருக்கின்றவற்றை, (நோக்குமிடத்து) பொங்கு ஒளி - மிக்க ஒளியையுடைய, தாளக்குடை - முத்துக் குடைகள், நிரைத்தனபோலும் - வரிசையாய் வைக்கப்பட்டிருத்தலை நிகர்க்கும் எ - று.

வெங்களி யென்பதில் வெம்மை மிகுதிப்பொருட்டு. உழக்கலின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்ருவதன் கருவிப்பொருளில் வந்தது. பங்கயம் பங்கஜம் என்னும் வடமொழித் திரிபு. இதற்கு சேற்றிற் பிறப்பதென்பது பொருள். பங்கம் - சேறு. ஜம் - பிறப்பது. இது காரண விடுகுறிப்பெயர். இதனை யோகரூடி யென்பர் வடநூலார். விரிதிரை - வினைத்தொகை நிலைத்தொடர். வெரீஇ - சொல்லிசையளபெடை. வதிதல்-தங்குதல். தரளம் வடசொல். முத்து என்பது பொருள். நிரைத்தல்-வரிசையாய் வைத்தல். (அ)

**தவழ்தி ரைப்புன லகழியிற் சிலதியர் தம்ம**
**குவிமு லைத்தடந் தாமரை முகிழொடு குலுங்க**
**வவிரொ ளிப்பொலங் குடங்களி னலைத்துநீர் முகவாச்**
**சுவன்மி சைக்கொளக் கழன்றுவீழ் பொலங்குழை சுடரும்.**

(இ - ள்.) தவழ் - தவழ்கின்ற, திரை - அலைகளோடு கூடிய, புனல் - நீரையுடைய, அகழியில் - அகழியின்கண், சிலதியர் தம்ம - சேடியரு

டைய, குவிமுலை - குவிந்த முலைகள், தடம் - அகழியிலுள்ள, தாமரை முகிழொடு - தாமரை மொட்டுக்களோடு, குலுங்க - குலுங்குதலால், அவிர் ஒளி-விளங்குகிற ஒளியையுடைய, பொலம் குடங்களின் - பொற் குடங்களால், அலைத்து - அலைகி, நீர் முகவா - நீரை மொண்டு, சுவல் மிசைக்கொள்பிடர்மீதேற்றுதற்கு, கழன்று வீழ் - கழன்று விழுகிற, பொலங்குழை - பொற்குழைகள், சுடரும் - ஒளிவிடாநிற்கும் எ - று.

தவழ்திரை - வினைத்தொகை நிலைத்தொடர். குவிமுலை யென்பதும் அது. முகிழ் - முதனிலைத் தொழிலாகுபெயர். பொலம்-பொன். முகவா செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சம். சுடர்தல் - ஒளி செய்தல். (௯)

**புலவர் மன்னவன் வச்சிரப் படைவெரீஇப் பொருப்பின்**
**குலம டங்கலு மாரெயில் புகுந்தெனக் குளிர்வெண்**
**கலைநி ரம்பிய மதிமுகக் கொடிகளாற் கவின்ற**
**நிலைய பொன்னெடு மாடங்க ளெண்ணில நிலவும்.**

(இ - ள்.) புலவர் - தேவர்களுக்கு, மன்னவன் - அரசனாகிய இந்திரனது, வச்சிரப்படை - வச்சிராயுதத்துக்கு, வெரீஇ - அஞ்சி, பொருப்பின் குலம் அடங்கலும் - மலைக் கூட்டங்கள் முழுதும், ஆர் - அருமையாகிய, எயில் - மதிலினுள்ளே, புகுந்தென - புகுந்தாற்போல, குளிர் - குளிர்ந்த, வெண்கலை நிரம்பிய - வெள்ளிய கலைகளால் நிறையப்பெற்ற, மதி - பூர்ண சந்திரன்போன்ற, முகம் - முகத்தையுடைய, கொடிகளால் - பூங்கொடிபோல்வாராகிய மாதர்களால், கவின்ற - அழகமைந்திருக்கிற, நிலைய - நிலைகளையுடைய, நெடு - உயர்ந்த, பொன்மாடங்கள் - பொன்னாலியன்ற மாளிகைகள், எண் இல - அளவற்றனவாய், நிலவும் - (அந்நகரத்தில்) விளங்காநிற்கும் எ - று.

வச்சிரம் வஜ்ரம் என்னும் வடசொற்றிரிபு. படை - படுத்தற்குரியது இது தொழிலாகு பெயர். படுத்தல் - கொல்லல். புகுந்தாலென எனற்பாலது புகுந்தென என விகாரமாயிற்று. கலை - களா என்னும் வடசொற்றிரிபு. இதற்குக் கூறு என்பது பொருள். கொடிகள் என்பதற்குப் பூங்கொடியென் றுரை யுரைத்தது எற்றுக்கெனின், அவர்களுடைய உறுப்புக்கள் யாவும் தாமரை மலர் முதலிய மலர்கள் போறலா னென்க, கவின்ற - கவின் என்னும் பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம். நிலை - அடுக்கு. நிலவல் - விளங்கல். (௧0)

**மாதர் மேனிலைக் கலவியின் வருந்திய வருத்த**
**மோது வெண்டிரை யகல்விசும் பியாற்றபொன் முளரித்**
**தாத ளைந்தநுண் டுளியொடு சாளர நுழையுஞ்**
**சீத மென்னடைத் தென்றல்வாண் முகத்துலாய்த் தீர்க்கும்**

(இ - ள்.) மாதர் - மங்கையர், மேனிலை-மேனிலைகளில், கலவியின் - கல்வியால், வருந்திய வருத்தம் - வருந்தின வருத்தத்தை, மோது - மோதுகிற, வெள்திரை - வெள்ளிய அலைகளையுடைய, அகல் விசும்பு - விசாலமான விண்ணுலகிலுள்ள, யாற்ற - கங்காநதியில் மலர்ந்த, முளரி - தாமரை மலர்களின், தாது அளைந்து - மகரந்தத்தை பூசிக்கொண்டு, நுண் துளியொடு - சிறு திவலைகளுடன், சாளரம் - பல்கணிகளில், நுழையும் - புகுகின்ற, சீதம் - குளிர்ச்சியையும், மெல் நடை - மெல்லிய நடையையும் உடைய, தென்றல்-தென்றற் காற்றானது, வாள் - ஒளியையுடைய, முகத்து உலாய் - (அவர்களது) முகத்தில் வீசி, தீர்க்கும் - ஒழிக்கும் எ - று.

மாதர் - ஆகுபெயர். கலவி - கலத்தல். (புணர்ச்சி) அகல்விசும்பி யாற்ற என்றமையால் யாறு ஆகாய கங்கையைக் குறித்தது. அளைதல் - பூசுதல். சீதம் சீதம் என்னும் வடசொற்றிரிபு. தென்றல் வருத்தம் தீர்க்கும் என முடித்துக் கொள்க. (கக)

பரவை வெண்டிரைக் கருங்கடல் குறைபடப் பருகி
யிருவி சும்பெழுந் தெங்கணும் பரந்துநின் றெழிலி
சொரித ரும்பெயற் பருவத்தின் முனையின்வான் றோயும்
பொருவில் செம்பொனீண் மாடத்தின் மேனிலை புகுவார்.

(இ - ள்.) எழிலி - மேகமானது, பரவை - பரப்பாகிய, வெள திரை - வெள்ளிய அலைகளையுடைய, கருங்கடல்-கரிய கடல் நீரானது, குறைபட-குறையும்படி, பருகி-குடித்து, இருவிசும்பு-பெரிதாகிய ஆகாயத்தில், எழுந்து - கிளம்பி, எங்கணும் பரந்து நின்று - எவ்விடத்தும் பரவி நின்று, சொரிதரும் - பெய்கிற, பெயல் பருவத்தின் முனையில் - மழைக்காலத் தொடக்கத்தில், வான்தோயும் - ஆகாயத்தைத் தொடுகிற, பொருவு இல்-ஒப்பற்ற, நீள் - நீண்ட, செம்பொன் மாடத்தின் - செம்பொன் மாளிகைகளின், மேனிலை - மேனிலைகளில், புகுவார் - பிரவேசிப்பார்கள் எ - று.

பரவை தொழிலாகுபெயர். குறைதல் சுவறுதல் எனினுமாம். சொரிதரும் ஒரு சொல். பகுதி சொரிதா. பெயல் - பெய்தல். இது மழை பெய்தலைக் குறித்தது. மேனிலை - மேலடுக்கு. புகுவார் என்னும் வினைக்கு வினை முதல் அந் நகரமாந்தரெனக் கொள்க. (கஉ)

முட்டி விண்ணுயர் மாடமேற் புலவியின் முனிந்த
மட்டு நின்றிழி கோதையர் மகிழ்நர்மேற் புழுகால்
விட்டெ றிந்திடப் பிழைத்தது விரிகதிர் மதிமேற்
பட்ட தன்றுகொல் களங்கமென் றுரைப்பது பகரின்.

(இ - ள்.) விண்முட்டி உயர் - ஆகாயத்தை முட்டி யுயர்ந்திருக்கிற, மாடமேல் - மாடங்களின் மீது, புலவியின் - ஊடலில், முனிந்த - கோ

வித்த, மட்டு நின்று இழி - தேனானது நிலைநின்று இழிகிற, கோதையர் - பூமாலை யணிந்த மாதர், மகிழ்நர்மேல் - தம் கணவர்மீது, புழுகால் - புழுகினால், விட்டெறிந்திட - வீசி யெறிய, அது - அப்புழுகு, பிழைத்து - தவறி, விரி-பரந்த, கதிர்-கிரணங்களையுடைய, மதிமேல் பட்டது அன்றுகொல் - சந்திரன்மீது பட்டதல்லவா, பகரின்-சொல்லுமிடத்து, களங்கம் என்று உரைப்பது - மறுவென்று உலகத்தார் சொல்லுவது எ - று.

புலவி - புலத்தல். (ஊடுதல் - பிணங்கல்) புல பகுதி. இ தொழிற்பெயர் விகுதி. கோதை பலபொரு ளொருசொல்லாயினும் மட்டு நின்றிழி என்னும் விசேடணத்தால் பூமாலையெனப் பொருள் பட்டு நின்றது. மாதரைக் கணவரினும் களிப்பிப்பவ ரொருவரு மின்மையால் அவரை மகிழ்நர் என்றார். உரைப்பது என்னும் வினைக்கு வினை முதலாக உலகத்தார் என்பது வருவிக்கப்பட்டது. (௧௫)

**மாந்தர் யாவரு மறைமினென் றினையவா வாய்விட்**
**டேந்து காழின ரோடமுன் றொடர்கலி னெனவான்**
**றோய்ந்த நித்திலத் தோரணந் துளைக்கையாற் பரிந்து**
**காந்து வெஞ்சினக் களிறுலாய்த் தெருமதங் கமழும்.**

**(இ-ள்.)** மாந்தர் யாவரும் - மனிதரெல்லாரும், மறைமின் என்று - மறைந்து போங்களென்று, இனையவா - இந்தப் பிரகாரம், வாய்விட்டு - வாய்விட்டலறி, ஏந்து - தாங்கப்பட்ட, காழினர் - உலக்கையை யுடையவராய், ஓட - ஓடாநிற்க, முன்றொடர் - முற்பக்கத்திலுள்ள சங்கிலியானது, கலின் என-கலின் என்று சத்திக்க, வான்தோய்ந்த - ஆகாயத்தைத் தீண்டுகிற, நித்திலத் தோரணம் - முத்துத் தோரணத்தை, துளை - துவாரத்தையுடைய, கையால் - துதிக்கையினால், பரிந்து - அறுத்து, காந்து - எரிகிற, வெம்சினம் - கடுங்கோவத்தையுடைய, களிறு-யானைகள், உலாய்-திரிதலால், தெரு - அந்நகரத்தின் தெருக்களெல்லாம், மதம்கமழும் - மதநீரானது பரிமளிக்கும் எ - று.

மாந்தர் என்பது ஒருமை பன்மைகளைக் குறியாமையால் இது நிலையியலுயர்திணைப் பலரறிசொல். இங்ஙனம் வருவதனை நித்யபஹுவசநம் என்பர் வடநூலார். காழ் - மரவைரம். அது அதனாற் செய்யப்பட்ட வுலக்கைக்காயினமையால் ஆகுபெயர். காழினர் - முற்றெச்சம். துளைதொளை யென்பதன் மரூஉ. தொள் பகுதி ஐ தொழிற்பெயர் விகுதி. கையென்பது துளையென்னும் விசேடணத்தால் துதிக்கையென்னும் பொருடந்து நின்றது. பரிதல்-அறுத்தல். உலாய் உலாவ என்னுஞ் செயவெனெச்சத் திரிபு. யானையின் மதநீர்க்குக் கமழுந்தன்மை யுண்மையால் வடநூலாரும் மதயானையைக் கந்தேபம் என்பர். இந்த மதநீர் ஒழுகுமிடம் மூன்று. அவையாவன :—கர்நம் கபோலம் கோசம் என்பன. கோசம் - ஆண்குறி. கர்நம் - செவியடி இதனைக் கர்நமூலம் என்பர் வடநூலார். கபோலம் - கவுள். (௧௬)

**புனல டர்ந்தற நூல்வழி யொழுகுமுப் புரிநூ**
**லலைத ருந்திரு மார்பின ரருமறை முதனூற்**
**பலவு நின்றக லாதவெண் மாளிகைப் பரப்பு**
**கலைம டந்தைவெண் டாமரை மலரெனக் கவினும்.**

(இ - ள்.) புலன் அடர்ந்து - ஐம்புலன்களை வென்று, அறநூல்வழி - தருமசாஸ்திரத்தின் வழியில், ஒழுகும் - நடக்கிற, முப்புரிநூல் - பூணூல், அலைதரும் - அசையாநின்ற, திருமார்பினர் - திருமார்பினை யுடையவராகிய வேதியர் வாழ்கிற, அருமறை முதல்நூல் பலவும் - அருமையாகிய வேதமுதலிய பல நூல்களும், நின்று - நிலைபெற்று, அகலாத - நீங்காத, வெள்மாளிகைப் பரப்பு - வெண்மையாகிய மாடவரிசையானது, கலைமடந்தை - சரசுவதி தேவியின், வெள்தாமரை மலர் என - வெண்டாமரை மலர்போல, கவினும் - (அந்நகரத்திற்கு) அழகு செய்யும் எ - று.

ஐம்புலன்களாவன :- சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. இவற்றை விஷய பஞ்சகம் என்பர் வடநூலார். இவற்றை வென்றலாவது இவற்றின்மேற் செல்லாது மனத்தை யடக்கி தன்னிலையினிற்றல். "எங்கே யெங்கே மனமோடி யலைமேயா தென்னை யீர்த்தழுந்தும், அங்கே யங்கே நின்றெழுப்பிய கண்டவறிவி லடைவிப்பாய்" என்றார் பெரியாரும். அறநூல்வழி யொழுகலை சதாசாரம் என்பர் வடநூலார். மார்பினர் - முற்றெச்சம். வேதமுதலாகிய நூல்கள் நீங்காமையாலது அவற்றை அதிகரித்தலா லுண்டாகிற பேரொலி நீங்காமையை. வாணியைக் கலைமடந்தை யென்றார். எல்லாக் கலைகளுக்கும் அதிதேவதை யாதலால். மடந்தையென்றது எண்வகைப் பருவங் குறியாது பெண்பொதுவைக் குறித்தது. தாமரை ஆகுபெயர். கவினும் என்றது கவின் என்னும் பெயரடியாகப் பிறந்த வினை. (௧௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

**வசையறு மறைநி ரம்பி மந்திர வேள்வி முற்றிப்**
**பசுவுட லழித்து முக்கட் பதியுட லாகி நின்ற**
**விசைபடு மந்த ணாள ரெழுநிலை மாட மெல்லா**
**மிசைநிலை யுலகி லுள்ளோர் விருந்துணு மிடங்க ளாமால்.**

(இ - ள்.) வசை அறு - பழிப்பற்ற, மறை நிரம்பி - வேதகோஷம் நிறைந்து, மந்திர வேள்வி முற்றி - மந்த்ரயாகங்களைசசெய்து முடித்து, பசு உடல் அழித்து - ஜீவ தேகத்தைக் கெடுத்து, முக்கண் பதி உடல் ஆகி நின்ற - சிவரூபமாய் நின்ற, இசைபடும் - கீர்த்திபொருந்திய, அந்தணாளர் - வேதியர், எழுநிலை மாடம் எல்லாம் - ஏழ்நிலை மாடங்களெல்லாம், மிசைநிலை உலகிலுள்ளோர் - மேலுலகத்தினராகிய தேவர் யாவரும், விருந்து உண்ணும் இடங்கள் ஆம் - விருந்துண்ணும் இடங்களாயிருக்கும் எ - று.

மறை - ஆகுபெயர். பசு வுடல் - சீவகரணம். முக்கட்பதியுடல் சிவ கரணம். முக்கண்பதி - மூன்று கண்களையுடைய சிவபெருமான். இசை ஆகுபெயர். அந்தணாளர் - அழகிய தட்பத்தினை யாள்பவர். "அந்தணாளர் மாடம் எல்லாம் மிசைநிலை யுலகி லுள்ளோர் விருந்துண்ணு மிடங்களாம்" என்றது, அந்தணாளர் மாடங்கள் தேவலோகத்தளவும் உயர்ந்திருக்கின்றன வென்றவாறு. இச் செய்யுளால் அந்தணர் வாழுந் தெருச்சிறப்புக் கூறப்பட்டது. (கசு)

**நறைவிரி கமலத் தோனிந் நகர்மறை யவர்போ னான்கு**
**மறைகளு நவில லுற்றேன் வரன்முறை தனின வின்று**
**றுறைபகல் வரைமுற் றுவென் றோர்ந்துணர்ந் தொருங்கு நான்குங்**
**குறையற நவிற்றற் கன்றோ கொண்டன னான்கு செவ்வாய்.**

(இ - ள்.) நறை - மணம், விரி - பரந்த, கமலத்தோன் - பிரமன், இ - இந்த, நகர் - நகரத்திலுள்ள, மறையவர்போல் - வேதியர்போல, நான்மறை - நான்கு வேதங்களையும், நா - நாவினால், நவிலல் உற்றேன் - உச்சரிக்கத் தொடங்கினவன், வரன்முறை தனில் நவின்றால் - வரன் முறையாகக் கற்றால், உறை - தான் வாழ்நாளில், பகல்வரை - பகற்கால முற்றும் வரையும், முற்றுவென்று - முடியாவென்று, ஓர்ந்துணர்ந்து - ஆராய்ந்தறிந்து, ஒருங்கு - ஒருமிக்க, நான்கும் - நால்வேதங்களையும், குறைவு அற - சம்பூரணமாக, நவிற்றற்கு அன்றோ - உச்சரித்தற்கல்லவா, நான்கு செவ்வாய்கொண்டனன் - நான்கு செவ்வாயைக் கொண்டிருக்கிறான் எ - று.

கமலத்தோன் - தாமரை மலரில் வீற்றிருப்பவன். பிரமனது ஒரு பகற்காலமாவது இரண்டாயிரம் சதுர்யுகம். வாழ்நாள் - ஆயுள். ஓர்தல் - ஆராய்தல். நான்கு முகம் கொண்டனன் என்னாது நான்கு செவ்வாய் கொண்டனன் என்றது கற்றற்குரியது நாவேயன்றி முகமன்றென்பதுணர்த்தற்கென்க. செவ்வாய் அடையடுத்த ஆகுபெயராய் நாவினை யுணர்த்திற்று. இச் செய்யுளால் அந்தணர் வேதாத்யயநத்திற் பிரமனிற் சிறந்தோர் என்பது கூறப்பட்டது. (கஎ)

**ஐங்கணைக் கிழவற் கன்றி யருவரை பகவெ றிந்த**
**பொங்கொளி வேலி னாற்கும் புறக்கொடை பெறுத லாகா**
**வெங்கொலை மடங்க லாற்றல் வேந்தர்தம் விதி யன்னோர்**
**தங்கழ லொலியின் முந்நீர்த் தடங்கட னிகர்க்கு மன்றே.**

(இ - ள்.) ஐங்கணை கிழவற்கு அன்றி - மன்மதனுக்கே யல்லாமல், அருவரை - அருமையாகிய மலையானது, பக - பிளக்கும்படி, எறிந்த - ஏவின, பொங்கு ஒளி - மிக்க ஒளியையுடைய, வேலினாற்கும் - முருகக் கடவுளுக்கும், புறக்கொடை பெறுதல் ஆகா - புறங்காட்டல் பெறுதலா

காத, வெம்கொலை - கொடிதாகிய கொலைத் தொழிலையுடைய, மடங்கல் ஆற்றல் - சிங்கத்தின் வலியையுடைய, வேந்தர் தம் வீதி - ராஜவீதிகளில் நடக்கின்ற, அன்னோர் - அவர்களுடைய, கழல் ஒலியின் - கழலொலி யால், முந்நீர் - முந்நீர்களையும், தடம் - விசாலத்தையுமுடைய, கடல் நிகர்க்கும் - கடலையொத்திருக்கும் எ - று.

ஐங்கணைக் கிழவன் என்றது மன்மதனை. ஐங்கணைக் குரியவன் அவ னாதலால். ஐங்கணை - ஐந்தம்பு. இவற்றைப் பஞ்சபாணம் என்பர் வடநூ லார். மன்மதனுக்கு ஐந்து அம்பாயிருப்பன யாவையெனின்:- தாமரை மலர், மாமலர், அசோகமலர், முல்லைமலர், நீலமலர் என்பனவாம். இவற் றினாலுண்டாகும் அவஸ்தைகள் யாவையெனின்:- நினைப்பூட்டுதல், பசலைபோர்த்தல், உண்டிவெருத்தல், படுக்கச்செய்தல், கொல்லுதல் என் பனவாம். இவற்றை எய்தற்குரிய இடங்களாவன: நெஞ்சு, தனம், கண், தலை, மர்மஸ்தானம் என்பன. இவற்றைத் தொடுத்து எய்தற்குரிய வில் எதனா லியன்றனவோவெனின்:- மலரினாலும் கரும்பினாலும் இரும்பினா லும் இயன்றனவாம். இவற்றுள் மலரினாலியன்ற வில்லைத் தேவர்கள் விஷயத்திலும், கருப்பினாலியன்ற வில்லை மானுடர் விஷயத்திலும், இரும் பினாலியன்ற வில்லை அசுரர் விஷயத்திலும் உபயோகிப்பன். இன்னும் விரிப்பிற் பெருகு மாதலால் இம்மட்டில் நிறுத்தப்பட்டது. மலையென்றது கிரவுஞ்சகிரியை. புறக்கொடை - முதுகுகாட்டல். இது போரில் தோற் றோடுவோனது தொழில். கழல் - வீரவெண்டயம். இது ஆடவர். காலி லணிவது. முந்நீராவன:- ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்பன. கடல் - ஆகுபெயர். இச் செய்யுளால் அரசர் தெருச்சிறப்பும் அவரது ஆற்றற்சிறப்புங் கூறப்பட்டன. (கஅ)

**முழவுறழ் தோளி ராமன் முதலிய சிலைவ லாரிம்**
**மழைதவ ழெயிலு டுத்த வளநகர் மன்னர்க் கண்டு**
**குழைசிலை கற்க நன்னாட் கொண்டுகற் றாலு ஞாட்பில்**
**விழியிமை யாத மிக்க வீரமெவ் வாறு கற்பார்.**

(இ - ள்.) முழவு உறழ் - மத்தளத்தை நிகர்த்த, தோள் - தோள் களையுடைய, இராமன் முதலிய - ஸ்ரீராமன் முதலாகிய, சிலைவல்லார் - வில்வல்லவர், இ - இந்த, மழை தவழ் - மேகங்கள் ஊர்கின்ற, எயில் உடுத்த - மதில் சூழ்ந்த, வளநகர் - வளமாகிய நகரிலுள்ள, மன்னர்க் கண்டு - அரசரைப்பார்த்து, குழை - வளைக்கப்பட்ட, சிலை - வில்வித் தையை, கற்க - கற்கும் பொருட்டு, நன்னாள்கொண்டு - நல்லநாளில் தொடங்கி, கற்றாலும் - கற்றுக்கொள்வாராயினும், ஞாட்பில் - போர்க்க ளத்தில், விழி இமையாத - கண்ணிமைக்காமைக்குக் காரணமாகிய, மிக்க வீரம் - சிறந்த வீரத்தன்மையை, எவ்வாறு கற்பார் - எப்படிக் கற்றுக் கொள்வார்கள்

புடைத்தல். பேதையர் கொழிக்கு முத்தம்போலும் முத்தம் வேறெவ் விடத்தில்லா தொழியினும் செல்வப்பெருக்கிற் சிறந்தவனாகிய குபேர னுக்குக் காதலனாகியார் மூலைத்தடத் தும்டென்பார் ஆவார்கள். 'வட திசைக்கிறைவன் காதலிறைகொண்ட மகளிர் கொம்மை முழின் முலைத் தடத்து மின்றே' என்றார். இச் செய்யுளால் வணிகர் செல்வச் சிறப்புக் கூறப்பட்டது. (உ0)

**அகலிரு விசும்பி யங்கு மலகிறு ரகையுங் கோளு**
**முகுதலை யடையா வண்ண மொருபெருந் துருவன் றங்குந்**
**தகையென வுலகில் வாழ்நர்த் தாங்குநல் லுழவர் மாடம்**
**வகைபடு பல்லு ணவும் வருநர்க்கு வழங்கு மன்றே.**

(இ - ள்.) அகல் - அகன்ற, இருவிசும்பு - பெரிதாகிய ஆகாயத்தில், இயங்கும் - சஞ்சரிக்கிற, அலகு இல் - அளவு கடந்த, தாரகையும் - நக்ஷத்திரங்களும், கோளும் - ஒன்பது கிரகங்களும், உகுதலை அடையா வண்ணம் - உதிர்ந்துபோகாதபடி, ஒரு - ஒப்பற்ற, பெருந்துருவன் - பெருமை பொருந்திய துருவனால் தாங்கப்பெற்ற, தகையென - தன்மைபோல, உலகில் வாழ்நர் - உலகத்தில் வாழ்வோரை, தாங்கும் - தாங்குகிற, நல் உழவர் மாடம் - சிறந்த வேளாளருடைய மாளிகைகள், வகைபடு - பல வகைப்பட்ட, பல் உணவும் - பல உணவுகளையும், வருநர்க்கு - தம்மிடம் நோக்கி வருவோர்க்கு, வழங்கும் - கொடுக்கும் எ - று.

பூதமைந்தனுள் நீர் முதலிய ஏனைய நான்கு பூதங்கட்கும் இடங் கொடுத்தலும் ஒடுக்குதலுமாகிய பெருமை யுண்மைநோக்கி, அகல் விசும் பென்றமையாது அகலிரு விசும்பு என்றார். ஒன்பது கிரகங்களாவன:- ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி, சனி, இராகு, கேதுவென்பன இவற்றை நவக்கிரஹம் என்பர் வடநூலார். துருவன் பெருந் துருவன் என்றார். உழவர் - உழுது பயிரிடுவோர். (வேளாளர்) தாரகை தாரகா என்னும் வடசொற்றிரிபு. இச செய்யுளால் உழவர் சிறப்புக் கூறப் பட்டது. (உக)

**படுகட லுலக மேத்தும் பைங்கிளிப் பெயரி னானுங்**
**கடைதயிர் போல நஞ்சங் கலங்குபு தொடரு நோக்கின்**
**வடுவகி ரனைய வுண்கண் வருமுலை பகர்நர் சேரி**
**யடுசுற வுயரி யோன்ற னனிநக ரனைய தன்றே.**

(இ - ள்.) படு - ஒலிக்கின்ற, கடல் - கடல் சூழ்ந்த, உலகம் ஏத்தும் - உலகத்தாரால் துதிக்கப்படுகின்ற, பை - பசுமையாகிய, கிளிப்பெயரினானும் - கிளிப்பெயரையுடையவனும், கடை - கடையப்பட்ட, தயிர்போல - தயிரைப்போல, நெஞ்சம் கலங்குபு - மனங்கலங்கி, தொடரும் - பின் தொடர்ந்து செல்லுதற் கேதுவாகிய, ... 

கிர் அனைய - மாவடுவின் பிளவுபோன்ற, உண் - மையுண்ட, கண் - கண்களையுடையவளாய், வரும் - நாளுக்கு நாள் வளருகின்ற, முலை - ஸ்தனபாரத்தை, பகர்வார் - விற்பவராகிய வேசையரது, சேரி-சேரியானது, அடு - கொலைத்தொழிலையுடைய, சுற - மகரமீனை, உயரியோன், கொடியாக வுயர்த்தப்பெற்றவனாகிய மன்மதனது, அணி - அழகிய, நகர் அனையது - நகரத்தை ஒத்திருக்கும் எ - று.

படுதல் - ஒலித்தல். கிளிப்பெயரினான் என்றது சுகமுனிவரை. சுகம்-கிளி. கலங்குபு செய்பு என்னும் வாய்பாட்டிறந்த - கால வினையெச்சம். இது தொடரும் என்னும் வினைகொண்டு முடிந்தது. "கல்லாதான் சொற்காமுறுதல் முலையிரண்டும், இல்லாதாள் பெண்கா முற்றற்று" என்றும், "வாரிட்டு விம்மிப் புடைத்திறுகி யிளகி மணிமார்பிட மெலாங்கவர்ந்து, வட்டமிட் டடியிட்டு நாளுக்குநாள் மேல்வளர்ந்து பூரித்து முத்து, மாலையிட்டிறுமாந்து பட்டவர்த்தயானை மத்தகத்தோ டெதிர்த்து, வாதிட்டு மல்லிகைப்பூச் செண்டினைத் தினம்வாட்டப்படுத்தி வரையைப்போரிட்டு மைந்தர்கள் மனம் சூறையிட்டு மேற்புளகித்து வஜ்ரரத்நப் புதுச்செப்பினைத் தோழமைக்கொண்டு பொன்னினைப் பொடியாவராவிமீதிற், போட்டிட்ட தென்னவே தேமல்படர்ந்து செம்பொற் சரிகைவேலையிட்டுப், புனைதரு ரவிக்கையை யிறுக்கிக் கிழித்துப் புறப்பட்டு மல்லிகைப்பூந்தாரிட்டு வரவரப் பளபளப்பாகியிருதங்கக் கிண்ணத்தை யொத்துச், சந்த்ரகாவிச் சேலை வல்லவாட்டுக் குட்டதும்பி யண்ணாந்திடையினித், தாங்காதெனக் கனத்தோங்கி மன்மதனும் சலாமிட்டு நிற்கவும் தான், சீரிட்டு நின்று தர்தலை வணங்காமற் றிரண்டபூண் முலைகள்" என்றும் பலவாறு புகழ்ந்துரைக்கப்பெற்றதும், ஆடவர் மனத்தை முந்திக் கவர்ந்து கொள்வதும் தனமொன்றே யாதலானும், ஏனைய வுறுப்புக்களினும் இது சிறந்திருத்தலானும் முலையகர்ந்த மாத்திரையானே மற்றைய வுறுப்புக்களையும் விற்றவராதலாலும், பொதுமாதரை 'முலைபகர்வார்' என்றார். (உஉ)

**முற்றுபொன் மதிலிம் மூதூர் முழுமடந் தையராம் வாட்கட்**
**சிற்றிடை மகளிர்ச் சுட்டித் தெரிந்தரை மகளி ரென்று**
**சொற்றனர் பெயர றிந்தோர் சுடர்செய்விண் மாத ரார்க்கு**
**மற்றது மரீஇய தன்றோ வழங்கர மகளி ரென்பேர்.**

(இ - ள்.) முற்று - விளைந்த, பொன் - பொன்னால் இயன்ற, மதில் - மதில் சூழ்ந்த, இ - இந்த, முது ஊர் - பழமையான நகரத்திலுள்ள, முழு மடந்தையர் ஆம் - பூர்ண சௌந்தர்யத்தையுடைய மாதராகிய, வாள்கண்- வாள்போன்ற கண்களையும், சிறு இடை - சிற்றிடையையும் உடைய, மகளிர் - மாதரை, சுட்டி - சுட்டிக்காட்டி, தெரிந்து - ஆலோசித்து, அறிந்தோர் - புத்திமான்கள், விண்மாதரார்க்கு - தெய்வப்பெண்களுக்கு, அரைமகளிர் என்று - அரைமகளிர் என்று, பெயர் சொற்றனர் - பெயர்

சொல்லினுர்கள், சுடர் செய் - ஒளி வீசுகின்ற, அது - அதுவாகிய, அர மகளிர் என்ற பெயர் - அரமகளிர் என்கிற பெயரானது, மரீ இயது அன்றே - மருவி வழங்கினது அல்லவா எ - று.

முற்றுதல் - வளேத்தல். முதுமை - பழமை. மடந்தையர் என்றது பருவங் குறியாது பெண்பொதுவைக் குறித்தது. அரை - பாதி. வாள் உருவினுனும் கொலேத்தொழிலானும் கண்ணே ஒத்திருத்தலால் வடிவுவம மும் தொழிலுவமும் கொள்ளப்படும். "நாட்பட்ட கமலமென்ன விதய மேவும்நறுந்தேனே நுன்மார்க்கநாரிமார்கண், வாட்பட்டகாய மிந்தக்காய மென்றே யன்கூற்று முயிர்பிடிக்கவரு மந்நீதி" "கிளேத்துப் புறப்பட்ட சூர்மார்பொடுங் கிரவுஞ்ச வெற்பைத், தொளேத்துப் புறப்பட்ட வேல் முருகா துறவோ குளத்தை, வளேத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்குங் கண்ணூர்க், கிளேத்துத் தவிக்கின்ற வென்னே யெந்நாள்வந் திரட்சிப்பையே" என்றூர் பிறரும். இதனுல் தெய்வப்பெண்களே அரை மகளிர் என்று அறிஞர் கூறினர் அது அரமகளிரென மரூஉ வாயிற்று என்றதனுல், இந்நகரத்துப் பெண்கள் முழுமகளிர் என்பது சொல்லாதே யமையும் என்பதன் மேலும் முழுமடந்தையரென மிகுத்துச் சொல்லிய தனுல் இந்நகரத்துப் பெண்களது சிறப்பு இனிது விளங்கிற்று. (உ௩)

**அடலயி ராவ தவப்பே ரடுகளி றாதி யெட்டுக்**
**கடவுள்வா ரணமு மிவ்வூர்க் கண்ணதோர் பிடியி னேடேற்**
**றுடைதலி னேடித் திக்கீற் றொளித்தநின் றனவ வற்றைத்**
**தொடுகட லுலகி னுள்ளோர் சொல்பதிக் கயங்களென்றே.**

(இ - ள்.) அடல் - வெற்றியையுடைய, அயிராவதப்பேர் - ஐராவத மென்னும் பெயரையுடைய, அடுகளிறு ஆதி - கொலேயானே முதலாகிய, எட்டு - எட்டு என்னுந் தொகையுள்ள, கடவுள் - தெய்வத்தன்மையுள்ள, வாரணமும் - யானேகளும், இவ்வூர்க்கண்ணது - இந்த வூரிலுள்ளதாகிய, ஓர் பிடியினேடு - ஒரு பெண் யானேயுடன், ஏற்று - எதிர்த்து, உடைத லின் - தோற்றதனுல், ஓடி - ஓடிப்போய், திக்கு ஈற்று - திகந்தத்தில், ஒளித்து நின்றன - மறைந்து நின்றன, (ஆதலால்) அவற்றை-அந்த யானே களே, தொடு - தோண்டப்பட்ட, கடல் - கடல் சூழ்ந்த, உலகில் உள் ளோர் - உலகத்திலுள்ளவர்கள், திக்கயங்கள் என்று - அஷ்டதிக் கஜங்க ளென்று, சொல்ப - சொல்வாராயினர் எ - று.

ஐராவதம் ஐராவதி நதிதீரத்திற் பிறந்த யானே. வாரணம் - வட சொல். பிடி - பெண்யானே. எற்றல் - எதிர்த்தல். உடைதல் - தோற்றல். திகந்தம் - திக்கு அந்தம். தொடுதல் - தோண்டுதல். கயம்-கஜம் என்னும் வடசொற்றிரிபு. (உ௪)

**கொண்டறோய் மணிசெய் மாடக் கோநக ரிதனிடத்த**
**வண்டமா றுகச் செல்வ வருவிலைப் பரிக டம்பாற்**
**கண்டவே கத்திற் காற்கூ றுடைமையைக் கருதி யன்றே**
**பண்டையோர் காற்றி னுக்குப் பகர்ந்தனர் காலெ னும்பேர்.**

**(இ - ள்.)** கொண்டல் தோய் - மேகத்தைத் தொடுகின்றனவாகி, மணிசெய் - மணிகளாற் செய்யப்பட்ட, மாடம் - மாடங்களமைந்த, கோ - சிறந்த, நகர் - நகரமாகிய, இதன் இடத்த - இதனிடத்தனவாகி, அண்டம் - ஆகாயம், ஆறு ஆக - வழியாகக் கொண்டு, செல்ல - போவனவாகிய, அருவிலை - பெரும்விலையாகிய விலையுள்ள, பரிகள் பால் - குதிரைகளினிடத்தே, கண்ட - பார்த்த, வேகத்தால் - விரைவில், கால்கூறு உடைமையை - காற்பங்குடைத்தாதலை, கருதி அன்றே - ஆலோசித்தல்லவா, பண்டையோர் - முன்னோர், காற்றினுக்கு - வாயுவுக்கு, கால் என்னும் பேர் - காலென்கிற பெயரை, பகர்ந்தனர் - இட்டனர். எ - று.

இடத்த முற்றெச்சம். செல்ல என்பதும் அது. பரி - முதனிலைத் தொழிலாகுபெயர். இதற்குத் தாங்கும் தொழிலுடையது என்பது பொருள். பரிதரல் - தாங்குதல். கருதல் - நினைத்தல். (௨௫)

கலிவிருத்தம்

**மலையி னுள்ளன வார்கட லுள்ளன**
**நிலவு நால்வகை நீணிலத் துள்ளன**
**பலவு நன்கு விளக்கலிற் பார்புகழ்**
**புலவர் காப்பியம் போலுமவ் வாவணம்**

**(இ - ள்.)** மலையில் உள்ளன - மலையிலுள்ளனவும், வார் - நீண்ட, கடல் உள்ளன - கடலிலுள்ளனவும், நிலவும் - நிலைபெற்று விளங்குகிற, நால்வகை - நான்கு வகைப்பட்ட, நீள் நிலத்து உள்ளன - பெரிதாகிய நிலத்திலுள்ளனவும் ஆகிய, பலவும் - பல பொருள்களையும், நன்கு - நன்றாக, விளக்கலின் - விளக்கிக் காட்டுதலால், அ - அந்த, ஆவணம் - கடைத்தெருவானது, பார்புகழ் - உலகிலுள்ளோர் புகழ்கின்ற, புலவர் - புலவர்களாற் செய்யப்பட்ட, காப்பியம் போலும் - காவியத்தை நிகர்த்திருக்கும் எ - று.

மலையிலுள்ளன - மலைபடுதிரவியம், யானைக்கொம்புமுதலியன. கடலிலுள்ளன - கடல்படுதிரவியம், முத்து உப்பு முதலியன. நால்வகை நீணிலத்துள்ளன - காடுபடு திரவியம், பால் சங்கு முதலியன. சான்றோர் கவிகளில் மலைமுதலிய தரும் பொருள்களுண்மைபோல ஆவணத்திலும் உண்மையால் புலவர் காப்பியம் போலும் என்றார். (௨௬)

மேற்படி-வேறு

ஒலிதிரைக் கடலினோ டுறழு மாவணங்
கொலைமதக் களிறுகந் தடர்த்துக் கூற்றென
மலையெனப் பிளிறுபு வரினு மன்பதை
நிலைபெயர்த் தடியிடா நெருக்கிற் றென்பவே.

(இ - ள்.) ஒலி - ஒலிக்கிற, திரை - அலைகளையுடைய, கடலினோடு - கடலோடு, உறழும் - ஒத்த, ஆவணம் - கடைத்தெருவானது, கொலை - கொல்லுந் தொழிலையுடைய, மதக்களிறு-மதயானைகள், உகந்து-களித்து, கூற்று என - யமன்போல, அடர்த்து - நெருக்கிக் கொன்று, மலை என - மலைபோல, பிளிறுபு வரினும் - பிளிறிக்கொண்டு வந்தாலும், மன்பதை - மக்கள் கூட்டமானது, நிலைபெயர்த்து - தாம் நின்ற நிலை பெயர்ந்து, அடி இடா - அடியெடுத்து வைக்கவொண்ணாத, நெருக்கிற்று - நெருக்கத்தை யுடையது, என்ப - என்று சொல்லுவார் (அறிந்தோர்) எ - று.

உறழ்தல் - ஒத்தல். உகத்தல்-களித்தல். உடலுயிர்களைக் கூறுபடுத்தலால் யமனைக் கூற்று என்றார். அடர்த்தல் - நெருக்கல். மன்பதை - ஒரு சொல். என்ப என்னும் முற்று வினைக்கு எழுவாயாகிய அறிந்தோர் என்பது வருவிக்கப்பட்டது. (உஎ)

தரளமிங் கிதன்விலை சாற்று மின்களென்
றரிவையர் வினவுவர்க் கவரெ யிற்றெழின்
மருள்பட மனத்தினை மயக்க வாணிகர்
வரிவளை மணியென மருண்டி ருப்பரால்.

(இ - ள்.) இங்கு - இவ்விடத்திலுள்ள, தரளம்-முத்தாகிய, இதன் விலை - இதன் விலையை, சாற்றுமின் என - சொல்லுங்களென்று, வினவு - கேட்ட, அரிவையர்க்கு - மாதர்களுக்கு, அவர் எயிறு எழில் - அவர்களுடைய பல்லழகு, மருள்பட - மருட்சியுண்டாக, மனத்தினை மயக்க - மனத்தை மயக்குதலால், வாணிகர் - வணிகர், வரி-கீற்றுக்களையுடைய, வளைமணியென - சங்குமணியென்று, மருண்டு இருப்பர் - மனமருண்டிருப்பார் எ-று.

தரளம் - வடசொல். அரிவையர் என்றது பருவங் குறியாது பெண் பொதுவைக் குறித்தது. எயிறு - பல். வளை-சங்கு. மருளல் - பிரமித்தல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அரவுரி யனைய நுண்ணூ லந்துகின் மறைத்தி ருந்த
விரைவிரி கமலச் செங்கேழ் மென்முகிழ் விலைவ ரைந்து
தருதிரென் றுரைத்த மைந்தர் தமக்கலர் தொடுக்கு நல்லார்
பொருவில விவைதாம் விண்மேற் பூத்தன விலையி லென்பார்.

(இ - ள்.) அரவுரி அனைய - பாம்புத் தோல்போன்ற, நுண்நூல் - நுட்பமாகிய நூலால் செய்யப்பெற்ற, அம் - அழகிய, துகில் - துணியினால், மறைத்திருந்த - மூடப்பட்டிருந்த, விரை விரி - மணம் விரிந்த, கமலம் - தாமரையின், செய்கேழ் - செந்நிறத்தையுடைய, மெல் முகிழ் - மெல்லிய அரும்புகளின், விலை - கிரயத்தை, வரைந்து - அளவுபடுத்தி, தருதிர் என்று உரைத்த - தாருங்களென்று கேட்ட, மைந்தர் தமக்கு - புருடருக்கு, அலர் தொடுக்கும் - பூத்தொடுக்கிற, நல்லார் - மாதர், பொருவு இல - ஒப்பில்லாதவையாகிய, இவை - இந்த மலர்கள், விண்மேல் - விண்ணுலகில், பூத்தன - மலர்ந்தன, (ஆதலால் இவற்றுக்கு) விலை இல் என்பார் - விலையில்லையென்று சொல்வார் எ - று.

அரா எனற்பாலது அர எனக் குறுக்கல் பெற்றது. உரி முதனிலைத் தொழிலாகுபெயர். முகிழ் என்பதும் அது. வரைதல் - அளவுபடுத்தல். அலர் என்பதும் அது. (௨௯)

தேந்தரு செய்ய வாம்பற் றிருமல ரொன்று மீண்டி
யாந்தரும் விலைகொண் டொல்லை யெமக்களித் திடுமி னென்ன
வேந்தெழி லுடைய தோர்மெல் லீர்ங்கம லத்தோ டல்லா
னாந்தனி பகரோ மென்று நன்னுதன் மகளிர் சொல்வார்.

(இ - ள்.) தேம்தரு - தேனைத் தருகிற, செய்ய ஆம்பல் - செவ்வாம்பலின், திருமலர் ஒன்றும் - அழகிய மலர் ஒன்றையும், ஈண்டு - இவ்விடத்தில், யாம்தரும் - யாம் கொடுக்கிற, விலை கொண்டு - கிரயத்தைப் பெற்றுக்கொண்டு, ஒல்லை - விரைவாக, எமக்கு - எங்களுக்கு, அளித்திடுமின் என்ன - கொடுத்திடுங்களென்று சொல்லுதலும், நன்னுதல் - அழகிய நெற்றியையுடைய, மகளிர் - மாதர், ஏந்து எழில் உடையது - மிக்க அழகைக்கொண்டிருக்கிறதாகிய, ஓர் - ஒரு, மெல் - மெல்லிய, ஈர் - குளிர்ந்த, கமலத்தோடு அல்லால் - தாமரை மலரோடன்றி, நாம் - நாங்கள், தனி - தனியே, பகரோம் என்று - விற்கமாட்டோமென்று, சொல்வார் - கூறுவர் எ - று.

அளித்தல் - தருதல். பகர்தல் - விற்றல். நன்னுதல் என்பதில் நன்மை அழகெனப் பொருள்கோடலேயன்றிச் சிறப்பெனப் பொருள் கோடலுமமையும். (௩௦)

இனையன பலதி றத்தா லெறுழ்வலித் தடந்தோண் மைந்தர்
புனைநறு மலர்மேல் வைத்துப் புகறரு முன்னற் கேற்பக்
கனைகட லமுத மன்ன கட்டுரை யெதிர்கொ டுக்கும்
வனைகுழன் மகளிர் கூல மறுகிற்கு விளக்க மாவார்.

(இ - ள்.) இனையன - இத்தன்மையவாகிய, பல திறத்தால் - பல வகையால், எறுழ்வலி - மிக்க வலியுள்ள, தடம்தோள் - பெரிய புயங்களையுடைய, மைந்தர் - புருடர், புனை - அலங்கரிக்கிற, மலர்மேல் வைத்து - மலர்மீது வைத்து, புகல்தரு - பேசுகிற, முன்னற்கு ஏற்ப - கருத்துக்கிசைய, கனை - ஒலிக்கிற, கடல் - பாற்கடலிலுண்டாகிய, அமுதம் அன்ன - அமிர்தத்தை நிகர்த்த, கட்டுரை - உறுதிமொழியை, எதிர்கொடுக்கும் - எதிர்மொழியாகப் பேசுகிற, வனைகுழல் - அலங்கரிக்கப்பெற்ற, கூந்தலையுடைய, மகளிர்-பெண்கள், கூலமறுகிற்கு-கடைத்தெருவுக்கு விளக்கம் ஆவார் - தீபம்போல்பவராவார் எ - று.

திறம் - வகை. தடம் - மலையென்றலு மொன்று. புனைதல் - அலங்கரித்தல். மலர் - முதனிலைத் தொழிலாகு பெயர். புகலல் - பேசல். முன்னல் - கருதல். கனைத்தல் - ஒலித்தல். வனைதல் - அலங்கரித்தல். மறுகு - தெரு. கூலம் - கடைத்தெரு. (௫௧)

கலிநிதுறை

மழைகி டந்துகண் படுநெடுஞ் சுடர்செய்பொன் மாடத்
தெழில்செய் பூங்கொடி நுடங்குத லிருநிலங் குளிரப்
பொழித ரும்பனி நிலாமதி மண்டலம் புகுதாக்
கழிபெ ருங்குளிர் கொண்டுட னடுக்குதல் கடுக்கும்.

(இ - ள்.) மழை - மேகங்கள், கிடந்து - படுத்து, கண்படும்-தூங்குகிற, நெடு - மிக்க, சுடர்செய் - ஒளிவீசுகிற, பொன்மாடத்து - பொன்னேனியன்ற மாளிகைகளின் மேலுள்ள, எழில் செய் - அழகைச் செய்கிற, பூங்கொடி - பூங்கொடிகள், நுடங்குதல் - அசைதல், இரு-பெரிய, நிலம்-நிலவுலகமானது, குளிர - குளிர்ச்சியடைய, பொழிதரும் - சொரிகின்ற, பனிநிலா - குளிர்ந்த நிலவையுடைய, மதி மண்டலம் - சந்த்ர மண்டலத்தில், புகுதா - புகுந்து, (அதனால்) கழிபெருங் குளிர்கொண்டு - மிகப்பெரிய குளிரையடைந்து, உடல் நடுக்குதல் - உடல் நடுங்கா நிற்றலை, கடுக்கும் - நிகர்க்கும் எ-று.

மழை - பண்பாகு பெயர். கிடத்தல் - படுத்தல். கண்படுதல் - ஒரு சொல். தூங்குதலென்பது பொருள். நுடங்கல் - அசைதல். நுடங்கு பகுதி. நிலம் இடவாகுபெயர். பொழிதரும் ஒருசொல். பொழிதா பகுதி. நிலா - சந்த்ரிகை. புகுதா செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். கடுத்தல் - நிகர்த்தல். (௫௨)

திங்கள் வாணுதற் றிருவனர் பயிறலிற் சிறந்த
வங்கண் மாடத்தி னெடுங்கொடி வான்முகட் டசைதல்
செங்கை யானில மடந்தைசெவ் வாய்ப்பெயர்ச் சிறுவன்
பொங்கு மாரழ லுடம்பினைத் தைவரல் போலும்.

(இ - ள்.) திங்கள் - பூர்வபக்ஷத்து (அஷ்டமீ) சந்திரனை நிகர்த்த, வாள் - ஒளிபொருந்திய, நுதல் - நெற்றியையுடைய, திரு அன்னார்-திரு மகளை நிகர்ப்பவராகிய மாதர், பயிறலின் - நெருங்குதலால், சிறந்த-உயர்ந்த, அம்கண் - அழகிய இடத்தையுடைய, மாடத்தில் - மாளிகைகளின் மீது கட்டப்பட்டிருக்கிற, நெடுங்கொடி - நீண்ட கொடியாடைகள், வான்முகட்டு - ஆகாயத்தின் உச்சியில், அசைதல் - அசையாநிற்றல், நில மடந்தை - பூதேவியானவள், செங்கையால் - தனது செவந்தகைகளால், செவ்வாய் பெயர் - செவ்வாய் என்னும் பெயரையுடைய, சிறுவன்-சிறுவனது, பொங்கும் - மிக்க, ஆர் - அரிய, அழல் உடம்பினை - நெருப்புடம்பை, தைவரல் - தடவுதலை, போலும் - ஒத்திருக்கும் எ-று.

நுதலுக் குவமையாகப் புணர்க்கப் படுதலால் திங்கள் பூர்வபக்ஷத்து அஷ்டமீ சந்த்ரனைக் குறித்தது. பயிறல் - சஞ்சரித்தலுமாம். கொடியை த்வஜம் என்பர் வடநூலார். மடந்தை - பருவங்குறியாது பெண் பொதுவைக் குறித்தது. தைவரல் என்பதற்குப் பகுதி தைவா. (௩௩)

இனைய பல்வளங் கெழுதிருக் காளத்தி யென்னும்
வினையி றொன்னக ருமையொடு வீற்றிருந் தருளி
முனிவில் பேரருட் டிறத்தினுன் முத்தொழி லியற்றும்
புனையி ளம்பிறைக் கண்ணியஞ் சடைமுடிப் புத்தேள்.

(இ - ள்.) இனைய - இத்தன்மையவாகிய, பல்வளம்-பல வளங்களும், கெழு - பொருந்தியிருக்கிற, திருக்காளத்தி யென்னும் - சீகாளத்தியென்று சொல்லப்படுகிற, வினை இல் - தீமையற்ற, தொல் நகர்-பழைய நகரின்கண், உமையொடு - உமாதேவியோடு கூடி, வீற்றிருந்தருளி-எழுந்தருளியிருந்து, முனிவு இல் - வெறுப்பற்ற, பேர் அருட்டிறத்தினுல் - பெருங்கருணைத் தன்மையால், முத்தொழில் - முத்தொழில்களையும், இயற்றும் - நடத்துகிற, புனை - அலங்காரமான, இளம்பிறை - இளம்பிறையாகிய, கண்ணி - மாலையைச் சூடின, சடைமுடி-சடாமகுடத்தையுடைய, புத்தேள் - தேவன் எ-று.

பல்வளம்-நிலவளம் நீர்வள முதலியன. வினையென்றது தீவினைப்பயனுகிய கெடுதியைக் குறித்தது. முத்தொழில் என்றது படைப்பு காப்பு அழிப்பு என்பவற்றை. இவற்றை முறையே ஸ்ருஷ்டி ஸ்த்திதி லயம் என்பர் வடநூலார். இளம்பிறை யென்றது ஒரு கலையாகிய சந்த்ரனை. இது "தாரென்ன வோங்குஞ் சடைமுடிமேற் றனித்திங்கள் வைத்த, காரென்ன வாருங் கறைமிடற் றம்பலவன் கயிலை, யூரென்ன வென்னவும் வாய்திறவீ ரொழிவீர் பழியேல், பேரென்னவோ வுரையீர் பிறை வாணுதற் பேதையரே" என்னும் மணிவாசகப்பெருமான் திருவாக்கினுல்

இனிது விளங்கும். புனையிளம் பிறைக்கண்ணியஞ் சடைமுடி என்னும் விசேடணத்தால், புத்தேள் என்னும் தெய்வப் பொதுப்பெயர் சிவபெருமானை யுணர்த்திற்று. (௩௪)

முன்னொ ரோன்றறை கடற்படை முழுமதிக் கவிகை
மன்னு மாபுகழ் யாதவ னெனும்பெயர் மன்னன்
றன்னை யாட்கொளத் திருவுளங் கொண்டுமென் றடந்தோட்
பொன்ன வாஞ்சுணங் கிளமுலைப் பூங்கொடி புலம்ப.

(இ - ள்.) முன் ஓர் ஞான்று - முற்காலத்தில் ஒருநாள், அறை-சத்திக்கிற, கடல் - கடலை நிகர்த்த, படை - சேனையையும், முழுமதி-பூர்ண சந்த்ரனை நிகர்த்த, கவிகை-முத்துக்குடையையும், மன்னும் - நிலைபெற்ற, மாபுகழ் - பெருங் கீர்த்தியையுமுடைய, யாதவன் என்னும் பெயர் மன்னன் தன்னை - யாதவனென்னும் பெயரையுடைய அரசனை, ஆட்கொள - அடிமைகொள்ளும்பொருட்டு, திருவுளம்கொண்டு-திருவுளம்பற்றி, மெல்-மென்மையாகிய, தடம் தோள்-பெரிய தோள்களையும், பொன் அவாவும்-பொற்கொடியும் விரும்புதற் குரிய, சுணங்கு-தேமல் படர்ந்த, இளமுலை - மிருதுவாகிய தனங்களையுமுடைய, பூங்கொடி - பூங்கொடிபோல்வாளாகிய உமாதேவி, புலம்ப - புலம்பாநிற்க எ-று.

கடலுக்குப் பல அடைமொழிகள் புணர்த்தற் குரிமையிருக்க, அறை யென்னும் விசேடணத்தைப் புணர்த்திய தெற்றுக்கெனின், அவை பலவற்றுள்ளும் இது சிறந்து தோன்றுதலோக்கி யென்க. படை - படுத்தற் குரியது. படுத்தல் - கொல்லுதல். இது தொழிலாகுபெயர். கடற்படை யென்றதனால் படையின் பெருமை விளங்கிற்று. ஈண்டைக் கேற்ப நால்வகைப் படையையுங் குறித்தது. நால்வகைப் படையாவன:— தேர், யானை, குதிரை, காலாள் என்பன. இவற்றை ரதகஜ துரகபதாதியென்பர் வடநூலார். முழுமதிக் கவிகை யென்றமையால் முத்துக்குடை யென்பது பெறப்பட்டது. மன்னன் தன்னையென்பதில் தன் சாரியை. (௩௫)

நீற்று வெண்டிரி புண்டர நிகரில்கண் மணிகண்
மாற்ற ரும்பர சிவலிங்கந் தன்னுரு வயங்கச்
சாற்ற ரும்விட சங்கம ணாகியத் தடந்தோ
ளாற்றன் மன்னனு ராயண வளநக ரடைந்தான்.

(இ - ள்.) வெள்நீற்று - திருவெண்ணீற்றுலாகிய, திரிபுண்டரம் - திரிபுண்டரமும், நிகர் இல் - ஒப்பற்ற, கண்மணிகள் - உருத்திராக்கங்களும், மாற்று அரு - நீக்குதற் கரிதாகிய, பரம் - மேலான, சிவலிங்கம் - சிவலிங்கமும், தன் உரு - தன் திருமேனியில், வயங்க - விளங்காநிற்க, சாற்று அரு - சொல்லுதற் கரிதாகிய, விடசங்கமன் ஆகி - விடசங்கமத்

திருவுருத்தாங்கி, அ - அந்த, தடம் - மலைபோலும், தோள் ஆற்றல் - தோள்வலியுள்ள, மன்னன் - யாதவமஹாராஜனது, வளம் - எல்லாவளங்களும் நிறைந்திருக்கிற, நாராயணநகர் - நாராயணபுரத்தை, அடைந்தான் - சேர்ந்தான் எ-று.

கண்மணி உருத்திர மூர்த்தியின் கண்ணிற் பிறந்தமையால் உருத்திராக்கம் எனப் பெயரிட்டு வழங்குவர். இதனை வடநூலார் ருத்ராக்ஷம் என்பர். சாற்றுதல் - சொல்லுதல். (௩௬)

அடைந்த பேரருட் குன்றனை னகலிரு விசும்பு
தொடர்ந்த மாமணி மாடத்த தோரணத் தெருவி
னுடங்கு நுண்ணிடை மகளிர்நா ணருங்கடி நூறி
மடங்க லேறெனச் சென்றனன் கண்டவர் மருள.

(இ - ள்.) அடைந்த - சேர்ந்த, பேர் - பெரிய, அருள் குன்று அன்னான்-அருண்மலையை நிகர்த்தவன், அகல்-பரந்த, இருவிசும்புதொடர்ந்த- பெரிய ஆகாயத்தைத் தொட்ட, மா - பெரிய, மணிமாடத்த - ரத்நமாளிகைகளையுடைய, தோரணத் தெருவில் - தோரண வீதியில், நுடங்கு - துவள்கின்ற, நுண் இடை - நுட்பமாகிய இடையையுடைய, மகளிர் - மாதரது, நாண் - நாணமாகிய, அரு - கடத்தற்கரிதாகிய, கடி - காவலை, நூறி - கடந்து, கண்டவர் - பார்த்தவர், மருள - மருட்சியடையும் வண்ணம், மடங்கல் ஏறு என - ஆண் சிங்கம்போல, சென்றனன்-போயினன் எ-று.

மடங்கல் - சிங்கம். ஏறு என்றமையால் ஆண் சிங்கமென் றுரைக்கலாயிற்று. (௩௭)

இலங்கு பன்மணி மேகலை வளையுட னிழந்து
பொலஞ்சு ணங்கலர் கொம்மையம் புணர்முலை பசந்த
கலங்கொள் கொம்பனா ரஞ்சனக் கண்மலர் பரப்பிச்
சிலம்பி னொண்மணி பொருதுகக்கடை தொறுஞ் செறிந்தார்.

(இ - ள்.) இலங்கு - விளங்குகிற, பல் - பலவாகிய, மணி - மணிமயமாகிய, மேகலை-மேகலையை, வளையுடன்-வளையலோடு,இழந்து-தோற்று, பொலம் - பொன்னிறமாகிய, சுணங்கு - தேமலையும், அலர் - பரந்த, கொம்மை - திரட்சியாகிய, அம் - அழகுள்ள, புணர் - ஒன்றோடொன்று நெருங்கின, முலை - முலைகள், பசந்த - பசலைபோர்த்த, கலம்கொள் - ஆபரணங்களைத் தாங்கிய,கொம்பு அன்னார் - பூங்கொடி போல்பவராகிய மாதர், அஞ்சனம் - மையெழுதப்பெற்ற, கண்மலர் பரப்பி - மலர்போலுங் கண்களைப்பரப்பி, சிலம்பின் - சிலம்பினது, ஒள் - அழகாகிய, மணி-

அரதனப் பருக்கைகள், பொருது - ஒன்ருேடொன்று தாக்கி, உக - உடைந்து சிந்த, கடைதொறும் - வாயில்கள்தோறும், செறிந்தார்-நெருங்கினார்கள் எ-று.

மேகலை - மாதரிடையணி. இதனை அரைப்பட்டிகை யென்றுங் கூறுப. இது எட்டுக் கோவையுள்ளது. பொலம் - ஆகுபெயர். பசலை - இதனைப் பயலையென்றும் மாமையென்றும் பீர்என்றும் கூறுப. வைவர்ண்யம் என்பர்வடநூலார் புணர்தல் நெருங்குதல். சிலம்பு - ஒலித்தலையுடையதெனப் பொருடரலால், முதனிலைத் தொழிலாகு பெயர். இது மகளிர் காலணியினொன்று. உகுதல்-சிந்துதல். செறிதல் - நெருங்குதல். (௩௧)

எழுசீர்க்கழிநெடி லடியாசிரியவிருத்தம்

தன்றிரு வுருவந் திரிந்துமா நிலத்திற்
றனிவிளை யாடிய குன்றங்
கொன்றவை நுதிவேற் பூத்தலைச் சேவற்
கொடிவல னுயர்த்தசெவ் வேளோ
வன்றிநல் லன்பர்க் கருளிய கடல்சூ
ழகனிலத் தடைந்தசிற் றிளமான்
கன்றொடு கணிச்சிக் கூர்ம்படை யெடுத்த
கண்ணுதற் கடவுளோ வென்பார்.

(இ - ள்.) தன்-தனது, திருவுருவம்-திருவுருவமானது, திரிந்து-மாறுபட்டு, மா - பெரிய, நிலத்தில் - நிலவுலகத்தில், தனிவிளையாடிய - ஒப்பற திருவிளையாடலைச் செய்த, குன்றம் - மலையை, கொன்ற - பிளந்துகொன்ற, வை நுதி - கூர்மையாகிய நுனியையுடைய, வேல் - வேற்படையைத் தாங்கிய, பூ - செம்மலர்போலும், தலை - உச்சிக்கொண்டையையுடைய, சேவற்கொடி - சேவற்கொடியை, வலன் உயர்த்த - வலப்புறத் தேந்தின, செவ்வேளோ - முருகக்கடவுளோ, அன்றி - அல்லாமல், நல் அன்பர்க்கு - சிறந்த பத்தருக்கு, அருளிய - அருள் செய்யும்பொருட்டு, கடல் சூழ் - சமுத்திரஞ் சூழ்ந்த, அகல் - பரந்த, நிலத்து - நிலவுலகத்தில், அடைந்த - வந்து சேர்ந்த, சிறு இளமான் கன்றொடு - மிக்க இளமையையுடைய மான் கன்ருேடு, கணிச்சி - மழுவாகிய, கூர்படை - கூர்மையாகிய ஆயுதத்தையும், எடுத்த - ஏந்திய, கண்ணுதல் - நெற்றிக் கண்ணையுடைய, கடவுளோ - தெய்வமோ, என்பார் - என்று சொல்வார்கள் எ-று.

திரிதல் - மாறுபடுதல். குன்று - மலை. இது அம்முச்சாரியை பெற்றுக் குன்றமென் றுயிற்று. இது கிரவுஞ்ச கிரியைக் குறித்தது. அருளிய செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். நல்லன்பர்க்கு அருளிய கடவுளோ என்றது சிவபெருமானு வென்றபடி. (௩௨)

விரிசுடர்ச் செக்கர் வானிறஞ் சமழ்ப்ப
விளங்குகற் றோய்த்தபூந் தானை
சுரிவளைத் தடக்கைத் திருமறு மார்பன்
றுகிலினைக் கடக்குமா லென்பார்
பொருமதக் களிற்றின் பிறைமருப் பீர்ந்து
புனைந்தசெந் துகிர்த்திரள் குமிழின்
றிருவடி நிலைதொட் டறைகழ லார்ப்பச்
செல்லுத னமர்க்கரி தென்பார்.

(இ-ள்.) விரி - பரந்த, சுடர் - ஒளியையுடைய, செக்கர்வான் - அந்திவானத்தின், நிறம் - நிறமானது, சமழ்ப்ப - நாணும்படி, விளங்கு - ஒளிவிளங்குகிற, கல் - காவிக்கல் நீரில், தோய்த்த - நனைத்தெடுத்த, பூந்தானை - அழகாகிய ஆடையானது, சுரி - முகஞ்சுரித்த, வளை - சங்காயுதத்தை யேந்திய, தடக்கை - பெரிய கையினையும், திருமறு மார்பன் - திருமகளையும் மறுவையும் உடைய மார்பினையும் உடையவனாகிய திருமாலின், துகிலினை - ஆடையை, கடக்கும் என்பார் - தோற்பிக்கும் என்று சொல்லுவார், பொரும்-போர் செய்தற்குரிய, மதகளிற்றின் - மதயானையின், பிறை-பிறைபோன்ற, மருப்பு - கொம்பினையும், ஈர்ந்து - அறுத்து, புனைந்த - அலங்கரித்துச் செய்யப்பெற்ற, செந்துகிர் - செம்பவளத்தாற் செய்யப்பட்ட, திரள் - திரண்ட, குமிழின் - குமிழினையுடைய, திருவடி நிலைதொட்டு - திருவடி நிலையைத் தொடுத்து, அறைகழல் ஆர்ப்ப - ஒலிக்கின்ற கழல் ஆரவாரிக்க, செல்லுதல் - நடத்தல், நமர்க்கு - நம்போல்வாருக்கு, அரிது என்பார் - அருமையான காரியமென்பார்கள் எ-று.

செக்கர்வான் - செவ்வானம். சமழ்த்தல் - நாணுதல். தோய்த்தல்- நனைத்தல். மறு - திருமாலின் மார்பிலுள்ள ஒரு உத்தம லக்ஷணமான மச்சம். கடத்தல் - தோற்பித்தல். பொருதல் - போர்செய்தல். களிறு - ஆண்யானை. ஈர்தல் - அறுத்தல். துகிர் - பவளம். இதனை ப்ரவாளம் என்பர் வடநூலார். (சo)

வினையடர் நீறு பூத்தவொண் ணுதலும்
விரிசடைக் கடவுள்கண் டந்த
புனைமணி தரள மிடையிடேஉக் கோத்துப்
பொலிவடந் துயல்வரு மார்புஞ்
சினைமலர் தொடுத்த கண்ணிசூழ்ந் தியாத்துச்
செவிமிசை தாழ்ந்தகுஞ் சியுங்
கனவினு ளேனு மின்னுமோர் நாளிற்
காண்டரப் பெறுவமோ வென்பார்.

(இ - ள்.) வினை - தீவினையை, அடர் - கொல்லுகிற, நீறு பூத்த - திருவெண்ணீறு பூசப்பெற்ற, ஒள் நுதலும் - அழகிய நெற்றியும், விரி - பரந்த, சடை - சடாபாரத்தையு முடைய, கடவுள்-சிவபெருமானது, கண் தந்த - கண்ணினால் தரப்பெற்ற, புனை - அலங்கரித்தலையுடைய, மணி- மணியையும், தாளம் - முத்தையும், இடையிடே - இடையிடையே யமை த்து, கோத்து - கோக்கப்பட்டு, பொலி - விளங்குகிற, வடம் - அக்க மாலையானது, துயல்வரும் - புரளாநின்ற, மார்பும் - திருமார்பும், சினை மலர் தொடுத்த - கிளைகளில் மலர்ந்த மலர்களால் தொடுக்கப்பட்ட, கண்ணி - மாலையை, சூழ்ந்துயாத்து - சுற்றிக் கட்டி, செவி மிசை - காது களின்மேல், தாழ்ந்த - தொங்குகிற, குஞ்சியும் - சிகையும், நம் - நமது, கனவினுள் எனும் - கனவிலாயினும், இன்னும் ஓர்நாளில் - இன்னுமொரு காலத்தில், காண்தரப் பெறுவமோ - காணப் பெறுவோமோ, என்பார் - என்று சொல்லுவார்கள் எ-று.

அடர்நீறு என மேல் வருதலால் வினை தீவினையெனப்பட்டது. இது இதன்பயனாகிய பாவத்தைக் குறித்தலால் ஆகுபெயர். விரிசடை யென்றதனால் ஆகாயகங்கை, பாம்பு, பிறை முதலிய பொருள்களுக்கு இடந் தருதற் குரிய பரந்த சடை என்பது பெறப்பட்டது. "வெள்ளந்தாழ் விரிசடையாய்" என்றார் மணிவாசகரும். இடே - சொல்லிசை யளபெடை. அக்கமாலை - ருத்ராக்ஷமாலை. தாழ்தல் - தொங்குதல். யாத்தல் - கட்டுதல். பெறுவமோ வென்னும் ஓகாரம் எதிர்மறை, ஐயமுமாம். துயல்வரும் என்பதற்குப் பகுதி துயல்வா. சினைமலர் என்றது கோட்டுப் பூவை. (சுக)

மெல்லிளம் பிணையின் செவியெழில் கடந்த
வெள்ளிலை யடுக்கிடக் கையும்
வில்லுமிழ் பசும்பொற் றகடுகொண் டியாத்து
விளங்குபொற் கொடிப்பிரம் பேனை
யல்லியங் கமலக் கையினிற் பிடித்த
வழகுமீத் தகில்கிடந் தசையுங்
கல்லுறழ் தடந்தோ ளழகுநங் கண்கள்
கருத்தொடு கவர்ந்தன வென்பார்.

(இ - ள்.) மெல் இளம் பிணையின் - மிக்க இளமையையுடைய பெண் மானின், செவி எழில் - காதுகளின் அழகை, கடந்த - வென்ற, வெள் ளிலை அடுக்கு - வெற்றிலையை யடுக்கின, இடக்கையும் - இடதுகையும், வில் உமிழ் - ஒளியைக் கக்குகிற, பசும்பொன் தகடு கொண்டு யாத்து - பசும்பொற் றகட்டினால் கட்டி, விளங்கு - பிரகாசிக்கிற, பொன்கொடி - பொற்கொடிபோன்ற, பிரம்பு - பிரம்பும், ஏனை - மற்றையதாகிய, அல்லி

யங்கமலக் கையினில் பிடித்த - அகவிதழ்களையுடைய தாமரை மலர் போலும் திருக்கரத்திற் பிடித்த, அழகும் - சௌந்தரியமும், மீ - மேலே, கிடந்து அசையும் - கிடந்தசையா நின்ற, கல் உறழ் - மலையை நிகர்த்த, தடம்தோள் அழகும் - பெரிய தோளினழகும், நம் கண்கள் - நமது கண்களை, கருத்தொடு - மனத்தோடு, கவர்ந்தன - கவர்ந்துகொண்டன, என்பார் - என்று சொல்வார்கள் எ-று.

பிணை பெண்மான். இது மரபு வழக்குப் பெயர். கடத்தல் - வேறல். அகவிதழ் - உள்ளிதழ். கல் - ஆகுபெயர். உறழ்தல் - நிகர்த்தல். பகுதி உறழ். கண்கள் கருத்தொடு கவர்ந்தன என்றது கண்களையும் கருத்தையும் கவர்ந்தன என்றபடி. வெள்ளிலை என்பதில் வெண்மை வெறுமையையுணர்த்திற்று. வில் - ஒளி (சஉ.)

ஊரல ரெடுப்பக் கலையொடு பொலஞ்செ
யொளிவளை கவர்ந்துமா முலைக்கட்
பீரலர் வித்து மணிநெடுந் தெருவிற்
பெயர்ந்தெம துளத்தொடுஞ் செல்லு
மீரமின் மனத்திம் மாயசங் கமனை
யெதிர்ப்படி னெறிபெருந் திரைய
வார்கலி யுலக மனைத்தையு மயக்கு
மனங்கனு மயங்குமற் றென்பார்.

(இ - ள.) ஊர் - ஊரிலுள்ளார் யாவரும், அலர் எடுப்ப - பழி தூற்றும்படி, கலையொடு - உடுத்த ஆடையொடு, பொலம் செய் - பொன்னினாற் செய்யப்பெற்ற, ஒளிவளை - பிரகாசத்தை யுடைய வளையலை, கவர்ந்து - கிரகித்து, மாமுலைக்கண் - பெரிய ஸ்தனங்களில், பீர் அலர்வித்து- பசலைநிறம் போர்க்கச் செய்து, மணி - ரத்நகசிதமாகிய, நெடுந்தெருவில்- பெரிய வீதியில், பெயர்ந்து - அசைநடை நடந்து, எமது உள்ளத்தொடும் செல்லும் - எமது மனத்தோடு போகாநின்ற, ஈரம் இல்மனத்து - அன்பில்லாத மனத்தினையுடைய, இ - இந்த, மாயசங்கமனை - மாய வித்தை கற்ற ஜங்கமனை, எதிர்ப்படின் - எதிர்ப்பட்டால், எறி - வீசுகிற, பெரு திரைய - பேரலைகளையுடைய, ஆர்கலி - கடல் சூழ்ந்த, உலகம் அனைத்தையும் - உலக முழுதையும், மயக்கும் - மயக்குகிற, அனங்கனும் - மன்மதனும், மயங்கும் - மயங்கிவிடுவான், என்பார் - என்று சொல்லுவார்கள் எ - று.

ஊர் ஆகுபெயர். பொலம் - பொன். பீர் பசலை யென்பன நிறவேறுபாட்டை யுணர்த்துஞ் சொற்கள். ஆர்கலி - வினைத்தொகை புறத்துப்பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். அநங்கன்-அங்கம் இல்லாத

வன், உருவிலியென்றுங் கூறுப. சிவபெருமானது நெற்றிக்கண்ணெரி யுண்டு உருவிழந்தவனாதலால் மன்மதனுக்கு இந்தப் பெயர் வழங்கலாயிற்று. உள்ளத்தொடு செல்லல் என்றது மனத்தைக் கவர்ந்து செல்லல் என்றவாறு. (௪௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இன்னன கிளந்து காமத் தெரியக மகளிர் நிற்ப
முன்னவன் செல்லு மாங்கண் முழவுத்தோள் யாத வற்குப்
பொன்னியல் கலந் திருத்தும் பொற்கொடி யிறைவன்றாளின்
மன்னுமன் புருவ மாய மடவர லெதிர்ப்பட் டாளால்.

(இ - ள்.) இன்னன - இவைபோல்வனவாகிய சொற்களை, கிளந்து - சொல்லி, காமத்து - காமத்தீயினால், எரி - எரிக்கப்பட்ட, அகம் - மனத்தையுடைய, மகளிர் - மாதர், நிற்க - நில்லா நிற்க, முன்னவன் - முதல்வனாகிய சிவபெருமான், செல்லும் - போகிற, ஆங்கண் - அப்போழ்தில், முழவு - மத்தளம்போன்ற, தோள் - தோள்களையுடைய, யாதவற்கு - யாதவன் என்னும் அரசனுக்கு, பொன் இயல் - பொன்னாலியன்ற, கலம் திருத்தும் - கலம் திருத்தி வைக்கிற, பொற்கொடி - பொற்கொடிபோலும் பெண்ணொருத்தி, இறைவன் தாளில் - இறைவனது திருவடியின்கண், மன்னும் - நிலைபெற்ற, அன்பு உருவம் ஆய - அன்பே யுருவமாகக்கொண்ட, மடவரல் - பெண்ணானவள், எதிர்ப்பட்டாள் - எதிர்ப்பட்டனள் எ-று.

எரியென மேல்வருதலால் காமம் காமத்தீயென் றுரைக்கப்பட்டது. அகம் ஆகுபெயர். எல்லாப் பொருள்களுக்கு முன்னிருப்பவனாதலால் சிவபிரானை முன்னவன் என்றார். கலம் திருத்தல் - உண்கலங்களைச் சுத்தி செய்து வைத்தல். (௪௪)

எதிர்தரு மடந்தை யைய னிணையடிக் கமலப் போதின்
மதியிளம் பிளவி னுக்கு வண்ணத்தி னானு மொப்பப்
புதையிருண் மலம கற்றும் பொடியணி நுதலு நிஞ்சத்
ததைமலர்க் கொடி நிலத்திற் றாழ்ந்தென விறைஞ்சி நின்றாள்.

(இ - ள்.) எதிர்தரும் - அவ்வாறு எதிர்ப்பட்ட, மடந்தை - பெண்ணானவள், ஐயன் - இறைவனது, இணை அடி-இரண்டு திருவடியென்கிற, கமலப் போதில் - தாமரை மலர்மீது, மதி - சந்திரனது, இளம்பிளவினுக்கு - இளங்கீற்றுக்கு, வண்ணத்தினானும் - நிறத்தினாலும், ஒப்ப - நிகராகும்படி, புதை - மறைக்கிற, இருள் - அந்தகார ரூபமாகிய, மலம் - மும்

மலத்தை, அகற்றும் - ஒழிக்கிற, பொடி - திருவெண்ணீற்றை, அணி - தரிக்கப்பெற்ற, நுதல் - நெற்றியானது, உரிஞ்ச - உரிஞ்சும்படி, தறை - நெருங்கின, மலர்கொடி - ஒரு பூங்கொடியானது, நிலத்தில் - மண்ணில் வீழ்ந்து, தாழ்ந்தால் என - வணங்கினாற்போல, இறைஞ்சி நின்றாள் - வணங்கி நின்றாள் எ-று.

எதிர் தரும் ஒரு சொல்லாய் நின்றது. இதற்குப் பகுதி எதிர்தா. ஐ - அழகாதலால் ஐயன் என்பதற்கு அழகனெனப் பொருள் கோடலு மாம். புதைத்தல் - மறைத்தல். மும்மலமாவன:—ஆணவமலம், மாயா மலம், கர்மமலம் என்பன. தறைதல் - நெருங்குதல். தாழ்தல் - வணங்கல்.

எரிபடு மிழுதின் றன்மை யெய்திய மனத்தி னோடு
திருமுக மினித லர்ந்து செறிதொடிக் காந்தள் கூப்பி
யருவினைத் தொடர றுத்த வடிகளும் மடிகள் கண்டு
பெரிதுமிவ் வுடம்பெ டுத்துப் பெறுபயன் பெற்றே னென்றாள்.

(இ - ள்.) எரிபடும் - நெருப்பில் வீழ்ந்த, இழுதின் தன்மை எய்திய - நெய்யின் தன்மையை யடைந்த, மனத்தினோடு - மனத்துடனே, திரு முகம் - அழகிய முகமானது, இனிது அலர்ந்து - இனிதாக மலர்ந்து, செறிதொடி - நெருங்கின வளையலணிந்த, காந்தள் - காந்தள் மலரை, கூப்பி - குவித்து, அரு - (அறுத்தற்கு) அருமையாகிய, வினைத்தொடர் அறுத்த - வினைக்கட்டறுத்த, அடிகள் - சுவாமீ, நம் அடிகள் கண்டு - உமது திருவடிகளைத்தரிசித்து, இவ்வுடம்பெடுத்து-இந்த வுடம்பெடுத்து, பெறுபயன் - பெறுதற்குரிய பேற்றை, பெரிதும் பெற்றேன் என்றாள் - மிகுதியாகப் பெற்றேனென்று சொல்லினாள் எ-று.

எரி முதனிலைத் தொழிலாகு பெயர். இழுதின் தன்மையாவது உருகு தல். செறிதொடியென்ற விசேடணத்தால் காந்தள் கையைக் குறித் தது. காந்தள் ஆகுபெயர். இவ்வுடம்பென்னுஞ் சுட்டு இந்த அரிதாகிய மோக்ஷ ப்ரதமான மானுடதேக மென்பதை வற்புறுத்திற்று. பெறு பயன்-முத்திப்பேறு. விரைவுபற்றி பெற்றேன் என்றாள். இது கால வழு வமைதி. வினையென்றது நல்வினை தீவினை யென்னும் இரண்டையுங் குறித்தது இவை பிறவிக்குக் காரணமாதலில் பொன்விலங்கும் இரும்பு விலங்கும் போறலானென்க. (சகூ)

ஐயநின் கருணை தன்னா லடிச்சியேன் பொருட்டி றங்கிச்
செய்யதா மரைம ருட்டுந் திருவடித் தலங்க ளேவப்
பையவென் மனைக்கட் போந்து பரிகலச் சேட மீந்தென்
வெய்யபவல் வினைய றுத்து விடுகென மறித்துந் தாழ்ந்தாள்.

(இ - ள்) ஐய - ஐயனே, நின் கருணைதன்னால் - தேவரீரது கிருபையால், அடிச்சியேன் பொருட்டு - அடியாளாகிய என்பொருட்டு, இரங்கி - திருவுளமிரங்கி, செய்யதாமரை-செந்தாமரைமலரை, மருட்டும்-பிரமிக்கப் பண்ணுகிற, திருவடித் தலங்கள் நோவ - திருவடித்தலங்கள் வருந்தும் படி, பைய - மெல்ல, என் மனைக்கண் போந்து - என் வீட்டுக்கு எழுந்தருளி, பரிகலச் சேடம் - பரிகல சேஷத்தை, ஈந்து - அடியாளுக்குப் பிரசாதித்து, என் - எனது, வெய்ய - கொடிதாகிய, வல் - வலிய, வினை - வினைக்கட்டினை, அறுத்து விடுக என - சேதித்துவிடக் கடவீரென்று, மறித்தும் - மீட்டும், தாழ்ந்தாள் - வணங்கினாள் எ-று.

கருணைதன்னால் என்பதில் தன் சாரியை. செய்ய செம்மைப் பண்படியாகப் பிறந்த பெயரெச்சம். இது தாமரை யென்பதனைக் கொண்டு முடிந்தது. மருட்டும் என்றது வெல்லும் என்னும் பொருட்டு. பரிகல சேஷம் - உண்கலத்தில் எஞ்சியிருக்கும் மிச்சம். அறுத்துவிடுக என்பதில் விடு துணிவுப் பொருண்மை விகுதி. தாழ்தல் - வணங்கல். (சஎ)

அண்ணலு மருளி னோக்கி யன்பொரு வடிவெ டுத்து
நண்ணிய தென்ன நின்ற நாமவேற் றடங்க ணல்லாய்
கண்ணுத லடியர்க் கன்பர்க் கண்டிடி னின்னொப் பாரின்
றொண்ணுத னினக் குரைப்பதொன் றுளதென் று சொன்னான்.

(இ - ள்.) அண்ணலும் - விடசங்கமனும், அருளின் நோக்கி-கருணையோடு பார்த்து, அன்பு - அன்பென்னும் பொருளே, ஒரு வடிவு எடுத்து-ஒரு உருவந் தாங்கி, நண்ணியது என்ன நின்ற - வந்தது என்னும்படி நின்ற, நாமம் - அச்சத்தை யுண்டாக்குகிற, வேல் - வேற்படைபோலும், தடம்கண் - பெருங்கண்களையுடைய, நல்லாய்-பெண்ணே, கண்ணுதல் - நெற்றிக் கண்ணனாகிய சிவபெருமானது, அடியர்க்கு - தொண்டருக்கு, அன்பர் - தொண்டரை, கண்டிடின் - தரிசிப்பாயாயின், நின் ஒப்பார் - உன்னை நிகர்ப்பவர், இன்று - இலர், ஒள்நுதல் - அழகிய நெற்றியையுடையவளே, நினக்கு - உனக்கு, உரைப்பது - சொல்ல வேண்டுவது, ஒன்று உளது என்று - ஒரு செய்தியுண்டென்று, சொன்னான் - திருவாய் மலர்ந்தருளினான் எ-று.

அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். (விடசங்கமவேடந் தாங்கி வந்த சிவபெருமான்) வேல் உருவத்தாலும் கொலைத்தொழிலாலும் கண்ணுக்குவமை. நல்லாய் - அழகுடையவளே. நன்மை ஈண்டு அழகைக் குறித்தது. ஒண்ணுதல் அண்மைவிளி. நாமவேற் றடங்கணல்லாய், ஒண்ணுதல் என்பனவாகிய இரண்டு விளிகளும் விடசங்கமரது பொய்யாகிய காமவேட்கையைப் புலப்படுத்த வந்தன. (சஅ)

மற்றதை யைய செவ்வாய் மலர்ந்தருள் செய்க வென்னப்
பொற்றொடி மயிலே காமன் போரினுக் குடைந்த யானின்
சிற்றிடை மெலிய வீங்குந் திரண்முலை யரணஞ் சார்ந்து
சற்றுமஞ் சாதி ருப்பத் தருதியேல் வருவ லென்றான்.

(இ - ள்.) அதை - அந்தச் செய்தியை, ஐய - ஐயனே, செவ்வாய் மலர்ந்து - திருவாய் மலர்ந்து, அருள் செய்க என்ன - அருள் செய்யக் கடவீரென்று சொல்ல, பொன் தொடி - பொன்னாலியன்ற வளையலை யணிந்த, மயிலே - மயில்போல்வாளே, காமன் போரினுக்கு - மன்மதனது சண்டைக்கு, உடைந்த - தோற்ற, யான் - நான், நின் - உனது, சிறு இடை - சிறிய இடையானது, மெலிய - இளைக்க, வீங்கும் - பருத்த, திரள் - திரட்சியாகிய, முலை - தனமாகிய, அரணம் சார்ந்து - காவலையடைந்து, சற்றும் - சிறிதும், அஞ்சாது இருப்ப - அஞ்சாம லிருக்கும்படி, தருதியேல் - தருவையாயின், வருவல் என்றான் - வருவேனென்று சொன்னான் எ - று.

மயில் ஆகுபெயர். (சுக)

என்றலு முவகை மீதூர்ந் திளநிலா வெறிப்ப நக்குப்
பொன்றுத லியல்பிற்றாமிப் பொள்ளல்யாக் கையினைத்தோய்தற்
குன்றிரு வுளத்திற் கொண்ட தகம்பல கழிய யான்செய்
குன்றலி றவப்பே றன்றோ குறித்தவா றாக வென்றாள்.

(இ - ள்.) என்றலும் - என்று சொல்லுதலும், உவகை - மகிழ்ச்சி, மீதூர்ந்து - அதிகரித்து, இளநிலா எறிப்ப - இளநிலா வீச, நக்கு - சிரித்து, பொன்றுதல் - இறத்தலாகிய, இயல்பிற்று ஆம் - இயற்கையை யுடையதாகிய, இ - இந்த, பொள்ளல் - துவாரங்களை யுடைய, யாக்கையினை - உடம்பை, தோய்தற்கு - தொடுதற்கு. உன் - உனது, திருவுளத்தில் கொண்டது - திருவுளத்திற் கொண்டதாகிய இதற்குக் காரணம், பலயுகம் கழிய - அநேக யுகங்கள் செல்ல, யான் செய் - நான் செய்த, குன்றல் இல் - குறைவற்ற, தவப்பேறு அன்றோ - தவப்பயனல்லவா, குறித்தவாறு ஆக - தேவரீர் எண்ணினபடியே யாகுக, என்றாள் - என்று சொன்னாள் எ-று.

மீதூர்தல் - அதிகரித்தல். நக்கு என மேல்வருதலால் இளநிலா என்றது பல்லொளியை. பொள்ளல் - ஆகுபெயர். பொள்-பகுதி. (கூ0)

இசைந்தவண் முனைவன் றன்னை யில்வயிற் கொண்டு புக்குப்
பசும்பொனின் கரக நீரிற் பாதபங் கயம்வி ளக்கி
யொசிந்தநுண் ணிடைம டந்தை யுயர்தவி சிருத்தி நெஞ்சங்
கசிந்துநல் லமுது பொன்னங் கலத்தினு ளருத்தி னாளால்,

(இ - ள்.) அவள் இசைந்து - அவள் சம்மதித்து, முனைவன் தன்னை- விடசங்கமனை, இல்வயின் - தன் வீட்டிற்கு, கொண்டு புக்கு - அழைத்துக் கொண்டுபோய், பசும் பொன்னின் - பைம்பொன்னாற் செய்யப்பட்ட, கரகம் - கமண்டலத்தி லுள்ள, நீரின் - நீரைக்கொண்டு, பாதபங்கயம் - பாததாமரை மலர்களை, விளக்கி - சுத்திசெய்து, ஒசிந்த-துவண்ட, நுண் - நுட்பமாகிய, இடை - இடையையுடைய, மடந்தை - அந்தப் பெண்ணானவள், உயர் - உயர்ந்த, தவிசு - ஆசனத்தில், இருத்தி - எழுந்தருளப் பண்ணி, நெஞ்சம் கசிந்து - மனமுருகி, நல் அமுது - திவ்யான்னத்தை, பொன் கலத்தினுள் - சுவர்ண பாத்திரத்திற் படைத்து, அருத்தினாள் - அமுது செய்வித்தாள் எ-று.

இசைதல் - சம்மதித்தல். முனைவன் - யாவர்க்கு முன்னோன் என்னும் பொருடருவதோர் சொல். வயின் என்னும் ஏழனுருபு நான்கனுருபின் பொருள்பயந்து நின்றமையால் உருபுமயக்கம். புக்கு இறந்தகால வினை யெச்சம். புகு பகுதி. இதனொற்றிரட்டித் திறந்த காலங்காட்டியது. பசும்பொன் என்றது சாம்புநதம் என்னும் பொன்னை. இது நால்வகைப் பொன்னில் ஒன்றும் ஏனைய மூன்றிலும் சிறந்ததுமாம். நால்வகைப் பொன்னாவன:-ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம் என்பன. ஜம்புநதியின் மணலைக் கொழித் தெடுக்கப் படுதலால் இதற்கு இப்பெயர் உண்டாயிற்று. பங்கய பாதம் என்னாது பாதபங்கயம் என்றமையால் பாதத்தின் ஏற்றம் விளங்கிற்று. மடந்தை யென்றது பருவங் குறியாது பெண் பொதுவைக் குறித்தது. (நிக)

அருத்திய பின்செஞ் சாந்த மாகமுற் றணிந்து பாகுங்
கருப்புரச் சுண்ணந் தீற்று காமர்வெள் ளிலையுஞ் செந்தா
மரைத்திரு முகத்தி னல்க மாசிலான் கவுள டுத்து
விருப்புட னிருந்து காமம் வெளிப்படு குறிகள் செய்தான்.

(இ - ள்.) அருத்தியபின் - அமுது செய்வித்த பின்பு, செஞ்சாந்து - செஞ்சந்தனக் குழம்பை, ஆகம் முற்று அணிந்து - திருமேனி முழுதும் பூசி, பாகும் - பாக்கும், கருப்புரச் சுண்ணம் தீற்று - கர்ப்பூரச் சுண்ணம் பூசின, காமர் - அழகாகிய, வெள் இலையும் - வெற்றிலையும், செந்தாமரைத் திருமுகத்தின்நல்க - செந்தாமரை மலர்போலும் அழகிய முகமலர்ச்சியோடு சமர்ப்பிக்க, மாசு இலான்-களங்க மற்றவனாகிய விடசங்கமன், கவுள் அடுத்து - தன் கன்னத்தி லடக்கிக்கொண்டு, விருப்புடன் இருந்து - அன்போ டிருந்து, காமம் - காம வேட்கையானது, வெளிப்படு - வெளிப்படுதற் குரிய, குறிகள் செய்தான் - குறிகள் பண்ணினான் எ-று.

வெள் இலை யென்பதில் வெள் என்னும் அடை வெறுமையெனப் பொருடந்து நின்றது. செந்தாமரை அடையடுத்த ஆகுபெயர். நல்

கல் - கொடுத்தல். மாசு என்றது அஞ்ஞானத்தை. குறிகள் அடையாளங்கள். (ருஉ)

**பெண்ணமு தினுக்குக் காமம் பெருகிய குறிப்பி னோக்கிக்**
**கண்ணுதல் கரந்த கள்வன் கதித்திறு மாந்து விம்மி**
**மண்ணிய மணிப்பூண் டாங்கும் வனமுலை யொழுங்கப் புல்லி**
**யெண்ணருங் காம வெள்ளத் திடையவட் படிவித் தானல்.**

(இ - ள்.) பெண் அமுதினுக்கு - அந்த மாதுக்கு, காமம் பெருகிய - காமவேட்கை யதிகரிக்க, குறிப்பின் நோக்கி - (அதனை) குறிப்பாய் பார்த்து, நுதல்கண் - நெற்றிக்கண்ணை, கரந்த - மறைத்துவந்த, கள்வன் - திருடன், கதித்து - பருத்து, இறுமாந்து - மேல்நோக்கி, விம்மி-பூரித்து, மண்ணிய - சுத்தஞ்செய்த, மணிப்பூண் - ரத்நாபரணங்களை, தாங்கும் - சுமக்கிற, வனம் - அழகாகிய, முலை - கொங்கைகள், ஒழுங்க - அழுந்தும்படி, புல்லி - தழுவி யணைத்து, எண் அரு - அளவற்ற, காம வெள்ளத்திடை - காமக் கடலில், அவள் - அவளை, படிவித்தான் - மூழ்குவித்தான் எ-று.

பெண்ணமுது - பெண்ணுருக் கொண்டுவந்த அமிர்தம். நாவொன்றற்கே யின்பம் பயக்கும் அமிர்தத்தினும் இவ்வமிர்தம் சிறந்ததென்பது "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணேயுள" என்பதனு லினிது விளங்கும். பெருகிய செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். கரத்தல் - மறைத்தல். கர பகுதி. கதித்தல்-பருத்தல். பகுதி கதி. இறுமாத்தல் - மேனோக்குதல் (நிமிர்தல்). பகுதி இறுமா. மண்ணல் - சுத்தஞ் செய்தல். (சாணை பிடித்தல்) ஒழுங்கல் - அழுந்தல். பகுதி ஒழுங்கு. படிவித்தல் - பிறவினை. பகுதி படிவி. இடை - ஏழனுருபு. (ருங)

**மாதர்மென் கொம்ப ரன்னாள் மாயசங் கமன்வ லைப்பட்**
**டியாதவன் கடிந கர்க்குற் றேவலை மறந்தி ருப்பத்**
**தீதில்செங் கோன டாத்துந் திங்கள்வெண் கவிகை வேந்தன்**
**கோதிலின் னமுத முண்ணக் குளிர்புன லாடிப் புக்கான்.**

(இ - ள்.) மாதர் - அழகாகிய, மெல் - மெல்லிய, கொம்பர் - பூங்கொம்பை, அன்னாள் - நிகர்த்தவராகிய அந்தப்பெண், மாயம் - மாயாவியாகிய, சங்கமன் - விடசங்கமனது, வலைப்பட்டு - வலையிற் சிக்கி, யாதவன் - யாதவவேந்தனது, கடி - காவலோடு கூடிய, நகர் - நகரத்திற் செய்ய வேண்டிய, குற்றேவலை - குற்றேவல்களை, மறந்து இருப்ப - மறந்திருக்க, தீது இல் - தீங்கில்லாத, செங்கோல் நடாத்தும் - செங்கோலைச் செலுத்துகிற, திங்கள் வெண்கவிகை - வெள்ளிய சந்திரவட்

டக் குடையை யுடைய, வேந்தன் - அரசன், கோது இல் - குற்றமற்ற, இன் - இனிதாகிய, அமுதம் உண்ண - அமுது புசித்தற் பொருட்டு, குளிர் - குளிர்ந்த, புனல் ஆடி - நீராடி, புக்கான் - வந்தான் எ-று.

கொம்பு கொம்பர் என ஈற்றுப் போலியாயிற்று. தீது என்றது கொடுங் கோன்மையை. திங்கள் வெண்கவிகை யென்றது முத்துக் குடையை. இது முக்குடையிலொன்று. முக்குடை - பொன் மணி முத்து என்பவற்றாற் செய்யப்பட்டன. இது "பொன்னுநன் மணியுமுத்தும் புனைந்தமுக் குடைநிழற்ற" என்பதனு லினிது விளங்கும். அமுத முண்ண என்றது சோறுண்ண வென்றபடி. நீராடி-குளித்து. (௫௪)

புனிதவெண் ணீறு சாத்திப் புரந்தரன் றிக்கு நோக்கி
மனனமர்ந் திருந்து தாலம் வைப்பவ ளின்மை கேட்டுக்
கனல்படக் கண்சி வந்து கைபிணைத் தருகு நின்றோர்க்
கனையவட் டருதி ரென்று னாரழற் கடவு ளொத்தான்.

(இ - ள்.) புனிதம் - பரிசுத்தமான, வெண்ணீறு - திருவெண்ணீற்றை, சாத்தி - அணிந்து, புரந்தரன் திக்கு நோக்கி - கீழ்த்திசையை நோக்கி, மனன் அமர்ந்து இருந்து - மனவமைதியோ டிருந்து, தாலம் வைப்பவள் - உண்கலம் கழுவிவைப்பவள், இன்மை - இல்லாதிருத்தலை, கேட்டு - கேள்விப்பட்டு, கனல்பட - நெருப்பின் தன்மையையடைய, கண் சிவந்து - கண்கள் சிவக்கப்பெற்று, அருகு - தன் சமீபத்தில், கை பிணைத்து நின்றோர்க்கு - கைகட்டி நின்றவர்களுக்கு, அனையவள்-அந்தப் பெண்ணை, தருதிர் என்றான் - அழைத்துவாருங்களென்று கட்டளையிட்டான், (அவன் யாரெனின்) ஆர் - அரிய, அழல் கடவுள் ஒத்தான் - அக்கினிதேவனை நிகர்த்தவனாகிய யாதவவேந்தன் எ-று.

வெண்ணீறு - விபூதி. கிழக்கு இந்திரன் திசையாதலால் அதனை புரந்தரன் திக்கு என்றார். தாலம்-உண்கலம். கனல் ஆகுபெயர். பிணைத்தல் - கட்டல். (௫௫)

வெந்திறற் சீய மன்னான் வெருவரு மாற்றங் கேட்டோர்
சிந்தையிற் கடிது சென்று சினத்தொடு கழறிக் கூவக்
கொந்தழ லுருமு வீழ்ந்த குருமணிச் சுடிகைப் பாம்பிற்
பைந்தொடி மனந்துண் ணென்று பனித்துட லுடனெழுந்தாள்.

(இ - ள்.) வெம் - கொடிய, திறல் - ஆற்றலையுடைய, சீயம் அன்னான் - சிங்கத்தை நிகர்த்தவனாகிய யாதவ வேந்தனது, வெருவரு-அச்சத்தை யுண்டாக்குகிற, மாற்றம் - சொல்லை, கேட்டோர் - கேட்டவராகிய ஏவலாளர், சிந்தையின் - மனோவேகத்தினும், கடிது சென்று - விரைவாகப் போய், சினத்தொடு - கோவத்துடன், கழறி - இடித்துச்

சொல்லி, கூவ - அழைக்க, கொந்து அழல் திரண்ட தழலுருவாகிய, உருமுவீழ்ந்த-இடி விழப்பெற்ற, குரு காந்தியையுடைய, மணி-மாணிக்க முள்ள, சுடிகை - உச்சிக் கொண்டையையுடைய, பாம்பின் - பாம்பைப் போல, பைந்தொடி - அந்த மாதானவள், மனம் துண்ணென்று - மன மஞ்சி, உடல் பனித்து - உடம்பு நடுங்கி, உடன் எழுந்தாள் - உடனே எழுந்திருந்தாள் எ-று.

சிந்தை ஆகுபெயர். கழறல் - இடித்துச சொல்லல். பாம்பின் என் பதில் இன் என்னும் ஐந்தனுருபு ஒப்புப்பொருளது. பைந்தொடி - பண் புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். பனித்தல் - நடுங்கல். (௩௬)

**வானிறக் கலிங்க மற்ற வரைக்குமாத் திரையு டுத்து**
**நீனிறப் புயன்மென் கூந்தன் ஞெரேலெனச் செருகிச் செவ்வாய்**
**தானையிற் றுடைத்திட் டைய தணத்தலென் றிறைக்கு ரைத்து**
**மீனெனப் பிறழுங் கண்ணாள் விரைவினிற் புறத்துப் போந்து.**

(இ - ள்.) வால்நிறம் - வெண்ணிறத்தையுடைய, கலிங்கம் - ஆடையை, அற்றம் - ரஹஸ்யமாகிய, அரைக்கு மாத்திரை - அரைக்கு மாத்திரமே, உடுத்து - உடுத்துக்கொண்டு, நீல் நிறம் புயல் - கரு நிறத்தையுடைய மேகம்போன்ற, மெல் கூந்தல் - மென்மையாகிய அளகத்தை, ஞெரேல் என - விரைவாக, செருகி - முடித்துக்கொண்டு, செவ்வாய் - செவந்த வாயை, தானையின் துடைத்திட்டு - துணியினால் துடைத்துக் கொண்டு, ஐய - ஐயனே, தணத்தல் என்று - போக வேண்டாமென்று, இறைக்கு உரைத்து - இறைவனுக்குச் சொல்லி, மீன் என - கயல்மீன் போல, பிறழும் கண்ணாள் - பிறழாநின்ற கண்களையுடையவள், விரைவினில் - விரைவாக, புறத்துப்போந்து - வெளியில்வந்து எ-று.

நீலநிறம் எனற்பாலது நீனிறம் என விகாரமாயிற்று. தணத்தல் - வியங்கோள். இறையென்றது விடசங்கமனை. மீன் என வாளா கூறினு ரேனும் கண்ணுக்குவமையாகப் புணர்க்கப்பட்டமையால் கயல்மீன் என் றுரை வரையலாயிற்று. (௩௭)

**வெளிப்படு வெளிப்ப டென்று வெருவர முடுகி நின்று**
**விளிப்பவர் தாழ்த்தற் கொத்த மென்மொழி பலவுங் கூறிக்**
**களத்திருண் மறைத்து வந்த கள்வன்மாட் டெழுந்த வன்பு**
**மளப்பருஞ் செல்வன் றன்மாட் டச்சமு மனத்தை யீர்ப்ப.**

(இ - ள்.) வெளிப்படு வெளிப்படு என்று - புறப்படு புறப்படு என்று, வெருவர - அச்சமுண்டாகும்படி, முடுகி நின்று - விரைந்து நின்று, விளிப்பவர் - அழைப்பவர்கள், தாழ்த்தற்கு ஒத்த - தாமதித்தற் கேற்ற;

மெல்மொழி பலவும் கூறி - பல இன்சொற்களைச் சொல்லி, களத்து இருள் - கண்டத்தின் நீல நிறத்தை, மறைத்து வந்த - ஒளித்துவந்த, கள்வன் மாட்டு - திருடனிடத்தில், எழுந்த - அதிகரித்த, அன்பும் - அன்பும், அளப்பு அரு - அளவிடுதற் கரிதாகிய, செல்வன் மாட்டு - அரசனிடத் துண்டாகிய, அச்சமும் - பயமும், மனத்தை ஈர்ப்ப - தன்மனத்தை யிழுக்க எ-று.

வெளிப்படு வெளிப்படு என்னும் அடுக்கு முடுக்குதற் பொருட்டு. விளித்தல் - அழைத்தல். மென்மொழி யென்றது ஈண்டைக் கேற்ப இன் சொல்லெனப்பட்டது. களம் - கண்டம். களத்திருள் மறைத்து வந்த கள்வன் என்றது விடசங்கமனை. ஈர்த்தல் - இழுத்தல். (நிஅ)

செயலையந் தளிர்க வற்றுஞ் சீறடிச் சிலம்ப ரற்ற
வுயவுநுண் ணிடைந டுங்க வொளியுமி ழொருகாழ் முத்தந்
துயல்வரு குவவுக் கொங்கை துளும்பவா ணுதல்வி யர்ப்பக்
கயல்பொரு கண்டு ளிப்பக் கடிதடி பெயர்ந்துச் சென்றாள்.

(இ - ள்.) அம் - அழகாகிய, செயலைத் தளிர் - அசோகந் தளிரை, கவற்றும் - வருத்துகிற, சீறடி - சிற்றடிகளில், சிலம்பு - பாதஜாலங்கள், அரற்ற - சத்திக்கவும், உயவு - துவள்கிற, நுண் இடை - நுட்பமாகிய இடையானது, நடுங்க - நடுங்கா நிற்கவும், ஒளி உமிழ் - ஒளியைக் கக்குகிற, ஒருகாழ் முத்தம் - ஒற்றை முத்துக் கோவையானது, துயல்வரு - புரளாநின்ற, குவவு - திரட்சியாகிய, கொங்கை - தனங்கள், துளும்ப - குலுங்கவும், வாள் - ஒளியையுடைய, நுதல் - நெற்றியானது, வியர்ப்ப- வேர்க்கவும், கயல்பொரு - சேல்மீனை நிகர்த்த, கண்துளிப்ப - கண்கள் நீரைச் சிந்தவும், கடிது - விரைவாக, அடிபெயர்த்து - அடி யெடுத்து வைத்து, சென்றாள் -போயினாள் எ - று.

செயலை - அசோகமரம். கவற்றல்-வருத்தல். அரற்றல்-சத்தித்தல். காழ் - கோவை. (சரம்) முத்தம் முக்தம் என்னும் வடசொற்றிரிபு. துயல்வரல் - புரளல். துளித்தல் - சிந்துதல். (நிகூ)

யாமினி திருந்து வாழு மிருங்குழல் களையப் பட்டுப்
போமினி யென்று நெஞ்சம் புழுங்குபு கலுழ்தல் போலக்
காமரம் பயில்சு ரும்பு கதுப்பெழுந் தார்ப்பப் போகிப்
பூமக ணிலைஇய கோயிற் புக்குமன் னவன்முன் னின்றாள்.

(இ - ள்.) யாம் - நாம், இனிது இருந்து வாழும் - இனிதாகத் தங்கி வாழ்கிற, இருகுழல் - பெரிய கூந்தலானது, இனி - இப் பொழுதே, களையப்பட்டுப் போம் என்று - சிறைக்கப்பட்டுப் போகுமென்று, நெஞ்சம் புழுங்குபு - மனம் வருந்தி, கலுழ்தல் போல - அழுதல்போல,

காமரம் பயில் - காமரப்பண் பாடுகிற, சுரும்பு - வண்டுகள், கதுப்பு எழுந்து - கூந்தலை விட்டெழுந்து, ஆர்ப்ப - சத்திக்க, போகி - சென்று, பூமகள் - இலக்குமி, நிலை இய - நிலைபெற்று வாழ்கிற, கோயில் புக்கு - ராஜக்ருஹத்திற் புகுந்து, மன்னவன்முன் நின்றாள் - அரசனுக் கெதிரே நின்றாள் எ-று.

புழுங்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சம். ஆர்த்தல் - சத்தித்தல். மலரில் வாழ்பவளாதலால் இலக்குமியைப் பூமகள் என்றார். கோயில் என்றது அரண்மனையை. (௬௰)

நிற்றலு மரசர் கோமா னெருப்பெழ விழித்து நோக்கிச்
செற்றிவ டன்னை யின்னே தேமல ரொடுமு டித்த
கற்றையங் குழலை நீவிர் களைவித்து விடுகென் றேவ
மற்றரு தடந்தோண் மைந்தர் வார்குழல் களைவித் தாரால்.

(இ-ள்.) நிற்றலும் - நின்றவுடனே, அரசர் கோமான் - அரசர் பெருமான், நெருப்பு எழ - நெருப்புப் பொறி பறக்க, விழித்து நோக்கி - கண் விழித்துப் பார்த்து, இவள் தன்னை - இவளை, இன்னே - இப்பொழுதே, செற்று - வருத்தி, தேமலரொடு - மண மலர்களோடு சேர்த்து, முடித்த - முடித்திருக்கிற, அம் - அழகாகிய, கற்றை குழலை - திரட்சியாகிய கூந்தலை, நீவிர் - நீங்கள், களைவித்து விடுக என்று - மழிப்பித்து விடக் கடவீரென்று, ஏவ - ஏவுதலும், மல் தரு - மற்போர் செய்தற்குரிய, தடம் தோள் - மலைபோலுந் தோள்களையுடைய, மைந்தர் - சேவகர்கள், வார் - நீண்ட, குழல் - கூந்தலை, களைவித்தார் - மழிப்பித்தார்கள் எ-று.

இவள் தன்னை யென்பதில் தன் சாரியை. தேம் மணம். களைவித்தல் - சிறைப்பித்தல். களைவித்தார் என்பது பிறவினையாதலால் அம்பட்டனைக் கொண்டு களைவித்தார் என்றதாயிற்று. (௬௧)

கடைகுழைந் திருண்டு நெய்த்துக் கார்க்கரும் புயலை நீலச்
சுடர்கெழு மணியைத் தேன்வாய்த் தும்பியைச் சைவலத்தை
மடிதிரை யறலை வென்று மலரொடு பழகி நீண்டு
மிடைகுழ லிழந்து பீலி வீழ்த்திய மஞ்ஞை யொத்தாள்.

(இ-ள்.) கடை குழைந்து - கடை சுருண்டு, இருண்டு - இருளுருவாகி, நெய்த்து - நெய்ப்புடையதாகி, கார் கரும்புயலை - கார்காலத்துக் கரிய மேகத்தையும், சுடர் கெழு - ஒளிபொருந்திய, நீலமணியை - நீலரத்நத்தையும், தேன் வாய் தும்பியை - தேன்வாயையுடைய கருவண்டையும், சைவலத்தை - நீர்ப்பாசியையும், மடிதிரை அறலை - மறிகின்ற அலைகளையுடைய கடலிலுள்ள கருமணலையும், வென்று - செயித்து, மலரொடு பழகி - பூக்களுடனே பழகி, நீண்டு - நீட்சியடைந்து, மிடை குழல் -

நெருங்கின கூந்தலை, இழந்து - இழந்தவளாகி, பீலிவீழ்த்திய - தோகையையிழந்த, மஞ்ஞை - மயிலை, ஒத்தாள் - நிகர்த்திருந்தாள் எ - று.

குழைதல் - சுருளல். நெய்த்து என்றது எண்ணெய் பூசப்பெற்று என்றவாறு. வண்டு எப்பொழுதும் தேனுண்டலே தொழிலாய்த் திரிதலால் அதனைத் தேன் வாய்த் தும்பி யென்றார். அறல் - கருமணல். மலரொடு பழகி யென்றது எப்பொழுதும் பூமுடித்தே யிருக்குமென்னும் பொருள் போதரற் கென்க. (சுஉ)

தரவு கொச்சகக்கலிப்பா

கண்ணீ ரொழுக்கிக் கதிர்மா முலைமலைக்குத்
தெண்ணீ ரருவியாச் செவ்வாய் மலர்திறந்து
பெண்ணா ரமுதம் பெரிதழுது கோமறுகிற்
பண்ணார் மொழியார் பலரிரங்கச் சென்றனளால்.

(இ - ள்.) ஆர் - அரிய, பெண் அமுதம் - பெண்ணமிர்தம் போல்பவளாகிய அந்தமாது, கண்ணீர் ஒழுக்கி - கண்ணீரொழுகவிட்டு, கதிர் மாமுலைமலைக்கு-ஒளியையுடைய பெரியதனமலைக்கு, தெள்நீர் அருவியா-தெளிவாகிய நீரருவியாக, செவ்வாய் மலர்திறந்து - செவந்த வாயாகிய மலரைத் திறந்து, பெரிது அழுது - மிகுதியா யழுது, கோமறுகில் - ராஜவீதியில், பண்ஆர் - பண்போலும் அரிய, மொழியார் பலர் - சொல்லையுடையவராகிய மாதர் பலர், இரங்க - இரங்கும்படி, சென்றனள்-போயினள் எ-று.

முலைமலை - முலையாகிய மலை. மலைபோலும் முலை என் றிரண்டு பொருள்கோளுக் கிசைந்து நின்றதோர் சொற்றொடர். அருவியாக எனற்பாலது அருவியா என்றீறு தொகுத்த லாயிற்று. மலைமேல் புயல்நீர் பாய்தல்போல முலைமேல் கண்ணீர் பாய்தலென் றுரைத்துக்கொள்க. செவ்வாய்மலர் என்றதனை மலர் செவ்வாய் என நிறுத்தி குமுத மலர்போலும் செவ்வாய் எனப் பொருளுரைத்துக்கொள்க. குமுதம் - செவ்வல்லிமலர். இதனைச் செவ்வாம்பல் என்றும், சேதாம்பல் என்றும் கூறுப. "சேதாம்பற் போதனைய செங்கனிவாய் வெண்முறுவற், போதாம்பற் றேன்றப் புணர்முலைமேற் பூந்தரள, மாதாம்பற் றென்ன மழைக்கண்ணீ ராவியுக, நாதாம்பற் றமழலை நங்கைமா ரேங்கினார்" என்றார் மஹாகவி. இரங்கல்-அழுதலுமாம். (சுங)

கண்டார்க ளங்தோ கலந்திருந்தாத் தப்பினுக்கே
யொண்டா தவிழ்மலர்த்தா ரோதி மழிப்பித்தான்
விண்டார் மருங்கறுத்த வேல்வேந்தன் வேறுமிகை
யுண்டாயி னெவ்வா றொறுக்குமோ வென்பாரும்,

(இ - ள்.) கண்டார் - (இம்மாதின் துர்த்திசையை) பார்த்தவர்கள், அந்தோ - ஐயோ, கலந்திருத்தா-கலந் திருத்திவைக்காத, தப்பினுக்கே-குற்றத்திற்கே, ஒள்தாது அவிழ் - ஒட்பமாகிய மகரந்தத்தோடு விரிந்த, மலர் - பூ முடித்த, ஓதி-கூந்தலை, மழிப்பித்தான் - களைவித்தான், விண்டார் - பகைவரை, மருங்கு அறுத்த - வேரறுத்த, வேல்வேந்தன் - வேல் வேந்தனாகிய இவன், வேறுபிழை உண்டாயின் - வேறு பெருங்குற்றம் ஒருவரிடத் துண்டானால், எவ்வாறு ஒறுக்குமோ-எவ்விதமாய்த் தண்டிப் பானோ, என்பாரும் - என்று பேசிக்கொள்வோரும் எ-று.

கலம் - உண்கலம். தப்பு - குற்றம். விண்டார் - நீங்கினவர். தம்மோடு கலவாது நீங்கினவராதலால் பகைவரை விண்டார் என்றார். விள்ளல் - நீங்கல். விண்டார் மருங்கறுத்தற்குரிய படைவேல் என்பது தோன்ற விண்டார் மருங்கறுத்த வேல்வேந்தன் என்றார். வேல்வேந்தன் என்றதனால் வேலுக்கும் வேந்தனுக்கும் உடனிகழ்ச்சியும் தோன்றிற்று. தற்கிழமைப் பொருண்மையும் தோன்றிற்று. ஒறுத்தல் - தண்டித்தல். பகுதி ஒறு. (கூச)

பூந்துகிலாற் பொன்னாற் பொதியின் மலைப்பிறந்த
சாந்தத்தாற் பன்மணியாற் சாலப் புனைந்தாலு
மேந்திழையார் தங்க ளெழிலெலா நெய்த்திருண்ட
கூந்தலின் றேற் குறையுங்கா ணென்பாரும்.

(இ - ள்.) பூதுகிலால் - அழகாகிய ஆடையினாலும், பொன்னால் - சுவர்ணாபரணங்களாலும், பொதியின்மலைப் பிறந்த - பொதியமலையிலுண்டான, சாந்தத்தால் - சந்தனத்தாலும், பல்மணியால் - பல ரத்நாபரணங்களாலும், சால - மிகுதியாக, புனைந்தாலும் - அலங்கரித்தாலும், ஏந்திழையார் தங்கள் - மாதரது, எழில் எல்லாம் - அழகெல்லாம், நெய்த்து இருண்ட - நெய்ப்புடையதா யிருண்டிருக்கிற, கூந்தல் இன்றேல் - கூந்த லில்லையாயின், குறையும் என்பாரும் - குறைந்துபோகும் என்று பேசிக் கொள்வோரும் எ-று

பூந்துகில் - மலர்போலும் மெல்லிய ஆடையெனினுமாம். பொன் - ஆகுபெயர். மணியும் அது. புனைதல் - அலங்கரித்தல். பகுதி-புனை. ஏந்திழையார் - ஆபரணங்களைத் தாங்கி யிருப்பவர். இப்பொருள் ஆடவர்க்குக் கோடலமையாதோ வெனின் சிறு பான்மையேயன்றி மகளிர்க்குப் போலப் பெரும்பான்மை யன்றென் றொழிக. (கூரு)

பெருமஞ் சிகனுக்கிப் பெய்தொடிதன் கூந்தற்
கருமஞ் செறிதருவான் கையெழுந்த தோவென்பா
ரரசன் பணித்தவா றுறல்ல தேயேனு
மொருவுந் திறமே துலகத்தார்க் கென்பாரும்.

(இ - ள்.) பெருமஞ்சிகனுக்கு - அம்பட்டனுக்கு, இ - இந்த, பெய்தொடி - பெண்ணின், கூந்தல் கருமம் - கூந்தற் கருமத்தை, செறிதருவான் - செய்தற்கு, கையெழுந்ததோ - கையெழுந்ததோ, என்பார் - என்று சொல்லுவார், அரசன் பணித்த ஆறு - அரசன் கட்டளையிட்ட வழி, ஆறு அல்லதே யேனும் - வழியல்லவே யாயினும், உலகத்தார்க்கு - உலகத்திலுள்ளவர்களுக்கு, ஒருவும் திறம் ஏது - அவனைவிட்டு நீங்கும் விதம் யாது எ-று.

பெருமஞ்சிகனை மயிர்வினைஞன் என்றும் நாவிதன் என்றும் கூறுப. அம்பட்டன் அம்பஷ்டஃ என்னும் வடசொற்றிரிபு. பெய்தொடி வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். இதற்கு வளையலையணிந்தவள் என்பது பொருள். பெய்தல் - அணிதல். தொடி - வளையல். பணித்தல் - கட்டளையிடுதல். ஒருவல் - நீங்குதல். திறம் - வழியெனினுமாம். ஏது என்னும் வினா எதிர்மறையாய் இல்லையெனப் பொருள்பட்டு நின்றது. (கூகூ)

ஓவா வறுமை யுழந்தாலு மற்றொருவ
ரேவா துயிர்வாழ்ந் திருத்தலே நன்றாகுந்
தாவாத செல்வந் தருமேனுங் குற்றேவ
லாவா கொடிதுகொடி தென்பாரு மாயினார்.

(இ - ள்.) ஓவாவறுமை உழந்தாலும் - இடையறாத தரித்திரத்தை ஒருவன் அனுபவித்தாலும், மற்றொருவர்-வேறொருவர், ஏவாது-(தன்னை) ஏவாதிருக்கும்படி, உயிர்வாழ்ந்திருத்தலே - ஜீவித்திருத்தலே, நன்று ஆகும் - நன்மையாகும், தாவாத செல்வம்-அழியாத செல்வத்தை, தரும் எனும் - தருமாயினும், குற்றேவல் - குற்றேவல் செய்தலானது, ஆவா-அந்தோ, கொடிது கொடிது-கொடியது கொடியது, என்பாரும் ஆயினார்-என்று பேசிக்கொள்வாருமானார்கள் எ-று.

ஓவல் - நீங்கல். உழத்தல் - அனுபவித்தல். எனும் - ஆயினும் என்பதன் மரூஉ. குற்றேவல் என்றது-அடைப்பை யேந்தல், படியகம் தாங்கல், கலம் திருத்தல் முதலானவற்றை. கொடிது கொடிது என்னும் அடுக்குமிகக் கொடிது என்னும் பொருட்டு. (கூஎ)

இன்ன வகையே யிருமருங்கி னுள்ளோருஞ்
சொன்ன மொழியனைத்துந் துன்பத் தழன்மூட்ட
நன்னுதல்போய்த் தன்னில்ல நண்ணிப் பிறைதுறந்த
சென்னி யிறைவன் றிருவடியில் வீழ்ந்தழுதாள்.

(இ - ள்.) இன்னவகையே - இவ்விதமாகவே, இருமருங்கில் உள்ளோரும் - இரண்டு பக்கத்திலுள்ளவர்களும், சொன்ன-பேசிக்கொண்ட, மொழி அனைத்தும் - சொற்களெல்லாம், துன்பம் - துக்கமாகிய, தழல் -

நெருப்பை, மூட்ட - மூள்விக்க, நன்னுதல் - அப்பெண்ணானவள், போய் - சென்று, தன் இல்லம் நண்ணி - தன் வீட்டையடைந்து, பிறை துறந்த சென்னி - பிறையை நீங்கின சிரத்தையுடைய, இறைவன் - கடவுளது, திருவடியில் வீழ்ந்து - சீர்பாதத்தில் விழுந்து, அழுதாள் - அழுதனள் எ-று.

மருங்கு - பக்கம். நன்னுதல் - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். அழகாகிய நெற்றியையுடையவள் என்பது பொருள். இல் - வீடு. அது அம்முச்சாரியை பெற்று இல்லம் என்றாயிற்று. துறத்தல் - நீங்குதல். இறைவன் என்றது விடசங்கமனை. (கூஅ)

கின்னரரும் விஞ்சையருங் கேட்டு மனமுருகி
யின்னிசையாழ் கைசோர வேழிசை நூ னாரதன்யாழ்
தன்னிசைபோய் வாயடைப்பத் தாங்கரிய துன்பத்தான்
மின்னனையாள் செங்கனிவாய் விட்டுப் புலம்பினாள்.

(இ - ள்.) கின்னரரும்—, விஞ்சையரும்—, கேட்டு - இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டு, மனம் உருகி - மனங்கசிந்து, இன் இசை - இனிய வோசையையுடைய, யாழ் - தம் வீணைகள், கைசோர - கையில் நின்று நழுவ, ஏழ் இசை நூல் - ஸப்த ஸ்வரங்களையுடைய இசை நூல்வல்ல, நாரதன் யாழ் தன் இசைபோய் - நாரதமுனிவனது யாழோசைபோய், வாய் அடைப்ப - வாயைமூட, தாங்கு அரிய - சகித்தற் கரிதாகிய, துன்பத்தால் - துக்கத்தால், மின் அனையாள் - மின்கொடி போல்பவளாகிய அந்த மாது, செங்கனி-செங்கனிபோலும், வாய் வாயை, விட்டு - திறந்து, புலம்பினாள் - புலம்பலாயினள் எ-று.

கின்னரர் விஞ்சையர் என்பவர் தேவர்களுள்ளே ஒரு சாரார். விஞ்சையரை வித்யாதரர் என்பர் வடநூலார். தமிழர் விச்சாதரர் என்றுங் கூறுப. (கூகூ)

கொந்தார் மலருழ்த்த கொம்பிற் புரள்வாளை
நந்தா மறைப்பொருளா நம்பெருமா னன்னுதால்
சிந்தா குலமொழிதி யென்றெடுத்துச் சென்னிமே
லந்தா மரைபோலு மங்கைத் தலம்வைத்தான்.

(இ - ள்.) கொந்து ஆர் - கொத்துக்களாகப் பொருந்திய, மலர்-புஷ்பங்களை, உழ்த்த - உதிர்த்துவிட்ட, கொம்பின் - பூங் கொம்புபோல, புரள்வாளை - புரளாநின்ற அந்தப் பெண்ணை, நந்தா - ஒருகாலும் அழியாத, மறைப்பொருள் ஆம் - வேதார்த்தமாகிய, நம்பெருமான் - நம்மிறைவன், நல் நுதால் - அழகிய நெற்றியை யுடையவளே, சிந்தா - உன் மனத்திலுள்ள, ஆகுலம் - துன்பத்தை, ஒழிதி என்று - நீக்கக்கடவை

என்று திருவாய் மலர்ந்தருளி, எடுத்து - அவளைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு, சென்னிமேல் - அவளது சிரசின்மீது, அம் - அழகாகிய, தாமரைபோலும் - தாமரை மலரை நிகர்த்த, அங்கைத்தலம் வைத்தான் - அகங்கையைச் சூட்டியருளினான் எ-று.

உளழ்த்தல் - உதிர்த்தல். கொம்பின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது ஒப்புப்பொருட்டு. நந்தல் - கெடுதல். சிந்தாகுலம் வடசொற் சந்தி. ' சிந்தாகுலமுற் றென்னோ டென்னைவாட்டந் திருத்துவதே '' என்றார் மணிவாசகரும். தாமரை ஆகுபெயர். (எ0)

கலிவிருத்தம்

வைத்தாங்கிறை கைக்கங்கண வடிவாய்மறை யரவ
முத்தாந்திரு நகையாண்முக முழுமாமதி யென்றுப்
பைத்தாங்கிய வாய்விண்டழல் படுநஞ்சொழுக் கியதே
யொத்தீர்ங்குழல் வளர்தந்ததிவ் வுலகத்தவர் மருள.

(இ - ள்.) வைத்த ஆங்கு - வைத்த அப்பொழுது, இறை - இறைவனது, கை - திருக்கரத்திற் கட்டிய, கங்கணவடிவாய் - கங்கண ரூபமாய், மறை - (அவனது) சடையில் மறைந்திருந்த, அரவம் - பாம்பானது, முத்து ஆம் - முத்துப்போலும், திருநகையாள் - அழகிய பல்வரிசையையுடைய அந்தப் பெண்ணினது, முகம் - முகத்தை, மா - பெரிய, முழுமதி யென்று - பூர்ண சந்திரனென் றெண்ணி, பைதாங்கிய - படத்தோடு கூடிய, வாய்விண்டு - வாயைத்திறந்து, அழல்படும் - நெருப்பின் தன்மையை யுடைய, நஞ்சு - விஷத்தை, ஒழுக்கியதே ஒத்து - ஒழுகவிட்டாற் போலவே, ஈர்குழல் - நெய்ப்பினையுடைய கூந்தலானது, இ - இந்த, உலகத்தவர் - உலகத்தோர், மருள - பிரமிக்கும்படி, வளர் தந்தது - வளர்ந்தது எ-று.

வைத்த ஆங்கு எனற்பாலது வைத்தாங்கு என நிலைமொழியீறு தொகுத்தலாயிற்று. என்று செய்யா வென்னும் வாய்பாட்டிறந்த காலவினை யெச்சம். பை - படம். விண்டு என்பதற்குப் பகுதி விள். விள்ளல் - திறத்தல். அழல் - ஆகுபெயர். (எக)

கனல்வெஞ்சுர னிடைவந்தெழு கார்காண்மயி லெனவுந்
தினமும்பசி சுடநொந்தொரு தினமுண்பவ ரெனவும்
புனையுந்தொடர் பினினுண்ணிய பொருள்கண்டவ ரெனவும்
வளைமென்குழ லுவகைக்கடல் வாய்மூழ்கின ளன்றே.

(இ - ள்.) கனல் - சுடுகின்ற, வெம்சுரன் இடை - கொடிய பாலைநிலத்தில், வந்து எழு - வந்து சூழ்ந்த, கார் - மேகத்தை, காண் - கண்ட, மயில் எனவும் - மயில்போலவும், தினமும் - நாள்தோறும், பசிசுட - பசி

யானது வருத்த, நொந்து - வருந்தியிருந்து, ஒருதினம் - ஒருநாள், உண்பவர் எனவும் - புசிப்பவர் போலவும், புனையும் - தொடுக்கப் படுகிற, தொடர்பினில் - பாடலினுள்ள, நண்ணிய பொருள் - நுண்பொருளை, கண்டவர் எனவும் - அறிந்தவர் போலவும், வனை - அலங்கரிக்கப்பெற்ற, மெல்குழல் - மெல்லிய கூந்தலை யுடையவளாகிய அந்த மாது, உவகை கடல்வாய் - சந்தோஷசாகரத்தில், மூழ்கினள் - அழுந்திவிட்டாள் எ-று.

கனல் சுரன் வெம்சுரன் என விளையும். கார் - ஆகுபெயர். பசி - மங்கலவழக்கு. தொடர்பு - பாட்டு. பொருள் - அர்த்தம். வனைதல் - அலங்கரித்தல். மென்குழல் - பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (எஉ)

ஐயன்றிரு வடிதாழ்ந்தவ னருள்பெற்றுடன் மீளா
வெய்வெங்கணை விழிமாமயி லிறைமுன்புகு மளவின்
மையுண்கணி குழனுவிதன் வாங்கிற்றில னென்று
நெய்யுண்டெழு தீயிற்சின நீடத்துடி யிடையாள்.

(இ-ள்.) (அதன் பிறகு) ஐயன் - இறைவனது, திருவடி தாழ்ந்து - திருவடியை வணங்கி, அவன் அருள்பெற்று - அவனது திருவருளைப் பெற்றவளாய், உடன் - உடனே, மீளா - மீண்டு, வெய்வெம்கணை-மிகக் கொடிய அம்புபோலும், விழி - கண்களையுடைய, மாமயில்-அழகிய மயில் போல்வாளாகிய அப்பெண், இறைமுன் - அரசனுக்கெதிரே, புகும் அளவில்-பிரவேசித்தபோது, மை உண் கண்ணி - மையெழுதப்பெற்ற கண்களையுடையாளது, குழல் - கூந்தலை, நாவிதன் - அம்பட்டன், வாங்கிற்றிலன் என்று - களைந்திலனென் றெண்ணி, நெய் உண்டு எழு - நெய் குடித்தெழுந்த, தீயின்-நெருப்புப்போல, சினம் நீட-கோவம் அதிகரிக்க, (கண்ட) துடியிடையாள் - துடியிடையை யுடையவளாகிய அந்தப்பெண்ணனவள் எ-று.

ஐயன் என்றது விடசங்கமனை. தாழ்தல் - வணங்கல். பெற்று - முற்றெச்சம். என்று செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். தீயின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது ஒப்புப்பொருட்டு. நீடல் என்றதற்கு ஈண்டைக் கேற்ப அதிகரித்தலெனப் பொருளுரைக்கலாயிற்று. துடி - உடுக்கை. (எங)

ஒன்னார்மணி மகுடத்திர ளுழுபொற்கழ லரவோ
யுன்னுனைக டப்பார்களு முலகத்தினி லுளரோ
முன்னாள்களில் யாறற்றிய முதிர்மாதவ வசத்தா
லின்னாளென தில்லத்துறை யிறில்லவ னடியான்.

(இ - ள்.) ஒன்னார் - பகைவரது, மணி - ரத்நகசிதமான, மகுடத்திரள் - கிரீடத்தொகுதிகள், உழு - தாக்குகிற, பொன்கழல் - பொற்கழ

லைத் தரித்த, உரவோய் - வல்லாளனே, உன் ஆணை - உன் கட்டளையை, கடப்பார்களும் - மீறி நடப்பவர்களும், உலகத்தினில் உளரோ - உலகத்தில் ஒருவர் இருப்பரோ, முன் நாள்களில் - முன்னைய நாட்களில், யான் ஆற்றிய - நான் செய்த, முதிர் - முதிர்ந்த, மாதவவசத்தால் - பெருந் தவ வலியால், இந்நாள் - இத்தினத்தில், எனது இல்லத்து உறை - என் வீட்டில் தங்கியிருக்கிற, அடியான் - அடியவன் எ-று.

உழுதல் - படுதல். கழல்-ஆடவர் காலிலணியும் வீர விருது. உரம்-பலம். கடத்தல் - மீறுதல். இதனை அதிக்ரமித்தல் என்பர் வடநூலார். உளரோ வென்னும் ஓகாரம் எதிர்மறை. ஆற்றல் - செய்தல். உறைதல்-வசித்தல். இல்-வீடு. அது ஈற்றும்மைபெற்று இல்லம் என்றாயிற்று. (எச)

அருளான்மல ரங்கைத்தல மளியன்றலை வைப்ப
விருளார்குழ லிதுபெற்றன னென்னக்கழை சுளியும்
வரைமால்களி றுடையாதவ மன்னன்றிரு வுள்ள
மெரிபோற்கிளர் சினநீத்துட னிறும்பூதடைந் ததுவே.

(இ - ள்.) அருளால் - கருணையால், மலர் - தாமரை மலர்போலும், அங்கைத்தலம் - அகங்கைத் தலத்தை, அளியன் - எளியேனது, தலை வைப்ப-சிரசின்மீது வைக்க, இது - இந்த, இருள் ஆர் - கருமை நிறைந்த, குழல் - கூந்தலை, பெற்றனன் என்ன - பெற்றேனென்று சொல்லுதலும், கழைசுளியும் - குத்துக்கோலைக் கோவிக்கிற, வரை - மலைபோன்ற, மால் - மதமயக்கத்தை யுடைய, களிறு உடை - யானைப் படையை யுடைய, யாதவமன்னன் - யாதவ வேந்தனது, திருவுள்ளம் - திருவுள்ளமானது, எரிபோல் - நெருப்புப்போல, கிளர் - அதிகரித்த, சினம் நீத்து-கோவத்தை விட்டு, உடன் - உடனே, இறும்பூது அடைந்தது - ஆச்சரியத்தை யடைந்தது எ - று.

அங்கைத் தலத்துக் குவமையாகப் புணர்க்கப் படுதலால் மலர் என்றது தாமரை மலரைக் குறித்தது. குத்துக்கோல் என்றது அங்குசத்தை, இதனைத் தோட்டியென்றுங் கூறுப. எரி - ஆகுபெயர். நீத்தல் - விடுதல்.

துனைவிற்பல ரொடுபோய்மலர் துன்றுங்குழன் மடமான்
மனைபுக்கடி யவர்கற்பக மாறுவருண் மேகம்
வினையிற்றவர் நெஞ்சத்தொளிர் வியாமணித் தீபந்
தனதற்புத வுருநோக்கலுந் தாழாதடி தாழ்ந்தான்.

(இ - ள்.) துனை - நெருங்கிய, வில் - வில்லைத் தரித்த, பலரொடு போய் - பல போர்வீரரோடுஞ் சென்று, மலர் துன்றும் - மலர்கள் நெருங்கின, குழல் - கூந்தலையுடைய, மடமான் - இளமான் போல்பவளது, மனை புக்கு - வீட்டிற் பிரவேசித்து, அடியவர் கற்பகம் - தொண்டர் கற்பக

மும், மாறு அருள்மேகம் - ஒழியாத அருள் மழையைச் சொரிகிற மேகமும், வினை இற்றவர் - வினையினின்று நீங்கினவரது, நெஞ்சத்து ஒளிர் - மனத்திற் பிரகாசிக்கிற, வீயா - அவியாத, மணித்தீபம் - ரத்நதீபமும் ஆகிய, தனது - அவ்விறைவரது, அற்புதம் - வியப்படைதற் குரிய, உரு - வடிவை, நோக்கலும் - காண்டலும், தாழாது - தாமதிக்காமல், அடி-அவ் விறைவனது திருவடியை, தாழ்ந்தான் - வணங்கினான் எ-று.

பலர் என்றது வில் என்ற அடையால் போர்வீரர் எனப் பொருடந்து நின்றது. புகு என்னும் பகுதியொற் றிரட்டித்து இறந்தகாலங் காட்டிற்று. நெஞ்சம் என்பதன் ஈற்றம் சாரியை. வீதல் - கெடுதல். தாழ்த்தல் - தாமதித்தல். (எசு)

மேற்படி - வேறு

எழுந்து கைதொழு தீர்மலர்க் குஞ்சிமேற்
றழங்கு பொற்கழற் றாமரை சூடியா
னுழந்த மாதவ முன்னையிங் குய்த்ததென்
றழுந்து பேரன்பி னாற்றப் பழிச்சினான்.

(இ - ள்.) எழுந்து - எழுந்து நின்று, கைதொழுது - கைகூப்பி வணங்கி, ஈர்மலர் - குளிர்ந்த மலர்களை அணிந்த, குஞ்சிமேல் - சிரசின் மீது, தழங்கு - ஒலிக்கின்ற, பொன்கழல் - பொற்கழலை யணிந்த, தாமரை - தாமரை மலர்போன்ற திருவடியை, சூடி - தரித்து, யான் - நான், உழந்த - வருந்திச் செய்த, மாதவம் - பெரும் தவப்பயன், உன்னை - தேவரீரை, இங்கு - இவ்விடத்திற்கு, உய்த்தது என்று-செலுத்தினது என்று,' அழுந்து - ஆழ்ந்த, பேர் அன்பின் - மிக்க அன்பினால், ஆற்ற - விசேஷமாக, பழிச்சினான் - தோத்திரம் பண்ணினான் எ-று.

தழங்கல் - ஒலித்தல். தழங்கு பொற்கழல் என்ற விசேடணத்தால் தாமரை திருவடியைக் குறித்தது. உழத்தல்-வருந்தல். உய்த்தல்-செலுத்தல். பழிச்சல் - துதித்தல். (எஎ)

விருப்பி னேத்தி விளங்கருட் குன்றநீ
யிருப்ப நோற்றநா டெத்திசைத் தெந்நில
வரைப்பு நீபுகு மாதவ மாற்றிய
துரைத்தி யென்ன வுரைதரன் மேயினான்.

(இ - ள்.) விருப்பின் - அன்பினால், எத்தி - துதித்து, விளங்கு - பிரகாசிக்கிற, அருள் குன்றம் - அருண்மலையாகிய, நீ - தேவரீர், இருப்ப - இதுவரையு மிருக்கும்படி, நோற்றநாடு - நோற்ற தேசம், எத்திசைத்து - எந்தத் திக்கிலுள்ளது, நீ - தேவரீர், புக - இனிப் பிரவேசிக்க, மாதவம் ஆற்றியது - பெருந்தவம் செய்தது, எ - எந்த, நிலவரைப்பு - நிலத்தி

னெல்லே, உரைத்தி என்ன - சொல்லக் கடவையென்று சொல்ல, உரைதரல் மேயினுன் - (இறைவன்) சொல்லத் தொடங்கினுன் எ-று.

விருப்பின் என்பதில் இன் என்னும் ஐந்தனுருபு மூன்ருவதன் கருவிப் பொருளது. நோற்றல் - தவஞ்செய்தல். வரைப்பு - எல்லே. உரைதரல் - சொல்லுதல். இதற்குப் பகுதி உரைதா. (எஅ)

ஞால மெங்கு நடந்து தளிர் மதிக்
கோல வார்சடைக் கொன்றையங் கண்ணியோ
னேல வார்குழ லேந்திழை தன்னெடுஞ்
சால வாழுந் தலந்தொறும் வைகுவேம்.

(இ - ள்) ஞாலம் எங்கும் நடந்து - உலகமுழுதும் நடந்து, தளிர் - குளிர்ச்சியையுடைய, மதி - பிறையணிந்த, கோலம் - அழகாகிய, வார் சடை - நீண்ட சடையின்கண், அம் - அழகிய, கொன்றைகண்ணியோன் - கொன்றைமலர் மாலையைத் தரித்த சிவபெருமான், ஏலம் - மயிர்ச்சாந் தணிந்த, வார்குழல்-நீண்ட கூந்தலேயுடைய, ஏந்திழை தன்னெடும்-உமாதேவியுடன் கூடி, சால - மிகுதியாக, வாழும் - வாழ்கின்ற, தலந்தொறும் - திருத்தலந்தோறும், வைகுவேம் - வசிப்போம் எ-று.

கொன்றை ஆகுபெயர். ஏந்திழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். வைகல் - வசித்தல். ()

கறங்கு தெண்டிரைக் கணகன ஞாலத்துச்
சிறந்த தண்ணறன் றென்கயி லாயமென்
றறிந்த நல்லவர் வாய்க்கேட் டடைந்தன
மறங்கொள் வேலவம் மாதலங் காணவே.

(இ - ள்.) மறம்கொள் - கொலேத்தொழிலே மேற்கொண்ட, வேல - வேற்படையைத் தாங்கிய அரசனே, கறங்கு - சத்திக்கிற, தெள் திரை - தெளிவாகிய அலேகளேயுடைய கடல்சூழ்ந்த, கண் அகல் - இடம்விரிந்த, ஞாலத்து - உலகத்தில், அண்ணல் - சிவபெருமான் வாழ்கின்ற, தென் கயிலாயம் - தென்கயிலேயானது, சிறந்தது என்று - உயர்ந்ததென்று, அறிந்த-அதன் பெருமையை யறிந்த, நல்லவர்வாய் - நல்லோரிடத்தில், கேட்டு-கேள்விப்பட்டு, அ-அந்த, மாதலம் காண-பெரிய திருத்தலத்தை தரிசிக்கும் பொருட்டு, அடைந்தனம் - இங்கு வந்தோம் எ-று.

மறம் - பாவம், அது வேல என்ற குறிப்பால் கொலேத்தொழிலேக் குறித்தது. கறங்கல் - சத்தித்தல். திரை ஆகுபெயர். அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். அது ஈண்டைக் கேற்பச் சிவபெருமானேக் குறித்தது. நல்லவர்வாய் என்பதில் வாய் ஏழனுருபு. நல்லவர் வாயினுல் என்றுரைத்தலுமாம். (அ0)

ஆயி டைக்கடு மாமிடற் றாரழற்
சேய வார்சடைத் தேவர் பிராற்கமர்
கோயி லின்மைகண் டுள்ளங் கொதித்துவெந்
தீயி டைப்படு சிற்றுயி ராயினேம்.

(இ - ள்.) ஆயிடை - அப்படி வந்தவிடத்தில், மா - அழகிய, கடு மிடற்று - விஷகண்டத்தையும், ஆர் அழல் - நிறைந்த நெருப்புப்போல, சேய - செவந்த, வார்சடை - நீண்ட சடையையும் உடைய, தேவர் பிராற்கு - தேவர் பெருமானாகிய சிவபெருமானுக்கு, அமர்-வீற்றிருத்தற் குரிய, கோயில் - ஒரு ஆலயமானது, இன்மைகண்டு - இல்லாதிருப்பதை நோக்கி, உள்ளம் கொதித்து - மனங்கொதித்து, வெம் - கொடிதாகிய, தீயிடைப்படு - நெருப்பில் வீழ்ந்த, சிற்றுயிர் ஆயினேம்-சிறு பிராணிக்கு நிகராயினோம் எ-று.

மா - கருமையுமாம். மிடறு - கண்டம். ஆர் அழல் - சகித்தற் கரிதாகிய நெருப்பு எனினுமாம். வெந்தீயிடைப்படு சிற்றுயிராயினேம் என்றது நெருப்பில் விழுந்து துடிக்கிற சிறு ஜந்துவைப்போலத் துடித்தோம் என்றபடி. (அக)

உலக மெல்லா முடையாய்க் கிருப்பவோ
ரிலகு கோயி லெடுப்பவ ரில்லையோ
தலைவ வென்றவன் றாண்முத லேந்தியிந்
நிலைமை நின்பா னிகழ்த்திய வந்தனம்.

(இ - ள்.) உலகம் எல்லாம் உடையாய்க்கு - உலகமெல்லாவற்றை யும் உடையவராகிய உமக்கு, இருப்ப - வீற்றிருத்தற்கு, ஓர்-ஒரு, இலகு-விளங்குகிற, கோயில்-ஆலயத்தை, எடுப்பவர் இல்லையோ - அமைப்பவர் இலரோ, தலைவ - இறைவ, என்று - என்று, அவன்தாள் - அவனது திருவடியை, முதல் - முற்பட, ஏந்தி - சிரசாவகித்து, இந்நிலைமை-இந்த நிலைமையை, நின்பால் - உன்னிடத்தில், நிகழ்த்திய - சொல்லும் பொருட்டு, வந்தனம் - வந்தோம் எ-று.

நின்பால் என்பதில் பால் ஏழனுருபு. நிகழ்த்தல் - சொல்லல். நிகழ்த்திய - செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இது வந்தனம் என்னும் வினைகொண்டு முடிந்தது. வந்தனம் - தனித்தன்மைப் பன்மை வினைமுற்று. (அஉ)

நீய லாம ணிமிர்சடை யெம்பிரான்
கோயில் செய்பவ ரில்லெனக் கூறினன்
றூய பாம்பணி யுஞ்சிறு திங்களுந்
தூய நீர்ச்சடை புந்துறத் தெய்தினேன்.

(இ - ள்.) நீ அல்லாமல் - நீயன்றி, நிமிர்சடை - நீண்ட சடையை யுடைய, எம்பிரான் - எம்பெருமானது, கோயில் - ஆலயத்தை, செய்பவர் - அமைப்பவர், இல் என கூறினன் - இல்லையென்று சொன்னன், தீய - கொடிய, பாம்பு அணியும் - சர்ப்பாபரணத்தையும், சிறு திங்களும் - பாலசந்த்ரனையும், தூய-பரிசுத்தமான, நீர் - கங்கையைத் தரித்த, சடையும் - சடாபாரத்தையும், துறந்து-விட்டு, எய்தினேன்-வந்தவனாகிய சிவ பெருமான் எ-று.

நீயலாம னிமிர்சடை யெம்பிரான் கோயில் செய்பவ ரில்லெனக் கூறினன் என்றது நீயே இத்திருப்பணியை யேற்று முடிக்கக்கடவை யென்றவாறாயிற்று. தீய பாம்பணியுஞ் சிறு திங்களும் தூயநீர்ச் சடையும் துறந்தெய்தினேன் என்றது விடசங்கமனே. (அ௩)

சொன்ன வாசகங் கேட்டுச் சுடர்செய்வேன்
மன்னர் கோமகன் வார்குழல் பெற்றவப்
பொன்னு லாவும் புணர்முலைப் பூங்கொடி
யென்ன மாமகிழ் வெய்தினன் கூறுவான்.

(இ - ள்.) சொன்ன - இவ்வாறு விடசங்கமன் சொன்ன, வாசகம் - சொல்லை, சுடர்செய் - ஒளியை வீசுகிற, வேல் - வேற்படையையுடைய, மன்னர் கோமகன் - அரசர் பெருமானாகிய யாதவவேந்தன், கேட்டு - கேட்டு, வார்குழல் பெற்ற - (இழந்த) நீண்ட கூந்தலை மீட்டும் பெற்றுக் கொண்ட, அ - அந்த, பொன் உலாவும் - தேமல் படர்ந்த, புணர் - (ஒன்றோடொன்று) நெருங்கிய, முலை - தனங்களையுடைய, பூங்கொடி என்ன - பூங்கொடி போல்பவளாகிய அப்பெண்போலவே, மாமகிழ்வு எய்தினன் - பெரு மகிழ்ச்சி யடைந்தவனாகி, கூறுவான் - சொல்வானாயினன் எ-று.

பெற்ற என்றதனால் இழந்த கூந்தலை மீட்டும் பெற்றுக் கொண்ட என்றுரைக்கலாயிற்று. பொன்-தேமல். பொற்பொடி போறலால் தேமலுக்குப் பொன் என்னும் பெயர் வழங்கலாயிற்று; இது உவமை யாகுபெயர். புணர்தல் - நெருங்குதல். பூங்கொடி இரண்டாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். எய்தினன்-முற்றெச்சம் இது; கூறுவான் என்னும் வினைகொண்டு முடிந்தது.

தீய னேனைத் திருவுளத் தெண்ணிநீ
வாய்ம லர்ந்ததென் மாதவ மாதலாற்
றூய நின்னருட் சொல்வழி நிற்பதே
நாயி னேற்கு நலமெனக் கூறியே.

(இ - ள்.) தீயனேனை - தீயவனாகிய என்னை, திருவுளத்து எண்ணி - திருவுளத்தில் நினைத்து, நீ - தேவரீர், வாய் மலர்ந்தது - திருவாய்மலர்ந்தது, என்மாதவம் ஆதலால் - என் பெருந்தவப்பயனாதலால், தூய - பரி

சுத்தனே, நின் - உனது, அருள் - கருணையோடு கூடின, சொல்வழி-சொல்லின் வழியே, நிற்பதே - நிற்றலே, நாயினேற்கு - நாயினேனுக்கு, நலம் என - நன்மையாமென்று, கூறி - சொல்லி எ-று.

வாய்மலர்ந்தது-கட்டளையிட்டது எனினுமாம். மாதவம் ஆகுபெயர்.

கொன்றை யஞ்சடைக் கூத்தப் பிரானமர்
தென்றி சைக்கயி லாயச் சிறப்பெலா
மின்றெ னக்கு மனங்கொள வெம்பிரான்
மன்ற நன்று வகுத்துரை யென்றனன்.

(இ - ள்.) கொன்றை - கொன்றைமலர் மாலையை யணிந்த, அம் - அழகிய, சடை - சடாபாரத்தையுடைய, கூத்தப்பிரான் - சிவபெருமான், அமர்-வீற்றிருக்கிற, தென்திசை கயிலாயம் - தென் கயிலையின், சிறப்பு எல்லாம் - மேன்மை யாவும், இன்று - இந்நாள், எனக்கு - அடியேனுக்கு, மனம்கொள - மனதிற் பதியும்படி, எம்பிரான் - எம்பிரானே, மன்ற-மிகுதியாக, நன்று - விசதமாம்படி, வகுத்து உரை என்றனன் - விவரித்துச் சொல்லுக என்றனன் எ-று.

கொன்றை ஆகுபெயர். கூத்தாடலில் மிகு விருப்புடையவராதலால் சிவபெருமானைக் கூத்தப்பிரான் என்றார். தென்திசைக் கயிலாயம்-சீகாளத்தி. எம்பிரான் அண்மைவிளி. (அசு)

என்ற சொல்லினைக் கேட்டலு மீறிலான்
பொன்ற லில்கயி லாயப் புராணத்தை
வென்றி வேலவ வேட்டனை யாயிடி
னன்று சொல்லுது மெனச் சொல்லுவான்.

(இ - ள்.) என்ற சொல்லினை கேட்டலும் - என்ற வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில், ஈறு இல்லான் - முடிவற்றவன், பொன்றல் இல்-அழியாத, கைலாயப் புராணத்தை - கயிலாயப் புராணத்தினை, வென்றி வேலவ - வென்றியைத்தருகிற வேற்படையை யுடையவனே, வேட்டனை ஆயிடின் - நீ கேட்க விரும்பினையாயின், நாம் - யாம், நன்றுசொல்லுதும் என-நன்றாகச் சொல்லுவோம் என்று, சொல்லுவான்-கூறுவானாயினன்.

என்றும் அழிவில்லாதவனாதலால் சிவபெருமானை ஈறிலான் என்றார். அரசர்க்கு எல்லாப் படைகளினுஞ் சிறந்ததும் வெற்றியைத் தருவதும் வேற்படை யாதலால் வென்றிவேலவ என்றார். (அஎ)

மாசில் காட்சி வசிட்ட னகத்தியன்
வாச மாமலர் வந்தோன் சிலந்திபாம்
பாசில் யானை புனிந்த னருட்சிவ
கோசன் கீரன் குவலைக் கருங்கணார்.

(இ - ள்.) மாசு இல் - களங்கமற்ற, காட்சி-அறிவினையுடைய, வசிட்டன் - வசிட்டனும், அகத்தியன் - அகத்தியனும், வாசம் - மணமுள்ள, மாமலர் வந்தோன் - பெருமை பொருந்திய தாமரைமலரில் அவதரித்தவனாகிய பிரமனும், சிலந்தி - சிலந்தியும், பாம்பு - பாம்பும், ஆசு இல் - குற்றமற்ற, யானை - யானையும், புளிந்தன் - வேடனும், அருள் - திருவருள் பெற்ற, சிவகோசன் - சிவகோசரியாரும், கீரன் - நக்கீரனும், குவளை - கருங்குவளை மலர்போன்ற, கருங்கணார் - இரண்டு பெண்களும் எ - று.

மாசு இல் காட்சி - மெய்ஞ்ஞானம். வசிட்டனை முன்வைத்தது எல்லா வகையாலும் சிறந்தவன் என்ப துணர்த்தற் கென்க. மலர்வந்தோன் - திருமாலின் உந்திவந்தோன். மாமலர் என்றது - மலர்களுட் சிறந்தமை தோன்றற் கென்க. திருமகள் வீற்றிருக்குந் தாமரைமலர் எனினுமாம். புளிந்தன் என்றது கண்ணப்ப நாயனாரை. கருங்கணார் என மேல்வருதற் கேற்ப குவளை யென்பதற்குக் கருங்குவளை மலர் என்றுரைக்கலாயிற்று. (அஅ)

ஆதி யாக வளவில ருண்டவண்
டீது தீர்ந்தவ ரவ்வத் திருக்கதை
யோத வேண்டி னுகம்பல செல்லுமக்
காதை யுட்சில காவல கூறுவேம்.

(இ - ள்.) ஆதி ஆக - முதலாக, அளவு இலர் உண்டு - அளவற்றவர் உளர், அவண் - அவ்விடத் தடைந்து, தீது தீர்ந்தவர் - தமது தீமையொழியப் பெற்றவர், அவ்வத் திருக்கதை - அந்தந்தத் திருக்கதைகளை, ஓதவேண்டின் - உரைக்க விரும்பினால், பல உகம் செல்லும் - அநேக யுகங்கள் கழியும் ஆதலால், அ - அந்த, காதையுள்-கதைகளுள்ளே, சில-சில கதைகளை, காவல - அரசனே, கூறுவேம் - சொல்லுவோம் எ-று.

தீது தீர்ந்தவர் என்றது வினைநீங்கி முத்தியடைந்தவரை. (அகூ)

என்று சங்கம வேடத்தி னெம்பிரா
னன்று கூறின னன்னவன் சொற்படி
யின்றி யானு மிசைக்கலுற் றேன்வினை
கொன்ற நல்லவர் கொள்பவென் றெண்ணியே.

(இ - ள்.) என்று - என்றிவ்வாறு, சங்கமவேடத்தின்-சங்கமவேடம் பூண்டுவந்த, எம்பிரான் - சிவபெருமான், அன்று கூறினன் - அந்நாளிற்

சொல்லினன், (அக் கதைகளை) வினைகொன்ற நல்லவர் - வினையை வென்ற மேலோர், கொள்ப என்று - அங்கீகரிப்பரென்று, எண்ணியே - நினைத்தே, அன்னவன் சொற்படி - அந்தச் சங்கமனது சொற்படியே, இன்று - இந்நாள், யானும் - அடியேனும், இசைக்கலுற்றேன் - சொல்லத் தொடங்கினேன் எ - று.

கொன்றவர் என்றதில் கோறற்றொழில் வேறற்றொழிலின் மேற்று. யானும் என்ற உம்மை யிறந்தது தழீஇயது. இசைத்தல் - சொல்லுதல்.

விடசங்கமச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௧௬.

---

தொண்டைநாட்டில், நாராயணபுரத்திலே, யாதவ மஹாராஜா என்பவர் ஒருவரிருந்தார். அவர் அரசகுலத்திலே யவதரித்து, அதற்குரிய சகல கலைகளினும் அதிவல்லராகி, குருலிங்க சங்கமங்களினிடத்துப் பேரன்பும் பிறவுயிர்களினிடத்துப் பெருங்கருணையும் உடையராய், அந்நாட்டிலே அநீதி கலவாவண்ணம் அரசுசெலுத்தி வந்தனர். அக்காலத்திலே கயாரண்யமெனவும், வில்வாரண்யமெனவும், தென்கைலாயமெனவும், சீகாளத்தியெனவும் பெயர்பெற்று விளங்கும் திவ்விய தலத்திலே, திருவருளையே திருமேனியாகக் கொண்டு வீற்றிருக்கும் சிவபெருமான் அவ் வரசர்பெருமானது சிவபுண்ணிய முதிர்ச்சியை நோக்கி ஆட்கொண்டருளத் திருவுளங்கொண்டு, விபூதி ருத்திராக்ஷம் சிவலிங்கதாரண முதலிய சின்னங்கள் விளங்க, விடசங்கமத் திருவுருவந் தாங்கி, அந் நாராயண புரத்திலுள்ள மங்கையர் பலரும் காதலித்துச் சூழும்படி வீதியி லெழுந்தருளினர். அத்தருணத்திலே, அவ்வரசர் பெருமானுக்குப் போஜனவேளையில் கலந் திருத்திவைக்கும் குற்றேவலை யுடையவளாயிருந்தும், அடியவர் பத்தியில் மிகச் சிறந்த ஒருபெண் அவரை யெதிர்ப்பட்டு, பலமுறை பணிந்தெழுந்து, "ஐயனே, அடியேனது சிறுகுடிலுக்கெழுந்தருளித் திருவமுதுகொண்டு பரிகலசேடமளித்து, எனது தீவினையைச் சேதித்தருளல் வேண்டும்" எனப் பிரார்த்திக்க; விடசங்கமேசர் திருவுளமிரங்கி, அவளிடத்திலே விரகமுடையவர்போலக் காட்டி, அவள் மனையை யடைந்து, திருவமுது கொண்டருளி, தாம்பூலந்தரித்து, கலவியின்பத்தைக் காதலித்தவர்போல நடித்துக்கொண்டு கலந்திருந்தனர்.

அப்பெண் அவரது மாயவிஞ்சையை யுணராது மயங்கி, காமவசத்தளாய், அரசாகோமானது குற்றேவலை மறந்திருப்ப; அவர் ஸ்நானஞ்செய்து நியதிமுடித்து, தியானத் திருந்தபின் கலந்திருத்திவைப்பவ ளில்லாமையைக் கேள்வியுற்று, கனல்பெருகக் கண்கள் சிவந்து, காவலரைத் தூண்டினர். அவர் கடுகி நடந்தழைத்தமையால், அவள் மருண்டெழுந்து, சங்கமேசரைத் தன்மனையி லிருக்கும்படி பிரார்த்தித்து நிறுத்திவிட்டு, விரைந்துவந்து நிற்க; அரசர் பெருந்தகை முனிந்து அவள் கூந்தலைக் களைந்துவிடும்படி கட்டளை யிட்டனர். அவ்வாறே காவலர் முடித்தலால், அவள் கண்டவரிரங்கக் கவலையுற்றுச் சென்று, சங்கமேசரது திருவடியிலே வீழ்ந்து முறையிட்டு, அவரால் அபயாஸ்த மளித்துச் சிரசிலே திருக்கரஞ் சூட்டப்பெற்றமையால், முன்பு போலவே கூந்தல் செழித்து வளரக் குதூகல முடையவளாகி, அவரை வணங்கி விடைபெற்று, மீண்டு வந்து நிற்க, அது நோக்கிய அரசர் குரிசில் நமதாஞ்ஞையின்படி இவள் கூந்தலைக் களைய வில்லையெனக் கடுங்கோபங்கொண்டு, பின்பு உண்மையை யறிந்து பெரு வியப்புடையவராய், அப்பொழுதே அவள் மனையை யடைந்து, அங்கு வீற்றிருக்கும் சங்கமேசரது அற்புதத் திருமேனியைக் கண்டவுடனே பலகால் வணங்கித் துதித்து, பயபத்தியோடு

நின்று, "எம்பெருமானே தேவரீர் வீற்றிருத்தற்குத் தவஞ்செய்த நாடு யாது? இனி எழுந்தருளுதற்குத் தவஞ்செய்யும் தேசம் யாது?" என வினயத்தோடு வினவினர்.

அதுகேட்ட அண்ணலார் "யாம் சிவஸ்தலங்கடோறும் வசிப்பேம்; தற்காலம் எத்தலங்களினும் மிகவுயர்ந்தது தென் கைலாயமெனத் தேர்ந்து அத்தலத்தை யடைந்தேம்; அங்கே நம்பெருமானமர்தற்கு ஆலயமின்மைகண்டு, அப்பெருமானை நோக்கி, உலகமெலாமுடைய வுமக்கு வீற்றிருக்க ஓராலய மமைக்கு மன்பர் இல்லைகொல்லோ? என இரங்கி வந்தேம்: ஆகையால், சிவபத்தியிற் சிறந்த நீயே அத் திருப்பணியை முடிக்கக் கடவை" என வற்புறுத்தியருள; அதுகேட்டு அவர் அடியேனுய்யுமாறு அத் தலமான்மியத்தை விரித்தருள வேண்டுமென விண்ணப்பஞ் செய்துகொண்டனர். சங்கமேசர் "அன்பனே, அத் தலத்திலே சித்திபெற்றோர் வசிட்டமுனிவர், அகத்தியமுனிவர், பிரமதேவர், சிலந்தி, பாம்பு, யானை, கண்ணப்ப நாயனார், சிவகோசரியார், நக்கீரதேவர், கன்னியரிருவர் முதலாக அளவிறந்தோருண்டு; அவ்வச் சரித்திரங்களைச் சொல்லத் துணிந்தால் பல யுகஞ்செல்லும்; ஆதலால், அவற்றுள்ளே சில சரித்திரங் கூறுகின்றோம்: மனமமர்ந்து இனிது கேட்பாயாக" என்று கூறத்தொடங்கினர்.

---

# தென்கைலாயச் சருக்கம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

திங்களங் கண்ணி வேய்ந்த செஞ்சடைக் கருமி டற்றுச்
சங்கரன் றேவர் தம்முட் டலைவனு மாறு போல
வங்கண்மா ஞாலத் தண்ண லரும்பெறல் வீட ளிப்பத்
தங்கிய தலங்க டம்முட் காளத்தி தலைமைத் தாமால்.

(இ - ள்.) திங்கள் - ஒற்றைக்கலைச் சந்திரனாகிய, அம் - அழகாகிய, கண்ணி - மாலையை, வேய்ந்த - சூடின, செஞ்சடை - செவந்த சடாபாரத்தையும், கருமிடறு - கருங்கண்டத்தையு முடைய, சங்கரன் - சிவபிரான், தேவர்தமமுள் - தேவர்களுக்குள்ளே, தலைவன் ஆம் ஆறுபோல - முதல்வனா மாறுபோல, அம்கண் - அழகிய இடத்தையுடைய, மா - பெரிய, ஞாலத்து - உலகத்தில், அண்ணல் - இறைவன், அரும்பெறல் - பெறுதற்கரிய, வீடு - முத்தியை, அளிப்ப - அன்பர்க்கு அருள்செய்யும் பொருட்டு, தங்கிய - எழுந்தருளியிருக்கிற, தலங்கள் தம்முள் - திருத்தலங்களுக்குள்ளே, காளத்தி - ஸ்ரீகாளத்தியென்னுந் தலம், தலைமைத்து ஆம் - முதன்மை யுடையதாகும் எ - று.

மலர்க்கண்ணிகள் பலவற்றினும் பேரழகைத் தருதலால் திங்கட் கண்ணிக்கு அம் என்னும் விசேடணம் கொடுக்கப்பட்டது. வேய்தல்-சூடுதல். அந்தியேபோலு மவிர்சடையானுதலால் சிவபிரானைச் செஞ் சடைக் கருமிடற்றுச் சங்கரன் என்றார். சங்கரன் - ஜீவராசிகளுக்கு இதஞ் செய்பவன் எனப் பொருடருவதோர் வடசொற்றிரிபு. தேவர் தம்முள் என்பதிலும் தலங்கடம்முள் என்பதிலும் தம் சாரியை. (க)

கருமிடற் றிறைவன் வாழுங் காளத்தி பிறவி யென்னும்
பெருமதக் களிற்றி னுக்குப் பிறையெயிற் றரிமா னேறு
பொருவறு முத்தி யென்னும் புணர்முலைத் திருமகட்கு
விரைவிரி கமலச் செங்கேழ் மென்மலர்க் கோயி லாமால்.

(இ - ள்.) கருமிடறு - நீலகண்டத்தை யுடைய, இறைவன் - சிவபிரான், வாழும் - எழுந்தருளியிருக்கிற, காளத்தி - ஸ்ரீகாளத்தித் தலமானது, பிறவி என்னும் - சன்மமென்கிற, பெருமதக் களிற்றினுக்கு-பெரிய மதயானைக்கு, பிறை - பிறைபோன்ற, எயிறு - தந்தத்தையுடைய, அரி மான் ஏறு - ஆண்சிங்கமாகும், பொரு[illegible]த்தியென்

னும் - வீடென்கிற, புணர்முலை - நெருங்கின தனங்களையுடைய, திருமகட்கு - இலக்குமிக்கு, விரை - மணம், விரி - பரந்த, செம்கேழ் - செந்நிறத்தையுடைய, மெல் - மெல்லிய, கமலமலர் - தாமரை மலராகிய, கோயில் ஆம் - ஆலயமாகும் எ - று.

ஆல் - அசை. மேலைச் செய்யுளில் கருமிடற்றுச் சங்கரன் என்றதும் இச் செய்யுளில் கருமிடற் றிறைவன் என்றதும் இறைவற்கு உயிர்கள் மாட்டுள்ள பெருங்கருணையை விளக்குதற் கென்க. சங்கரனுதலாலும் இறைவனுதலாலும் விடமுண்டும் உயிர்களைக் காத்தல் இவற் றியல்பா மாறு காண்க. அரிமான் இருபெயரொட்டு. விரைவிரி கமலச் செங்கேழ் மென்மலர் என்றது செந்தாமரை மலர் என்றவாறு. (௨)

மதிதவழ் நீலக் குன்றும் வான்றொடு தூர்க்கை வெற்புங்
கதிர்முலை யாக்க வின்ற காளத்தி யணங்கைச் செம்பொற்
றிதலையங் குவவுக் கொங்கைச் சேயிழை யுமையிற் சாலப்
புதுமதி மிலைந்த சென்னிப் புங்கவன் வேட்கு மன்றே.

(இ - ள்.) புதுமதி - பால சந்திரனை, மிலைந்த - சூடின, சென்னி - சடாபாரத்தையுடைய, புங்கவன் - சிவபெருமான், மதிதவழ் - சந்திரன் தவழ்தற் கிடமாகிய, நீலக்குன்றும் - நீலகிரியையும், வான்தொடு - ஆகாயத்தைத் தீண்டுகிற, தூர்க்கை வெற்பும் - தூர்க்ககிரியையும், கதிர் - ஒளியுள்ள, முலையா - தன்னிரு தனங்களாகக் கொண்டு, கவின்ற - அழகைச் செய்கிற, காளத்தி அணங்கை - ஸ்ரீகாளத்தித் தலமாகிய மாதை, செம்பொன் - செம்பொற் பொடிபோலும், திதலை - தேமல் படர்ந்த, அம் - அழகாகிய குவவு - திரட்சியாகிய, கொங்கை - தனங்களை யுடைய, சேயிழை - பெண்ணாகிய, உமையின் - உமாதேவியை வேட்டதுபோல, சால - மிகுதியாக, வேட்கும் - வேட்பன் எ - று. அன்று ஏ அசைகள்.

புது மதி என்பதில் புதுமை இளமை மேற்று. சென்னி ஆகு பெயர். மதி தவழ் என்ற விசேடணத்தால் மலையினுயர்ச்சி விளங்கிற்று. தனங்கட் கிணைசொல்லக் குறித்தவராதலால் இணை மலையை யிணையாக்கினர். கவின்ற கவின் என்னும் பண்படியாகப் பிறந்த தெரிநிலைப் பெயரெச்சம். இது அணங்கு என்னும் பெயர் கொண்டு முடிந்தது. அணங்கு - ஆகு பெயர். சேயிழை - பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன் மொழித் தொகைக் காரணப் பெயர். உமையின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது ஒப்புப் பொருட்டு. முக்காலத்துக்கும் ஏற்க வேட்கும் என்றார். (௩)

அருமறை நவின்ற நாவி னந்தண ரினைஞர் மூத்தோர்
திருநுதன் மகளிர் தீம்பாற் செருத்தலான் படிமந் தோர்க
ளிருமூன் றுரவர் நீத்தோ ரென்றிவர் முதலி னோரை
யொருவுரக் கொன்ற லக்கும் விட்டில களிக்கு மம்மா.

(இ - ள்.) அரு - அருமையாகிய, மறை - வேதங்களை, நவின்ற - அத்தியயநம் பண்ணின, நாவின் - நாவினையுடைய, அந்தணர் - வேதியர், இளைஞர் - சிறுவர், மூத்தோர் - முதியோர், திருநுதல் - அழகாகிய நெற்றியையுடைய, மகளிர் - மாதர், தீம்பால் - இனிய பாலைத் தருகிற, செருத்தல் - மடியையுடைய, ஆன் - பசு, படிமத்தோர்கள் - பூசாரிகள், இருமுது குரவர் - தாய் தந்தையராகிய இருவர், நீத்தோர் - துறவினர், என்ற - என்று சொல்லப்பட்ட, இவர் முதலினோரை - இவர் முதலாயினோரை, வெருவர - அச்சமுண்டாகும்படி, கொன்றவர்க்கும் - கொலை செய்தவர்க்கும், வீட்டுலகு - முத்தியுலகை, அளிக்கும் - (இந்த சீகாளத்தித் தலமானது) தரும் எ - று. அம்மா - வியப்பிடைச் சொல்.

அருமறை யென்பதில் அருமையென்னும் விசேடணம் வேதங்களின் அபௌருஷேய நித்ய நிர்த்தோஷாதிகளை விளக்கி நின்றது. திருநுதல் என்றது ஆகு பெயராய் திருமுகத்தைக் குறித்தது. செருத்தல்-பால்மடி. ஆ - பசு. அது னகரச்சாரியைபெற்று ஆன் என்றாயிற்று. படிமத்தோன்-பூசாரி. வெருஉவர எனற்பாலது வெருவர என விகாரமாயிற்று. கொன்றவர்க்கும் என்னும் உம்மை இழிவு சிறப்பு. இறந்தது தழீஇயதுமாம். அளிக்கும் என்னும் பயனிலைக்கேற்ற எழுவாயாகிய சீகாளத்தித் தலம் என்பது வருவித் துரைக்கப்பட்டது. (௪)

**தவழ்வன நடப்ப நிற்ப தத்துவ பறப்ப நீர்வாழ்**
**விவையெலா மங்கண் முக்க ணிறைவனு ருருவ மாகு**
**மவலுறு புனல்க ளெல்லா மகலிரு விசும்பிற் றீர்த்தஞ்**
**சிவபுர முலகின் மற்றத் திருத்தல மாகு மாதோ.**

(இ - ள்.) அ - அந்த, திருத்தலம் -(சீகாளத்தித்) திருத்தலமானது, உலகில் - இந் நிலவுலகத்திலுள்ள, சிவபுரம் ஆகும் - சிவபுரமே யாகும், அங்கண் - அவ்விடத்துள்ள, தவழ்வன - ஊர்வனவும், நடப்ப - நடப்பனவும், நிற்ப - நிற்பனவும், தத்துவ - தாவுவனவும், பறப்ப - பறப்பனவும், நீர் வாழ்வு - நீர் வாழ்வனவும் ஆகிய, இவையெல்லாம் - இவை யாவும், முக்கண் - மூன்று கண்களையுடைய, இறைவனுர் - சிவபெருமானாரது, உருவம் ஆகும் - வடிவமாகும், அவல் - சிறு பள்ளங்களில், உறு - உள்ள, புனல்கள் எல்லாம் - தீர்த்தங்களெல்லாம், அகல் - பரந்த, இரு - பெரிய, விசும்பில் தீர்த்தம் - ஆகாச கங்காதீர்த்தமாகும் எ - று. மாது ஓ அசைகள்.

சிவபுரம் மேலுலகாதலால் உலகு என்பதற்கு நிலவுலகமெனப் பொருள் வரையலாயிற்று. சீகாளத்தித் திருத்தலம் சிவபுரமா மென்பதும் அங்குள்ள எல்லா வுயிர்களும் சிவபெருமானுருவமா மென்பதும், அங்குள்ள சிறு குழிநீரெல்லாம் ஆகாச கங்காதீர்த்தமா மென்பதும் இச் செய்யுளாற் கூறப்பட்டன. (௫)

பிறந்தவர்க் காரூர் காணப் பெற்றவர் தமக்குத் தில்லை
யிறந்தவர் தமக்குக் காசி யெவ்விடத் தேனு நின்று
மறந்திலர் நினைத்த வர்க்கு வான்றொடு மருணை யாகுஞ்
சிறந்திறை வீற்றி ருக்குந் தெனாதுபொற் கயிலைக் குன்றே.

(இ - ள்.) சிறந்த - (எல்லாத் தேவரினும்) சிறந்த, இறை - இறைவர், வீற்றிருக்கும் - வீற்றிருக்கிற, பொன் - அழகாகிய, தெனாது கயிலைக் குன்று - தென்கயிலாய மலையானது, பிறந்தவர்க்கு - தன்னிடத்தில் ஜந்மித்தவருக்கு, ஆரூர் - திருவாரூராகும், காணப் பெற்றவர் தமக்கு- தரிசிக்கப் பெற்றவர்க்கு, தில்லை - திருத்தில்லையாகும், இறந்தவர் தமக்கு - மரணமடைந்தவர்க்கு, காசி - காசீக்ஷேத்ரமாகும், எவ்விடத்து ஏனும் நின்று - எவ்விடத்திலாயினு மிருந்துகொண்டு, மறந்திலர் நினைத்தவர்க்கு - மறவாமல் நினைந்தவர்க்கு, வான் தொடும் - ஆகாயத்தை யளாவுகிற, அருணை ஆகும் - திருவருணைப் பதியாகும் எ - று.

ஆகும் என்பது ஆரூர் முதலிய எல்லாவற்றிற்கும் சேர்த் துரைக்கப்பட்டது. தில்லை - சிதம்பரம். மறந்திலர் - முற்றெச்சம். சிறந்த இறையெனற் பாலது சிறந்திறையென நிலைமொழி யீறு தொகுத்தலாயிற்று. இச் செய்யுளால் தென் கயிலாயத் தலமானது தன்னிடத்திற் சனித்தவர் முதலாயினார்க்கு முத்தியைத் தருமென்பது இனிது விளக்கப்பட்டது. அருணையை திருவண்ணாமலை யெனவும் வழங்குவர். (௬)

ஏனைய தலங்க டோறு மிருபிறப் பாளர் கொள்ள
வானுயர் பசும்பொற் குப்பை வழங்கலுந் திருக்கா ளத்தி
மீனுயிர் கவருந் தூண்டில் வேட்டுவன் றனக்கோ ரூசி
தானுத வுதலு மொப்பாச் சாற்றுவ ரறிந்த நல்லோர்.

(இ - ள்) அறிந்த நல்லோர் - அறிய வேண்டியவற்றை யறிந்த மேலோர், ஏனைய தலங்கள்தோறும் - மற்றைய தலங்களிலெல்லாமிருந்துகொண்டு, இருபிறப்பாளர் - அந்தணர், கொள்ள-பெறும்படி, வான்உயர்-ஆகாயத்தளவு முயர்ந்த, பசும்பொற் குப்பை - பசும் பொற் குவியலை, வழங்கலும் - கொடுத்தலும், திருக்காளத்தி - திருக்காளத்தியி லிருந்துகொண்டு, மீன்-மீன்களின், உயிர்-பிராணனை, கவரும்-வாங்குகிற, தூண்டில் வேட்டுவன் தனக்கு - தூண்டில்வேடனுக்கு, ஓர் ஊசி உதவுதலும்-ஒரூசியைத் தருதலும், ஒப்பு ஆ - நிகராக, சாற்றுவர்-சொல்லுவர் எ-று.

நல்லோர் என மேல்வருதலால் அறிந்த என்பதற்கு அறியவேண்டிய வற்றை யறிந்த எனப் பொருள் கூறலாயிற்று. அறியவேண்டியவை அற முதலியவற்றின் பாகுபாடு பயன் முதலாயின. நல்லோர் என்பதில் நன்மை மேன்மைமேற்று. இருபிறப்பாளர் என்றது அந்தணரை. இவர் தாய் வயிற்றிற் பிறத்தலை முதற் பிறப்பாகவும் உபவீத தாரண முதலிய

வுடைத்தாதலை இரண்டாம் பிறப்பாகவும் கொள்ள வேண்டுமென்று வேதாகமாதி நூல்கள் விதித்தலால் இருபிறப்பாளர் எனப்பட்டார். இவரை த்விஜர் என்பர் வடநூலார். இதற்குப் பொருள் இருபிறப்பாளர் என்பதே (எ)

**கருமிடற் றிறைவன் வாழுங் காளத்தி யென்பேர் கொண்ட**
**வொருவனை விளிக்குங் காலவ் வொப்பில் பேர்செப்பு வோரும்**
**பரிதிவெங் கதிர்க டோய்நுண் பனியெனப் பாவ கோடி**
**யிரிதரத் துரப்ப ரென்றா லெத்தல மதற்கொப் பம்மா.**

(இ - ள்.) கருமிடறு - நீலகண்டத்தையுடைய, இறைவன் - சிவபெருமான், வாழும் - வாழ்கிற, காளத்தி என் - காளத்தி என்கிற, பேர் - பெயரை, கொண்ட - பெற்றிருக்கிற, ஒருவனை - ஒரு மனிதனை, விளிக்குங்கால் -(ஒருவன்) அழைக்கும்போது, அ - அந்த, ஒப்பு இல் - நிகரற்ற, பேர் - பெயரை, செப்புவோரும் - சொல்லுவோரும், பரிதி - சூரியனது, வெம்-வெப்பமான, கதிர்கள் தோய்-கிரணங்கள் பட்ட, நுண் பனி என-நுட்பமான பனித்துளிபோல, பாவகோடி - பல பாவங்களும், இரிதர-ஓட, துரப்பர் என்றால் - ஓட்டுவரென்றால், அதற்கு - அந்தத் திருக்காளத்தித் தலத்துக்கு, எத்தலம் - எந்தத் தலம், ஒப்பு - நிகராவது எ-று.

அம்மா - வியப்பிடைச்சொல். விளித்தல்-அழைத்தல். கோடி யென்றது மிகப் பலவென்றபடி. இரிதர என்பதற்குப் பகுதி இரிதா. துரத்தல் - ஓட்டல். (அ)

மேற்படி வேறு

**யாவ னொருவன் விளையாட்டி னிடத்தா யினுந்தென் கயிலைக்குப்**
**போவ னென்றோ ரடியிடுவா னவன்றன் கழற்காற் பூங்கமலந்**
**தேவர் மகுட நிரையுரிஞ்சத் திகழ்வ னென்றான் மனமொத்துத்**
**தாவில் கயிலைக் கேகுவார் தம்பே றியாவர் சாற்றுவார்.**

(இ - ள்.) யாவன் ஒருவன் - எவனொருவன், விளையாட்டினிடத்தாயினும் - விளையாடலின் கண்ணுயினும், தென்கயிலைக்கு போவன் என்று-தென் கயிலாயத்துக்குப் போவேனென்று, ஓர் அடியிடுவான் - ஒரு அடியெடுத்து வைப்பானோ, அவன் - அவன், கழல்-கழலணிந்த, பூ - அழகிய, கால்கமலம் - தனது பாததாமரை மலரானது, தேவர் - தேவர்களுடைய, மகுடநிரை உரிஞ்ச - கிரீடவரிசை யுரிஞ்சும்படி, திகழ்வன் என்றால் - விளங்குவனென்றால், மனம் ஒத்து - மன மொருமித்து, தாவுஇல்-அழிவற்ற, கயிலைக்கு ஏகுவார் - கயிலாயத்துக்குப் போவோரது, பேறு-பயனை, சாற்றுவார் யாவர் - சொல்வோர் எவர் எ-று.

தென்கயிலை - ஸ்ரீகாளத்தி. கமலம் - ஆகுபெயர். பேறு - பெறுதற்குரிய பயன். யாவர் என்ற வினு ஒருவருமிலர் என்னும் பொருளது. தம்-சாரியை. (கூ)

மேற்படி வேறு

மற்றொரு தலத்திற் பன்னாண் மரபுளி நோற்று நெஞ்சஞ்
செற்றுறை தலுங்கா ளத்தித் திருநக ரதனு ளோர்நாட்
பொற்றொடி மகளிர் மென்றோள் புணர்ந்துறை தலுமொப்பென்ப
கற்றவ ரிதுபட் டாங்கு கட்டுரை யன்று வேந்தே.

(இ - ள்.) மற்றொரு தலத்தில் - வேறொரு தலத்தில், பல்நாள் - அநேகநாளிருந்து, மரபுளி - வரன்முறையாக, நோற்று - நோன்பு செய்து, நெஞ்சம் செற்று - மனத்தை வென்று, உறைதலும் - வசித்தலும், திரு - அழகாகிய, காளத்தி நகரதனுள் - காளத்தி நகரத்தில், ஓர்நாள் - ஒருநாளிருந்து, பொன்தொடி - பொன்வளைய லணிந்த, மகளிர் - மாதரது, மென்தோள் - மெல்லிய தோள்களை, புணர்ந்து - தழுவி, உறைதலும்-வாழ்தலும், ஒப்பு என்ப - நிகராமென்று சொல்லுவர், (யாவரென்றால்) கற்று அறிந்தவர்-மெய்ந்நூல்களைக் கற்றறிந்த மேலோர், இது பட்டாங்கு-இது உண்மை, கட்டுரை அன்று - கற்பனைச்சொல் அன்று எ-று.

செறல் - வெல்லுதல். செறு பகுதி. பட்டாங்கு - உண்மை. "இட்டார் பெரியோர் இடாதா ரிழிகுலத்தோர், பட்டாங்கி லுள்ள படி" என்னும் ஆன்றோர் செய்யுளினும் பட்டாங்கு இப்பொருட்டாதல் காண்க. கட்டுரை - கற்பித்துச் சொல்லுஞ் சொல். (௧0)

கடவுண்மா திருக்கா ளத்தி கயாரணி யப்பேர்க் காடாய்
நெடுநில வளைப்பின் மிக்க நேமியங் கடறி ரத்தி
யொடுபெய ரியகா டாதி யொப்புமைக் குடைய வோங்கு
மடலரி மானே றொப்பா யாரதன் சிறப்புச் சொல்வார்.

(இ - ள்.) ஓங்கும் - உயர்ந்த, அடல் - வெற்றியையுடைய, அரிமானேறு - சிங்கவேற்றேறு, ஒப்பாய் - நிகர்த்தவனே, கடவுள் - இறைவரது, மா - பெருமை பொருந்திய, திருக்காளத்தி-திருக்காளத்தித் தலத்துக்கு, கயாரணியப் பேர் - கயாரணிய மென்னும் பெயரையுடையதாகிய, காடு ஆய் - அரண்யமாகி, நெடு - பெரிய, நிலவளைப்பில்-நிலவுலகத்தில், மிக்க - மேலான, நேமியம் கடறு - நைமிசாரணியம், இரத்தியொடு பெயரிய காடு - பதரிவநம், ஆதி - முதலானவை, ஒப்புமைக்கு உடைய - நிகராதற் குரியன, (ஆதலால்) அதன் சிறப்பு சொல்வார் - அதனது மேன்மையை சொல்லவல்லவர், யார் - எவர் எ - று.

அடல்-கொல்லுந் தொழிலையுடைய வெனினு மமையும். அரிமான் - இருபெய ரொட்டு. கடறு - காடு. இரத்தி - இலந்தை, இதனை பதரியென்பர் வடநூலார். யார் என்னும் வினா ஒருவருமிலர் என்னும் பொருடந்து நின்றது. (௧௧)

ஒளிர்மல ரசோகந் தேமா வுயர்சினைத் தமாலங் கோளி
சுளையக முட்பு றக்காய் தூங்குகோட் டுயர்வ ருக்கை
வளரகில் சண்ப கம்யா மணங்கம ழாரந் தேக்கு
கிளைமுத லியது வன்றிக் கெடலருங் குளிர்கொண் டன்றே.

(இ - ள்.) ஒளிர் - விளங்குகிற, மலர் - பூக்களையுடைய, அசோகம்—, தேமா—, உயர் - உயர்ந்த, சினை-கிளைகளையுடைய, தமாலம்—, கோளி—, சுளை அகம் - சுளையையுள்ளிடத்தும், முள்புறம் - முள்ளை வெளியிடத்தும் உடைய, காய் - காய்கள், தூங்கு - தொங்குகிற, கோடு - கிளைகளையுடைய, உயர் - உயர்ந்த, வருக்கை—, வளர் - வளர்கிற, அகில் - அகில், சண்பகம்—, யா—, மணம் கமழ்-வாசனை வீசுகிற, ஆரம்—, தேக்கு—, (என்னும் இம்மரங்கள்) கிளைமுதலியதுவன்றி - கிளைமுதலியவை நெருங்கப் பெற்று, கெடல் அரு - என்று மழியாத, குளிர் கொண்டன்று - நிழலைக் கொண்டிருக்கும் எ - று.

தமாலம் - புன்கு, பச்சிலைமரம் என்பாரு முளர். வருக்கை - ஒருவகைப் பலா. யா-ஆச்சாமரம். ஆரம் - சந்தனமரம். துவன்றல்-நெருங்கல்.

முடங்குளை யரிமா னெண்கான் முழுவலிச் சரப மாமான்
கடம்படு கவுட்கூர்ங் கோட்டுக் களிறுவல் லுளியங் கேழல்
கொடுஞ்சினப் பிறையு கிர்த்தாட் கொடுவரி வேங்கை யாதி
மிடைந்துவில் லுழந்துண் வாழ்க்கை வேட்டுவக் குடியு டைத்தே.

(இ - ள்.) முடங்கு - வளைந்த, உளை - புறமயிரையுடைய, அரிமான் - சிங்கம், எண்கால் - எட்டுக் கால்களையும், முழுவலி - மிக்க வலியையுமுடைய, சரபம்—, ஆமான்—, கடம்படு - மதநீரொழுகுகிற, கவுள் - கபோலத்தையும், கூர் கோடு - கூர்மையாகிய கொம்பினையு முடைய, களிறு - யானை, வல்லுளி - கரடி, அம்கேழல் - அழகிய பன்றி, கொடுஞ்சினம் - கொடுங் கோவத்தையும், பிறை உகிர்தாள் - பிறைபோன்ற நகமுள்ள கால்களையு முடைய, கொடுவரி வேங்கை - வேங்கைப்புலி, ஆதி - முதலியவை, மிடைந்து - நெருங்கி, வில் உழந்து - விற்றொழிலால் வருந்தி, உண் - உண்டு சீவிக்கிற, வாழ்க்கை - வாழ்தலையுடைய, வேட்டுவக்குடி - வேடக் குடிகள், (ஆகிய இவைகளை) உடைத்து - உடையதாயிருக்கும் எ - று.

சரபம் - எட்டுக் கால்களையுடைய தோர் பறவை, இது சிங்கத்தையும் வெல்ல வல்லது. இதனை, சிம்புள் என்றும், வாருண்டகம் என்றும், சரபம் என்றும், துரோணம் என்றும் கூறுவர். "சிங்கத்தை யொத்தெனப்பாய வருவினையினைச் சேதிக்கவரு சிம்புளே" என்றார் பெரியாரும். கொடுவரி - புலி. கொடுவரி வேங்கை யென்பதற்கு வளைவாகிய கோடுகளையுடைய புலியென் றுரைப்பினுமாம். உழத்தல் - வருந்தல். (கரு)

பூநின்று புவன மாக்கும் புங்கவன் புகழிக் காட்டிற்
றீநின்று சுடவெ டித்த சேண்டொடு நெடிய வேயின்
வாய்நின்று தெறித்த முத்தம் வான்பதிந் தவற்றை யன்றே
மீநின்று விளங்கு மீனென் றுலகெலாம் விளம்பு மன்றே.

(இ - ள்.) பூநின்று - தாமரைமலரில் வீற்றிருந்து, புவநம் ஆக்கும் - உலகங்களை யுண்டாக்குகிற, புங்கவன் - பிரமதேவன், புகழ் - புகழ்தற்குரிய, இக் காட்டில் - இந்த அரணியத்தில், தீநின்று - நெருப்பு நின்று, சுட - சுடுதலால், வெடித்த - வெடித்திட்ட, சேண்தொடும் - ஆகாயத்தைத் தீண்டுகிற, நெடிய வேயின் வாய் நின்று - நீண்ட மூங்கிலினிடத்திருந்து, தெறித்த - தெறித்திட்ட, முத்தம் - முத்துக்கள், வான் - ஆகாசத்தில், பதிந்தவற்றை அன்றே - பதிந்திருப்பவற்றை யல்லவா, மீநின்று விளங்கும் - மேலிடத்து நிலைத்து விளங்குகிற, மீன் என்று - மீன்களென்று, உலகு எல்லாம்-உலகமுழுதும், விளம்பும்-சொல்லாநிற்கும்எ-று.

புவனமாக்கும் புங்கவன் என மேல்வருதலால் பூவென்றது தாமரைப் பூவைக் குறித்தது. சுட - காரணப் பொருட்டாகிய பெயரெச்சம். வேய் - மூங்கில். வாய் - ஏழனுருபு. முத்தம்-முக்தம் என்னும் வடசொற்றிரிபு.()

திங்கடன் னருகு மீக்கட் சென்றிடப் பிறையெ யிற்று
மங்குலி னிறத்துப் பன்றி மண்கிளைத் தடியி னிற்பப்
பொங்கொளி விரிக்குஞ் சோதிப் புதுமர னிற்றன் மாலும்
பங்கயத் தவனுந் தேடப் படுதழற் பிழம்பை யொக்கும்.

(இ - ள்.) திங்கள் - சந்திரன், மீக்கண் - மேலிடத்தில், தன் அருகு சென்றிட - தனக்குச் சமீபத்தில் தவழ, பிறை எயிறு - பிறைபோலும் பல்லினையும், மங்குலின் நிறத்து - மேகத்தினிறத்தினையு முடைய, பன்றி - வராகமானது, மண்கிளைத்து - மண்ணைப் பறித்துக்கொண்டு, அடியில் நிற்ப - கீழே நிற்க, பொங்கு ஒளி - மிக்க ஒளியை, விரிக்கும் - பரப்புகிற, புது - புதிய, சோதிமரன் - சோதி விருக்ஷமானது, நிற்றல் - நிற்பது, மாலும் - திருமாலும், பங்கயத்து அயனும் - தாமரை மலரில் வாழ்வோனாகிய பிரமனும், தேட - தேடாநிற்க, படு - (அவர்களுக்கிடையே) உண்டான, தழல் பிழம்பை ஒக்கும் - நெருப்புமலையை நிகர்க்கும் எ - று.

மீ - மேலிடம் (ஆகாயம்). செல்லுதல் - தவழ்தல். மங்குல் என வாளா கூறினரேனும் ஈண்டைக் கேற்பக் கரிய மேகமெனக் கொள்க. திருமால் கருநிறப் பன்றியாகி மண்கிளைத்தும், பிரமன் வெண்ணிறத் தன்னமாகி மேலே பறந்ததுமாகிய புராண சரிதங்களுண்மையால் இவ்வாறு கூறப்பட்டது. சோதிமரன்-ஒளியுருவாயிருப்பதோர் மரம். மரன் - னகர விறுதிப்போலி. தழற் பிழம்பு என்றது அருணாசலத்தை. (௧௫)

மேற்படி வேறு

மழைசூழ் சோதி மரந்தனது
 மருங்கின் விலகி யிடையிட்ட
தழைசூழ் கொம்பொன் றனையபுன்னைத்
 தடங்கொம் பொன்றன் மிசைக்கிடப்பக்
கழைசூழ் பொதும்ப ரிடைநிற்றல்
 களிற்றி னுரிபோர்த் தவன்றிருமா
லிழைசூழ் கையின் மிசைத்தன்கை
 யேற்றி நின்றாற் போலுமால்.

(இ - ள்.) மழைசூழ் - மேகம் தவழப்பெற்ற, சோதிமரம் தனது - சோதிவிருக்ஷத்தினது, மருங்கின் விலகி - பக்கத்தினின்றும் விலகி, இடையிட்ட - இடையே யிருக்கிற, தழைசூழ் - இலைகள் தழைத்த, கொம்பு ஒன்று - ஒரு கொம்பானது, அனைய - அதனையொத்த, புன்னை - புன்னைமரத்தின், தடம் கொம்பு ஒன்றன்மிசை கிடப்ப - ஒரு பெரிய கொம்பின்மேற் கிடக்க, கழைசூழ் - மூங்கிற்புதல் சூழ்ந்த, பொதும்பர் இடை - சோலையினிடையே, நிற்றல் - நிற்பது, களிற்றின் உரி-யானைத் தோலை, போர்த்தவன் - போர்த்துக் கொண்டவனாகிய சிவபெருமான், திருமால் - திருமாலின், இழை சூழ் - ஆபரணங்கள் நிறைந்த, கையின் மிசை - கையின்மேல், தன்கை-தனது கையை, ஏற்றிநின்றாற் போலும் - ஏற்றி நிற்றலை நிகர்க்கும் எ-று.

சோதிமரம் தனது என்பதில் தன் சாரியை. மருங்கு-பக்கம். கழை - ஆகுபெயர். சோதிமரத்தின் கொம்பொன்று மூங்கிற்புதல்சூழ்ந்த சோலையினிடையே நிற்றல் சிவபெருமான் கையானது திருமாலின் கையின் மேற் கிடத்தலை யொக்கும் என்பது திச்செய்யுட் கருத்து. (கசு)

மேற்படி வேறு

இருள்படத் தழைந்த வேயி னிடைப்படர் சோதி வல்லி
பொருவளிக் கசைந்து மெல்லென் புதுத்தழை பெயருந் தோறும்
விரிகதிர் பரப்பித் தோன்றி மிடைதழை மறையுந் தோற்றம்
பெருகொளி மின்னு மின்னிப் பெயன்மழை மறைதல் போலும்.

(இ - ள்.) இருள்பட - இருளுண்டாக, தழைத்த - செழித்த, வேயி னிடை - மூங்கிற் புதலினிடையே, படர்-படர்ந்த, சோதிவல்லி-சோதிக் கொடியானது, பொரு - மோதுகிற, வளிக்கு அசைந்து - காற்றுக்கு அசைந்து, மெல் என் - மெல்லென்கிற, புதுத்தழை - புதிய இலை, பெய ருந்தோறும் - அசையுந்தோறும், விரி - விரிந்த, கதிர் - ஒளியை, பர ப்பி - பரவச்செய்து, தோன்றி - தோன்றியின், மிடைதழை - நெருங்கிய

நிலைகளில், மறையும் - மறைகிற, தோற்றம் - காட்சியானது, பெருகு ஒளி - மிக்க ஒளியையுடைய, மின்னு - மின்னலானது, மின்னி - மின்னுதல் செய்து, பெயல் - பெய்தலையுடைய, மழை - மேகத்தில், மறைதல் போலும் - மறைவதை நிகர்க்கும் எ-று.

வேய் - மூங்கில். அது இங்கு அதன் புதலைக் குறித்தலால் ஆகுபெயர். சோதிவல்லி - சோதிமரத்தின் மேற் படர்ந்த கொடி. தோன்றி-மருதோன்றி. மிடைதல் - நெருங்குதல். பெயல் - மழைபெய்தல். சோதிக் கொடியானது தோன்றி யிலையில் மறைவது மின்கொடி தோன்றி மழையில் மறைவதை நிகர்க்கும் என்பது கருத்து. (கஎ)

கோணின்ற நிலையை முட்டிக் குனிந்தொரு பசிய வேய்தன்
ஞூணின்ற நிலையைத் தொட்டுத் தலையிற்றே னொழுக நிற்றல்
சேணின்ற வில்லெ டுத்துத் தேவர்கோ னரிது பெற்ற
நாணொன்று கொளீஇநி லத்தி னட்டுவைத் தனைய தம்மா.

(இ - ள்.) ஒரு பசிய வேய் - ஒரு பச்சைமூங்கில், கோள் நின்ற நிலையை - கிரகங்கள் நிற்கிற நிலையை, முட்டி - மோதி, குனிந்து - வளைந்து, தன் - தனது, தாள்நின்ற நிலையை - வேர்நின்ற நிலையை, தொட்டு - தீண்டி, தலையில் - நுனியில், தேன் ஒழுக - தேனொழுகும்படி, நிற்றல் - நிற்பது, தேவர்கோன் - தேவராஜன், சேண்நின்ற வில் எடுத்து - ஆகாயத்திலிருக்கிற வில்லையெடுத்து, அரிது பெற்ற - அருமையாகப் பெற்ற, நாண் ஒன்று கொளீஇ - ஒரு நாணினைத் தொடுத்து, நிலத்தில்-பூமியில், நட்டு வைத்தனையது - நட்டுவைத்தாற் போலும் எ-று. அம்மா வியப்பிடைச்சொல்.

கோள் - கிரகங்கள். அவை ஞாயிறு முதலிய வொன்பது. முட்டுதல்-மோதுதல். குனிதல் - வளைதல். தாள் - அடி. (வேர்) சேணின்ற வில் - இந்திர தனுசு. ஒரு மூங்கிலானது சூரியமண்டலத்தளவும் வளர்ந்து வளைந்து தன் வேரைத் தீண்டி, தன் தலையினின்று தேனொழுக நிற்றல். தேவராஜன் தன் வில்லாகிய இந்திர தனுசை வளைத்து நாணேற்றி பூமியில் நட்டுவைத்ததை நிகர்க்குமென்பது கருத்து. (கஅ)

தரவு கொச்சகக்கலிப்பா

முருகுவிரி மலர்க்கொடிகண் மூங்கின்மிசைப் படிந்துபோய்ப்
பொருவரிய துறக்கத்துப் புகுந்துவளர் கற்பகமா
மரமுழுதும் படர்ந்துலவும் வளர்மதியின் மேலாய
பெரியவரை யடைந்தொழுகப் பெறிற்றுறக்கம் புகலரிதோ.

(இ - ள்.) முருகுவிரி - மணம் வீசுகிற, மலர்க் கொடிகள் - பூங்கொடிகள், மூங்கில் மிசை - மூங்கிலின்மேல், படிந்துபோய் - படிந்து

சென்று, பொருவு அரிய - ஒப்பற்ற, துறக்கத்துப் புகுந்து - சுவர்க்க லோகத்திற் புகுந்து, வளர் - வளராநின்ற, கற்பகம் - கற்பகமென்கிற, மா - பெரிய, மரமுழுதும் - மரமுழுதிலும், படர்ந்து உலவும் - படர்ந் துலவாநிற்கும், வளர் - வளராநின்ற, மதியின் மேலாய - சந்திர மண்டலத்தின் மேற்பட்ட, பெரியவரை அடைந்து - உயர்ந்த மூங்கில்களைச் சேர்ந்து, ஒழுகப்பெறின் - ஒழுகப் பெற்றால், துறக்கம் - சுவர்க்கலோகத்தில், புகல் - புகுதல், அரிதோ - அரிதாகுமோ எ-று.

பொருவு - உவமை. மதி ஆகுபெயர். அரிதோ வென்னு மோகாரம் எதிர்மறை. மதியின்மேலாய பெரியவரை யடைந் தொழுகப்பெறின் துறக்கம் புகல் அரிதோ என்பதற்கு, அறிவிற்சிறந்த பெரியோரை யடைந்தொழுகப் பெற்றால் சுவர்க்கம் புகுதல் அரிதாமோவென வேறொரு பொருள் தோன்றுமாறுங் காண்க. (கக)

மரகதநன் மணிக்கதிரின் வளர்பசும்புற் கொடிமேய்ந்து
திரைபொருநீர்க் கான்யாற்றுத் தீம்புனலுண் டாமாக்க
ளரிமணல்பா யிளம்புன்கி னணிநிழற்கீழ் வாய்குதட்டிப்
பொரியனைய பூவுதிர்ந்து புறம்புதையக் கிடக்குமால்.

(இ - ள்.) ஆமாக்கள் - பசுக்கள், மரகதம் - மரகதமென்கிற, நல் - சிறந்த, மணி - அரதநத்தின், கதிரின் - கிரணத்தோடு, வளர் - வளர்ந்த, பசும்புல்கொடி - பசிய புற்கொடியை, மேய்ந்து-கறித்து, திரைபொரும்- அலைகள் மோதுகிற, நீர் - நீரையுடைய, கான்யாற்று - காறாற்றின், தீ புனல் உண்டு - இனிய நீரை குடித்து, அரிமணல் பாய் - அரிமணல் பரவிய, இளம்புன்கின் - இளைதாகிய புன்குமரத்தின், அணி நிழல்கீழ் - அழகிய நிழலின்கீழே, வாய்குதட்டி - வாய் குதட்டிக்கொண்டு, பொரி அனைய - பொரியை நிகர்த்த, பூ - மலர்கள், உதிர்ந்து - சிந்தி, புறம் புதைய - முதுகு மறைய, கிடக்கும் - படுத்திருக்கும் எ-று.

ஆல் - அசை. ஆமா - இருபெயரொட்டு. மரகதமணி - பச்சைமணி. கான்யாறு - காட்டு நதி. புன்கு - புன்கமரம், குதட்டல்-அசைபோடுதல். (மெல்லல்) புதைதல் - மறைதல். (உ0)

மணிமலர்கொள் பலகாயா மருங்குடுத்துச் சினைமுழுது
மணிமலர்கொ டுணர்சுமந்த வசோகமொன்று நடுநிற்றல்
பிணியவிழு நறியசெச்சைப் பிணையலும் தோண்முருகன்
பணியடரு நெடுந்தோகைப் பறவைமிசை யிருந்தற்றே.

(இ - ள்.) சினைமுழுதும் - கிளைகளிலெல்லாம், அணி - அழகாகிய, மலர்கொள் - மலர்களைத் தாங்கிய, துணர் சுமந்த - பூங்கொத்துக்களை யேந்திய, அசோகம் ஒன்று - ஒரு அசோகமரமானது, மணி மலர்கொள் -

அழகிய மலர்களைக் கொண்டுள்ள, பல - அநேகமாகிய, காயா-காயாமரங்களை, மருங்கு-தன் பக்கத்தில், உடுத்து - சூழப் பெற்று, நடு - அவற்றினிடையில், நிற்றல்-தான் நிற்றலானது, பிணி அவிழும்-கட்டவிழ்ந்த, நறிய-மணமுள்ள, செச்சைப்பிணையல் - வெட்சிமாலையானது, தாழ் - தொங்குகிற, தோள் - புயங்களையுடைய, முருகன் - முருகவேளானவன், பணி - பாம்புகளை, அடரும் - கொல்லுகிற, நெடுந்தோகை - நெடிய கலாபத்தையுடைய, பறவையிறை - மயில் மீது, இருந்தற்று - இருந்த அத்தன்மைத்து எ - று.

பிணி - கட்டு. பிணையல் - மாலை. பணம் - படம். அதனையுடையது பணி. (பாம்பு) இது வடசொல். அடர்தல் - கொல்லல். பணியடரும் என்றது மயிலுக்கு இயற்கையடை. (உக)

அறுபதவண் டினங்குறுகி யறியாத சண்பகங்க
ணறவொழுக விதழ்விரியு நறுமலர்பூத் துறுதோற்றங்
குறைபெறுந ரடைந்தறியாக் குறையிவறன் மாலையான்
பெறலரிய பெருஞ்செல்வம் பெற்றிருத்தல் போலுமால்.

(இ - ள்.) அறுபதம் - ஆறு கால்களையுடைய, வண்டு இனம் - வண்டின் கூட்டம், குறுகி அறியாத - கிட்டியறியாத, சண்பகங்கள் - சண்பக மரங்கள், நற ஒழுக - தேனொழுகும்படி, இதழ்விரியும் - இதழ்கள் விரிகிற, நறு - மணமுள்ள, மலர் - மலர்களை, பூத்து உறு - மலர்ந்துள்ள, தோற்றம் - காட்சியானது, குறைபெறுநர் - வறிஞர், அடைந்து அறியா - பெற்றறியாத, குறை - குறையையுடைய, இவறன் மாலையான் - உலோப குணமுள்ளவன், பெறல் அரிய - பெறுதற்கரிய, பெருஞ் செல்வம் - பெருஞ் செல்வத்தை, பெற்று இருத்தல் போலும் - அடைந்திருத்தலை நிகர்க்கும் எ - று.

அறுபதம் ஷட்பதம் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. குறுகல் - கிட்டல். "வேங்கையுஞ் சண்பகமும் வண்டுணாமலர் மரம்" என்பவாகலான், 'அறுபத வண்டினங் குறுகியறியாத சண்பகங்கள்,' என்றார். இவறன் மாலை - உலோபகுணம். சண்பகமலர்த் தேனை வண்டுண்ணாமைக்குக் காரணம் மிகு மணமும் மதுமயக்கமும். (உஉ)

கலிவிருத்தம்

பற்பல வகிலழல் படவெ ழுந்தவிப்
பொற்பமை வனத்திடைப் புகையுண் டன்றுகொல்
கற்பகப் பொலமலர் கமழ்வ தன்றெனி
லெற்படு பொன்னிடத் தியாது நாற்றமே.

(இ - ள்.) பற்பல அகில் - அநேகமாகிய அகிற்கட்டைகள், அழல் பட - நெருப்பிற் பட்டெரிய, எழுந்த - மேலெழுந்த, இ - இந்த, பொற்பு அமை - அழகமைந்த, வனத்து இடை - வனத்திலுண்டாகிய, புகை உண்டன்று கொல் - புகையைப் பெற்றல்லவா, கற்பகம் - கற்பகமரத்தில் உள்ள, பொலம் மலர் - பொன்மலர்கள், கமழ்வது - மணப்பது, அன்று எனில் - அல்லவாயின், எல்படு - ஒளிபொருந்திய, பொன்னிடத்து - பொன்னினிடத்தில், நாற்றம் யாது - மணம் ஏது எ - று.

அகில் ஆகுபெயர். வனம் - அரணியம். கமழ்தல் மணத்தல். நாற்றம் - மணம், இதற்குப் பகுதி நாறு. யாது என்னும் வினா இல்லை யென்னும் பொருடந்து நின்றது. (உ௩)

மேற்படி வேறு

தொக்க நன்மரச் சூழலு ணிற்குமாற்
றக்க மேலவர் தம்மு ளெவற்றினு
மிக்க கல்வி வெறுக்கையு ளொன் றுமின்
மக்கள் போன்மென வற்றன் மரங்களே.

(இ - ள்.) தக்க - தகுதியாகிய, மேலவர் தம்முள் - மேலோர் நடுவில், எவற்றினும் மிக்க - எவற்றினுஞ் சிறந்த, கல்வி வெறுக்கையுள் - கல்வி செல்வம் என்பவற்றுள், ஒன்றும் இல் - ஒன்றுமில்லாத, மக்கள் போன்மென - மனிதரைப்போலு மென்னும்படி, வற்றல் மரங்கள் - வற்றல் மரங்களானவை, தொக்க-தொக்கிருக்கிற, நல்மரச் சூழலுள்-சிறந்த மரங்களுள்ள சோலையில், நிற்கும் - நிற்கும் எ - று.

தக்க வென்பதற்குப் பகுதி தகு. வெறுக்கை - செல்வம். ஒன்றும் - ஒன்றாயினும், சிறிதும் என்றுரைத்தலுமாம். சூழல் - வனம் என்றலுமொன்று. வற்றல்மரம் - பூத்தல் காய்த்தல் முதலியவையின்றிப் பட்டுப்போன மரம்போல நிற்கும் ஓர்வகை மரம். (உ௪)

மேற்படி வேறு

வளர்கரி நெடுங்கையால் வானந் தோய்சினை
தளர்வொடுள் வளைந்திடுந் தகைமென் கொம்புகள்
களிதரு கரிகர லீலை யாற்கடி
தெளிதினுட் குழைந்திட லியற்கை யன்றுகொல்.

(இ - ள்.) வளர் - வளராநின்ற, கரி - யானைகளின், நெடுங்கையால் - நீண்ட துதிக்கையினால், வானம் - ஆகாயத்தை, தோய் - தொடுகிற, சினை - கிளைகள், தளர்வொடு - தளர்ச்சியோடு, உள் வளைந்திடும் - உட்புறம் வளைகிற, தகை - அழகாகிய, மென்கொம்புகள்-மெல்லிய கிளைகள்,

களிதரு - மகிழ்ச்சியை யுண்டாக்குகிற, கரிகாலன்லையால் - கரிகாலன்லையினால், கடிது - விரைவாக, எளிதின் - எளிதாக, உள் குழைதல்-மனமுருகுதல், இயற்கை யன்றுகொல் - இயற்கையல்லவா எ - று.

கரிகாலன்லையால் மக்கள்மனங் குழைதல் இயற்கையல்லவா, அதுபோல யானைகளின் துதிக்கைகளால் ஆகாயத்தைத் தொடுகிற மரக்கொம்புகள் உள்ளே வளைந்து நிற்கும் என்பது இச்செய்யுட் கருத்து. (உ௩)

விரிசிறைப் புட்குல விருந்து செய்கலா
தருள்பழங் கரிபொர வுதிர்க்கும் வெள்ளில்க
ளிரவலர்க் கீந்திடா வீகை கொண்டுகொல்
லரசர்கள் பெறச்சொரி யறிவி லார்கள்போல்.

(இ - ள்.) இரவலர்க்கு - யாசகர்க்கு, ஈந்திடா - கொடாத, ஈகை - கொடையையுடையவராய், கொல் - கொல்லுகிற, அரசர்கள்பெற - வேந்தர் பெறும்படி, கொண்டு சொரி - கொண்டுபோய்ச் சொரிகிற, அறிவு இல்லார்கள்போல் - அவிவேகிகள் போல, வெள்ளில்கள் - விளாமரங்கள், விரிசிறை - படர்ந்த சிறகுகளையுடைய, புட்குல விருந்து செய்கலாது - பறவைக்கூட்டத்துக்கு விருந்து செய்யாதனவாகி, உருள்பழம் - உருள்வடிவமாகிய தமது கனிகளை, கரிபொர-யானைகள் மோத, உதிர்க்கும் - சிந்துவன எ - று.

இரப்பவர்க்குக் கொடாமல் தம்மை வருத்துகிற அரசர்க்குக் கொடுக்கும் அறிவிலிகள் போல, விளாமரங்கள் தம்மையடுத்த பறவைகளுக்குக் கொடாத தமது பழங்களை, தம்மை யலைக்கிற யானைகள் பெறும்படி உதிர்க்கும் என்பது கருத்து. சிறை - சிறகு. புள் - பறவை. குலம் - கூட்டம், சாதியென்றலுமாம். வெள்ளில்-விளாமரம். சொரிதல்-கொட்டுதல்.

மகவுட லொடுக்கிய வயிற்று மந்திக
ளுகண்மலர்க் கொம்பினின் றொழுகுந் தேறல்வான்
றிகழ்தரு கங்கையுட் டெய்வத் தாமரை
நிகரறு பொலங்கல நிறைக்கு மென்பவே.

(இ - ள்.) மக - தமது குட்டிகளை, உடல் - தமதுடம்பில், ஒடுக்கிய - இடுக்கிக்கொண்ட, வயிற்று - வயிற்றினையுடைய, மந்திகள் - குரங்குகள், உகள் - தாவுகிற, மலர் - புட்பங்களோடு கூடிய, கொம்பில் நின்று - கிளைகளிலிருந்து, ஒழுகும் - ஒழுகாநின்ற, தேறல்-தேனானது, வான்-சுவர்க்கலோகத்தில், திகழ்தரு - விளங்குகிற, கங்கையுள் - சங்காநதியிலுள்ள, தெய்வம் - தெய்வத்தன்மையமைந்த, தாமரை - தாமரைமலராகிய, நிகர் அறு - ஒப்பற்ற, பொலம் கலம் - பொற்கிண்ணத்தை, நிறைக்கும் - நிறைத்துவிடும், என்ப - என்று சொல்லுவர் அறிஞர் எ-று.

மந்தியென்பது குரங்குகட்குப் பொதுப்பெயராயினும் ஈண்டைக் கேற்பப் பெண்குரங்கைக் குறித்தது. உகளல் - தாவுதல். வாண் - ஆகு பெயர், தாமரையும் அது. பொலம்-பொன். கலம்-பாத்திரம் எனினுமாம்.

வேய்த்தலை வானரம் வேழம் பக்குலக்
கூத்தரி னாடிய கூத்த ரம்பையர்
பார்த்தன ரவற்றின்மேற் பரிசின் வீசிய
தூத்திரண் மணிவடஞ் சுடரு மெங்குமே.

(இ - ள்.) வேய்த்தலை - மூங்கிலின் நுனியில், வாநரம் - குரங்குகள், வேழம்பக்குலம் - கழைக்கூத்தச் சாதியில் பிறந்த, கூத்தரின் - கூத்தர் போல, ஆடிய - ஆடின, கூத்து - ஆட்டத்தை, அரம்பையர் - தெய்வப் பெண்கள், பார்த்தனர் - பார்த்து, அவற்றின்மேல்-அந்தக் குரங்குகளின் மேல், பரிசின் - சம்மாநம்போல, வீசிய - எறிந்த, தூ - பரிசுத்தமான, திரள் - திரண்ட, மணிவடம் - மணிவடங்கள், எங்கும் - எவ்விடத்தும், சுடரும் - பிரகாசித்துக் கொண்டிருக்கும் எ-று.

வேய்த்தலை யென்பதில் தலை ஏழனுருபெனினுமாம். வேழம்பர் - கழைக்கூத்தர். பார்த்தனர் - முற்றெச்சம். பரிசு - சம்மாநம் (இநாம்). மணிவடம் - ரத்நமாலிகை. (உஅ)

கலித்துறை

இன்ன வாரண வனத்திடை யெம்பிரான் கண்டு
முன்ன மைந்தடர் வசிட்டமா முனிவினை யறுத்து
மன்னு நன்கதி யடைந்தமை வகுப்பலென் றெறிநீர்ச்
சென்னி யந்தணன் வேந்தனுக் கொருகதை தெரிப்பான்.

(இ - ள்.) இன்ன-இத்தன்மைத்தான, வாரண வனத்திடை-யானைக் காட்டில், எம்பிரான் - எம்பிரானை, கண்டு - பார்த்து, முன்னம் - முற்காலத்தில், மைந்து அடர் - தபோசக்தி மிகுந்த, வசிட்டமாமுனி - வசிட்டமாமுனிவன், வினை அறுத்து - வினையை யொழித்து, மன்னும்-நிலை பெற்ற, நல்கதி அடைந்தமை - நற்கதியடைந்த சரித்திரத்தை, வகுப்பல் என்று - வகுத்துச் சொல்வேனென்று, எறி - அலைவீசுகின்ற, நீர் - கங்கா ஜலத்தைத் தாங்கிய, சென்னி - சிரசையுடைய, அந்தணன் - சிவபிரான், வேந்தனுக்கு - அரசனுக்கு, ஒரு கதை - ஒருகதையை, தெரிப்பான் - தெரிவிக்கலானான் எ-று.

வாரணம் - யானை. வனத்திடை என்பதில் இடை ஏழனுருபு. எம்பிரான் என்பது சிவபெருமானை. மைந்து - வலி. வினை - நல்வினை, தீவினை. இவ்விரண்டும் பிறப்பைத் தருதலால், இவை பொன்விலங்கும் இருப்பு விலங்கும் போல்வன ஆதலால், அறுத்து என்றார். மன்னுதல் - நிலைபெற்

திருத்தல். வகுத்தல் - வகைபடுத்துச் சொல்லுதல். எறிதல் - வீசுதல். எறிநீர்ச்சென்னி என்னும் விசேடணத்தால் அந்தணன் என்றது சிவபெருமானை உணர்த்திற்று. வேந்தன் என்றது யாதவவேந்தனை. (உகூ)

முந்து மாமறை முழுதுணர் வசிட்டமா முனிதான்
றந்த மைந்தர்க ணூற்றுவர் தாவில்சீர்க் காதி
மைந்த னுயிர் துறத்தலின் மனத்தையுள் ளழுத்தி
யுந்து வெந்துயர்க் கடலகத் துணர்வெலா முகுத்தே.

(இ - ள்.) முந்து - எல்லா நூல்களுக்கும் முற்பட்டதாகிய, மா-பெருமைபொருந்திய, மறைமுழுது-எல்லா வேதங்களையும், உணர் - அறிந்த, மா - பெருமையுள்ள, வசிட்டமுனி - வசிட்டமுனிவன், தந்த - பெற்ற, மைந்தர்கள் - புத்திரர்கள், நூற்றுவர்-நூறு பேர்களும், தாவு இல்-கெடுதலில்லாத, சீர் - சிறப்பினையுடைய, காதி - காதியென்னும் அந்தணனது, மைந்தனால் - புத்திரனாகிய விசுவாமித்திரனால், உயிர் துறத்தலின் - உயிர் நீங்கினதனால், மனத்தை - தன் மனதை, உள் அழுத்தி - உள்ளே ஒடுக்கி, உந்து - தன்னை அலைக்கின்ற, வெம் - கொடிய, துயர்-துன்பமாகிய, கடலகத்து - சமுத்திரத்தில், உணர்வு எல்லாம் - தன் அறிவுமுழுதும், உகுத்து - சிந்தி எ-று.

"வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவன் கண்டது" ஆதலால், அதனை முந்துமாமறை என்றார். முந்துமாமறை முழுதுணர் வசிட்டமா முனி என்றதனால், அவரது பெருமை வெள்ளிடை மலைபோல் விளங்கிற்று. காதிமைந்தன் - விசுவாமித்ரன். வெம்துயர்க்கடல் என்றமையால் துன்பமிகுதி விளங்கிற்று. உகுத்தல் - சிந்துதல். (௩0)

மருளு நெஞ்சமுந் தானுமோர் வான்றொடு குடுமி
வரையி லேறிநின் றொய்யென விழுந்தனன் மண்ணி
லரிது பெற்றதம் முடம்பின்மேல் வெறுப்புடை யவரு
மொருவ வல்லரோ மக்கண்மே லுற்றதோர் வேட்கை.

(இ - ள்.) மருளும் நெஞ்சமும் - மருண்ட மனமும், தானும் - தானுமாக, வான்தொடு - ஆகாயத்தைத் தொடுகிற, குடுமி - சிகரத்தையுடைய, ஓர் வரையில் - ஒரு மலைமேல், ஏறி நின்று - ஏறி நின்று, ஒய்யென - விரைவாக, மண்ணில் விழுந்தனன் - தரையின்மீது வீழ்ந்தனன், அரிது பெற்ற - அருமையாய்ப்பெற்ற, தம் - தமது, உடம்பின்மேல் - சரீரத்தின் மீது, வெறுப்பு உடையவரும் - நிராசை யுள்ளவரும், மக்கள்மேல் - பிள்ளைகள்மீது, உற்றது - மிக்கிருப்பதாகிய, ஓர் வேட்கை - ஒப்பற்ற விருப்பத்தை, ஒருவவல்லரோ - நீக்கமாட்டுவரோ எ-று.

மருளல் - பிரமித்தல். நெஞ்சு - மனம். இது அம் சாரியை பெற்று நெஞ்சம் என்றாயிற்று. இங்கு உடம்பு என்றது மானிட சரீரத்தை. "எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிது காண்" "எறியுங்கடலி னுகத் தொளையில் யாமைக்கழுத்துப் புகுவது போல், பொறிவெம் பிறவி யநேகத்தாற் புருடன் விவேகியெனப் பிறந்து" என மேலோர் கூறுதலுங் காண்க. ஒருவல் - நீக்கல். வல்லரோ வென்னும் ஓகாரம் எதிர்மறை. (௩௪)

**வீழும் வேலையின் மணிகொழித் தெறிதிரை வேலை**
**சூழு மாநில மடந்தைதன் றுணைக்கையா லேந்தி**
**யாழு மாரஞர்க் கடலினின் றகற்றுநற் கேள்வித்**
**தாழும் வார்சடை முனிவர நினக்கிது தகவோ.**

(இ - ள்.) வீழும் வேலையில் - விழுகிற சமயத்தில், மணி - ரத்நங்களை, கொழித்து - தெள்ளி, எறி - வீசுகிற, திரை - அலைகளையுடைய, வேலை - கடலானது, சூழும் - வளைந்த, மா - பெரிய, நிலமடந்தை - பூதேவியானவள், தன் - தனது, துணைக்கையால் - இருகையாலும், ஏந்தி - தாங்கி, ஆழும் - ஆழ்ந்த, ஆர் - நீக்குதற்கரிய, அஞர்கடலில் நின்று - துக்கசாகரத்தில் நின்று, அகற்றும்-நீக்குதற்குரிய, நல்கேள்வி - சிறந்த நூற்கேள்வியையும், தாழும் - தொங்குகிற, வார்சடை - நீண்ட சடையையுமுடைய, முனிவர - முனிசிரேஷ்டனே, இது - இந்தக் காரியஞ் செய்தல், நினக்கு தகவோ - உனக்குத் தகுதியாமோ எ - று.

வீழும் வேலை யென்பதற்கு விழுகிற எல்லையில் எனினுமாம். திரை - ஆகுபெயர். மடந்தை - பருவங் குறியாது பெண்பொதுமைக் குறித்தது. துணை - இரண்டு. ஆழ்தல் - அழுந்தல். அஞர் - துக்கம். நல்கேள்வி - வேதாந்த சாத்திர சிரவணம். தாழ்தல் - தொங்குதல். தகவோ வென்னு மோகாரம் எதிர்மறை. (௩௫)

**மலையி லேறிமண் வீழ்தரின் மாளுமோ துன்பங்**
**கலைகு றைந்தவெண் மதிமுடிக் கடுக்கையங் கண்ணித்**
**தலைவ னாருள் பெறுதியேற் றுன்பமுந் தணப்பை**
**தொலைவின் முத்தியும் பெறுகுவை யாதலாற் றூயோய்.**

(இ - ள்.) மலையில் ஏறி - மலைமீதேறி, மண் - தரையில், வீழ்தரின் - விழுந்தால், துன்பம் - துக்கம், மாளுமோ - கெடுமோ, கலைகுறைந்த - கலைகள் குறைந்த, வெள்மதி - வெள்ளிய சந்த்ர கண்டத்தையுடைய, முடி - சடாபாரத்தையும், கடுக்கை - கொன்றைமலரால் தொடுக்கப்பட்ட, அம் - அழகிய, கண்ணி - மாலையையுமுடைய, தலைவன் - சிவபெருமானது; ஆர் - பெறுதற்கரிய, அருள் - திருவருளை, பெறுதியேல் - பெறுவையாயின், துன்பமும் - துக்கத்தையும், தணப்பை - நீக்குவை, தொலைவு இல்

அழிவில்லாத, முத்தியும் - வீடு பேற்றையும், பெறுகுவை - அடைவாய், ஆதலால் - ஆகையால், தூயோய் - பரிசுத்தனே எ - று.

வீழ்தரின் என்பதற்குப் பகுதி வீழ்தா. மாளுமோவென்னு மோகாரம் எதிர்மறை. கலைகுறைந்த வெண்மதியென்றது ஒரு கலையாகிய சந்த்ர கண்டத்தை. கடுக்கை - ஆகுபெயர். தணத்தல் - நீக்குதல். (௩௩)

அடியர் வேண்டிய வேண்டியாங் கருளிருண் மிடற்றுக்
கடிகொள் கொன்றையஞ் செஞ்சடைக் கடவுளை நோக்கி
யொடிவின் மாதவஞ் செய்தியென் றுரைத்தனள் முனிவ
னெடிய வெந்துய ரளக்கரி னீந்திநன் றென்றான்.

(இ - ள்.) அடியர் - தன்னடியவர், வேண்டிய - விரும்பினவற்றை, வேண்டியாங்கு - விரும்பினபடியே, அருள் - அருள் செய்கிற, இருள் மிடறு - நீலகண்டத்தையும், கடிகொள் - மணத்தைக் கொண்டிருக்கிற, கொன்றை - கொன்றைமலர் மாலையை யணிந்த, செஞ்சடை - செவந்த சடாபாரத்தையுமுடைய, கடவுளை - சிவபெருமானை, நோக்கி - பார்த்து, ஒடிவு இல் - அழி வில்லாத, மாதவம் - பெரிய தவத்தை, செய்தியென்று - செய்யக் கடவை யென்று, உரைத்தனள் - சொல்லினள், முனிவன் - (அது கேட்ட) வசிட்டமுனிவனும், நெடிய - பெரிய, வெம் - வெப்பமாகிய, துயர் - துன்பமாகிய, அளக்கரில் நீந்தி - கடலில் நீந்திக் கரையேறி, நன்று என்றான் - நல்லது ஆகட்டுமென்றான் எ - று.

இருள்மிடறு என்றது விஷகண்டத்தை. கடி - மணம். கொன்றை - ஆகுபெயர். ஒடிவு - அழிவு. அளக்கர் - கடல். (௩௪)

கண்ணகன் கட லுடைப்பெரு நிலத்திடைக் கவின்ற
புண்ணி யத்திரு வனத்தினுண் மேலெனப் புகன்றே
தண்ணென் மென்புனல் வேட்டெழு கலையெனத் தரியா
னண்ண லங்களிற் றடவியை யடைந்தன னன்றே.

(இ - ள்.) கண் அகன் - இடமகன்ற, கடல் உடை - கடல் சூழப்பெற்ற, பெருநிலத்திடை - பெரிய நிலவுலகில், கவின்ற - அழகாகிய, புண்ணியம் - புண்யரூபமாகிய, திருவனத்தினுள் - திருக்காட்டினுள்ளே, மேல்எனப் புகன்று - மேலானதென்று சொல்லி, தண்என் - தண்ணென்கிற, மெல்புனல் - மெல்லிய நீரை, வேட்டு-விரும்பி, எழு - தாவிச் செல்லுகிற, கலையென - மான்போல, தரியான்-தரிக்காதவனாய், அண்ணல் - பெரிதாகிய, அம் - அழகாகிய, களிறு அடவியை - யானைக்காட்டை, அடைந்தனன் - சேர்ந்தனன் எ-று.

அன்று ஏ அசைகள். கண் - இடம். கவின்ற - கவின் என்னும் பெயரடியாய்ப் பிறந்த பெயரெச்சம். புகலல் - சொல்லல். தரித்தல் - தங்கு

தல். அடவி - வடசொல், காடு என்பது பொருள். களிறு - யானைப் பொதுவைக் குறித்தது. (உ௰)

அடைந்த மாமுனி சிறந்துழி யகனமர்ந் திருந்து
கடும்பு லப்பகை யைந்தையுங் கொன்றுபூங் கடுக்கை
மிடைந்த செஞ்சடை யந்தணன் றிருவடி விடாது
தொடர்ந்த நெஞ்சின னாகியூண் யாவதுந் துறந்து.

(இ - ள்.) அடைந்த - (காட்டைச்சேர்ந்த) மாமுனி - பெருமைபொருந்திய வசிட்டமுனிவன், சிறந்த உழி - மேலான ஓரிடத்தில், அகன் அமர்ந்து இருந்து - மனம் பொருந்தியிருந்து, கடும்புலப்பகை ஐந்தையும் - கடுமையாகிய புலப்பகை யைந்தனையும், கொன்று - வென்று, பூ - அழகாகிய, கடுக்கை - கொன்றை மாலையை, மிடைந்த - சூடின, செஞ்சடை - செவந்த சடாபாரத்தையுடைய, அந்தணன் - சிவபெருமானது, திருவடி - ஸ்ரீபாதத்தை, விடாது - விடாமல், தொடர்ந்த நெஞ்சினன் ஆகி - பற்றின மனத்தையுடையவனாகி, ஊண்யாவதும் துறந்து - உணவு முழுதும் விட்டு எ - று.

சிறந்த உழியெனற்பாலது சிறந்துழியென நிலைமொழி யீற்றகரம் தொகுத்தல் பெற்றது. புலப்பகை யைந்தென்றது சத்தபரிச ரூபரச கந்தங்களை. பிறவிக்குக் காரணமாதலால் அவற்றைப் பகையென்றார். கடுக்கை - ஆகுபெயர். ஊண் முதனிலைத் தொழிலாகுபெயர். துறத்தல் - விடுதல். (உ௧)

கனலி வெங்கதிர் பெருமழை குளிர்பனி கடுங்கால்
சினவி லங்கென விவற்றினால் வருந்துயர் சிறிது
நினைத லின்றிமூச் சவித்தசை வகன்றுபன் னெடுநாள்
வினைநெ டுந்தவ முழந்தனன் யாவரும் வியப்ப.

(இ - ள்.) கனலி - நெருப்பு, வெங்கதிர் - வெப்பமாகிய சூரியன், பெருமழை - பெரிய மழை, குளிர் - குளிர், பனி - பனி, கடுங்கால் - பெருங்காற்று, சினவிலங்கு - கோபத்தையுடைய மிருகம், என - என்று சொல்லப்படுகிற, இவற்றினால் - இவைகளால், வரும் - உண்டாகிற, துயர் - துன்பத்தை, சிறிதும் - சற்றும், நினைதல் இன்றி - நினைத்தலில்லாமல், மூச்சு அவித்து-வாயுவையடக்கி, அசைவு அகன்று - சலனமற்று, பல் நெடுநாள் - அநேக நாளாய், யாவரும் வியப்ப - எல்லாரும் அதிசயிக்கும்படி, நெடுந்தவம் வினை உழந்தனன் - பெரிய தவத்தொழிலை மேற்கொண்டான் எ - று.

கனலல் - சுடுதல். அதனை யுடையதாதலால் நெருப்புக்குக் கனலியெனப் பெயராயிற்று. கதிர் - சூரிய சந்திரர்களுக்குப் பொதுப்பெயரா

யினும் வெம்கதிர் என்றதனால் சூரியனையுணர்த்திற்று. குளிர்பனி யென்பதற்குக்குளிர்ந்த பனியென் றுரைத்தலுமாம். சினம் - கோவம். (௩எ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

சொன்னவிவ் வகையி னோற்குந் தூயவற் கருளல் வேண்டி
முன்னவன் பணைப்பெ ருந்தோண் முத்துறழ் முறுவற் செவ்வா
யன்னமுங் குடவ யிற்றி னைந்துகைக் களிற்றுக் கன்றும்
பன்னிரு தடந்தோட் சேயும் பரிசன கணமு மின்றி.

(இ - ள்.) சொன்ன - சொல்லப்பட்ட, இவ்வகையின் - இவ்விதமாக, நோற்கும் - நோற்கிற, தூயவற்கு - பரிசுத்தனாகிய வசிட்டமுனிவனுக்கு, அருளல் வேண்டி - அருள்செய்ய விரும்பி, முன்னவன் - சிவபெருமான், பணை - மூங்கிலை நிகர்த்த, பெருந்தோள் - பெரிய தோள்களையும், முத்து உறழ் - முத்தினை நிகர்த்த, முறுவல் - பல்லையும், செவ்வாய் - செவ்வாயையுமுடைய, அன்னமும் - உமாதேவியும், குடவயிற்றின் - குடம்போலும் வயிற்றினோடு, ஐந்து கை - ஐந்து கைகளையுடைய, களிற்றுக் கன்றும் - யானைக்கன்றும், தடம் - பெரிய, பன்னிருதோள் - பன்னிரு புயங்களையுடைய, சேயும் - முருகவேளும், பரிசன கணமும் - பரிசன சமூகமும், இன்றி - இல்லாமல் எ - று.

யாவர்க்கும் முதல்வனாதலால் சிவபிரானை முன்னவன் என்றார். அன்னம் அடையடுத்த உவமை யாகுபெயர். ஐந்துகைக் களிற்றுக் கன்று என்றது விநாயகரை. தடம்தோள் என்பதற்கு மலைபோன்ற தோள் எனினுமாம் பரிசனம் - பரிவாரம். (௩அ)

அருமணிச் சுடிகை யைவா யாடர வுருவத் தோடு
பரசிவ லிங்க மாகிப் படுபுன லிறைவன் றிக்குத்
திருமுக மாய கத்துத் திமிரமுங் கெடவி ளங்கி
விரிசுடர்க் கனலி தன்முன் மின்மினி யாக நின்றான்.

(இ - ள்.) அருமணி - அருமையாகிய ரத்நத்தையுடைய, சுடிகை - உச்சியைக் கொண்டு, ஐவாய் - ஐந்து வாயுடனும், ஆடு அரவு - ஆடுகிற பாம்பினது, உருவத்தோடும் - வடிவத்துடனும், பரசிவலிங்கம் ஆகி - மேலான சிவலிங்கமாகி, படுபுனல் இறைவன் - உண்டாகிய நீர்க்கரசனது, திக்கு - திசையே, திருமுகமாய் - திருமுகமாகப் பெற்று, அகத்து திமிரமும்கெட - மனத்திருளும் அழிய, விளங்கி - பிரகாசித்து, விரிசுடர் - பரந்த ஒளியையுடைய, கனலி - அக்கினி, தன்முன் - தனக்கெதிரே, மின்மினி ஆக நின்றான் - மின்மினிபோல ஒளிமழுங்கும்படி நின்றான் எ - று.

ஐவாயரவு என்றது ஐந்தலைநாகம் என்றவாறு. பரம் - மேன்மை. புனலிறைவன் என்றது சமுத்திர ராஜனை. அகம் - மனம். திமிரம் - இருளென்னும் பொருள் படுமோர் வடசொல். மின்மினி - ஓர் வகைப் பூச்சி. இதனை கத்யோதம் என்பர் வடநூலார். கச்சோதம் என்பர் தமிழர். சிவபெருமான் வசிட்டமுனிவருக் கருள்செய்யும் பொருட்டுச் சிவலிங்க ரூபமாய் அவருக்குப் பிரத்தியக்ஷமாயினரென்பது கருத்து. (௯௯)

**கண்ணுத லண்ணா னிற்பக் காண்டர லோடு நெஞ்சந்**
**துண்ணென நடுந டுங்கித் தொகுமயிர் சிலிர்த்தெ ழுந்து**
**மண்ணிடை வளிபெ யர்த்த மரமெனத் தாழ்ந்து முக்கட்**
**பண்ணவ னெழுக வென்னப் பயமொரீஇ யெழுந்து நின்று.**

(இ - ள்.) கண்ணுதல் - நெற்றிக் கண்ணையுடைய, அண்ணல் - சிவபெருமான், நிற்ப - நிற்க, காண்டரலோடும் - கண்டவுடனே, நெஞ்சம் - மனம், துண்ணென நடுநடுங்கி - துண்ணென்று மிகவும் நடுங்கி, தொகும் - திரட்சியாகிய, மயிர் சிலிர்த்து - உரோமம் சிலிர்த்து, எழுந்து - எழுந்து, வளிபெயர்த்த - காற்றினால் பெயர்க்கப்பட்ட, மரம் என - மரம்போல, மண்ணிடை தாழ்ந்து - தரையில் வீழ்ந்து வணங்கி, முக்கண் பண்ணவன் - சிவபெருமான், எழுக என்ன - எழக்கடவை யென்று சொல்ல, பயம் ஒரீஇ - அச்சம் நீங்கி, எழுந்து நின்று - எழுந்து நின்று எ-று.

கண்ணுதல் என்பதனை முன்பின்னாக மாற்றிப் பொருளுரைக்கப் பட்டது. அண்ணல் - பெரியோன். கண்ணுதலண்ணல் என்றதனால் சிவபெருமானைக் குறித்தது. நடுநடுங்கி யென்னும் அடுக்கு மிகுதிப் பொருட்டு. இடை ஏழனுருபு. முக்கண் என்ற விசேடணத்தால் பண்ணவன் என்றது சிவபெருமானைக் குறித்தது. ஒரீஇ - சொல்லிசை யளபெடை (௱)

**கையிணை யுச்சி கூப்பிக் கண்களி னருவி பாய**
**வெய்யசெந் தழலிற் பட்ட மெழுகென வுருக நெஞ்சம் [ய்ந்த**
**பொய்யில்வாய் குழறக் கொன்றைப் பொலமலர்க் கண்ணி வே**
**செய்யவார் சடில முக்கட் செல்வனைப் பழிச்ச லுற்றான்.**

(இ - ள்.) கை இணை - இரண்டு கைகளையும், உச்சிகூப்பி - உச்சியிற் குவித்து, கண்களின் - விழிகளினின்றும், அருவிபாய - நீரருவிபாய, வெய்ய - வெப்பமாகிய, செந்தழலிற்பட்ட - செவந்த நெருப்பில் வீழ்ந்த, மெழுகு என - மெழுகுபோல, நெஞ்சம் உருக - மனமுருகும்படி, பொய் இல் - பொய்யில்லாத, வாய் - வாயானது, குழற - குழறுநிற்க, பொன் - பொன்போலும், கொன்றைமலர் கண்ணி - கொன்றைமலர் மாலையை, வேய்ந்த - சூடின, செய்ய - செவந்த, வார் - நீண்ட, சடிலம் - சடாபாரத்தையும், முக்கண் - மூன்று கண்களையுமுடைய, செல்வனை - சிவபெருமானை, பழிச்சல் உற்றான் - துதிக்கத் தொடங்கினான் எ - று.

அருவி - கண்ணீர்ப் பெருக்கு. மெய்யன்றிப்பேச வறியாத வாய் என்றற்கு பொய்யில்வாய் என்றார். வேய்தல் - சூடுதல். எல்லாவுலகங் களையுமுடைய பெருஞ்செல்வ னாதலால் சிவபிரானைச் செல்வனென்றார்.

மேற்படி வேறு

இம்மா நிலத்தோர் நின்னொடுவைத் தெண்ணப் பட்ட திருமாலுஞ்
செம்மா மலரி னரசிருக்குந் தேவு மறியப் படாயென்றா
லம்மா பிறவி நெடுங்கடல்வா யலமந் தறிவு கெட்டுழலு
மெம்மா லறிதற் கெளியாயோ வெரியோ டாடும் பெரியோயே.

(இ - ள்.) எரியோடு ஆடும் - அனலோடு ஆடுகிற, பெரியோயே - பெரியோனே, இம் மாநிலத்தோர் - இந்தப் பெரிய நிலவுலகத்தாரால், நின்னொடுவைத்து எண்ணப்பட்ட - உன்னோடு வைத் தெண்ணப்படுகிற, திருமாலும் - விட்டுணுவினாலும், செம்மாமலரில் - பெருமை பொருந்திய செந்தாமரை மலரில், அரசு இருக்கும் - அரசு வீற்றிருக்கிற, தேவும் - பிரமதேவனாலும், அறியப்படாய் என்றால் - அறிய வொண்ணாயானால், அ - அந்த, பிறவி - பிறப்பாகிய, நெடுங்கடல் வாய் - நெடுங்கடலில், அலமந்து - சுழன்று, அறிவு கெட்டு உழலும் - உணர்வழிந் துழலாநின்ற, எம்மால் - எங்களால், அறிதற்கு - உணரப்படுதற்கு, எளியாயோ - நீ யெளியையோ எ-று.

செம்மாமலரி னரசிருக்கும் என்ற விசேடணத்தால் தே என்றது பிரமனை யுணர்த்திற்று. எளியாயோ வென்னும் ஓகாரம் எதிர்மறை.(௬௨)

எல்லாக் கலைக்கு முதலாகி
யாவுந்தரிக்கும் பொய்ப் பொருண்மை
புல்லாப் பொருளி னருமறைக்கும்
புகழ்தற் கெளியை யல்லையென்றாற்
கல்லாக் கழிமா மடனுடையேங்
கண்டாங் குரைக்குஞ் சிறுபுன்மைச்
சொல்லாற் புகழ்தற் கெளியாயோ
துறந்தோ ருளத்திற் சிறந்தோயே.

(இ - ள்.) துறந்தோர் - பற்று விட்டவரது, உளத்தில் - மனத்தில், சிறந்தோயே - சிறந்திருப்பவனே, எல்லாக் கலைக்கும் - எல்லா நூல்களுக்கும், முதலாகி - முதனூலாகி, யாவும் - எல்லாவற்றையும், தரிக்கும் - தாங்குகிற, பொய்ப் பொருண்மை - பொய்ப்பொருளுடைமையை, புல்லா - பொருந்தாத, பொருளின் - பொருளினையுடைய, அருமறைக்கும் - அருமையாகிய வேதங்களுக்கும், புகழ்தற்கு - தோத்திரம் பண்ணுதற்கு, எளியை அல்லை யென்றால் - நீ யெளியை யல்லை யெனில், கல்லா - அறிவு

நூல்களைக் கற்றறியாத, கழிமா-மிக்க, மடன் உடையேம்-அறியாமை யுடையேங்கள், கண்டாங்கு உரைக்கும் - கண்டபடியே சொல்லும், சிறு புன்மைச் சொல்லால்-சிறிய புன்சொற்களால், புகழ்தற்கு - துதித்தற்கு, எளியாயோ - எளியையோ எ-று.

வேதத்தினருமை தோன்ற "எல்லாக் கலைக்கு முதலாகி யாவுந் தரிக்கும் பொய்ப் பொருண்மை, புல்லாப் பொருளி னருமறை" என்றார். துறந்தோர் - அகப்பற்று புறப்பற்றுக்களை விட்டவர். யான் என்பது அகப்பற்று. எனது என்பது புறப்பற்று. சிறந்திருத்தலாவது மகிழ்ந் திருத்தல். (சங)

உடம்பு முதலாந் தொடர்பனைத்து
மொழித்துப் புலன்கள் கரந்துமன
மடங்கி யருநோன் புழந்தவர்க்கு
மடைதற் கரிமை யென்றக்கா
லொடுங்க லில்லா வவாக்கடலு
ளுய்க்கும் புலத்துக் காட்பட்டேந்
தொடர்ந்து பெறுதற் கெளியாயோ
தொலையாக் கயிலை மலையோயே.

(இ - ள்.) தொலையா - அழியாத, கயிலைமலையோயே - கயிலைமலையை யுடையோனே, உடம்பு முதல் ஆம் - சரீரமுதலாகிய, தொடர்பு அனைத்தும் ஒழித்து - தொடர்ச்சி முழுதும் நீக்கி, புலன்கள் கரந்து - புலன்களை யொடுக்கி, மனம் அடங்கி - மனமடங்கப் பெற்று, அரு - அருமையாகிய, நோன்பு உழந்தவர்க்கும் - தவஞ் செய்தவர்க்கும், அடைதற்கு அரிமை என்றக்கால் - பெறுதற் கரியையெனின், ஒடுங்கல் இல்லா - சுருங்காத, அவாகடலுள் - ஆசையாகிய சமுத்திரத்தில், உய்க்கும் - தள்ளுகிற, புலத்துக்கு - புலன்களுக்கு, ஆள்பட்டேம் - ஆளானோம், தொடர்ந்து பெறுதற்கு - பற்றிப்பெறுதற்கு, எளியாயோ - எளியையோ எ-று.

புலன்கள் - ஐம்புலன்கள். அவை சத்த பரிச ரூப ரச கந்தங்கள். தவத்தினருமைதோன்ற அருநோன்பு என்றார். உய்த்தல் - தள்ளுதல். ஆட்படுதல் - அடிமைப்படுதல் மேலைச் செய்யுளிலும் இச் செய்யுளிலும் உள்ள வோகாரங்கள் எதிர்மறை. (சச)

கலிவிருத்தம்

எனப்ப ழிச்ச விறைவன் கருணைகூர்ந்
தினக்கு வேண்டிற் றுதவுதுஞ் சொல்கென
மனத்த டக்கரு மாமகிழ் வெய்தினன்
சினக்க ளிற்றுரிச் செம்மற் குரைசெய்வான்.

(இ - ள்.) எனப்பழிச்ச - என்று துதிக்க, இறைவன் - சிவபிரான், கருணைகூர்ந்து - அருள் மிகுந்து, உனக்கு வேண்டிற்று - உனக்கு வேண்டியதை, உதவுதும் - கொடுப்போம், சொல்க என - சொல்லக் கடவையென்று சொல்ல, (கேட்ட வசிட்டமுனிவன்) மனத்து - தன் மனத்தில், அடக்க அரு - அடக்குதற் கரிதாகிய, மாமகிழ்வு - பெருமகிழ்ச்சியை, எய்தினன் - அடைந்தவனாகி, சினம் - கோவத்தையுடைய, களிற்று உரி - யானைத்தோலையுடுத்த, செம்மற்கு - சிவபிரானுக்கு, உரை செய்வான் - சொல்வானாயினன் எ-று.

பழிச்சல் - துதித்தல். கூர்தல் - மிகுதல். எய்தினன் முற்றெச்சம். உரி - தோல். செம்மல் - பெருமையிற் சிறந்தோன். (சஙு)

பத்தி நாறரும் பாறைம னத்தென்மேல்
வைத்த பேரரு ளாலெளி வந்தவிவ்
வித்த கத்திரு மேனியொ டென்றுநீ
யித்த லத்தி லிருப்பது வேண்டினேன்.

(இ - ள்.) பத்தி - பக்தியானது, நாறரு - தோன்றுதற் கரிதாகிய, பாறை - கருங்கற்பாறை போன்ற, மனத்து - மனத்தையுடைய, என் மேல் வைத்த - என்மீது வைத்த, பேரருளால் - பெருங்கருணையால், எளிவந்த - எளிதாயெழுந்தருளின, இ-இந்த, வித்தகம் திருமேனியொடு - ஞானமாகிய திருமேனியோடு, என்றும் - எந்நாளும், நீ - தேவரீர், இத்தலத்தில் இருப்பது - இந்தத்தலத்திலெழுந்தருளியிருப்பதை, வேண்டினேன் - விரும்பினேன் எ-று.

நாறல் - தோன்றல். எளிவரல் - எளிதாய் வரல். வித்தகம்-ஞானம். நீ யித்தலத்தி லிருப்பது வேண்டினேன் என்றமையால் வேறொன்றும் வேண்டிலேன் என்றதாயிற்று. (சசா)

தேங்கு பேரருட் செல்வ வதான்றுநீ
யோங்கு தத்துவ முள்ளவெ லாங்கடந்
தாங்கு நின்ற வசைவி னிலைமைகாண்
வீங்கு ஞான மும் வேட்டன னென்றனன்.

(இ - ள்.) தேங்கு - மிக்க, பேரருள் - பெருங் கருணையையுடைய, செல்வ - செல்வனே, அதான்று - அதுவேயுமன்றி, நீ - நீ, ஓங்கு - உயர்ந்த, தத்துவம் உள்ளவெல்லாம் கடந்து - தத்துவங்களாயுள்ளவற்றையெல்லாந் தாண்டி, ஆங்கு நின்ற - அவ்விடத்தே நின்ற, அசைவு இல் - சலநமற்ற, நிலைமை - நிலைமையாம், (அதனோடு) வீங்கு ஞானமும் - மிகுந்த ஞானத்தையும், வேட்டனன் என்றனன் - விரும்பினேனென்று சொன்னான் எ-று.

தேங்குதல் - மிகுதல். அறுவகைச் செல்வங்களையு மொருங்கே யுடையவனாதலால் செல்வ என்றார். தத்துவம் - உண்மைப்பொருள்.

இறைவனுக்குப்போல அவற்றிற்கும் நித்யத்வம் உண்டாதலால் அவற்றைத் தத்துவம் என்பர். வீங்குதல்-மிகுதல். வேட்டல் - விரும்பல். ()

அண்ண லவ்வுரை கேட்டலு மன்ப நீ
யெண்ணி யாங்கா கெனவங் கிருந் துபின்
விண்ணு யர்ந்த வியன்சிலை யாலடித்
தெண்ணி லாச்சடைத் தென்றிசை மூர்த்தியாய்.

(இ - ள்.) அண்ணல் - சிவபெருமான், அவ்வுரை கேட்டலும் - அச்சொல்லைக் கேட்டவுடனே, அன்ப - அன்பனே, நீ - நீ, எண்ணியாங்கு - நினைத்தபடியே, ஆக என - ஆகக்கடவதென்று திருவாய் மலர்ந்தருளி, அங்கு இருந்து - அவ்விடத் தெழுந்தருளியிருந்து, பின் - பிறகு, விண் உயர்ந்த - ஆகாயத்தளவும் உயர்ந்த, வியன் - பெரிய, சிலை ஆல் அடி - கல்லால மரத்தின்கீழ், தெள் - தெளிவாகிய, நிலாசடை - சந்த்ர சடாதாரியாகிய, தென்றிசைமூர்த்தியாய் - தக்ஷிணமூர்த்தியாகி எ-று.

எண்ணிய ஆங்கு எனற்பாலது எண்ணியாங்கெனத் தொகுத்தல் பெற்றது. ஆக என என்பதும் அதனையே பெற்றது. சிலை - கல். சிலை ஆல் - கல்லால். (௬அ)

வீற்றி ருந்து விரைமலர் தூயடி
போற்றி நின்ற புனிதமா ணாக்கனை
யேற்ற ஞாங்க ரிருத்தி மனங்கொளச்
சாற்ற ரும்பொருள் சாற்றுதன் மேயினான்.

(இ - ள்.) வீற்றிருந்து - எழுந்தருளியிருந்து, விரை - மணமுள்ள, மலர்தூய் - புட்பங்களைத் தூவி, அடி - தன் திருவடியை, போற்றிநின்ற - வணங்கிநின்ற, புனிதம் - பரிசுத்தனான, மாணாக்கனை - சீடனை, ஏற்ற ஞாங்கர் - தகுந்த இடத்தில், இருத்தி - உட்காருவித்து, மனம் கொள - அவனது மனமேற்கும்படி, சாற்றரும் பொருள் - சொல்லுதற் கரிதான பொருளை, சாற்றுதல் மேயினான் - சொல்லத் தொடங்கினான் எ-று.

தூவியென்றது அர்ச்சித்தென்றபடி. ஏற்றஞாங்கர்-ஏகாந்தஸ்தானம். சாற்றரும் பொருள் என்றது வாயினாற் சொல்லாமல் கைகாட்டி யுணர்த்தும் பொருள். அது "கல்லாலி னீழறனி லொருநால் வர்க்கும் கடவுணீ யுணர்த்துவதுங் கைகாட் டென்றால், சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந்தன்மை துரும்புபற்றிக் கடல்கடக்குந் துணிபேயன்றோ" "கல்லாலின் புடையிருந்து நான்மறையா றங்கமுதற் கற்றகேள்வி, வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய், எல்லாமாயல்லவுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச், சொல்லாமற் சொன்னவரை நினையாம னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்", என இத்யாதி வாக்கியங்களால் இனிது விளங்கும். (௬௯)

பிறத்தல் சாதல் பெருகல் சுருங்கலே
துறத்தல் கூட றுயர்தல் களித்தலே
வெறுத்தல் வேண்டல் வெகுள லுவத்தலே
மறத்த லுள்ளன் மயங்க றெளிதலே.

(இ - ள்.) பிறத்தல் சாதல் - பிறத்தலும் இறத்தலும், பெருகல் சுருங்கல் - பெருகுதலும் சுருங்குதலும், துறத்தல் கூடல் - விடுதலும் சேர்தலும், துயர்தல் களித்தல் - துன்பப்படுதலும் மகிழ்தலும், வெறுத்தல் வேண்டல் - வெறுத்தலும் விரும்புதலும், வெகுளல் உவத்தல் - சினத்தலும் உவத்தலும், மறத்தல் உள்ளல் - மறத்தலும் நினைத்தலும், மயங்கல் தெளிதல் - மயங்குதலும் தெளிதலும் எ-று.

இவற்றிற்கு முறையே பகுதிகளாவன:— பிற, சா, பெருகு, சுருங்கு, துற, கூடு, துயர், களி, வெறு, வேண்டு, வெகுள, உவ, மற, உள், மயங்கு தெளி என்பன. (௩௦)

இனைய பல்குண மின்றியி யற்கையாய்
வினையி னீங்கி விளங்கிய ஞானமாய்
நினைவ ரும்பர மானந்த நித்தமாய்த்
தனைய றிந்தவர் தங்கட் கபேதமாய்.

(இ - ள்.) இனைய - இத்தன்மையவான, பல்குணம் இன்றி - பல குணங்களில்லாமல், இயற்கையாய் - இயல்பாய், வினையின் நீங்கி - வினையினின்று நீங்கி, விளங்கிய - பிரகாசித்த, ஞானமாய் - அறிவுருவாய், நினைவு அரு - நினைத்தற் கரிதாகிய, பரமாநந்த நித்தமாய் - பேரின்பப் பெருக்காய், தன்னை அறிந்தவர் தங்கட்கு - தன்னைத்தா னறிந்தவர் கட்கு, அபேதமாய் - பேதமற்றதாய் எ-று.

இயற்கை - ஒன்றானு மாறுபடாமை. வினை - நல்வினை, தீவினைகள். இவற்றை வடநூலார் ஸத்கர்மம் துஷ்கர்மம் என்பர். பரமம் ஆநந்தம் - மேலான இன்பம், (பேரின்பம்.) நித்தம்-அழியாதது. தன்னை யின்னதென்று தெரிந்துகொண்டவரைத் தன்னைத்தா னறிந்தவர் என்றது ஆன்ம ஞானிகளை. "நானுமென் னுள்ளமார் ஞானங்களா ரென்னை யாரறிவார்" "தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல், பின்னையத் தலைவன்றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத்தீர்வன்" இத்யாதிகளால் இவ்விடயம் விசதம். பேதம் - வேறுபாடு. அபேதம் - வேறுபாடின்மை. (௩௧)

பூவி னுண்மணம் போலுல கெங்கணு
மேவி நிற்பினும் வேறு யுயிர்த்தொகைக்
கோவின் மெய்யு மொழிந்தவுந் தக்கவா
மேவு தாயொருங் கியாவு முணர்வதாய்.

(இ - ள்.) பூவினுள் மணம்போல் - மலர் மணம்போல, உலகு எங்கணும் - உலகத்தினெவ்விடத்திலும், மேவிநிற்பினும் — பொருந்தி யிருந்தாலும், வேறு ஆய் - அவற்றிற்கு வேறாகி, உயிர்த்தொகைக்கு - சீவராசிகளுக்கு, ஓவு இல் - நீங்காத, மெய்யும் - உடம்பும், ஒழிந்தவும் - மற்றையவும், தக்கவாறு - அவ்வவற்றிற்குத் தகுந்தவிதமாக, ஈவதாய் - கொடுப்பதாய், ஒருங்கு - ஒருங்கே, யாவும் - எல்லாவற்றையும், உணர்வதாய்-அறிவதாகி எ-று.

யாவு முணர்வது ஸர்வஜ்ஞத்வம் (முற்றுணர்ச்சி). உலகெங்கணு மேவிநிற்றல் முதலியவை ஸர்வாந்தர்யாமித்வ முதலியவை. இவற்றை விரிக்கின் மட்டின்றிப் பெருகு மாதலால் நிறுத்தப்பட்டது. (௩௨)

ஆதி வேதமுஞ் சொல்லற் கரியதோர்
சோதி யாய்மன முந்தொட ராததாய்
மீது யர்ந்ததன் றன்மையு மெய்தனக்
கேதந் தீர்தன திச்சையி னுயதும்

(இ - ள்.) ஆதிவேதமும் - முதன்மையாகிய வேதங்களும், சொல்லற்கு - (இத்தன்மைத்தென்று) சொல்வதற்கு, அரியதோர் சோதியாய் - அருமையான வொப்பற்ற ஒளியாய், மனமும் தொடராததாய் - மனத்தாலும் பற்றவொண்ணாததாய், மீது உயர்ந்த - மேலேயுயர்ந்த, தன் தன்மையும் - தன் சுபாவமும், மெய்தனக்கு - சரீரத்துக்கு, ஏதம் தீர் - துன்பமுண்டாதல், தனது இச்சையினுயதும் - தன் இச்சையாலானதும் எ - று.

"விமலமுதற் குணமாதி நாற்றெட்டென்று வேத மெடுத்தெடுத்துரைத்த விருத்திக்கேற்க வமையு மிலக்கண வடிவாயதுவும் போதா தப்பாலுக்கப்பாலாய்" என்ற மேலோர் வாக்கியத்தை யடியொற்றி, 'ஆதிவேதமும் சொல்லற்கு அரியதாய்' என்றார். சோதி - ஜ்யோதியென் னும் வடசொற் றிரிபு. (௩௩)

மாயை மூன்றினு மாயிரு ஞாலமுன்
னுய தத்துவ மெல்லா மமைத்தலுந்
தூய சத்தி விளங்கிய தொல்லுயிர்க்
கேயு முத்தி யளிக்கு மியற்கையும்,

(இ - ள்.) மாயை மூன்றினும் - மூன்று மாயையினாலும், மாயிரு ஞாலம் முன் ஆய - மிகப்பெரிய வுலகமுதலாகிய, தத்துவம் எல்லாம் - தத்துவங்களையெல்லாம், அமைத்ததும் - உண்டாக்கினதும், தூயசத்தி விளங்கிய - பரிசுத்தமான சத்தி விளக்கமடைந்த, தொல்உயிர்க்கு - பழமையாகிய சீவனுக்கு, ஏயும் - தகுந்த, முத்தி அளிக்கும் இயற்கையும் - வீடுதரு மியல்பும் எ-று.

மாயை மூன்றென்றது — சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என்பவற்றை. (௩௪)

விரித்து நன்கு விளம்பினன் செஞ்சடைக்
கருத்த னவ்வெலாங் காசின் முனிவனுட்
டரித்து ஞானந் தலைப்பட் டஞரெலா
மிரித்தெ ழுந்தபே ரின்பத் தழுந்தினான்.

(இ - ள்.) செஞ்சடைக் கருத்தன் - சிவபெருமான், விரித்து நன்கு விளம்பினன் - விஸ்தரித்து நன்றாகச் சொல்லியருளினான், அவ்வெலாம் - அவற்றையெல்லாம், காசு இல் - குற்றமற்ற, முனிவன் - வசிட்டமுனிவன், உள் தரித்து - மனத்தில் தரித்து, ஞானம் தலைப்பட்டு - ஞானம் கிடைக்கப்பெற்று, அஞர் எல்லாம் இரித்து - துன்பத்தை யெல்லாம் ஓட்டி, எழுந்த - உண்டான, பேரின்பத்து - மஹாநந்த சமுத்திரத்தில், அழுந்தினான் - மூழ்கினான் எ-று.

செஞ்சடைக் கருத்தன் - சிவந்த சடாபாரத்தை யுடைய கர்த்தன். கர்த்தன் - என்பதற்கு எல்லாம் செய்யவல்லவன் என்பது பொருள். காசு - குற்றம். உள் - மனம். இரித்தல் - ஓட்டல். அழுந்தினான் என மேல்வருதலால் பேரின்பம் என்பதற்கு மஹாநந்த சமுத்ரமென் றுரைக்கலாயிற்று. (௫௫)

தந்தை தாண்மலர் தாழ்ந்து விடைபெறீஇச்
சிந்தை யெண்ணிய தேயத் தடைந்தனா
னந்தி வானிறத் தண்ணலு மவ்வழி
வந்த வன்ன வடிவொடு நின்றனன்.

(இ - ள்.) தந்தை - சிவபிரானது, தாள் - திருவடியாகிய, மலர் - தாமரை மலரை, தாழ்ந்து - வணங்கி, விடை பெறீஇ - விடைபெற்று, சிந்தை எண்ணியதேயத்து - மனமிச்சித்த தேசத்தில், அடைந்தனன் - சேர்ந்தனன், அந்திவான் - அந்திவானம் போலும், நிறத்து - நிறத்தினை யுடைய, அண்ணலும் - சிவபிரானும், அவ்வழிவந்த - அவ்விடத்திற்கு வந்த, அன்ன - அத்தன்மைத்தாகிய, வடிவொடு - சிவலிங்க ரூபத்தோடு, நின்றனன் - எழுந்தருளியிருந்தான் எ - று.

இன்னார்க்கு என்னாது வாளா தந்தை யென்றார். ஆயினும்அது எல்லா வுலகங்களுக்கும் முதற்காரணன் சிவபிரானே யாதலால், அவனையே குறித்தது. "விடையதூ ரிறையே தாதை மற்றவன்பால் மின்னெமை தன்னை" என்றார் பிறரும். பெறீஇ - சொல்லிசை யளபெடை. (௫௬)

மேற்படி வேறு

அப்பொழு தமைப்பெய ரரிக்கரு நெடுங்கட்
செப்பிள முலைக்கொடி சிவன்பிரிவு தந்த
வெப்பவிர கத்தழல் வெதுப்புதல் பொறாளா
யொப்பிலி யிருந்தருளு மொண்கட றடைந்தாள்.

(இ - ள்.) அப்பொழுது - அந்தக்காலத்தில், உமைப்பெயர் - உமையென்னும் பெயரையுடைய, அரி - அரிபரந்த, கரு-கருமையாகிய, நெடுங்கண் - நீண்ட கண்களையும், செப்பு - செப்புப்போலும், இளமுலை - இளமுலையையும் உடைய, கொடி - பூங்கொடிபோல்வாள், சிவன் - சிவபெருமானது, பிரிவுதந்த - பிரிவினால் தரப்பட்ட, வெப்பம் - வெம்மையுள்ள, விரகத்தழல் - விரகாக்கினியானது, வெதுப்புதல் - சுடுதலை, பொறுள் ஆய் - பொறுக்கரத்தவளாகி, ஒப்பு இல்லி - ஒப்பற்றவனாகிய சிவபெருமான், இருந்தருள் - எழுந்தருளியிருக்கிற, இருங்கடறு-பெருங்காட்டை, அடைந்தாள் - சேர்ந்தாள் எ-று.

பிரிவை விஸ்லேஷம் என்பர் வடநூலோர். பொறுத்தல் - சகித்தல். கடறு - காடு. (கஎ)

ஆங்கோதை நீர்விட மயின்றருள் கடுக்கைத்
தேங்கோதை மார்பனொடு சேர்ந்தினி திருந்தே
தீங்கோதை நன்கழை செறுத்தொளிரு ஞானப்
பூங்கோதை யென்றுதிசை போம்பெயர் படைத்தாள்.

(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது, ஓதை - ஒலியையுடைய, நீர் - கடலிற்பிறந்த, விடம் - நஞ்சினை, அயின்றருள் - உண்டருளிய, தேம்-மணம் பொருந்திய, கடுக்கைக்கோதை - கொன்றைமலர் மாலையையணிந்த, மார்பனொடு - மார்பினை யுடையவனாகிய சிவபிரானோடு, இனிது - இனிதாக, சேர்ந்திருந்தே - கூடியிருந்தே, தீங்கு ஓது - தீமையென்று சொல்லப்பட்ட, ஐநன்கழை செறுத்து ஒளிரும் - ஐம்புலன்களையும் வென்று விளங்குகிற, ஞானப்பூங்கோதையென்று—, திசைபோம் - திக்குகளிலெல்லாம் வியாபித்தற்குரிய, பெயர் - திருநாமத்தை, படைத்தாள் - உடையவளானாள் எ-று.

அயின்று என்பதற்குப் பகுதி அயில். கடுக்கை - ஆகுபெயர். (கஅ)

மழைமத முகக்குட வயிற்றுமகன் வெஞ்சூர்
வழியற வறுத்தவருண் மைந்தனடல் வீர
னழிவில்வடு கக்கடவு ளையன்விடை யண்ணல்
குழுமிய வுருத்திரர்கள் கோதில்கண நாதர்.

(இ - ள்.) மழைமதமுகம் - மழைபோற் சொரிகிற மதநீரோடு கூடின முகத்தையும், குடவயிறு - குடம்போலும் வயிற்றையும் உடைய, மகன் - மூத்தகுமாரனாகிய விநாயகன், வெம் - கொடிய, சூர் - சூரபன்மனவன், வழிஅற - சந்ததியோடற்றுப் போம்படி, அறுத்த-வேரறுத்த, அருள்மைந்தன் - கருணாமூர்த்தியாகிய முருகவேள், அடல்வீரன் - வெற்றியையுடைய வீரபத்திரன், அழிவு இல் - அழிவற்ற, வடுகக்கடவுள்—, ஐயன் -ஐயனார், விடை அண்ணல் - நந்திதேவர், குழுமிய - கூட்டமாகக்

கூடிய, உருத்திரர்கள் - ருத்ரர்கள். கோது இல் - குற்றமற்ற, கணநாதர் - கணநாதர்கள் எ-று.

மதநீரின் மிகுதி தோன்றற்கு மழையென்னும் அடை கொடுத்தார். சூர்வழியற வறுத்தது தேவர் முதலியோர்மேல் வைத்த கருணை காரணமாகவாதலால் அறுத்த என்பதை யடுத்து அருள்மைந்தன் என்றார். விடை அண்ணல் என்றது நந்திதேவர் இடபவுருவாதலேக்கி யென்க.

என்றிவர்க ளாதியர்கள் யாவரு மெழுந்து
துன்றியுமை யம்மையொடு சோதியுறை கின்ற
மன்றன்மத யானைவனம் வல்விரைவி னெய்திக்
கொன்றைமுடி யண்ணலருள் கொண்டினி திருந்தார்.

(இ - ள்.) என்ற இவர்கள் ஆதியர்கள் - என்று சொல்லப்பட்ட இவர்கள் முதலியோர்கள், யாவரும் - எல்லாரும், எழுந்து துன்றி - எழுந்து நெருங்கி, உமையம்மையொடு - உமாதேவியாரோடு, சோதி - ஒளியுருவாகிய சிவபெருமான், உறைகின்ற - எழுந்தருளியிருக்கிற, மன்றல் மத யானை வனம் - மணமுள்ள மதநீரைச் சொரிகிற யானைக்காட்டை, வல் விரைவின் எய்தி - மிகு விரைவிலடைந்து, கொன்றைமுடி அண்ணல் - கொன்றைமலர் மாலையைத் தரித்த சடாபாரத்தையுடைய சிவபிரானது, அருள்கொண்டு - திருவருளைப்பெற்று, இனிது இருந்தார் - இனிதாக வாழ்ந்தார்கள் எ-று.

என்றிவர்கள் என்பதில் நிலைமொழி யீற்றகரம் தொகுத்தல். துன்றல் - நெருங்கல். கொன்றை - ஆகுபெயர். (௬0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

விளங்கொளிக் கயிலைக் குன்றம் விரிசடை யிறைவன் றன்னைத்
துளங்கலில் குடும்பத் தோடு துறத்தலிற் பயந்தோர் நீத்த
விளஞ்சிறு ரெனக்க லங்கி யீகையங் குன்றத் தோடு
வளங்கெழு களிநல் யானை வனம்புக வெழுந்த தன்றே.

(இ - ள்.) விளங்கு - பிரகாசிக்கிற, ஒளி - ஒளியுள்ள, கயிலைக் குன்றம் - கயிலைமலையானது, விரிசடை - விரிந்த சடாபாரத்தையுடைய, இறைவன் தன்னை - சிவபிரானை, துளங்கல் இல் - சலனமற்ற, குடும்பத்தோடு - குடும்பத்துடன், துறத்தலின் - விடுதலால், பயந்தோர் நீத்த - பெற்றோரைவிட்ட, இளஞ்சிறார் என - இளங் குழந்தைகள் போல, கலங்கி - சலனமடைந்து, ஈகையங் குன்றத்தோடு - மேருமலையோடு, வளம் கெழு - வளம்பொருந்திய, களி - களிப்பையுடைய, நல் - சிறந்த, யானை வனம்புக - யானைக்காட்டில் பிரவேசிக்க, எழுந்தது - புறப்பட்டது எ-று.

துளங்கல் - அசைதல் (சலநம்). பயந்தோர் - தாய்தந்தையர். பயத்தல் - பெறுதல். பகுதி பய. சிறார் சிறுவர் என்பதன் மரூஉ. (௬௧)

இருணிற விருவி சும்பி னெழுந்துதென் றிக்கிற் செல்லும்
பெருகொளிக் கயிலை வெற்பும் பிறங்கிய செம்பொற் குன்றுந்
திரையெறி கடறாங் காற்றின் சேயையு மண்ட கோடி
விரல்கொடு தெறிக்கு மாற்றல் வீரவா குவையு மொத்த.

(இ - ள்.) இருள்நிறம் - கருநிறத்தையுடைய, இரு - பெரிய, விசும்பில் எழுந்து - ஆகாயத்திலெழுந்து, தென்திக்கில் செல்லும் - தெற்குத் திக்கில் போகிற, பெருகு ஒளி - மிகுந்த வொளியுள்ள, கயிலைவெற்பும் - கயிலைமலையும், பிறங்கிய - விளங்காநின்ற, செம்பொன் குன்றும் - மேரு மலையும், திரையெறி - அலைவீசுகிற, கடல்தாங்கு - கடலினால் தாங்கப் பெற்ற, ஆற்றின் சேயையும் - காங்கேயனையும், அண்டகோடி - அண்ட கோடிகளையெல்லாம், விரல்கொடு - தன் விரலினால், தெறிக்கும்-தெறிக்கிற, ஆற்றல் - சத்தியுள்ள, வீரவாகுவையும் - வீரவாகு தேவரையும், ஒத்த - நிகர்த்திருந்தன எ-று.

செம்பொற்குன்று - செம்பொன்னானே யியன்றமலை. விசும்பு - ஆகாயம். காங்கேயன் – கங்காபுத்திரன். கொடு மூன்றனுருபு. (௬௨)

கூற்றுறழ் வெகுளி வேழங் கொண்டுவிண் படரு மூழிக்
காற்றெறி சிறைப்பே ராற்றற் கண்டபே ரண்டப் புட்கள்
போற்றிரை யுவரிசூழ் பூம்பொழி லெலா மருளவிண் போய்ச்
சாற்றரு மலையி ரண்டுந் தானமா வனத்த டைந்த.

(இ - ள்.) கூற்று உறழ் - யமனை நிகர்த்த, வெகுளி - கோவத்தையுடைய, வேழம்கொண்டு - யானைகளை வாரிக்கொண்டு, விண் - ஆகாயத்தில், படரும் - செல்லுகிற, ஊழிக்காற்று எறி - ஊழிக்காற்றை வீசுகிற, சிறை - சிறகுகளையுடைய, பேர் ஆற்றல் - பெருவலியோடுகூடிய, கண்ட பேரண்டப் புட்கள்போல் - கண்டபேரண்டப் பக்ஷிகள்போல, திரை - அலைகளையுடைய, உவரிசூழ் - கடல்சூழ்ந்த, பூ - அழகாகிய, பொழில் எல்லாம் மருள-உலகங்களெல்லாம் பிரமிக்க, விண்போய் - ஆகாயத்திற் சென்று, சாற்று அரு - சொல்லுதற்கரிய, மலையிரண்டும் - இரண்டு மலைகளும், தானமாவனத்து அடைந்த - தானமாவனத்திற் சேர்ந்தன எ-று.

கூற்று - உடலுயிர்களைக் கூறுபடுத்துவோன் (யமன்). படர்தல் - செல்லுதல். ஊழிக்காற்று - யுகமுடிவில் வீசுங்காற்று. உவரி - உவர்த்தலையுடைய தாதலால் கடலுக்கு உவரியென்னும் பெயர் வழங்கலாயிற்று. தானமா வனம்-மதயானைக்காடு, (௬௩)

தோடவிழ் கடுக்கை வேய்ந்த சுடர்மணிச் சுடிகை யைவா
யாடர வுருவத் தண்ணற் கயிந்திர திசையின் வெள்ளிக்
கோடுயர் வரைநின் றன்று குருமணி யருவி சூடி
நீடிய குடுமி மேரு நின்றதங் கதன்வ டக்கே.

(இ - ள்.) தோடு அவிழ் - இதழ்கள் விரிகிற, கடுக்கை - கொன்றை மலர் மாலையை, வேய்ந்த - சூடின, சுடர் - விளங்குகிற, மணி - மாணிக்கமுள்ள, சுடிகை - உச்சியையும், ஐவாய் - ஐந்தலைகளையுமுடைய, ஆடர வுருவத்து அண்ணற்கு - நாகலிங்கரூபனாகிய சிவபிரானுக்கு, அயிந்திர திசையில் - இந்திரதிக்கில், கோடு உயர் - சிகரங்களுயர்ந்த, வெள்ளி வரை - கயிலைமலையானது, நின்றன்று - நிலைபெற்றது, குரு - ஒளியுள்ள மணி - மணிகளைக் கொழிக்கிற, அருவிசூடி - அருவியாறுகளை மேலே கொண்டு, நீடிய - நீண்டிருக்கிற, குடுமி - சிகரங்களையுடைய, மேரு - மேருமலையானது, அங்கு அதன் வடக்கே - அங்கதற்கு வடதிசையில், நின்றது - நிலைபெற்றிருந்தது எ-று.

வேய்தல் - சூடுதல். இந்திரதிக்கு - கிழக்கு. (சுச)

அன்றுதொட் டுலக மேத்து மண்ணலங் களிற்றுக் காடு
மன்றறென் கயிலை யென்னும் வான்பெயர் பெற்ற தம்ம
பொன்றலி லதன்சி றப்புப் பொருபுல னரவ வேந்து
நின்றதன் னாயுள் காறு நிகழ்த்தினு முலத்தற் பாற்றே.

(இ - ள்.) அன்று தொட்டு - அந்நாள் தொடங்கி, உலகம் - உலகத்தாரெல்லாரும், ஏத்தும் - துதித்தற்குரிய, அண்ணல் - பெருமைபொருந்திய, அம் - அழகிய, களிற்றுக்காடு - யானைக்காடு, மன்றல்-மணமுள்ள, தென்கயிலை யென்னும் - தென்கயிலாயம் என்கிற, வான்பெயர் பெற்றது - மேலான பெயரைப் பெற்றிருக்கின்றது, பொன்றல் இல் - அழிதலில்லாத, அதன் - அதனது, சிறப்பு - மேன்மை, பொருபுலன் - புலன்களைவென்ற, அரவவேந்தும் - நாகராஜனாகிய ஆதிசேடனும், நின்ற - நிலைபெற்ற, தன் ஆயுள்காறும் - தன் ஆயுள்வரையும், நிகழ்த்தினும் - புகழ்ந்துரைத்தாலும், உலத்தற் பாற்றே - முடியும் பான்மைத்தோ எ-று.

அரவவேந்தும் என்ற வும்மை உயர்வு சிறப்பு. நிகழ்த்தல் - சொல்லல். உலத்தல் - முடிதல். உலத்தற் பாற்றேவென்னு மோகாரம் எதிர்மறை. அம்ம உரையசையிடைச்சொல், வியப்பிடைச்சொல் எனினுமாம். உலகம் - ஆகுபெயர். (சுரு)

வியனிலம் போல விண்ணும் வெள்ளத்து ளழுந்து மஞ்ஞான்
றுயர்தரு மண்ட கோளத் துறநிமிர் கயிலை யென்னும்
பெயருடைப் பரமா னந்தப் பெறலரு முத்தி வைப்பா
மயலெறி திருத்த லக்கு மற்றைய தலங்க ளொப்போ.

(இ - ள்.) வியன் - விஸ்தீர்ணமான, நிலம்போல - மண்ணுலகம் போல, விண்ணும் - விண்ணுலகமும், வெள்ளத்துள் - பிரளய வெள்ளத்துள், அழுந்தும் - ஆழ்ந்துபோகிற, அஞ்ஞான்று - அந்தக் கடைநாளில், உயர்தரும் - உயர்ந்த, அண்டகோளத்து - அண்டகோளம் வரைக்கும், உற - மிகுதியாய், நிமிர் - ஓங்கிநிற்கிற, கயிலையென்னும் - கைலாயமென்கிற, பெயர் உடை - பெயரையுடைய, பரமாநந்தம் - பேரின்பத்தைத் தருகிற, முத்திவைப்பு ஆம் - மோக்ஷநிலமாகிய, மயல்எறி - பிறவி மயக்கத்தை யொழிக்கிற, திருத்தலக்கு - திருத்தலத்துக்கு, மற்றைய தலங்கள் - ஏனைய தலங்கள், ஒப்போ - நிகர்வனவோ எ-று.

வியல்நிலம் என்றும் பிரிக்கலாம். பொருள் வேறுபாடின்று. நிலம் விண் என்பன ஆகுபெயர்கள். வைப்பு - நிலம். தலத்துக்கு எனற்பாலது அத்துச் சாரியை குறைந்து தலக்கு என நின்றது. ஒப்போவென்னு மோகாரம் எதிர்மறை. (சுசு)

ஒவில்சீர்த் தெனாது வெள்ளி யோங்கலி னான்கு திக்குங்
காவத வளவுட் பட்ட கன்மர முதலா யுள்ள
தாவர மக்க ளாதி சங்கம மெல்லா முக்கட்
சேவுயர் கொடியி னான்றன் றிருவுரு வாகு மன்றே.

(இ - ள்.) ஓவு இல் - கெடுதலில்லாத, தெனாது வெள்ளி ஓங்கலின் - தென்கயிலாயமலையின், நான்குதிக்கும் - நாற்றிசையினும், காவத அளவு உட்பட்ட - காவததூரத்தளவுக் குட்பட்ட, கல்மரம் முதலாயுள்ள - கல் மர முதலியவாகவுள்ள, தாவரம் - தாவரங்களும், மக்கள் ஆதி - மனிதர் முதலாகிய, சங்கமம் - சங்கமங்களும், (ஆகிய) எல்லாம் - யாவும், உயர் - உயர்த்தப்பட்ட, சேகொடியினன் - இடபக்கொடியை யுடையவனாகிய சிவபெருமானது, திருவுரு ஆகும் - திருவுருவமேயாகும் எ-று.

ஓங்கல் - மலை. தாவரம். நிலைபேறுடைய வுயிர்கள். சங்கமம் - சஞ்சரிக்கு முயிர்கள். இவற்றை முறையே அசரம் சரம் எனவும் கூறுவர். சே- இடபம். (சுஎ)

புலிபுலி யதளு டுக்கும் பொருகரி கரித்தோல் போர்க்கும்
வலியவா னேறும் வாளரா வரவம் பூணு
மெலியியன் மான்மா னேந்தும் வெந்திறற் சீயஞ் சீயத்
தலைபுனை தருந்தென் வெள்ளிச் சயிலத்தி னிறக்கின் மன்னோ.

(இ - ள்.) தென்வெள்ளிச் சயிலத்தில் - தென்கைலாய மலையில், இறக்கில் - இறந்தால், (இறந்த) புலி - புலியானது, புலி அதள் உடுக்கும் - புலித்தோலைப் போர்த்துக்கொள்ளும், பொருகரி - போர்செய்தற்குரிய யானையானது, கரித்தோல் போர்க்கும் - யானைத்தோலைப் போர்த்துக் கொள்ளும், வலிய ஆன் - வலிய இடபம், ஆன் ஏறு ஏறும் - இடபவேற்றி

லேறும், வாள் அரா - ஒளியுள்ள பாம்பானது, அரவம் பூணும் - பாம்பைத் தரிக்கும், மெலி இயல்மான் - மெல்லியல்பையுடைய மானானது, மான் ஏந்தும் - மானைத்தாங்கும், வெம்திறல் சீயம் - மிக்க வெற்றியையுடைய சிங்கமானது, சீயம் தலைபுனைதரும் - சிங்கத்தின் தலைமாலையைப் பூணும் எ-று. (எசு)

மன் ஓ அசைநிலைச்சொற்கள். சயிலம் சைலம் என்னும் வடசொற் றிரிபு. இதற்குக் கல்லாலியன்ற தென்பது பொருள். சிலை - கல். சிலையாலாயது சைலம். கரி - கரத்தையுடையது. கரம் - துதிக்கை. சிவபிரான் சிங்கத்தின்தோலை யுடுத்தலேயன்றி, அதன் தலைமாலையையும் பூண்பன் என்பது, "ஏனையோர்க்கிறைமை யின்மை காட்டி, முடங்குளை மடங்கன் முகனுடைக் கோத்த, வெண்டலை மாலை கண்டவர் வெருவத், தண்டாது கிடக்குந் திண்டோட் பொருப்பன்" என்னும் இஷ்டலிங்க அகவலால் இனிது விளங்கும். (சுஅ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

**என்று தென்கயி லைப்பொ ருப்பின தியல்ப னைத்தையு மெம்பிரா**
**னன் று கூறலு நெஞ்சு வந்தொளிர் நாம வெள்ளிலை வேனெடுங்**
**குன்றி னேருறழ் பிறைம ருப்புயர் குஞ்ச ரப்படை யாதவன்**
**மன்ற நன்கதை யின்னு மொன்று வழங்கு கென்றுவ ணங்கினான்.**

(இ - ள்.) என்று - என்று, தென்கயிலைப் பொருப்பினது - தென்கைலாய மலையின், இயல்பு அனைத்தையும் - இயற்கை முழுதையும், எம்பிரான் - எம்பெருமான், நன்று கூறலும் - நன்றாக விவரித்துச் சொல்லுதலும், ஒளிர் - விளங்குகிற, நாமம் - அச்சத்தை யுண்டாக்குகிற, வெள் இலை - வெள்ளிலை யுருவாகிய, வேல் - வேற்படையையும், நெடுங்குன்றின் நேர் உறழ் - பெரிய மலையோடொத்த, பிறைமருப்பு - பிறைபோலுங் கொம்பினையும் உடைய, உயர் - உயர்ந்த, குஞ்சரப்படை - யானைப்படையையுமுடைய, யாதவன் - யாதவவேந்தன், நெஞ்சு உவந்து - மனமகிழ்ந்து, இன்னும் - இன்னமும், ஒன்று - ஒரு, நன்கதை - நல்லகதையை, வழங்குக என்று - அருளிச்செய்ய வேண்டுமென்று, வணங்கினான் - தொழுதான் எ-று.

மன்ற அசைநிலைச்சொல். எம்பிரான் என்றது சிவபெருமானை. நாமம் - பகைவருக்கு அச்சத்தை யுண்டாக்கு மியல்பு. வணங்குக என்று எனற்பாலது நிலைமொழியீற்றகரம் தொகுத்தலாய் வழங்குகென்று என நின்றது. (சுகூ)

கலிவிருத்தம்

**ஆதியங் கயிலையி னடைவு கூறினந்**
**நீதில்பொன் முகரியின் செய்தி கூறுதும்**
**யாதவ மன்னமர்ந் தினிது கேளென**
**மாதவ வடிவருள் வள்ளல் கூறுவான்.**

(இ - ள்.) ஆதி - முதன்மைபெற்றுள்ள, அம் - அழகிய, கயிலையின் தென்கைலாயத்தின், அடைவு - பெருமையின் முறைமையை, கூறினோம் - சொன்னோம், தீது இல் - தீங்கில்லாத, பொன்முகரியின் - பொன்முகரியின், செய்தி - சரிதத்தை, கூறுதும் - சொல்லுவோம், யாதவ - யாதவ ராஜனே, மனன் அமர்ந்து - மனமமைந்து, இனிது கேள் என - நன்றாகக் கேட்கக் கடவையென்று, மாதவவடிவு - பெரிய தவவேடங் கொண்ட, அருள்வள்ளல் - சிவபெருமான், கூறுவான் - சொல்லுவானாயினன்.

தீதில் பொன்முகரி யென்றது பரிசுத்தமான பொன்முகரி யென்றவாறு. யாதவ - அண்மைவிளியாதலால் இயல்பு. மாதவவடிவு என்றது விடசங்கமரூபம். அருள்வள்ளல் - அருட்கொடையாளன். (எ0)

## தென்கைலாயச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கஅ௧.

---

சில யுகங்களுக்கு முன்னே, சூரியகுலத்திலுதித்த மித்திரசகனென்னு மரசனை வஞ்சிக்க வெண்ணிய ஓரரக்கன் அவ்வரசனிடத்தே மடைத்தொழில்பூண்டிருக்குநாளில், நரமாமிசத்தைச் சமைத்துவைக்க; அதை அரசனுணராது வசிட்டமுனிவருக்குப் படைத்து, அக் குற்றங் காரணமாக அம்முனிவராற் சபிக்கப்பட்டு, உதிரனென்னும் பெயரையுடைய அரக்கனாகி உழன்றிருந்தனன். அக்காலத்திலே, விசுவாமித்திரமுனிவர் வசிட்டமுனிவர்பால் வைத்திருக்கும் உட்பகையினால் அவர் சந்ததியை அழிக்கத் துணிந்து, சத்திமுனிவர் முதலிய நூற்றுவரையும் மாய்த்து விடும்படி அவ்வுதிரனென்பவனுக்குப் பணிக்க; அவன் அவ்வாறே முடித்தலால், வசிட்டமுனிவர் புத்திரசோக மேலிட்டு, தமது உயிரை விடுக்கவெண்ணி, ஒரு மலையினது உச்சியிலேறி, விரைந்துவிழுந்தனர். அதுகண்ட பூதேவியானவள் அவரிறவாவண்ணம் தன்னுடைய இரண்டு கரங்களாலும் தாங்கிக்கொண்டு, அவரை நோக்கி, "முனிவனே, நீ இவ்வாறு செய்தலால் உனது துன்பம் நிவர்த்தியாகுமா? சிவபெருமானை வழிபட்டுத் திருவருளைப் பெறுவையேல், இத்துன்பம் நிவர்த்தியாகப் பெறுவதுமன்றி முத்தியையும் பெறுவாய்" என்றுரைக்க; முனிவர் அதையங்கீகரித்து, தமது சித்தத்திலே கயாரணியமே எவற்றினும் சிறந்த தலமெனத் துணிந்து சென்று, ஒரு சிறந்த தானத்திலே யிருந்துகொண்டு, உணவாதிகளை விடுத்து, ஐம்புலன்களையுமடக்கி, சித்தத்தைச் சிவபிரான் றிருவடிக்கண்ணே பதித்து, எவற்றாலும் சலிப்பின்றி, அருந்தவம் புரிந்துகொண்டிருந்தனர்.

சிவபெருமான் திருவுளமிரங்கி, ஐந்தலையரவ வுருவத்தோடு பரசிவலிங்கமாய் மேற்குத் திருமுகமாகி, சோதிமயமாய்த் தரிசனந்தந்தளிக்க; முனிவர் நடுநடுங்கி, மயிர்சிலிர்த்து, காற்றினாற் பெயர்க்கப்பட்ட மரம்போல வீழ்ந்து பணிந்து, அக்கடவுளெழுகவென்ற பின்னர் பயமகன்றெழுந்து, பலவாறு துதித்து நின்றனர். அப்பெருமான் திருவருள் சுரந்து, முனிவரை நோக்கி, "உனக்கு வேண்டியவரம் யாது?" எனவினவ; அம்முனிவர் "தேவரீர் எக்காலத்தும் இத்தலத்திலே இத் திருமேனியோடு வீற்றிருந்துகொண்டு ஆன்மாக்களுக்கு இஷ்டசித்திகளை யளிக்கவும், சிறியேனுக்கு ஞானோபதேசம் பாலித்தருளவும் விரும்பினேன்" என விண்ணப்பஞ்செய்துகொண்டனர். அக்கடவுள் அவ் வரமளித்து, கல்லால விருக்ஷத்தடியிலே தக்ஷிணாமூர்த்தமாய் வீற்றிருந்து, பதிபசுபாசலக்ஷணங்களை ஐயந்திரிபற விளக்கியருள; அம்முனிவர் உண்மைதெளிந்து, ஞானமுதிர்ச்சி யுடையராகி, பேரின்பம் பெற்றனர்.

அத்தலத்திலே, அக்கடவுள் அம்முனிவர்க்கருளிய வண்ணமே எழுந்தருளி யிருத்தலால், உமாதேவியாரும் பிரிவாற்றாது, விநாயகக்கடவுள், முருகக்கடவுள், வீரபத்திரக்கடவுள், வைரவக்கடவுள், ஐயனார், நந்திதேவர், உருத்திரகணங்கள், கணநாதர்கள் முதலியோர் பின்றொடர்ந்து

வா, அத்தலத்தை யடைந்து, ஞானப்பூங்கோதையம்மை என்னும் திருநாமத்தோடு தங்கியிருந்தனர். இதுகண்ட கைலைமலையானது மேருமலையோடு, தானும் பிரிவாற்றாது அங்கடைந்து, தனக்கு வடக்கே அம்மேருமலை தங்கும்படி தான் சந்நிதிக்குக் கீழ்த்திசையிலே தங்கியது. அதனால், அன்று முதலாக அத்தலம் தென்கைலாயமெனத் திருநாமமுடையதாகி, அண்டருலகமுமழியும் அக்காலத்தும் அழிவில்லாததாய், நிகரின்றி விளங்குகின்றது. அத்தலத்திலிருக்கும் சராசரங்களெல்லாம் சிவரூபமாகும்: என்றுரைத்தருளி, அவ்வரசர் வேண்டுகோளின்படியே, பொன்முகரி நதியின் வரலாற்றைப் புகலத் தொடங்கினார்.

---

# பொன்முகரிச் சருக்கம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மணிமிடற் றிறைவன் முன்னம் வான்றொடு பனிக்குன் றத்தி
னணிநகைப் பணைப்பெ ருந்தோ ளம்பலைத் தரிப ரந்த
பிணையெழிற் கருங்கட் செவ்வாய்ப் பிறைநுதற் சுணங்கு பூத்த
புணர்முலைக் கருமென் கூந்தற் புனிதையை வேட்ப வந்தான்.

(இ - ள்.) மணி - நீலரத்தினம்போலும், மிடறு - கண்டத்தையுடைய, இறைவன் - சிவபெருமான், முன்னம் - முற்காலத்தில், வான்தொடு - ஆகாயத்தைத் தீண்டுகிற, பனிக்குன்றத்தில் - இமயமலையில், அணிநகை - அழகிய நகையையும், பணை - மூங்கில்போன்ற, பெருந்தோள் - பெரிய தோள்களையும், அம்பு அலைத்து - அம்பை வருத்தி, அரிபரந்த - வரிபடர்ந்த, பிணை - மானினது, எழில் - அழகாகிய, கருங்கண் - கரிய கண்களையும், செவ்வாய் - செவந்த அதரத்தையும், பிறைநுதல் - பிறைபோலும் நெற்றியையும், சுணங்குபூத்த - தேமல்படர்ந்த, புணர்முலை - நெருங்கின தனங்களையும், கருமென் கூந்தல் - கரிய மெல்லிய கூந்தலையுமுடைய, புனிதையை - பரிசுத்தையாகிய உமாதேவியை, வேட்ப - மணத்தற் பொருட்டு, வந்தான் - எழுந்தருளினன் எ-று.

மணி - கருநிறத்துக்கும் பெயராதலால், மணிமிடறு என்பதற்கு நீலகண்டம் என்றலும், மணி அழகுக்கும் பெயராதலால் அழகிய கண்டம் என்றலும் அமையும். பிணை - பெண்மான். அதரம் - கீழிதழ். புணர்தல் - மெல்லிய நூலிழையும் இடையே புகவொண்ணாது நெருங்கி யிருத்தல்.

கருடர்கந் தருவர் தாரா கணந்தயித் தியர்கள் விச்சா
தரரிராக் கதரே சித்தர் தாபத ரசுர ரேகிம்
புருடர்கின் னரரி யக்கர் பூதர்வே தாளர் தேவ
ருரகரா காச வாச ரொடுபோக புவியு ளாரே.

(இ - ள்.) கருடர் —, கந்தருவர் —, தாராகணம் —, தயித்தியர்கள் —, விச்சாதரர் —, இராக்கதர் —, சித்தர் —, தாபதர் —, அசுரர் —, கிம்புருடர் —, கிந்நரர் —, இயக்கர் —, பூதர் —, வேதாளர் —, தேவர் —, உரகர் —, ஆகாசவாசரொடு —, போகபூமியுள்ளார் எ-று.

கருடர்' முதலியோர் தேவசாதியா ரென்றறிக. இவர் பதினெண் வகையர். (உ)

விரிசடை முனிவ ரீட்டம் வெந்திறற் கணேச வெள்ளந்
திருமறு மார்பத் தண்ண றிசைமுகத் தலைவ னின்னோ
ரொருவரு மொழிந்தி ராம லொருதனிக் கடவு ளோடும்
பரவினர் வந்து விண்டோய் பனிவரை மருங்கி றுத்தார்.

(இ - ள்.) விரிசடை - பரந்த சடையையுடைய, முனிவர் ஈட்டம் - முனிவர் கூட்டம், வெம்திறல் - வெவ்விய வலியமைந்த, கணேசவெள்ளம் - கணநாதர் கூட்டம், திருமறு மார்பத்து அண்ணல் - திருமால், திசைமுகத் தலைவன் - பிரமதேவன், இன்னோர் - இவர்போல்வார், ஒருவரும் - ஒருவராயினும், ஒழிந்திராமல் - நீங்கியிராமல், ஒரு தனிக் கடவுளோடும் - சிவபெருமானுடன் கூடி, பரவினர் - எங்கும் பரவி, வந்து—, விண்தோய் - ஆகாயத்தை யளாவிய, பனிவரை மருங்கு - இமயமலைப் பக்கத்தில், இறுத்தார் - தங்கினார்கள் எ-று.

முனிவர் கூட்டத்திற் கேற்ப விரிசடை யென்னும் விசேடணங் கொடுக்கப்பட்டது. திரு - இலக்குமி. மறு - உத்தமலக்ஷணமாகிய மறு. மார்பத்து அண்ணல்- மார்பினையுடைய பெரியோன் (விட்டுணு). திசைமுகன் - நான்கு திக்குகளையு நோக்கின நான்கு முகங்களையுடையவன் (பிரமதேவன்). பரவினர் - முற்றெச்சம். இறுத்தல் - தங்குதல். (௩)

தெய்வத வெள்ள மெல்லாந் திரண்டவட் குழீஇய வாற்றால்
வையகந் தெற்கு யர்ந்து வடதலை தாழ்ந்த தாக
மையொளிர் மணிமி டற்று வானவன் கடத்து வந்த
வையனை யருகு வாவென் றழைத்தரு ளோக்க ளித்தே.

(இ - ள்.) தெய்வத வெள்ளம் எல்லாம் - தேவசமூக முழுதும், திரண்டு - சேர்ந்து, அவண் - அவ்விடத்தில், குழீஇயவாற்றால் - கூடிய காரணத்தால், வையகம் - நிலமானது, தெற்கு உயர்ந்து - தென்றிசையுயர்ந்து, வடதலை தாழ்ந்தது ஆக - வடதிசை தாழ்ந்ததாதலும், மையொளிர் - கருமைவிளங்குகிற, மணிமிடற்று - நீலமணிபோலுங் கண்டத்தையுடைய, வானவன் - தேவன், (சிவபெருமான்) கடத்துவந்த - குடத்திற் பிறந்த, ஐயனை - அகஸ்தியமுனிவனை, அருகுவாவென்று அழைத்து - சமீபத்தில் வருகவென் றழைத்து, அருள்நோக்கு அளித்து-க்ருபாத்ருஷ்டி வைத்து.

தெய்வதம் தைவதம் என்னும் வடசொற்றிரிபு. வையகம் காரணப் பெயர். எல்லாப் பொருள்களையும் வைத்தற் கிடமாயிருப்பதென்பது பொருள். குடத்திற் பிறந்ததனால் அகஸ்தியர்க்கு கும்பமுனியென்றும், சிற்றுருவினராதல் பற்றி குறுமுனியென்றும் பெயர்கள் வழங்கலாயின.

மாநிலஞ் செம்மைத் தாக மாதவ நீதெற் கேகி
மேனிமிர் மலய வெற்பின் மேவுதல் வேண்டு மன்றே
ஞானவில் புலவ னாமே னொடிசெலத் தக்க தென்றான்
வானுயர் புகழி னானும் வணங்கிவாய் புதைத்து நின்று.

(இ - ள்.) மாதவ - பெருந்தவனே, நீ தெற்கு ஏகி - நீ தென்றிசைக்குச் சென்று, மாநிலம் - பூமி, செம்மைத்து ஆக - சமமுடைத்தாகும் வண்ணம், மேல்நிமிர் - மேலேயோங்கி நிற்கிற, மலையவெற்பில்-பொதிய மலையில், மேவுதல் வேண்டும் - அமர்ந்திருக்கவேண்டும், அன்றேல் - அல்லவாஞல், நூல்நவில் புலவ - நூல்களால் புகழ்ந்துரைக்கப்பட்ட புலவனே, நாமே - யாமே, நொடி - நொடிப்பொழுதில், செல்லத்தக்கது - போகத்தக்கது, என்றான் - என்று சொன்ஞன், வான்உயர் - விண்ணுலகத்தளவும் உயர்ந்து தோன்றுகிற, புகழிஞனும் - புகழை யுடையவஞகிய அகஸ்தியமுனிவனும், வணங்கி - தொழுது, வாய்புதைத்துநின்று - வாயை மூடிநின்று எ-று.

மாநிலம் என்று மிருக்கலாம். பொருள் வேறுபடாது. வான் ஆகு பெயர். (௯)

திருமறு வணிந்த மார்பன் றிசைமுகன் முதலோர் நிற்பக்
கருணையங் கடலே நாயிற் கடையனேன் றன்பால் வைத்த
வருளினுற் பணித்த வேவ லாற்றுவ லருளி னென்று
விரைமல ரடியிற் றாழ்ந்து விடைபெறீஇ விரைந்து சென்றான்.

(இ - ள்.) திருமறு அணிந்த - திருவையும் மறுவையும், அணிந்த - தரித்த, மார்பன்-மார்பையுடையவஞகிய திருமாலும், திசைமுகன்-பிரமதேவனும், முதலோர் - முதலானவர்கள், நிற்ப-நிற்க, கருணையங்கடலே-கருணசமுத்திரமே, நாயின் - நாயினும், கடையனேன் தன்பால்வைத்த - கடையேன்மீது வைத்த, அருளினல் - கிருபையினல், பணித்த - கட்டளையிட்டருளின, ஏவல் - பணிவிடையை, அருளின் - தேவரீரது திருவருளைக்கொண்டு, ஆற்றுவல் என்று - செய்வேனென்று, விரை - மணமுள்ள, மலர் - தாமரை மலர்போலும், அடியில் - திருவடியில், தாழ்ந்து - வணங்கி, விடைபெறீஇ - விடைபெற்று, விரைந்து சென்றான்-விரைவாகப் போயினன் எ-று.

திரு - இலக்குமி. மறு - உத்தமலக்ஷணமாகிய வோர் மறு. கருணையங்கடலே யென்பதில் அம் சாரியை யென்றேனும் அழகு என்றேனும் உரைத்துக்கொள்க. நாயின் என்பதில் இன் ஐந்தாவதன் உறழ்பொருளது. அருளின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்ருவதன் கருவிப்பொருளில்வந்தது. பெறீஇ - சொல்லிசை யளபெடை. பெறு-பகுதி.(௧௦)

கலிவிருத்தம்

ஆதார மெய்ப்பொரு ளறிந்தசிவ யோகி
மாதார வெம்முலை வடுக்கொளகன் மார்பன்
ருதார வுண்டளிகள் சாதாரி பாடுங்
கேதார மென்றுபுகழ் கேடில்வரை கண்டான்.

(இ - ள்.) ஆதாரம் - சர்வாதாரமாகிய, மெய்ப்பொருள் - நித்திய வஸ்துவை, அறிந்த - உணர்ந்த, சிவயோகி - சிவயோகியாகிய அகஸ்திய முனிவன், மாது ஆர - உமாதேவியணைய, வெம்முலை - விருப்பத்தை யுண்டாக்குகிற தனங்களின், வடுகொள்-தழும்பைக்கொண்ட, அகல்மார்பன்- அகன்ற மார்பையுடையவனுகிய சிவபெருமான் வீற்றிருக்கிற, அளிகள் - வண்டுகள், தாது - மகரந்தத்தை, ஆர உண்டு - வயிறு நிறையவுண்டு, சாதாரி பாடும் - சாதாரி யென்னும் பண்ணைப் பாடுதற் கிடமாகிய, கேதாரம் என்று - திருக்கேதாரமென்று, புகழ் - யாவராலும் புகழப்படுகிற, கேடு இல் - என்றும் அழியாத, வரை - மலையை, கண்டான் - தரிசித்தான் எ-று.

வெம்முலை வடுக்கொளகன் மார்பன் என மேல் வருதலால், மாது என்றது உமாதேவியை யுணர்த்திற்று. தாது - தேனுமாம். (எ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அருந்திறற் பிறவி மாவி னுவியுண் டுளிக்கோல் சிந்தும்
பெருஞ்சிலை யாகி முத்திப் பிறைநுதற் றிரும கட்கு
மருங்குநின் றிரட்டும் வெண்சா மரைகளாய் விளங்கா நிற்குந்
தரங்கவான் கங்கை சூழ்போந் தனியவி முத்தங் கண்டான்.

(இ - ள்.) அருந்திறல் - அரிதாகிய வெற்றியையுடைய, பிறவி - ஜந்மமாகிய, மாவின் - மிருகத்தின், ஆவி - உயிரை, உண் - உண்ணுதற்குரிய, துளி - தன் துளிகளாகிய, கோல்-அம்புகளை, சிந்தும்-இறைக்கிற, பெருஞ்சிலையாகி - பெரிய வில்லாகி, முத்தி - மோக்ஷமென்கிற, பிறைநுதல் திருமகட்கு-பிறைபோலும் நெற்றியையுடைய அழகிய பெண்ணுக்கு, மருங்கு நின்று - இருபாரிசத்திலும் நின்று, இரட்டும் - அசையாநின்ற, வெண்சாமரைகளாய் - வெஞ்சாமரங்களாகி- விளங்காநிற்கும் - பிரகாசியாநின்ற, தரங்கம் - அலைகளையுடைய, வான் - மேலான, கங்கை - கங்காநதியானது, சூழ்போம் - சூழ்ந்திருக்கிற, தனி - ஒப்பற்ற, அவிமுத்தம் - காசீ க்ஷேத்ரத்தை, கண்டான் - தரிசித்தான் எ-று.

கங்காநதியானது பிறவியாகிய மிருகத்தைக் கொல்வதற்குத் தன் துளிகளாகிய அம்புகளைச் சிந்துவதாயும், மோக்ஷலக்ஷ்மிக்குத் தன் அலைகளாகிய, வெண்சாமரையை யிரட்டுவதாயு மிராநின்ற தென்பது இதனாற் கூறப்பட்டது. அவிமுத்தம் என்பது காசிக்ஷேத்திரத்துக் கோர் பெயர். தரங்கம் - திரைவது எனப் பொருள்படுவதோர் வடசொல். திரை யென்பது இதன் மொழிபெயர்ப்பேயாம். (அ)

இயலிய மொன்ற ளுமத் தியா றுசூழ் முரண்வி ழிப்பேர்
வியனகர் வடவெ ழுத்து மெய்களு ணடுவு மீறு
முயிர்களுண் முதல யற்றே டுயிர்த்துமுன் னின்ற ரமப்
பெயர்நக ரெழுவா யான பெரும்பெயர்ப் பதிகள் கண்டான்.

(இ - ள்.) இயல் - அழகுள்ள, இயம் ஒன்றன் நாமத்து - வாத்தியங்கள் பலவற்றுள் ஒருவாத்தியத்தின் பெயரைக் கொண்ட, யாறு சூழ் - நதியினால் வளைக்கப்பெற்ற, முரண்விழிப்பேர் - மாறுபட்ட கண்ணின் பெயரையுடைய, வியன் நகர் - பெரிய நகரமும், வடவெழுத்து மெய்களுள் - வடமொழியின் எழுத்துக்களாகிய முப்பத்தைந்து மெய்களுள், நடுவும் ஈறும் (முதற் ககரமுதல் இரண்டாவது தகரம்வரையுமுள்ள முன் பதினேழு மெய்களும், நான்காவது தகரமுதல் க்ஷகாரம்வரையுமுள்ள பின் பதினேழு மெய்களும் நிற்க) நடுநிற்பதாகிய மூன்றாவது தகரமெய்யும் ஈற்றெழுத்தாகிய க்ஷகாரமெய்யும், உயிர்களுள் முதல் அயற்றோடு உயிர்த்து - உயிரெழுத்துக்களுள் முதலெழுத்தாகிய அகாரத்தின் பக்கத்திலிருக்கிற ஆகாரவுயிரோடு சேர்ந்து, முன்னின்ற ராமப் பெயர்நகர் - முன்னே நிற்கப்பெற்ற ராமவென்னும் பெயரையுடைய பட்டணமும், எழுவாயான - முதலாகிய, பெரும்பெயர் - பெருமையுள்ள பெயரையுடைய, பதிகள் - திருத்தலங்களை, கண்டான் - அகஸ்திய முனிவர் தரிசித்தார் எ-று.

ஈண்டு ஓர் வாத்தியம் என்றது பம்பை யென்னும் வாத்தியத்தை. அப் பெயர் கொண்ட யாறு என்றது பம்பாநதியை. இது ஸரஸ்ஸேயன்றி நதியன்று. "முக்குணவசத்தான் முறைபிறழ்ந்துரைத்தல்" ஜீவஸ்வபாவமாதலாலும், "மறப்பெனும் பகைவன் அறிவை வாரிக்கோடலாலும் நூலாசிரியர் 'இயலியமொன்றனுமத்தியாறு' எனச் செய்யுள் செய்தார். முரண்விரூபம், விழி அக்ஷம் இப்பெயர்கொண்ட புரம் விரூபாக்ஷபுரம் எனவே பம்பா ஸரஸ்ஸினால் சூழப்பெற்ற விரூபாக்ஷபுரம் என்றதாயிற்று. விரூபாக்ஷம் - மேனோக்கினகண். வடவெழுத்து மெய்களுள் நடுநிற்பதாகிய தகரவொற்றும், ஈற்றெழுத்தாகிய க்ஷகரவொற்றும் ஆகாரவுயிருடன் சேர்த்து, முன்னே நிற்கப்பெற்ற ராமவென்னும் பெயரையுடைய நகர் எனவே தாக்ஷாராமபுரம் என்றதாயிற்று. (கூ)

தனதுயர் முடியைக் கண்டோர் தாமறை முடியைக் கண்ட
வினையிலர் பெறும்பே றெய்த வேழம்பாய் தேத்தி றால்கண்
டனையதற் கொத்த திங்க ளஞ்சுபு நடக்கும் வெற்பாய்ச்
சினவிடை யுயர்த்தோற் றங்குஞ் சிலாதரன் புதல்வற் கண்டான்.

(இ - ள்.) தனது - தன்னுடைய, உயர் - உயர்ந்த, முடியை - சிகரத்தை, கண்டோர் - தரிசித்தவர், மறைமுடியைக்கண்ட - வேதசிகரத்தைக் கண்ட, வினையிலர் - வினையொழியப் பெற்றவராய், பெறும்பேறு எய்த - பெறும்பேற்றையடைய, வேழம்பாய் - மூங்கிலினின்றும் பெருகுகிற, தேத்து இறால்கண்டு - தேன் கூட்டைப் பார்த்து, அனையதற்கு ஒத்த - அதற்கு நிகரான, திங்கள் - சந்திரன், அஞ்சுபு - பயந்து, நடக்கும் - நடவாநின்ற, வெற்பு ஆய் - மலையாகி, சினம் - கோபத்தையுடைய, விடை

உயர்த்தோன் - இடபக்கொடியை யுயர்த்தவனாகிய சிவபெருமானை, தாங்கும் - சுமக்கிற, சிலாதரன் புதல்வன்கண்டான் - சிலாதராிஷிபுத்ரனாகிய நந்தியைத் தரிசித்தான் எ-று.

நந்தியென்றது நந்திமலையை. வினையிலர் முற்றெச்சம். வேழம் - மூங்கில். தேம் - தேன். இறால் - தேன்கூடு. அஞ்சுபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். விடை ஆகுபெயர். (௧0)

அறக்கட லிறைவன் றங்கு மகனகர் பலவுங் கண்டு
மறப்படை மறலி யாசை வருமுனிக் கெதிர்தோன் றிற்றாற்
பிறப்புவன் றொடர றுத்துப் பெறலருங் கதியைக் கண்டோர்
பெறத்தகு தென்னா து வெள்ளிப் பெருவரைக் குடுமி தானே.

(இ - ள்.) அறக்கடல்-தருமசமுத்திரமாகிய, இறைவன்-சிவபிரான், தங்கும் - எழுந்தருளியிருக்கிற, அகல் - இடமகன்ற, நகர்பலவும் - பல நகரங்களையும், கண்டு - தரிசித்து, மறப்படை - கோபத்தையுடைய சேனைகளுக் கதிபனாகிய, மறலி - யமனது, ஆசை - திசையைநோக்கி, வரும் - வருகிற, முனிக்கு - அகஸ்தியமுனிக்கு, எதிர்-எதிரில், பிறப்பு-பிறவியாகிய, வல்தொடர் - வலிய விலங்கை, அறுத்து - சேதித்து, பெறல் அரு - பெறுதற்கரிய, கதியை - நற்கதியை, கண்டோர் - கண்டவர்கள், பெறத்தகு - அடையத்தகுந்த, தெனாது வெள்ளிப் பெருவரை - வெள்ளியினானே யியன்ற பெருமலையாகிய தென்கயிலாயத்தின், குடுமி - சிகரமானது, தோன்றிற்று - காணப்பட்டது எ-று.

அறக்கடலிறைவன் றங்கு மகனகர் பலவும் என்றது திவ்வியக்ஷேத்ரங்களை. வெள்ளிப்பெருவரைக் குடுமிமுனிக்கெதிர் தோன்றிற்று என முடித்துக்கொள்க. (௧௧)

காண்டலுந் தொழுதி றைஞ்சிக் கண்டுளி சொரிய மெய்யி
னீண்டிய மயிர்பொ டிப்ப வேத்துபு வடமீன் வென்ற
மாண்டகு கடவுட் கற்பின் மனையொடு கயிலைக் குன்றின்
சேண்டிகழ் சிறப்புக் கூறுந் திருநக ரெல்லை புக்கான்.

(இ - ள்.) காண்டலும்-(அந்தச் சிகரத்தை) கண்டவுடனே, தொழுது - தொழுது வணங்கி, கண் துளி சொரிய - கண்கள் நீர்த்துளிகளைச் சிந்தவும், மெய்யில் ஈண்டிய - உடம்பில் நிறைந்திருக்கிற, மயிர் பொடிப்ப - மயிர்க்குச் செறியவும், ஏத்துபு - துதித்து, வடமீன் வென்ற - அருந்ததியை வென்ற, மாண்தகு - மாட்சிமை பொருந்திய, கடவுட் கற்பின் - தெய்வக் கற்பினையுடைய, மனையொடு - மனையாளோடு, கயிலைக்குன்றின் - கயிலைமலையின், சேண் திகழ் - பெருமை விளங்குகிற,

சிறப்பு - மேன்மையை, கூறு-சொல்லிக்கொண்டே, திருநகர்-திருநகரத்தின், எல்லை - எல்லையில், புக்கான் - பிரவேசித்தான் எ-று.

எத்துபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். கடவுட்கற்பு-அழியாக்கற்பு. மனை ஆகுபெயர். மனையென்றது - லோபாமுத்திரையை.

புக்கவ னாப்பா லோடும் புனிற்றிளங் கன்று போலச்
செக்கரஞ் சடையி னன்றன் றிருமுன்னர் விரைவி னெய்தி
நெக்குநெஞ் சுருகக் கண்க ணீரறு தொழுக வுச்சிக்
கைக் கமலங்கள் கூப்பிக் கரணங்க ளடங்கி நின்றான்.

(இ - ள்.) புக்கவன் - பிரவேசித்தவன், ஆபாலோடும் - பசுவினிடத்தை நாடியோடுகிற, புனிற்றிளங் கன்றுபோல - ஈன்றணிமையையுடைய இளங்கன்றைப்போல, அம் - அழகிய, செக்கர் சடையினன் - செவந்த சடாபாரத்தை யுடையவனாகிய சிவபெருமானது, திருமுன்னர் - சந்நிதிக்கெதிரே, விரைவின் எய்தி - விரைவாகப் போய், நெஞ்சு - மனமானது, நெக்கு உருக - நெகிழ்ந்துருகவும், கண்கள்-கண்களில் நின்றும், நீர் - நீரானது, அறுது - இடையறாது, ஒழுக - ஒழுகவும், உச்சி-சிரசில், கைக்கமலங்கள் - கைத்தாமரை மலர்களை, கூப்பி - குவித்து, கரணங்கள் அடங்கி நின்றான் - கரணச் செயல்கள் யாவு மொடுங்கி நின்றான் எ-று.

ஆப்பால் என்பதில் பால் ஏழனுருபு. புனிறு - ஈன்றணிமை. இறைவனைத் தொழப் பெற்ற புண்ணிய முடைமையால் கைக்கமலங்கள் என்றார். (கஙு)

நெடும்பொழு துடறம் பித்து நின்றுபின் னவச நீங்கிக்
கடுங்கதி ராழி யேந்துங் கரியவன் முதலோர் மௌலி
மிடைந்தொளிர் மணித்த ழும்பு விளங்கிய கழற்காற் றெய்வ
மடங்கலை நாத்த ழும்ப வழுத்திய தொடங்கி னானே.

(இ - ள்.) நெடும்பொழுது-நெடுங்காலம், உடல்-உடம்பு, தம்பித்து நின்று - அசைவற்று நின்று, பின் - பிறகு, அவசம் நீங்கி-அவசமொழிந்து, கடுங்கதிர் - வெப்பமாகிய ஒளியையுடைய, ஆழி - சக்கராயுதத்தை, ஏந்தும் - தாங்குகிற, கரியவன்முதலோர் - திருமால் முதலானோர்களுடைய, மௌலி - கிரீடங்களில், மிடைந்து - நெருங்கி, ஒளிர்-விளங்குகிற, மணி-அரதனங்களின், தழும்பு - வடு, விளங்கிய - பிரகாசிக்கிற, கழல் - வீரக்கழலைத் தரித்த, கால் - திருவடியையுடைய, தெய்வமடங்கலை - தேவசிங்கத்தை, நாதழும்ப - நாத்தழும்பேறும்படி, வழுத்திய - தோத்திரம் செய்வதற்கு, தொடங்கினன் - ஆரம்பித்தான் எ-று.

அவசம் - பரவசம். மிடைதல் - நெருங்குதல். தெய்வமடங்கல் என்றது சிவபெருமானை. வழுத்திய செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (கச)

அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பா

உலகெலாம் படைத்துக்காத் தொழித்துமறைத் தருள்செய்யு
மலகிலாத் திருவிளையாட் டாடுவான் குறிகுணமற்
றிலகுநிலை யதுசிறப்ப வீறிலரு ளுருவெடுத்துக்
கொலைகெழுவே லரிநெடுங்கட் குமுதவாய்க் குவிமுலையம்
புலியனைய முகஞானப் பூங்கோதை யொடுகயிலை
மலையில்வீற் றிருந்தருளு மதிமுகிழ்ீர்ப் பெருஞ்சடையோய்.

இது ஆறடித்தரவு.

அலங்குளைய பரிமானோ வமுதனைய திருமொழியோ
விலங்குபுகழ் பலவுமெடுத் தேத்துமிகல் வந்திகரோ
நலங்கொளரு மறைநான்கு நாடரிய நிலையாய்க்கே.

தரியலரா ருயிருண்ணுந் தனிக்கணையோ கூர்ங்கோட்டு
வரையனைய மழவிடையோ மலர்சாத்து மடியானோ
விரிகதிர்மா மணிவண்ணன் வியனுலக முடையாய்க்கே.

சுடர்விழியோ வெழிலுடம்போ தூச்சிறையோ திமமுயர்த்த
கடிமலரோன் செலுத்துநிலைக் கண்ணகன்றே ருருளேயோ
படரொளியா யிரங்கதிரோன் பல்லுயிரும் படைத்தாய்க்கே.

இவை மூன்றும் மூவடித்தாழிசை.

வெருவருங் கூற்றம் வீழ்தரச் சிறிது
விரனிமிர்ந் தன்றுநின் மென்மலர்த் திருவடி.
மூரணின ரரண மூன்றும்வெந் தவிய
வெரிதழ லுமிழ்ந்தன் றிறைவநின் னிளநகை.

இவையிரண்டும் நாற்சீரோரடி யம்போதரங்கம். பேரெண்.

கனல்பட விழித்துக் காமற் காய்ந்தனை,
மனைவி வேண்டலின் மறித்தவற் றந்தனை,
யருவரை பெயர்த்த வரக்கனை நெரித்தனை,
புரிநரம் பின்னிசை புகன்றவற் கருளினை.

இவை நான்கும் நாற்சீரோரடி யம்போதரங்கம். அளவெண்.

அழித்தனை சிறுவிதி யாக, மசைத்தனை யுடையென மாக,
மூரித்தனை புகர்முக நாக, முயர்த்தனை மழவிடை மேகம்.

இவை நான்கு முச்சீரோரடி யம்போதரங்கம். இடை எண்.

புண்ணிய மூர்த்தியை, புகலருஞ் சீர்த்தியை,
யெண்ணருஞ் சிறப்பினை, யில்லாப் பிறப்பினை,
யவாவிலா மனத்தினை, யடற்கரி வனத்தினை,
தவாத்திரு வருளினை, தலைமறைப் பொருளினை.

இவை எட்டும் இருசீரோரடி யம்போதரங்கம். சிற்றெண்.

எனவாங்கு, இது தனிச்சொல்.

அரும்பெற லொருவநின் றிருந்தடி வணங்குது
மைம்புல விலங்கு வெம்பட ருறுத்து
மாணுப் பிறவிக் கானங் கடந்து
கருதரு மின்ப முத்திப்
பொருவின்மா நகரம் புகுதரற் பொருட்டே.

இது ஐந்தடி நேரிசையாசிரியச் சுரிதகம்.

(இ - ள்.) உலகு எல்லாம்-உலகமுழுதும், படைத்து - சிருட்டித்து, காத்து - ரக்ஷித்து, ஒழித்து - சங்கரித்து, மறைத்து - ஒளித்து, அருள்செய் - அநுக்ரஹிக்கிற, அலகு இல்லா - எல்லையில்லாத, திருவிளையாட்டு ஆடுவான் - திருவிளையாடலைச் செய்யும்பொருட்டு, குறிகுணம் அற்று இலகு - குறிகுணங்களொழிந்து விளங்குகிற, நிலை அதுநிற்ப - அந்த நிலை நிற்க, ஈறு இல் - முடிவில்லாத, அருளுரு எடுத்து - அருள்வடிவெடுத்து, கொலைகெழு - கொலைத்தொழிலமைந்த, வேல் - வேற்படை போன்ற, அரி - வரிபடர்ந்த, நெடுங்கண் - நெடுங்கண்களையும், குமுதம் - செவ்வல்லி மலர்போன்ற, வாய் - வாயினையும், குவிமுலை - குவிந்த தனங்களையும், அம்புலி அனைய - பூர்ணசந்த்ரனை நிகர்த்த, முகம் - முகத்தையுமுடைய, ஞானப் பூங்கோதையோடு - ஞானப்பூங்கோதை யம்மையுடன், கயிலைமலையில் - கைலாயமலையில், வீற்றிருந்தருளும் - வீற்றிருந்தருள்கிற, மதிமுகிழ் - பாலசந்த்ரனைத் தரித்த, பெருஞ்சடையோய் - நீள் சடையையுடையவனே,

நாடு அரிய நிலையாய்க்கு - காண்பரிய நிலையையுடையவுனக்கு, நலம்கொள் - நன்மையைக் கொண்டிருக்கிற, அருமறை நான்கும் - அருமையாகிய நான்கு வேதங்களும், அலங்கு உளைய - அசையாநின்ற புறமயிரையுடைய, பரிமானோ - குதிரையோ, அமுது அனைய - அமிர்தத்தை நிகர்த்த, திருமொழியோ —, இலங்கு-விளங்குகிற, புகழ்பலவும் - பல கீர்த்திகளையும், எடுத்து எத்தும் - எடுத்துப் புகழ்கின்ற, இகல் - வலியராகிய, வந்திகரோ —, வியன் உலகம் உடையாய்க்கு - பெரிதாகிய வுலகங்கள் யாவுமுடையவுனக்கு, விரிகதிர் - பரந்தவொளியையுடைய, மணி - நீலமணிபோலும், வண்ணன் - நிறமுள்ள திருமால், தரியலர் - பகைவரது,

ஆர் உயிர் உண்ணும் - அரிய வுயிரையுண்ணுகிற, தனி - ஒப்பற்ற, கணையோ - அம்போ, கூர்கோடு - கூர்மையாகிய கொம்பினையுடைய, வரை அனைய - மலையைநிகர்த்த, மழவிடையோ - இளவெருதோ, மலர் சாத்தும் - புஷ்பங்களால் அருச்சிக்கிற, அடியானே - அடியவனே, பல் உயிரும் - பல்லுயிர்களையும், படைத்தாய்க்கு - உண்டாக்கின வுனக்கு, படர் ஒளி - பரந்த வொளியையுடைய, ஆயிரம் கதிரோன் - சூரியன், சுடர் - விளங்குகிற, விழியோ-கண்ணோ, எழில்-அழகாகிய, உடம்போ - திருமேனியோ; தூசிறை - வெண் சிறகையுடைய, ஓதிமம் - அன்னத் துவசத்தை, உயர்த்த - எடுத்த, கடி - மணமுள்ள, மலரோன் - பிரமன், செலுத்தும் - நடத்துகிற, கண் அகன் - இடமகன்ற, நிலத்தேர் - பூமியாகிய தேருக்கு, உருளேயோ - சக்கரமோ,

வெருவரும்-யாவரும் அஞ்சுமாறு, வரும்-வருகிற, கூற்றம் - யமன், வீழ்தர - விழும்படி, நின்-உனது, மெல் - மெல்லிய, மலர் - தாமரைமலர் போலும், திருவடி - சீர்பாதத்தின், விரல் - விரலானது, சிறிது - கொஞ்சம், நிமிர்ந்தன்று - நிமிர்ந்தது.

முரணினர் - பகைத்தவரது, அரண்மூன்றும் - மும்மதில்களும், வெந்து அவிய - வெந்து ஒழியும்படி, இறைவ - இறைவனே, நின்-உனது, இளநகை - குறுமுறுவல், எரிதழல் - எரிகிற நெருப்பை, உமிழ்ந்தன்று-உமிழ்ந்தது,

கனல்படவிழித்து - நெருப்புண்டாம்படி நோக்கி, காமன் காய்ந்தனை - மன்மதனை யெரித்தாய், மனைவி - அவன்மனைவியானவள், வேண்டலின் - வேண்டிக் கோடலால், மறித்து - மீட்டும், அவன் - அந்த மன்மதனை, தந்தனை - உயிர்ப்பித்தாய், அருவரை பெயர்த்த - பிறசால் பெயர்த்தற் கருமையாகிய கைலாயமலையைப் பெயர்த்தெடுத்த, அரக்கனை - ராக்ஷஸனை, நெரித்தனை - திருவடி விரலினால் நெரித்து விட்டாய், புரி - முறுக்கப்பட்ட, நரம்பு - நரம்பைக்கொண்டு, இன் இசைபுகன்ற-இனிதாகிய இராகத்தைப் பாடின, அவன்கு - அந்த ராக்ஷஸனுக்கு, அருளினை - அருள்செய்தாய்,

சிறுவிதியாகம் அழித்தனை-தக்கனது யாகத்தை அழித்தாய், மாகம் உடையென அசைத்தனை-ஆகாயத்தை ஆடையா யரையிற்கட்டி யசைத்தாய், புகர்முகநாகம் உரித்தனை - புள்ளிகளோடு கூடிய முகத்தையுடைய யானையை யுரித்தாய், மேகம் மழவிடை உயர்த்தனை-திருமாலாகிய இடபக்கொடியை யெடுத்தனை,

புண்ணியமூர்த்தியை - தருமவுருவினை,
புகல் அரு சீர்த்தியை - சொல்லற்கரிய சீர்த்தியினை,
எண்ணரு சிறப்பினை - நினைத்தற்கரிய மேன்மையை,

இல்லாபிறப்பினை - பிறப்பிலாதாய்,
அவாஇல்லாமனத்தினை - ஆசையில்லா மனத்தாய்,
அடல்கரிவனத்தினை - வலிய யானைக்காட்டினை,
தவாதிரு அருளினை - அழியாத அருளுடையை,
தலைமறைப்பொருளினை - முதன்மையுள்ள வேதார்த்தமாயிருக்கின்றனை,

ஐம்புலவிலங்கு - ஐம்புலன்களாகிய விலங்கு, வெம்படர் உறுத்தும் - கடுந்துன்பத்தைச் செய்தற்கிடமாகிய, ஆறு - நீங்காத, பிறவி - பிறப்பாகிய, கானம் கடந்து - காட்டைக்கடந்து, கருது அரு - நினைத்தற்கரிய, இன்பம் - ஆனந்தத்தைத் தருகிற, பொருவு இல் - ஒப்பில்லாத, மா - பெரிய, முத்திநகரம் - மோக்ஷமாகிய நகரத்தில், புகுதாற்பொருட்டு - பிரவேசிக்கும் பொருட்டு, அரும்பெறல் — பெறுதற்கரிய, ஒருவ - ஒப்பற்றவனே, நின் - உனது, திருவடி வணங்குதும் - சீர்பாதத்தைத் தொழுவோம் எ-று.

படைத்தல் காத்தல் ஒழித்தல் மறைத்தல் அருள்செய்தல் என்னும் இவ்வைந்தினையும் பஞ்ச க்ருத்யம் என்பர் வடநூலார். தமிழ்நூலார் ஐந்தொழில் என்பர். ஒழித்தல் - சங்கரித்தல். மறைத்தல் - திரோபவித்தல். அருள்செய்தல்-அநுக்ரஹித்தல். அருளுரு - குருமூர்த்தம். குமுதம் ஆகுபெயர். அம்புலி ஈண்டைக்கேற்பப் பூர்ணசந்த்ரனென்க. மதிமுகிழ் என்றது ஒரு கலையாகிய சந்த்ரனை. பரிமான் இருபெயரொட்டு. வந்திகர் - புகழ்பாடுவோர். உருள் - சக்கரம். வீழ்தர என்பதற்குப் பகுதி வீழ்தா. அரண மூன்று என்றது இரும்பினாலும், பொன்னினாலும், வெள்ளியினாலும் இயன்றனவாகிய மும்மதில்களை. இவற்றை ஜங்கமபட்டணம் என்பர் வடநூலார். இவை ஆகாயவழியாய் தாம் வேண்டுமிடத்திற்குச் சேறற்குரியன. இவற்றையே த்ரிபுரம் என வடநூலாரும், முப்புரம்எனத் தமிழ்நூலாரும் கூறுவர். "இரும்புறு மாமதில் பொன்னிஞ்சி வெள்ளிப்புரிசையன்றோர், துரும்புறச் செற்ற கொற்றத் தெம்பிரான் றில்லைச்சூழ் பொழிற்கோ" என்னும் மணிவாசகப்பெருமான் திருவாக்கினாலும், பிறசான்றோர் திருவாக்குக்களாலும் இவ்விஷயம் இனிது விளங்கும். மனைவியென்றது இரதிதேவியை. அருவரைபெயர்த்த வரக்கன் இராவணன். இசைபுகன்றவனும் அவனே. நவபிரமர்களில் ஒருவனாதலால் தக்கனை சிறுவிதி யென்றார். திகம்பரனாதலால் இறைவனை மாகம் உடையென வசைத்தனை யென்றார். புகர்முகநாகம் உரித்தனையென்றது கஜாஸுர ஸம்ஹார விஷயத்தை. மழவிடை மேகம் உயர்த்தனை யென்றது த்ரிபுர ஸம்ஹாரகாலத்தில் திருமால் இடபமாய் தாங்கின வ்ருத்தாந்தத்தைக் குறித்தது. கரிவநம் - கயாரணியம். இது கஜாரண்யம் என்னும் வடசொற்றிரிபு. புகுதரல் என்பதற்குப் பகுதி புகுதா. (கூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இன்னண நாக லிங்க மேத்திய பின்ன ராலின்
மன்னிய கடவுட் போற்றி வாரண முகத்தோற் றாழ்ந்து
பன்னிரு தடந்தோட் சாமி பனிமல ரடிப ழிச்சி
யன்னைஞா னப்பூங் கோதை யடிபணீஇ வலம்வந் தானல்.

(இ - ள்.) இன்னணம் - இவ்வண்ணமாக, நாகலிங்கம் - நாகலிங்கத்தை, ஏத்தியபின்னர் - துதித்தபிறகு, ஆலில் - கல்லாலினடியில், மன்னிய - வீற்றிருக்கிற, கடவுள் - தக்ஷிணாமூர்த்தியை, போற்றி - வணங்கி, வாரணமுகத்தோன் - யானைமுகத்தோனாகிய விநாயகமூர்த்தியை, தாழ்ந்து - வணங்கி, பன்னிரு தடம்தோள் - மலைபோன்ற பன்னிரண்டு புயங்களையுடைய, சாமி - முருகவேளின், பனி - குளிர்ச்சியையுடைய, மலர் - தாமரைமலர்போலும், அடி - திருவடியை, பழிச்சி-தோத்திரஞ்செய்து, அன்னை - லோகமாதாவாகிய, ஞானப்பூங்கோதை - ஞானப்பூங்கோதையின், அடி - திருவடியை, பணீஇ - வணங்கி, வலம்வந்தான்-பிரதக்ஷிணம் செய்தான் எ-று.

அடியென மேல் வருதலால் மலர் என்றது தாமரை மலரைக் குறித்தது. பணீஇ - சொல்லிசை யளபெடை. (கக)

பலமுறை வலஞ்செய் தையற் பணிந்துபின் னரிதி னீங்கி
வலிகெழு மகிடற் காய்ந்த வருமுலை யணங்கு வாழு
மலைமிசை யேறி யன்னாண் மணியரிச் சிலம்ப ரற்று
மிலவித ழெழில்க டந்த விணையடி தொழுது மீண்டான்.

(இ - ள்.) பலமுறை-அநேகந்தரம், வலம்வந்து-ப்ரதக்ஷிணஞ்செய்து, ஐயன்பணிந்து - இறைவனைவணங்கி, பின் - பிறகு, அரிதின்நீங்கி - அரிதாயவ்விடம் விட்டு நீங்கி, வலிகெழு - வலிமைபொருந்திய, மகிடன்-காய்ந்த - மஹிஷாஸுரனைச் சங்கரித்த, வருமுலை அணங்கு-துர்க்கை, வாழும் - வீற்றிருக்கிற, மலைமிசை ஏறி - மலையின் மீதேறி, அன்னாள் - அவளது, மணி அரிசிலம்பு - மணிகளாகிய பருக்கைக்கற்கள் பெய்துள்ள சிலம்புகள், அரற்றும் - சத்திக்கிற, இலவு இதழ் எழில் - இலவ மலரினிதழிலுள்ள அழகை, கடந்த - வென்ற, இணை அடி - இரண்டு திருவடியையும், தொழுது - வணங்கி, மீண்டான் - திரும்பினான் எ-று.

வருமுலை அணங்கு-வளராநின்ற தனங்களையுடைய தெய்வப்பெண். அரற்றல் - சத்தித்தல். இலவமலர் - முருக்கம்பூ. கடத்தல் - வெல்லல்.

அவ்வயின் விளங்கித் தோன்று மதிசயம் பலவுங் கண்டு
செவ்விய மனத்தன் றெண்ணீர்த் திருநதி யின்மை காணா
விவ்வயி னதியொன் றின்மை குறையென வெண்ணி யாமோர்
கவ்வைகொ ளிருநீர் யாறு கடிதிவட் டருது மென்று.

(இ - ள்.) அவ்வயின் - அவ்விடத்தில், விளங்கி தோன்றும் - விளக்கமாகக் காணப்படுகிற, அதிசயம் பலவும் கண்டு - பல அதிசயங்களையும் நோக்கி, செவ்விய மனத்தன் - செவ்விய மனத்தையுடையவனாகிய அகத்தியன், தெள்நீர் - தெளிவாகிய நீரையுடைய, திருநதி - அழகிய யாறு ஒன்று, இன்மை - இல்லாதிருத்தலை, காணூஉ-கண்டு, இவ்வயின் - இவ்விடத்தில், நதி ஒன்று இன்மை - ஒரு யாறு இல்லாதிருத்தல், குறைவு என எண்ணி - குறையாமென்று நினைத்து, யாம் - நாம், ஓர்-ஒரு, கவ்வை கொள் - ஒலியைக்கொண்ட, இருநீர் - பெருநீரையுடைய, யாறு - நதியை, கடிது - விரைவில், இவண் தருதும் என்று - இங்கு உண்டாக்குவோமென்று எ-று.

அவ்வயின் என்பதில் வயின் ஏழனுருபு இடப்பொருளது. காணூஉ-சொல்லிசை யளபெடை. (கஅ)

ஐந்தவித் தாண்டு வைகு மருந்தவ முனிவர் பாற்போய்
வெந்துயர்ப் பிறவி கொன்ற மெய்யுண ரடிகள் யாறொன்
றிந்தநற் றலத்த ழைப்ப வெனக்கரு ளுதிரென் றன்னார்
தந்தமுற் றருள்பூண் டுள்ளந் தடநதி முயற்சி யுந்த.

(இ - ள்.) ஐந்து - ஐம்புலன்களையும், அவித்து - அடக்கி, ஆண்டு வைகும் - அங்கே வசிக்கிற, அருந்தவம் - அரிய தவத்தொழிலை மேற்கொண்ட, முனிவர்பால் - முனிவர்களிடத்திற்கு, போய் - சென்று, வெம் துயர் - கொடிய துன்பத்தைத் தருகிற, பிறவிகொன்ற - பிறப்பினையறுத்த, மெய்உணர் - உண்மைப்பொருளை யறிந்த, அடிகள் - சுவாமிகளே, நல் - அழகிய, இந்த தலத்து-இந்த க்ஷேத்திரத்தில், யாறு ஒன்று அழைப்ப - ஒரு நதியை வருவித்தற்கு, எனக்கு - அடியேனுக்கு, அருளுதிர் என்று - பணித்தருள்வீராமென்று பிரார்த்தித்து, அன்னார்தந்த - அவர்கள்செய்த, முற்று அருள்பூண்டு - முழுக்கருணையைப் பெற்று, உள்ளம் - மனமானது, தடம் நதி முயற்சி - பெரிய யாறுண்டாக்கு முயற்சியில், உந்த - செலுத்த எ-று.

முனிவர்பால் என்பதில் பால் ஏழனுருபு இடப்பொருளது. அடிகள் அண்மைவிளி யாதலால் இயல்பாயிற்று. (கக)

ஐயதென் கயிலை நீங்கி யதற்குநான் கியோச னத்தில்
வெய்யவா ணிருதி திக்கில் விளங்கொரு பொருப்பி லேறிச்
செய்யதா ளுவின்ம னத்தைச் சிக்கயாத் தைந்துஞ் செற்று
மெய்தசை கெடவூண் யாதும் விட்டரு நோன்பு ழந்தான்.

(இ - ள்.) ஐய - அழகிய, தென்கயிலை நீங்கி - தென் கைலாயத்தை விட்டு, அதற்கு நான்கு யோசனத்தில் - அதற்கு நான்கு யோஜனை தூரத்

'ல், வெய்யவாள் - வெப்பமாகிய வொளியையுடைய, திருதிதிக்கில்-திரு 'திசையில், விளங்கு - பிரகாசியாநின்ற, ஒரு பொருப்பில் ஏறி - ஒரு 'லைமேலேறி, செய்யதாணுவில்-செவ்விய சிவபெருமானிடத்தில், சிக்க - 'க்கும்படி, மனத்தையாத்து - மனத்தைப் பிணித்து, ஐந்தும்-ஐம்புலன் 'ளையும், செற்று - அடக்கி, மெய்-உடம்பில், தசைகெட - மாமிசமில்லா 'தாழிய, ஊண்யாதும் விட்டு - எவ்வகை யுணவையும் ஒழித்து, அரு - 'ருமையாகிய, நோன்பு உழந்தான் - தவஞ்செய்திருந்தான் எ-று.

ஐ - அழகு. தாணு ஸ்த்தாணு என்னும் வடசொற்றிரிபு. இதற்குப் 'பாருள் அழிவற்றவன் என்பது. சிக்கல் - அகப்படல். யாத்தல் - கட்டு 'ல். பொய்யுடம்பை மெய்யென்றது மங்கலவழக்கு. (உ0)

முல்லைசான் மனையு லோபா முத்திரை யருகு நீங்கா
தெல்லியும் பகலு நின்றே யேற்றநற் பணிகள் செய்ய
நல்லியற் புலவர் கோமா னதிபெறு தவமு ழந்து [ன்.
செல்லுநா ளுள்வி திப்போன் றிருகுகோட் டுதளிற் சென்று

(இ - ள்.) முல்லைசால் - கற்புமிகுந்த, மனை - இல்லாளாகிய, உலோபாமுத்திரை - லோபாமுத்திரை யென்பவள், அருகுநீங்காது - சமீபம் விட்டகலாமல், எல்லியும் பகலும்-இரவினும் பகலினும், நின்று-சலியாது நின்று, ஏற்ற - தகுதியாகிய, நல்பணிகள்செய்ய - தொண்டுசெய்ய, நல் இயல் - நல்லொழுக்கமுள்ள, புலவர்கோமான் - அகஸ்தியமுனிவன், நதி பெறு - யாற்றைப் பெறுதற்குரிய, தவம் உழந்து - தவத்தால் வருந்தி, செல்லும் நாள் - நிகழ்கின்றகாலத்தில், நாள் விதிப்போன் - சூரியனான வன், திருகுகோட்டு - முறுக்குக் கொம்பினையுடைய, உதளில் சென் றான் - மேஷராசிக்கு வந்தான் எ-று.

முல்லை - கற்புக்குப் பெயராதலானே அருந்ததிமுதலிய கற்புடை மாதர் முல்லை மலர்மாலையைச் சூடுவாராயினர். இது, "முல்லையந்தொடை யருந்ததிமுத லெழுமுனிவர், இல்லறம்புரி துணைவியார்" என்றற் றொட க்கத் தான்றோர் செய்யுட்களால் இனிது விளங்கும். சிவகுருவின் மாணாக் கனும் தென்கலைக் காசிரியத்தன்மை பூண்டவனும் பனம்பாரனார் அதங் கோட்டாசான் தொல்காப்பியர் முதலிய பன்னிரு மாணாக்கரையுடைய வனு மாதலால் அகஸ்தியமுனிவனை 'நல்லியற் புலவர்கோமான்' என்றார். மேஷம் - வடசொல். இது தத்பவமாய் மேடம் என வந்தது. இதற்கு யாடு என்பது பொருள். மேஷராசி யாட்டுருவாதலால் அதற்கேற்பத் திருகுகோடு என்னும் அடை கொடுத்தார். (உக)

நனந்தலை யுலக மெல்லா நலிபனிப் பகைபி ரிந்து
பொனங்குவட் டிமயத் தேறப் பொருந்துதன் றுணைவ னுய
வனங்கவே ளாக்க மெய்த வஞ்சிறைக் குயிற்பாண் வாழ
மனங்கவர் வேனில் வேந்து மாநிலத் திறுத்த தன்றே.

(இ - ள்.) நனந்தலை - விஸ்தீர்ணமான, உலகம் எல்லாம் - உலக முழுதையும், நலி - வருத்துதற் கேதுவாகிய, பனி - பனியென்கிற, பகை - விரோதி, இரிந்து-ஓடி, பொலம்குவடு-பொற் சிகரத்தையுடைய, இமயத்து - இமயமலைமேல், ஏற - ஏறவும், பொருந்து - பொருத்தமான, தன்துணைவன் ஆய - தன்நண்பனாகிய, அனங்கவேள் - மன்மதனானவன், ஆக்கம் எய்த - விருத்தியடையவும், அம்சிறை - அழகிய சிறகினையுடைய, குயில் - குயில்களாது, பாண் - இராகம், வாழ - வாழவும், மனம் - மனத்தை, கவர் - கிரகிக்கிற, வேனில் வேந்து - வேனிலாகிய அரசு, மாநிலத்து - பெரிய நிலவுலகத்தில், இறுத்தது - வந்து தங்கிற்று எ-று.

நலிதல் - வருத்துதல். இரிதல் - ஓடுதல். வேனில் - வசந்தருது.

முள்ளரை முருக்கு மந்தி முளையிளந் திங்கள் காட்டுங்
கள்ளக முகிழ்ப்ப லாசுங் கடிமல ரவிழ்த்த தோற்றந்
தள்ளலில் சிறப்பின் வேனி றண்பனிப் பகையி ருந்த [கும்.
வொள்ளெழி னகர மெல்லா மொருங்கெரி யூட்டிற் றொக்

(இ - ள்.) முள் - முள்ளோடுகூடிய, அரை - பொருக்குகளையுடைய, முருக்கும் - முருக்கமரங்களும், அந்தி - அந்திக்காலத்தில், முளை-உதிக்கிற, இளந்திங்கள் காட்டும் - இளந்திங்களின் உருவைக் காட்டுகிற, கள் அகம் - தேனைத் தன்னிடத்தேயுடைய, முகிழ் - அரும்புகளோடு கூடிய, பலாசும் - பலாசமரங்களும், கடி - மணமுள்ள, மலர் - மலர்களை, அவிழ்த்த - விரித்த, தோற்றம் - காட்சியானது, தள்ளல் இல் - ஒருவராலும் அழிக்கப்படாத, சிறப்பின்-சீர்மையையுடைய, வேனில் - வேனில்வேந்தன், தண்பனி - குளிர்ச்சியையுடைய பனியென்கிற, பகை - விரோதியானவன், இருந்த - வசித்திருந்த, ஒள் எழில் - ஒட்பமான அழகுள்ள, நகரம் எல்லாம் - நகரமுழுதும், ஒருங்கு - ஒருமிக்க, எரி ஊட்டிற்று - நெருப்பு மூட்டினதை, ஒக்கும் - நிகர்த்திருக்கும் எ-று.

பகை ஆகுபெயர்.

மருமலர் வாளி வேந்தன் வருமுலை யரித்த டங்கட்
டிருநுத லணங்கோ டாடத் தென்றலந் தூதன் முன்னி
விரைமலர்த் துணர்க ளானு மெல்லிளந் தளிர்க ளானும்[ல்.
பொருகடல் வரைப்பி னுள்ள பொழிலெலா மணிவித் தானு

(இ - ள்.) மரு - மணமுள்ள, மலர்வாளி - புஷ்ப பாணத்தையுடைய, வேந்தன் - அரசன், வரும் - வளராநின்ற, முலை - தனங்களையும், அரி - வரிபரந்த, தடம்கண் -பெருங்கண்களையும், திருநுதல் - அழகிய நெற்றியையும் உடைய, அணங்கோடு - தன் மனைவியாகிய இரதியோடு கூடி, ஆட - விளையாடும் பொருட்டு, தென்றல் - தென்றற்காற்றாகிய, அம் -

அழகிய, தூதன்-தூதனானவன், முன்னி-முந்திவந்து, விரை-மணமுள்ள, மலர் துணர்களாலும் - பூங்கொத்துக்களாலும், மெல் - மெல்லிய, இளந் தளிர்களாலும் - இளந்தளிர்களாலும், பொரு - அலைமோதுகிற, கடல் - கடல்சூழ்ந்த, வரைப்பில் உள்ள - உலகத்திலுள்ள, பொழில் எல்லாம் - சோலைகளெல்லாம், அணிவித்தான் - அலங்கரிப்பித்தான் எ-று.

மருமலர் வாளிவேந்தன் - மன்மதன். ஆட என மேல் வருதலால் அணங்கு என்றது ரதிதேவியை யுணர்த்திற்று. துணர் - கொத்து. (உச)

மாதர்மென் பொதும்ப ரெல்லா மணவணி மகளி ரொத்த
காதலங் கொழுநர் தம்மைக் கலந்தமா மதிமு கத்துப்
போதரி நெடுங்க ணல்லார் பூஞ்சிறைக் குயில்க ளொத்தார்
கோதையர் துணை துறந்தார் மடமயிற் குழாத்தை யொத்தார்.

(இ - ள்.) மாதர் - அழகிய, மெல் - மெல்லிய, பொதும்பர் எல்லாம் - சோலைகளெல்லாம், மணவணி - மணக்கோலம் பூண்ட, மகளிர் ஒத்த - மாதரை நிகர்த்திருந்தன, காதல் - ஆசையுள்ள, அம் - அழகிய, கொழுநர்தம்மை - தம் கணவரை, கலந்த - கூடின, மாமதி - பூர்ணசந்திரனை நிகர்த்த, முகத்து - முகத்தையும், போது - கருங்குவளை மலர்போலும், அரி - வரிபடர்ந்த, நெடுங்கண் - நெடுகிய கண்களையுமுடைய, நல்லார் - மாதர், பூ - அழகாகிய, சிறை - சிறகுகளையுடைய, குயில்கள் ஒத்தார் - குயில்களை நிகர்த்திருந்தார், துணைதுறந்தார் கோதையர் - கணவரைப்பிரிந்த மாதர், மடம் - இளமைபொருந்திய, மயில் குழாத்தை - மயிற்கூட்டத்தை, ஒத்தார் - நிகர்த்திருந்தார் எ-று.

போது என வாளா கூறினரேனும் கண்ணுக் குவமையாகப் புணர்க்கப்படுதலால் கருங்குவளை மலர் என் றுரைக்கலாயிற்று. இச்செய்யுளால் வேனிற்காலம் குயில்களுக்கு இன்பத்தையும் மயில்களுக்குத் துன்பத்தையும் உண்டாக்குமென்பது பெறப்பட்டது. (உரு)

இந்நில வரைப்பி னுள்ளோர் யாவர்க்குங் கேள்வி யின்பந்
தன்னொடு பிறந்த வந்தீந் தமிழ்கொடுத் தாங்கு விண்ணோர்
பொன்னக ரணவுகோட்டுப் பொதியமீன் குழவித் தென்றன்
மன்னிய வுயிர்கட் கூற்றின் வருமின்பம் விளைத்த தன்றே.

(இ - ள்.) இ - இந்த, நிலவரைப்பில் உள்ளோர் யாவர்க்கும் - நிலவுலகிலுள்ளோர் எல்லாருக்கும், கேள்வி இன்பம் - சிரவணாநந்தத்தை, தன்னொடு பிறந்த - தன்னோடு தோன்றின, அம் - அழகிய, தீ - இனிமையாகிய, தமிழ் கொடுத்தாங்கு - தமிழ்கொடுத்தாற்போல, விண்ணோர் - தேவர்கள் வாழ்கிற, பொன்னகர் - பொன்னுலகை, அணவு - அளாவிய, கோடு - சிகரத்தையுடைய, பொதியம் - பொதியமலையானது, ஈன் - தந்த, குழவித்தென்றல் - இளந்தென்றலானது, மன்னிய - நிலைபெற்ற,

உயிர்கட்கு - சீவர்களுக்கு, ஊற்றின்வரும் - ஊற்றுப்போலச் சுரக்கிற, இன்பம் - இன்பத்தை, விளைத்தது - உண்டாக்கியது எ-று.

பொதியமலையிற் பிறந்த தமிழ் யாவர்க்கும் இன்பங் கொடுத்தாற் போல அதிற் பிறந்த இளந்தென்றலும் சீவராசிகளுக்கெல்லாம் சிறந்த இன்பந் தந்ததென்பது கருத்து. சிரவணம் - கேட்கப்படுவது. ஊற்றின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது ஒப்புப்பொருட்டு. (உக)

மாந்தளிர்க் கவசம் புக்கு மணங்கமழ் கைதை யந்தோட்
டேந்தெழி லுடைவாள் வீக்கி யீர்மலர்க் கணைபெய் பிண்டிப்
பூந்தளி ராவந் தாங்கிப் பொருகழைச் சிலையெ டுத்துச்
சேந்தவாய்க் கிளிமான் பூண்ட தென்றலந் திருத்தே ரேறி.

(இ - ள்.) மாந்தளிர் - மாந்தளிராகிய, கவசம்புக்கு - கவசத்திற் புகுந்து, மணம்கமழ்-மணம்வீசுகிற, கைதை அம்தோடு - அழகாகிய தாழைப் பூவென்கிற, ஏந்து எழில் - அழகைத் தாங்கியிருக்கிற, உடைவாள் - உடைவாளை, வீக்கி - அரையிற் கட்டி, ஈர் - குளிர்ச்சியையுடைய, மலர்க் கணைபெய் - புஷ்பபாணங்களை வைத்தற்குரிய, பிண்டிப்பூந்தளிர் - அழகிய அசோகந் தளிரென்கிற, ஆவம்தாங்கி - அம்புப்புட்டிலைத் தாங்கி, பொரு - போர்செய்தற்குரிய, கழைசிலை எடுத்து - கருப்புவில்லை யேந்தி, சேந்தவாய் - செவந்தவாயையுடைய, கிளி - கிளியாகிய, மான் - குதிரை, பூண்ட - பூட்டப்பெற்ற, அம்தென்றல் - அழகிய தென்றற் காற்றாகிய, திருத்தேர் ஏறி - திவ்யரதத்தின்மேல் ஏறி எ-று.

கவசம் - சட்டை (போர்வை). கைதை - தாழை. உடைவாள்-அரையிற்கட்டும் சுரிகை. வீக்குதல் - கட்டுதல். அம்புப்புட்டிலை அம்பறாத்தூணியென்றுங் கூறுவர். இதனை அக்ஷயதூணீரம் என்பர் வடநூலார். மா - குதிரை. இது னகரச்சாரியை பெற்று மான் என்றாயிற்று. (உஉ)

கருங்குயிற் றொழுதி யென்னுங் காகள மிரங்க வண்டு
சுரும்புதேன் ஞிமிறென் றெண்ணுந் தொலைவிலாப் படையுஞ் சூழ
வருந்துணை வசந்தன் றன்னோ டனங்கவே டாது நண்ணின்
விரிந்திரு விசும்பு போர்ப்ப விரகர்மேற் படையெ ழுந்தான்.

(இ - ள்.) கருங்குயில் தொழுதி என்னும் - கருங்குயிற் கூட்டமென்கிற, காகளம் இரங்க - ஊதுகொம்பு ஒலிக்க, வண்டுசுரும்பு தேன் ஞிமிறு என்று எண்ணும் - வண்டுசுரும்பு தேன்ஞிமிறு என் றெண்ணப் படுகிற, தொலைவு இல் - தோல்வியில்லாத, நால்படையும் சூழ - நால்வகைச் சேனைகளும் சூழ்ந்துவர, அருந்துணை - அருமையாகிய துணைவனென்கிற, வசந்தன் தன்னோடு - வசந்தனுடன், அநங்கவேள் - மன்மதனைவன், தாது - மகரந்தமாகிய, நுண்தூள் - நுண்ணியதூள்கள், விரிந்து-

ரந்து, இரு - பெரிய, விசும்புபோர்ப்ப - ஆகாயத்தை மறைக்கும்படி, ிரகர்மேல் - விரகிகள்மீது, படையெழுந்தான்-படையெடுத்தான் எ-று.

தொழுதி - கூட்டம். காகளம்-சின்னம் எனினுமாம். வண்டு முதலிய ான்கும் அவற்றின் சாதிபேதங்கள். துணைவன் - உதவிசெய்வோன். ்சந்தன் என்றது வசந்தருதுவை. விரகர் - காமுகர். (உஅ)

இன்னிள வேனில் செல்ல விருங்கடல் சுவற விண்டோய்
சென்னியங் குன்ற மெல்லாந் திசைமுக மழற்றச் செங்கேழ்ப்
பன்னிரு சுடரு மொன்றாய்ப் பகற்கதிர் பரப்பி யாங்கு
மன்னுயிர்த் தொகைவெ தும்ப வந்தது முதிய வேனில்.

(இ - ள்.) இன் - இனிதாகிய, இளவேனில் செல்ல - இளவேனிற் பருவம் கழிய, இரு - பெரிய, கடல் - சமுத்திரம், சுவற - வற்றிப்போக, விண்தோய் - ஆகாயத்தைத் தீண்டுகிற, சென்னி - சிகரத்தையுடைய, அம் - அழகிய, குன்றம் எல்லாம் -மலைகளெல்லாம், திசைமுகம் அழற்ற-திக்குகளினிடமெல்லாம் சுட, செங்கேழ் - செந்நிறத்தையுடைய, பன்னிரு சுடரும் - பன்னிரண்டு சூரியர்களும், ஒன்று ஆய் - ஒன்றாகக்கூடி, பகல்கதிர் பரப்பியாங்கு-பகற்கதிரை விரித்தாற்போல, மன்-நிலைபெற்ற, உயிர்த்தொகை வெதும்ப-சீவராசிகள் வெதும்ப, முதியவேனில் வந்தது-முதுவேனிற் பருவம் வந்தது எ-று.

குன்று எனற்பாலது அம்முச்சாரியை பெற்றுக் குன்றம் என்று யிற்று. சுடர் என்றது பன்னிரு என்ற விசேடணத்தால் சூரியனைக் குறித்தது. (உக)

உருகெழு காலச் செந்தீ யுருத்திரன் றலையெ டுத்து
வெருவர விழித்து நோக்க வெந்தழல் கொழுந்து விட்டுப்
பரவைமா நிலத்தில் வந்து பற்றிய தென்ன வெய்யோ
னெரிபடு கதிர்ப ரப்ப விருநிலங் கொதித்த தன்றே.

(இ - ள்.) உருகெழு - நிறம்பொருந்திய, காலச்செந்தீ உருத்திரன்-காலாக்கினி ருத்ரன், தலையெடுத்து - தலைதூக்கி, வெருவர - கண்டோர் அஞ்சும்படி, விழித்து நோக்க - விழித்துப் பார்க்க, வெந்தழல் - வெப்பமாகிய நெருப்பானது, கொழுந்துவிட்டு-கொழுந்துவிட்டு, பரவை - கடல் சூழ்ந்த, மாநிலத்தில்வந்து பற்றியது என்ன-பெரிய நிலவுலகத்தில் வந்து பற்றிக்கொண்டாற்போல, வெய்யோன் - சூரியன், எரி - எரியாநின்ற, கதிர்பரப்ப - தன் கிரணங்களைப் பரப்ப, இரு - பெரிதாகிய, நிலம் - நிலவுலகம், கொதித்தது - கொதிப்பெடுத்தது எ-று.

கொழுந்துவிட்டு - ஜ்வாலையைப் பரப்பி. பரவை - ஆகுபெயர்.(௩0)

வெந்தழ னிலத்து வெண்டேர் மென்புன லெனம யங்க
விந்திர சாலஞ் செய்த தெறிவளி மரமுந் தீய
நந்தலில் பெருஞ்சி றப்பு நல்குகண் ணோட்ட மில்லாச்
சிந்தையர் கடுஞ்சொல் லென்னத் தீமுகந் திறைத்த தன்றே.

(இ - ள்.) வெம் - வெப்பமாகிய, தழல்நிலத்து - பாலைநிலத்தில், வெண்தேர் - கானலானது, மெல்புனல் என மயங்க - (கண்டோர்) மெல்லிய நீரென்று மயங்கும்படி, இந்திரசாலம் செய்தது - மாயவித்தை செய்தது, எறிவளி - வீசுகிற காற்றானது, நந்தல் இல் - கெடுதலில்லாத, பெருஞ்சிறப்பு - பெருஞ்சிறப்பினை, நல்கு - தருகிற, கண்ணோட்டம் இல்லா - தாக்ஷிண்யமில்லாத, சிந்தையர் - மனமுடையவரது, கடுஞ் சொல் என்ன - கடுஞ்சொல்போல, மரமும் தீய - மரங்களும் கரிந்து போம்படி, தீமுகந்து இறைத்தது-நெருப்பை வாரி யிறைத்தது எ-று.

பாலைநிலத்தைத் தழல்போலும் நிலம் என்றது தழல்நில மென்றே கூறினர் அந்நிலவெப்ப மிகுதி தோன்றற்கு. முகத்தல் - மொள்ளல் எனினுமாம். (கக)

நீடழல் வெஞ்சு ரத்து நீரின்றி நாவு லர்ந்து
வாடுபு நிழல்பெ றாது வருந்துபு திரியு மான்கள்
கோடிய கோல னாகிக் குடிகெட வலைக்குங் கல்லார்க்
கூடிய வறனில் வேந்தன் குடைபெறாக் குடிக ளொத்த.

(இ - ள்.) நீடிய - பெரிதாகிய, வெஞ்சுரத்து - வெவ்விய பாலைநிலத்தில், வாடுபு - வாடி, நிழல்பெறாது-நிழலைப்பெறாமல், வருந்துபு-வருந்தி, திரியும் - அலையாநின்ற, மான்கள் - மான்கூட்டங்கள், கோடிய கோலன் ஆகி - கொடுங்கோலை யுடையவனாகி, குடிகெட - குடிகள் கெடும்படி, அலைக்கும் - வருத்தாநின்ற, கல்லார்க்கூடிய - கல்லாரைச் சேர்ந்த, அறன் இல் வேந்தன் - தர்மமில்லாத அரசனது, குடைபெறா - குடை நிழலைப் பெறாத, குடிகள் ஒத்த - குடிகளை நிகர்த்திருந்தன எ-று.

வாடுபு வருந்துபு என்பன - செய்பு என்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சங்கள். கோடிய - வளைந்த. கோலன் - கோலையுடையவன் (கொடுங்கோன்மையுடையவன்). குடை - ஆகுபெயர். (கஉ)

நெடுநெறி மரங்க ளெல்லா நீணிதி யோடு சுற்றத்
தொடர்புடை யவர்போன் மக்கட் டொகுதியாற் சூழப் பட்ட
தொடுகழல் கிழிக்குங் கூர்ங்கற் சுபெர லொடுவி ராய
வடுதழற் சுரங்க ளெல்லா மான்வழக் கற்ற வன்றே.

(இ - ள்.) நெறி - வழியிலுள்ள, நெடுமரங்கள் எல்லாம் - நீண்ட மரங்களெல்லாம், நீள்நிதியோடு - பெருஞ் செல்வத்துடன், சுற்றம் -

றவினராது, தொடர்பு உடையவர்போல்-பற்றுடையவர்போல, மக்கள் தாகுதியால் - மக்கள் கூட்டத்தினால், சூழப்பட்ட-சூழப்பட்டிருந்தன, தாடுகழல் - தொடுத்த செருப்பையும், கிழிக்கும் - கிழித்தற்குரிய, .ர்கல் - கூரிய கற்களாகியது, சுடுபரலொடு-சுடுபரல்களோடு, விராய-டிய, அடு - வருத்துகிற, தழல் - நெருப்புருவா யிருக்கிற, சுரங்களெல் ாம் - பாலைநிலங்கள்யாவும், ஆள் வழக்கு அற்ற - மனுஷ்ய சஞ்சார ல்லாதொழிந்தன எ-று.

கழல் என்பதனீற்றில் இறந்தது தழீஇய வெச்சவும்மைதொக்கது. டுதல் - வருத்துதல். வழக்கு - வழங்குதல் (சஞ்சரித்தல்). (௩௩)

கலிவிருத்தம்

இனைய வாய விருவகை வேனிலு
மனல்செய் நாள்களி னாரழ லைந்தினுட்
புனலெ னுஞ்சொ லும் போக்கித் தளர்விலா
முனிவ ரேறு முழுத்தவ மாற்றினான்.

(இ - ள்.) இனைய ஆய-இத்தன்மைய வாகிய, இருவகைவேனிலும் - இருவகைவேனிற் பருவங்களும், அனல்செய்நாள்களில் - சுடுகிற காலத்தில், ஆர் - நிறைந்த, அழல் ஐந்தினுள் - பஞ்சாக்கினியின்நடுவே, புனல் என்னுஞ் சொல்லும்போக்கி - நீர் என்னும் சொல்லையும் விட்டு, தளர்வு இல்லா - தளர்ச்சியில்லாத, முனிவர் ஏறு-முனிசிரேஷ்டனாகிய அகத்தியன், முழுத்தவம் ஆற்றினான் - கடுந்தவஞ் செய்தான் எ-று.

இருவகைவேனில் - இளவேனில் முதுவேனில் என்பன. அனல் செய் என்பது ஒரு சொன்னீர்மைத்தாய் சுடுகிற என்னும் பொருள்தந்து நின்றது. பஞ்சாக்கினி - நாற்றிசையினும் இடையினும் மூட்டின நெருப்பு. முழுத்தவம் என்பதில் முழுமை ஈண்டைக்கேற்பக் கடுமை யெனப் பொருள்பட்டு நின்றது. ஆற்றல் - செய்தல். ஆற்று பகுதி. (௩௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

குயினெலா மன்ன மென்னக் குரைகட னாடிச் சென்று
வயினிரு புடையும் விம்ம வாய்மடுத் துண்டு தோகை
மயில்கள்போற் குன்ற நாடி வந்துநீள் சிமய முற்றி
வியனிரு விசும்பெ ழுந்து விரிகட லாமிழ்ந்த மன்றே.

(இ - ள்.) குயின் எல்லாம் - மேகங்களெல்லாம், அன்னம் என்ன - அன்னம் போல, குரை - ஒலிக்கிற, கடல்நாடி சென்று - சமுத்திரத்தை நோக்கிப்போய், வயின் - இடங்கொண்ட, இருபுடையும் - இரண்டு பக்கமும், விம்ம - புடைக்க, வாய்மடுத்து - வாய் வைத்து, உண்டு - நீரைக் குடித்து, தோகை - கலாபத்தைபுடைய, மயில்கள்போல் - மயில்கள்

போல, குன்றம் நாடிவந்து-மலையை நோக்கி வந்து, நீள் - நீண்ட, சிமயம் முற்றி - சிகரத்திலேறி, வியன் - விசாலமான, இருவிசும்பு - பெரிதாகிய ஆகாயத்தில், எழுந்து - கிளம்பி, விரிகடல் - பரந்த கடலின்கண், உமிழ்ந்த - சொரிந்தன எ-று.

குயின் - மேகம். அன்னம் என்ன என்றது அன்னம்போல வெண்ணிறமுள்ளனவாய் என்றபடி. மயில்கள்போல் என்றது மயில்கள்போல நீலநிறமுள்ளனவாய் என்றபடி. குரைத்தல் - ஒலித்தல். விம்ம - பருக்க எனினுமாம். முற்றல் - ஏறல். ஆகாயத்தை இருவிசும்பு என்றது மற்றை நான்கு பூதங்கட்கும் இடந்தரும் பெருமைதோன்றற் கென்க. (௩௫)

அருவரைக் குலங்க ளெல்லா மருவியந் தும்பை சூடிக்
கருவிமா மழைத்தோ லேந்திக் கடுமின்வாள் விதிர்த்துத் தங்கள்
விரிசிறை யறவெ றிந்த விண்ணவன் றன்னோ டேற்றுப்
பொருதர முயல வன்னோன் பூஞ்சிலை வளைத்தா னன்றே.

(இ - ள்.) அரு - அரிய, வரைகுலங்கள் எல்லாம் - மலைக்கூட்டங்களெல்லாம், அம் - அழகிய, அருவி - அருவியாறுகளாகிய, தும்பைசூடி - தும்பைமலர் மாலையைத் தரித்து, கருவி - உலகிற்குத் துணைக்காரணமாகிய, மாமழை - பெரிய மேகமாகிய, தோல் ஏந்தி - தோலைத்தாங்கி, கடுமின்வாள் விதிர்த்து - வேகத்தையுடைய மின்னலாகிய வாட்படையை அசைத்து, தங்கள் - தமது, விரிசிறை-படர்ந்த சிறகுகளை, அற எறிந்த- அறும்படி வெட்டின, விண்ணவன் தன்னோடு-தேவேந்திரனோடு, ஏற்று- எதிர்த்து, பொருதர - போர் செய்ய, முயல - முயற்சிசெய்ய, அன்னோன்- அந்த இந்திரன், பூஞ்சிலை வளைத்தான் - (தனது) அழகிய வில்லைவளைத்தான் எ-று.

குலம் - கூட்டம். தும்பைமலர்மாலை போர்க்குச் செல்லும் வீரன் சூடிச் செல்வது மரபாதலால் அருவியை மாலையாகிய போர்வீரன் சூடின தும்பைமலர்மாலை யாக்கினார். அருவியும் தும்பையும் வெண்ணிறத்தாலொப்பாயின. தோல் - பரிசை. எறிதல் - வெட்டுதல். விண்ணவன் என வாளா கூறினரேனும், சிறையற வெறிந்த என்னும் விசேடணத்தால் இந்திரனை யுணர்த்திற்று. ஏற்றல் - எதிர்த்தல். பொருதல் - போர் செய்தல். பகுதி பொருதா. அன்னோன் பூஞ்சிலையென்றது இந்திரதநுசை,

தடங்கடல் குறைய வுண்ட தழங்குரற் கொண்டல் வான
மடங்கலுங் கவிந்து விண்டோ யடுக்கல்கள் புதைய நின்று
குடங்கொடு சொரிவ தென்னக் குளங்கள்கோ டுடையு வெய்யோ[ன்]
சுடுங்கதி ருலகம் வேட்பச் சோவெனச் சொரிந்த தன்றே.

(இ - ள்.) தடங்கடல் - விரிந்த கடல்நீரானது, குறைய-வற்றும்படி, உண்ட - பருகின, தழங்கு-ஒலிக்கிற, குரல்-முழக்கத்தையுடைய, கொண்டல் - மேகமானது, வானம் அடங்கலும் கவிந்து - ஆகாயமுழுதும் மூடி,

விண்தோய் - ஆகாயத்தையளாவிய, அடுக்கல்கள் - மலைகள், புதைய நின்று - மறையும்படி நின்று, குடம்கொடு - குடத்தினால், சொரிவது என்ன - பெய்வதுபோல, குளங்கள் கோடு உடைய - குளங்களின் கரை உடையும்படி, வெய்யோன்-சூரியனது, சுடும்கதிர் - சுடுகிற கிரணத்தை, உலகம் வேட்ப - உலகம் விரும்ப, சோஎன - சோவென்று, சொரிந்தது - மழையைப் பொழிந்தது எ-று.

தழங்கல் - ஒலித்தல். கவிதல் - மூடுதல். புதைதல் - மறைதல். கோடு - கரை. சோ - ஒலிக்குறிப்பு. (௩௭)

கொடிநுடங் கொளிசெய் மின்னுக் கூத்தியர் வான ரங்கத்
திடிமுழா முழக்கம் விம்ம வெழில்பட வாடி யாடிப்
படுகடல் குறைய வுண்டு பாய்புன லெழினி யுள்ளாக்
கடிதுபுக் கொளித்தன் மௌவல் கண்டிள முறுவல் பூத்த.

(இ - ள்.) கொடி - கொடிகளின்மேல், நுடங்கு - அசையாநின்ற, ஒளிசெய் -ஒளியைச் செய்கிற, மின்னு - மின்னல்களாகிய, கூத்தியர் - நாட்டியப்பெண்கள், வான் - ஆகாயமாகிய, அரங்கத்து - சபையில், இடி - இடியாகிய, முழா - மத்தளத்தின், முழக்கம் - பேரொலியானது, விம்ம - அதிகரிக்க, எழில்பட - அழகுண்டாக, ஆடி ஆடி - நடித்து நடித்து, படுகடல் குறைய உண்டு - பள்ளமாகிய கடல் வற்றும்படி குடித்து, பாய் - பாய்கிற, புனல்-நீராகிய, எழினி உள்ளா-திரைக்குள்ளே, கடிது-விரைவாக, புக்கு - புகுந்து, ஒளித்தல் - மறைதலை, மௌவல் - முல்லைக் கொடிகள், கண்டு-நோக்கி, இளமுறுவல் பூத்த-இளநகை புரிந்தன எ-று.

நுடங்கல் - அசைதல். மின் என்பது உகரச்சாரியை பெற்று மின்னு என்றாயிற்று. அரங்கம் - நடநசபை. இளமுறுவல் - புன்சிரிப்பு. மௌவல் மலர்ந்தன வென்பது கருத்து. (௩௮)

கருமுகிற் பட்டு டுத்துக் கடுக்கைமா மலர்ப்பொன் பூண்டு
குருதிமெய்க் கோபச் செய்ய குருமணி யணிந்து முல்லைத்
திருநகைக் காந்த ளங்கைத் தீம்புனற் குமிழிக் கொங்கைப்
பொருவினற் கார்ம டந்தை புவிக்கொரு செவிலி யானாள்.

(இ - ள்.) கருமுகில் - கரிய மேகமாகிய, பட்டு - பட்டாடையை, உடுத்து - உடுத்துக்கொண்டு, மா - அழகாகிய, கடுக்கைமலர் - கொன்றை மலராகிய, பொன் - பொன்னாபரணத்தை, பூண்டு - அணிந்து, குருதி - உதிரம்போலும், மெய் - உடம்பினையுடைய, கோபம்-இந்த்ரகோபமாகிய, செய்ய - செந்நிறமுள்ள, குருமணி - குருமணியை, அணிந்து - தரித்து, முல்லை - முல்லைமலராகிய, திருநகை - அழகிய பல்லையும், காந்தள் - காந்தள் மலராகிய, அங்கை - அகங்கையையும், தீ-இனிதாகிய, புனல்குமிழி-நீர்க்குமிழியாகிய, கொங்கை - தனத்தையுமுடைய, பொருவு இல் - ஒப்

பில்லா, நல் - நன்மையைத்தருகிற, கார் மடந்தை - கார்காலமாகிய மாது, புவிக்கு - பூதேவிக்கு, ஒரு செவிலி ஆனாள் - ஒரு செவிலித்தா யாயினாள் எ-று.

இந்த்ரகோபத்தை பட்டுப்பூச்சியென்று வழங்குவது உலகவழக்கு. இதற்கு ஈயல் என்றும் மூதா என்றும் வழங்குவது செய்யுள்வழக்கு. குரு மணி - மாணிக்கம். இது மணிகளெல்லாவற்றினுஞ் சிறந்ததாதலால் இதனைக் குருமணி என்றார். முல்லை ஆகுபெயர். காந்தளும் அது. (௩௯)

வரைமிசை மேகம் போல மனைகண்மேற் றூமஞ் சூழ்ந்த
வருவியங் குன்ற மென்ன வானைக ணனைந்து நின்ற
பரிதியம் பறவை போலப் பற்றுடைத் துணைபி ரிந்த
குருமலர் நெடுங்க ணல்லார் குவிமுலை சுகமி ழந்த.

(இ - ள்.) வரைமிசை - மலையின்மீது, மேகம்போல - மேகம் சூழ்ந்ததுபோல, மனைகள்மேல் - வீடுகளின்மீது, தூமம் சூழ்ந்த - புகைகள் சூழ்ந்தன, அருவி - அருவியாறுகளைத் தன்மேற் கொண்டிருக்கிற, அம் குன்றம் என்ன - அழகிய மலைபோல, யானைகள் நனைந்துநின்ற - யானைகள் நனைந்துநின்றன, பரிதியம் பறவைபோல - சக்ரவாகப் பக்ஷிபோல, பற்று உடை - தம்மிடத் தன்புள்ள, துணை - கணவரை, பிரிந்த - பிரிந்திருக்கிற, குரு - நிறமுள்ள, மலர் - கருங்குவளை மலர்போன்ற, நெடுங் கண் - நீண்ட கண்களையுடைய, நல்லார் - மாதரது, குவிமுலை - குவிந்த தனங்கள், சுகம் இழந்த - இன்பத்தை யிழந்தன எ-று.

தூமம் - வடசொல். பரிதி - சக்ரவாகப்பக்ஷி. இது உருள்வடிவா யிருத்தலால் இதனை மாதர் கொங்கைகளுக் குவமையாக்குதல் கவிமரபு. துணை - ஆகுபெயர். கண்ணுக் குவமையாக்கப் படுதலால் மலர் என்றது கருங்குவளை மலரைக் குறித்தது. சுகம் - வடசொல். (௪0)

கலிவிருத்தம்

சீதநுண் டுளியெனுந் தீய தண்டமும்
பாதக வடந்தைவன் பாச முங்கொடு
காதலந் துணையொரீஇக் கலங்கு வோர்கண்மேற்
கூதிரென் றொருபெயர்க் கூற்றி றுத்ததே.

(இ - ள்.) சீதம்-குளிர்ச்சியாகிய, நுண் - நுட்பமான, துளிஎன்னும்-துளியென்கிற, தீயதண்டமும் - கொடிய தண்டாயுதத்தையும், பாதகம்-பாவத்தையுடைய, வடந்தை - வடந்தையாகிய, வல் - வலிய, பாசமும் - பாசத்தையும், கொடு - கைக்கொண்டு, காதல் - ஆசையையுடைய, அம் - அழகிய, துணை - கணவரை, பிரிந்து - நீங்கி, கலங்குவோர்கள்மேல் - [illegible]ர்கள்மேல், கூதிர் என்ற - கூதிரென்று சொல்[illegible] [illegible]டைய, கூற்று இறுத்தது - யமனானவன்

தண்டம் - கதாயுதம். வடந்தை - வடகாற்று. இதனை வாடையென்றும் கூறுவர். என்ற ஒரு எனற்பாலது நிலைமொழியீற்றகரம் தொகுத்தலாய் என்றொரு என்றாயிற்று. கூதிர்-பனிக்காற்று இதனை வாடையென்றுங் கூறுப. கூற்று என்றது சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமாம். ஆதலானே கூற்று என்ற அஃறிணைச் சொல்லாகிய எழுவாய்க் கேற்க. இறுத்தது என அத்திணைப் பயனிலையானே முடித்தார். "செறுத்துடன் வந்தது வந்தது கூற்று" என்றார் பிறரும். (சக)

வருமுலை மகளிரும் வரைகொண் மார்பரும்
பிரிவென வுரைத்தற்கும் பெரிது முள்ளஞ்சிப்
புரைபடா முயக்கொடு பொழுது போக்கினார்
விரிசிறை யன்றிலின் மிதுன மென்னவே.

(இ - ள்.) வரும் - வளராநின்ற, முலை - தனங்களையுடைய, மகளிரும் - மாதரும், வரைகொள் - மலையுருவைக்கொண்ட, மார்பரும் - மார்பினையுடையவராகிய ஆடவரும், பிரிவு என - பிரிவென்று, உரைத்தற்கும் - சொல்லுவதற்கும், பெரிதும் - மிகவும், உள் அஞ்சி - மனமஞ்சி, புரைபடா - குற்றப்படாத, முயக்கொடு - புணர்ச்சியோடு, விரி-பரந்த, சிறை - சிறகுகளையுடைய, அன்றிலின் - அன்றிற் பறவையின், மிதுனம் என்ன - புணர்ச்சிபோல, பொழுது போக்கினார் - காலங்கழித்தார்கள்.

வருமுலை யென்றார் அரும்புகிற முலையென்றற்கு. மலை - ஆகுபெயர். புரை - குற்றம். முயக்கு - புணர்ச்சி. (சஉ)

உடலலை குளிரினுக் குடைந்த வில்லவர்
தடவினு ளொருப்பினைத் தணத்த லஞ்சினார்
கடவுளர் பசிப்பிணி களையும் வேள்வியிற்
சுடரழல் பிரிகலாத் தொழுகு லத்தர்போல்.

(இ - ள்.) கடவுளர் - தேவர்களுடைய, பசிப்பிணி - பசியாகிய நோயை, களையும் - போக்குகிற, வேள்வியில் - யாகத்தில், சுடர் - பிரகாசிக்கிற, அழல் - நெருப்பை, பிரிகலா - நீங்காத, தொழுகுலத்தர் போல் - வேதியர்போல, உடல் - உடம்பை, அலை - வருத்துகிற, குளிரினுக்கு உடைந்த-குளிருக்குத் தோற்ற, இல்லவர் - இல்வாழ்வார், தடவினுள் நெருப்பினை - தடாவிலுள்ள நெருப்பை, தணத்தல் - நீங்குதற்கு, அஞ்சினார் - பயந்தார்கள் எ-று.

களைதல் - நீக்குதலுமாம். தொழுகுலத்தர்-க்ஷத்ரியர் முதலிய சாதியார் யாவராலும் வணங்கப்படுதற் குரிய உத்க்ருஷ்ட ஜந்மாக்கள் (வேதியர்). அலைத்தல்-வருத்துதல். உடைந்து என்றதற்கு அஞ்சியென்றுரைத்தலுமாம். தடாதட எனக் குறுக்கல் பெற்[illegible]யின்பம் நோக்கி.

இதற்குப் பொருள் மிடா (சால்). அது இவ்விடத்திற் கேற்பக் களைப்புச் சட்டியைக்குறித்தது. தணத்தலஞ்சினர் என்றது நீங்காதிருந்தனர் என்ற படி. தொழுகுலத்தோர் யாகாக்கினியை நீங்காதிருத்தல்போல, இல்வாழ் வோர் களைப்புச் சட்டியை நீங்காதிருந்தனர் என்பது கருத்து. (சங)

தண்டையஞ் சீறடித் தருண மைந்தரும்
வெண்டயிர் வெண்ணெய்மோர் வெறுத்து வேட்டன
ருண்டொறும் வெய்யன வுணவு நீரிடங்
கொண்டன வுயிர்களுங் குளிர்க்கு டைந்தவே.

(இ - ள்.) தண்டையஞ்சீறடி - தண்டையணிந்த அழகிய சிற்றடியை யுடைய, தருணமைந்தரும் - பாலியரும், வெள்தயிர் வெண்ணெய் மோர் வெறுத்து - வெண்மையாகிய தயிர் வெண்ணெய் மோர் என்பவற்றை வெறுத்தவராய், உண்தொறும் - தாம் உண்ணுந்தோறும், வெய்யன உணவு - வெப்பமானவுணவை, வேட்டனர் - விரும்பியுண்டார்கள், நீர் இடம் கொண்டன - நீரையே தமதுறைவிடமாகக் கொண்டனவாகிய, உயிர்களும் - பிராணிகளும், குளிர்க்கு உடைந்த - குளிருக்குத் தோற்று விட்டன எ-று.

தருணம் - பாலியம். வெறுத்தல் ஈண்டு உண்ணுமை மேற்று. நீரி டங்கொண்டன வுயிர்கள் என்றது மீன் முதலியவற்றை. (சச)

எரிசுடர் நெருப்பைநீ ரென்ன வேட்டனர்
தருகுளிர் நீரினைத் தழலி னஞ்சின
ரிருசெவி களுந்துகி லிறுகச் சுற்றுபு
விரனிரை மறைபட மெய்ப்பை புக்கனர்.

(இ - ள்.) எரி - எரிகிற, சுடர் - ஜ்வாலையையுடைய, நெருப்பை - அக்கினியை, நீர் என்ன - நீரைப்போலவே, வேட்டனர்-விரும்பினர்கள், குளிர்தரு - குளிர்ச்சியைத் தருகிற, நீரினை - நீரை, தழலின் - நெருப் பைக் கண்டஞ்சுவதுபோல, அஞ்சினர் - பயந்தார்கள், இருசெவிகளும் - இரண்டு காதுகளிலும், துகில் - வஸ்திரத்தை, இறுக சுற்றுபு-இறுகச் சுற் றிக்கொண்டு, விரல் நிரை - விரல் வரிசை, மறைபட - மறையும்படி, மெய்ப்பை - உடற்கவசத்தில், புக்கனர் - புகுந்துகொண்டார்கள் எ - று.

குளிர் மிகுதியால் நீரை நெருப்பாகவும் நெருப்பை நீராகவும் கருதி விரும்பினர்கள் என்பது கருத்து. மெய்ப்பை - மெய் உடம்பு. பை - கவ சம் (சபாய்). (சரு)

மேற்படி வேறு

இன்ன வாகிய காலமி ரண்டினு
நன்னர் நீழ னளிர்சுனை யுட்புகா
மன்னு மாதவன் வாயள வும்புன
றுன்ன நின்று துளங்கல னோற்றனன்.

(இ - ள்.) இன்ன ஆகிய - இத்தன்மையவாகிய, காலம் இரண்டினும் - இரண்டு காலங்களிலும், நன்னர் நீழல் உள் - நல்ல நிழலினும், நளிர்சுனையுள் - குளிர்ந்த சுனைகளினும், புகா - இறங்கி, மன்னும் - நிலைபெற்ற, மாதவன் - பெருந்தவத்தினையுடையவன், புனல்வாய் அளவும் - நீர் வாயளவாகவும், துன்ன - பொருந்த, நின்று - நின்றுகொண்டு, துளங்கலன் - சலனமடையாதவனாய், நோற்றனன் - தவஞ்செய்தான் எ - று.

மாதவன் மா - பெரிதாகிய. தவன் - தவத்தினையுடையவன். துளங்கல் - அசைதல் (சலித்தல்). துளங்கலன் முற்றெச்சம். நோற்றனன் என்பதற்குப் பகுதி நோல். காலம் இரண்டு என்றது வேனிற்காலத்தையும் மழைக்காலத்தையும். வேனிற்காலத்தில் பஞ்சாக்கினி மத்தியிலிருந்துகொண்டும், மழைக்காலத்திலும் பனிக்காலத்திலும் வாயளவு நீரில் இருந்துகொண்டும் நோற்றனர் என்பதனாற் கூறப்பட்டது. (சஅ)

மேற்படி வேறு

திருமலர் முதலிய திகைப்பப் புன்புலம்
வருவன பயிர்சில மகிழ வந்தன
விருபனி யிருதுவும் யாவர் யாவர்க்கு
மொருநிகர் நடையின ருலகிற் றேரினே.

(இ-ள்.) திருமலர் முதலிய-அழகாகிய புட்பமுதலியவை, திகைப்ப-பிரமிக்கவும், புன்புலம் - புன்செய் நிலத்தில், வருவன - உண்டாவனவாகிய, சிலபயிர் - சிலபயிர்கள், மகிழ - களிக்கவும், இருபனியிருதுவும் வந்தன - இருபனிக்காலமும் வந்தன, உலகில் - உலகத்தில், தேரின் - ஆராயுமிடத்தில், யாவர்க்கும் - எல்லார்க்கும், ஒருநிகர் நடையினர் - ஒருநிகராகிய நடையையுடையவர், யாவர் - எவருளர் எ - று.

திருமலர் - திருமகள் வீற்றிருக்குமலர் (தாமரைமலர்). இருபனியிருது வென்றது முன்பனி பின்பனி யிருதுக்களை. யாவர் என்னும் வினா எதிர்மறையாய் ஒருவருமிலர் என்னும் பொருடந்து நின்றது. புன்புலம் வருவன பயிர் சில வென்றது சோளம் கம்பு துவரை முதலியவற்றை. உலகத்தில் எல்லார்க்கும் நல்லவனாகவும் எல்லார்க்கும் கெட்டவனாகவும் ஒருவனிருக்கமாட்டான். அதுபோல இருபனிக்காலமும் நன்செய்ப் பயிர்களை யழிக்கவும் புன்செய்ப் பயிர்களை அளிக்கவும் வந்தனவென்பது கருத்து. (சஎ)

கண்ணக னுலகெலாங் கவைஇய தண்பனி
விண்ணுயர் வரைகளும் வேலை ஞாலமு
மண்ணனீ டிமயமு மதனைச் சூழ்தரு
மண்ணுமா யினவென மருளச் செய்ததே.

(இ - ள்.) கண் அகல் - இடமகன்ற, உலகு எல்லாம் - உலக முழுதும், கவை இய-மூடிக்கொண்ட, தண்பனி-குளிர்ந்த பனியானது, விண் உயர் - ஆகாயத்தளவும் உயர்ந்த, வரைகளும் - மலைகளும், வேலை-கடல் சூழ்ந்த, ஞாலமும் - நிலமும், அண்ணல் - பெருமையோடு, நீடு - நீண்டிருக்கிற, இமயமும் - இமயமலையும், அதனை சூழ்தரு-அதனைச் சூழ்ந்திருக்கிற, மண்ணும் - நிலமும், ஆயின என - ஆய்விட்டனவென்று, மருள - யாவரும் பிரமிக்கும்படி, செய்தது - செய்துவிட்டது எ - று.

உலகத்திலுள்ள மலைகள் யாவும் பனியினல் மூடப்பட்டு இமயமலை போலாயின. மண்முழுதும் அம்மலையைச் சூழ்ந்த மண்போலாயிற்று என்பது கருத்து. தண்பனிசெய்தது என முடித்துக்கொள்க. (௬அ)

வளர்பசும் புற்செறி வயின்றொ றும்பனித்
துளிசுட ரிளங்கதிர் தொடவி ளங்குவ
வொளிர்மர கதத்தக டுறவ ழுத்திய
நளிகொள்செம் மணிகளை நகுதல் செய்யுமே.

(இ - ள்.) வளர் - வளராநின்ற, பசும்புல்செறி - பச்சைப்புல் நெருங்கின, வயின்தொறும் - இடந்தோறும், பனித்துளி - பனியின் துளியானது, சுடர் - சூரியனது, இளங்கதிர் - இளங்கிரணம், தொட - தோய, விளங்குவ - பிரகாசிப்பன, ஒளிர் - ஒளிர்கிற, மரகதத்து அகடு - மரகத மணியின் நடுவே, உற - பொருந்த, அழுத்திய - பதித்த, நளிகொள் - பெருமையைக்கொண்ட, செம்மணிகளை - மாணிக்கங்களை, நகுதல்செய்யும் - சிரிக்கும் எ-று.

வயின் ஏழனுருபு இடப்பொருட்டு. சுடர் ஆகுபெயர். மரகதம் - பச்சைநிறமுள்ள ரத்நம். இது நவரத்நங்களி லொன்று. நகுதல் செய்யும் ஒரு சொன்னீராய் சிரிக்கும் என்னும் பொருள்தந்து நின்றது. (௬௯)

தரவுகொச்சகக்கலிப்பா

இவ்வகைய பனிப்பருவ மிரண்டினுந்தண் பனிக்குளிர்மெய்
வவ்வுபொழு தலைபுரட்டும் வான்புனலி னின்றுமெல்லின்
வெவ்வெயில்கூ ரமயத்து வெந்தழலி னிடைநின்றுஞ்
செவ்வியமெய்ப் பொருளுணர்ந்தோன் றிருந்தியமா தவம்புரிந்தான். [ன்.

(இ - ள்.) இவ்வகைய - இத்தன்மையவாகிய, பனிப்பருவம்இரண்டினும் - இருவகைப் பனிப்பருவங்களிலும், தண்பனி குளிர் - தட்பமான

பனியொடு குளிரும், மெய்வவ்வுபொழுது - உடம்பைக் கவர்ந்து நடுங்குவிக்குங் காலத்திலும், அலைபுரட்டும் - அலைமோதுகிற, வான்புனலில் - பெருநீரில், நின்றும் - நின்றுகொண்டும், எல்லின் - சூரியனது, வெவ்வெயில் கூர் - கொடிய வெயில்மிகுந்த, அமயத்து-சமயத்தில், வெம்-வெப்பமாகிய, தழலினிடை நின்றும் - நெருப்பினடுவே நின்றுகொண்டும், செவ்விய - செம்மையாகிய, மெய்ப்பொருள் உணர்ந்தோன் - உண்மைப்பொருளை யறிந்தவனாகிய முனிவன், திருந்திய - திருத்தமாகிய, மாதவம் புரிந்தான்-பெருந்தவத்தைச் செய்தான் எ-று.

பனிப்பருவம் இரண்டு என்றது முன்பனிப்பருவம் பின்பனிப் பருவம் என்பவற்றை. அலைபுரட்டும் புனல் என்றதனால் பெருநீர் என்றுரைக்கலாயிற்று. எல் ஆகுபெயர். மெய்ப்பொருள் என்றது நித்தியமாகிய பிரமப்பொருளை. (கூ0)

கலித்துறை

இன்ன வாறருந் தவஞ்செய விந்திரன் முதலோ
ரென்ன தோமுனி கருத்தெனத் தெருமர லெய்தி
யன்ன வூர்தியை யடைந்தன ரவனவ ரோடுஞ்
சென்னி வான்றொடுங் கயிலைமால் வரையிடஞ் சேர்ந்தான்.

(இ - ள்.) இன்னவாறு - இந்தப் பிரகாரமாக, அருந்தவம் செய்ய - அரிய தவத்தைச் செய்துகொண்டிருக்க, இந்திரன் முதலோர் - இந்திரன் முதலாகிய தேவர்கள், முனி - முனிவரது, கருத்து - கருத்தானது, என்னதோ என - என்னேவென்று, தெருமரல் எய்தி - மயக்கத்தை யடைந்து, அன்ன ஊர்தியை - அன்னவாகனனாகிய பிரமதேவனை, அடைந்தனர் - சேர்ந்தார்கள், அவன் - அந்தப் பிரமன், அவரோடும் - அவர்களுடனே, வான்தொடு - ஆகாயத்தைத் தீண்டுகிற, சென்னி-சிகரத்தையுடைய, மால் - பெரிதாகிய, கயிலைவரையிடம் - கயிலைமலையினிடத்தை, சேர்ந்தான் - அடைந்தான் எ-று.

கருத்து - எண்ணம். ஊர்தி - வாகனம். (ஏறி நடத்துதற்குரியது.)

நந்தி வானவ னருள்பெறீஇக் கோயிலி னடவா
வந்தி வானிறத் தண்ணறன் பேரவை யணுகிச்
சந்த மாமலர்த் திருவடி பலமுறை தாழ்ந்து
முந்து மாரண மொழிகளாற் பழிச்சுதன் முடித்தே.

(இ - ள்.) நந்திவானவன் - நந்திதேவரது, அருள்பெறீஇ - அருள் பெற்று, கோயிலில் நடவா - சந்நிதியிற் சென்று, அந்திவான் - அந்திவானம்போன்ற, நிறத்து - நிறத்தினையுடைய, அண்ணல் - சிவபெருமானது, பேர் அவை-பெரிய சபையை, அணுகி - அடைந்து, சந்தம் ஆம் - அழ

காகிய, மலர் - தாமரை மலர்போலும், திருவடி - சீர்பாதத்தை, பல முறை - பலதரம், தாழ்ந்து - வணங்கி, முந்தும்-முன்னையதாகிய, ஆரண மொழிகளால் - வேதவாக்கியங்களால், பழிச்சுதல் - துதித்தலை, முடித்து - முடிவுசெய்து எ-று.

வானவன் - தேவன். பெறீஇ சொல்லிசை யளபெடை. நடவா செய்யாவென்னும் வாய்பாட்டிறந்த காலவினையெச்சம். அந்திவானிறம் - செந்நிறம். எல்லா நூல்களுக்கும் முற்பட்ட தாதலால் வேதத்தை முந்துமாரணம் என்றார். பழிச்சல் - துதித்தல். இதற்குப் பகுதி பழிச்சு. (௪)

ஐய வென்கொலோ கருதிய தினைத்தென வறியேன்
செய்ய வார்சடைக் குறுமுனி நெடும்பகல் செல்ல
வெய்ய நோன்புசெய் கின்றனன் மழைமதர் வேற்கட்
டையல் பாகமற் றவற்கரு ளெனவுரை தந்தான்.

(இ - ள்.) ஐய - ஐயனே, கருதியது - எண்ணியது, என்கொலோ - யாதோ, இனைத்து என - அது இத்தன்மையது என்று, அறியேன்-அறிந்திலேன், செய்ய - செவந்த, வார்சடை - நீண்ட சடையையுடைய, குறுமுனி - அகத்தியமுனிவன், நெடும்பகல் செல்ல-நெடுநாள்கழிய, வெய்ய-கொடிதாகிய, நோன்பு செய்கின்றனன்-தவத்தைச் செய்துகொண்டிருக்கிறான், மழைமதர் வேல்கண் தையல்பாக - பெண்பாகனே, அவற்கு - அம் முனிவனுக்கு, அருள் என - அருள்செய்யக் கடவையென்று, உரை தந்தான் - சொல்லினான் எ-று.

சிற்றுருவினனாதலால் அகத்தியனைக் குறுமுனியென்றார். மழைமதர் வேல்கண் தையல் - குளிர்ந்த மதர்த்த வேல்போன்ற கண்களையுடைய பெண் (உமாதேவி). தையல் - கைபுனையப்பட்டவள். உரைதந்தான் - ஒரு சொன்னீரதாய் உரைத்தான் எனப் பொருள்பட்டு நின்றது. பகுதி உரைதா. (௫)

தோட லர்ந்ததா மரையினோன் சொல்லுதல் கேட்டுக்
கோடல் வெண்பிறைக் கண்ணியோன் கூறுமற் றொன்று
நாடி னானல னகத்திய னமதுதென் கயிலைக்
கோடு நீர்நதி வேண்டின னருந்தவ முழக்கும்.

(இ - ள்.) தோடு அவிழ்ந்த - இதழ்விரிந்த, தாமரையினோன்- தாமரைமலரை யாசனமாக வுடையவனாகிய பிரமன், சொல்லுதல்கேட்டு- சொல்லுவதைக் கேட்டு, கோடல் - கோணலையுடைய, வெள் - வெண்மையாகிய, பிறைக்கண்ணியன் - பிறைமாலையைச் சூடின சிவபெருமான், கூறுவர் - சொல்லுவார், அகத்தியன் - அகத்தியமுனிவன், மற்றொன்றும் நாடினன் அல்லன் - வேறொன்றையும் விரும்பினனல்லன், நமது

தென்கயிலைக்கு - நமது தென்கயிலைமலையில், ஓடும் நீர் - ஓடுகிற நீரை யுடைய, நதி - ஒருயாற்றை, வேண்டினன் - விரும்பி, அருந்தவம் உழக்கும் - அரிய தவத்தைச் செய்கிறான் எ-று.

பிறை - சந்த்ரகண்டம். கண்ணி - மாலை. வேண்டினன் - முற்றெச்சம். (ருச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

விண்பயில் கடவுட் கங்கை விடுக்குது மவன்பா னீபோய்க்
கண்களி கொள்ள நின்று கருதியாங் கதனை யீதி
தண்கம லத்தோ யென்று சாற்றினான் விடைகொள் வேதா
வண்சிறை யன்ன மூர்ந்து வந்தனன் முனிமுன் னின்றான்.

(இ - ள்.) தண் கமலத்தோய் - குளிர்ந்த தாமரைமலரை யாசனமாக வுடையவனே, விண் - சுவர்க்கலோகத்திலுள்ள, கடவுள் - தெய்வத்தன்மையமைந்த, கங்கை - கங்கையாற்றை, விடுக்குதும் - அனுப்புவோம், அவன்பால் - அவனிடத்தில், நீபோய் - நீசென்று, கண்களிகொள்ள நின்று - அவன் கண்களிக்கும்படி நின்று, கருதியாங்கு - அவன் நினைத்தபடியே, அதனை - அந்த யாற்றை, ஈதி-கொடு, என்று சாற்றினான்-என்று சொன்னான், விடைகொள் - விடைகொண்ட, வேதா - பிரமன், வண் சிறை - வளவிய சிறகுகளையுடைய, அன்னம் - அன்னப்பறவையை, ஊர்ந்து வந்தனன் - நடத்திவந்து, முனிமுன் நின்றான் - அகத்திய முனிவனுக்கெதிரே நின்றான் எ-று.

விடை - உத்தரவு (கட்டளை). ஊர்தல் - ஏறி நடத்துதல். வந்தனன் முற்றெச்சம். (ருரு)

நிற்றலு மெழுந்தி றைஞ்சி நீள்சடை முனிவ னேத்தப்
பொற்றட மலரி னானீ புகல்பொரு ளுரைத்தி யென்ன
விற்றிரை நதியொன் றைய வேண்டினன் கயிலைக் கென்றான்
சொற்றளி ரியறன் கேள்வன் சுடர்பயில் விசும்பைப் பார்த்தான்.

(இ - ள்.) நிற்றலும் - நின்றவுடன், நீள் சடை முனிவன் - நீண்ட சடையையுடைய அகத்தியமுனிவன், எழுந்து இறைஞ்சி - எழுந்து வணங்கி, ஏத்த - தோத்திரஞ்செய்ய, பொன் - பொன்போலும், தடமலரினான் - பெரிய தாமரைமலரை யாசனமாகவுடைய பிரமன், நீ புகல்பொருள்-நீ சொல்லுதற் குரிய பொருளை, உரைத்தி என்ன-சொல்லக்கடவை யென்று சொல்ல, ஐய - ஐயனே, வில் - ஒளியுள்ள, திரை - அலைவீசுகிற, நதி ஒன்று - ஒருயாற்றை, கயிலைக்கு-தென்கயிலைக்கு, வேண்டினன் என்றான் - விரும்பினேனென்று சொன்னான், சொல் - வாக்குக்கு அதிதேவதையாகிய, தளிரியல் - சரசுவதியின், கேள்வன் - கணவனாகிய பிரமன்,

சுடர்பயில் - சுடர்கள் சஞ்சரிக்கிற, விசும்பை-ஆகாயத்தை, பார்த்தான்- நோக்கினன் எ-று.

தளிரியல் அன்மொழித்தொகைக் காரணப்பெயர். தளிர்போலும் மென்மைத்தன்மை யுடையவளென்பது பொருள். சுடர் - இருசுடர்; சூரிய சந்திரர்கள். இவை ஆகுபெயர்கள். (௫௬)

பொலநகர் முனித வத்துப் பொங்கழல் சுடக்க ரைந்து
மலைமிசை யொழுகிற் றென்ன மணிமிடற் றிறைவன் சென்னி
யலைபுன லிதழிப் பொற்று தளைந்திழிந் தென்னப் பொன்மை
குலவிய நீர்விண் ணின்று குன்றின்மேற் குதித்த தாங்கே.

(இ - ள்.) பொலநகர் - பொன்னுலகானது முனிதவத்து-அகஸ்திய முனிவரது தவமாகிய, பொங்கு அழல் - மிக்க நெருப்பானது, சுட-சுடுதலால், கரைந்து - உருகி, மலைமிசை - மலையின்மீது, ஒழுகிற்று என்ன ஒழுகினதுபோலவும், மணி - நீலமணிபோலும், மிடறு - கண்டத்தை யுடைய, இறைவன் - சிவபெருமானது, சென்னி - சடாபாரத்திலுள்ள, அலைபுனல் - அசையு மியல்புள்ள கங்கைநீரானது, இதழி - கொன்றை மலரின், பொன் - பொன்னிறமுள்ள, தாது - மகரந்தத்தை, அளைந்து - கலந்துகொண்டு, இழிந்தென்ன - இறங்கினாற் போலவும், பொன்மை குலவிய - பொன்னிறங்கலந்த, நீர் - நீரானது, விண்நின்று - ஆகாயத்தினின்று, குன்றின்மேல் - மலையின்மீது, குதித்தது - தாவி வீழ்ந்தது.

பொலம் - பொன்னுதலால், பொலநகர் என்றது பொன்னுலகை, (ஸ்வர்க்கலோகம்). முனியென்றது அகத்திய முனியை. தவத்து என்பதில் அத்து அல்வழிச் சாரியை. பொன் உருகுதற்கு மிருநெருப்பு வேண்டுமென்பார் பொங்கழல் என்றார். மணி - கருநிறமுமாம். இதழி ஆகுபெயர். இழிந்தாலென்ன வெனற்பாலது இழிந்தென்ன வெனத் தொகுத்தலாயிற்று. தாது தேன் எனினுமாம். விண் ஆகுபெயர். குன்று - தென்கயிலைமலை (சீகாளத்திமலை). (௫௭)

ஒலிகெழு நீத்தங் கண்ட வுறுதவக் கிழவன் பன்னாண்
மலடிருந் தரிது நோற்று மணிமகப் பெற்ற தாய்போ
லலகில்பே ருவகை யானா னதற்கயன் பொன்மை யோடு [ன்.
கலியுடை மையிற்பேர் பொன்மு கரியென வுரைத்துப் போனா

(இ - ள்.) ஒலிகெழு-ஒலியையுடைய, நீத்தம்-நீர்ப்பெருக்கை, கண்ட- பார்த்த, உறு - மிக்க, தவக்கிழவன் - அகத்தியன், பல்நாள்-அநேகநாள், மலடு இருந்து - மலடாயிருந்து, அரிதுநோற்று - அரிதாக நோற்று, மணி - அழகாகிய, மக - குழந்தையை, பெற்ற - ஈன்ற, தாய்போல் - மாதாவைப்போல், அலகு இல் - அளவற்ற, பேர் உவகை ஆனான்-பெரு

மகிழ் வடைந்தவனுனன், அதற்கு - அந்த நதிக்கு, அயன் - பிரமன், பொன்மையோடு - பொன்னிறத்தோடு, கலி உடைமையின் - ஒலியையும் உடைத்தாயிருத்தலால், பொன்முகரி யென - பொன் முகரி யென்று, பேர் உரைத்து - பெயரிட்டழைத்து, போனுன் - சென்றான் எ-று.

நோற்று - நோன்புகளை யநுஷ்டித்து. அயன் அஜ: என்னும் வட சொற்றிரிபு. கலி - ஒலி. முகரம் - ஒலி. அதனையுடைத்தாதலால் முகரி யெனப் பட்டது. பொன்முகரி யென்பதற்கு பொன்னிறத்தோடு ஒலி யையுமுடைய தென்பது பொருள். (௫௮)

மலைபிளந் தகிதேக் காரம் வழைகழை திலகம் வேங்கை
பலவுசண் பகமா ரஞ்சேப் பனைமுத லியபெ யர்த்துக்
கொலைகெழு விலங்கி னீட்டங் கொன்றுபல் மணிவ ரன்றி
யொலிபட விழிந்து நீத்த மொழுகிய திருநி லத்தே.

(இ - ள்.) நீத்தம் - வெள்ளமானது, மலைபிளந்து-மலையைப் பிளந்து கொண்டு, அகில் - அகில், தேக்கு - தேக்கு, ஆரம் - சந்தநமரம், வழை - சுரபுன்னைமரம், கழை - மூங்கில், திலகம் - திலகம், வேங்கை-வேங்கை, பலவு - பலா, சண்பகம் - சண்பகம், ஆரம்—, சே—, பனை—, முதலிய - முதலாகிய மரங்களை, பெயர்த்து - பேர்த்து, கொலைகெழு - கொலைத் தொழிலையுடைய, விலங்கின் ஈட்டம் - மிருகங்களின் தொகுதியை, கொன்று - கொன்று, பல் - பலவகையாகிய, மணி-ரத்நங்களை, வரன்றி- வாரிக்கொண்டு, ஒலிபட - ஒலியுண்டாம்படி, இழிந்து - இறங்கி, இரு நிலத்து - பெரிய நிலவுலகத்தில், ஒழுகியது - ஒழுகிற்று எ-று.

மலையென்றது சீகாளத்தி மலையை. வரன்றல் - வாருதல். இழிதல்- இறங்குதல். இருமை - பெருமை. (௫௯)

கலிவிருத்தம்

மன்றன்மெய்ப் பொருள்புணர் மனத்த னோற்றலி
னன்றுதொட் டவ்வரை யகத்தி யாசல
மென்றொரு பெரும்பெய ரெய்திற் றென்பவாற்
குன்றுறழ் புகர்முகக் கொலைவல் யானையோய்.

(இ - ள்.) குன்று உறழ் - மலையையொத்த, புகர்முகம்-புள்ளிகளோடு கூடிய முகத்தையுடைய, கொலைவல் - கொலைத்தொழிலில் வல்ல, யானையோய் - யானைப்படையை யுடையவனே, மன்றல் - மங்களகரமான, மெய்ப்பொருள் புணர் - உண்மைப்பொருளைச் சார்ந்த, மனத்தன்-மனத்தையுடையவன், நோற்றலின் - நோற்றலால், அன்று தொட்டு - அந்நாள்தொடங்கி, அ-அந்த, வரை-மலையானது, அகத்தியாசலம் என்று—, ஒரு பெரும் பெயர் எய்திற்று - ஒரு பெரிய பெயரைப் பெற்றது, என்ப- என்று சொல்லுவர் (அறிஞர்) எ-று.

உறழ்தல் - ஒத்திருத்தல். யானை ஆகுபெயர். மெய்ப்பொருள் புணர் மனத்தன் என்றது அகத்தியமுனிவனை. அசலம் - மலை. நிலைபெயரா திருப்பதென்பது பொருள். (௯0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

துடிவயிர் தொண்ட கம்வே றொடுகணை வரிவில் லாவங்
கடியுடைப் பார்வைப் பன்மா களிற்றுவெண் மருப்புலக்கை
யிடிபடு நறுங்கா ழாரத் தெழிலுரன் முதல வெளவி
வடிமுனைப் பகழி வேடர் வாழிட மழித்த தன்றே.

(இ - ள்.) துடி - உடுக்கை, வயிர் - ஊதுகொம்பு, தொண்டகம் - வேல்—, தொடுகணை - வில்லில் தொடுக்கப்பட்ட அம்பு, வரிவில் - கட்டமைந்தவில், ஆவம் - அம்புக்கூடு, கடி உடை - விளக்கத்தையுடைய, பார்வை - நோக்கத்தோடு கூடிய, பல் - பலவாகிய, மா - மிருகங்கள், களிற்று - யானையின், வெள்மருப்பு - வெண்மையாகிய கொம்பு, உலக்கை—, இடிபடும் - இடிக்கப்படுகிற, நறுகாழ் - நன்மணத்தோடு கூடிய வைரத்தையுடைய, ஆரம் - சந்தனமரத்தாற் செய்யப்பட்ட, எழில் - அழகிய, உரல்—, முதல - முதலாயினவற்றை, வெளவி - கவர்ந்துகொண்டு, வடி - வடித்த, முனை - நுனியோடு கூடிய, பகழி - அம்புகளையுடைய, வேடர் - வேடர்கள், வாழ் - வாழ்கிற, இடம் - இடங்களையும், அழித்தது - அழித்துவிட்டது எ-று.

தொண்டகம் - குறிஞ்சிநிலப் பறை. மருப்புலக்கை யென்பதற்கு மருப்பினாற் செய்யப்பட்ட வுலக்கை யென்றும், மருப்பாகிய வுலக்கை யென்றும் பொருள் கூறலுமாம். ஆரம்-சந்தனமரம். அன்று ஏ அசைகள்.

அரிதொரு வகையி னுய்ந்த வாய்ச்சியர் சுலவி நின்று
வரிவளைக் காந்த ளங்கை வருமுலை புடைத்தி ரங்க
வெருமலி மறுகி னண்ட ரிடம்படு மணிமி டற்றா
னிரையொடு கவர்ந்து காட்டு நிலமெலாம் பரந்த தன்றே.

(இ - ள்.) அரிது - அரிதாக, ஒருவகையில் - ஒருவிதமாக, உய்ந்த - பிழைத்த, ஆய்ச்சியர் - இடைச்சியர், சுலவிநின்று - சூழ்ந்துநின்று, வரிவளை - வரிகளையுடைய வளையலை யணிந்த, காந்தள் - காந்தள் மலர்போன்ற, அங்கை - அகங்கைகளால், வரும் - வளராநின்ற, முலைபுடைத்து - தனங்களில் அறைந்துகொண்டு, இரங்க - அழ, எருமலி - எருமிகுந்த, மறுகின் - தெருக்களையுடைய, அண்டர் - இடையர்கள் வாழ்கிற, இடம் - இடங்களை, படும் - ஒலிக்கிற, மணிமிடறு-மணிகட்டிய கழுத்தையுடைய, ஆன்நிரையொடு - பசு மந்தையோடு, கவர்ந்து-கவர்ந்து கொண்டு, காட்டு நிலம் எல்லாம் - காட்டு நிலமுழுதும், பரந்தது - பரவிற்று எ-று.

அன்று ஏ அசைகள். உய்தல் - பிழைத்தல். பகுதி உய். சுலவல்-சூழ்தல். பகுதி சுலவு. புடைத்தல் - அறைந்துகோடல். பகுதி புடை. இரங்கல் - அழுதல். பகுதி இரங்கு. எரு-கோமயம் (சாணம்). மறுகு - தெரு. படுதல் - ஒலித்தல். ஆ - பசுப்பொது. அது னகரச்சாரியை யேற்று ஆன் என்றாயிற்று. (சுஉ)

விரிதலை நிலங்க டந்தோன் வேங்கடத் தருக டைந்து
பரசுரா மேச்ச ரத்தின் பாலடைந் தெழிற்கா ளத்தித்
திருமகட் கார மென்னச் சிறந்துதீத் திசைதி ரும்பிப்
பொருவிலோங் கார மூதூர் புகுந்துபோய்க் கடல்புக்கன்றே.

(இ - ள்.) விரி - பரந்த, தலை - இடத்தையுடைய, நிலம் - பூமியை, கடந்தோன் - அளந்தவனாகிய திருமாலின், வேங்கடத்து - திருவேங்கடமலையின், அருகு அடைந்து - சமீபத்தை யடைந்து, பரசுராமேச்சுரத்தின்பால் அடைந்து - பரசுராமேசுவரத்தின் பக்கத்திற் சேர்ந்து, எழில்-அழகாகிய, காளத்தி - திருக்காளத்தியாகிய, திருமகட்கு - அழகிய பெண்ணுக்கு, ஆரம் என்ன - ஆரம்போல, சிறந்து-சிறந்திருந்து, தீதிசை திரும்பி - அக்நிதிக்கில் திரும்பி, பொருவு இல் - ஒப்பற்ற, ஓங்காரம் - ஓங்காரமென்கிற, மூதூர் - பழைய நகரில், புகுந்துபோய் - புகுந்து சென்று, கடல் - கடலில், புக்கன்று - பிரவேசித்தது எ-று.

ஆரம் - முத்துவடம். (சுங)

கலிவிருத்தம்

குறுங்குட முனிவரன் குன்றி ழிந்துநீள்
கறங்கலை மாநதிக் கரையி லண்ணறன்
சிறந்தநல் லுருவமாஞ் சிவலிங் கம்பல
நிறைந்தபே ரன்பொடு நெறியிற் றாபித்தான்.

(இ - ள்.) குறு - குறுகின வுருவத்தையுடைய, குடமுனிவரன் - சிறந்தவனாகிய கும்பமுனிவரனது, குன்று இழிந்து - மலையினின்றிறங்கி, நீள் - நீண்ட, கறங்கு - ஒலிக்கிற, அலை - அலைகளையுடைய, மா-பெருமை பொருந்திய, நதிக்கரையில் - அந்த நதிதீரத்தில், அண்ணல் - சிவபெருமானது, சிறந்த - மேன்மையாகிய, நல் - அழகிய, உருவம் ஆம் - வடிவாகிய, பல சிவலிங்கம் - அநேகமாகிய சிவலிங்கங்களை, நிறைந்த-நிரம்பின, பேர் அன்பொடு - மிக்க அன்புடன், நெறியின் - சாத்திரமுறைப்படியே, தாபித்தான் - ப்ரதிஷ்டை செய்தான் எ-று.

குறுங்குட முனிவரன் என்றது அகத்தியரை. இவர் அங்குஷ்ட ப்ரமாண ரூபமுள்ளவராதலால் இவரை குறுமுனியென்றும், குடத்திற் பிறந்தவராதலால் கும்பமுனியென்றும் கூறுவர். வரன் - சிரேஷ்டன். இவரது குன்று அகஸ்த்யாசலம். இழிதல் - இறங்குதல். பகுதி இழி. (சுச)

வீழ்துணை யொடுநதி வேந்தின் றூயநீர்
மூழ்குபு கயிலையின் முக்க ணனடி
தாழ்பவ னொருசிலா தலத்தி ருந்தனன்
சூழ்சடை முனிவரர் துவன்றி யேத்துவார்.

(இ - ள்.) வீழ் - தம்மிடத் தன்புசெய்கிற, துணையொடு - மனைவி யுடன், நதிவேந்தின் - சிரேஷ்டமாகிய அந்த நதியின், தூயநீர்-பரிசுத்த மான நீரில், மூழ்குபு - ஸ்நாநம் பண்ணி, கயிலையில் - கயிலாயத்தில் வீற்றிருக்கிற, முக்கண்ணன் - த்ரிணேத்ரதாரியாகிய சிவபெருமானது, அடி - திருவடியை, தாழ்பவன் - வணங்குவோனாகிய அகத்தியமுனிவன், ஒரு சிலாதலத்து - ஒரு மலையின்மீது, இருந்தனன் - வசித்திருந்தனன், (அவ்விடத்திலுள்ள) சூழ்சடை - சூழ்ந்த சடாபாரத்தையுடைய, முனிவரர் - முனிசிரேஷ்டர்கள், துவன்றி - நெருங்கிநின்று, ஏத்துவார் - (அகத்தியரை) துதிக்கலாயினர் எ-று.

வீழ்தல்-விரும்புதல். துணை ஆகுபெயர். மூழ்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்த காலவினை யெச்சம். தாழ்தல் - வணங்குதல். பகுதி தாழ். சிலாதலம் - கற்களாணியன்ற இடம் (மலை). துவன்றல் - நெருங்கல். பகுதி துவன்று. ஏத்தல் - துதித்தல். பகுதி ஏத்து. (சு௫)

ஐந்தழ னடுவணின் றரிது நோற்றிவட்
சிந்தரும் பிறவிநோய் தெறுமருந்துநீ
தந்தனை யுய்ந்தனந் தமிய மாதலா
லெந்தைநின் னருளினுக் கெல்லை யுண்டுகொல்.

(இ - ள்.) ஐந்தழல் நடுவண் நின்று - பஞ்சாக்நியினிடையே நின்று, அரிது நோற்று - அருமையாய்த் தவஞ்செய்து, இவண் - இவ்விடத்து, சிந்து அரு - கெடுத்தற்கரிய, பிறவிநோய் - பிறவிப் பிணியை, தெறும் - ஒழிக்கிற, மருந்து - மருந்தாகிய நதியை, தந்தனை - அழைத்துக் கொடுத்தாய், தமியம் - தமியேம், உய்ந்தனம்-பிழைத்தோம், ஆதலால்- ஆகையால், எந்தை - எமக்குத் தந்தையே, நின் அருளினுக்கு - உன் கருணைக்கு, எல்லை - வரம்பு, உண்டுகொல் - உண்டோ, (இல்லை) எ-று.

நோற்றல் - தவஞ்செய்தல். பகுதி நோல். மருந்து - ஔஷதம். உய்தலை உஜ்ஜீவித்தல் என்பர் வடநூலார். எந்தை எம் தந்தையென் பதன் மரூஉ. (சுசு)

இருசுடர் வழக்கற வெழுந்த விந்தமாங்
கருவரை புழுதிமேற் கழலி னாழ்த்தினை
முரிதிரைப் பெருங்கடன் முழுது முண்டனை
பெருமநின் னாற்றல்யாம் பேச வல்லமோ.

(இ - ள்.) இருசுடர் - இரு சுடர்களும், வழக்குஅற - வழங்குதலொழிய, எழுந்த - உயர்ந்த, விந்தம் ஆம் - விந்தமாகிய, கருவரை - கரியமலையை, புழுதிமேல் - மண் துகளின்மீது, கழலின் - கழற்காய்போல, ஆழ்த்தினை - அழுத்திவிட்டாய், முரி-முரிகிற, திரை - அலைகளையுடைய, பெரு - பெரிய, கடல் முழுதும் - கடல் முற்றும், உண்டனை - ஆசமனம் செய்தாய், (ஆதலால்) பெரும - பெருமானே, நின் - உனது, ஆற்றல் - வல்லமையை, யாம்-நாங்கள், பேசவல்லமோ - சொல்ல வல்லமோ எ-று.

இருசுடர் - இரண்டு ஒளியுடைப் பொருள்கள் (சூரிய சந்திரர்கள்). வழங்கல் - சஞ்சரித்தல். துகள் - பராகம் (தூசு). கழற்காய் - கழற்சிக் காய். ஆசமனம் செய்தல் - பருகுதல். வல்லமோ மோகாரம் எதிர்மறைப் பொருட்டு. (சுஎ)

கண்ணுத றனக்குந்தன் கணதி பர்க்குமற்
றெண்ணரும் யாவர்க்கு மிணையென் றுன்கணே
மண்ணிலை நிறுத்துதல் வைத்திட் டானெனி
லண்ணனின் பெருமையா மளக்கற் பாலமோ.

(இ - ள்.) கண்ணுதல் தனக்கும் - சிவபெருமானுக்கும், தன்கணதியர்க்கும் - அவரது கணதிபர்களுக்கும், மற்று - மற்றுமுள்ள, எண் அரு - எண்ணுதற்கரிய, யாவர்க்கும் - எல்லார்க்கும், இணையென்று - சமானமென்று, உன் கண்ணே - உன்னிடத்திலேயே, மண் - பூமியை, நிலை நிறுத்துதல் - நிலைநிறுத்தற் றொழிலை, வைத்திட்டான் என்னில் - வைத்திட்டானாயின், அண்ணல்-அண்ணலே, நின்பெருமை - உன் சிறப்பினை, யாம் - நாங்கள், அளக்கற் பாலமோ - அளக்கவல்லமோ எ-று.

கண்ணுதல் - நெற்றியிற் கண்ணுடையோன். கணதிபர் - கணநாதர் (சிவகணங்களுக்குத் தலைவர்). அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். அண்ணல் - அண்மைவிளியாதலா லியல்பாயிற்று. அளத்தல் - வரையறுத்தல். அளக்கற் பாலமோவென்னு மோகாரம் எதிர்மறை. (சுஅ)

கனவிலு நின்னலாற் கைதொ ழாதுநின்
னினைவினி லொழுகுமிந் நிகரில் கற்பினா
ளனைமனை யாப்பெற்ற தாவில் சீர்த்தியோய்
மனையற நினதலான் மற்றொன் றுண்டுகொல்.

(இ - ள்.) கனவிலும் - ஸ்வப்நத்திலும், நின் அல்லால்-உன்னையன்றி, (வேறொருவரை) கைதொழாது - கைதொழாமல், நின் நினைவினில் - உன் திருவுளப்படியே, ஒழுகும் - நடக்கிற, இ - இந்த, நிகர் இல் - ஒப்பில்லாத, கற்பினாள்தனை - கற்புடையாளை, மனையாப்பெற்ற - மனைவியாகப்பெற்ற, தாவில் - அழியாத, சீர்த்தியோய் - புகழுடையோனே, மனை அறம் - இல்லறம், நினது அல்லால் - உன்னதேயன்றி, மற்றொன்று உண்டுகொல் - வேறொன்று உண்டோ எ - று.

மனைவி - இல்லாள். மனையறம் - இல்லறம். இது இல்வாழ்க்கைக் குரிய தர்மம். உண்டுகொல் என்றது இல்லையென்னும் பொருட்டு. (சுக)

இற்றைநாள் வரையிவ ணிருந்த நன்மையாற்
பெற்றனங் காண்டரப் பெரும நின்னடி
யுற்றன முடம்பினா லுறுதி யென்றனர்
சொற்றமிழ் முனியவர்த் துதித்தன் மேயினான்.

(இ - ள்.) இற்றைநாள்வரை - இந்நாள்வரையில், இவண்-இவ்விடத்தில், இருந்த நன்மையால் - இருந்த நன்மையினால், பெரும-பெருமானே, நின் அடி - உன் திருவடியை, காண்டரப் பெற்றனம்-காணப்பெற்றோம், உடம்பினால் உறுதி - உடம்பெடுத்ததனா லடையவேண்டிய வுறுதியை, உற்றனம் - அடைந்தோம், என்றனர்-என்று புகழ்ந்தார்கள், சொற்றமிழ் முனி - அகத்தியர், அவர் - அந்த முனிவர்களை, துதித்தல் மேயினான் - புகழத்தொடங்கினார் எ - று.

நன்மை - புண்ணியம். காண்டரவென்பதற்குப் பகுதி காண்டா. உறுதி - உறுதிப்பொருள். (வீடு பேறு). (எ0)

மறைமுடிப் பொருளது வரம்பு கண்டநல்
லறிவுடை யடிகளும் மருளி னன்றுகொல்
பெறலரு நதியிது பெற்ற தன்றெனிற்
சிறியனேற் கிதுபெறு திறமு முண்டுகொல்.

(இ - ள்.) மறைமுடிப் பொருளது-வேதாந்தப் பொருளின், வரம்பு-எல்லையை, கண்ட - கண்டதனாலுண்டாகிய, நல் அறிவு உடை - மெய்யறிவினையுடைய, அடிகள் - சுவாமிகளே, நும் அருளின் அன்றுகொல் - உமது அருளினாலன்றோ, பெறல் அரு - பெறுதற்கரிய, நதி இது - யாறாகிய இதனை, பெற்றது - யாம் கிடைக்கப் பெற்றது, அன்று எனின் - அல்லவானால், சிறியனேற்கு - சிறியேனுக்கு, இது - இந்த நதியை, பெறு-பெறுதற்குரிய, திறமும்-ஆற்றலும், உண்டுகொல்-உண்டோ எ-று.

மறைமுடிப்பொருள் என்றது பிரமப்பொருள். நன்மை - மெய்யின் மேற்று. நும் அருளினன்றுகொல் என்றது நும் அருளினாலேதான் என்றவாறு. (எக)

முடிச்சடை முனிவிர்நீர் முன்னி னஃதொரு
கடிப்பகை யாயினுங் கடவுட் குன்றமா
மடுக்கலு மைபவி யாகு மன்னதும்
மிடத்தடைந் தனியனு மிறப்ப மேம்பட்டேன்.

(இ - ள்.) முடிச்சடை - சடைமுடியையுடைய, முனிவீர் - முனிவர்களே, நீர் - நீங்கள், முன்னின் - நினைத்தால், அஃது - அது, ஒரு கடிப்பகை ஆயினும் - ஒரு கடுகாயினும், கடவுள் - தெய்வத்தன்மையுள்ள, குன்றம் ஆம் - மலையாய் விடும், அடுக்கலும் - மலையும், ஐயவி ஆகும் - கடுகாய் விடும், அன்ன - அத்தன்மையாகிய, நும் - உங்களுடைய, இடத்து அடைந்து - இடத்திற் சேர்ந்து, அளியனும் - எளியேனும், இறப்ப - மிகுதியாக, மேம்பட்டேன் - மேன்மையை யடைந்தேன் எ-று.

சடைமுடி யெனற்பாலது முடிச்சடையென முன்பின்னாக மாறிக்கிடக்கிறது. முன்னல் - நினைத்தல். பகுதி முன். கடவுட் குன்றம் - மேருமலை. ஐயவி - கடுகு, கடிப்பகையென்பதும் கடுகையே குறிக்கும். (கடி - பிசாசு, பகை - விரோதி). பிசாசுகளுக்கு இது விரோதியாதலால் இதற்கு இப்பெயர் வாய்ந்தது. மேம்பட்டேன் என்பதற்குப் பகுதி மேம்படு.

கொன்றையஞ் சடையருட் குன்றந் தெய்வமாத்
தென்றிருக் கயிலைவாழ் தேய மாப்பெற்ற
மின்றிகழ் சடையிர்நும் மேன்மை பல்லுகஞ்
சென்றிட வேத்தினுந் தீர்தற் பாலதோ.

(இ - ள்.) கொன்றை - கொன்றைமலர்மாலையை, யணிந்த, அம் - அழகாகிய, சடை - சடாபாரத்தையுடைய அருட்குன்றம் - சிவபெருமானை, தெய்வம் ஆ - தெய்வமாகவும், திரு - அழகையுடைய, தென் கயிலை - தென்கயிலாயத்தை, வாழ் - எழுந்தருளியிருக்கிற, தேயம் ஆ- நாடாகவும், பெற்ற - கிடைக்கப்பெற்றிருக்கிற, மின்-மின்கொடிபோல, திகழ் - விளங்குகிற, சடையிர் - சடைமுடியை யுடையவர்களாகிய, நும்- உங்களுடைய, மேன்மை-மேம்பாடு, பல் உகம்சென்றிட-அநேக யுகங்கள் கழிய விருந்து, எத்தினும் - துதித்தாலும், தீர்தற்பாலதோ - அடங்கும் பான்மை யுடைத்தோ எ-று.

கொன்றை ஆகுபெயர். அருட்குன்றம் - அருள்மலை. எக்காலத்தும் அசையாமையும் அழியாமையும்பற்றி இப்பெயர் வழங்கிற்று. தேசம் என்னும் வடசொல் தேயம் என்றாயிற்று. மின் ஆகுபெயர். தீர்தல்-முடிதல் எனினுமாம். தீர்தற்பாலதோ வென்பத னீற்றோகாரம் எதிர்மறை. தீர்தற்பாலதன்றெனப் பொருடரலான். (எரு)

எனவவர்ப் புகழ்ந்துபி னிந்த மாநதிப்
புனலினுட் படிந்தவர் புனித முத்தியங்
கனைகட லழுந்துவர் கண்ணு தற்பிரான்
றனதரு ளொழுக்கமே தாங்க மாநதி.

(இ - ள்) என - என்று, அவர் - அந்த முனிவர்களை, புகழ்ந்து-கீர்த்தித்து, பின் - பிறகு, இந்த - இந்த, மா - பெருமைவாய்ந்த, நதிப்புனலி

னுள் - யாற்று நீரில், படிந்தவர் - மூழ்கினவர்கள், புனிதம் - பரிசுத்தமாகிய, அம் - அழகிய, கலை - புகழ்பெற்ற, முத்திகடல் - மோக்ஷசாகரத்தில், அழுந்துவர்-மூழ்குவார்கள், (ஆதலால்) தரங்கம்-அலைகளையுடைய, மாநதி - இந்தப் பெரிய நதியானது, கண்ணுதற்பிரான் - சிவபிரானது, அருள் ஒழுக்கமே - திருவருட் டாரையேயாகும் எ-று.

கலை - கடலுக்கு இயற்கையடை படிந்தவர் அழுந்துவர் என்றியையும். பிரான் - உபகாரசீலன். இதற்குப் பெண்பால் பிராட்டி (எச)

பரம்பொருள் யோகியைப் பசுவை யீருயிர்க்
கருங்குழன் மகளிரைக் கடவு ளேற்றினைப்
பெருங்கொலை புரிந்தவ ரேனும் பேணியிவ்
விரும்புனற் றோய்வரே லிருப்பர் தேவராய்.

(இ - ள்.) பரம்பொருள் யோகியை - மேலாகிய பொருளைப்பெற்ற யோகியை, பசுவை - ஆவை, ஈருயிர் - இரண்டுயிராயிருக்கிற, கருங்குழல் மகளிரை - கரிய கூந்தலையுடைய பெண்களை, கடவுள் ஏற்றினை - தெய்வ வெருதை, பெருங்கொலை புரிந்தவர் - பெரிய கொலைசெய்தவர்கள், ஏனும் - என்றாலும், இ - இந்த, இருபுனல் - பெருமைவாய்ந்த நீரில், பேணி - விரும்பி, தோய்வரேல் - மூழ்குவாராயின், தேவர் ஆய் - தேவராகி, இருப்பர் - கற்பகாலத்தளவும் அழியாதிருப்பர் எ-று.

பரம்பொருள் - பிரமப்பொருள். ஈருயிர் கருங்குழல் மகளிர் என்றது கருப்பங்கொண்ட பெண்களை. கடவுளேறு - கோயில்மாடு. ஏனும் எனினும் என்பதன் மரூஉ. பேணல்-விரும்பல். பகுதி பேண். தோய்தல்-படிதல். ஏல் - எனின் என்பதன் மரூஉ. "கற்பத்தே மாயுந்தன்மை யுண்டவனால் வானோர்க்கென்ன வளனுண்டே" என்பவாகலான். இருப்பர் என்பதற்கு கற்பகாலத்தளவும் அழியாதிருப்பர் என்றுரைக்கலாயிற்று.

சிறந்தவிந் நதித்துறை சென்று மூழ்குந
ரிறந்தபிற் றலையினீ ரேற்றங் கொள்பவிப்
பிறங்குநீர் தோய்ந்தபுட் பெறுமெல் லோதிம
மறங்கெழு கலுழனும் வாக னங்களே.

(இ - ள்.) சிறந்த - மேன்மையாகிய, இ - இந்த, நதி - நதியின், துறை - துறையில், சென்று - போய், மூழ்குநர் - ஸ்நாநம் செய்பவர், இறந்தபின் - செத்தபிறகு, தலையில்-தமது சிரத்தில், நீரேற்றல் கொள்ப-நீரேற்றலைக் கொள்வார்கள், இ - இந்த, பிறங்கும் - விளங்குகிற, நீர் - தீர்த்தத்தில், தோய்ந்த - மூழ்கின, புள் - பறவை, மெல் - மெல்லிய, ஓதிமம் - அன்னமும், மறங்கெழு - கோவமிகுந்த, கலுழன் - கருடனும், ஆம் - ஆகிய, வாகநங்கள் - வாகநங்களை, பெறும் - (தமக்கு) வாகநங்களாகப் பெறுவனவாம் எ-று.

துறை - நீர்த்துறை. தலையில் நீரேற்றல் கொள்ப என்றது உருத்திர பதவியைப் பெறுவர் என்றவாறு. புள்-ஒதிமம். கலுழன் ஆம் வாகனங்கள். பெறும் என்றது இதில் படிந்த பறவை பிரமபதவியையும் விஷ்ணு பதவியையும் பெறும் என்றவாறு. மறம் - வல்லமை யெனினுமாம். (எசு)

தன்னிடை மீன்களைத் தலைய கன்றவான்
மன்னுமீ னாக்குமிவ் வயங்கு மாநதி
நன்னர்நீர் விடாதுதோய் நலம்பெற் றீர்கணீ
ரன்னது பாவியே னடைந்தி லேனென்றான்.

(இ - ள்.) தன் இடை - தன்னிடத்திலுள்ள, மீன்களை - மீனங்களை, தலை அகன்ற - இடமகன்ற, வான்மன்னும் - ஆகாயத்திலுள்ள, மீன் ஆக்கும் - மீன்களாக்கிவிடும், நீர் - நீருள்ள, இ - இந்த, வயங்கும் - விளங்குகிற, மாநதி - பெரிய நதியின், நன்னர்நீர் - புண்ணிய தீர்த்தத்தில் விடாதுதோய் - இடையறாமல் மூழ்குகிற, நலம்பெற்றீர்கள் - புண்ணியத்தைப் பெற்றிருக்கின்றீர்கள், அன்னது - அந்தப் புண்ணியத்தை, பாவியேன் - பாவியாகிய நான், அடைந்திலேன்-பெற்றிலேன், என்றான் - என்று சொன்னான் எ-று.

இடை ஏழனுருபு. தலையகன்ற வான் மன்னுமீன் என்றது வான் மீன்களை. (வான்மீன்கள் - நக்ஷத்ரங்கள்). தோய்தல் - மூழ்குதல். நன்னர் - நன்மை (புண்ணியம்). (எஎ)

இன்னண மதன்சிறப் பெடுத்துக் கூறியம்
மின்னுறழ் சடையர்பால் விடைபெற் றாரமு
தன்னதீந் தமிழ்வள ரடுக்க லெய்தினான்
கன்னன்மென் மொழியொடு கலச யோனியே.

(இ - ள்.) கலசயோனி - கும்பமுனியானவன், இன்னணம் - இந்தப் பிரகாரம், அதன் சிறப்பு - அந்த நதியின் மேன்மையை, எடுத்துக் கூறி - எடுத்துச்சொல்லி, அ - அந்த, மின் உறழ் சடையர்பால் - முனிவரிடத்தில், விடைபெற்று - விடை பெற்றுக்கொண்டு, ஆர் அமுது அன்ன - அரிய அமிர்தத்தை நிகர்த்த, தீ - இனிமையுள்ள, தமிழ் வளர் - தமிழ் வளர்தற்குரிய இடமாகிய, அடுக்கல் - மலையை, கன்னல் - கருப்பஞ்சாறு போலும், மென்மொழியொடு - மிருதுவசநத்தை யுடையவளாகிய தன் மனைவியோடு, எய்தினான் - அடைந்தான் எ-று.

அகத்தியன் குடத்திற் பிறந்ததனால் கலசயோனியெனப் பெயர் உண்டாயிற்று. கலசம் - குடம். யோனி - பிறப்பிடம். மின்உறழ் சடையர் - மின்கொடிபோலும் சடையையுடையவர். பால் - ஏழனுருபு. அடுக்கல் - மலை. தமிழ்வளரடுக்கல் என்றமையால் பொதியமலையைக் குறித்

தது. பென்மொழி - டண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். (எஅ)

ஆடக முகரிதா னுண வப்பெயர்
நீடிய வழுக்கற நீக்கு நீரதாய்ப்
பாடிமிழ் பனிக்கடற் பரவை மாநிலத்
தோடைமா களிற்றினு யொழுகு மென்பவே.

(இ - ள்.) ஓடை - முகபடா மணிந்த, மா - பெரிய, கயானைப்படையை யுடையவனே, ஆடகமுகரி - பொன்முகரி நதியானது, ஆணவப்பெயர் - ஆணவம் என்னும் பெயரினுல், நீடிய - சிறந்திருக்கிற, அழுக்கு அற - களங்கமற்றுப் போகும்படி, நீக்கும் - அதனையொழிக்கிற, நீரதாய் - குணமுடையதாகி, பாடு இமிழ் - மிக்கொலிக்கிற, பனிக்கடல் - குளிர்ந்த கடல்சூழ்ந்த, பரவை - பரந்த, மாநிலத்து - பெரிய நிலவுலகத்தில், ஒழுகும் - ஒழுகாநிற்கும், என்ப-என்று சொல்லுவர் (அறிஞர்) எ-று.

ஆடகம் - பொன். முகரி - முகரத்தையுடையது. முகரம் - ஒலி. பரவை - பரத்தல். (விஸ்தீர்ணம்) ஒழுகல் - ப்ரவஹித்தல் (பாய்தல்).

கடவுணற் பதிகளுட் களிற்றுக் காடென
வுடைதிரைக் கடனிலத் தொழுகும் யாற்றினுண்
முடிவில்சீர்க் காஞ்சன முகரி மிக்கதா
லடையலர்த் தேய்த்தகூ ரலங்கல் வேலினுய்.

(இ - ள்.) அடையலர் - பகைவரை, தேய்த்த-அழித்த, கூர்-கூரிய, அலங்கல் - வெற்றிமாலையைச் சூடின, வேலினுய்-வேற்படையையுடைய அரசனே, நல் - நல்ல, கடவுள் பதிகளுள் - தெய்வஸ்தலங்களுள்ளே, களிற்றுக்காடு என - கயாரணியம்போல, உடைதிரை - முரிகிற அலைகளையுடைய, கடல் நிலத்து - கடல்சூழ்ந்த நிலவுலகத்தில், ஒழுகும் யாற்றினுள் - ஓடுகிற நதிகளுள்ளே, முடிவு இல்சீர்-அழியாத சிறப்புவாய்ந்த, காஞ்சநமுகரி - பொன்முகரியாறனது, மிக்கது - மேலானது எ - று.

ஆல் - அசை. கயாரணியம் கஜாரண்யம் என்னும் வடசொற்றிரிபு. (கஜம் - யானை. அரணியம் - காடு.) களிற்றுக்காடு. காஞ்சநம்-பொன்.

கலித்துறை

வேழ வெண்மருப் பாதிய புறப்பொருண் மேவிக்
கேழ்கொ டாமரை முதலிய வகப்பொருள் கெழுமித்
தாழ்வில் சீர்புணர்ந் தின்னெலி படநடை தந்து
வாழி நாவலன் செய்யுளிற் றிகழுமம் மாநீர்.

(இ - ள்.) அ - அந்த, மாநீர் - பெருமை பொருந்திய தீர்த்தமானது, வேழம் - யானைகளின், வெள் - வெண்மையாகிய, மருப்பு ஆதிய - தந்த முதலிய, புறப்பொருள் - புறப்பொருள்களை, மேவி - பொருந்தி, கேழ் கொள் - ஒளியைக்கொண்ட, தாமரை முதலிய - தாமரை முதலாகிய, அகப்பொருள் - அகப்பொருள்களை, தழுமி - தழுவி, தாழ்வு இல் - குறைவில்லாத, சீர் புணர்ந்து - சிறப்புவாய்ந்து, இன் ஒலிபட - இனிய வோசை யுண்டாக, நடைதந்து - நடந்து, நாவலன் செய்யுளின் - நாவல னது கவிபோல, திகழும் - விளங்கும் எ-று.

மருப்பு கொம்பு எனினுமாம். புறப்பொருள் - தனக்கயலாகிய பொருள். அகப்பொருள் - தன் வசமாயுள்ள பொருள். இன்னொலி - மெல் லோசை. நடைதந்து ஒருசொல். பகுதி நடைதா. நாவலன் - சுந்தரன் எனினுமாம். (அஎ)

தரளம் பொன்மணி சந்தன மலரிவை தாங்கி
வரைந றுங்கடல் வயிற்படர் கடுவிசை வானீர்
பெரிதும் பொற்புற வணிந்துதாம் பிறந்துழி நின்று
மருவுங் காதலர் பாற்புகு மகளிரை மானும்.

(இ - ள்.) தரளம் - முத்து, பொன் - சுவர்ணம், மணி - ரத்நாபர ணம், சந்தநம் - கந்தம், மலர் - பூ, இவை - (ஆகிய) இவற்றை, தாங்கி - தரித்து, வரை - மலையினின்று, நறுங்கடல் வயின் - நன்மையையாகிய கடலினிடத்திற்கு, படர் - செல்லுகிற, கடுவிசை - கடிய வேகத்தை யுடைய, வானீர் - ஆகாய கங்காதீர்த்தமானது, பெரிதும் - மிகவும், பொற்பு உற அணிந்து - அழகுண்டாக தம்மை யலங்கரித்துக்கொண்டு, தாம் பிறந்துழிநின்று - தாங்கள் பிறந்திடத்தினின்று, மருவும் - தம்மை வரிக்கிற, காதலர்பால் - காதலர் வீட்டுக்கு, புகும் - போகிற, மகளிரை - மாதரை, மானும் - ஒத்திருக்கும் எ-று.

தரளம் மணி சந்தனம் என்பன வடசொற்கள். உலகத்துக்குத் துணைக்காரணமாதலால் கடலை நறுங்கடல் என்றார். வயின் - ஏழனுருபு. வானீர் என்பதனை வால் நீர் எனப்பிரித்து பரிசுத்தமான நீர் என்றுரைப் பினுமாம். அணிதல் - அலங்கரித்தல். பகுதி அணி. பிறந்த உழி எனற் பாலது பிறந்துழியென நிலைமொழி யீறுதொகுத்தலாயிற்று. காதலர் - ஆசைக்கணவர். (அஉ)

கவரி வெண்மயிர் சுமத்தலி னெறிதிரைக் கங்கை
யவிழ்ந றுந்துண ரசோகலர் விரித்தலி னரவத்
தவழ்பெ ருந்திரைச் சோணைமென் பீலிக டரலாற்
குவல யம்புகழ் யமுனையொத் தொழுகுமக் குளிர்நீர்.

யமுனை

(இ - ள்.) கவரிவெண்மயிர் சுமத்தலின் - கவரிமாவின் வெள்ளிய மயிரைத் தாங்குதலால், எறிதிரை கங்கை அவிழ்நறுந்துணர் அசோகு

அலர் விரித்தலின் - கங்கையோடு கூடி மலர்ந்த நறுமணமுள்ள அசோக மலர்களைப் பரப்புதலால், அரவத்தவழ் பெருந்திரைச் சோணை மெல் பீலிகள் தரலால் - ஒலியோடுகூடிப் பாம்புபோலத் தவழ்கிறதும் பேரலை களையுடையதுமாகிச் செந்நிறமுடையதாய் மெல்லிய மயிற்றோகைகளைக் காட்டுதலால், (யமுனை பொன்முகரியை நிகர்த்தது) எ-று.

## பொன்முகரி

கவரிவெள்மயிர் சுமத்தலின் - கவரிமாவின் வெண்மயிர்க் கற்றை களையேந்தி வருதலால், எறிதிரைக்கங்கை அவிழ் நறுந்துணர் அசோகு அலர் விரித்தலின் - வீசுகிற அலைகளையுடைய கங்கையோடு கூடி விரிந்த நறுமணமுள்ள அசோகமலர்களைப் பரப்புதலால், அரவம் தவழ் பெருந் திரைச் சோணைமெல் பீலிகள் தரலால்-பாம்பு தவழ்வதாய் பெரிய அலை களையுடையதாய் செந்நிறமுடையதாய் மெல்லிய மயிற்பீலிகளைத் தோ ற்றுவித்தலால் (பொன்முகரி யமுனையை நிகர்த்தது) எ-று.

பொன்முகரி யமுநாநதியை நிகர்த்திருந்ததென முடித்துக் கொள்க. இக் குளிர்நீர் - இந்தக் குளிர்ந்த நீரானது. குவலயம்புகழ் யமுனைஒத்து ஒழுகும் - பூமண்டலத்தார் யாவரும் புகழ்கிற யமுநாநதியை நிகர்த்து ப்ரவஹியாநிற்கும். (அங)

திரைகொண் மெல்லுரு வளைந்துதன் வாய்நுரை சிந்திப்
பெரித லைந்திரு முதலையும் வயின்வயிற் பெருக்கி
வரவு கண்டவர் மிகநக மலர்தலை யுலகிற்
பொருவில் பொன்முக ரிப்பெயர் முதியவள் போந்தாள்.

## முதியவள்

(இ - ள்.) பொருவு இல் - நிகரில்லாத, பொன்முகரிப் பெயர் - பொன்முகரியென்னும் பெயரையுடைய, முதியவள் - கிழவியானவள், திரைகொள் - திரைதலைக்கொண்ட, மெல் உருவளைந்து - மென்மை யாகிய உருவம் வளைந்து, தன்வாய் நுரைசிந்தி - தன்வாயில் நுரையை யுமிழ்ந்து, பெரிது அலைந்து - மிகுதியாயசைந்து, வயின் வயின் - இடங் கடோறும், இருமுதலையும் பெருக்கி - இருமலையு மிகுதியாகக்கொண்டு, வரவுகண்டவர் - தன்வரவைப் பார்த்தவர், மிகநக - மிகுதியாய்ச்சிரிக்க, மலர்தலை - பரந்த இடத்தையுடைய, உலகில் - உலகத்தில், போந்தாள் - வந்தாள் எ-று.

திரை - ஆகுபெயர். (தோற்சுருக்கம்) உருவு-உடம்பு. வரவு-வருகை. இருமல் - கபவியாதி. நகல்-சிரித்தல். பகுதி நகு. வந்தாள் என்பதற்குப் பகுதி வா.

### பொன்முகரி

திரைகொள் - அலைகளைக் கொண்ட, மெல் உருவளைந்து-மென்மையாகிய தோற்றத்தால் வளைந்ததாகி, தன்வாய் - தன்னிடத்தினின்றும், நுரைசிந்தி - நுரையைச் சிதறி, பெரிது அலைந்து - மிகவும் அசைந்து, இரு - பெரிய, முதலையும் - முதலைகளையும், வயின்வயின் பெருக்கி - இடந்தோறும் பெருகச் செய்து, வரவுகண்டவர் - தன் வருகையைக் கண்டவர்கள், மிகநக - மிகுதியாய்ச் சிரிக்க, மலர்தலை உலகில் - விரிந்த இடத்தையுடைய வுலகத்தில், பொருவு இல் - ஒப்பற்ற, பொன்முகரிப்பெயர் - பொன்முகரியென்னும் பெயரையுடைய (நதி வந்தது) எ-று.

வாய் - ஏழனுருபு இடப்பொருட்டு. மிக நகுதல் எற்றுக்கெனின், இனி நமக்குக் குறையில்லை யென்னுங் களிப்பு. (அச)

செய்ய குங்குமத் தான்முலை நிலமெழில் செய்து
வெய்ய நித்திலத் தோடிரு மருங்கினு மிளிர
வைய பொற்குரு கிரங்கமா தரங்கங்க ளசையத்
தையலாடக முகரிதா னடக்குமித் தலத்து.

### தையலாள்

(இ - ள்.) செய்ய-சிவந்த, குங்குமத்தால் - குங்குமக் குழம்பினால், முலை - தனங்களை, எழில்செய்து - அலங்கரித்து, வெய்ய - விருப்பத்தைத் தருகிற, நித்திலத்தோடு - முத்துக்குழை, இருமருங்கினும் மிளிர - இருபாரிசத்திலும் பிரகாசியாநிற்க, ஐய - அழகாகிய, பொன் குருகு - பொன்வளையல், இரங்க - ஒலிக்க, மாதர் - அழகாகிய, அங்கங்கள் - மற்றைய வுறுப்புக்கள், அசைய - அசையாநிற்க, (தையலாள் நடந்தாள்)

எழில்செய்து ஒருசொல். பகுதி எழில்செய்.

### பொன்முகரி

செய்ய குங்குமத்தால் - செம்மையாகிய குங்குமமரங்களால், முல்லைநிலம் - முல்லைநிலத்தை, எழில்செய்து - அலங்கரித்து, வெய்ய - கண்டோர்க்கு விருப்பத்தை யுண்டாக்குகிற, நித்திலத்தோடு - முத்துக்களோடு கூடி, இருமருங்கினும்-இரண்டு பக்கங்களிலும், மிளிர - விளங்கா நிற்க, ஐய - அழகிய, பொன்குருகு - பொன்போலும் நிறத்தை யுடைய பறவைகள், இரங்க - சப்திக்க, மா - பெரிய, தரங்கங்கள் - அலைகள், அசைய - அசையாநிற்க, (பொன்முகரி நடந்தது) எ-று.

வெய்ய என்பதற்குப் பகுதி வெம்மை. ஆடகமுகரி தையலாள் தக இத்தலத்து நடக்கும் என முடித்துக்கொள்க. தையலாள் - கைபுனையப் பெற்ற பெண். தக - நிகராக. இத்தலத்து - இந்தத் திருப்பதியில். நடக்கும் - ஒழுகாநிற்கும். (அரு)

நிறையு டைப்பொல முகரிதான் செலவினி னீங்கா
தறமு வர்ப்பொடு சிலைத்தலை தனபதி யுடனே
ரிறைவெ றுப்புமின் றொழுகுமா னிலைபெயர் வில்லாச்
செறிகு லத்தவர்க் கதுபுது மையோ தெரியின்.

(இ-ள்.) நிறை உடை-நிறை குணத்தையுடைய, பொலமுகரி-பொன் முகரியாறானது, தான் செலவினின் நீங்காது-தான் ஒழுகு மொழுக்கத்தி னின்றும் நீங்காததாய், உவர்ப்பொடு - வெறுப்போடு, சிலைத்தலை - ஆர வாரித்தலையும், உறும் - அடைந்திருக்கும், தனபதியுடன்-குபேரனுடன், ஓர் இறை வெறுப்பும் - ஒரு சிறிது வெறுப்பும், இன்று - இன்றி, ஒழு கும் - நடவாநிற்கும், மால் - பெரிய, நிலை - தமது நிலையினின்றும், பெய ர்வு இல்லா - பெயர்தலில்லாத, செறிகுலத்தார்க்கு-மேற்குலத்தவர்க்கு, தெரியின் - ஆராயுமிடத்து, அது-அச்செலவு, புதுமையோ - நூதநமோ.

செலவு - செல்லுதல். புதுமையோ வென்னு மோகாரம் எதிர்மறை. செறிகுலம் - மேலானகுலம். இறை - அற்பம். (அசு)

முதிர்க லைப்பெரு மதியவெண் குடையுடை முடியிற்
றதைப சுந்தழை வேய்க்கொடி தழங்கும்வெள் ளருவிப்
புதிய நீள்பெருஞ் சாமரை யகத்தியப் பொருப்பாஞ்
சிதைவி றேர்க்கொரு வடமெனத் திகழும்பொன் முகரி.

(இ - ள்.) பொன்முகரி - பொன்முகரியாறானது, அகத்தியப்பொரு ப்பு ஆம் - அகஸ்த்யாசலமாகிய, சிதைவு இல் - அழிவற்ற, தேர்க்கு - ரதத்துக்கு, முதிர்கலை - நிறைந்த கலைகளையுடைய, பெருமதியம் - பூர்ண சந்த்ரனாகிய, வெண்குடை உடை - வெண்குடையையுடைய, முடியில் - சிகரத்தில், ததை - நெருங்கிய, பசுந்தழை - பச்சைத் தழையையுடைய, வேய்க்கொடி என - மூங்கில் துவசம்போலவும், தழங்கும் - ஒலிக்கிற, வெள் அருவி - வெள்ளருவியாகிய, புதியநீள் - புதுமையாய் நீண்டிருக் கிற, பெருஞ்சாமரை என - பெரிய சாமரம்போலவும், ஒருவடம் என - ஒரு வடக்கயிறுபோலவும், திகழும் - விளங்காநிற்கும் எ-று.

அசலம் - மலை. அகத்தியர் தவஞ்செய்து வருவித்தமையால் இதற்கு அகஸ்த்யாசல மென்னும் பெயர் வழங்கலாயிற்று. முதிர்கலைப்பெருமதிய வெண்குடையைச சந்த்ரவட்டக் குடையென்றும் கூறுவர். ததைதல் நெருங்குதல். தழங்கல் - ஒலித்தல். பகுதி தழங்கு. வடம் - தேர்வடம்.

தந்து வங்கடந் தொளிர்கின்ற முக்கணன் றன்னோ
டொத்த செந்தமிழ் முனிவரன் பற்பக னுழந்த
மெய்த்த வந்தர வந்தவிவ் வாற்றொடோர் வேந்த
னுற்ற னோன்பிலட் டந்ததோர் கங்கையோ வொக்கும்.

(இ - ள்.) தத்துவம் கடந்து - தத்துவங்க ளெல்லாவற்றையும் தாண்டி, ஒளிர்கின்ற - விளங்குகிற, முக்கணன் தன்னோடு - சிவபெருமானோடு, ஒத்த - சமானமான, செந்தமிழ் முனிவரன் - அகத்தியன், பல பகல் - அநேகநாள், உழந்த - வருந்திச்செய்த, மெய்த்தவம் தரவந்த - உண்மையாகியதவம் கொடுக்கவந்த, இ - இந்த, ஆற்றொடு - பொன்முகரி நதியோடு, ஓர் வேந்தன் - ஓர் அரசனது, உற்ற - மிக்க, நோன்பு - தவமானது, இவண் தந்தது - இவ்வுலகத்தில் வரவழைத்ததாகிய, ஓர் கங்கையோ - ஒரு கங்காநதியோ, ஒக்கும் - நிகர்க்கும் எ - று.

தத்துவம் என்றது கருவிகளை. இவை தொண்ணூற்றாறு. இவற்றுள் புறக்கருவி அறுபது அகக்கருவி முப்பத்தாறு. இவ்விஷயம், "ஆனபுறக் கருவியாறு பத்தும் மற்றுளவும் போனவழியுங்கூடப் புல்லுளோப்ப தெந்நாளோ" என்றற்றொடக்கத் தான்றோர் திருவாக்குக்களால் விசதமாகும். ஆதலால் ஈண்டு விரித்திலம். ஓர் அரசன் என்றது பகீரதனை. இவனால் அழைக்கப்பட்டதனானே இதற்குப் பாகீரதியென்றும் பெயருண்டாயிற்று. கங்கையோ வொக்கும் என்றதனால் ஒவ்வாதென்றதாயிற்று (அஅ)

குடதி சைக்கட லுடைந்தொரு வழிக்கொடு குணதி
கடல்வ யிற்புக வெழுந்தென வெழுந்தவிக் கடுநீ
ருடனொ ருத்தனுண் டஞ்செவி யொழுக்கிய நீருங்
கொடிக விழ்த்தசெந் நீருமோ நிகர்ப்பன கூறில்.

(இ - ள்.) குடதிசைக்கடல் - மேற்றிசைக் கடலானது, உடைந்து - உடைபட்டு, ஒரு வழிக்கொடு - ஒரு வழியைப் பற்றிக்கொண்டு, குணதி கடல்வயின் - கீழ்த்திசைக் கடலினிடத்தே, புக - பிரவேசிக்க, எழுந்தென - எழுந்தாற்போல, எழுந்த - எழுந்த, இ - இந்த, கடுநீருடன் - வேகத்தையுடைய நீரோடு, ஒருத்தன் - ஒருவன், உண்டு - உட்கொண்டு, அம்செவி - அழகிய காதின்வழியாக, ஒழுக்கிய - ஒழுகவிட்ட, நீரும் - நீரும், கொடிகவிழ்த்த - காகம் கவிழ்த்துவிட்ட, செந்நீருமோ - செந்நீருமோ, கூறின் - சொல்லின், நிகர்ப்பன - சமானமாவன எ-று.

ஒருத்தனுண்டஞ் செவியொழுக்கிய நீர் என்றது கங்கையை. ஒருத்தன்-ஜந்ஹுமுனி. இவன் பருகிக் காதின்வழியாய் ஒழுக்கினமையால் கங்கையை ஜாந்ஹவி யென்பர் வடநூலார். கொடிகவிழ்த்த செந்நீர் என்றது - கணிபகவான் காக வுருக்கொண்டு வந்து அகத்தியனது கமண்டல நீரைக் கவிழ்த்த செய்தியைக் குறித்தது. இது "சுரகுலாதிபன் றூமலர் நந்தனம், பெருக வார்கடல் பெய்த வயிற்றினோன், கரகநீரைக் கவிழ்த்த மதகரி, சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம்" என்னு மான்றோர் செய்யுளா லினிது விளங்கும். இதுபோன்ற சரிதைகளை விரிப்பி னுரை விரியுமென் றஞ்சி விடுத்தன மாதலினச்செய்திகளைப் புராணங்களிற் கண்டுமை.

(அக)

இடன கன்றவிவ் வாறுதன் கட்படா விறந்த
முடிவில் வெஞ்சினக் குஞ்சர முதலிய வவற்றி
னுடலை வெண்டிரைக் கருங்கட லுய்த்துமன் னுயிரைக்
கடவுள் வெள்ளியங் குன்றின்மே லேற்றிடுங் கடிது.

(இ - ள்.) இடன் அகன்ற - இடம்பரந்த, இ - இந்த, ஆறு - பொன் முகரி ஆறானது, தன்கண்படா-தன்னிடத் தகப்பட்டு, இறந்த - இறந்து போன, முடிவு இல் - முடிவற்ற, வெம்சினம் - கடுங்கோபத்தையுடைய, குஞ்சரம் முதலிய அவற்றின் - யானை முதலாகிய மிருகங்களின், உடலை- சரீரத்தை, வெள் திரை - வெள்ளிய அலைகளையுடைய, கருங்கடல் - கருங் கடலில், உய்த்து - செலுத்தி, மன் - நிலைபெற்ற, உயிரை - அவற்றின் பிராணனை, கடவுள் - தெய்வத்தன்மை பொருந்திய, வெள்ளியங் குன் றின்மேல் - வெள்ளிமலையின்மீது, கடிது - விரைவாக, ஏற்றிடும் - ஏற்றி விடும் எ-று.

இடன் - இடம். படா - செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். இது இறந்த என்னும் வினைகொண்டது. குஞ்சரம் வடசொல். இதற்குக் காட்டுப்புதல்களிற் சஞ்சரிப்பதென்று பொருள் கூறுவர் வட நூலார். வெள்ளியங் குன்றின்மேலேற்றிடும் என்றது சிவபதவியை யடைவிக்கும் என்றவாறு. (௧0)

உலகி லெங்கணு மில்லதோ ரதிசய மொன்றித்
தலைமை கொண்டபொன் முகரியுட் டாழ்ந்தவர் யாருந்
தொலைவி றுன்பங்கள் பலதருஞ் சூழ்வினைப் பிறப்பா
மலைநெ டுங்கடற் கரைமிசை யேறுவ ரன்றே.

(இ - ள்.) உலகில் - உலகத்தில், எங்கணும் இல்லது - எவ்விடத்தும் இல்லாததுவாகிய, ஓர் அதிசயம் ஒன்றில் - ஒப்பற்ற அதிசயம் ஒன் றினுள், தலைமைகொண்ட - தலைமைபூண்ட, பொன்முகரியுள் - பொன் முகரி நதியினுள், தாழ்ந்தவர் யாரும் - மூழ்கினவர் எல்லாரும், தொலைவு இல் - முடிவில்லாத, பல துன்பங்கள் தரும்-பல துன்பங்களைக் கொடுக் கிற, சூழ்வினை - ஆன்மாக்களைச் சூழ்ந்த வினையின் பயனாகிய, பிறப்பு ஆம் - பிறவி என்கிற, அலைநெடு - அலைகளையும் நீட்சியையுமுடைய, கடல் கரை மிசை - கடல் கரையின்மேல், ஏறுவர் - ஏறுவார்கள் எ-று.

தாழ்தல் - மூழ்குதல். பகுதி தாழ். சூழ்தல் - வளைந்து கொள்ளல் பகுதி சூழ். வினை ஆகுபெயர். பிறப்பாமலை நெடுங்கடற்கரை யென்றது முத்தியை; முத்தியடைவார்கள் என்றவாறு. (௧௧)

இன்னவா றுபொன் முகரியின் சிறப்பினை யிசைத்துக்
கன்னல் வார்சிலை மதற்செறு கனல்விழி கரந்தோ
னென்ன லார்தமக் கசனியே றனையவே லூரவோய்
முன்னு தீர்த்தமி தன்றியு முளவென வகுப்பான்.

(இ - ள்.) இன்னவாறு - இவ்விதமாக, பொன்முகரியின் - பொன் முகரி நதியின், சிறப்பினை - மேன்மையை, இசைத்து - சொல்லி, வார் - நீண்ட, கன்னல்சிலை - கருப்பு வில்லையுடைய, மதன் - மன்மதனை, தெறு - எரித்த, கனல்விழி - நெருப்புக் கண்ணை, கரந்தோன் - மறைத்து வந்தவன், ஒன்னலார் தமக்கு-பகைவருக்கு, அசனியேறு அனைய-இடியேற்றை நிகர்த்த, வேல் - வேற்படையையுடைய, உரவோய் - வலிமிக்கவனே, இது அன்றியும் - இது அல்லாமலும், மன்னு - நிலைபெற்ற, தீர்த்தம்-தீர்த்தங்கள், உள என - பல வுளவாயிருக்கின்றன வென்று, வகுப்பான் - சொல்லுவா னாயினன் எ-று.

இசைத்தல் - சொல்லுதல். பகுதி இசை. கரத்தல் - மறைத்தல். பகுதி கர. இடியேறு - ஆணிடி. உரம் - வலி. வகுத்தல் - சொல்லுதல். பகுதி வகு. (கூஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இருவினை மலைதொ லைக்கு மிந்திர தீர்த்தம் பாவ
வரவடர் மயூர தீர்த்த மாரஞர்ப் பிறவி யென்னு
முருகெழு புரந்தீ யூட்டு முருத்திர தீர்த்தம் பேழ்வாய்
வெருவரு தழற்கட் கூற்றம் வெல்லுமார்க் கண்ட தீர்த்தம்.

(இ - ள்.) இருவினை-இருவினையாகிய, மலை-மலைகளை, தொலைக்கும்-பிளக்கிற, இந்திரதீர்த்தம்—, பாவம் அரவு - பாவமாகிய பாம்பை, அடர்-கொல்லுகிற, மயூரதீர்த்தம்—, ஆர் அஞர் - மிக்க துன்பத்தைத் தருகிற, பிறவியென்னும் - பிறவியென்கிற, உருகெழு - வடிவமைந்த, புரம்-முப்புரங்களை, தீ ஊட்டும்-நெருப்புக்கு இரையாக்கின, உருத்திரதீர்த்தம்—, பேழ்வாய் - பெருவாயையும், வெருவரு - அச்சத்தை யுண்டாக்குகிற, தழல்கண் - நெருப்புக் கண்களையும் உடைய, கூற்றம் - யமனை, வெல்லும் - வெல்லுகிற, மார்க்கண்ட தீர்த்தம்— எ-று.

இதனால் மலைக்கும் இந்திரனுக்கும், பாம்புக்கும் மயிலுக்கும், முப்புரத்துக்கும் உருத்திரனுக்கும், யமனுக்கும் மார்க்கண்டனுக்கும் பகைமை கூறப்பட்டது. மயூரம் - மயில். வெருவரல் - அஞ்சுதல். (கூங)

அரகர தீர்த்தம் யாரு மவாவுமோ கினிதீர்த் தம்வெண்
டிரையெறி தருமா காள தீர்த்தமென் றிவைமுன் னய
பரமபுண் ணியதீர்த் தங்கள் பலபடிந் தவரை விண்ணோர்
நிரைதொழ விருத்தல் செய்து நிலவுமாற் புலவு வேலோய்.

(இ - ள்.) அரகரதீர்த்தம்—, யாரும் - யாவரும், அவாவும் - ஆசைப்படுகிற, மோகினி தீர்த்தம்—, வெள்திரை எறிதரு - வெள்ளிய அலைகளை வீசுகிற, மாகாளதீர்த்தம்—, என்ற - என்று சொல்லப்பட்ட, இவை முன் ஆய-இவை முதலாகிய, பரமம்-மேலான, புண்ணிய தீர்த்தங்கள்—,

பல - பலவுளவாயிருக்கின்றன, (இவை) படிந்தவரை - (தம்மிடத்து) மூழ்கினவர்களை, விண்ணோர் நிரை - தேவசமூகம், தொழ - வணங்கும் படி, இருத்தல் செய்து - வீற்றிருக்கச்செய்து, நிலவும் - விளங்கும், புலவு வேலோய் - புலால் கமழ்கின்ற வேற்படையை யுடையவனே எ-று.

அவாவுதல் - ஆசைப்படுதல். பகுதி அவாவு. படிதல் - முழுகுதல். நிரை - சமூகம் (கூட்டம்). நிலவல் - விளங்கல். பகுதி நிலவு. புலவு- புலானாற்றம். இது பகைவரைக் கொல்லுதலா லுண்டாயது. (கச)

இனையதீர்த் தங்க டம்மி லீகையங் கலுழி தன்னிற்
கனலியை மதியைப் பாம்பு கவருநாண் முதலா யுள்ள
தினவிசே டத்தின் மூழ்கல் செய்தவர் பெறுப வாலைந்
தனலிடை நெடுநா ணோற்று மடைதரப் படாத வின்பம்.

(இ - ள்.) இனைய - இத்தன்மையவாகிய, தீர்த்தங்கள் தம்மில்-தீர்த் தங்களில், ஈகையங்கலுழிதன்னில் —, கனலியை - சூரியனையும், மதியை- சந்திரனையும், பாம்புகவரும் நாள் முதலாயுள்ள - பாம்புகள் தீண்டுகிற நாள் முதலாகவுள்ள, தின விசேடத்தில் - விசேஷ நாட்களில், மூழ் கல் செய்தவர் - முழுகினவர்கள், ஐந்து அனல் இடை - பஞ்சாக்கி மத்தியிலிருந்து, நெடுநாள் - அநேகநாள், நோற்றும் - தவம் பண்ணி யும், அடைதரப் படாத - பெறவொண்ணாத, இன்பம் - ஆநந்தத்தை, பெறுப - பெறுவார்கள் எ-று.

கனலியை மதியைப் பாம்பு கவருநாள் என்றது சூரியகிரகணம் சந் திர கிரகணம் என்பவற்றை. கவர்தல் - விழுங்குதலுமாம். அடைதர என்பதற்குப் பகுதி அடைதா. பெறுப-உயர்திணைப் பலர்பாற் படர்க்கை (கரு)

என்றுபொன் முகரி யாற்றி னியல்பொடு மற்று முள்ள
மன்றன்மா மலர்த்தீர்த் தங்கள் வகுத்தன னிறைவன் கூற
வென்றிவேற் குரிசி லுள்ள மிகமகிழ்ந் தைய வின்னு [தான்.
மென்று நன்கதை தொழும்பற் குரைத்தரு ளென்னத் தாழ்ந்

(இ - ள்.) என்று —, பொன்முகரியாற்றின் - பொன்முகரி ந இயல்பொடு-குணத்தோடு, மற்றும் உள்ள-மற்றுளவாயிருக்கிற, மன்றல்- மணமுள்ள, மாமலர் - தாமரை மலர்களையுடைய, தீர்த்தங்கள்-தீர்த்தங் களை, இறைவன் - கடவுள், வகுத்தனன் கூற - வகுத்துச்சொல்ல, வெ ன்றி - வெற்றியைத் தருகிற, வேல் - வேற்படையையுடைய, குரிசில் - அரசன், மிக - மிகுதியாக, உள்ளம் மகிழ்ந்து - மனமகிழ்ந்து, ஐய - ஐயனே, இன்னும் - இன்னமும், நன்கதை ஒன்று - ஒரு நல்லகதையை- தொழும்பற்கு - அடியேனுக்கு, உரைத்தருள் என்ன - சொல்லியருள்க வென்று, தாழ்ந்தான் - வணங்கினன் எ-று.

இயல்பு - பெருமை யெனினுமாம். மா - திருமகள். மாமலர் - திருமகட் கிடமாகிய தாமரைமலர். வருத்தனன் - முற்றெச்சம். (கூரு)

கலிவிருத்தம்

தீதில்பொன் முகரியின் செய்தி கூறினும்
வேதியன் கதையினி விளம்ப லுற்றனம்
யாதவ மனனமர்ந் தினிது கேளென
மாதவ வடிவருள் வள்ளல் கூறுவான்.

(இ - ள்.) தீது இல் - தீமையற்ற, பொன்முகரியின் - பொன்முகரியாற்றின், செய்தி - சரித்திரத்தை, கூறினும் - சொன்னோம், இனி—, வேதியன்கதை - பிரமதேவன் சரித்திரத்தை, விளம்பலுற்றனம் - சொல்லத் தொடங்கினோம், யாதவ - யாதவவேந்தனே, மனன் அமர்ந்து - மனம் பொருந்தி, இனிது கேள் என - இனிதாகக் கேட்கக் கடவை யென்று, மாதவவடிவு - மாதவ வேடங்கொண்ட, அருள்வள்ளல் - சிவபிரான், கூறுவான் - சொல்வானாயினன் எ-று.

செய்தி - பெருமையுமாம். மனன் அமர்ந்து என்றது சித்த சமாதானமாய் (சிரத்தையாய்) என்றபடி. அருள்வள்ளல்-அருட் கொடையாளன்.

பொன்முகரிச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உ௭அ.

சிவபெருமான் பார்ப்பதியைத் திருமணமுடித்தற் பொருட்டு, காலாக்கினியுருத்திரர், கூஷ்மாண்டர், ஆடகேசர், வைரவர், வீரபத்திரர், ஐயனார், ஏகாதசருத்திரர், புத்தியட்டகர், அட்டமூர்த்திகள், குண்டோதரர் முதலிய கணத்தலைவர்களும், பிரமவிட்டுணுக்களும், இந்திரன் முதலிய தேவகுழாங்களும், அகத்தியர் காசிபர் கௌதமர் பாரத்துவாசர் வசிட்டர் விசுவாமித்திரர் முதலிய முனிபுங்கவர்களும், நந்திதேவர் முதலிய பரிசனங்களும் புடைசூழ்ந்து வரவும், விநாயகக்கடவுள் பூதகணங்களோடு முன்னே செல்லவும், இடபவாகனத்தி லெழுந்தருளி, மங்கல வாத்திய முழங்க, பர்வதராஜன் எதிர்கொண்டு பணிய, இமையமலையை யடைந்து, அவரவரையும் தக்கவாறிருக்கும்படி பணித்து, சிங்காசனத்தில் வீற்றிருந்தருளினார். அங்கே எவ்வுலகத்தினுமுள்ள கணங்களெல்லாம் ஒருங்கு நெருங்கலால், தென்பூமியுயர்ந்து வடபூமி தாழ்ந்ததாக, அப்பெருமான் அகத்தியமுனிவரை அருகழைத்து, அருட்பார்வையளித்து, "மாதவனே, இப் பூமியானது சமப்படும்படி நீசென்று, பொதியமலையிலே தங்கவேண்டும், அல்லேயேல், நாமே கொடிக்குள்ளே செல்லல்வேண்டும்" என்று கட்டளையிட்டருளினார்.

அதுகேட்ட முனிவர் வணங்கி, வாய்புதைத்து நின்று, "கருணையங்கடலே, திருமால்முதலிய தேவர்கள் நிற்கவும் நாயிற்கடையேனிடத்து வைத்த திருவருட் பெருக்கினாற் பணித்த ஏவலை அத்திருவருள்கொண்டு முடிப்பேன்" என மீட்டும் வணங்கி, *விடைபெற்று, தமது மனைவியாகிய உலோபாமுத்திரையோடு புறப்பட்டு, திருக்கேதாரம் காசி விரூபாக்ஷம் தாக்ஷாராமபுரம் நந்திபருப்பதமுதலிய தலங்களைத் தரிசனஞ்செய்து கொண்டு, வரும் வழியிலே, தென்கைலை யெதிர்ப்பட, ஆராமையால் நமஸ்கரித்துக்கொண்டு, பசுவைக்கண்டு பாய்ந்தோடும் கன்றுபோல நாகலிங்கப்பெருமான் சந்நிதியை விரைந்தடைந்து, நெஞ்சநெக்குருக, கண்களிலே நீரருதொழுக, புளகமுற்று, கரங்களைக் குவித்துகொண்டு நெடுநேரம் பரவசப்பட்டு நின்று, தெளிந்து, பலவிதமாகத் துதித்து நீங்கி, தக்ஷிணாமூர்த்தி ஐஞ்சந்தி விநாயகர் முருகக்கடவுள் ஞானப்பூங்கோதையம்மை முதலிய மூர்த்திகளைத் தரிசித்து, பலதரம் வலம்வந்து, துர்க்கை மலையிலேறி, அத்தேவியையும் தரிசனஞ்செய்து திரும்பினர்.

பின்பு அவ்விடத்திலே விளங்கித் தோன்றும் அதிசயங்களனைத்தையுங் கண்டு, பேருவகையுற்று, இவ்விடத்திலே நதியொன்றில்லாமையே குறையெனத் துணிந்து, ஆங்கு வசிக்கும் அருந்தவ முனிவர்பாற்போய் "சுவாமிகாள், இத்தலத்திலே நதியொன்றழைக்கும்படி எனக் கருளுவீ

---

* இம்முனிவர் திருமணக்கோலமகோற்சவம் தரிசிக்கப்பெற்றேனில்லையே என வருந்தச் சிந்தித்த தலங்கடோறும் காட்டியருளப்பெற்றமை அவ்வத் தலபுராணங்களுட் காண்க.

ராக" எனப் பிரார்த்தித்து, அவர்களுடைய பூரணகிருபையைப்பெற்று, அத்தலத்திற்கு நான்குயோசனை தூரத்திலே நிருதி திக்கிலுள்ள ஒரு மலையிலேறி, உணவனைத்துந் துறந்து, வேனிற்காலத்திலே பஞ்சாக்கினி மத்தியிலும், மழைக்காலத்திலும் பனிக்காலத்திலும் வாயளவு ஜலத்திலுமிருந்துகொண்டு, பஞ்சேந்திரியங்களையுமடக்கி, சிவபிரானைக் குறித்துச் செயற்கரிய மாதவம் செய்துகொண்டிருந்தனர். அதுகண்டஞ்சிய இந்திரன் முதலியோர் முனிவர் கருத்து யாதோவெனக் கலக்கமுற்று, பிரமதேவரையடைய, அவரும், தெளியாது ஐயுற்று, அவர்களோடு கைலையைச் சேர்ந்து, நந்திதேவரருளால் சிவபெருமான் சந்நிதியை அணுகி, திருவடிகளிற் பலமுறை தாழ்ந்து பரவிநின்று, முனிவரது நிலைமையை விண்ணப்பஞ்செய்தனர். அக்கடவுள் அவரை நோக்கி, "அகத்தியன் நமது தென்கைலைக்கு நதியொன்றையே விரும்பி நற்றவம் புரிகின்றான், அவன்பொருட்டு ஆகாயகங்கையை விடுப்பேம், நீ முற்சென்று அதனையளிப்பாயாக" என்று ஆஞ்ஞாபிக்க, அவ்வாறே வந்துநின்ற பிரமதேவரை முனிவர் வணங்கி, தமது கருத்தை யறிவித்தனர்.

உடனே அப் பிரமதேவர் ஆகாயத்தை நோக்கி, அங்கு நின்றும்வந்த கங்கையானது பொன்னிறத்தோடு முழக்கத்தையும் உடையதாயிருத்தலால் அதற்கு, "பொன்முகரி" எனப் பெயரிட்டுச் செல்ல, அந்நதியானது அகத்தியமுனிவர் தவஞ்செய்தலால் அகத்தியாசலமென்னும் பெயர்பெற்ற அம்மலையினின்று மிழிந்து, திருவேங்கடம் பரசுராமேச்சரம் என்பவற்றினருகேசென்று, சீகாளத்தியென்றும் திருமகளுக்கு ஆரம்போலச் சிறந்து அக்கினிதிசையாகத் திரும்பி, ஓங்காரமென்னுந் தலத்தையடைந்து, கடலிற் கலந்தது. அது நோக்கிய அகத்தியமுனிவர் ஒருபெண் புத்திரப்பேறின்றி மலடியாக நெடுநாளிருந்து அரிய விரதங்களை யனுட்டித்து ஓர் புதல்வனைப் பெற்றாற்போலப் பெருங்களிப்படைந்து, அம்மலையினின்று மிறங்கி, உலோபாமுத்திரையோடு ஸ்நானஞ்செய்து, அந்நதி தீரத்திலே பல சிவலிங்கங்களை ஸ்தாபித்து, பேரன்பினால் வழிபட்டு, நாகலிங்கப்பெருமானை வணங்கிக்கொண்டு, ஒருமலையிலே தங்கியிருந்தனர்.

அங்குள்ள முனிவர்கள் அவரையடைந்து, "எந்தையே, ஐந்தழலினிடையேநின்று அரிதுநோற்று, பிறவிப்பிணிக்கு மருந்தாக இந்நதியைத் தந்தளித்தீர், இதனாலே யாங்களுய்ந்தனம், உம்முடைய திருவருளுக்கு அளவும் உண்டுகொல்லோ? விந்தமலையினது வீறையடக்கினீர்; பெருங் கடல் முழுமையும் ஒருங்கு பருகினீர்; தென்பூமியைச் சமமாக்கச் சிவபிரானருளைப் பெற்றீர்; இங்ஙனமாகிய உமது புகழை எங்ஙனம் அளவிடுவேம். யாம் இன்றளவும் ஈண்டு வசிக்கப்பெற்றே மாதலால் உம்மைத் தரிசித்து இவ்வுடம்பின் பயனையுற்றேம்" எனப் பெரிதும் புகழ்ந்து கொண்டாடினர். அகத்தியமுனிவர் அவர்களைநோக்கி, "வேதமுடியை

யுணர்ந்த சுவாமிகாள், உங்களுடைய திருவருளினாலன்றோ இந்நதி கிடைக்கப்பெற்றேன், அன்றேல், சிறியேனுக்கு இது பெறுதற்குரிய திறமையு முண்டுகொல்லோ? இந்நதி சிவபெருமானது திருவருட்பெருக்காக இருத்தலால் இதில்ஸ்நானஞ்செய்வோர் முத்தியையடைவர்; கொலையாதி புரிந்தோரும் மூழ்குவரேல் அப்பாவத்தினீங்கித் தேவராவர்; இதிற்குடைந்த விலங்கு பறவைமுதலிய பிறவுயிர்களும் இயன்ற பதவிகளைப் பெறும், இத்தன்மையுடைய இத்தீர்த்தத்திலே இடைவிடாது தோயும் புண்ணியம் புரிந்துள்ளீர்கள் நீங்கள். அப் புண்ணியத்தைப் பாவியாகிய நான் புரிந்தேனில்லை'' என்று அந்நதியின் சிறப்பைக் கூறி, அவர்கள்பால் விடைபெற்று, ஆரமுதன்ன தீந்தமிழ்வளரும் பொதியமலையை யடைந்தருளினார்.

யாதவமஹாராஜனே, பகீரதமன்னனது தவங் காரணமாக வந்தமையால் பகீரதி யெனவும், பூமியிலே வருங்கால் சன்னுமுனிவரது யாகசாலையின் வழியாய்வர அம்முனிவருண்டு காதின்வழியாக விட்டமையால் சானவியெனவும் பெயர்பெற்ற கங்காநதியும், விநாயகக்கடவுள் காகவுருக்கொண்டு சையகிரியையடைந்து இவ்வகத்தியமுனிவரது கமண்டலத்தினின்றும் கவிழ்க்கப்பட்ட காவிரிநதியும், இவைபோலும் பிறநதிகளும் தனக் கிணையாகாவண்ணம், இந் நதியானது சிவபெருமானை நிகர்த்த செந்தமிழ்முனிவர் பலபக லருந்தவம்புரிந்து, பரிந்தழைக்கப்பட்டமையால், ஆன்மாக்களினுடைய ஆணவமலவழுக்கை அகற்றி விளங்குகின்றது. இங்ஙனஞ் சிறந்த இத்தீர்த்தத்திலும், அத்தலத்திலுள்ள இந்திரதீர்த்தம் மயூரதீர்த்தம் உருத்திரதீர்த்தம் மார்க்கண்டதீர்த்தம் அரகரதீர்த்தம் மோகினிதீர்த்தம் மாகாளதீர்த்தம் பாரத்துவாசதீர்த்தமுதலிய பிற தீர்த்தங்களிலும், சூரியகிரகணம்சந்திரகிரகணமுதலிய விசேடகாலங்களில், ஸ்நானஞ்செய்வோர் பஞ்சாக்கினிமத்தியிலே நெடுநாளிருந்து கடுந்தவம் புரியினும் அடையப்படாத இன்பத்தையடைவர், என்றருளிச்செய்து, அவ்வரசர் வேண்டுகோளின்படியே பிரமதேவர் சரிதத்தைக் கூறத் தொடங்கினார்.

# நான்முகச் சருக்கம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

உலகெலாம் படைக்கும் புத்தே ளொருபகற் றனது லோகத்
திலகொளி விரிக்குஞ் செம்பொ னெரிமணிக் கோயி லுள்ளா
லலர்தரு மாயி ரந்தோட் டாடக மலர்ப்பொ குட்டிற்
பலர்புகழ் நார தாதி படிமத்தர் மருங்கு சூழ.

(இ - ள்.) உலகு எல்லாம் - எல்லா வுலகங்களையும், படைக்கும் - சிருஷ்டிக்கிற, புத்தேள் - தேவன், (பிரமன்) ஒருபகல் - ஒருநாள், தனது லோகத்து - தனது லோகத்தில், இலகு - விளங்குகிற, ஒளி - பிரகாசத்தை, விரிக்கும் - பரப்புகிற, செம்பொன் - செம்பொன்னாலியன்று, எரி - பிரகாசிக்கிற, மணி - ரத்நங்களிழைத்த, கோயில் உள்ளால் - கோயிலினுள்ளே, அலர்தரும் - மலர்ந்த, ஆயிரம் தோடு - ஆயிரம் இதழ்களையுடைய, ஆடக மலர் - பொன்மலரின், பொகுட்டில்-கர்ணிகையில், பலர் புகழ் - பலராலும் புகழப்பெற்ற, நாரதாதி - நாரதர் முதலாகிய, படிமத்தர்-முனிவரர், மருங்குசூழ-இரண்டு பக்கங்களிலும் சூழ்ந்திருக்க.

புத்தேள் - தேவன் இது பொதுப்பெயராயினும் உலகெலாம் படைக்கும் என்னும் விசேடணத்தால் பிரமனைக் குறித்தது. தனது என்பதில் அது ஆறனுருமையுருபு. ஆடகம்-பொன். இது நால்வகைப் பொன்னிலொன்று. (க)

அடல்கெழு குலிச வைவா ளாயிரக் கண்ணன் முன்னுங்
கடவுள ரிரும ருங்குங் கைகட்டி நிரைந்து நிற்ப
வடிவுடை யியக்கர் விஞ்சை மன்னரீ ரிருகூற் றும்பர்
சுடர்மணி யுரகர் சித்தர் சுற்றினர் நெருங்கி நிற்ப.

(இ - ள்.) அடல்கெழு - வெற்றி பொருந்திய, வை - கூர்மையுள்ள, குலிசவாள் - வஜ்ராயுதத்தையுடைய, ஆயிரம் கண்ணன் முன் ஆம் - ஆயிரங் கண்களை யுடையவனாகிய இந்திரன் முதலாகிய, கடவுளர் - தேவர்கள், இருமருங்கும் - இரண்டு பக்கங்களிலும், கைகட்டி - கைகட்டிக்கொண்டு, நிரைந்து நிற்ப - வரிசையாய் நிற்க, வடிவு உடை - அழகையுடைய, இயக்கர் - யக்ஷர், விஞ்சைமன்னர் - வித்யாதரவேந்தர், ஈரிரு கூற்று உம்பர் - நால்வகையராகிய தேவர்கள், சுடர் - பிரகாசிக்கிற, மணி - மாணிக்கத்தையுடைய, உரகர் - நாகர், சித்தர்—, (இவர் எல்லாரும்) சுற்றினர் நெருங்கி நிற்ப - சூழ்ந்து நெருங்கிநிற்க எ-று.

அடல் - வலியெனினு மமையும். குலிசம்-வடசொல். கௌதமரிஷி பத்நியாகிய அஹல்யைக்கு இச்சைவைத்து அந்த ரிஷிசாபத்தால் உடம்பெல்லாம் கண்பெற்றவனாதலால் இந்திரனை ஆயிரக் கண்ணன் என்றார். சுற்றினார் முற்றெச்சம். ஈரிருகூற்று உம்பர் என்றது முப்பத்துமுக்கோடி தேவர்களை. ஆதித்தர் பன்னிருவர். உருத்திரர் பதினொருவர். வசுக்கள் எண்மர். மருத்துவர் இருவர். இவ்வாறு கூறுபட்டுத்தனித்தனியே கோடியெண் பெற்று முப்பத்து முக்கோடி தேவராயினார் என்றதாயிற்று. சுற்றினார் - முற்றெச்சம். (உ)

ஏழிசை யுருக்கொண் டன்ன வெழில்கொள் கந்தருவ வேந்தர்
யாழிசை யமுத மூற்ற வீர்க்கிடை புகாத கொங்கைத்
தாழிருங் கூந்தற் செவ்வாய்த் தளிரியன் மகளிர் தீம்பா
லாழிவெண் டிரைம ருட்டு மலங்குவெண் கவரி வீச.

(இ - ள்.) ஏழ் இசை - ஏழிசையே, உருகொண்டன்ன - வடிவு கொண்டாற்போன்ற, எழில்கொள் - அழகைக்கொண்ட, கந்தருவ வேந்தர் - கந்தர்வ அரசர்கள், யாழ் இசை - யாழோசையாகிய, அமுதம் ஊற்ற - அமிர்தத்தை வார்க்க, இடை - நடுவே, ஈர்க்குபுகாத - ஈர்க்கும் நுழையவொண்ணாத, கொங்கை - தனங்களையும், தாழ் - தொங்குகிற, இரு கூந்தல் - நீண்ட கூந்தலையும், செவ்வாய் - செவந்த வாயினையும், தளிர் இயல் - தளிரியலையுமுடைய, மகளிர் - மாதர், தீ - மதுரமான, பால் ஆழி - பாற்கடலின், வெள்திரை மருட்டும்-வெண்மையாகிய அலைகளை மயக்குகிற, அலங்கு - அசைகிற, வெண்கவரி - வெண்மையாகிய சாமரத்தை, வீச - விசிற எ - று.

ஊற்ற என்பதற்கு செவியாகிய வாயில் வார்க்க என்றுரைத்துக் கொள்க. இடைவெளி யின்மை குறித்தற்கு ஈர்க்கிடை புகாத கொங்கை என்றார். தாழ் - நீண்ட என்றலுமாம். மருது ஸ்வபாவம் என்கிற வடசொல்லைத் தளிரியல் என்றார். செவ்வாய் என்றது செவந்த அதரத்தை. அதரம் - கீழுதடு. (ங)

மின்னுறழ் பொற்பி ரம்பு விளங்கிய கையர் முன்னின்
றின்னரென் றுரைத்துக் காட்ட விறைஞ்சல் செய்குந ரைக்
தன்னரு ளவர வர்க்குத் தக்கவா றீந்து நான்கு [காணுத்
சென்னியம் பொற்குன் றென்னச் சிறந்தினி தரசி ருந்தான்.

(இ - ள்.) மின் உறழ் - மின்கொடி போன்ற, பொன்பிரம்பு - பொன்னாலியன்ற பிரம்பு, விளங்கிய-பிரகாசியாநின்ற, கையர் - கையினையுடையவர், முன்நின்று - எதிரே நின்று, இன்னர் என்ப - இவர் இன்னாரென்று, உரைத்துக் காட்ட-சொல்லிக்காட்ட, இறைஞ்சல் செய்குநரை - வணங்குகிறவரை, காணு - கண்டு, தன் அருள்-தன் கருணையால், அவர

வர்க்கு - அவரவர்களுக்கு, தக்கவாறு - தகுந்த வண்ணம், ஈந்து - அவர்கள் வேண்டியவற்றைக் கொடுத்து, அம் - அழகாகிய, நான்கு சென்னி - நான்கு சிகரங்களையுடைய, பொற்குன்று என்ன - பொன்மலை போல, சிறந்து - மேம்பட்டு, இனிது - இனிதாக, அரசு இருந்தான் - அரசு வீற்றிருந்தான் எ-று.

காணு செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். நான்கு தலையையும் பொன்மலைபோன்ற சரீரத்தையும் உடையவனாதலால் பிரமனை நான்கு சென்னியம் பொற்குன் றென்னச் சிறந்தினி தரசிருந்தான் என்றார். பொற்குன்று - மேருமலை. (ச)

அவ்வமை யத்தி னார்க்கு மலைவிரி கடற்பி றந்த
திவ்விய வமுதுந் திங்கட் செல்வனொள் கலையுங் கூடி
யெவ்வமி லுருக்கொண் டன்ன வெழில்கனிந் தொழுகு மேனிக்
கொவ்வையங் கனிவாய் வாட்கட் குவிமுலைப் பனுவ லாட்டி.

(இ - ள்.) அ - அந்த, அமையத்தில் - சமயத்தில், ஆர்க்கும் - ஒலிக்கிற, அலைவிரி - அலைகள் பரவிய, கடல் - பாற்கடலில், பிறந்த - தோன்றிய, திவ்விய அமுதும் - மேன்மையாகிய அமிர்தமும், திங்கள் செல்வன் - சந்திரனது, ஒள் - ஒட்பமான, கலையும் - கூறும், கூடி - சேர்ந்து, எவ்வம் இல் - குறைவற்ற, உருகொண்டன்ன - வடிவுகொண்டாற் போன்ற, எழில்கனிந்து ஒழுகும் - அழகு பழுத்தொழுகுகிற, மேனி-வடிவத்தையும், அம் - அழகிய, கொவ்வைக்கனி - கோவைப்பழம் போன்ற, வாய் - வாயையும், வாள்கண் - வாள்போலும் கண்களையும், குவிமுலை - குவிந்த தனங்களையும் உடைய, பனுவலாட்டி - சரசுவதி தேவியானவள் எ-று.

அமையம் - சமயம். ஆர்த்தல் - ஒலித்தல். ஒட்பம் - அழகு. கலை கூறு என்பன சந்த்ரகண்டத்தைக் குறித்தன. வாய் - அதரம். (ரு)

இழையிள வெயிலெ றிப்ப விணையடிக் கலன்க ளார்ப்ப
மழைவள ரைம்பாற் செய்ய வாயர மகளிர் சூழ
விழைதரு கணவ னார்தி வெள்குமென் னடையால் வந்து
கொழுநனே டிருந்தாள் செம்பொற் குருமலர்த் தவிசின் மேதே.

(இ - ள்.) இழை - ஆபரணங்கள், இளவெயில் எறிப்ப - இளவெயிலை வீச, இணை அடி - இரண்டு பாதங்களிலு மணிந்திருக்கிற, கலன்கள் - சிலம்பு முதலிய அணிகள், ஆர்ப்ப - சத்திக்க, மழைவளர் - மேகம் போல வளராநின்ற, ஐம்பால் - ஐம்பாலினையும், செய்யவாய் - செவ்வாயினையு முடைய, அரமகளிர் - தெய்வப்பெண்கள், சூழ - சூழ்ந்து வர,

விழைதரு - விருப்பத்தை யுண்டாக்குகிற, கணவன் - தன் கணவனது, ஊர்தி - வாகநமும், வெள்கும் - நாணுதற்குரிய, மெல் நடையால் வந்து-மெல்லிய நடையோடு வந்து, கொழுநனோடு - தன் கணவனுடன், செம்பொன் - செம்பொன்னாலியன்ற, குரு - ஒளியுள்ள, மலர் தவிசின் மீது - புஷ்பாசநத்தின்மேல், இருந்தாள் - வீற்றிருந்தாள் எ-று.

அடிக்கலன்களை பாதஜாலம் என்பர் வடநூலார். மழையென வாளா கூறினாரேனும் ஈண்டைக்கேற்பக் கரியமேகம் என்றுரைத்துக் கொள்க. ஐம்பால் என்றது ஐவகை மயிர்முடியை. அவை: — குழல், கொண்டை, சுருள், பனிச்சை, முடி என்பன. குழல்-சுருட்டி முடித்தல். கொண்டை-பக்கன் முடித்தல். சுருள்-பின்னே செருகல். பனிச்சை - பின்னி விடுதல். முடி - மயிரை உச்சியின் முடித்தல். (சு)

இருந்தவ ளவய வத்தி னெழினலங் கண்க ளார
வருந்திநெஞ் சடங்காக் காதற் கனைகட லுறவ ழுந்தி
மருங்குநின் றவரை யெல்லாம் வல்விரைந் தொருங்கு நீக்கிக்
கருங்குழல் வெள்ளை மேனிக் கலைமகட் கொன்று ரைப்பான்.

(இ - ள்.) இருந்தவள் - அவ்வாறிருந்தவளாகிய நாமகளது, அவயவத்தின் - உறுப்புக்களின், எழில் நலம் - அழகின் நன்மையை, கண்கள் ஆர அருந்தி - விழிகள் நிறையவுண்டு, நெஞ்சு - மனத்தில், அடங்கா - அடங்காத, காதல் - ஆசையாகிய, கனைகடல் - ஒலிக்கிற கடலினிடத்தே, உற அழுந்தி - மிகுதியாய் மூழ்கி, மருங்கு - தன் பக்கத்தில், நின்றவரை யெல்லாம் - நின்றவ ரெல்லாரையும், வல்விரைந்து - மிகு விரைவாக, ஒருங்கு நீக்கி - ஒருங்கே யொழித்துவிட்டு, கருங்குழல் - கரிய கூந்தலையும், வெள்ளைமேனி-வெள்ளையாகிய திருமேனியையும் உடைய, கலைமகட்கு - சரசுவதி தேவிக்கு, ஒன்று உரைப்பான்-ஒரு செய்தியைச் சொல்வானாயினன் எ-று.

கண்களார அருந்தி யென்றது-கண்கள் களிக்க நோக்கி யென்றபடி. கனைகடல் என்பதில் கனை சாதியடை. கருங்குழல் வெள்ளைமேனி யென்றது முரண்டொடை. (எ)

எனதுநா வமுதே நின்மே லெழுபெரு வேட்கை தீர்த்த
லுனதுரு வொன்றின் முற்று துயிருடை யோவ மேசெங்
கனியித ழன்ன மேயென் கண்மணிப் பாவாய் பூவாய்
வனமுலை மயிலே நாறு வயங்குருக் கொள்ளா யென்றான்.

(இ - ள்.) எனது நா அமுதே - என் நாவிலிருக்கும் அமிர்தமே, நின்மேல் - உன்மீது, எழு - எழுகிற, பெருவேட்கை தீர்த்தல் - பேராவலை யொழித்தல், உனது உரு ஒன்றில் - உன் வடிவு ஒன்றினால்,

முற்றாது - முடியாது, (ஆதலால்) உயிர் உடை - உயிரையுடைய, ஓவமே - சித்திரப் பாவையே, செங்கனி இதழ் - செங்கனிபோலும் அதரத்தையுடைய, அன்னமே - ஹம்ஸமே, என் கண்மணி பாவாய் - என் கண்மணிபோலும் பாவையே, பூவாய் - பூவையே, வனமுலை மயிலே - அழகிய தனங்களையுடைய மயிலே, வயங்கு - பிரகாசிக்கிற, நூறு உரு - நூறு ரூபங்களை, கொள்ளாய் - பரிக்ரஹிக்கக் கடவை, என்றான் - என்று சொன்னான் எ - று.

பிரமனது நாவையே உறைவிடமாகக் கொண்டிருப்பதனால் நாவமுதே யென்றான். அமுதச்சுவை யார்தற்குரியது நாவேயாதலால் அங்ஙனங் கூறினனென்றலு மொன்று. ஒன்றின் என்பதில் இன் மூன்றுவதன் கருவிப் பொருளில் வந்தது. ஓவியம் எனற்பாலது ஓவம் என மருஉவாயிற்று. செங்கனியெனப் பொதுப்படக் கூறினரேனும் கோவைக்கனியையே கூறினரெனக் கொள்க. என்னை, இதழுக் குவமையாகப் புணர்க்கப்படுவது அதுவே யாகலானென்க. இதழ் - கீழுதடு. இதனை அதரம் என்பர். "உணர்ந்தார்க் குணர்வரியோன் றில்லைச் சிற்றம்பலத் தொருத்தன்,குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாய்" "மாவைவந்தாண்ட மென்னோக்கி தன்பங்கர் வண்டில்லை மல்லற் கோவைவந் தாண்ட செவ்வாய்"என்றற் றொடக்கத் தான்றோர் திருவாக்குக்களாலும் இது இனிது விளங்கும். கொள்ளாய் உடம்பாட்டேவல் வினை முற்று. ()

பாமகள் கணவன் வேட்ட படியெழு கின்றே னென்னத்
தாமரை மலர்மு கத்துத் தளிரியல் பொற்குன் றன்ன
மாமுலை யரித்த டங்கண் மழையொடு முரணு மைம்பால்
வாமமே கலைய ணங்கு வடிவொரு நூறெ டுத்தாள்.

(இ - ள்.) பாமகள்-சரசுவதி தேவியானவள், கணவன் - தன் கணவனாகிய பிரமதேவன், வேட்டபடி - விரும்பினபடியே, எழுகின்றேன் என்ன - உருக் கொள்கிறேனென்று, தாமரை மலர்முகத்து - தாமரை மலர்போலு முகத்தையுடைய, தளிர் இயல் - தளிர்போலு மெல்லியலாளாகிய சரசுவதிதேவியானவள், பொன்குன்று அன்ன - பொன் மலைபோன்ற, மாமுலை - பெரிய தனங்களையும், அரி - இரேகைகள் படர்ந்த-தடம்கண் - பெருங் கண்களையும், மழையொடு - மேகத்துடன், முரணும், பகைக்கிற, ஐம்பால் - ஐவகை மயிர்முடியையும், வாமம் - அழகிய, மேகலை - மேகலாபரணத்தையு முடைய, அணங்கு - தெய்வப் பெண் போன்ற, ஒரு நூறு வடிவு எடுத்தாள் - ஒரு நூறு உருவெடுத்தாள் எ-று.

வேட்ட என்பதற்குப் பகுதி வேள். தளிரியல் - ம்ருதுஸ்வபாவை. பொற்குன்று - மேருமலை. மேகலை - மாதர் இடையணிகளி லொன்று. ()

பாரதி பதிற்றுப் பத்துப் படிவமு நாலி ரண்டு
கூர்விழி கொடுநோக் கிப்பொற் குடத்தினை வறுமை யுற்றோன்
யாருமி றனியி டத்தி லெதிர்ந்தெனக் களிசி றந்து
தார்மலி குழலி னாரைத் தனித்தனித் தழுவிக் கொண்டான்.

(இ-ள்) பாரதி - சரசுவதி தேவியானவள் எடுத்த, பதிற்றுப் பத்து படிவமும் - நூறு உருவத்தையும், நாலிரண்டு - எட்டென்கிற, கூர்விழி கொடு நோக்கி - கூர்மையாகிய கண்களால் பார்த்து, பொன் குடத்தினை - பொற்குடத்தை, வறுமை உற்றோன் - தரித்திரனானவன், யாரும் இல் - ஒருவருமில்லாத, தனியிடத்தில் - தனிமையான இடத்தில், எதிர்ந்தென - எதிர்ந்தாற்போல, களிசிறந்து - மகிழ்ச்சி மிகுந்து, தார்மலி - பூமாலைகள் மிகவு முடித்திருக்கிற, குழலினார் - கூந்தலையுடைய நூறு மாதரையும், தனித்தனி-தனித்தனியாக, தழுவிக் கொண்டான் - ஆலிங்கனம் செய்துகொண்டான் எ - று.

படிவம் - உரு. பொற்குடம் என்றது பொன்னை நிறைத்து நிலத்திற் புதைத்துவைத்த பொற்குடத்தை. இதனை வைப்பு என்பர். எதிர்ந்தால் எனற் பாலது எதிர்ந்தென வெனத் தொகுத்தலாய் சிறந்து அதிகரித்தது. பகுதி சிற. தழுவியென்பதற்குப் பகுதி தழுவு. (௬௦)

## ஆலிங்கனம்

### எழுசீரடியாசிரியவிருத்தம்

ஒருத்திபான் முலையா லிங்கனங் கொள்ளு
மொருத்தியாற் றொடைத்தழா லடையு
மொருத்திபாற் சகனா லிங்கன மேவு
மொருத்திபா னுதன்முயக் கெய்து
மொருத்திபாற் றிலதண் டலமெனக் கலக்கு
மொருத்திபாற் பாலினீர் செய்யு
மொருத்திபான் மரஞ்சூழ் வல்லியிற் புல்லு
மொருத்திபாற் குதிரையேற் றுறுமால்.

(இ - ள்.) ஒருத்திபால் - ஒருத்தியிடத்தில், முலை ஆலிங்கனம் கொள்ளும் - முலையைத் தழுவிக் கொள்வான், ஒருத்திபால் - ஒருத்தியிடத்தில், தொடைத்தழால் அடையும் - தொடையாலிங்கனம் செய்வான், ஒருத்திபால் - ஒருத்தியிடத்தில், சகனாலிங்கனம் மேவும் - ஜகனாலிங்கனம் செய்வான், ஒருத்திபால் - ஒருத்தி யிடத்தில், நுதல் முயக்கு எய்தும் - நெற்றி முயக்கங்கொள்வான், ஒருத்திபால் - ஒருத்தியிடத்தில், திலதண்டலம் என - திலதண்டலங்கள் போல, கலக்கும் - கூடுவான், ஒருத்தி

பால் - ஒருத்தியிடத்தில், பாலில் நீர் செய்யும் - பாலினீர்போலக் கலந்திருக்கும், ஒருத்திபால் - ஒருத்தியிடத்தில், மரம்சூழ் - மரத்தைச்சுற்றிப் படர்கிற, வல்லியின் - கொடிபோல், புல்லும் - தழுவிக்கொள்வான், ஒருத்திபால் - ஒருத்தியிடத்தில், குதிரையேற்று உறும் - குதிரை யேற்றத்தைச் செய்வான் எ - று.

ஆலிங்கநம்-தழுவிக்கொள்ளல். தழால் - தழுவுதல். சகநம் - கடிப்ரதேசம். திலம் - எள். தண்டுலம் - அரிசி. (எள்ளில் நெய்போலவும், நெல்லில் அரிசிபோலவும் பிரிவற்றிருப்பான் என்றவாறு.) (கக)

## சுவைத்தல்

### அறுசீரடியாசிரியவிருத்தம்

ஒருகொடி யிதழ்மற் றோர்கொம் பொளிநுத லொருமான் கண்க
ளொருகிளி நாவோர் மஞ்ஞை யொண்கழு தோர்மின் கண்ட
மொருபிடி மார்போ ரன்னங் கையடி யோர்பொன் கொங்கை
யொருகரும் பல்கு றோர்தே னுந்திதந் தளிக்க வுண்ணும்.

(இ - ள்.) ஒரு கொடி - ஒரு பெண், இதழ் - அதரத்தையும், மற்று ஓர் கொம்பு - வேறொரு பெண், ஒளி நுதல் - ஒளியையுடைய நெற்றியையும், ஒரு மான் கண்கள் - ஒரு பெண் கண்களையும், ஒரு கிளிநா - ஒரு பெண் நாவினையும், ஓர் மஞ்ஞை ஒள்கழுள் - ஒரு பெண் கன்னத்தையும், ஓர்மின் கண்டம் - ஒரு பெண் கழுத்தையும், ஒரு பிடி மார்பு - ஒரு பெண் மார்பையும், ஓர் அன்னம் கையடி - ஒரு பெண் பாதமூலத்தையும், ஓர் பொன் கொங்கை - ஒரு பெண் தனத்தையும், ஒரு கரும்பு அல்குல் - ஒரு பெண் அல்குலையும், ஓர் தேன் உந்தி - ஒரு பெண் உந்தியையும், தந்து அளிக்க - தந்து அன்புசெய்ய, உண்ணும்-நுகர்வான் எ-று.

கொடி கொம்பு மான் கிளி மஞ்ஞை மின் பிடி அன்னம் பொன் கரும்பு தேன் என்பன உவமையாகு பெயர்களாய் பெண் என்னும் ஒரு பொருளையே யுணர்த்தி நின்றன. மஞ்ஞை - மயில். பிடி-பெண்யானை. பொன்-இலக்குமி. அல்குல் - பெண்குறி. உந்தி - கொப்பூழ். உண்ணல் - அநுபவித்தல். பகுதி உண். (கஉ)

## நகக்குறி

விளங்கிழை யொருத்தி பொம்மல் வெம்முலை யினுகிர் பற்று
மிளம்பிறை புனைநகக்கோ டிருத்துமோர் பொன்னம் பாவை
வளர்ந்துயர் நிதம்பத் தின்கண் மண்டல நிறுத்து மோர்மா
துளங்கவர் முலைப்பொ ருப்பி னுறுத்துமான் மயூர பாதம்,

(இ - ள்.) விளங்கிழை - பிரகாசிக்கிற ஆபரணத்தை யணிந்தவளாகிய, ஒருத்தி - ஒரு பெண்ணின், பொம்மல் - பொலிவான, வெம்முலையினும் - விருப்பத்தை யுண்டாக்குகிற முலையினிடத்தும், மிடற்றும் - கண்டத்தினிடத்தும், இளம்பிறை - இளம்பிறைபோலுங் குறியை, புலிநகத்தோடு - புலிநகக் குறியோடு, இருத்தும் - பதிப்பான், ஓர் - ஒரு, பொன்னம்பாவை - பொற்பிரதிமை போல்வாளது, வளர்ந்து உயர் - வளர்ந்தோங்குகிற, நிதம்பத்தின்கண் - அல்குலினிடத்து, மண்டலம் - மண்டலக் குறியை, நிறுத்தும்-நிறுத்துவான், ஓர் மாது - ஒரு பெண்ணின், உள்ளம் கவர் - (கண்டோர்) மனத்தைக் கவர்கிற, முலைப்பொருப்பில் - முலையாகிய மலையின்மேல், மயூரபாதம் உறுத்தும் - மயிலடிக் குறியைப் பதிய வைப்பான் எ - று.

விளங்கிழை - அன்மொழித் தொகைக் காரணப் பெயர். மண்டலக் குறி - வட்டவடிவாகிய குறி. மயூரம் - மயில். (கங)

ஒருகிளி மழலை யாடன் ஒளிர்சுணங் கணிந்த கொம்மைத்
திருமுலை முகட்டிற் றீட்டுஞ் சிறுமுய லடியொ ருத்தி
பெருமுலை யினும்மொ ருத்தி பிற்புறத் தினுமொ ருத்தி
யுருவளர் கடித டத்து முற்பல தளம்பூப் பிக்கும்.

(இ - ள்.) ஒரு கிளி - ஒரு கிளிபோலும், மழலையாள்-மழலைச் சொல்லையுடையவளாகிய பெண்ணின், ஒளிர் - விளங்குகிற, சுணங்கு - தேமலாள், அணி - அலங்கரிக்கப்பெற்ற, கொம்மை - திரட்சியாகிய, திரு - அழகுள்ள, முலை முகட்டில் - முலையினுச்சியில், சிறுமுயல் அடி - சிறிய முயலடிக்குறியை, தீட்டும் - பதிப்பான், ஒருத்தி - ஒரு பெண்ணின், பெருமுலையினும் - பெருந் தனத்தினிடத்தும், ஒருத்தி பின்புறத்தினும் - ஒரு பெண்ணின் பிற்பக்கத்திலும், ஒருத்தி - ஒரு பெண்ணின், உருவளர் கடிதடத்தும் - அழகு வளர்கிற கடிதடத்திலும், உற்பலதளம்-நீலமலரின் இதழ்க் குறியை, பூப்பிக்கும்-மலர்விப்பான், (விளங்கச் செய்வான்) எ-று.

மழலைச் சொல் - ஓசை நிரம்பாத சொல். அணிதல் - அலங்கரித்தல். கடிதடம் - நிதம்பப்ரதேசம். உற்பலம் - நீலமலர். தளம்-இதழ் (கச)

## பற்குறி

இலங்கிழை யொருத்தி செய்ய விதழின்மூ டகமு மற்றோர்
பொலங்கொடிக் கவுளி னுற்கூ னகமுமோர் பூங்கொம் பன்ன
ளலங்கெழிற் கபோலத் தங்க ணக்துகிர் மணியும் வேறோர்
சிலம்படி மயிலி தழ்க்கட் சிறந்தவிந் துவுஞ்செய் கிற்கும்.

(இ - ள்) இலங்கிழை ஒருத்தி - இலங்கிழையாகிய வொருத்தியின், செய்ய இதழின்-சிவந்த அதரத்தில், மூடகமும்-பெருச்சாளிக் குறியும், மற்றோர் பொலங்கொடி கவுளில் - வேறொரு பொற்கொடியின் கன்னத்

தில், உற்சுனகமும், ஓர் பூங்கொம்பு அன்னாள் - ஒரு பூங்கொம்பு போல் வாளது, அலங்கு எழில் - அசையாநின்ற அழகை யுடைய, கபோலத்து - கன்னத்தின், அங்கண் - அவ்விடத்தில், அம் - அழகிய, துகிர்மணியும் - பவளமணிக் குறியும், வேறு ஓர் சிலம்பு அடிமயில் இதழ்க்கண்-வேறொரு பெண்ணின் அதரத்தில், சிறந்த இந்துவும் - மேன்மையாகிய முழுமதிக் குறியும், செய்கிற்கும் - உண்டாக்குவான் எ-று.

இலங்கிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். இதற்குப் பிரகாசிக்கிற ஆபரணங்களை யணிந்தவள் என்பது பொருள். மூடகம் மூஷகம் என்னும் வடசொற்றிரிபு சிலம்பு அடிமயில் - சிலம்பணிந்த பாதத்தையுடைய மயில்போல்வாள். மயில்சாயற் குவமை. சிறந்த என்னும் விசேடணத்தால் இந்து முழுமதியைக் குறித்தது. (கரு)

பண்ணமர் மொழியி னோளோர் பாவைதன் கைம்மூ லத்து
நுண்ணிடை யொருத்தி திங்க ணுதலினு மொரு வடிக்க
ணொண்ணுத லொருத்தி தொடையின் கண்ணு மொருமணி விளக்கி னெஞ்சி
கண்ணுநன் கணியு மிக்க கவின்மணி மாலை தானே. [ன்

(இ - ள்.) பண் அமர் - பண்கள் விரும்புகிற, மொழியினாள் - சொல்லையுடையவளாகிய, ஓர் பாவை - ஒருமாதினது, கைம்மூலத்தும்-பாஹுமூலத்திலும், நுண் இடை - நுண்ணிய இடையையுடைய, ஒருத்தி - ஒரு மாதின், திங்கள் நுதலினும் - அர்த்த சந்த்ராகாரமாயுள்ள நெற்றியிலும், வடிகண் - வடுவகிர்போலுங் கண்களையுடைய, ஒரு ஒள்நுதல் - ஒரு மாதின், தொடையின் கண்ணும் - ஊருவிலும், ஒரு மணிவிளக்கின் - ஒரு ரத்நதீபம் போல்வாளது, நெஞ்சின் கண்ணும் - மார்பிலும், மிக்க - மிகுந்த, கவின் - அழகாகிய, மணிமாலை - ரத்நஹாரக் குறியை, நன்கு அணியும் - நன்றாக அலங்கரித்து வைப்பான் எ - று.

அமர்தல் - விரும்புதல். அமர் பகுதி. பாவை உவமையாகுபெயர். பாஹுமூலம் - தோள். வடி - மாவடுவின் குறிப்பு, "மாவடுவகிரன்ன கண்ணிபங்கா" "வடுத்தான் வகிர்மலர்க் கண்ணிக்குத் தக்கின்று" "வடிக் கண் ணிவை வஞ்சியஞ்ச மிடையிது" என்றற் றொடக்கத் தான்றோர் செய்யுட்களால் இது விசதம். அர்த்த சந்த்ரன் - பூர்வபக்ஷத் தஷ்டமீ சந்திரன். ஒண்ணுதல் - அன்மொழித் தொகைக் காரணப் பெயர் (கசு)

## கலிவிருத்தம்

இருடுன்னிய கருமென்குழ லேவன்ன கட்கனிவா
யொருபைந்தொடி துடிநுண்ணிடை யொடியப்புடை விம்முந்
தரளந்துயல் வருபொன்னுரை தனையொத்தொளிர் திதலை
வருகொம்மைவெம் முலையிற்கரு மாவின்கடி செய்யும்.

(இ - ள்.) இருள் துன்னிய - இருள் மிகுந்த, கரு - கரிய, மெல் குழல் - மெல்லிய கூந்தலையும், ஏ அன்ன - அம்பையொத்த, கண் - கண்களையும், கனிவாய் - கோவைப் பழம்போலும் அதரத்தையும் உடைய, ஒரு பைந்தொடி - ஒரு பெண்ணினது, துடிநுண் இடை - துடிபோலும் நுண்ணிடையானது, ஒடிய - முறியும்படி, புடைவிம்மும் - விலாப்புடை பெருகச் செய்வான், தரளம் - முத்து வடம், துயல்வரு - புரளாநின்ற, பொன் உரை தன்னை ஒத்து - பொன்னுரையை நிகர்த்து, ஒளிர் - பிரகாசிக்கிற, திதலைவரு - தேமல்படர்ந்த, கொம்மை - திரட்சியாகிய, வெம் முலையில் - விருப்பத்தை யுண்டாக்குகிற, முலையில் - ஸ்தநங்களில், கருமாவின்கடி - பன்றிக் கடிக்குறியை, செய்யும் - பதிவிப்பான் எ - று.

துன்னல் - நெருங்கல் அது இங்கு மிகுதல் மேற்று. ஏ - அம்பு. இது, "தீவினையாட நின்றே விளையாடி திருமலைக்கே" என்னும் மணிவாசகப் பெருமான் திருவாக்கினாலும் அறியக் கிடந்தது. கனியென வாளா கூறினாரேனும் ஈண்டைக் கேற்பக் கோவைக்கனியென் றுரைக்கலாயிற்று. துயல்வரு என்பதற்குப் பகுதி துயல்வா. கருமா - பன்றி. (௬௭)

கரணபேதமுதல

அறுசீரடியாசிரியவிருத்தம்

ஒருவர்கட் செய்த தொன்றை யொருவர்கண் மீது செய்யா
துரைதரு கரண பேத முள்ளன வெல்லாஞ் செய்யு
மரிகுயின் மஞ்ஞை செம்போத் தனம்புறாக்காடை கோழிக்
குரலென வொலிசெய் வித்துக் கூடுமுன் னின்ப மோங்க.

(இ - ள்.) ஒருவர்கண் செய்தது-ஒருவரிடத்திற் செய்ததாகிய, ஒன்றை - ஒரு கரணபேதத்தை, ஒருவர்கள்மீது செய்யாது - வேறொருவரிடத்தே செய்யாமல், உரைதரு - சொல்லப்பட்ட, கரணபேதம் உள்ளன எல்லாம் - கரணபேதமாயுள்ளவை யாவும், செய்யும்-பண்ணுவான், அரி- கிளி, குயில் - குயில், மஞ்ஞை - மயில், செம்போத்து - செம்புகம், அன்னம் - அன்னம், புறா - புறா, காடை - காடை, கோழி - குக்குடம், (என்பவற்றின்) குரல் என - குரல்போல, ஒலிசெய்வித்து - ஒலிப்பித்து, கூடுமுன் - புணர்வதற்கு முன்பே, இன்பம் ஓங்க-சுகம் வளராநிற்க எ-று.

ஒன்றை என்றது ஒரு கரணபேதத்தை. ஓங்கல் - மிகல். ஓங்கு - பகுதி. (௬௮)

அமுதங்கொண் டிருக்கு மங்க மறிந்ததன் றொழிலி யற்றுங்
குமுதங்கொள் வாய்க துப்புக் குவளையங் கண்கண் முத்த
வமைவென்ற தோள்க போல மணிமுலை யிவற்றிற் கன்னல்
கமலஞ்செங் கயல்கள் போலக் கவின்பெறத் தொய்யி றீட்டும்.

(இ - ள்.) அமுதங்கொண்டிருக்கும் - அமுதத்தை உடையதாய் இருக்கிற, அங்கம் - உறுப்பினை, அறிந்து - தெரிந்துகொண்டு, அதன் தொழில் இயற்றும் - அதன் தொழிலைச் செய்வான், குமுதம் கொள் - செவ்வல்லி மலரின் தன்மையைக் கொண்ட, வாய் - வாய், கதுப்பு - கன்னம், குவளையம் கண்கள் - கருங்குவளை மலர்போன்ற அழகிய கண்கள், முத்தம் - முத்துக்களையுடைய, அமை - மூங்கிலை, வென்ற - வெற்றி கொண்ட, தோள் - தோள்கள், கபோலம் - கவுள், அணிமுலை - அழகியமுலை (ஆகிய) இவற்றில் - இவைகளில், கன்னல் - கரும்பு, கமலம் - தாமரைமலர், செங்கயல்கள் - சிவந்த கெண்டைமீன்கள், (என்கிற இவற்றை) போல - ஒக்க, கவின்பெற - அழகுண்டாக, தொய்யில் - சந்தனக்கோலத்தை, தீட்டும் - எழுதுவான் எ - று.

குவளையென்று ரேனும் கண்கள் என மேல் வருதலால் கருங்குவளையென் றுரைக்கலாயிற்று. முத்தம் - மூக்தம் என்னும் வடசொற் றிரிபு. தொய்யில் - சந்தனக் குழம்பினால் எழுதப்பட்ட கோலம். இது தருண ஸ்த்ரீகளின் கொங்கை முதலிய வுறுப்புக்களில் எழுதப்படுவது. மன்மதனது வில்லாகிய கரும்பையும் பாணமாகிய தாமரை மலரையும் கொடியாகிய கெண்டைமீனையும் எழுதுதல் மரபு. (கக)

அஞ்சன மெழுதுங் கண்கட் கலரொடு குழன்மு டிக்கும்
பஞ்சிமெல் லடிகட் கூட்டிக் கிங்கிணி பாட கம்பொற்
செஞ்சிலம் பணியு மம்பொற் றிருமணிக் கலாபஞ் சூழும்
பிஞ்சிள மதிநு தற்குப் பிறங்கெழிற் றிலகந் தீட்டும்.

(இ - ள்.) கண்கட்கு - கண்களுக்கு, அஞ்சனம் எழுதும் - மை எழுதுவான், குழல் - கூந்தலை, அலரொடு முடிக்கும் - மலர்களோடு சேர்த்து முடிப்பான், மெல்லடிகட்கு-மிருதுவாகிய பாதங்களுக்கு, பஞ்சி ஊட்டி- செம்பஞ்சி ஊட்டி, கிங்கிணி - கிங்கிணி, பாடகம்—, பொன் - பொன் னாலியன்ற, செஞ்சிலம்பு - அழகிய சிலம்புகள், (ஆகிய இவற்றை) அணியும் - அலங்கரிப்பான், அம் - அழகிய, பொன் - பொன்னாற் செய்யப்பட்ட, திரு - அழகமைந்த, மணிகலாபம் - ரத்ந கலாபத்தை, சூழும்- அரையில் சுற்றி கட்டுவான், இள - இளமையாகிய, பிஞ்சுமதி - பால சந்த்ரனை நிகர்த்த, நுதல் - நெற்றிக்கு, பிறங்கு - விளங்குகிற, எழில் - அழகு மிகுந்த, திலகம் தீட்டும் - பொட்டணிவான் எ - று.

அலர் ஆகுபெயர். கலாபம் - மேகலை வகைகளிலொன்று. சூழ்தல் - சுற்றுதல். பகுதி - சூழ். (உ0)

## ஊடலுவகை

### கலிவிருத்தம்

தன்னுட னுடுழித் தன்ன லாதொரு
பொன்னனை யாண்முகம் புகன்று நோக்கலிற்

கொன்னவில் படைவிழி சிவந்து கொவ்வைவா
யின்னிசை மொழிகொடா திருக்கின் றாளையும்.

(இ - ள்.) தன்னுடன் கூடு உழி-தன்னோடுகூடி விளையாடிய காலத்தில், தன் அலாது - தன்னை அல்லாமல், ஒரு - ஒரு, பொன் அனையாள்-திருமகளை நிகர்த்தவளாகிய ஒரு பெண்ணின், முகம் - முகத்தை, புகன்று - புகழ்ந்து பேசி, நோக்கலில் - பார்த்தலால், கொல் - கொல்லும் தொழிலில், நவில் - புகழ்ந்துபேசுதற்குரிய, படை - வாளாயுதத்தை நிகர்த்த, விழி - கண்கள், சிவந்து - செந்நிறமடைந்து, கொவ்வை வாய்-கோவைக் கனிபோன்ற வாயினால், இன் இசை மொழி கொடாது-இனிதாகிய இராகத்தை ஒத்த சொல்லைச் சொல்லாமல், இருக்கின்றாளையும் - இருப்பவளாகிய ஒரு மாதினையும் எ - று.

புகன்று என்பதற்குப் பகுதி புகல். படையெனப் பொதுப்படக் கூறினாரேனும் கண்களுக் குவமையாகப் புணர்க்கப்படுதலால் வாள் என்றுரைக்கலாயிற்று. கொவ்வை - ஆகுபெயர். இன்னிசை மொழி கொடாதிருத்தலாவது ப்ரத்யுத்தரம் சொல்லாதிருத்தல். (உக)

உற்றதென் னினக்கென வுறவி லாதுநெஞ்
சிற்றுறை கின்றன மெமைத்தொ டேலெனப்
பற்றிய மலர்க்கையைப் பறித்துப் பேரொலி
சிற்றடி யணிதரச் செல்கின் றாளையும்.

(இ - ள்.) நினக்கு உற்றது என் என - உனக்கு நேர்ந்தது யாதென்று கேட்க, உறவு இலாது - ஆதரவு இல்லாமல், நெஞ்சு இற்று - மனமழிந்து, உறைகின்றனம் - இருக்கின்றோம்; எமைத்தொடேல் - எம்மைத் தீண்டாதே, என - என்று சொல்லி; பற்றிய மலர்க்கையை - பிடித்த தாமரைமலர்போன்ற கையினை, பறித்து - பிடுங்கிக்கொண்டு, சிறு அடி - சிறிய பாதங்களில் தரித்திருக்கிற; அணி - பாதஜாலங்கள், பேரொலி தர - பெருத்த சப்தத்தைத் தரும்படி, செல்கின்றாளையும் - நடந்து போகின்ற ஒரு பெண்ணினையும் எ - று.

இறுதல் - அழிதல். பாதஜாலங்கள் - காலிலணியும் சிலம்பு முதலிய ஆபரணங்கள். அணி - ஆகுபெயர். (உஉ)

தொண்டையங் கனியிதழ் சுவைப்ப வூக்கலுந்
தண்டளிர்க் கையினன் முகத்தைத் தள்ளிநின்
னொண்டொடி யாருள்யா னொருத்தி யல்லனப்
பெண்டிர்பாற் செல்கெனப் பெயர்கின் றாளையும்.

(இ - ள்.) அம் - அழகிய, தொண்டைக்கனி - கோவைப் பழம் போன்ற, இதழ் சுவைப்ப - அதரபானஞ் செய்யும் பொருட்டு, ஊக்க

லும் - முயற்சித்தலும், தண் - குளிர்ந்த, தளிர் - மாந்தளிர்போன்ற, கையினால் - கைகளால், முகத்தை - கணவனது முகத்தை, தள்ளி - தள்ளிவிட்டு, நின் - உனது, ஒள் தொடியார் உள் - உனக்குரிய மாதர்களில், யான் ஒருத்தி அல்லள் - நான் ஒருத்தி அல்லேன், அ - அந்த, பெண்டிர்பால் - பெண்களிடத்து, செல்க என - போகக்கடவீர் என்று சொல்லி, பெயர்கின்றாளையும் - நடந்து போகின்ற ஒரு மங்கையையும் எ - று.

ஊடக்கல் - முயற்சி செய்தல். ஒள்தொடியார் - ஒட்பமாகிய வளையலையணிந்த மாதர்கள். செல்க என எனற்பாலது செல்கென வெனத் தொகுத்தல் பெற்றது. (உரு)

ஆடமைத் தோளியோ ரணங்கின் வெம்முலைக்
கோடுழு தழியுரக் குங்கு மத்தொடுங்
கூடிய விழைந்துதற் குறுக நெஞ்சழன்
றோடரி நெடுங்கண்முத் துகுக்கின் றாளையும்.

(இ - ள்.) ஆடு - அசைகின்ற, அமை - மூங்கில்போன்ற, தோளி - தோள்களை யுடையவளாகிய, ஓர் அணங்கின் - ஒரு பெண்ணின், வெம் - விருப்பத்தைத் தருகிற, முலை-தனங்களாகிய, கோடு - யானைக்கொம்பு, உழுது - உழுததனால், அழி - அழிந்த, உரம் - மார்பில் பூசின, குங்குமத்தொடும் - குங்குமக் குழம்போடும், கூடிய - அணையும் பொருட்டு, விழைந்து - விரும்பி, தன் குறுக - தன்னை நெருங்கிவர, நெஞ்சு அழன்று - மனங்கொதித்து, ஓடு அரி - செவ்வரிபடர்ந்து, நெடுங்கண் - நீண்ட கண்களினின்றும், முத்து - முத்துப்போன்ற நீரினை, உகுக்கின்றாளையும் - சிந்துகின்ற ஒரு அணங்கையும் எ - று.

கூடிய செய்யிய வென்னும் வாய்பாட்டு வினை யெச்சம். விழைதல் - நம்புதல். பகுதி - விழை. அழலல் - கொதித்தல். பகுதி - அழல். முத்து - ஆகுபெயர். உகுத்தல் - சிந்துதல். பகுதி - உகு. (உசு)

இழைவளர் தன்முலைக் கெழுது தொய்யிலிற்
குழன்மொழி யொருத்திதன் குவவுக் கொங்கைமே
லெழுதிய தழகுவாய்த் திலங்கக் கண்டுதன்
னழகுசெய் தொய்யிலை யழிக்கின் றாளையும்.

(இ - ள்.) இழைவளர் - ஆபரணங்கள் மிகுதியாய் அணிந்திருக்கின்ற, தன்முலைக்கு - தன் முலையின்மீது, எழுது - எழுதின, தொய்யிலின் - சந்தனக்கோலத்தினும், குழல் மொழி - பொள்ளாங்குழலின் இசைபோன்ற சொல்லையுடைய, ஒருத்தி - ஒரு பெண்ணின், குவவு - திரண்ட, கொங்கைமேல் - முலையின்மீது, எழுதியது - எழுதினதாகிய

சந்தனக்கோலம், அழகுவாய்த்து - அழகுபொருந்தி, இலங்க - விளங்க, கண்டு - பார்த்து, தன் - தனது, அழகுசெய் - அழகைக் கொடுக்கிற, தொய்யிலை - சந்தனக்கோலத்தை, அழிக்கின்றாளையும் - கலைக்கின்ற ஒரு தையலையும் எ - று.

தொய்யில் - சந்தனக் குழம்பினாலெழுதுங் கோலம். இசை - ஓசை யென்றலுமொன்று. தையல் - கைபுனையப்பட்டவள். (உ௫)

புலந்தன ளாடகப் பொன்செய் முத்தரிச்
சிலம்பொடு தவளைவாய்ச் செம்பொற் கிங்கிணி
கலந்தொலி யெழவடிக் கமலங் கன்றநீ
ளுலம்பொரு தடம்புயத் துதைக்கின் றாளையும்.

(இ - ள்.) புலந்தனள் - பிணங்கினவளாய், ஆடகம் - பொன்னா லியன்ற, பொன்செய் - அழகைச்செய்கிற, முத்து அரி-முத்தாகிய பருக் கைபெய்த, சிலம்பொடு - சிலம்பினோடு, தவளைவாய் - தவளைவாயை யுடைய, செம்பொற் கிங்கிணி - செம்பொன்னாற் செய்யப்பட்ட கிங் கிணியோடு, கலந்து - சேர்ந்து, ஒலிஎழ - ஓசையுண்டாகவும், அடிக்கம லம் கன்ற-பாததாமரைமலர் கன்றிப்போகவும், நீள்-நீண்ட, உலம்பொரு-திரள்கல்லையொத்த, தடம்புயத்து - பெருந்தோள்களில், உதைக்கின்றா ளையும் - உதைப்பவளாகிய ஒரு காரிகையையும் எ - று.

புலந்தனள் - முற்றெச்சம். அரி - சிலம்பினுட்பெய்யும் பருக்கை. உலம் - திரண்டகல். கமலம் ஆகுபெயர். தடம்புயம் மலைபோன்ற தோள் என்றலுமொன்று. அடிக்கமலம் கன்றுதற்குக் காரணம் உலம்பொரு தடம்புயத்துதைத்தல் என்க. கமலவடியென்னாது அடிக்கமலம் என் றது பாதத்தின் சிறப்புத்தோன்றற்கென்க. "பாததாமரையி னுண்டுகள் பரமவணுவினிற் பலவியற்றினால், வேதநான்முகன் விதிக்க வேறுபடு விரிதலைப் புவனமடைய" "தாதும்பொரூத வடித்தாமரைசென்று சார்வ தற்கே" என்றற் றொடக்கத் தான்றோர் செய்யுட்களாலும் இது தெற் றென விளங்கும். (உ௬)

கூரயில் கவற்றிய குவளைக் கண்சிவந்
தார்கலி முகந்தகா ரனுக்கு மீர்ங்குழற்
றார்பல சிதறுபு தளர்வில் கொங்கைமுத்
தேர்கிளர் வடம்பரிந் தெறிகின் றாளையும்.

(இ - ள்.) கூர் அயில் - கூர்மையாகிய வேலாயுதத்தை, கவற்றிய - துன்பப்படுத்தின, குவளை - கருங்குவளை மலர்போன்ற, கண் - கண்கள், சிவந்து - சிவக்கப்பெற்று, ஆர்கலிமுகந்த-கடல்நீரை மொண்டுகொண்ட, கார் - மேகத்தை, அனுக்கும் - வென்ற, ஈர்ங்குழல்-குளிர்ந்த கூந்தலில்

உள்ள, பலதார் - அநேகமாகிய மலர்மாலைகளை, சிதறுபு - சிதறி, தளர்வு இல் - சாய்தலில்லாத, கொங்கை - முலைமேலணிந்த, வரிகளர் - அழகு மிகுந்த, முத்துவடம் - முத்தாரத்தை, பரிந்து - அறுத்து, எறிகின்றாளை யும் - வீசி எறிகின்றவளாகிய ஒரு மடவரலையும் எ - று.

கவற்று என்னும் பிறவினைப்பகுதியடியாகப் பிறந்த கவற்றியவென் னும் பெயரெச்சம் கண் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. ஆர்கலி அஃறிணையில் வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர், கார்-பண்பாகுபெயர். அனுக்கும் என்னும் பிறவினைக்கு வழுத்தின என்றுரைப்பினுமாம். இதற்குப் பகுதி அனுக்கு. இதற்குத் தன்வினைப்பகுதி அனுங்கு. ஈர்ங்குழல் என்றது இயற்கையாகிய நெய்ப் பினையும் செயற்கையாகிய மயிர்ச்சாந்தின் பூச்சினையும் இடையறு துடைத்தாதலை நோக்கி யென்க. சிதறுபு செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். தளர்வில் கொங்கையென்றது படாமுலையென்றவாறு. ()

இளந்தளிர்ச் சீறடி யிறைஞ்சித் தைவந்திட்
டுளங்கொளப் பொய்த்திற முரைத்துச் சூள்பல
கிளந்தினி துணர்த்தினன் கிளைமென் றோடழீஇ
விளம்பரும் பேரின்ப வெள்ளத் தாழ்ந்தனன்.

(இ - ள்.) இளந்தளிர் - இளந்தளிர்போன்ற, சீறடி - சிற்றடியை, இறைஞ்சி - வணங்கி, தைவந்திட்டு - வருடி, உளங்கொள - மனங்கொள் ளும்படி, பொய்த்திறம் உரைத்து - பொய் வார்த்தை பேசி, பல சூள் கிளந்து - அநேக சபதங்கள் செய்து, இனிது உணர்த்தினன் - இனிமை யாக சம்மதிக்கச்செய்து, கிளை - மூங்கிலையொத்த, மெல் - மெல்லிய, தோள் - தோள்களை, தழீஇ - தழுவி, விளம்பு அரு - சொல்லுதற்கரிய, பேரின்பவெள்ளத்து - பேரானந்தக்கடலில், ஆழ்ந்தனன் - மூழ்கினன் எ - று.

இளந்தளிர் என்றது மாந்தளிரை, அசோகந் தளிருமாம். தைவந் திட்டு என்பதற்குப் பகுதி தைவா. சூள்கிளத்தல் - சத்தியஞ்செய்தல் எனினுமாம். கிளந்து என்பதற்குப் பகுதி கிள. உணர்த்தினன் முற்றெச் சம். தழீஇ சொல்லிசை யளபெடை. வெள்ளம் ஆகுபெயராய் கடலை யுணர்த்தி நின்றது. (உஅ)

பொலமலர்த் தவிசினோன் பொன்னம் பாவைபோ
லிலங்கிழை நூற்றுவ ரிடத்துஞ் சொற்படாத்
தொலைவறு மரும்பெற லின்பந் துய்த்தனன்
மலர்பல வற்றினு மணங்கொள் வண்டுபோல்.

(இ - ள்.) பொலம் - அழகாகிய, மலர் தவிசோன் - கமலாசன னாகிய பிரமன், அம்பொன் பாவைபோல் - அழகிய பொன்னாலாகிய பிர திமைபோல, இலங்கு - விளங்குகின்ற, இழை - ஆபரணங்களணிந்த, நூற்றுவரிடத்தும் - நூறு பெண்களிடத்தும், சொற்படா - சொல்லுக் கடங்காத, தொலைவு அறு - முடிவு அற்ற, அரும்பெறல்-பெறுதற்கரிய, இன்பம் - ஆநந்தத்தை, மலர் பலவற்றினும் - பலமலர்களினும் சென்று, மணம்கொள்-அவற்றின் வாசனையைப்பெறுகின்ற, வண்டுபோல் - வண்டு போல, துய்த்தனன் - அநுபவித்தனன் எ - று.

தொலைவு - தொலைதல் (முடிதல்.) இன்பம் துய்த்தனன் என முடியும். துய்த்தல் - நுகர்தல். பகுதி துய். (உ௯)

காலமுங் கருதிலன் காண்டற் கொத்ததோர்
வேலையின் றமரரும் வெய்துயிர்ப்பொடு
கோலநீள் கடைத்தலைக் குழீஇயு ணங்கத்தன்
வாலிழை மடந்தையர் வலைப்பட் டானரோ.

(இ - ள்.) காலமும் - காலத்தையும், கருதிலன் - நினைத்திலன், காண்டற்கு ஒத்தது - பார்ப்பதற்கு உரியதாகிய, ஓர்வேலை இன்று - ஒரு சமயம் இல்லை, அமரரும் - தேவர்களும், வெய்து உயிர்ப்பொடு - வெப்ப மாகிய பெருமூச்சுடனே, கோலம் நீள் - அழகு மிகுந்த, கடைத்தலை - கடைவாயிலில், குழீஇ-கூட்டங்கூடி, உணங்க - உணங்கிக் கிடக்க, தன்- தனக்குரிய, வால் இழை - பரிசுத்தமான ஆபரணங்களை யணிந்த, மடந் தையர் - மாதரது, வலை - வலையில், பட்டான் - அகப்பட்டுக்கொண் டான் எ - று.

காலம் ஈண்டுடைக்கேற்பப் புணர்ச்சிக்குரிய காலம் எனக் கொள்க. வேலை - வேளை (சமயம்.) தேவரை அமரர் என்றது மங்கல வழக்கு. உயிர்த்தல் - மூச்சுவிடுதல். பகுதி உயிர். குழீஇ - சொல்லிசை யள பெடை. கடைத்தலை யென்றது முன்றிலை. முன்றில் - முற்றம். உணங் கல்-அந்நபாநாதிகளின்றி வாடிக்கிடத்தல். இது "வணங்குஞ் சிலைநுத லுங் கழைத்தோளுங் வனமுலைமேற், சுணங்கும் புதியநிலவெழு மேனி யுங் தோட்டுடனே, பிணங்குங் கருந்தடங் கண்களுநோக்கிப் பிரமனன் பால், உணங்குந் திருமுன்றிலாய் மறைநான்கு முரைப்பவனே" என்னும் மஹா கவி வாக்கினாலு மினிது விளங்கும். (௩0)

ஒருமுதற் கடவுளென் றுலகை யேத்துமப்
பெருகறி வார்மலர்ப் பிராற்கும் பெண்மய
லொருவல் கூடாதெனி னுலகர் யாவரே
யரிமதர் நெடுங்கணா ராசை மாற்றுவார்.

(இ - ள்.) ஒரு - ஒப்பற்ற, முதற்கடவுள் என்று - முதன்மையான தெய்வமென்று, உலகம் ஏத்தும் - உலகத்தார் துதிக்கின்ற, அ - அந்த, பெருகு அறிவார் - பேரறிவினையுடையவராகிய, மலர்ப்பிராற்கும் - பிரமனுக்கும், பெண்மயல் - பெண் மயக்கத்தை, ஒருவல் - ஒழித்தல், கூடாது எனின் - இயலாதாயின், அரிமதர் நெடுங்கண்ணார் - செவ்வரி படர்ந்து மதர்த்த நீண்ட கண்களையுடைய மாதரது, ஆசை - விருப்பத்தை, மாற்றுவார் - ஒழிப்பவர், உலகீர் - உலகத்தார்களே, யாவர் - யாவர் எ - று.

உலகம் ஆகுபெயர். எல்லாவுலகத்தாரும் என்றவாறு. பெருகு அறிவு ஆர் என்பதற்கு பெருகா நின்ற அறிவுபொருந்திய என்றலுமாம். பிரான் - உபகாரகுணமுள்ளவன். ஒருவல் என்பதற்குப் பகுதி ஒருவு. யாவரே யென்னு மேகாரம் எதிர்மறை. (௯௧)

வஞ்சித்துறை

இவ்வா றயன்வே, றெவ்வா வின்பந்
துவ்வா விளையா, டவ்வே லையினே.

(இ - ள்) இவ்வாறு - இவ்விதமாக, அயன் - பிரமதேவன், வேறு - மற்றோரின்பமும், ஒவ்வா - நிகராகாத, இன்பம் - இன்பத்தை, துவ்வா - அநுபவித்து, விளையாடு - விளையாடுகிற, அவ்வேலையின் - அந்தச் சமயத்தின் எ-று.

அயன் அஜ: என்னும் வடசொற்றிரிபு. இதற்குப் பிறவாதவன் எனப் பொருளுரைப்பர் வடநூலார்; பிறப்பவனைப் பிறவாதவனென்றல் மங்கல வழக்கெனக் கொள்க. துவ்வா - செய்யாவென்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். (௯௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வாளொடு பலகை யேந்தி மலைகிளைத் தன்ன கையர்
நீளெரி யிணரி னன்ன நெறிக்குஞ் சியர்பு லிங்கக்
கேள்பயில் சுழல்செங் கண்ணர் கிளர்பிறைக் கொடுங்கூர்ப் பல்லர்
மூள்சின முருக்கொண் டன்னார் முடியிரு விசும்பு தோய்வார்.

(இ-ள்.) வாளொடு - வாளாயுதத்துடன், பலகை - பலகையை, ஏந்தி - தாங்கி, மலை - மலையானது, கிளைத்தன்ன - கிளைவிட்டாற்போன்ற, கையர் - கைகளையுடையவரும், நீள் - பெரிய, எரி இணரின் அன்ன - நெருப்புச் சுவாலைபோல், நெறித்த - சுருண்ட, குஞ்சியர் - சிகையையுடையவர், புலிங்கம் - நெருப்புப் பொறிக்கு, கேள் பயில் - உறவாகப் பழகின, சுழல் - சுழலுகிற, செங்கண்ணர் - சிவந்த கண்களையுடையவர், கிளர் - விளங்குகின்ற, பிறை - பிறைபோன்ற, கொடு - வளைந்த, கூர் பல்லர் - கூர்மையையுடைய பற்களையுடையவர், மூள் சினம் - மூண்ட கோபமே, உருக்கொண்

டன்னார் - வடிவெடுத்தார் போன்றவர், இருவிசும்பு - பெரிதாகிய ஆகாயத்தின்கண், முடிதோய்வார் - தலைதீண்டப்பெற்றவர் எ - று.

இணர் - நெருப்புச் சுவாலை. கேள் - உறவு (ஒப்பு.) கொடு கோடு என்பதன் குறுக்கல் விகாரம். இது கொடுங்கோல் என்பது போன்றது. தோய்தல்-தீண்டுதல். (கூகூ)

உருமிடிக் குரல ராழி யுண்டெழு பருவக் கொண்மூப்
புரைகரு நிறத்தர் செம்பொற் பொருப்பினை யெடுக்கு மாற்றல்
வெருவரு மரக்கர் மூப்பா னுயிரர் வெய்ய கூற்றும்
பெரிதுட னடுக்கங் கொள்ளப் பிறந்தன ரொருங்கு மன்னோ.

(இ-ள்.) உரும் இடிக்குரலர் - உருமுகிற இடிபோலுங் குரலையுடையவர், ஆழி உண்டு எழு - கடல் நீரைக் குடித்து மேலெழுந்த, பருவக் கொண்மூ - கார்ப்பருவ மேகத்தை, புரை - நிகர்த்த, கருநிறத்தர் - கரிய நிறத்தினையுடையவர், செம்பொன் பொருப்பினை - செம்பொன்மலையை, எடுக்கும் - தூக்குகிற, ஆற்றல் - வல்லமையுள்ள, வெருவரும் - (கண்டோர்க்கு) அச்சத்தை யுண்டாக்குகிற, அரக்கர் - அரக்கராகிய, மூப்பான் ஆயிரர் - முப்பதினாயிரம்பேர், வெய்ய கூற்றம் - கொடியனாகிய யமனும், பெரிது - மிகுதியாக, உடல் நடுக்கம் கொள்ள - சரீரநடுக்கம் கொள்ளும்படி, ஒருங்கு பிறந்தனர் - ஒருசேரப் பிறந்தார்கள் எ-று.

ஆழி ஆகுபெயர். ஆழியுண்டெழு என்னும் விசேடணத்தால் பருவம் கார்ப் பருவமெனப்பட்டது. புரைதல் - நிகர்த்தல். பகுதி - புரை. செம்பொன்மலை-செம்பொன்னாலியன்ற மலை (மேருமலை.) (கூச)

கலிவிருத்தம்

பிறந்த தீயர் பெருந்தகை தாண்மல
ரிறைஞ்சி யையமற் றேழ்பெருந் தீவமும்
சிறந்த தீப்பசி தீர்தர வுண்குமோ
கறங்கு மோரேழ் கடலுங் குடித்துமோ.

(இ - ள்) பிறந்த - இவ்வாறு பிறந்த, தீயர் - தீயவர், பெருந்தகை- பிரமதேவனது, தாள்மலர் -பாததாமரை மலர்களை, இறைஞ்சி-வணங்கி, ஐயம் அற்று - சந்தேகமொழிந்து, பெரு-பெரிதாகிய, ஏழ்தீவமும் - ஸப்தத்வீபங்களையும், சிறந்த - மிகுந்திருக்கிற, தீ - கொடிய, பசி - எங்கள் பசியானது, தீர்தர - தீரும்படி, உண்குமோ - உண்டுவிடுவோமா, கறங்கும் - சப்திக்கிற, ஓர்-ஒப்பற்ற, ஏழ்கடலும் - ஏழ்கடல் நீரையும், குடித்துமோ - பருகிவிடுவோமோ எ - று.

இறைஞ்சல் - வணங்கல். பகுதி - இறைஞ்சு. தீர்தர என்பதற்குப் பகுதி தீர்தா. கறங்கல் - சத்தித்தல். பகுதி கறங்கு. கடல் ஆகுபெயர்.

மேரு வாதிய வெற்பம் மனைகளா
வார வாரத்தொ டாடுது மோசுடர்த்
தார கைக்குல மெல்லாந் தடக்கையால்
வாரி வாரியெம் வாயிடைப் பெய்துமோ.

(இ - ள்.) மேரு ஆதிய-மேரு முதலிய, வெற்பு - மலைகளை, அம்மனைகளா - அம்மானைக் காய்களாகக் கொண்டு, ஆரவாரத்தொடு - ஆரவாரிப்புடனே, ஆடுதுமோ - ஆடுவோமோ, சுடர் - ஒளியுள்ள, தாரகைக் குலம் எல்லாம் - நக்ஷத்ரகணங்களை யெல்லாம், தடக்கையால் - எமது பெரிய கைகளால், வாரிவாரி - அள்ளியள்ளி, எம் வாயிடை பெய்துமோ - எம் வாயிலிட்டுக் கொள்வோமா எ-று

ஆரவாரம் - பேரிரைச்சல். தாரகை - தாரகா என்னும் வடசொற் றிரிபு. (௩௬)

கால நாகங்க ளெட்டொடு காழுரற்
கால நாகங் கலக்கிமு தற்றிசா
பால னாகமும் பாழ்செய்து மோவிழிப்
பால னாகம்வெண் பந்தெனக் கோடுமோ.

(இ - ள்.) காலநாகங்கள் எட்டொடு - வாயுவை யுணவாகவுடைய அஷ்டநாகங்களுடன், காழ் உரல்கால - வைரமான வுரல்போலுங் கால்களையுடைய, நாகம் - அஷ்டதிக் கஜங்களை, கலக்கி - கலங்குவித்து, முதல் திசாபலன் - பூர்வதிக்குக் கதிபதியாகிய இந்திரனது, நாகமும் - தெய்வலோகத்தையும், பாழ்செய்துமோ - பாழாக்கி விடுவோமோ, விழிபாலன் - கண்ணோடுகூடிய நெற்றியையுடைய உருத்திரனது, நாகமும் - மலையையும், பந்து என கோடுமோ-பந்துபோலக் கொண்டெறிவோமோ.

முதலடியிலுள்ள கால் காற்று. இரண்டாமடியிலுள்ள கால் அடி. மூன்றாமடியிலுள்ள பாலன் என்பதற்கு பாலத்தையுடையவன் எனப் பொருள் கூறப்பட்டது. (பாலம் - நெற்றி, அதனையுடையவன் பாலன்) நெற்றிக் கண்ணன் என்பதற்கு விழிப்பாலன் என்றாராயினும் நெற்றியிற் கண்ணுள்ளவன் என்பதே பொருள். (௩௭)

மேற்படி வேறு

அரிதனை மலைத்துமோ வழறொலைத் துமோ
தருமனை யொறுத்துமோ தருவற் கோறுமோ
வருணனைப் படுத்துமோ வளிகெ டுத்துமோ
விருநிதி தேய்த்துமோ விசற் சாய்த்துமோ.

(இ - ள்.) அரிதனை மலைத்துமோ - இந்திரனோடு போர்செய்வோமோ, அழல் தொலைத்துமோ - அக்கினி

தருமனை ஒறுத்துமோ - யமனை வருத்துவோமோ, தகுவற் கோறுமோ - நிருதியைக் கொல்லுவோமோ, வருணனைப் படுத்துமோ - வருணனைக் கொல்லுவோமோ, வளிகெடுத்துமோ - வாயுவை யழிப்போமோ, இருநிதி தேய்த்துமோ - பெரிய குபேரனை யழிப்போமோ, ஈசன் சாய்த்துமோ - ஈசானனைத் துரத்துவோமோ எ-று.

அரி - இந்திரன். மலைதல்-போர் செய்தல். தருமன் - யமன். ஒறுத்தல் - வருத்துதல். பகுதி ஒறு. தகுவர் - இராக்கதர். இருநிதி யென்றது ஆகுபெயராய் அதற்கதிபனாகிய குபேரனை யுணர்த்திற்று. சாய்த்தல் - முறிந்தோடச் செய்தல். (ருஅ)

எந்தைகுற் றேவலொன் றெமக்குச் சொல்கெனக்
கந்தநாண் மலரினோன் கால மன்றியிக்
கொந்தல ரோதியர்க் கூட லாலிவண்
வந்தன ரிவரென மனத்தி லெண்ணினான்.

(இ - ள்.) எந்தை - எமது தந்தையே, குற்றேவல் ஒன்று - ஒரு குற்றேவலை, எமக்கு சொல்க என-எமக்குக் கட்டளையிடுகவென்று வேண்ட, கந்தம் - மணமுள்ள, நாள் - புதிய, மலரினோன் - பிரமன், காலம் அன்றி- காலத்திலல்லாமல், இ - இந்த, கொந்து அலர் ஓதியர் - பூங்கொத்துக்களை யுணிந்த கூந்தலையுடைய மாதரை, கூடலால் - புணர்ந்ததனால், இவண் - இவ்விடத்தில், இவர் வந்தனர் என - இவர் தோன்றினரென்று, மனத்தில் எண்ணினான் - தன் மனத்தில் நினைத்தான் எ-று.

குற்றேவல் - இழிந்ததொண்டு. சொல்க என - எனற்பாலது சொல்கென என நிலைமொழி யீற்றகரம் தொகுத்தலாயிற்று. கொந்து அலர் என்பதற்கு மலர்க்கொத்துக்கள் விரிகிற என் றுரைத்தலுமாம். வந்தனர் என்றது பிறந்தனர் என்றவாறு. (ருகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

எண்ணிய கமல யோனி யெறுழ்வலி வரைத்த டந்தோட்
கண்ணழற் புதல்வர் தம்மைக் கண்மலர் பரப்பி நோக்கி
விண்ணக டளாவு கோட்டு விந்தத்தி லிருமி னென்றான்
புண்ணுறு வாட்கை யாரப் பொருப்பின்மேற் றொக்கிருந்தார்.

(இ - ள்.) எண்ணிய - நினைத்த, கமலயோனி - பிரமதேவன், எறுழ் வலி - மிகு வலியையும், வரை - மலைபோலும், தடம்தோள் - பெரிய தோள்களையும், அழல்கண் - நெருப்புப்போலுங் கண்களையுமுடைய, புதல்வர் தம்மை - புத்திரர்களை, கண்மலர் பரப்பிநோக்கி - மலர்போலுங் கண்களை விரித்துப் பார்த்து, விண் அகடு - ஆகாயமுகட்டை, அளவு- அளாவுகிற, கோடு - சிகரத்தையுடைய, விந்தத்தில் - விந்தமலையில், இருமின் என்றான் - இருங்களென்று சொன்னான், புண் உறு - மாமிசத்தை

யுடைய, வாள் - வாளாயுதத்தை யேந்திய, கையார் - கையினையுடையவர், அ - அந்த, பொருப்பின்மேல் - மலையின்மீது, தொக்கு இருந்தார் - கூடியிருந்தார்கள் எ-று.

கமலயோனி - தாமரைமலரைப் பிறப்பிடமாக வுடையவன். கமலம் ஈண்டு விட்டுணுவின் திருவுந்தித் தாமரையைக் குறித்தது. அகடு-வயிறு. அது இங்கு முகட்டுக்காயிற்று. பகைவரைக் கொல்லுந்தோறும் அவரது மாமிசம் ஒட்டியுலர்ந்திருத்தல் வாளுக் கியல்பாதலால் புண்ணுறுவாள் என்றார். (௪0)

விண்முழு தளிக்கு நூறு வேள்வியங் கடவு ளாதி
யெண்மரு மிரியப் போரி னேற்றவர் பணிந்து தந்த
வொண்மணிக் குப்பை செம்பொ னுறுசினக் களிறு வாமான்
றிண்மணிப்பொலந் தேர்முன்னாந் திறைகள்பெற் றினிதிருந்தார்.

(இ-ள்.) விண்முழுது - விண்ணுலகமுற்றும், அளிக்கும் - காக்கின்ற, நூறு வேள்வியங்கடவுள் ஆதி - இந்திரன் முதலாகிய, எண்மரும், அஷ்டதிக்குப் பாலகரும், போரில் - போர்க்களத்தில், ஏற்று - வந்தெதிர்த்து, இரிய - தோற்றோடலால், அவர் - அவர்கள், பணிந்து - வணங்கி, தந்த - கொடுத்த, ஒள் - ஒட்பமாகிய, மணிக்குப்பை - மணிக்குவியல், செம்பொன் - செம்பொன், உறுசினக்களிறு - மிகுகோவத்தையுடைய யானை, வாவும் மான் - தாவிச் செல்லுகிற குதிரை, மணிபொலம் - மணியாலும் பொன்னினாலு மியன்ற, திண்தேர் - உறுதியாகிய ரதம், முன் ஆம் - முதலாகிய, திறைகள் பெற்று - கப்பங்களைப் பெற்று, இனிது இருந்தார் - இனிது வாழ்ந்திருந்தார்கள் எ-று.

நூறு வேள்வியங்கடவுள் என்றது ஸதமகன் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. ஒட்பம் - திருத்தம். வாவும் என்றபாலது வாம் என விகாரமாயிற்று. மா என்றது னகரச்சாரியை பெற்று மான் என்றாயிற்று. பொலம் - பொன். தேர்க்குத் திண்மையாவது பகைவரா லழிக்கப்படாத வுறுதியுடைமை. (௪௧)

தடையிலா துலக மெல்லாந் தமதுபே ராணை செல்லக்
கடவுள ரியக்கர் பூதர் கருடர்கந் தருவர் நாகர்
மிடலுடை யசுரர் சித்தர் விஞ்சையர் கின்ன ரேச
ரடிதொழு தேவல் கேட்ப வரக்கராண் டரசி ருந்தார்.

(இ - ள்.) தடை இல்லாது - தடையில்லாமல், உலகம் எல்லாம்-உலகமுழுதும், தமது - தம்முடைய, பேராணை செல்ல - பெரிதாகிய ஆக்கினை செல்லும் வண்ணம், கடவுளர் - தேவர், இயக்கர் - யக்ஷர், பூதர்—, கருடர்—, கந்தருவர்—, நாகர்—, மிடல் உண்ட அசுரர் - வலியையுடைய அசுரர், சித்தர்—, விஞ்சையர் —, கின்னரேசர்—, (என்பவர் யாவரும்) அடி

தொழுது - தமது அடிவணங்கி, ஏவல்கேட்ப - ஏவல் கேட்க, அரக்கர் - இந்த அரக்கர், ஆண்டு - அந்தவிந்தமலையில், அரசு இருந்தார் - அரசு செய்துகொண்டு இருந்தார்கள் எ-று.

நாகர் - நாகலோகத்துள்ளவர். இவர் பாம்புருவின ராதலால் நாகர் எனப் பட்டார். இவர்க்கு இடமாவது பாதாளலோகம். (சஉ)

படர்சடை முனிவர் நோன்மைப் பல்லுகக் கவுள்பு டைத்தார்
மடவரன் மகளிர் கற்பின் வாயிடை மண்ண டித்தார்
வடுவிலந் தணர்யா கத்தை மரபொழிந் திடவு தைத்தார்
கடவுளர் சிறப்பை யெல்லாங் காட்டிடை புகத்து ரந்தார்.

(இ - ள்.) படர்சடை முனிவர் - விரிந்த சடையையுடைய முனிவரது, நோன்மை - தவத்தை, பல் உக - பல் சிந்தும்படி, கவுள்புடைத்தார் - கன்னத்தில் அடித்தார்கள், மடவரல் மகளிர் - இளம் பெண்களின், கற்பின் வாயிடை - கற்பின் வாயில், மண்ணடித்தார் - மண்போட்டார்கள், வடு இல் - குற்றமற்ற, அந்தணர் யாகத்தை - வேதியரது யாகத்தை, மரபு ஒழிந்திட - சந்ததி யற்றுப்போம்படி, உதைத்தார் —, கடவுளர் சிறப்பையெல்லாம் - தேவர்களுடைய மேன்மை யாவையும், காட்டிடைபுகத் துரந்தார் - வனத்திற் போம்படி துரத்தினார்கள் எ-று.

உகல் - சிந்துதல். பகுதி உகு. மடவரல் - இளமைவளர்தலையுடைய. காட்டிடை என்பதில் இடை ஏழனுருபு. துரந்தார் என்பதற்குப் பகுதி துர. (சங)

கடிகையொன் றினிலோர் வைகற் கடனெலாங் கடிதி யற்றிச்
சடைகுலைந் தாட வோடித் தனித்தனி யரக்கர்பாற் போய்க்
கெடலருஞ் செல்வ மேன்மேற் கிளர்கென வாயின் வாழ்த்தி
மடனறுங் காட்சி யையர் வைகலுந் திரிப வன்றே.

(இ - ள்.) கடிகை ஒன்றினில் - ஒரு கடிகைப்பொழுதில், ஓர் வைகல்கடன் எல்லாம் - ஒருநாள் முழுதுஞ் செய்யவேண்டிய நித்யகர்மங்களெல்லாவற்றையும், கடிது இயற்றி - விரைவாகச்செய்து, சடை குலைந்து ஆட - சடாபாரம் கட்டுக்குலைந்து அசையும்படி, ஓடி —, தனித்தனி - தனித்தனியே, அரக்கர் பால்போய் - அரக்கரிடத்திற் சென்று, கெடல் அரு - அழிவற்ற, செல்வம் - செல்வமானது, மேன்மேல் கிளர்க என - மேன்மேற் பெருகுகவென்று, வாயின் வாழ்த்தி - வாயினால் வாழ்த்தி, மடன் அறு - அறியாமை யற்ற, காட்சி - அறிவையுடைய, ஐயர் —, வைகலும் - நாள்தோறும், திரிப - திரிவர் எ-று.

அன்று ஏ அசைகள். வாயின் வாழ்த்தி யென்றது மனப்பூர்த்தியாய் வாழ்த்தாமையைக் குறித்தது. கிளர்கவென வென்பாலது கிளர்கென

வென விகாரமாயிற்று. மடன் - மடம் என்பத னீற்றுப்போலி. காட்சி - அறிவு. வைகல் - நாள். (சச)

அவரவர் செவ்வி நோக்கி யவரவர் வயிற்போய் வேந்தன்
சிவனடி வணங்கு மாபோற் சேணிடை வணங்கி யென்ன
தவறிவ ணேற்றி நம்மைத் தழல்படச் சிவப்பரோ வென்
றுவமனில் வெருக்கொ டுந்தீ யுள்சுட வொடுங்கி நிற்பான்.

(இ - ள்) அவரவர் - அவரவருடைய, செவ்விநோக்கி - சமயம் பார்த்து, அவரவர் வயின்போய் - அவரவரிடத்திற் சென்று, வேந்தன் - இந்திரன், சிவன் அடி - சிவனது திருவடியை, வணங்குமாபோல் - வணங்குவதுபோல, சேண் இடை வணங்கி - தூரத்தே நின்று வணங்கி, இவண்- இவ்விடத்தில், என்னதவறு ஏற்றி-என்ன குற்றத்தைச் சுமத்தி, நம்மை- நம்மை, தழல்பட - நெருப்புண்டாக, சிவப்பரோ - கோவிப்பரோ, என்று - என்று, உவமன் இல் - ஒப்பில்லாத, வெரு - அச்சம் என்கிற, கொடுந்தீ - கொடிய நெருப்பானது, உள்சுட - மனத்தைச்சுட, ஒடுங்கி நிற்பான்-அடங்கி நிற்பான் எ-று.

செவ்வி - சமயம். சேண் - தூரம். உவமன் - ஒப்பு. வெரு-அச்சம். உள் ஆகுபெயர். (சரு)

தனித்தனி யரக்கர் கேட்டுத் தம்மைவிடு மளவும் யாழும்
வனப்பமை மிடறு மொன்றா மனங்கொளப் பாடிப் பாடிக்
கனைத்துவண் டிமிர்தார்ச் சேடிகாவல ரயர்வு யிர்க்கத்
தினைத்துணைப் பொழுது மின்றித் திரிபவான் மிடறு கம்மி.

(இ - ள்.) தனித்தனி - தனித்தனியே, அரக்கர் கேட்டு - அரக்கர் கேள்விப்பட்டு, தம்மைவிடும் அளவும் - தம்மை விடும்வரையும், யாழும் - யாழோசையும், வனப்பு அமை - அழகமைந்த, மிடறும் - கண்டமும், ஒன்று ஆ - ஒன்றாம்படி, மனங்கொள-மனம்பொருந்த, பாடிப்பாடி - பலகாற் பாடி, கனைத்து - கர்ஜித்து, வண்டு இமிர் - வண்டுகளொலிக்கிற, தார்-பூமாலையையணிந்த, சேடி காவலர்-தாதியரும் காவலரும், அயர்வுயிர்க்க-இளைப்பொழிய, தினைத்துணை - தினையளவாகிய, பொழுதும் இன்றி- காலமுமில்லாமல், மிடறு கம்மி - கழுத்துக்கம்மி, திரிப - திரிவார் எ-று.

யாழ் ஆகுபெயர். இமிர்தல் - ஒலித்தல். பகுதி இமிர். தார் என வாளா கூறினரேனும் கனைத்து வண்டிமிர் என்ற விசேடணத்தால் பூமாலையைக் குறித்தது. அயர்வுயிர்த்தல்-இளைப்பாறுதல். (சசு)

பூத்தொசி பொலங்கொம் பன்ன போதரி நெடுங்கட் டெய்வக்
கேயர் பாட்டி னானுங் கூத்தினும் புணர்ச்சி யானுந்

தீத்தொழி லவர்கைப் பட்டுத் தீர்ப்பரும் வருத்தங் கொண்டார்
காத்திரி சிறு குரங்கின் கைப்பட்ட மாலை போல.

(இ - ள்.) காத்திரி சிறு குரங்கின் கைப்பட்ட மாலைபோல - சிறிய குரங்கின் கையிலகப்பட்ட பூமாலைபோல, பூத்து - மலர்ந்து, ஒசி - ஒடிகிற, பொலம் கொம்பு அன்ன - பொற்கொம்பு போன்வாராகிய, போது - கருங்குவளை மலர்போன்ற, அரி - வரிபடர்ந்த, நெடுங்கண் - நெடிய கண்களையுடைய, தெய்வக்கூத்தியர் - தெய்வக் கூத்தியராது, பாட்டினும் - பாடலாலும், கூத்தினும்-கூத்தாட்டத்தாலும், புணர்ச்சியானும் - கலவியாலும், தீத்தொழிலவர் கைப்பட்டு - தீச்செய்கையை புடையவர் கையிற்சிக்கி, தீர்ப்பு அரு - ஒழித்தற் கருமையாகிய, வருத்தம் கொண்டார் - துன்பமடைந்தார் எ-று.

ஒசிதல்-ஒடிதல், வளைதலுமாம். போது-மலர். அது கண்ணுக் குவமை யாகப் புணர்க்கப்படுதலால் கருங்குவளைமலர் எனலாயிற்று. தெய்வக் கூத்தியர் என்றது அரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேநகை யென் பவரை. (சஎ)

இவ்வகை யும்பர் துன்ப மெய்தவா ளரக்கர் வாழத்
தெவ்வடு குலிச வைவேற் றேவர்கோ னொருநாட் கஞ்சச்
செவ்வல ரமர்ந்த புத்தே டிருவடி யடைந்து போற்றி
வெவ்வலி யரக்கர் தந்த மிகுதுய ரனைத்துஞ் சொன்னான்.

(இ - ள்.) இவ்வகை - இவ்விதமாக, அமரர் - தேவர்கள், துன்பம் எய்த - துன்பமடைய, வாள் - வாட்படையை யேந்திய, அரக்கர் வாழ - அரக்கர் வாழ்ந்திருக்க, தெவ் அடு - பகைவரைக் கொல்லுகிற, குலிசம் - வயிரத்தாணியன்ற, வைவேல் - கூர்மையாகிய வேலாயுதத்தை யுடைய, தேவர்கோன் - தேவேந்திரன், ஒருநாள் - ஒருதினம், கஞ்சம் - தாமரை யாகிய, செவ்வலர் அமர்ந்த - செவந்த மலரின்மேல் வீற்றிருக்கிற, புத்தேள் - பிரமதேவரது, திருவடி அடைந்து - சீர்பாதத்தைச் சேர்ந்து, போற்றி - நமஸ்கரித்து, வெவ்வலி - மிகுந்த வலியுள்ள, அரக்கர் தந்த - அரக்கர் உண்டாக்கின, மிகு - அதிகமாகிய, துயர் அனைத்தும் - துன்ப மெல்லாவற்றையும், சொன்னான் - சொல்லினான் எ-று.

தெவ் - ஆகுபெயர். வெவ்வலி யென்பதில் வெம்மை மிகுதிப் பொருட்டு. (சஅ)

கேட்டலுங் கமலத் தண்ணல் கிளர்ந்தெழு வடவை யென்ன
வாட்டிறற் புதல்வர் தம்மேன் மாற்றருஞ் சீற்றங் கொண்டான்
றேட்டல ரலங்கல் விண்ணோர் துயர்கெட வுக்கி ரப்பேர்ச்
சேட்டிளஞ் சிங்க வேறச் சீற்றத்தி னெழுந்த தன்றே.

(இ - ள்) கேட்டலும் - கேட்டவுடன், கமலத்து - தாமரைத் தவிசில் வீற்றிருக்கிற, அண்ணல் - பெரியோனுகிய பிரமதேவன், கிளர்ந்து எழு - மூண்டெழுகிற, வடவையென்ன - வடவைத் தீப்போல, வாள்திறல் - வாள்வலியுள்ள, புதல்வர் தம்மேல் - புத்திரர்மீது, மாற்றரு - நீக்குதற்கரிய, சீற்றம்கொண்டான் - கோவங் கொண்டனன், (உடனே) தோடு - இதழ்களோடு கூடிய, அலர் அலங்கல் - மலர்மாலையைத் தரித்த, விண்ணோர் - தேவர்களுடைய, துயர்கெட - துன்பமொழிய, உக்கிரப்பேர் - உக்கிரனென்னும் பெயரையுடைய, சேடு - பெருமை பொருந்திய, இளஞ்சிங்க ஏறு - இளஞ்சிங்க வேறுனது, எழுந்தது - தோன்றிற்று எ-று.

அண்ணல் - பெருமையிற் சிறந்தோனுக்குச் சிறப்புப்பெயர். வடவை - வடவைத்தீ. இது கரையிலாக் கடல்நீரை யெல்லைகடந் துலகை யழிக்க வொட்டாமற் சுவறச் செய்துகொண் டிருப்பது. இது சிருட்டியின் தொடக்கத்திலே படைக்கப்பட்டது, இது பெண் குதிரையின் வடிவாயிருப்பது. சீற்றம் என்பதற்குப் பகுதி சீறு. சிங்கவேறு - ஆண் சிங்கம். (சகூ)

அன்னவன் றன்னை நோக்கி யருந்திற லவர்கள் தம்மை
முன்னவ ரென்று நெஞ்சின் முன்னலை துனைவிற் போந்து
மன்னுயி ரவரை வெளவி வானவர்க் காத்தி யென்று
துன்னரி மான்றேர் தெய்வச் சுடர்ப்படை கொடுத்து விட்டான்.

(இ - ள்.) அன்னவன் தன்னைநோக்கி - அவனைப் பார்த்து, அருந்திறல் - அருமையாகிய வல்லமையை யுடையவராகிய, முன்னவர் என்று - முன்னோர் என்று, நெஞ்சில் - மனத்தில், முன்னலை - நினையாதவனுய், துனைவின் போந்து - விரைவாக வந்து, அவரை - அவர்களுடைய, மன்உயிர் வவ்வி - நிலைபெற்ற வுயிரைக் கவர்ந்து, வானவர் - தேவர்களை, காத்தி என்று - காக்கக் கடவை யென்று, துன் - நெருங்கின, அரிமான் தேர் - சிங்கங்கள் பூண்ட தேரையும், தெய்வம் - தைவிகமாகிய, சுடர்படை - ஒளியுள்ள ஆயுதங்களையும், கொடுத்து - தந்து, விட்டான் - அனுப்பினுன் எ-று.

முன்னவர் - தமையன்மார். முன்னல் - நினைத்தல். பகுதி முன். முன்னலை - முற்றெச்சம். துனைவு - விரைவு. அரிமா என்பாலது னகரச் சாரியை பெற்று அரிமான் என்றுயிற்று. (கூ0)

தந்தைதாய் மரைம லர்த்தா டலையினுல் வணங்கிப் பூத்தா
யிந்திரா தியர்க ளொத்த வீர்ஞ்சடை முனிவர் வாழ்த்த
வெந்திற லரிமான் றேரில் விண்ணொடு முதயத் தூச்சி
வந்தெழு பரிதி யென்ன வேறினன் வலவ னுய்த்தான்.

(இ - ள்.) தந்தைதாய் - தந்தை தாயருடைய, மரை மலர் தாள் - தாமரைமலர்போலும் பாதங்களை, தலையினால் வணங்கி - சிரத்தினால் தொழுது, பூதூய் - மலர்தூவி, இந்திராதியர்கள் ஏத்த - இந்திரன் முதலானோர் துதிக்க, ஈர் சடை முனிவர் வாழ்த்த - குளிர்ந்த சடையையுடைய முனிவர் ஆசீர்வதிக்க, விண்தொடும் - ஆகாயத்தைத் தீண்டுகிற, உச்சி - சிகரத்தையுடைய, வெந்திறல் அரிமான் தேரில் - மிக்க ஆற்றலையுடைய சிங்கம் பூண்ட தேரில், உதயத்து - உதயகாலத்தில், வந்து எழு - வந்துதிக்கிற, பரிதியென்ன - சூரியன் போல, ஏறினன் - ஏறினான், வலவன் - பாகன், உய்த்தான் - (தேரை) செலுத்தினான் எ-று.

தாமரை மரையென முதற்குறையாயிற்று. மலர்தூய் என்றது மலர்களால் அர்ச்சித்து என்றவாறு. முப்போதும் நீராடுவோராதலால் முனிவர் சடை ஈரிதாகவே யிருக்கு மென்ப துணர்த்தற்கு ஈர்ஞ்சடை முனிவர் என்றார். உய்த்தல் - செலுத்தல். பகுதி உய். வலவன் - பாகன் என்பன தேர் செலுத்துவோனுக்குப் பெயர், இவனை சாரதியென்பர் வடநூலார்.

தன்னிடை யிருக்குந் தேவர் தமக்கிடர் பலவி யற்றுங்
கொன்னவில் படைய ரக்கர் குழுவினுக் கிடங்கொ டுத்த
மின்னுடை முகிறோய் கோட்டு விந்தத்தோ டமர்கு றித்துப்
பொன்னகம் வருதல் போலப் பொருப்பினை யடுத்த தத்தேர்.

(இ - ள்) தன் இடை இருக்கும் - தன்னிடத்திலிருக்கிற, தேவர் தமக்கு - தேவர்களுக்கு, பல் இடர் இயற்றும் - அநேகமான துன்பங்களைச் செய்கிற, கொல்நவில் படை - கொலைத்தொழிலில் புகழ்பெற்ற ஆயுதங்களையுடைய, அரக்கர் குழுவினுக்கு - இராக்கதர்களுடைய தொகுதிக்கு, இடம்கொடுத்த - இடம்தந்த, மின் உடை முகில் தோய் - மின்னலை தன்னிடத்தேயுடைய மேகங்கள் தவழ்கின்ற, கோடு சிகரத்தையுடைய, விந்தத்து ஓடு - விந்தமலையினோடு, அமர் குறித்து - போர்செய்ய நினைத்து, பொன் நகம் வருதல்போல் - பொன்மலை வருவதுபோல, அ தேர் - அந்தத் தேரானது, அப்பொருப்பினை அடுத்தது - அந்த மலையைக் கிட்டியது.

தன்னிடையென்பதில் இடை ஏழனுருபு இடப்பொருட்டு. தேவர் தமக்கு என்பதில் தம் சாரியை. பொன்னகர் என்பதனை பொன் அகம் எனவும் பிரிக்கலாம். நகம் அகம் இரண்டும் வடசொற்கள். இவற்றுக்கு நடவாதது என்று பொருள் கூறுவர் வடநூலார். (ந-கம், அ-கம்) (கூஉ)

நூற்றிதழ்க் கமலக் கோயி லூண்மகள் கணவன் மைந்த
னாற்றல்சால் பொலந்தே ரீர்க்கு மலங்குளை யரியொழுங்கு [தும்
தோற்றமிக் குயர்ந்த செம்பொற் சடர்செய்மால் வரையீர்த் தெய்
பாற்றிரை யெறியுந் தெய்வப் படுபுனற் கங்கை போலும்.

(இ - ள்) நூறு இதழ் - நூறு இதழ்களையுடைய, கமலக்கோயில் - தாமரைமலராகிய கோயிலில் வீற்றிருக்கிற, நால்மகள் கணவன் - கலைமகள் கணவனாகிய பிரமனுக்கு, மைந்தன் - மகனாகிய உக்கிரனது, ஆற்றல் சால் - வலிமிகுந்த, பொலம்தேர் - பொற்றேரினை, ஈர்க்கும் - இழுக்கிற, அலங்கு - அசைகிற, உளை - புறமயிரினையுடைய, அரி ஒழுங்கு - சிங்கவரிசையானது, தோற்றமிக்கு உயர்ந்த - தோற்றத்தால் மிகவுமுயர்ந்த, சுடர்செய் - ஒளி வீசுகிற, மால் - பெரிய, செம்பொன்வரை - செம்பொன் மலையை, ஈர்த்து எய்தும் - இழுத்துக்கொண்டு போகிற, பால் திரை எறியும் - வெண்மையாகிய அலைகளை வீசுகிற, தெய்வம் - தெய்வத் தன்மையுள்ள, படுபுனல் - ஒலிக்கின்ற நீரையுடைய, கங்கைபோலும் - கங்காநதியை நிகர்க்கும் எ-று.

நால்மகள் - கலைமகள் (சரசுவதி.) ஈர்த்தல் - இழுத்தல். பகுதி ஈர். அலங்கல் - அசைதல். பகுதி அலங்கு. புறம் - பிடர். செம்பொன்மலை- மேருமலை. படுதல் - ஒலித்தல். பகுதி படு. (௬௩)

ஆயிர மரிமான் பூண்ட வரவத்தேர்க் காலிற் றோன்றி
மீயுய ருலக மெல்லாம் விழுங்கிய துகளி னீட்டம்
பாயொளி மணிசெய் மாடப் பசும்பொனீ ணுலக மெல்லா
மாயிரு நெடுநீர் சூழ்ந்த மண்ணுல காக்கிற் றன்றே.

(இ - ள்) ஆயிரம் அரிமான் பூண்ட - ஆயிரம் சிங்கங்கள் கட்டின, அரவம் - சத்தத்தையுடைய, தேர்க்காலில் தோன்றி - தேர்க்காலிலுண்டாகி, மீ உயர் - மேலே யுயர்ந்திருக்கிற, உலகம் எல்லாம் - உலகங்கள் யாவையும், விழுங்கிய - மறைத்த, துகளின் ஈட்டம்-புழுதியின் தொகுதி, பாய் ஒளி - விரிந்த ஒளியையுடைய, மணிசெய் - ரத்நங்களாற் செய்யப் பெற்ற, மாடம் - மாடங்களையுடைய, நீள் - பெரிதாகிய, பசும்பொன் உலகம் எல்லாம் - பசும்பொன் னுலகமுழுதும், மா இருநெடுநீர் சூழ்ந்த - கடல்சூழ்ந்த, மண் உலகு ஆக்கிற்று - மண்ணுலகமாகச் செய்துவிட்டது.

அரிமான் - சிங்கம். அரவம் ரவம் என்னும் வடசொற்றிரிபு. தேர்க்கால் - தேர்ச்சக்கரம். மீயுயர் உலகம் - விண்ணுலகம். விழுங்கல் மறைத்தற்பொருட்டு. துகள் - புழுதி (பூமி.) பசும்பொன்னுலகம் - சுவர்க்கலோகம். மாயிரு நெடுநீர் - கடல். (௬௪)

கலிவிருத்தம்

சுரும்பிமிர் தும்பையந் தொடைய னுக்கிரன்
வருந்திற மனைத்தையும் வழாம லொற்றிய
வருஞ்செய லொற்றர்க ளாடல் வாட்படைக்
கருங்கழ லரக்கர்பாற் காலி னேடினர்.

(இ - ள்.) சுரும்பு - வண்டுகள், இமிர் - ஒலித்தற் கிடமாகிய, அம் - அழகிய, தும்பைத்தொடையல் - தும்பைமலர் மாலையைத் தரித்த, உக்கிரன் - உக்கிரனென்பவன், வரும் திறம் அனைத்தையும் - வரும்விதமுழுதும், வழாமல் ஒற்றிய - தவறாமல் ஒற்றின, அருஞ்செயல் ஒற்றர்கள் - அரிய செய்கையையுடைய வொற்றர்கள், ஆடல் - வெற்றியைத் தருகிற, வாள் படை - வாளாயுதத்தையுடைய, கருங்கழல் - பெரிய வீரக்கழலணிந்த, அரக்கர்பால் - அரக்கரிடத்திற்கு, காலின் ஓடினார் - காற்றுப்போல விரைவாயோடினார்கள் எ-று.

இமிர்தல்-ஒலித்தல். தும்பைத்தொடை - வெற்றிவீரர் சூடுவதோர் மாலை. ஒற்றுதல் - ஒதுங்கியிருந்து பிறர் பேசுகிற ரஹஸ்யங்களைக் கேட்டல். இத்தொழிலினரை ஒற்றர் என்பர். படை-படுத்தற் குரியது. படுத்தல் - கொல்லுதல். கருங்கழல் என்பதில் கருமை பெருமையென்னும் பொருள் குறித்த சொல். (ருரு)

கடிதடி வணங்கினார் கறைகொள் வேலினீர்
முடியுடை யமரர்போய் முறையிட் டார்களாற்
றடமலர் நந்தையோர் தனயற் றந்தனன்
மிடலுடை யவனைநம் மேல்விட் டானரோ.

(இ - ள்.) கடிது - விரைவாக, அடிவணங்கினார் - அடிதொழுது, கறைகொள்வேலினீர் - உதிரம்படிந்த வேற்படையை யுடையவர்களே, முடி உடை - கிரீடத்தையுடைய, அமரர்போய் - தேவர்கள் சென்று, முறையிட்டார்கள் - முறையிட்டுக் கொண்டார்கள், ஆல் - ஆதலால், தடமலர் - தாமரைமலரில் வீற்றிருக்கிற, நந்தை - உமது தந்தையானவன், ஓர் தநயன் - ஒரு புதல்வனை, தந்தனன் - பெற்றான், மிடல் உடை - வலியின் மிகுதியையுடைய, அவனை - அந்தப் புதல்வனை, நம்மேல்விட்டான் - நம்மீது ஏவிவிட்டான் எ-று.

அடிவணங்கினார் - தந்தனன் என்பன முற்றெச்சங்கள். தடமலர் - மலர்களில் பெருமையடைந்திருக்கிற மலர். தடம்-பெருமை. (ருசு)

பீடுடை யவன்பெயர் பேசி னுக்கிர
னாடக வரையுற வாடுந் தோளினா
னீடிய சினமெனு நெருப்பு நெஞ்சினன்
பாடிமிழ் கழலினன் பரிதி வேலினான்.

(இ - ள்.) பீடு உடை - பெருமையையுடைய, அவன் பெயர் - அவன் பெயரை, பேசின் - சொல்லுமிடத்து, உக்கிரன் - உக்கிரன் என்பதேயாம், ஆடகவரை - பொன்மலையோடு, உறவாடும் - உறவாடுகிற, தோளினான் - புயங்களையுடையவன், நீடிய - பெரிதாகிய, சினம் என்னும் - கோபமென்கிற, நெருப்பு - நெருப்பையுடைய, நெஞ்சினன் - மனமுடை

யவன், பாடு இமிழ் - எந்தப் பக்கத்திலும் சென்று ஒலிக்கிற, கழலினன் - வீரக்கழலை யுடையவன், பரிதிவேலினன் - ஒளியோடு கூடின வேற்படையை யுடையவன் எ - று.

ஆடகம் - பொன். இது நால்வகைப் பொன்னினொன்று. ஆடகவரை - பொன்மலை (மேருமலை.) உறவாடுதல் - ஒத்திருத்தல். உறவாடுந்தோளினன் என்பதற்கு மிகுதியாய் நடுங்குதற்குக் காரணமாகிய புயங்களையுடையவன் என் றுரைத்தலுமொன்று. பாடு-பக்கம். எல்லாத் திக்சகளிலும் என்றபடி. கழல் - வீரகண்டை. பரிதிவேலினன்-சூரியன் போன்ற ஒளியையுடைய வேலாயுதத்தை யுடையவன் எனினுமமையும்.()

கந்தடு புகர்முகக் களிற்றின் வெம்பகைப்
பந்திபூண் டீர்க்குமோர் பைம்பொற் றேரின
னந்தரத் தவர்குழா மனைத்துஞ் சூழ்தர
வந்தன னிவனென வகுத்துக் கூறினார்.

(இ - ள்.) கந்து - கட்டுத்தறியை, அடு - முறிக்கிற, புகர்முகம்-புள்ளிகளோடு கூடிய முகத்தையுடைய, களிற்றின் - யானைகளின், வெம்பகை - கொடிய பகையாகிய சிங்கத்தின், பந்திபூண்டு - வரிசை கட்டப்பட்டு, ஈர்க்கும் - ஈர்க்கப்படுகிற, ஓர் - ஒப்பற்ற, பை - பசுமையாகிய, பொன் - பொன்னாற் செய்யப்பட்ட, தேரினர் - தேரையுடையவர், அந்தரத்தவர் குழாம் அனைத்தும் - தேவ சமூகங்களெல்லாம், சூழ்தர-சுழன்றுவர, இவண் வந்தனன் என - இவண் தோன்றினனென்று, வகுத்துக் கூறினார் - விவரித்துச் சொன்னார்கள் எ - று.

கந்து அடு என்றதனால் களிறு என்றதற்கு மதயானையெனப் பொருளுரைத்துக் கொள்க. வெம்பகை - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர். பந்தி - பங்தி என்னும் வடமொழிச் சிதைவு. ஈர்த்தல்-இழுத்தல். பகுதி ஈர். பைம்பொன் - பசும்பொன். அந்தரம் - விண்ணுலகம். ஆதலால் அதில் வாழ்கின்ற தேவரை அந்தரத்தவர் என்றார். சூழ்தர என்பதற்குப் பகுதி சூழ்தா. வகுத்தல்-விவரித்துச் சொல்லுதல். (கூஅ)

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

சொல்லிய வொற்றர் மாற்றஞ் செவிப்புலந் துன்னு முன்ன
மெல்லையில் சினத்தீ யுண்ணின் றெழுந்தெனக் கண்சி வந்த
வில்லுறழ் புருவ நெற்றி மேற்சென்ற விதழ்து டித்த
பல்லிதழ் கறித்த வானோர் பகைஞர்கட் குடறு டித்த.

(இ - ள்.) சொல்லிய - சொன்ன, ஒற்றர் - ஒற்றரது, மாற்றம் - சொற்கள், செவிப்புலம் - காதினிடத்து, துன்னு முன்னம் - சேர்தற்கு

முன்னமே, எல்லை இல் - அளவு கடந்த, சினம் தீ - கோபமாகிய நெருப்பு, உள் நின்று - மனத்தினின்றும், எழுந்தென - வெளிப்பட்டது போல, கண் - கண்கள், சிவந்த - சிவந்தன, வில் உறழ்-வில்லை நிகர்த்த, புருவம் - புருவங்கள், நெற்றிமேல் சென்ற - நெற்றியின்மீது ஏறின, இதழ் - உதடுகள், துடித்த-பதைத்தன, பல் - பற்கள், இதழ்-உதட்டை, கறித்த-கடித்தன, வானோர் - தேவர்களுடைய, பகைஞர்கட்கு - பகைவராகிய அசுரர்களுக்கு, உடல் துடித்த - சரீரங்கள் நடுங்கின எ-று.

புலம் - ஏழனுருபு. துன்னல்-சேர்தல். உறழ்தல் - ஒத்தல். கறித்தல்-கடித்தல். வானோர் பகைஞர் - அசுரர். (நிக)

இளையவ னொருவ னம்மே லெழுந்தன னமருக் கென்றா
லெளியவர் நாம லாதிவ் விருநிலத் தியாவ ரென்று
துளிமுகி லுருமி னக்குத் தொடியுடை முன்கை கௌவிக்
குளிறுறுங் கடலி னார்த்துக் கொம்மென வெழுந்தா ரன்றே.

(இ - ள்.) இளையவன் ஒருவன் - இளையவனாகிய ஒருவன், நம்மேல் - நம்மீது, அமருக்கு எழுந்தனன் என்றால் - போர்செய்ய வந்தான்என்றால், நாம் எளியவர் - எளியோர் நாம், அலாது - அல்லது, இ - இந்த, இரு நிலத்து - பெரிய நிலவுலகத்தில், யாவர் என்று - யாவர் உளர் என்று, துளி - மழைத்துளியை சிதறுகிற, முகில் - மேகத்தின், உருமின் - இடிபோல, நக்கு - சிரித்து, தொடி உடை - கடகம் அணிந்த, முன்கை - முன்னங்கையை, கௌவி - கடித்துக்கொண்டு, குளிறு உறும் - ஒலி மிகுந்த, கடலின் - கடலைப் போல, ஆர்த்து - சப்தித்து, கொம்மென - கொம்மென்று, எழுந்தார் - எழுந்தார்கள், அன்று ஏ அசை.

அமர்-போர். இருநிலம் என்புழி இருமை பெருமையைக் குறித்தது. உருமின் என்புழி இன் என்னும் ஐந்தாவது ஒப்புப்பொருளின் மேற்று. நக்கு என்பதற்கு பகுதி நகு. குளிறல் - ஒலித்தல். கடலின் என்பதில் இன் என்னும் ஐந்தனுருபு ஒப்புப்பொருட்டு. கொம்மென - விரைவாக. ()

மணங்கமழ் தும்பை வேய்ந்து மருங்குடை வாளா சைத்திட்
டிணங்கிய கோதை கட்டி யெறும்விரற் புட்டி லிட்டு
வணங்கிய வரிவில் லேந்தி வடிக்கணைத் தூணி தாங்கிக்
கணங்கொளூற் படையி னோடுங் கதுமென நிலத்தி ழிந்தார்.

(இ - ள்.) மணம்கமழ் - வாசனை வீசுகின்ற, தும்பை - தும்பைமலர் மாலையை, வேய்ந்து - சூடி, மருங்கு - அரையில், உடைவாள் - உடைவாளை, அசைத்திட்டு - கட்டி, இணங்கிய - பொருத்தமான, கோதை கட்டி - கையுறைகட்டி, எறும் - பலமுள்ள, விரல் புட்டில் இட்டு - விரற் புட்டில் அணிந்து, வணங்கிய - வளைந்த, வரி-கட்டமைந்த, வில்-வில்லை, ஏந்தி - தாங்கி, வடி - கூர்மையாகிய, கணை - அம்புகளின், தூணி -

புட்டிலை, தாங்கி - தரித்து, கணம் கொள் - கூட்டம் கொண்ட, நால்படையிரேடு - நால்வகைச் சேனைகளுடன், கதும் என - விரைவாக, நிலத்து - நிலத்தின்கண், இழிந்தார் - இறங்கினார்கள் எ - று.

போர்க்கு எழுகின்ற வீரர் தும்பைமலர் மாலையை சூடுதல் மரபாதலால் மணங்கமழ் தும்பை வேய்ந்து என்றார். அசைத்தல் - கட்டுதல். கோதை - கைக்கட்டி. விரல் புட்டில் - விரல்களுக்கு அணியும் தோல் கவசம். வணங்கல் - வளைதல். வரி - நீட்சியெனினுமாம். வடி - கூர்மை. கணைதூணி என்பதனை பாணதூணீரம் என்பர் வடநூலார். நாற்படை என்றது யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை என்பவற்றை. இவற்றை சதுரங்க சேனை என்பர் வடநூலார். இழிதல் - இறங்குதல். பகுதி இழி.

(சுக)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

விண்ணுரிஞ்சுயர் விந்தமால் வரைவேந் துதன் கண ரக்கர்பா
னண்ணும் வன்றுணை யாக விட்ட நடக்குமால் வரைபோல் வன
கண்ண கன்றிரை யாழி யொத்த கறங்கு மாழிய சாரதி
யெண்ண மேயுரு வாய மாவின வெங்கு மோடுவ தேர்களே.

(இ - ள்.) எங்கும் - எவ்விடத்தும், ஓடுவ - ஓடுவனவாகிய, தேர்கள் - இரதங்கள், விண் - ஆகாயத்தை, உரிஞ்சு - அளாவுகிற, உயர் - உயர்ந்த, மால் - பெரிய, விந்தம் - விந்தமென்னும் பெயரையுடைய, வரைவேந்து - மலையரசன், தன்கண் - தன்னிடத்துள்ள, அரக்கர்பால் - அசுரரிடத்துக்கு, நண்ணும் - பொருந்திய, வல்துணையாக - வலிய வுதவியாக, விட்ட - அனுப்பின, மால் - பெரிய, நடக்கும் வரை - நடைமலைகளை, போல்வன - நிகர்ப்பன, கண் அகல் - இடம் அகன்ற, திரை - அலைகளையுடைய, ஆழியொத்த - கடலை நிகர்த்த, கறங்கும் - ஒலிக்கின்ற, ஆழிய - சக்கரங்களையுடையன, சாரதி - தேர்ப்பாகன், எண்ணமே - மனமே, உரு ஆய - உருவாகக்கொண்ட, மாவினம் - குதிரைக் கூட்டங்கள் எ - று.

கலித்துறை

பிளிறொலி யிடியாப் பெருமத மழையாப் பிறைக்கோட்டி
னொளிறணி மினலா வுய்த்திடு பாகே யுறுகாலாத்
தளிதரு புயலா யினநிழல் சுளிவ தறுகண்ண
வளர்பனை புரைகை யினகறை யடிய மதயானை.

(இ - ள்.) மதயானை - மதயானைகள், பிளிறு - பிளிறுகின்ற, ஒலி - ஓசையே, இடியா - இடியாகவும், பெருமதம் - மிக்க மதஜலம், மழையா - மழையாகவும், பிறை - பிறைபோன்ற, கோட்டின் - கொம்பினது, ஒளிறு - விளங்குகின்ற, அணி - ஆபரணமே, மின்னல் ஆ - மின்னலாகவும், உய்த்திடு - செலுத்துகின்ற, பாகே - பாகனே, உறுகால் ஆ - மிக்க

கால்களாகவும், தளிதரு - நீர்த்துளியைச் சிதறுகிற, புயல் ஆயின - மேகங்களாயின, நிழல் - சாயையே, சுளிவ - கோபிப்பன, தறுகண்மை - வன்கண்மையை யுடையன, வளர் - வளர்ந்த, பனைபுரை - பனைமரத்தையொத்த, கையின - துதிக்கையை யுடையன, கறை அடிய - உரல்போலும் கால்களையுடையன எ - று.

பிளிறல் - முழங்குதல். கோடு - கொம்பு. ஒளிறல் - விளங்குதல். உய்த்தல் - செலுத்தல். பாகு - சாரதி. தளி - நீர்த்துளி. சுளித்தல் - கோபித்தல். தறுகண்மை - வன்கண்மை (மன உறுதி.) புரைதல் - ஒத்தல். கறை - உரல். (கூங)

கலிவிருத்தம்

மண்ணுமழல் வானின்றியொர் வங்கூழ்கொடு கமலத்
தண்ணார்மல ரோனுந்தன தரையிற்செலன் முனிவ
கண்ணாடரும் வேகத்தின கதியைந்தின செம்பொற்
பண்ணார்ந்தன நுரைவாயபல் பகைவென்றன குதிரை.

(இ - ள்.) குதிரை - குதிரைகள், மண் - நிலம், ஆம் - நீர், அழல் - நெருப்பு, வான் - ஆகாசம், (என்னும் இவை) இன்றி - இல்லாமலே, ஓர் - ஒப்பற்ற, வங்கூழ் கொடு - காற்றைக்கொண்டே, தண் ஆர் - குளிர்ச்சி பொருந்திய, மலரோன் - தாமரை மலரில் வசிக்கும் பிரமதேவனால், தந்தன - படைக்கப்பட்டன, தரையில் - பூமியின்மீது, செல்லல் - நடத்தலை, முனிவ - வெறுப்பன, கண் - கண்களால், நாடு அரு - பார்த்தற்கு அரிய, வேகத்தின - வேகமுடையன, கதி ஐந்தின - ஐவகை நடையையுடையன, செம்பொன் - செம்பொன்னால் செய்யப்பட்ட, பண் - பருமத்தை, ஆர்ந்தன - தம்மேல் உடையன, நுரைவாய - நுரையோடு கூடிய வாயையுடையன, பல்பகை - அநேகம் பகைவரை, வென்றன - ஜயித்தன எ-று.

வங்கூழ் - காற்று. தரையில் செலல் முனிவ என்றது தரைமீது நடவாமல் அந்தரத்தே விரைந்து ஓடுவன என்றபடி. நாடல் - நோக்குதல். பண் - பருமம். (இது ஜ்னி) (கூச)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அசிபிளந்த வடுவிளங்கு மாரமாய மார்பர்செந்
தசைபொதிந்த வுடன்முனிந்து தாவில்கீர்த்தி யாக்கைமே
னசைபுரிந்த குமரர்நெஞ்ச ஞாட்பு வேண்டி வாடினார்
விசயமங்கை குடிபுகுந்த வேலர்கோலர் வீரரே.

(இ - ள்) வீரர் - வீரர்கள், அசி - வாளினால், பிளந்த - பிளக்கப்பட்ட, வடு - தழும்பு, விளங்கும் - பிரகாசிக்கிற, ஆரம் ஆய - முத்துவடம் முதலியவை அணியப் பெற்ற, மார்பர் - மார்பினையுடையவர், செம்தசை பொ

சிந்த - சிவந்த மாமிசம் நிறைந்த, உடல் - உடம்பை, முனிந்து - வெறுத்து, தாவு இல் - கெடுதல் இல்லாத, கீர்த்தியாக்கைமேல் - புகழ் உடம்பின்மேல், நசை புரிந்த - விருப்பம் கொண்ட, குமரர்-இளைஞர், ஞாட்பு வேண்டி - போரை விரும்பி, நெஞ்சு வாடினர் - மனம் வாடினவர், விசய மங்கை - விஜய லட்சுமி, குடி இருந்த - வசிக்கப்பெற்ற, வேலர் - வேற்படையை யுடையவர், கோலர் - அம்பினையுடையவர் எ-று.

தாவு - அழிவு. நசை - விருப்பம். ஞாட்பு - யுத்தம். கோல் - அம்பு. (௬௫)

கலித்துறை

இனைய வாகிய நாற்பெரும் படையினோ டெரிகால்
சினவு வேற்படை யுருமிடித் தன்னசொற் றீயோர்
புனையும் வார்கழ லுக்கிரன் றனக்கெதிர் புகுந்தார்
கனலி வான்பத முதலிய தூளியாற் கரப்ப.

(இ - ள்.) இனைய ஆகிய - இத்தன்மையவாகிய, நாற்பெரும்படையினோடு - நால்வகைப்பட்ட பெரிய சேனையுடன், எரிகால் - நெருப்பைக் கக்குகின்ற, சினவு - பகைவரைக் கோபிக்கின்ற, வேற்படை - வேலாயுதத்தையுடைய, உரும் இடித்தன்ன - இடி இடித்தாற்போன்ற, சொல்- சொல்லினையுடைய, தீயோர் - தீயவர், கனலி - சூரியனது, வான்பதம் முதலிய - பெரிய பதவிகள் முதலியன, தூளியால் - துகளினால், கரப்ப- மறையும்படி, புனையும் - தரித்த, வார்கழல் - நீண்ட வீரக்கழலையணிந்த, உக்கிரன் தனக்கு - உக்கிரனுக்கு, எதிர் - எதிரே, புகுந்தார் - பிரவேசித்தார்கள் எ - று.

காலல் - கக்குதல். சினவுதல் - கோபித்தல். உரும் - இடி. கனலி- சூரியன். கனலிவான் பதம் என்பது சூரியமண்டலத்தை. கரத்தல் - மூடுதல். (௬௬)

அண்ட ரண்டர்தம் படைத்துகட் படலம்விண் ணளவு
மண்டி மேலெழுந் தமருல கனைத்தையு மறைத்துக்
கொண்ட பேரொளி கெடுத்ததோர் குடிவழி யவர்க்கவ்
வெண்ட ருங்குடிக் குணம்வரல் புதுமையோ வெண்ணின்.

(இ - ள்) அண்டர் - தேவர்களுக்கு, அண்டர் - பகைவராகிய அசுரரது, படை - நால்வகைப் படையினால் உண்டாகிய, துகள் படலம்- துகளின் கூட்டம், விண் அளவும் - ஆகாயத்தளவும், மண்டி - நெருங்கி, மேல் எழுந்து - மேலே கிளம்பி, அமர் உலகு அனைத்தையும்-தேவலோகமுழுமையும், மறைத்து - மூடி, கொண்ட - அடைந்திருந்த, பேர் ஒளி- பேரொளியை, கெடுத்தது - அடக்கி விட்டது, ஓர் குடிவழியவர்க்கு - ஒரு சந்ததியார்க்கு, அ - அந்த, எண்தரும் - மதிக்கத்தகுந்த, குடிக்

குணம் - சத்தியின் குணம், வரல் - உண்டாதல், எண்ணில்-ஆலோசிக்குமிடத்தில், புதுமையோ - புதுமையாமோ எ - று.

அண்டார் - பகைவர். இது எதுகையின்பம் நோக்கி அண்டர் எனக் குறுகிற்று. அமரர் உலகு எனற்பாலது அமருலகு என விகாரமாயிற்று. புதுமையோ வென்னுமோகாரம் எதிர்மறை. (சஎ)

பிடிக ளார்த்தன வார்த்தன பிறைமருப் பொருத்தல்
கொடிக ளார்த்தன வார்த்தன கொய்யுளைப் புரவி
துடிக ளார்த்தன வார்த்தன துளைபடு வளைக
ளிடிக ளார்த்தன வார்த்தன பல்லிய மெங்கும்.

(இ - ள்.) பிடிகள் ஆர்த்தன - பெண்யானைகள் ஆரவாரித்தன, பிறைமருப்பு - பிறைபோன்ற கொம்புகளையுடைய, ஒருத்தல் - ஆண் யானைகள், ஆர்த்தன - ஆரவாரித்தன, கொடிகள்-துவசங்கள், ஆர்த்தன-ஆரவாரித்தன, கொய் - கொய்யப்பட்ட, உளை - புறமயிரையுடைய, புரவி - குதிரைகள், ஆர்த்தன - ஆரவாரித்தன, துடிகள் - இடக்கைகள், ஆர்த்தன - ஆரவாரித்தன, துளைபடுவளைகள் - தொளைக்கப்பட்ட சங்குகள், ஆர்த்தன - ஆரவாரித்தன, இடிகள் —, ஆர்த்தன - ஆரவாரித்தன, பல் இயம் - பலவகை வாச்சியங்கள், எங்கும் - எவ்விடத்தும், ஆர்த்தன - ஆரவாரித்தன எ - று.

பல்லியம் என்பதனை ஒரு சொல்லாகக் கொண்டு வாத்தியம் எனப் பொருளுரைப்பினுமாம். (சஅ)

ஆழி யேழுமொன் றுயெழுந் தன்னவா ளரக்கர்
சூழும் வெம்படைத் தொகுதியு மெரிவிழிச் சுடர்வேற்
பாழி யுக்கிரன் றனிமையும் பார்த்துளம் பதைத்தா
ரேழை விண்ணவ ரென்கொலோ விளைவதென் றெண்ணி.

(இ - ள்.) ஆழி ஏழும்-ஏழ் கடல்களும், ஒன்று ஆய்-ஒன்றாய்க் கூடி, எழுந்தன்ன - எழுந்தாற்போன்ற, வாள் அரக்கர் - வாளரக்கரது, சூழும்-வளைந்து கொண்ட, வெம்படைத் தொகுதியும் - வெவ்விய சேனாஸமூஹமும், எரிவிழி - நெருப்புப்போலுங் கண்களையும், சுடர்வேல்-ஒளியுள்ள வேற்படையையு முடைய, பாழி - பலமுள்ள, உக்கிரன் - உக்கிரனது, தனிமையும் - தனிமையையும், ஏழை விண்ணவர் - ஏழைத்தேவர்கள், பார்த்து - நோக்கி, விளைவது - இனி உண்டாகப்போவது, என்கொலோ என்று எண்ணி-யாதோவென்று ஆலோசித்து, உள்ளம் பதைத்தார்-மனந் துடித்தார் எ-று.

ஆழி-ஆழமுள்ளது. இதினும் ஆழமுள்ளது வேறொன்றின்மையால் கடலுக்கிது சிறந்த காரணப் பெயராயிற்று. (சக)

தோமரம்பர செழுவுமுக் கரத்தொடு சுடர்வா
ளுமமுத்தலை பிண்டிபா லங்கதை நகைவே
னேமி வச்சிர முதலிய படைகொடு நிருதர்
மாமலர்த்தவி சுறையிறை புதல்வனை வளைந்தார்.

(இ - ள்.) தோமரம்—, பாசு—, எழுவும்—, முத்கரமொடு—, சுடர்-ஒளியுள்ள, வாள்—, நாமம் - அச்சத்தை யுண்டாக்குகிற, முத்தலை - த்ரிசூலம், பிண்டிபாலம்—, கதை—, நகை-ஒளியுள்ள, வேல்—, நேமி-சக்கரம், வச்சிரம்—, முதலிய - முதலான, படைகொடு - ஆயுதங்களையேந்தி, நிருதர் - அசுரர், மா - பெருமையுள்ள, மரை - தாமரைமலராகிய, தவிசு-பீடத்தில், உறை - வசிக்கிற, இறை - இறைவனாகிய பிரமனது, புதல்வனை - புத்திரனை, வளைந்தார் - சூழ்ந்துகொண்டார்கள் எ-று.

மாமலர்த் தவிசுறையிறை புதல்வன் என்றது உக்கிரனை. (௭0)

வளைதல் கண்டுநக் குக்கிரன் வரிசிலை வணக்கித்
தளர்வி லொண்குண மொலிபடத் தெறித்தனன் சமரம்
விளைய நின்றதா ரவ்வொலிக் குடைந்தது விசும்பிற்
குளிறு தீயுரு மேற்றினுக் குடையராக் குழூப்போல்.

(இ - ள்.) வளைதல் - (அவ்வாறு) வளைதலை, உக்கிரன் கண்டு - உக்கிரன் பார்த்து, நக்கு - சிரித்து, வரி-கட்டமைந்த, சிலை-வில்லை, வணக்கி-வளைத்து, தளர்வு இல் - தளர்ச்சியில்லாத, ஒள் - ஒட்பமான, குணம் - நாணினை, ஒலிபட - சத்தமுண்டாக, தெறித்தனன் - தெறித்து, சமரம விளைய - போர் மூளாநிற்க, நின்ற - அவ்விடத்து நின்ற, தார்-தூசிப்படையானது, விசும்பில் - ஆகாயத்தில், குளிறு - ஒலிக்கிற, தீ - நெருப்புருவாகிய, உருமேற்றினுக்கு - ஆணிடிக்கு, உடை-தோற்றோடுகிற, அராகுழூப்போல் - பாம்பின் கூட்டம்போல, உடைந்தது - கலைந்தோடிற்று எ - று.

நகு என்னும் பகுதியொற் றிரட்டித்து இறந்தகாலங் காட்டிற்று. வரி நீட்சியெனினுமாம். தெறித்தல்-குணத்தொனி செய்தல். (௭௧)

அலகை யீட்டங்க ளுணவுபெற் றனமென வாட
விலகு வாட்படை யரக்கரா ருயிருண வேக்கற்
றுலையு நாமவேற் கூற்றத்தின் வேணவா வொழியப்
பலசி லீமுக மெய்தன னொருதொடைப் படுத்தி.

(இ - ள்.) அலகை ஈட்டங்கள் - பேய்க் கூட்டங்கள், உணவு பெற்றனம் என - உணவு கிடைக்கப் பெற்றோமென்று, ஆட - கூத்தாட, இலகு-விளங்குகிற, வாள்படை - வாளாயுதத்தையுடைய, அரக்கர் - அசுரரது, ஆர் உயிர் உண்ண - அரிய உயிரை யுண்ணுதற்கு, ஏக்கற்று -

யமனது, உலேயும் - உழலாநிற்கிற, நாமம் - அச்சத்தைத் தருகிற, கூற்றத்தின் - யமனது, வேணவா - மிக்க ஆசையானது, ஒழிய - நீங்க, பல - அநேகமாகிய, சிலீமுகம்-பாணங்களை, ஒரு தொடைப்படுத்தி எய்தனன்- ஒரே தொடையாகப் பிரயோகித்தான் எ - று.

ஆடுதல் - களிப்பிறுலென்க. கூற்றம் - சொல்லால் அஃறிணையும் பொருளால் உயர்திணையுமாகிய வோர் சொல். இவ்வாறே, "கூற்றமளந்து நுந்நா ளுண்ணும், கூற்றங் குதித்துய்ந்தா ரீங்கில்லை" எனச் சான்றோர் கூறுதலுங் காண்க. தொடை - தொடுத்தல் (பிரயோகித்தல்.) (எஉ)

எய்த வம்பினிற் சுடுதலாற் றேனின மிரியுஞ்
செய்தி யாமென விரிந்தது தூசியச் செய்தி
கைத யங்குவிற் றிவாந்தக னென்பவன் கண்டு
மொய்த யங்குதோ ளுக்கிரற் கெதிர்ந்தனன் மொழிவான்.

(இ - ள்.) எய்த - பிரயோகித்த, அம்பினில்-அம்பைப்போல, சுடுதலால் - சுடுவதனால், தேன் இனம் - வண்டுக் கூட்டம், இரியும் - கலேந்தோடுகிற, செய்தியாம் என - செய்கைபோல, தூசி - தூசிப்படையானது, இரிந்தது - கலேந்தோடிற்று, அச் செய்தி - அந்தச் செய்தியை, கைதயங்கு - கையினிடத்து விளங்குகிற, வில் - வில்லேயுடைய, திவாந்தகன் என்பவன் - திவாந்தகனென்று சொல்லப்படுவோன், கண்டு - பார்த்து, மொய்தயங்குதோள் - வலிமிகுந்த தோளேயுடைய, உக்கிரற்கு - உக்கிரனுக்கு, எதிர்ந்தனன் - எதிரேவந்து, மொழிவான் - சொல்வானுயினன் எ - று.

இரிதல் - ஓடுதல். தயங்குதல் - விளங்குதல். மொய் - வலி. எதிர்ந்தனன் - முற்றெச்சம். (எங)

அண்ட கோடிக ளடுக்குபே ராற்றலம் பலர்யாங்
கொண்ட தோள்வலி யில்லேநீ தமியையெங் குற்றாய்
தொண்டர் தம்பொருட் டெம்மொடிவ் வாறமர் தொடுத்தே
பண்டை யூழ்வழி யிறக்கவந் தாயெனப் பகர்ந்தான்.

(இ - ள்.) அண்டகோடிகள் - அண்டகோடிகளெல்லாவற்றையும், க்கு - எம்மீது அடுக்கிவைக்கத்தகுந்த, பேர் ஆற்றலம் - பெருவலியேம், யாம் பலர் - நாங்கள் அநேகர், நீ - நீ, கொண்டதோள்வலி - புயவலியுடையையல்லே, தமியை - தமியையாயிருக்கிறுய், எங்கு உற்றாய் - எங்கே வந்தாய், தொண்டர்பொருட்டு - அடியவர் பொருட்டு, எம்மொடு - எங்களுடன், இவ்வாறு - இந்தப் பிரகாரம், அமர்தொடுத்து- போர் செய்யத்தொடங்கி, பண்டை - பழையதாகிய, ஊழ்வழி - ஊழ்

வழியாய், இறக்கவந்தாய் என - சாவவந்தாயென்று, பகர்ந்தான் - சொன்னான் எ-று.

கோடியென்றது ஈண்டு மிகப் பலவென்னும் பொருட்டு. அடுக்கு - ஒன்றன்மேல் ஒன்றாயேற்றுதல். தொடுத்தல் - தொடங்கல். பகர்தல் - சொல்லுதல். (எச)

மாற்ற மங்கது கேட்டலு முக்கிரன் மடவோ
யாற்ற லில்புலி யொன்றினுக் காற்றன்மான் கணங்க
டோற்றல் கண்டிலை போலுநீ யிதுநிற்க துனைவி
னேற்ற ருஞ்சம ருழத்திநீ வல்லையே லென்றான்.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்தில், அது மாற்றம் - அந்தச் சொல்லை, கேட்டலும் - கேட்டவுடன், உக்கிரன் - உக்கிரனானவன், மடவோய் - அறிவில்லாதவனே, ஆற்றல் இல் - வலியில்லாத, புலி ஒன்றினுக்கு - ஒரு புலிக்கு, ஆற்றல் - வலியுள்ள, மான்கணங்கள் - மான் கூட்டங்கள், தோற்றல் - தோற்றோடுதலை, நீ கண்டிலைபோலும் - நீ பார்த்திலைபோலும், இது நிற்க - இது இருக்கட்டும், நீ வல்லையேல் - நீ வல்லையாயின், துனைவின் - விரைவாக, ஏற்று - (எம்மோடு) எதிர்த்து, அருசமர் உழத்தி - அருமையாகிய போர் செய்யக்கடவை, என்றான் - என்று சொன்னான் எ-று.

மடம் - அறியாமை. துனைவு - விரைவு. ஏற்றல் - எதிர்த்தல். (எ௫)

என்ற வாசகங் கேட்டவ னெரிபடக் கொதித்துத்
தன்ற வாவலி வில்வளைஇச் சரம்பல தொடுத்தான்
குன்ற வாம்புயத் துக்கிர னெய்தவை குறைத்துத்
துன்ற வாயிரங் கோறொடுத் தவனுட றுளைத்தான்.

(இ - ள்.) என்ற - என்று சொன்ன, வாசகம் - சொல்லை, அவன் - அந்தநிவாந்தகன், கேட்டு—, எரிபட கொதித்து - நெருப்புண்டாகக் கொதித்து, தன் - தனது, தவா வலி - கெடாதவலியுள்ள, வில்வளை இ - வில்லை வளைத்து, பலசரம் தொடுத்தான் - அநேக பாணங்களைப் பிரயோகித்தான், குன்று - மலைகளும், அவாம் - ஆசைப்படுதற்கரிய, புயத்து - தோள்களையுடைய, உக்கிரன் - உக்கிரனானவன், எய்து - பாணமேவி அவை குறைத்து - அந்த பாணங்களைக் கண்டித்து, துன்ற - நெருங்க, ஆயிரம்கோல் தொடுத்து - ஆயிரம் பாணங்களையேவி, அவன் உடல் அந்த நிவாந்தகனது உடம்பை, துளைத்தான் - தொளைத்து விட்டான் எ-று.

வளை இ சொல்லிசை யளபெடை. சரம் - ஸரம் என்னும் வடசொற்றிரிபு. குறைத்தல் - துணித்தல். கோல் - பாணம். (எசு)

குருதி பாய்ந்திழி யுடம்பின னிலையன்மேற் கோல்கள்
வரையின் மேற்சொரி மழையெனச் சொரிந்தனன் மற்றப்
பொருக ணைக்குலம் பட்டகா லையுமதே போன்ற
பரிதி வேலவ னவன்சிலை யிருதுணி படுத்தான்.

(இ - ள்.) குருதி - உதிரமானது, பாய்ந்து இழி - பாய்ந்தொழுகா நின்ற, உடம்பினன் - சரீரத்தையுடையவனுகிய, அிலையன்மேல் - அவன் மீது, வரையின்மேல் - மலையின்மீது, சொரி - பொழிகிற, மழை என - மழைத்தாரைபோல, கோல்கள் - பாணங்களை, சொரிந்தனன் - பொழிந்தனன், அ - அந்த, பொரு - போர்க்குரிய, கணைகுலம் - அம்புக்கூட்டம், பட்டகாலையும் - தைத்தபோதும், அதேபோன்ற - அதனையே நிகர்த்த, பரிதி வேலவன் - ஒளியுள்ள வேற்படையை யுடையவன், அவன் சிலை - அவனது வில்லை, இருதுணிபடுத்தான் - இரண்டு துண்டாக்கினன் எ-று.

காலையும் என்றவும்மை இறந்தது தழீஇயது. பரிதி - ஒளி. சூரியன் என்றலுமொன்று. (எஎ)

மற்று மோர்சிலை வளைத்தவன் வார்கணை தொடுப்ப
வெற்றி வேள்சிலை குழையவீர்த் தொருகணை விடுத்தான்
கொற்ற வாட்படை நிருதன ருயிரையக் கொடுங்கோ
லற்ற நோக்குவெங் கூற்றினுக் கருத்திய தன்றே.

(இ - ள்.) மற்றும் ஓர் சிலை வளைத்து - வேறொரு வில்லைவளைத்து, அவன் —, வார்கணைதொடுப்ப-நீண்ட பாணங்களைத் தொடுத்தலும், வெற்றிவேள் சிலைகுழைய-வெற்றிவேள் வில்வளைய, ஈர்த்து - இழுத்து, ஒரு கணைவிட்டான் - ஒரு பாணத்தையேவினன், அ - அந்த, கொடுங்கோல் - கொடிய பாணமானது, கொற்றம் - வெற்றியையுடைய, வாள்படை - வாளாயுதத்தை யுடைய, நிருதன் - அரக்கனது, ஆர் உயிரை - அரிய வுயிரை, அற்றம்நோக்கு - சமயம் பார்த்துக்கொண்டிருந்த, வெங்கூற்றினுக்கு - கொடிய யமனுக்கு, அருத்தியது - உண்பித்தது எ-று.

வளைத்தனன் முற்றெச்சம். கொடுங்கோல் என்பதில் கொடுமை கோலின் சிறப்புணர்த்தி நின்றது. கோலுக்குச் சிறப்பாவது அரக்கனுயிரைக் கவரும் வலியின்றிச் சமயம்பார்த்திருந்த கூற்றுவனை மகிழ்வித்தது. அருத்தியது பிறவினை. இது தன்வினையில் அருந்தியது என்று வரும். "வாசநாண் மலரோனன்ன மாமுனி பணிமறுத, காசலாங் கனகப் பைம்பூட் காகுத்தன் கன்னிப்போரில், கூசிவா ளரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்கவஞ்சி, ஆசையா லுழலுங்கூற்றுஞ் சுவைசிறி தறிந்ததன்றே" என்றார் மஹாகவியும். இதனால் நிருதனது பேராற்றல் விளங்குகின்றது. (எஅ)

அவனி றத்தலுஞ் சயோத்துங்க னென்னுமோ ரரக்கன்
கவன வாம்பரித் தேர்கடாய்ப் போர்முகங் கலந்து
தவல ருஞ்சிலை வளைத்தனன் சரம்பரம் பரையாப்
புவனம் யாவையும்படைத்தவன் புதல்வன்மேற் றொடுத்தான்.

(இ - ள்) அவன் - அந்த நிருதன், இறத்தலும் - இறந்தவுடனே, சயோத் துங்கன் என்னும் - சயோத்துங்கன் என்கிற, ஓர் அரக்கன் - ஒரு அரக்கனானவன், கவனம் - விரைவாய்ச்செல்லுகிற, வாம் - தாவும் இயல் புள்ள, பரி - குதிரைகள் பூண்ட, தேர் - தேரை, கடாய் - செலுத்தி, போர்முகம்-யுத்தகளத்தில், கலந்து - வந்துசேர்ந்து, தவல் அரு - கெடு தல் இல்லாத, சிலை-வில்லை, வளைத்தனன் - வளைத்து, பரம்பரையா - வரிசை வரிசையாக, புவனம் யாவையும் படைத்தவன் புதல்வன்மேல் - பிரமதேவன் மகன்மேல், சரம்தொடுத்தான் - பாணங்களை எவி னான் எ-று.

கவனம் - வேகம். வாவும் எனற்பாலது வாம் என விகாரமாயிற்று. போர்முகம் என்பதில் முகம் ஏழனுருபு. தவல் - கெடுதல். அருமை - இன்மை. வளைத்தனன் முற்றெச்சம். புவனம் - உலகம். (எக)

ஐய னங்கவை யறுத்தவ னடற்சிலை பிடித்த
கைய றும்படி யடுகணை விடுத்தனன் கயவன்
மொய்கொ டிண்கதை யாலெறிந் தானதை முருக்கிச்
செய்ய கோறொடுத் தண்ணலங் கவனுயிர் செகுத்தான்.

(இ - ள்.) ஐயன் - பிரமபுத்திரன், அங்கு - அவ்விடத்து வந்த, அவை - அந்த பாணங்களை, அறுத்து - சேதித்து, அவன் - அவ்வரக் கன், அடல்சிலை பிடித்த - வலிமையாகிய வில்லைப் பிடித்திருக்கிற, கை - கையானது, அறும்படி - அற்று விழும்படி, அடு - பகைவரைக் கொல்லு கின்ற, கணை - பாணத்தை, விடுத்தனன் - எவினான், கயவன் - கீழ்மகனா கிய அந்த அரக்கன், மொய்கொள் - வலிமையைக்கொண்ட, திண்கதை யால் - உறுதியாகிய கதாயுதத்தினால், எறிந்தான் - வீசினான், அண்ணல்- பிரமபுத்திரன், அதை - அந்தக் கதாயுதத்தை, முருக்கி-தூளாக்கி, செய் யகோல் தொடுத்து - செவ்விய பாணங்களை பிரயோகித்து, அங்கு-அப் போர்முகத்திலே, அவன் உயிர் - அந்த அரக்கனது உயிரை, செகுத் தான் - கொன்று நீக்கினான் எ-று.

கதாயுதம் - தண்டாயுதம். முருக்கி செகுத்தான் என வினையும். ()

அக்க ணத்துநீ லாங்கனு மடுதிற லரக்க
னுக்கி ரத்தனி வீரனு மெதிர்ந்தன னுருத்துத்
தொக்க வெங்கணை முறைமுறை தொடுத்தவை தொலைத்துச்
சக்க ரப்படை யொன்றுவிட் டானுளந் தருக்கி.

(இ - ள்.) அக்கணத்து - அந்த க்ஷணத்தில், நீலம் அங்கன் ஆம் - நீல சரீரத்தை யுடையவனாகிய, அடு-பகைவரைக் கொல்லுகின்ற, திறல்- வெற்றியுள்ள, அரக்கன் - அரக்கனானவன், உக்கிரன் - உக்கிரனென்னும் பெயருள்ள, தனி - ஒப்பற்ற; வீரனோடு - வீரனுடனே, எதிர்ந்தனன் - எதிர்த்து, உருத்து - கோபித்து, தொக்க-கூடின, வெம்கணை - கொடிய பாணங்களை, முறைமுறை தொடுத்து - முறை முறையாகப் பிரயோகித்து, அவை - அவன் விட்டவைகளை, தொலைத்து - விலக்கி, சக்கரப் படை ஒன்று - சக்கராயுதம் ஒன்றை, உள்ளம் தருக்கி - மனச் செருக்கோடு, விட்டான் - பிரயோகித்தான் எ-று.

நீலாங்கன் என்றது கருநிறமுள்ளவன் என்றபடி. எதிர்ந்தனன் முற்றெச்சம். உருத்தல் - கோபித்தல். தருக்கல்-செருக்குதல். (அக)

நீண்ட தண்டினா லாழியை நெடுந்தகை யடித்தான்
மீண்டு சென்றவன் சென்னிவீழ்த் தியதது விசையான்
மாண்டு போகுமூ ழுற்றதே மருவலர் படைகள்
வேண்டு மோதன தடுபடை யடாதுகொல் விரைவின்.

(இ - ள்.) நீண்ட - நீண்டிராக்கிற, தண்டினால் - தண்டாயுதத்தினால், ஆழியை - அந்தச் சக்கரத்தை, நெடுந்தகை - பெரியோனாகிய உக்கிரன், அடித்தான் - புடைத்தான், அது - அது, விசையால் - வேகத்தோடு, மீண்டுசென்று - திரும்பிப்போய் அவன் சென்னி-அவன் சிரசை, வீழ்த்தியது - அறுத்துத் தள்ளிவிட்டது, மாண்டுபோகும் - இறந்துபோகின்ற, ஊழ் - ஊழ்வினையானது, உற்றது எல் - வந்ததாயின், மருவலர் - பகைவருடைய, படைகள் - ஆயுதங்கள், வேண்டுமோ - வேண்டப்படுமோ, தனது - தன்னுடைய, அடுபடை - (பகைவரைக்) கொல்லுதற்குரிய ஆயுதங்கள், விரைவின் - விரைவாக, அடாதுகொல் - கொல்லாதோ எ-று.

தண்டு - தடி, தண்டாயுதம். வேண்டுமோ என்னும் ஓகாரம் எதிர்மறைப் பொருளது. அடுதல் - கொல்லுதல். அடாதுகொல் என்பதில் கொல் ஐயப்பொருட்டு. (அஉ)

அலகை பூண்டதேர்ச் சமரகே சரியெனு மரக்கன்
மலரி னோன்மகன் றனையொரு கடிகையில் வானோர்
குலம னுங்கவெல் குவனெனச் சூள்பல கூறிப்
புலவு நாறுவெங் கணைமழை பொழிந்தெதிர் புகுந்தான்.

(இ - ள்.) அலகைபூண்ட - பேய்கள் பூட்டப்பட்ட, தேர் - தேரை யுடைய, சமரகேசரியெனும் - சமரகேசரி யென்று சொல்லப்படுகிற, அரக்கன் - அரக்கனானவன், மலரினோன் - பிரமனது, மகன்தனை - புத்திரனை, ஒரு கடிகையில் - ஒரு கடிகைப்பொழுதில், வானோர்குலம் - தேவ

ஊழுகங்கள், அனுங்க - துக்கிக்கும்படி, வெல்குவன் என - வெல்லுவே னென்று, பல சூள்கூறி - பல சபதங்கள்செய்து, புலவு நாறு - புலால் நாற்றம் வீசுகிற, வெம் - கொடிய, கணைமழை - பாணவருஷத்தை, பொழிந்து - சொரிந்து, எதிர் புகுந்தான் - எதிரே வந்தான் எ-று.

சமரகேசரி வடசொல். இதற்குப் பொருள் போர்ச்சிங்கம் என்பது. மலரிஞேன் - தாமரைமலரில் வசிப்பவன். அனுங்கல் - துக்கித்தல். ()

வீர னவ்வெலா நிலம்பட வீழ்த்தினன் விரைகோன்
மாரி யிற்பல சொரிந்தன னவனவை மாற்றிக்
கூர்மு கக்கணை பலதொடுத் துக்கிரன் கொடிஞ்சித்
தேரு ருண்டிரண் டியோசனை பின்னிடச் செய்தான்.

(இ - ள்.) வீரன் - உக்கிரன், அவ் எல்லாம் - அவை எல்லாவற்றை யும், நிலம்பட - மண்ணில் விழும்படி, வீழ்த்தினன் - அறுத்துத்தள்ளி, விரை - விரைந்து செல்லுகிற, கோல் - பாணங்களை, மாரியின் - மழைத் தாரைபோல, பல-பலவற்றை, சொரிந்தனன்-பொழிந்தான், அவன்-அந் தச் சமரகேசரியானவன், அவை-அந்தப் பாணங்களை, மாற்றி - அறுத்து, கூர்முகம் - கூர்மையாகிய நுனியையுடைய, பலகணை - அநேக பாணங் களை, தொடுத்து - பிரயோகித்து, உக்கிரன் - உக்கிரனது, கொடிஞ்சி - மேல் சிகரத்தையுடைய, தேர் - தேரானது, உருண்டு - உருண்டு கொண்டே, இரண்டு யோசனை - இரண்டு யோசனைதூரம், பின்னிடச் செய்தான் - பின்னிடும்படி செய்தனன் எ-று.

கோல்மாரி - பாணமழை. மாரியின் என்புழி இன் ஐந்தாவதன் ஒப் புப்பொருளது. முகம் - நுனி. பின்னிட - பின்வாங்க. (அச)

சேவ கன்றடந் தேரினை முன்னுறச் செலுத்தி
மேவ லன்கொள்பேய்த் தேரது வேனில்வாய்ப்பேய்த்தேர்
வீவ தாமென வீதரக் கணைபல தொடுத்தான்
றேவ ரார்த்தன ரரக்கரோ டினர்களெண் டிசையும்.

(இ - ள்.) சேவகன் - உக்கிரனானவன், தடம்தேரினை - தனது பெரிய தேரை, முன் உற செலுத்தி - முன்னே செல்லும்படி செலுத்திக் கொண்டுபோய், மேவலன் - பகைவனாகிய சமரகேசரி யென்பவன், கொள் - கொண்டிருக்கிற, பேய்த்தேர் அது - பேய்த்தேராகிய அது, வேனில்வாய் - வேனிற்காலத்தில், பேய்த்தேர் - பேய்த்தேரானது, வீவது ஆம் என - அழிவதுபோல, வீதர - அழியும்படி, பலகணை-அநேக பாணங்களை, தொடுத்தான் - பிரயோகித்தான், (இதைக் கண்டு) தேவர்- கள், ஆர்த்தனர் - ஆரவாரித்தார்கள், அரக்கர் - அரக்கரானவர் எண்டிசையும் - எட்டுத் திக்குகளிலும், ஓடினர்கள்-ஓடினார்கள் எ-று.

சேவகன் என்றது உக்கிரனை. பேய்த்தேர் இரண்டனுள் முன்னது பேய்பூண்ட தேரெனவும், பின்னது கானல் நீரெனவும் பொருள்படுமாறு அறிக. வீவது - அழிவது. வீதல் என்பதற்கு பகுதி வீதா. (அ௫)

தேர ழிந்தெனக் கனல்படச் சீறுபு சண்ட
மாரு தம்புகுந் தெனப்புகுந் தாளித்தேர் வாவிப்
போர்செ யுக்கிரன் றோண்மிசைத் தண்டினாற் புடைத்தான்
வீர னக்கண மரக்கனை வெட்டிமண் வீழ்த்தான்.

(இ - ள்.) தேர்-இரதமானது, அழிந்தென - அழிந்ததென்று சொல்லுதலும், கனல்பட - நெருப்பு உண்டாக, சீறுபு - சீறி, சண்டமாருதம் - பிரளயக் காற்றானது, புகுந்தென - உண்டானதுபோல, புகுந்து - வந்து, ஆளி - சிங்கங்கள் கட்டின, தேர் - தேரின்மீது, வாவி - தாவி, போர் செய் - சண்டை செய்கிற, உக்கிரன்-உக்கிரனது, தோள்மிசை - தோளின் மீது, தண்டினால் - தண்டாயுதத்தால், புடைத்தான் - அடித்தான், வீரன் - உக்கிரனானவன், அக்கணம் - அந்த க்ஷணமே, அரக்கனை - அந்த ராக்ஷசனை, வெட்டி - துணித்து, மண் - தரைமீது, வீழ்த்தான் - விழுத்தினான் எ-று.

சீறுபு செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். சண்டமாருதம்-யுக முடிவில் வீசும் பெருங்காற்று. வாவுதல் - தாவுதல். ஆளி-சிங்கம். (அ௬)

ஆய வேலையி னெரிசினந் தலைக்கொளா வழற்கட்
சீய மன்னவன் முடங்குளை மடங்கலந் திண்டேர்
காய ழற்படை யரக்கர்தந் தானையுட் கடவிப்
போய திர்த்தனன் மான்குழாத் தகவயிற் புலிபோல்.

(இ - ள்.) ஆயவேலையில் - அப்படியான காலத்தில், எரிசினம் - எரிகின்ற கோபமானது, தலைக்கொளா - தலைக்கேறி, அழல்கண் - நெருப்புப்போலும் கண்களையுடைய, சீயம் அன்னவன் - சிங்கத்தையொத்தவன், முடங்கு - வளைவாகிய, உளை - புறமயிரையுடைய, மடங்கல் - சிங்கங்கள் பூண்ட, அம் - அழகிய, திண் - வலிய, தேர் - ரதத்தை, காய் - கோபிக்கின்ற, அழல் - நெருப்புப்போன்ற, படை - ஆயுதங்களையுடைய, அரக்கர் - அரக்கரது, தானையுள் - சேனையினுள்ளே, கடவி - செலுத்திக்கொண்டு, போய் - சென்று, மான்குழாத்து அகவயின் - மான் கூட்டத்தினுள்ளே புகுந்த, புலிபோல் - புலியைப்போல, அதிர்த்தனன் - ஆரவாரித்தான் எ - று.

வேலை - சமயம். தலைக்கொளா செய்யாவென்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். இது கடவியென்னும் வினையொடு முடிந்தது. கடவல் - செலுத்தல். குழாம் - கூட்டம். அகவயின்-உள்ளிடம். ()

அதிர்த்த வவ்வொலி யாலுரு மேற்றினுக் கரவம்
பதைக்கு மாறெனை நிலத்திடைப் பற்பலர் பதைத்தார்
சிதைக்கு மூழிவெங் காலின்முற் பூளையந் திரள்போ
லெதிர்த்து நின்றவர் சிலர்திசை தொறும்பல ரிரிந்தார்.

(இ - ள்.) அதிர்த்த - ஆரவாரித்த, அ - அந்த, ஒலியால் - சத்தத்தி னல், உரும் ஏற்றினுக்கு - ஆண் இடிக்கு, அரவம் - பாம்புகள், பதைக்கு மாறு என - துடிக்கும் விதம்போல, பற்பலர் - அநேகம்பேர், நிலத்திடை - தரையின்மீது வீழ்ந்து, பதைத்தார் - துடித்தார்கள், சிதைக்கும் - எல் லாப் பொருள்களையும் அழிக்கின்ற, வெம் - கொடிய, ஊழி காலின் முன் - ஊழிக்காற்றுக் கெதிரே, அம் - அழகிய, பூளை திரள்போல் - பூளைப்பூவின் கூட்டம்போல், எதிர்த்து நின்றவர் - எற்று நின்றவர்களா கிய, சிலர் - சிலபேரும், திசைதொறும் - திக்குகள்தோறும், பலபேரும்- பலபேர்களும், இரிந்தார் - ஒடினார்கள் எ-று.

உருமேறு - ஆண் இடி. இழிதல் - ஓடுதல். (அஅ)

கலிவிருத்தம்

பாழித்திரள் புயவெற்றிசெய் படையுக்கிர வுரவோ
ஞழிப்பொலி தேரிற்செறி யாளித்திரள் காணுத்
தாழ்கைப்புகர் முகமிக்கிழி தானக்கவு ணெடுநல்
வேழக்கண மிரிவுற்றன வெருவித்திசை தோறும்.

(இ - ள்.) பாழி - பலம் பொருந்திய, திரள்- திரண்ட, புயம் - தோள் களையுடைய, வெற்றிசெய் - வெற்றியை யடைகிற, படை - சேனைகளை யுடைய, உக்கிரன் - உக்கிரனென்கின்ற, உரவோன் - மகாவீரனது, ஆழி - உருளைகளால், பொலி - பிரகாசிக்கின்ற, தேரில் - ரதத்தினில், செறி - நெருக்கமாகப் பூண்டிருக்கிற, ஆளிதிரள் - சிங்கக் கூட்டத்தை, காணு - கண்டு, தாழ் - தொங்குகின்ற, கை - துதிக்கையினையும், புகர் - புள்ளிகளையுடைய, முகம் - முகத்தையும், மிக்கு இழி - மிகுதியாக ஒழுகு கின்ற, தானம் - மதஜலத்தோடு கூடின, கவுள் - கன்னத்தையுமுடைய, நெடு - நீண்ட, நல் - சிறந்த, வேழம் கணம் - யானைக் கூட்டங்கள், வெருவி - பயந்து, திசைதோறும் - திக்குகள்தோறும், இரிவுற்றன-ஓடிப் போயின எ-று

உரவு - பலம். ஆழி - தேர்ச்சக்கரம் காணு செய்யாவென்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். இது வெருவி என்னும் வினை கொண்டு முடிந்தது. தாழ்தல் - தொங்குதல். வெருவல்-அஞ்சுதல். (அகூ)

துரகம்பல மிதிபட்டன தொடையென்புக ளொடிய
விரதம்பல சிதைபட்டன வெரிசிந்துறு கனிசா
சரரும்பலர் துகள்பட்டனர் தழல்வெம்படை யுடனே
கரடம்பொழி மதகுஞ்சர கணமோடிய வழியில்.

(இ - ள்.) பலதுரகம் - அநேகம் குதிரைகள், தொடை என்புகள் ஒடிய - தொடை வரிசையாகிய எலும்புகள் நெரியும்படி, மிதிபட்டன - மிதிபட்டு இறந்தன, பல இரதம் - அநேகம் தேர்கள், சிதைபட்டன - அழிந்தன, எரி - நெருப்பு, சிந்துறு - சிந்துகிற, கண் - கண்களையுடைய, நிசாசரர் - அரக்கர்கள், பலர் - அநேகம்பேர், துகள்பட்டனர் - பொடி பட்டார்கள், தழல் - கோபிக்கின்ற, வெம் - கொடிய, படையுடனே - சேனைகளோடு, மொழி - சிந்துகிற, கடமதம் - கன்னமதத்தையுடைய, குஞ்சரகணம் - யானைக்கூட்டங்கள், வழியில் - வழிகள்தோறும், ஓடிய - ஓடிப்போயின எ-று.

துரகம் - வடசொல். நிசாசரர் - அரக்கர்கள். இது வடசொல். இத ற்கு இராக்காலத்தில் சஞ்சரிப்பவர் என்பது பொருள். கடம் - மதம் பாய்கின்ற கதுப்பு. (௯௦)

அக்காலையொ ரடல்வேலவ னரிலுண்டவ னென்பான்
புக்கான்மல ரிறைவன்றரு புதல்வன்முனம் விரைவிற்
கைக்கார்முகம் வளைத்தேயடு கணைமாரி சொரிந்தான்
மைக்கார்கடை நாளிற்பொழி மழைபோன்மென வன்றே.

(இ - ள்.) அக்காலை - அந்தச் சமயத்தில், ஒர்-ஒரு, அடல் - வலிமிகு ந்த, வேலவன் - வேற்படையை யுடையவன், அரிலுண்டவன் என்பான்- அரிலுண்டவனென்று சொல்லப்படுவோன், மலர் இறைவன் - பிரமதேவ னுனவன், தரு - பெற்ற, புதல்வன் முனம் - மகனுக்கெதிரே, புக்கான் - வந்து, விரைவில் - சீக்கிரமாக, கை - தன் கையிலுள்ள, கார்முகம் வளை த்து - வில்லை வளைத்து, மைகார்-கரிய மேகங்கள், கடைநாளில்-யுகாந்த காலத்தில், பொழி - சொரிகிற, மழைபோன் மென - மழையை நிகர்க்கு மென்று சொல்லும்படி, அடு - (பகைவரை) கொல்லுகிற, கணைமாரி - பாணமழையை, சொரிந்தான் - பொழிந்தான் எ-று.

அன்று ஏ அசைகள். புக்கான் முற்றெச்சம். மலரிறைவன் - தாமரை மலரிலிருப்பவன் (பிரமன்.) மலரிறைவன்தரு புதல்வன் என்றது உக் கிரனை. போலும் என எனற்பாலது போன்மென வென்றாயிற்று. இது னீற்று மகரவொற்று மகரக் குறுக்கமென்று சொல்லப்படும். (௯௧)

அரவக்கழ லடலுக்கிர னவைமுற்றையு மழியா
விரைமைக்குழல் விசயத்திரு விழையப்பினம் விட்டா
னுரவுத்திரை யுவரிக்கட லுருவத்தவ னுருடேர்
துரகத்தொடு துவசத்தொடு துகள்பட்டது துணிவில்.

(இ - ள்.) அரவம் - ஒலியையுடைய, கழல் - வீரக்கழலையும், அடல்- வெற்றியையுமுடைய, உக்கிரன் - உக்கிரனுனவன், அவைமுற்றையும் - அந்தபாணங்களெல்லாவற்றையும், அழியா - அழித்து, விரை-மணமுள்ள,

மை - கறுத்த, குழல் - கூந்தலையுடைய, விசயத்திரு - விஜயலக்ஷ்மி, விழை - விரும்புகிற, அம்பு இனம் - பாணத்தொகுதியை, விட்டான் - எவினன், (எவுதலும்) உரவுதிரை - வலிய அலைகளையுடைய, உவரிகடல் - உப்புக்கடலின், உருவத்தவன் - உருவத்தையுடையவனாகிய அரக்கனது, உருள் - சக்கரங்களையுடைய, தேர் - தேரானது, துரகத்தொடு - குதிரைகளோடும், துவசத்தொடு - கொடிகளோடும், துனைவில் - விரைவில், துகள்பட்டது - பொடிபட்டது எ-று.

அரவம் - ரவம் என்னும் வடசொற்றிரிபு. கழல் - வீரகண்டை. அழியா-செய்யாவென்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். இது விட்டான் என்னும் வினைகொண்டு முடிந்தது. துரகம் - வடசொற்றிரிபு. குதிரையென்பது பொருள். துவசம் த்வஜம் என்னும் வடசொற்றிரிபு. துனைவு - விரைவு. (கஉ)

தேரிற்றலு மவன்மற்றொரு தேர்புக்கொரு கோடி
வார்வைத்தலை யம்புக்கிரன் வையத்தரி பலவுஞ்
சோரக்கடி தெய்தானுறு தூவற்கணை பலதூய்த்
தார்மற்புய னம்போடுயர் சாபத்தை யொடித்தான்.

(இ - ள்.) தேர் இற்றலும் - தேரழிந்தவுடன், அவன் - அந்த அரக்கன், மற்றொரு தேர்புக்கு-வேறொரு தேர்மேற் பாய்ந்தேறி, ஒருகோடி- ஒருகோடி யெண்ணுள்ள, வார் - நீண்ட, வை - கூர்மையாகிய, தலை - நுனியையுடைய, அம்பு - கணைகளை, உக்கிரன் - உக்கிரனது, வையத்து - தேரிற்பூண்ட, அரிபலவும் - சிங்கங்களெல்லாமும், சோர - அழிய, கடிது எய்தான் - விரைவாகப் பிரயோகித்தான், (அன்றியும்) உறுதூவல் - மிகுந்த மழைத்தூறல்போன்ற, பல கணைதூய் - அநேக பாணங்களைச் சொரிந்து, தார் - மாலையணிந்த, மல் - மற்போர்க்குரிய, புயன் - தோள்களையுடையவனது, அம்போடு - பாணங்களோடு, உயர் - சிறந்த, சாபத்தை - வில்லையும், ஒடித்தான் - அறுத்தான் எ-று.

வையம் - தேர். அரி - சிங்கம். தூய் தூவியென்பதன் விகாரம். தார் - போர்வீரர் அணியும் தும்பைமலர்மாலை முதலியன. சாபம் - வடசொற்றிரிபு. வில்லென்பது பொருள். (கங)

சிலையிற்றலு மவன்மிக்கெழு சீற்றத்தின னாகிக்
கொலையிற்கொடுங் கூற்றன்னதொர் கூர்வாட்படை கொண்டு
நிலனுற்றெதிர் வரவுக்கிர னெடுந்தேர்விடுத் தெரிகால்
புலவுச்சுடர் வாள்கொண்டெதிர் புலிப்போத்தெனப் புகுந்தான்.

(இ - ள்.) சிலை - வில்லானது, இற்றலும் - ஒடிதலும், அவன் - அந்த அரக்கன், மிகு - மிகுந்த, சீற்றத்தினன் ஆகி - கோபத்தையுடையவனாகி,

கொலையில் - கொல்லுந்தொழிலில், கொடு - கொடிய, கூற்று அன்னது - யமனை நிகர்த்ததாகிய, ஓர் - ஒரு, கூர் - கூர்மையாகிய, வாள்படைகொண்டு-வாளாயுதத்தோடு, நிலன் உற்று - தரையிற் குதித்து, எதிர் வர - எதிரே வர, உக்கிரன் - உக்கிரனனவன், நெடுதேர் விடுத்து - தனது நீண்ட தேரைவிட்டிறங்கி, எரிகால் - நெருப்பை யுமிழ்கின்ற, புலவு - (பகைவரது) மாமிசமொட்டின, சுடர் - பிரகாசிக்கிற, வாள்கொண்டு - வாட்படையினுல், எதிர் - அவனுக்கெதிரில், புலிப்போத்து என - ஆண் புலிபோல, புகுந்தான் - பிரவேசித்தான் எ-று.

சீற்றம் - கோவம். இதற்குப் பகுதி சீறு. கொண்டு இரண்டும் மூன்றுவதன் சொல்லுருபுகள். புலவு - புலால்நாற்றம் எனினுமாம். (கச)

மேற்படி வேறு

பலகைதிண் டோளொலி படப்பு டைத்தன
ரிலகுமின் வாள்விதிர்த் திருவர் வீரரும்
வலிகெழு மிறுதிநாள் வளியிற் கொட்புறு
மலையின்வட் டணைமுறை வருதன் மேயினர்.

(இ - ள்.) பல - அநேகமாகிய, கை-கைகளால், திண்-பலம்பொருந்தின, தோள் - புயங்களில், ஒலிபட - சத்தமுண்டாக, புடைத்தனர்-தட்டிக்கொண்டு, இலகு - விளங்குகிற, மின் - மின்போன்ற, வாள் - வாட்படைகளை, விதிர்த்து - அசைத்து, இருவர் வீரரும்-இரண்டு வீரர்களும், வலிகெழும் - பலம்பொருந்திய, இறுதிநாள்-யுகாந்தத்தில் வீசுகிற, வளியின் - சண்டமாருதம்போல, கொட்பு உறு - சுழலுகிற, மலையின் - மலைகள்போல, முறை - முறையாக, வட்டணைவருதல் மேயினர் - சாரிவருதலைத் தொடங்கினர்கள் எ-று.

புடைத்தல் - தட்டுதல். விதிர்த்தல் - அசைத்தல். வளி-காற்று. அது இறுதிநாள் என்னும் விசேடணத்தால் சண்டமாருதத்தைக் குறித்தது. சண்டமாருதம் வடசொல். இதற்கு கடுவேகமுள்ள யுகாந்தக் காற்று எனப் பொருளுரைப்பர் வடநூலார். வட்டணைவருதல்-சுழன்று வருதல்.

உறுவலிப் பலகையு ளுருவொ டுங்கிநின்
றெறிபடை தடுத்தெதி ரெறிவர் சூள்பல
வறைகுவ ருருமென வதிர்ப்பர் தம்முளே
முறைமுறை வியப்பர்கண் முடிவி லாற்றலார்.

(இ - ள்.) முடிவு இல் - முடிவற்ற, ஆற்றலார் - வல்லமையுடையவராகிய இருவரும், உறுவலி - மிகுந்த வலிமையுள்ள, பலகையுள் - கேடகத்தினுள்ளே, உரு ஒடுங்கி நின்று - தமதுருவங்கள் மறையநின்று, எறி - ஒருவர்மேலொருவர் எறிகிற, படை - ஆயுதங்களை, தடுத்து - மறி

த்து, எதிர் எறிவர் - எதிரெறிவார்கள், பலசூள் அறைகுவர் - பல சபதங்கள் கூறுவார்கள், உரும் என அதிர்ப்பர் - இடியைப்போல முழங்குவார்கள், தம்முள்ளே - தமக்குள்ளே, முறைமுறை - க்ரமக்ரமமாக, வியப்பார்கள் - தம்மைத் தாமே மெச்சிக்கொள்வார்கள் எ-று.

ஒடுங்கி எச்சத்திரிபு. அதிர்த்தல்-முழங்குதல். வியத்தல்-மெச்சுதல்.

இன்னணம் பொலங்கழ லிலங்கு வேற்படைத்
தன்னிகர் சாமியுந் தகுவர் வேந்தனு
மென்னவா ளடுசம ரியற்றி னாரரோ
மின்னுவாள் போழ்ந்தபுண் மிடைந்த மெய்யினார்.

(இ - ள்.) மின்னு - மின்னுகிற, வாள் - வாளாயுதத்தால், போழ்ந்த-பிளக்கப்பட்ட, புண் - புண்கள், மிடைந்த-நெருங்கின, மெய்யினார்-உடம்பையுடையவர்களாகிய இரண்டு வீரர்களும், இன்னணம் - இவ்விதமாக, பொலம்கழல் - பொற்கழலையும், இலங்கு - விளங்குகிற, வேல்படை - வேலாயுதத்தையுமுடைய, தன்நிகர் - தனக்குத்தானே நிகர்க்கிற, சாமியும் - முருகக்கடவுளும், தகுவர் வேந்தனும் - அசுரராஜனாகிய சூரபன்மனும், என்ன - போல, அடு - கொல்லுதற்குரிய, வாள்சமர் இயற்றினார்-வாட்போர் செய்தார்கள் எ-று.

அரோ - அசை. இன்னவண்ணம் என்பாலது இன்னணம் என விகாரமாயிற்று. பொலம் - பொன். சாமி - முருகவேளுக்கோர் சிறப்புத் திருநாமம். இது பூங்கோதை பங்கற்கு ஓங்காரப்பொருளுபதேசித்ததனால் வந்தது. தகுவர் - அசுரர். (கஎ)

ஒருவரி னொருவர்மிக் குடற்றும் போர்வயி
னெரிசினந் தலைக்கொளீஇ யிலங்கு வாளினாற்
கரியவன் செய்யவன் கையிற் கேடக
மிருதுணி படுத்தினா னேங்க விண்ணுளோர்.

(இ - ள்.) ஒருவரின் ஒருவர்-ஒருவரோடொருவர், மிக்கு உடற்றும்-மிகுதியாகச்செய்கிற, போர்வயின் - சண்டையில், எரிசினம் - எரிகிற கோபமானது, தலைக்கொளீஇ - அதிகரித்து, இலங்கு - பிரகாசிக்கிற, வாளினால் - வாளாயுதத்தால், கரியவன் - கருநிறத்தை யுடையவனாகிய அரக்கன், செய்யவன்-செந்நிறத்தையுடையவனாகிய உக்கிரனது, கையில்-கையிலுள்ள, கேடகம் - கேடகத்தை, விண்ணுளோர்-விண்ணுலகத்திலுள்ள தேவர்கள், ஏங்க - ஏக்கங்கொள்ள, இருதுணிபடுத்தினான் - இரண்டு துணிக்கை செய்தான் எ-று.

உடற்றல் - செய்தல். வயின் ஏழனுருபு. கொளீஇ சொல்லிசை யளபெடை. ஏங்க இரங்கவெனினுமாம். துணிபடுத்தினான் ஒரு சொன்னீரது. (கஅ)

அக்கணத் தூழிநா ளனலிற் சீறின
னுக்கிரன் வெய்யவ னுடல மெம்பிரான்
மிக்கொளிர் வேலினால் வெற்புப் போழ்ந்தெனக்
கைக்கதிர் வாளினாற் கடிது போழ்ந்திட்டான்.

(இ - ள்.) அக்கணத்து - அந்த க்ஷணத்தில், ஊழிநாள் - உகாந்த காலத்தில் தோன்றுகிற, அனலின் - நெருப்புப்போல, சீறினன்-கோபித்தனன், உக்கிரன்-உக்கிரனாகிய, எம்பிரான் - எம்பெருமான், வெய்யவன்-கொடியவனாகிய அந்த அரக்கனது, உடலம் - சரீரத்தை, மிக்கு ஒளிர்-மிக்கு விளங்குகின்ற, வேலினால் - வேலாயுதத்தினால், வெற்பு - மலையை, போழ்ந்தென - பிளந்தாற்போல, கை - தன் கையிலுள்ள, கதிர்-ஒளியையுடைய, வாளினால் - வாளாயுதத்தினால், கடிது-விரைவாக, போழ்ந்திட்டான் - பிளந்துவிட்டான் எ-று.

அனலின் என்பதில் இன் ஐந்தாவதன் ஒப்புப் பொருளது. வெய்யவன் வெம்மைப் பண்படியாகப் பிறந்த பெயர். போழ்தல் - பிளத்தல். பகுதி போழ். போழ்ந்திட்டான் என்பதில் இடு துணிவுப் பொருண்மை விகுதி. (கக)

போழ்ந்தவவ் வேலையிற் புலவர் பூமழை
வீழ்ந்தது நிசிசர வெள்ள மோடிற்றுற்
றாழ்ந்தன ராயினுந் தானை காவலர்
சூழ்ந்ததம் மானத்தாற் றொக்கு முன்னின்றார்.

(இ - ள்.) போழ்ந்த-பிளந்த, அவ்வேலையில்-அந்தச் சமயத்தில், புலவர் - தேவர்கள் பெய்த, பூமழை - மலர்மழையானது, வீழ்ந்தது - விழுந்தது, நிசிசரவெள்ளம் - அரக்கருடைய சேனைப்பெருக்கானது, ஓடிற்று - ஒழுகிற்று, தாழ்ந்தனர் ஆயினும் - இழிந்தவர் ஆனாலும், தானை காவலர்-சேனைக் காவலர்கள், சூழ்ந்த - தம்மைத் தொடர்ந்த, தம் மானத்தால் - தமது வெட்கத்தினால், தொக்கு-ஒன்றாகக்கூடி, முன் நின்றார் - எதிரே வந்து நின்றார்கள் எ-று.

வேலை - சமயம். நிசிசரர் வடசொல். இதற்கு இராக்காலத்தில் சஞ்சரிப்பவர் என்பது பொருள். மழை வீழ்ச்சியால் வெள்ளமோடல் இயல்பென்பது தோன்ற, மழை வீழ்ந்தது வெள்ளமோடிற்று என்றார். ஆல் அசை. மானம் - வெட்கம். தொகுதல் - கூடுதல். பகுதி தொகு. இப்பகுதியொற் றிரட்டித்து இறந்தகாலங் காட்டிற்று. காவலர் நின்றார் என வினையும். (௩00)

நிற்றலு முக்கிர னிருதர் தங்குல
மிற்றிட முடித்துமென் றெண்ணித் தந்தைபாற்
பெற்றவத் திரத்தினைப் பேணி விட்டனன்
மற்றதவ் வரக்கரை வதைத்தன் மேயிற்றே.

(இ - ள்.) நிற்றலும் நின்றவுடன், உக்கிரன்-உக்கிரனென்பவன், நிருதர் குலம்-ராக்ஷஸ சந்ததியானது, இற்றிட-அற்றுப்போக, முடித்துமென்று-முடிப்போமென்று, எண்ணி - நினைத்து, தந்தைபால் - தந்தையினிடத்தில், பெற்ற - பெற்றுக்கொண்ட, அ - அந்த, அத்திரத்தினை - பாணத்தை, பேணி-விரும்பி, விட்டனன் - விடுத்தனன், அது - அந்தக் கணையானது, அ அரக்கரை - அந்த ராக்ஷஸரை, வதைத்தல்மேயிற்று - கொல்லத் தொடங்கிற்று எ-று.

இற்றிட என்பதற்குப் பகுதி இறு. அத்திரம் அஸ்த்ரம் என்னும் வடசொற்றிரிபு. மற்று - அசை. வதைத்தல் என்பதற்குப் பகுதி வதை. ()

கலித்துறை

வேக வெய்யவன் கடுங்கதிர் விரித்தலிற் பசுமை
போகு நீளரில் வனத்திடைக் காட்டெரி புகுந்தாங்
காக வம்புரி யரக்கருட் புகுந்தடர்த் தன்றே
வாகை யம்புயத் துக்கிரன் விடுபடை வடவை.

(இ - ள்.) வாகை - வாகைமலர்மாலையைச் சூடின, அம் - அழகிய, புயத்து - தோள்களையுடைய, உக்கிரன் - உக்கிரனென்பவன், விடு - விட்ட, படை-ஆயுதமாகிய, வடவை - வடவைத்தீயானது, வேகம் - வேகத்தையுடைய, வெய்யவன் - சூரியன், கடுங்கதிர் - தன் கடுமையாகிய கிரணங்களை, விரித்தலின் - பரப்புதலால், பசுமைபோகும் - ஈரம் வற்றின, நீள் அரில் - பெருந்துன்பத்தைச் செய்கிற, வனத்திடை - காட்டினிடத்தில், காட்டு எரி புகுந்தாங்கு - காட்டுநெருப்புப் பிரவேசித்தாற்போல, ஆகவம்புரி - போர் செய்கிற, அரக்கருள் புகுந்து - அசுரரிடையே பிரவேசித்து, அடர்த்தன்று -(அவர்களை) கொன்றது எ-று.

வாகை - இருமடியாகு பெயர். அம் - அழகு. இவ்விரண்டனுள் முன்னையது செயற்கையாகிய வீரத்தையும் பின்னையது இயற்கையையும் குறித்தன. புயம் புஜம் என்னும் வடசொற்றிரிபு. விடுபடை - வினைத்தொகை நிலைத்தொடர். படை - படுத்தற்குரியது. படுத்தல் - கொல்லுதல். வெய்யவன் - வெம்மைப் பண்படியாகப் பிறந்த பெயர். விரித்தலின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றாவதன் கருவிப்பொருளில் வந்தது. பசுமை ஈண்டைக்கேற்ப ஈரத்தைக் குறித்தது. அரில் - குற்றம். அது இங்குத் துன்பத்தைக் குறித்தது. (௪0௨)

எரிகள் பட்டன கண்ணவர் பட்டன ரீர்க்கும்
பரிகள் பட்டன வலவர்கள் பட்டனர் பஃறேர்க்
கிரிகள் பட்டன புகர்முகக் கிம்புரிக் கோட்டுக்
கரிகள் பட்டன பட்டன கொய்யுளைக் கடுமா.

(இ - ள்.) எரிகள்பட்ட அன்ன - நெருப்புண்டாயிருத்தல் போன்ற, கண்ணவர் - கண்களையுடைய அரக்கர், பட்டனர் - இறந்தார்கள், ஈர்க்கும் - தேர்களை யிழுத்துக்கொண்டு போகிற, பரிகள் - குதிரைகள், பட்டன - இறந்தன, வலவர்கள் - தேர்ப்பாகர்கள், பட்டனர் - இறந்தார்கள், பல்தேர் - பல தேர்களாகிய, கிரிகள் - மலைகள், பட்டன-பிளந்தன, புகர் முகம் - புள்ளிகளையுடைய முகத்தையும், கிம்புரிகோடு - கிம்புரி யணிந்த தந்தங்களையுமுடைய, கரிகள் - யானைகள், பட்டன - இறந்தன, கொய் உளை - கொய்த புறமயிரையுடைய, கடுமா - சிங்கங்கள், பட்டன - இறந்தன எ-று.

எரிகள் பட்டன கண்ணவர் என்றதனால் அரக்கர் கண்களில் கோவமிகுதியால் நெருப்புப் பொரிகள் சிந்திக்கொண்டே யிருக்குமென்று குறிப்பித்தவாறாயிற்று. ஈர்த்தல் - இழுத்தல் பகுதி - ஈர். தேர்க்கிரிகள் பண்புத்தொகை நிலைத்தொடர். கிம்புரி - யானைக்கொம்பிற் கட்டும் பூண். கோடு-கொம்பு. இது தொழிலாகுபெயர். கரி-கரத்தையுடையது. கரம் - கை. அது ஈண்டைக்கேற்பத் துதிக்கையைக் குறித்தது.

வேல்க ளிற்றன தோமர மிற்றன வில்லின்
கால்க ளிற்றன நாண்களு மிற்றன கடிய
கோல்க ளிற்றன தூணிக ளிற்றனகைக் கொண்ட
தோல்க ளிற்றன விற்றன கவசத்தின் றொடர்பே.

(இ - ள்.) வேல்கள் - வேற்படைகள், இற்றன - ஒடிந்தன, தோமரம் - தோமரங்கள், இற்றன - ஒடிந்தன, வில்லின் கால்கள் - விற்கொனைகள், இற்றன - ஒடிந்தன, நாண்களும் - நாரிகளும், இற்றன - அற்றுப் போயின, கடிய - கடுமையுள்ள, கோல்கள் - அம்புகள், இற்றன - முறிந்தன, தூணிகள் - அம்பறாத் தூணிகள், இற்றன - அழிந்தன, கைக்கொண்ட - கைப்பற்றின, தோல்கள் - கேடகங்கள், இற்றன - அற்றுப்போயின, கவசத்தின் தொடர்பு - கவசங்களின் பற்று, இற்றன - அற்றுப் போயின எ-று.

தோமரம் - ஓர்வகை யாயுதம். கால் - நுனி. தூணி யென்பதனை தூணீரம் என்பர் வடநூலார். தோலினாற் செய்யப்படுவதாதலால் கேடகத்தைத் தோலென்றே கூறினர். இதனைப் பரிசையென்றுங் கூறுவர்.()

கரந்து ணிந்தன வெறுழ்வலித் தோளெனுங் கணைய
மரந்து ணிந்தன குறங்குக டுணிந்தன மலர்வேய்
சிரந்து ணிந்தன வடியிணை துணிந்தன தேந்தா
ருரந்து ணிந்தன துணிந்தன வுறுப்பெலா மொருங்கே.

(இ - ள்.) கரம்துணிந்தன - கைகள் அறுபட்டன, எறுழ்வலி-மிக்க வலியுள்ள, தோள் என்னும் - புயங்களென்கிற, கணைய - கணுக்களை

யுடைய, மரம் துணிந்தன - மரம் அறுபட்டன, குறங்குகள் துணிந்தன- தொடைகள் அறுபட்டன, மலர்வேய் - புட்பமணிந்த, சிரம் துணிந்தன- தலைகள் அறுபட்டன, அடி இணை துணிந்தன-இரண்டு கால்கள் அறுபட்டன, தேம்தார் - மணமாலை யணிந்த, உரம் துணிந்தன-மார்புகள் அறுபட்டன, உறுப்பு எல்லாம் - மற்ற அவயவங்கள் யாவும், ஒருங்கே துணிந்தன - ஒருமிக்க அறுபட்டன எ - று.

கணைய என்பதை கண் நைய எனப் பிரித்துக் கணுக்கள்நையவெனினுமாம். தேம்தார் என்பதற்கு தேன் சிந்துகிற புஷ்பமாலிகை யென்றலுமொன்று. கரம் சிரம் உரம் என்பன வடசொற்கள். (௧0௫)

அரணை மூன்றையுஞ் செஞ்சடைக் கருமிடற் றண்ண
லெரிகொ ளுத்தியோர் கணத்தினி லழித்தவா றென்ன
முரண ரக்கர்தம் படையெலா நொடிவரை முடித்துப்
பரவு நல்லிசை யுக்கிரற் சேர்ந்ததப் படையே.

(இ - ள்.) செஞ்சடை - செவந்த சடாபாரத்தையும், கருமிடறு - கருங்கண்டத்தையுமுடைய, அண்ணல்-சிவபெருமான், அரணம் மூன்றையும் - மும்மதில்களையும், எரிகொளுத்தி - நெருப்பு மூட்டி, ஓர் கணத்தினில் - ஒரு க்ஷணிககாலத்தில், அழித்தவாறு என்ன - அழித்த விதம் போல, முரண் - மாறுபாடுள்ள, அரக்கர் - அரக்கருடைய, படையெல்லாம் - சேனைகளையெல்லாம், நொடிவரை-நொடிப்பொழுதில், முடித்து- அழித்து, அப்படை - அந்த அஸ்திரமானது, பரவும் - யாவரும் புகழ்தற்குரிய, நல் இசை - நல்ல புகழையுடைய, உக்கிரன் சேர்ந்தது-உக்கிரனை யடைந்தது எ - று.

அரணமூன்று என்றது திரிபுரங்களை. இவை மூன்றும் பொன்னினும் வெள்ளியினும் இரும்பினும் மதிலுருவாக அமைக்கப்பட்டிருப்பன. இவை ஆகாசமார்க்கமாகச் சஞ்சரித்தற் குரியவாதலால் இவற்றை ஜங்கம பட்டணம் என்பர் வடநூலார். "இரும்புறு மாமதில் பொன்னிஞ்சி வெள்ளிப் புரிசையன்றோர், துரும்புறச் செற்ற கொற்றத் தெம்பிரான்" என்றார் மணிவாசகரும். அரணம் - மதில். செஞ்சடை கருமிடறு முரண் தொடை. (௧0௬)

ஓடி னார்சிலர் திசைதொறு முக்கிரன் புகழைப்
பாடி னார்சிலர் குதித்தல்செய் தார்சிலர் பல்கா
லாடி னார்சிலர் விண்ணவ ரரும்பெறன் முத்தி
கூடி னாரென வுவகையங் கடல்வயிற் குளித்தார்.

(இ - ள்.) சிலர் - சிலபேர், திசைதொறும் ஓடினார் - திக்குகள் தோறும் ஓடினார்கள், சிலர் - சிலபேர், உக்கிரன் புகழை - உக்கிரனது கீர்த்தியை, பாடினார் - பாடினார்கள், சிலர் - சிலபேர், குதித்தல் செய்தார் -

குதித்தார்கள், சிலர் - சிலபேர், பல்கால் - பலதரம், ஆடினூர் - கூத்தாடினூர்கள், விண்ணவர் - தேவர்கள், பெறல் அரு - பெறுதற் கரிதாகிய, முத்தி - மோக்ஷத்தை, கூடினூர் என - அடைந்தவர்போல, அம் - அழகாகிய, உவகைகடல் வயின் - களிப்பாகிய கடலினிடத்து, குளித்தார் - மூழ்கினூர்கள் எ - று.

குதித்தல் செய்தார் - ஒருசொன்னீரது. கடல் வயின் என்பதில் வயின் ஏழனுருபு. (௧0எ)

சைய மன்னதோ ளுக்கிரன் சயமக ளிருப்பச்
செய்ய கம்பலம் விரித்தெனச் செம்புன னீத்தம்
வைய மெங்கணும் பரந்துபோய்ப் புகுந்தது மடி
மைய தெண்டிரைக் கருங்கடல் செங்கட லாக.

(இ - ள்.) சையம் அன்ன - மலைபோன்ற, தோள்-புயங்களையுடைய, உக்கிரன் - உக்கிரனானவன், சயமகள் - விஜயலக்ஷ்மியானவள், இருப்ப - வீற்றிருத்தற்பொருட்டு, செய்யகம்பலம்-செங்கம்பளத்தை, விரித்தென-விரித்து வைத்தாற்போல, செம்புனல் நீத்தம் - உதிரப்பெருக்கானது, வையம் எங்கணும் - உலகமெங்கும், பரந்துபோய் - பரவிச்சென்று, மடியும் - மடங்குகிற, ஐய - அழகாகிய, தெள்திரை-தெளிவாகிய அலைகளையுடைய, கருங்கடல் - கருங்கடலானது, செங்கடல் ஆக - சோணசமுத்ரமாகும்படி, புகுந்தது - பிரவேசித்தது எ - று.

தம்மிடத்து வந்தோரை ஆசநமுதலிய தந்து உபசரித்தாலன்றி, வந்தவர் நீங்கிப்போவது உலகியலாதலால், அதை யெண்ணி உக்கிரன் தன்னிடத்துவந்த சயமகள் தன்னைவிட்டு நீங்காதிருக்குமாறு அவட்கு ஆசநமுதலிய தந்து உபசரித்தானென்றற்கு 'உக்கிரன் சயமக ளிருப்பச் செய்ய கம்பலம் விரித்தென' என்றார். பரந்து என்பதற்குப் பகுதி பர. ஐ-அழகு. திரை முதனிலைத் தொழிலாகுபெயர். கருங்கடல் செங்கடல் என்றது முரண்டொடை. (௧0அ)

கலிவிருத்தம்

இதுவும் வரும்பாட்டும் குளகம்

பேயி னங்கள் குழுமிப் பிணக்குவா
றீய தம்பசி தீரிய வுண்ணுவான்
மாயி ருங்களிற் றின்குழை வார்செவி
மேய பேரிலை யாகவி ரித்தரோ.

(இ - ள்.) பேய் இனங்கள் - பேய்க்கூட்டங்கள், குழுமி - ஒன்றாகக் கூடி, பிணக்குவால் - சவக்கூட்டத்தை, தம் - தமது, தீயபசி - கொடிய பசியானது, தீரிய - ஒழிய, உண்ணுவான்-புசிக்கும் பொருட்டு, மா இரு - மிகப் பெரிய, களிற்றின் - யானையின், குழை - தழைத்த, வார்-நீண்ட, செவி - காதுகளை, மேய - தகுதியாகிய, பேர் இலையாக விரித்து-பெரிய இலையாய் விரித்து எ - று.

அரோ - அசை. குழுமி யென்பதற்குப் பகுதி குழுமு. தீரிய - செய்யியவென்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம். இது உண் என்னும் வினைப் பகுதியோடு முடிந்தது. உண்ணுவான் என்பது வான் என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம். இது விரித்து என்னும் வினைகொண்டு முடிந்தது. இவ்வெச்சம்வரும் பாட்டிலுள்ள இட்டுண்ட வென்னும் வினைகொண்டு முடிந்தது. மாயிரு இரட்டைக்கிளவி. வரும்பாட்டிற் கூறப்பட்டிருக்கிற குடர் முதலியவை யடங்குதற்குரிமைதோன்ற, குழைவார் செவிமேய பேரிலையாக விரித்து என்றார். குளகம் பலபாட்டொருவினைகொண்டு முடிவது. (௧0௯)

குடரி னோடு கொழுந்தசை வல்சியா
வடரு மூளையு மீருளு மாதிய
விடுசு வைக்கறி யாமிக விட்டரோ
கடிது நெஞ்சங் களித்துட னுண்டவே.

(இ - ள்.) குடரினோடு - குடருடன், கொழுந்தசை - கொழுவிய மாமிசம், வல்சியா - சோறாகவும், அடரும் - நெருங்கியிருக்கிற, மூளையும் ஈருளும் ஆதிய - மூளையும் ஈரலுமுதலியவை, இடுசுவைக்கறியா - சுவையிட்டுச் சமைத்த கறிவகைகளாக, மிக இட்டு - மிகுதியாய்ப் படைத்துக்கொண்டு, கடிது - விரைவாக, நெஞ்சம் களித்து - மனமகிழ்ந்து, உடன் உண்ட - ஒன்றோடொன்று கூடியிருந்து புசித்தன எ - று.

கொழுந்தசை யென்றது கொழுத்த மாமிசத்தை. வல்சி - சோறு. சுவையென்றது அறுசுவைகளை. அவை-உப்பு, புளிப்பு, கார்ப்பு, துவர்ப்பு, இனிப்பு, கசப்பு என்பன. களித்துண்டற்குக் காரணம் கொழுந்தசை வல்சி முதலிய நல்லுணவைத் தம்மினத்தோடு கூடியுண்டல். கடிதுண்டற்குக் காரணம் காகமுதலியன வந்து கவர்ந்து கொடுபோமென்னும் அச்சம். (௧௧0)

வெள்ளெ லும்பும் விரல்களும் வற்றலா
வுள்ளு வந்து கறிப்பவு மொண்ணிண
மள்ளி யள்ளி யகடுநி றைப்பவு
மெள்ளி யூன்களை யீருள்க டின்பவும்.

(இ-ள்.) வெள் எலும்பும் விரல்களும்-வெண்மையாகிய எலும்புகளும் விரல்களும், வற்றல் ஆ - வற்றலாகவும், உள் உவந்து - மனமகிழ்ந்து, கறிப்பவும் - கடிப்பனவும், ஒள்நிணம் - ஒள்ளிய நிணத்தை, அள்ளி அள்ளி - மொண்டு மொண்டு, அகடு நிறைப்பவும் - வயிற்றை நிறைத்துக் கொள்வனவும், ஊன்களை எள்ளி-மாமிசவகைகளை வெறுத்து, ஈருள்கள் தின்பவும் - ஈரல்களை யுண்பனவும் எ - று.

வற்றல் தொழிலாகு பெயர். உள் இடவாகு பெயர். உவந்து என்பதற்குப் பகுதி உவ. கறித்தல் - கடித்தல். எள்ளல் - இகழ்தல். அது இங்கு வெறுத்தற் பொருள் தந்து நின்றது. (௧௧௧)

பிள்ளை காண்மேற் பெறலரி தின்னவூண்
மெள்ள மெள்ள வருந்தி விலாப்புடை
கொள்ள வுண்மின் குடிமின் குருதிநீர்
தள்ளன் மின்னெனச் சாற்றுதல் செய்பவும்.

(இ - ள்) பிள்ளைகாள் - மக்களே, மேல் - இனி, இன்ன ஊண் - இது போன்ற மாமிசம், பெறல் அரிது-பெறுதல் அரிதாகும். (ஆதலால்) மெள்ள மெள்ள - மெல்ல மெல்ல, வருந்தி - கஷ்டப்பட்டு, விலா - விலா வெலும்புகள், புடைகொள்ள - புடைக்க, உண்மின் - புசியுங்கள், குருதி நீர் குடிமின் - உதிர நீரைப் பருகுங்கள், தள்ளல்மின் என - எம் வார்த்தையைத் தள்ளாதேயுங்கள் என்று, சாற்றுதல் செய்பவும் - சொல்லுவனவும் எ-று.

பிள்ளைகாள் அண்மைவிளி. ஊண் முதனிலைதிரிந்த தொழிலாகு பெயர். மெள்ள மெள்ள வென்றது அவசரப்படாமல் என்றபடி. புடைகொள்ள வென்றது ஒரு சொன்னீரதாய் புடைக்கவெனப் பொருள்பட்டு நின்றது. சாற்றுதல் செய்ப என்பதும் அது (கக௨)

மெய் யெலாம்வயி றாக்கி விரிகடல்
வெய்ய தீயின் மிகும்பசி வைத்துணல்
செய்ய வாய்பல செய்யா தொழிந்தவவ்
வைய மாமரை யையனை வைபவும்.

(இ - ள்.) மெய் எல்லாம் - உடம்பு முழுதும், வயிறு ஆக்கி - வயிறாகச்செய்து, விரிகடல்-பரந்த கடல்நடுவே யமைக்கப்பட்டிருக்கிற, வெய்யதீயின் - கொடிய நெருப்பினும், மிகும்பசிவைத்து - மிக்க பசியையுண்டாக்கி, உண்ணல் செய்ய - உண்ணுதற்கு, செய்யவாய்பல - செவந்த பல வாய்களை, செய்யாது ஒழிந்த - உண்டாக்கி வைக்காத, அ - அந்த, ஐய - அழகாகிய, மா - பெருமைபொருந்திய, மரை - தாமரை மலரில் வசிக்கிற, ஐயனை - பிரமனை, வைபவும் - ஏசுவனவும் எ-று.

பொய்யாய் அழியும் உடம்பை மெய்யென்றது மங்கலவழக்கு. தீயின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது உறழ்பொருளில் வந்தது. உண்ணல் செய்ய என்பது ஒருசொல் நீர்மைத்து. தாமரையை மரை யென்றது முதற்குறை. ஐயன் - இறைவன். (கக௩)

நின்ற ழற்றுநந் நீள்பசி நீக்குமூண்
குன்ற டர்த்த குருதிவேற் சாமியா
லன்று பெற்ற மதன்பினிவ் வண்ணலா
லின்று பெற்றன மிவ்வுழி யென்பவும்.

(இ - ள்.) நின்று - நிலைபெற்று, அழற்றும்-வருத்துகின்ற, நம்-நமது, நீள்பசி - பெரும்பசியை, நீக்கும் - ஒழித்தற்குரிய, ஊண் - உணவை, குன்று அடர்த்த - கிரவுஞ்சமலையை அடக்கின, குருதி - உதிரம் தோய்

ந்த, வேல் - வேலாயுதத்தையுடைய, சாமியால் - முருகக்கடவுளால், அன்று - அக்காலத்தில், பெற்றம் - பெற்றனம், அதன்பின் - அதன் பிறகு, இ - இந்த, அண்ணலால் - பெரியோனால், இன்று - இந்நாளில், இவ்வுழி - இவ்விடத்தில், பெற்றனம் - பெற்றோம், என்பவும் - என்று சொல்லுவனவும் எ-று.

சாமியென்றது முருகக்கடவுளுக்கோர் திருநாமம். பெற்றனம் என்பது பெற்றம் என அன்குறைந்து நின்றது. உழி ஏழனுருபு இடப் பொருட்டு. (கக௪)

பச்சை போய பதலையுட் பெய்துமுன்
வைச்ச செம்புனல் வாய்மடுத் துண்பவு
முச்சி மட்டு நிறைந்திட வுண்டபி
னெச்சி லோரிக் கெறிபவு மாயவே.

(இ - ள்.) பச்சை போய - உலர்ந்த, பதலையுள்-பானையில், பெய்து - வார்த்து, முன் - முன்னே, வைச்ச - வைத்த, செம்புனல் - குருதி நீரை, வாய்மடுத்து உண்பவும் - வாய்வைத்து குடிப்பனவும், உச்சிமட்டும் நிறைந் திட - சிரத்தளவும் நிறைய, உண்டபின் - உண்டபிறகு, எச்சில் - தமது மிச்சிலை, ஓரிக்கு-நரிகளுக்கு, எறிபவும் ஆய-எறிகின்றனவும் ஆயின எ-று.

பச்சை - ஈரம். பதலை - பாத்திரம். பெய்தல் - வார்த்தல். வைத்த என்பது வைச்ச எனப் போலியாயிற்று. செம்புனல் - செந்நீர் (உதிரம்.) ஓரி - நரி. (கக௫)

மேற்படி வேறு

ஆடுஞ்சில சுழலுஞ்சில வடலுக்கிர வீரற்
பாடுஞ்சில பணியுஞ்சில பரவைக்கள மெங்கு
மோடுஞ்சில வுகளுஞ்சில வுடலந்தொடர் குடரான்
மூடுஞ்சில கனல்வெம்பசி முழுதுங்களை கணமே.

(இ - ள்.) கனல் - நெருப்புப்போன்ற, வெம்பசி - கொடிய பசிமுழு தும், களை - ஒழித்துவிட்ட, கணம் - பிசாசங்களில், சில - சிலபேய்கள், ஆடும் - கூத்தாடுவன, சில - சிலபேய்கள், சுழலும் - சுழலுகின்றன, சில- சிலபேய்கள், அடல் - வெற்றியையுடைய, உக்கிரன் - உக்கிரனென்கிற, வீரன் - வீரனை, பாடும் - பாடுகின்றன, சில - சிலபேய்கள், பணியும் - வணங்குவன, சில - சிலபேய்கள், பரவை-கடல்போன்ற, களம் எங்கும்- போர்க்களம் முழுதும், ஓடும் - ஓடுவன, சில - சிலபேய்கள், உகளும் - குதிப்பன, சில - சிலபேய்கள், உடலம் - தமது உடலை, தொடர் - கட்டு கிற, குடரால் - குடலினால், மூடும் - மூடுவன எ-று.

அடல்-வலியெனினுமாம். பரவை - பரப்புமாம். களம் - இடம். அது இங்குப் போர்க்களத்தைக் குறித்தது. உகளல் - குதித்தல், துள்ளுதலு மாம். கணம் - பேய். (ககசு)

தலையம்மனை யாடுஞ்சில தடமால்வரை யனைய
கொலை மும்மத கரியேறுபு குருதிப்புனன் மடுவுட்
சிலதுண்ணென விழுமாழிய தேரைக்கல மெனவே
யொலிமல்கிய கறையாற்றினு ளுய்க்குஞ்சில கடியே.

(இ - ள்.) சிலகடி - சில பேய்கள், தலை - தலைகளாகிய, அம்மனை ஆடும் - அம்மனை ஆடுவன, தடம் - விசாலமும், மால்-பெருமையும் உள்ள, வரை- அனைய - மலைபோன்ற, கொலை - கொல்லும் தொழிலையும், மும்மதம் - மூன்று மதத்தையுமுடைய, கரி-யானைகளின்மேல், ஏறுபு - ஏறி, குருதிப்புனல் - உதிரநீராலாகிய, மடுவுள் - மடுவில் குளிக்கும், சில-சில பேய்கள், துண்ணென - திடீரென்று, விழும் - குதிக்கும், ஆழிய - சக்கரங்களையுடைய, தேரை - இரதத்தை, கலம் என - மரக்கலம் என்று, ஒலிமல்கிய - ஒலிமிகுந்த, கறை ஆற்றினுள் - உதிரநதியுள், உய்க்கும் - செலுத்துவன எ-று.

அம்மனை - அம்மானைக்காய். இதனை ஏழாங்காய் எனவும், கல்லாங்காய் எனவும் வழங்குவர். ஏறுபு செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். ஆழி - தேருருளை. கலம் - மரக்கலம் (கப்பல்.) கறை - உதிரம். உய்த்தல் - செலுத்தல். (கஎ)

கலித்துறை

கொட்டும் பதலைகள் கோடுக ளூதுஞ் சிலபேய்கள்
கட்டும் புண்ணீ ரேரிக ளிற்றூற் சிலபேய்கண்
முட்டும் யானை மொய்தலை யூடே சிலபேய்க
ளெட்டுங் கையா லிரதமு ருட்டுஞ் சிலபேய்கள்.

(இ - ள்.) சிலபேய்கள் - சிலபேய்கள், பதலைகள் கொட்டும் - பதலைகளை எடுத்து முழக்குவன, சிலபேய்கள் - சில பிசாசங்கள், கோடுகள் ஊதும் - கொம்புகளை எடுத்து ஊதுவன, சிலபேய்கள் - சிலபேய்கள், புண்ணீர் ஏரி - உதிர ஏரிகளை, களிற்றால் - யானைகளைக் கொண்டு, கட்டும் - அடைப்பன, சிலபேய்கள் - சிலபேய்கள், யானை - யானைகளின், மொய் - பலம்பொருந்திய, தலையூடே - தலைகளில், முட்டும் - முட்டுவன, சிலபேய்கள் - சிலபேய்கள், எட்டும் கையால் - எட்டுகின்ற கைகளைக் கொண்டு, இரதம் உருட்டும் - தேர்களை உருட்டிக்கொண்டு செல்வன எ-று.

பதலை ஓர் வாச்சியம். கோடு - திருச்சின்னம். புண்ணீர் - உதிரம். ஏரிகள் இற்றால் கட்டும் என இயைத்து, ஏரிகளுடைந்தால் அவற்றை அடைக்கும் என்றுரைத்தலு மொன்று. (கஅ)

கலிவிருத்தம்

பொங்கு தீப்பசி போக்கிய பேய்க்கண
மங்கை கொட்டியு மாடியும் பாடியுந்
தங்க ளுக்கின மாய்த்தமைச் சூழ்தர
வெங்கு மாடின வெண்ணில் கவந்தமே.

(இ - ள்.) எண் இல் - கணக்கற்ற, கவந்தம் - உடற்குறைகள், பொங்கு - மிகுந்த, தீப்பசி - பெரிய பசியை, போக்கிய - ஒழித்துவிட்ட, பேய்க்கணம் - பேய்க்கூட்டங்கள், அங்கை - அகங்கையை, கொட்டியும் - தட்டியும், ஆடியும் - கூத்தாடியும், பாடியும்-பாட்டுப்பாடியும், தங்களுக்கு இனம் ஆய் - தமக்கு இனமாக, தம்மைச் சூழ்தர - தம்மை சுற்றிக் கொண்டு வர, எங்கும் - எவ்விடத்தும், ஆடின - கூத்தாடின எ-று.

அங்கை - அழகியகை, உள்ளங்கையுமாம். சூழ்தர என்பதற்குப் பகுதி சூழ்தா. கவந்தம் - உடற்குறை. (கககூ)

நிறைசெ ழுங்குரு திப்புன னீண்டகைப்
பிறையி கழ்ந்தகோட் டியானைப் பிணமெலா
மெறித ரங்கத் திருங்கட லுய்த்ததா
லுறுதி மிங்கில முண்டுக ளிக்கவே.

(இ - ள்.) நிறை - நிறைந்த, செழு - செழுமையாகிய, குருதிப்புனல்- உதிர நீரானது, நீண்ட கை - நீண்ட துதிக்கையினையும், பிறை இகழ்ந்த- சந்திரகண்டத்தைப் பழித்த, கோடு - கொம்பினையுடைய, யானைப்பிணம் எல்லாம் - யானைப்பிணங்க ளெல்லாவற்றையும், எறி - வீசுகின்ற, தரங்கம் - அலைகளையுடைய, கடல் - சமுத்திரத்தில், உறு - சஞ்சரிக்கிற, திமிங்கிலம் - திமிங்கிலமென்னும் மீன்கள், உண்டு களிக்க - உண்டு மகிழும்படி, உய்த்தது - செலுத்தினது எ-று.

குருதிப்புனல்-உதிரநீர். யானையெண மேல்வருதலால் கோடு கொம்பைக் குறித்தது. தரங்கம் வடசொல். இதற்கு திரைவது என்பது பொருள். உய்த்தல் - செலுத்தல். (கஉ0)

காமர் தாமரை காம்பில பொற்குடை
யாமை தோற்பர மைங்கதி மாக்களின்
சாம ரைக்குலஞ் சைவல மாக்கறை
நாம நீணதி நன்று சிறந்ததே.

(இ - ள்.) காம்பு இல பொன் குடை-காம்பில்லாதனவாகிய பொற் குடைகள், காமர் தாமரை ஆ - அழகிய தாமரை மலர்களாகவும், தோல் பரம் - தோல் கேடகம், ஆமை ஆ - ஆமைகளாகவும், மாக்களின் சாமரைக் குலம் - குதிரைகளின் சாமரைக் கூட்டங்கள், சைவலம் ஆ - கொ

டிப்பாசியாகவும் கொண்டு, நாமம் - (கண்டோர்க்கு) அச்சத்தைத் தருகிற, நீள் - நீண்ட, கறை நதி - உதிர ஆறானது, நன்று சிறந்தது - நன்றாகச் சிறந்து விளங்கிற்று எ-று.

தாமரை ஆகுபெயர். ஐங்கதியென்ற விசேடணத்தால் மா என்றது குதிரையைக் குறித்தது. சாமரம் - வடசொற்றிரிபு. (கஉச)

சிறைவி ரித்தகல் சேணினெ ருங்கிய
பறவை வாய்க்கொள் பசுங்குடர் நால்வது
விறன்ம கட்கு விதானம்வி ரித்துமே
னறும லர்த்தொடை நாற்றிய தொத்ததே.

(இ - ள்.) சிறை விரித்து-சிறகு விரித்து, அகல் - பரந்த, சேணில்-ஆகாயத்தில், நெருங்கிய - அடர்ந்து பறக்கிற, பறவை-பட்சிகள், வாய்க்கொள் - வாயிற்கொண்ட, பசுங்குடர் - பசுமையாகிய குடல், நால்வது-தொங்குவது, விறல் மகட்கு-விஜயலக்ஷ்மிக்கு, விதானம் விரித்து-படங்கு விரித்து, மேல் - அதன்மீது, நறு - மணமுள்ள, மலர்த்தொடை - புஷ்ப மாலிகைகளை, நாற்றியது - தொங்கவிட்டதை, ஒத்தது - ஒத்திருந்தது எ-று.

சேண் - ஆகாயம். நாலல் - தொங்கல். விதானம் - மேற்கட்டியுமாம். தொடை - தொடுக்கப்படுவது. நாற்றுதல் - தொங்கக் கட்டுதல். ()

காக நாய்நரி பாறு கழுகினம்
பேய்க ளென்றிவற் றார்ப்புப் பெருகியே
வேக வேழ மிடைந்த பறந்தலை
பாக சாதனற் கும்பயஞ் செய்யுமே.

(இ - ள்.) காகம் - காக்கை, நாய் —, நரி —, பாறு - பருந்து, கழுகு இனம் - கழுகுக்கூட்டம், பேய்கள் - பிசாசங்கள், என்ற இவற்று - என்று சொல்லப்பட்ட இவைகளின், ஆர்ப்பு பெருகி - ஆரவாரம் மிகுந்து, வேகம் - விரைநடையுள்ள, வேழம் - யானைகள், மிடைந்த - நெருங்கின, பறந்தலை - போர்க்களம், பாகசாதனற்கும் - தேவேந்திரனுக்கும், பயம் செய்யும் - அச்சத்தையுண்டாக்கும் எ-று.

வேகம் கோவமெனினு மமையும். மிடைதல் - நெருங்குதல். பகுதி மிடை. பாகம் - அமிர்தம். அதைத் தனக்குச் சாசனமாகப் பெற்றிருப்பவனுதலால் இந்திரனுக்குப் பாகசாதனன் எனப் பெயர் வழங்கலாயிற்று. பாகசாதனற்கும் என்பத னிற்றும்மை உயர்வு சிறப்பு. (கஉரு)

இன்ன செங்களத் தெல்லையி கந்துபோய்த்
துன்னும் வானவ ரேத்தினர் சூழ்வரப்
பொன்னி னூடு புகுந்தட லுக்கிரன்
றன்னை சேவடித் தாமரை தாழ்ந்தெழா.

(இ - ள்.) இன்ன - இப்படிப்பட்ட, செங்களத்து - உதிரக்களத்தின், எல்லை - எல்லையை, இகந்துபோய் - கடந்துசென்று, துன்றும் - நெருங்கின, வானவர் - தேவர்கள், ஏத்தினர் - புகழ்ந்துகொண்டு, சூழ்வர - சுற்றிவர, அடல் - வெற்றியையுடைய, உக்கிரன் - உக்கிரனானவன், பொன்னுரின்நாடு - பொன்னுலகில், புகுந்து - பிரவேசித்து, தன் ஐ - தன் தந்தையாகிய பிரமதேவனது, சேவடி தாமரை - பாததாமரை மலரை, தாழ்ந்து - வணங்கி, எழா - எழுந்து எ-று.

செங்களம் என்பதில் செம்மை பண்பாகுபெயராய் உதிரத்தை யுணர்த்திற்று. இகத்தல் - கடத்தல். பகுதி இக. துன்னல் - நெருங்கல். பகுதி துன். வான்-ஆகாசம். இது அங்குள்ள உலகை யுணர்த்தி நின்றது. அதில் வாழ்வோராதலால் தேவர்களுக்கு வானவர் என்னும் பெயருண்டாயிற்று. ஏத்தினர் முற்றெச்சம். சூழ்வர என்பதற்குப் பகுதி சூழ்வா. ஐ - தந்தை. எழா செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (கஉச)

எந்தை நீபணித் தாங்கவர் யாரையு
நந்து வித்தன னென்னவந் நான்முகன்
மைந்தர் மாண்ட துயரான் மனங்கொதித்
துந்து சீற்றத்தி னுக்கிரற் பார்த்தனன்.

(இ - ள்.) எந்தை - என் தந்தையாகிய, நீ - நீ, பணித்தாங்கு - கட்டளையிட்ட பிரகாரம், அவர்யாரையும் - அவர்களெல்லாரையும், நந்துவித்தனன் என்ன - கொன்றுவிட்டேனென்று சொல்லுதலும், அ-அந்த, நான்முகன் - சதுர்முகனானவன், மைந்தர் - தன் புதல்வர், மாண்ட - இறந்ததனா லுண்டான, துயரால் - துன்பத்தினால், மனம் கொதித்து - மனம் வெதும்பி, உந்து சீற்றத்தின் - மிகு கோவத்தோடு, உக்கிரன் பார்த்தனன் - உக்கிரனை நோக்கினான் எ-று.

எந்தை யென்பதனை அண்மை விளியாகக்கொண்டு எந்தையே யெனப் பொருள் கூறலுமாம். பணித்தல் - கட்டளையிடல். பகுதி பணி. நந்துவித்தல் - பிறவினையாய் அழித்தல் என்னும் பொருட்டாய் நின்றது. பகுதி நந்துவி. தன்வினைப்பகுதி நந்து என்பது - மாண்ட. காரணப் பொருட்டாகிய இறந்தகாலப்பெயரெச்சம். இது துயர் என்னும் பெயர் கொண்டு முடிந்தது. சீற்றம் - கோவம் எனப் பொருள் படுவதோர் தொழிற்பெயர். பகுதி சீறு. (கஉரு)

பார்த்த காலைப் பரிதிவே ளுக்கிரன்
போர்த்த நால்வாய்ப் பொருகளிற் றீருரித்
தீர்த்த வார்சடைச் செம்மல் விழித்தநாட்
பூத்த வைங்கணை யானெனப் பொன்றினான்.

(இ - ள்.) பார்த்தகாலை-நோக்கினபோது, பரிதி - ஒளியுள்ள, வேல்-வேற்படையையுடைய, உக்கிரன் - உக்கிரனானவன், போர்த்த - போர்த்துக்கொண்ட, நால்வாய் - தொங்குகிற வாயினையுடைய, பொரு - போர் செய்தற்குரிய, களிற்று - யானையின், ஈர் உரி - குளிர்ந்த தோலையும், தீர்த்தம் - கங்காதீர்த்தம் அமைந்த, வார்சடை - நீண்ட சடாபாரத்தையுமுடைய, செம்மல் - சிவபெருமான், விழித்தநாள் - விழித்துப் பார்த்த நாளில், பூத்த ஐங்கணையான் என-மலருருவாயிருக்கிற பஞ்சபாணங்களையுடைய மன்மதன் மடிந்தாற்போல,பொன்றினன்-மடிந்துபோனான் எ-று.

நாலல் - தொங்குதல். நால்வாய் வினைத்தொகை நிலைத்தொடர். பொருகளிறும் அது. ஈருரி பண்புத்தொகை நிலைத்தொடர். செம்மல் - பெரியோன் என்னும் விதப்புப்பெயர். விழித்த என்றமையால் அதற்கு முன் கண் மூடிக்கொண்டு யோகு செய்திருந்தான் என்பது விளங்கும். பொன்றல் - இறத்தல். பகுதி பொன்று. (கஉ௬)

பொன்றல் கண்டவன் புத்திரர் யாரையுங்
கொன்று நின்ற கொடுமையு மன்றியிந்
நின்ற மைந்தனை யும்முயிர் நீக்கினே
னென்று நெஞ்சத் தெழுந்துய ரெய்தினன்.

(இ - ள்.) பொன்றல் - மடிதலை, கண்டவன் - நோக்கினவனாகிய பிரமன், புத்திரர் யாரையும் - புதல்வரெல்லாரையும், கொன்று நின்ற - கொலைசெய்து நின்ற, கொடுமையும் அன்றி - கொடுமையுமல்லாமல், நின்ற - எஞ்சிநின்ற, இ மைந்தனையும் - இந்தப் புதல்வனையும், உயிர்நீக்கினேன் என்று - உயிர் நீக்கிவிட்டேனென்று, நெஞ்சத்து - தன் மனத்தில், எழுந்துயர் எய்தினன் - மிகுந்த துன்பத்தை யடைந்தான் எ-று.

பொன்றல் - இறத்தல். பகுதி பொன்று. எழுதல் - மிகுதலாதலால் எழுந்துயர் என்பதற்கு மிகுந்த துன்பம் என்றுரை யுரைக்கலாயிற்று. எய்தல் - அடைதல். பகுதி எய்து. (கஉ௭)

அக்க டுந்துய ரோர்வகை யாறிய
செக்கர் மென்மல ரோனுளந் தேறுபு
மக்க ளின்மையு மக்கட் கொலையினு
மிக்க பாவமுந் தீர்த்திடல் வேண்டியே.

(இ - ள்.) அ - அந்த, கடுந்துயர் - கொடிய துன்பமானது, ஓர்வகை-ஒருவிதமாய், ஆறிய - தணிந்த, மெல் - மென்மையாகிய, செக்கர் மலரோன் - செந்தாமரை மலரில் வசிப்பவனாகிய பிரமன், உள்ளம் தேறுபு - மனம் தெளிந்து, மக்கள் இன்மையும் - மக்களை இல்லாமையும், மக்கள் கொலையின் ஆம் - மக்கட் கொலையினால் உண்டாகும், மிக்க பாவமும் -

மிருந்த பாவத்தையும், தீர்த்திடல் வேண்டி-நீக்கிக் கொள்ளுதலை விரும்பி எ-று.

தேறுபு செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம், கொலையின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்ருவதன் கருவிப் பொருளது. (கஉஅ)

அண்ண ருன மனைத்தினு மேலதா
வெண்ணு தென்கயி லைப்பொருப் பெய்தியே
புண்ணி யப்புன லாடிப் புரிசடைக்
கண்ணு தற்பிராற் கண்டு வணங்கினுன்.

(இ - ள்.) அண்ணல் - சிவபிரானது, தானம் அனைத்தினும் - தலங்கள் எல்லாவற்றினும், மேலது ஆ - மேன்மையுடையதாக, எண்ணும் - யாவராலும் மதிக்கப்படுகிற, தென்கயிலைப் பொருப்பு - தென்கயிலாய மலையை, எய்தி - அடைந்து, புண்ணியப்புனல் - புண்ணிய தீர்த்தத்தில், ஆடி - குளித்து, புரிசடை - கட்டப்பட்ட சடையையுடைய, கண்ணுதற்பிரான் - நெற்றிக்கண்ணையுடைய சிவபிரானை, கண்டு-தரிசித்து, வணங்கினுன் - தொழுதான் எ-று.

தானம் ஸ்த்தாநம் என்னும் வடசொற்றிரிபு. எண்ணல் - மதித்தல். தென்கயிலாயப் பொருப்பு என்றது சீகாளத்தியை. புரிசடை முறுக்கப் பட்ட சடையென்றலு மொன்று. (கஉக)

பின்பு தென்கயி லாயப் பெருவரை
பொன்ப ரந்தொளி பொங்குயர் நீலவெற்
பென்ப வற்றி னிடையிருந் தேவினைத்
துன்ப நீக்குநன் ேனுன்புதொ டங்கினுன்.

(இ - ள்.) பின்பு - பிறகு, பெரு - பெரிதாகிய, தென்கயிலாயவரை-தென்கயிலாயமலை, பொன்பரந்து - அழகு பரவி, ஒளிபொங்கு - ஒளி மிகுந்திருக்கிற, நீலவெற்பு - நீலகிரி, என்பவற்றின் இடையிருந்து - என்பவற்றின் இடத்தில் தங்கி, வினை - வினையினுல் உண்டாகிற, துன்பம் - துக்கத்தை, நீக்கும் - ஒழிக்கின்ற, நல்நோன்பு - நல்ல தவத்தைச்செய்ய, தொடங்கினுன் - ஆரம்பித்தான் எ-று.

பொங்குதல் - மிகுதல். துன்பம் என மேல்வருதலால் வினை தீவினையைக் குறித்தது. (கஙo)

பொறிக ளைந்தையும் புல்லா துளத்தினைக்
கறைமி டற்றிறை காசி லடக்கிவாக்
கிறைவி நோன்பினுக் கேற்றன செய்துதன்
குறிவ ழிப்படக் கூர்தவ மாற்றினுன்.

(இ - ள்.) பொறிகள் ஐந்தையும் - ஐம் பொறிகளையும், புல்லாது - பின்பற்றிச் செல்லாமல், உள்ளத்தினை - மனத்தை, கறைமிடறு - விஷ கண்டத்தையுடைய, இறை - இறைவனது, காலில் - திருவடிகளில், அடக்கி - அடைவித்து, வாக்கு இறைவி - சரஸ்வதியின், நோன்பிறுக்கு - விரதத்துக்கு, ஏற்றன - தகுதியானவற்றை, செய்து - பண்ணி, நல் குறி வழிப்பட - நன்நினைப்பின் வழியே, கூர் - மிக்க, தவம் ஆற்றினன் - தவத்தைச் செய்தவனாகி எ-று.

பொறிகள் ஐந்தென்றது பஞ்சேந்திரியங்களை. அவையாவன:— மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. இவை யீண்டைக்கேற்ப இவற்றின் விடயங்களாகிய பரிசம், ரசம், ரூபம், கந்தம், சத்தம் என்பவற்றைக் குறித்தன. புல்லல் - தழுவல். பகுதி புல். இறையென்றது - கறைமிடறு என்னும் விசேடணத்தால் சிவபெருமானுக்காயிற்று. வாக்கிறைவி வாக் தேவதா என்னும் வடசொற்றிரிபு. கூர்தல் - மிகுதல். ஆற்றல் - செய்தல். பகுதி ஆற்று. (௧௩௧)

அரிய நோன்பிற் கருள்செயல் வேண்டினன்
கருணை யேயுரு வாயநங் கண்ணுதல்
வரத னவ்வுழி மால்விடை யூர்திமேற்
சுரிக ருங்குழ லோடெதிர் தோன்றினன்.

(இ - ள்.) அரிய - அருமையாகிய, நோன்பிற்கு - தவத்திற்கு, அருள் செயல் - கிருபைசெய்தலை, வேண்டினன் - விரும்பினன், (விரும்புதலும்) கருணையே உரு ஆய - அருளே வடிவாகிய, நம் கண்ணுதல் வரதன் - நமது நெற்றிக்கண்ணையுடைய ரக்ஷகன், அவ்வுழி - அவ்விடத்தில், மால் விடை ஊர்திமேல் - மால் விடையாகிய வாகனத்தின் மீது, சுரிகரு குழலோடு - சுரிகருங்குழலை யுடையவளாகிய உமாதேவியோடு, எதிர்தோன்றினன் - பிரத்தியக்ஷமானன் எ-று.

மால்விடை - திருமாலாகிய இடபம். பெரிய எருது எனினும் பொருந்தும், (ருஷபவாஹநம்.) சுரிகருங்குழல் சுரித்த கருங்கூந்தலை யுடையவள். (௧௩௨)

தோன்றல் காண்டலுந் துண்ணென வேயெழுந்
தான்ற மெய்ப்புள கத்த னருவிநீர்
கான்ற கண்ணன் கரைந்துகு நெஞ்சினன்
றேன்ற யங்கலர்ச் சேவடி தாழ்ந்திட்டான்.

(இ - ள்.) தோன்றல் - சிவபெருமான், காண்டலும் - தோன்றுதலும், துண்ணென எழுந்து - விரைவாயெழுந்து, ஆன்ற - மிகுந்த, மெய் புளகத்தன் - உடல் புளகித்தவனாய், அருவி - அருவியாறுபோல, நீர் கான்ற - நீர் பொழிகிற, கண்ணன் - கண்களையுடையவனாய், கரைந்து

உகும் - கரைந்துருகாநின்ற, நெஞ்சினன் - மனமுள்ளவனாய், தேன் தயங்கு - தேன் மிக்குப்பெருகாநின்ற, அலர் - தாமரை மலர்போன்ற, சேவடி - திருவடியை, தாழ்ந்திட்டான் - வணங்கினான் எ-று.

தோன்றல் - பெருமையிற் சிறந்தோனுக்கு சிறப்புப் பெயராதலாலும் தேவர்கோனாகிய சிவபெருமானினும் பெருமையிற் சிறந்தோரின்மையாலும் தோன்றல் என்றது சிவபெருமானையே குறித்தது. ஆன்ற அகன்ற என்பதன் மரூஉ. புளகம் - மயிர்க்குச்செறிதல். சேவடிக்குவமையாகப் புணர்க்கப்படுதலால் அலர் தாமரைமலரை யுணர்த்திற்று. தாழ்ந்திட்டான் என்பதற்குப் பகுதி தாழ்ந்திடு. (கநந)

எழுந்து கைதலை யேற்றி முகிழ்த்துநாத்
தழும்ப வேத்தினன் றண்ணில வெண்மதிக்
கொழுந்த ணிந்தவிற் குன்றின னென்னைநீ
விழைந்த தென்ன விரிஞ்சி விளம்புவான்.

(இ - ள்.) எழுந்து - எழுந்திருந்து, கைதலை ஏற்றி - கைகளைசிரசின்மேலேற்றி, முகிழ்த்து - கூப்பி, நா - நாவானது, தழும்ப - தழும்பேறும்படி, ஏத்தினன் - துதித்தனன், (துதித்தலும்) தண்நில - குளிர்ந்த நிலவை வீசுகிற, வெள் - வெண்மையாகிய, மதிக்கொழுந்து - சந்த்ரகண்டத்தை, அணிந்த - தரித்த, வில் குன்றினன் - மலைவில்லை யுடையவனாகிய சிவபிரான், (பிரமனை நோக்கி) நீ விழைந்தது என்னை - நீ விரும்பினது யாது, என்ன - என்றுகேட்க, விரிஞ்சி - பிரமன், விளம்புவான் - சொல்வானாயினன் எ-று.

ஏத்தினன் என்பதற்குப் பகுதி ஏத்து. விற்குன்றினன் என்பதற்கு குன்றுவில்லினன் என நிறுத்திப் பொருளுரைக்கலாயிற்று. குன்று என்றது மேருமலையை. விழைதல் - விரும்புதல். பகுதி - விழை. (கநச)

கருணை வள்ளல்யான் காலம்வி சாரியா
அரிம தர்க்க ணரிவைதோ டோய்தலான்
முரணு மாற்றலர் முப்பதி னாயிர
நிருத ரூழி நெருப்பெனத் தோன்றினார்.

(இ - ள்.) கருணைவள்ளல் - அருட்கொடையனே, யான் - நான், காலம் விசாரியாது - காலத்தை ஆராயாமல், அரி - செவ்வரிபடர்ந்த, மதர்க்கண் - மதர்த்த கண்களையுடைய, அரிவை - பெண்ணின், தோள் தோய்தலால் - தோளைசேர்த்தால், முரணும் - மாறுபட்ட, ஆற்றலர் - வலியுடையோராகிய, முப்பதினாயிரம் நிருதர் - முப்பதினாயிரவராகிய அரக்கர், ஊழி நெருப்பு என - ப்ரளய காலாக்கினிபோல, தோன்றினார் - பிறந்தார்கள் எ - று.

கருணைவள்ளல் - அருட்செல்வத்தைக் கொடுப்பவன். அரிவை - பெண் பொதுப்பெயராய் பருவங் குறியாது நின்றது. தோடோய்தல் என்றது இடக்கரடக்கு. "நலக்குரியார் யாரெனி னுமகீர் வைப்பில், பிறக்குரியா டோடோ யாதார்" என்றார் பெருநாவலரும். (கஙு)

அன்னர் யாவரும் விந்தத் தடைந்திருந்
தின்னல் செய்தன ரிவ்வுல குக்கெலா
மன்னும் வானவர் மற்றச் செயலெலாந்
துன்னி யென்னொடு சொல்லி யிரங்கினர்.

(இ - ள்.) அன்னர் யாவரும் - அவர்களெல்லாரும், விந்தத்து-விந்த மலையில், அடைந்திருந்து - சேர்ந்திருந்து, இ - இந்த, உலகுக்கு எல்லாம் - உலகத்துக்கெல்லாம், இன்னல் செய்தனர் - துன்பஞ்செய்து கொண்டிருந்தார்கள், அச்செயல் எல்லாம் - அந்தச் செய்கை எல்லாவற்றையும், மன்னும் வானவர் - நிலைபெற்ற தேவர்கள், துன்னி - கூடி வந்து, என்னொடுசொல்லி - என்னிடத்திற் சொல்லி, இரங்கினர் - அழுதார்கள் எ-று.

விண்ணுலகி லிருப்பவர்களாதலால் தேவர்களை வானவர் என்றார். வான் ஆகுபெயர். இரங்கல் - முதல். பகுதி இரங்கு. துன்னல்-நெருங்கல். அது இங்குக் கூடுதற்காயிற்று. என்னொடு உருபு மயக்கம். ()

அந்த வேலை யழல்படு வெஞ்சினம்
வந்த தென்வயின் மற்றத னூடொரு
மைந்த னுக்கிர னென்பவன் வந்தியான்
றந்த வேவ றலைக்கொடு போகியே.

(இ - ள்.) அந்த வேலை - அந்தச் சமயத்தில், அழல்படு - நெருப்புப் போலும், வெம்சினம் - கடுங்கோபம், என்வயின் வந்தது - எனக்குண்டாயிற்று, அதனூடு - அதனிடத்தில், ஒரு மைந்தன் - ஒருமகன், உக்கிரன் என்பவன் - உக்கிரனென்று சொல்லப்படுவோன், வந்து - தோன்றி, யான் தந்த - நான் கட்டளையிட்ட, ஏவல் - வேலை, தலைக்கொடுபோகி - சிரசாவகித்துச் சென்று எ - று.

அழல்படு என்பதில் படு என்பது உவமைப் பொருட்டு நின்றது. வயின் என்னும் ஏழனுருபு நான்காவதன் முறைப்பொருட் டந்தமையால் உருபு மயக்கம். போகியென்பதற்குப் பகுதி போகு. (கஙஎ)

விந்த மால்வரை வெய்யரைக் கொன்றவன்
வந்து நின்றனன் மக்களி றந்தலா
னொந்த சிந்தையி னேக்கினன் பாவியேன்
வெந்தொ ழிந்தனன் மற்றவ் விடலையே.

(இ - ள்.) விந்தமால் வரை - விந்தமென்கிற பெரிய மலையிலிருந்த, வெய்யவரை - கொடியவரை, அவன்-அந்தவுக்கிரன், கொன்று - மாய்த்து, வந்து நின்றனன் - வந்து எனக்கெதிரில் நின்றான், (நிற்றலும்) பாவியேன் - பாவியாகிய நான், மக்கள் - புதல்வர்கள், இறத்தலால் - மடிதலால், சொர்ந்த சிந்தையின் - வருந்தின மனமுடையவனாய், நோக்கினன் - (அவனை) பார்த்தேன், (நோக்குதலும்) அவ்விடலை - அந்த உக்கிரனாகிய விடலை, வெந்து ஒழிந்தனன் - எரிந்தொழிந்தான் எ-று.

வெய்யர் வெம்மைப் பண்படியாகப் பிறந்த பெயர். விடலை-காளைப் பருவமுடையவன். வெந்தொழிந்தனன் என்றது இறந்துபோயினன் என்றவாறு. (கநஅ)

முக்க ணல்லற மூர்த்திமற் றாதலான்
மக்க ளின்மையு மக்கட் கொலையுமா
மிக்க பாவம் விளைந்தன வுற்றவை
செக்கர் வேணிய தீர்த்திடல் வேண்டினேன்.

(இ - ள்.) முக்கண் - மூன்று கண்களையுடைய, நல் - நன்மையைத் தருகிற, அறமூர்த்தி ஆதலால் - தரும வடிவினையாதலால், மக்கள் இன்மையும் - புதல்வரில்லாமையும், மக்கள் கொலையும் - புதல்வரைக் கொன்றமையும் ஆகிய, மிக்கபாவம் விளைந்தன - பெரும்பாவம் உண்டாயின, உற்றவை - அவ்வாறுண்டான பாவங்களை, செக்கர்வேணிய-செஞ்சடையையுடையவனே, தீர்த்திடல் வேண்டினேன் - ஒழித்திடல் வேண்டினேன் எ-று.

மூர்த்தம் - உரு. அதனையுடையவன் மூர்த்தி. மற்று-அசை. மக்களின்மையும் மக்கட் கொலையுமாம் மிக்கபாவம் என்பதற்கு மக்களில்லாமையும் மக்கட்கொலையும் ஆகிய இவற்றாலுண்டாகிய பெரும்பாவம் என்றுரைத்தலுமாம். விளைதல் - உண்டாதல். செக்கர் செம்மைப் பண்பின் மரூஉ. வேண்டல் - விரும்பல். (கநக)

என்று வேத னியம்பலு மெம்பிரான்
றென்றி ருக்கயி லாயச் சிகரநீ
நன்று கண்டனை யாதலி னான்முக
கொன்ற பாதகங் கொன்றனை மன்றவே.

(இ - ள்.) என்று - என்றிவ்வாறு, வேதன் - பிரமன், இயம்பலும் - சொல்லுதலும், எம்பிரான் - எம்பெருமான், திரு - அழகாகிய, தென்கயிலாயம் - தென்கயிலைமலையின், சிகரம் - சிகரத்தை, நீ - நீ, நன்று - செவ்வையாக, கண்டனை ஆதலின் - தரிசித்தனையாதலால், நான்முக - சதுர்முகனே, கொன்றபாதகம் - கொலையாலுண்டான பாவத்தை, மன்ற கொன்றனை - அறத்தொலைத்து விட்டாய் எ-று.

வேதாதிகாரியாதலால் பிரமனை வேதன் என்றார். இயல்பு என்பதற்குப் பகுதி இயம்பு. சிகரம் - முடி. கொன்ற என்றது புதல்வரைக் கொன்ற என்றவாறு. பாதகம்-வடசொல். கொன்றனை யென்பதற்குப் பகுதி கொல். மன்ற அசைநிலையுமாம். (௧௬௦)

நமது தென்கயி லாய நகத்துயர்
சிமயம் யாவர்கண் டாரவர் தீவினை
கமல நாதன் கனைகதிர் காண்டருந்
திமிர மென்னச் சிதையுஞ் சிதையுமே.

(இ - ள்) நமது தென்கயிலாய நகத்து - நமது தென்கயிலாய மலையின், உயர் சிமயம் - உயர்ந்த சிகரத்தை, யாவர் கண்டார் - எவர் கண்டாரோ, அவர் தீவினை - அவர்களது பாவமானது, கமலநாதன் - சூரியனது, கனைகதிர் - விளங்குகிற கிரணத்தை, காண்டரும் - கண்ட, திமிரம் என்ன - இருட்டுப்போல, சிதையும் சிதையும்-அழியும் அழியும் எ-று.

ஏ அசை. நகம் வடசொல். இதற்கு நடவாதது என்பது பொருள். யாவர் கண்டார் அவர் என்றது வடமொழி வழக்கு. தீவினை-தீசெயல். இது இதனால் விளையும் பாவத்தைக் குறித்தலால் ஆகுபெயர். தாமரை மலருக்கு நாயகனாதலால் சூரியனைக் கமலநாதன் என்றார். திமிரம் - இருளெனப் பொருள் படுவதோர் வடசொல். சிதைதல் - கெடுதல். பகுதி சிதை. (௧௬௧)

எனவி சைத்துமற் றெந்தை பினுஞ்சொலுந்
தனையன் வேண்டுதி யாயிற் சராசரம்
வனையு நான்முக மாசி மகத்துநாட்
கனலி கீழ்பாற் கடற்படு காலையில்.

(இ - ள்.) எந்தை - எமது தந்தையாகிய சிவபிரான், என இசைத்து - என்றிவ்வாறு சொல்லி, பின்னும் சொல்லும்-மேலுஞ்சொல்வானாயினன், (எவ்வாறெனின்) சராசரம் - சராசர ஜீவராசிகளை, வனையும் - படைக்கிற, நான்முக - சதுர்முகனே, தனையன் வேண்டுதியாயின் - புதல்வனைப் பெற விரும்புவையாயின், மாசிமகத்துநாள்-மாசி மகநாளில், கனலி - சூரியனானவன், கீழ்பால்கடல் - கீட்டிசைக் கடலில், படுகாலையில் - உதிக்குங் காலத்தில் எ-று.

இசைத்தல் - சொல்லல். பகுதி இசை. தநயன் வடசொல். இது எதுகையின்பொருட்டு தனையன் என்றாயிற்று. சரர்சரம் - சரம். இயங்கியற்பொருள். அசரம் - நிலையியற்பொருள். வனைதல் - உண்டாக்கல். பகுதி வனை. மாசிமகம் - மாசிமாதத்து மகநக்ஷத்திரம். கனலி - சுடுவோன். கனலல் - சுடுதல். பகுதி கனல்,

அந்தண் பொன்முக ரிப்புன லாடியிந்
நந்தொ ளிச்சிவ லிங்கத்தை நண்ணியே
முந்து நூற்றெட்டெட் டாகு முறைவலம்
வந்தி றைஞ்சலு மற்றத் துணைசெயா.

(இ - ள்.) அம் - அழகிய, தண் - குளிர்ச்சியாகி, பொன்முகரி-பொன்முகரியாற்றின், புனல் - நீரில், ஆடி - மூழ்கி, இ - இந்த, நந்து ஒளி - மிக்க வொளியையுடைய, சிவலிங்கத்தை நண்ணி - சிவலிங்கத்தை யடைந்து, முந்து - முற்பட, நூற்றெட்டு எட்டு ஆகும்முறை - நூற்றெட்டு தரம், வலம்வந்து - ப்ரதக்ஷிணஞ்செய்து, இறைஞ்சலும் - வணங்குதலும், அத்துணை செய்யா - அவ்வளவாகச் செய்து எ-று.

பொன்முகரியாற்றை வடநூலார் ஸ்வர்ணமுகரியென்பர். ஆடல் - மூழ்கல். பகுதி ஆடு. நந்தல் - பெருகல். பகுதி நந்து. வலம் வந்து என்பதற்குப் பகுதி வலம்வா. துணை - அளவு. செயா-செய்யா வென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். (கஎங)

ஐந்தெழுத்தையு மத்துணை யோதியே
மைந்த நீமறு மாசி மகத்தின்நா
றிந்த நல்விர தத்தை யியற்றினாற்
சிந்தும் வல்வினை சேயைப் பெறுதியால்.

(இ - ள்) மைந்த - புதல்வனே, நீ ஐந்து எழுத்தையும் - பஞ்சாக்ஷரத்தையும், அத்துணை - அவ்வளவாக, ஓதி - ஜபித்து, மறு மாசிமகத்தின் நாறு - மறுவருஷத்து மாசி மகத்தின் அளவும், இந்த நல்விரதத்தை-இந்த சிறந்த நோன்பை, இயற்றினால் - அனுஷ்டித்து வருவையானால், வல்வினை சிந்தும் - உன் வலிய வினைப்பயனாகிய பாவங்களெல்லாம் அழிந்து போம், சேயை பெறுதி - (நல்ல) புதல்வனையும் பெறுவாய் எ - று.

துணை - அளவு. ஓதல் - ஜபித்தல். பகுதி ஓது. மகத்தின் நாறு - மகாநட்சத்திரம் வரைக்கும். விரதம் - நோன்பு. இயற்றல் - அனுஷ்டித்தல். பகுதி இயற்று. சிந்தல் - அழிதல். பகுதி சிந்து. சேய்-புதல்வன்.()

பிரம நின்னள வன்றிதிப் பெற்றியே
திரித லின்றிவண் செய்தவர் யாவரு
மருமக ப்பே றடைவ ரெனச்சொலிக்
கருணை வள்ளல் கரந்தன னென்பவே.

(இ - ள்.) பிரம - பிரமனே, இது - இவ்விஷயம், நின் அளவு அன்று - உன் அளவுக்கே அல்ல, இப்பெற்றியே - இத்தன்மையாகவே, திரிதல் இன்று - தவறாமல், இவண் - இவ்விடத்தில், செய்தவர் யாவரும் - செய்தவர் எல்லாரும், அரு - அருமையாகிய, மகப்பேறு அடைவர் - புத்திர

லாபத்தை அடைவார்கள், எனச் சொல்லி - என்று சொல்லி, கருணை வள்ளல்-அருட்கொடையாளனாகிய சிவபெருமான், கரந்தனன்-மறைந்து போயினன், என்ப - என்று சொல்லுவர் (பெரியோர்) எ - று.

மக - குழந்தை. பேறு - லாபம். கருணைவள்ளல் - தனது கருணையையே கொடைப்பொருளாக வழங்குவோன். கரந்தனன் என்பதற்குப் பகுதி கர. (கசரு)

விரத மவ்வகை வேதிய னாற்றலும்
பொருவின் ஞானயோ கத்திற் புராரிதன்
னருளி னாற்பே ரறிவுடை யோர்மகன்
வரிநெ டுங்கண் மங்கைகட் டோன்றினான்.

(இ - ள்.) வேதியன் - பிரமன், அவ்வகை விரதம் - அவ்வகையாகிய நோன்பை, ஆற்றலும் - அனுஷ்டித்தலும், பொருவு இல்-ஒப்பு இல்லாத, ஞானயோகத்தின் - ஞானயோகத்தினையுடைய, புராரி-சிவபெருமானது, அருளினால் - கருணையினால், பேர் அறிவு உடை - அகண்ட ஞானத்தையுடைய, ஓர் மகன் - ஒரு புதல்வன், வரி நெடு கண் ஆம்-செவ்வரி படர்ந்த நீண்ட கண்களையுடையவளாகிய, மங்கைகண் - தன் மனைவியினிடத்து, தோன்றினான் - அவதரித்தான் எ - று.

பொருவு - ஒப்பு. புராரி - முப்புறத்துக்கு சத்துரு. தன் சாரியை. மங்கை பருவம் குறியாது பெண்பொதுவைக் குறித்தது. இதில் மங்கை யென்றது சரஸ்வதியை. (கசசு)

வஞ்சிவிருத்தம்

மல்லன் மைந்தனை வாணியு
மல்லி மென்மல ரையனு
மெல்லெ னுச்சிவி ரும்பிமோந்
தெல்லை யின்மகிழ் வெய்தினார்.

(இ - ள்) மல்லல் - வளம்பொருந்திய, மைந்தனை - அப்புதல்வனை, வாணியும் - சரஸ்வதியும், அல்லி - அகவிதழ்களையுடைய, மெல்-மெல்லிய, மலர் - தாமரை மலரில் வீற்றிருக்கிற, ஐயனும் - பிரமதேவனும், மெல் என் - மெலிவாகிய, உச்சி-(அப்புதல்வனது) உச்சியை, விரும்பி மோந்து-விரும்பி முகர்ந்து, எல்லை இல் - அளவற்ற, மகிழ்வு எய்தினார் - சந்தோஷத்தை அடைந்தார்கள் எ - று.

மல்லல் - வளம். (செழுமை.) வாணியென்பதற்கு வாக்தேவதை எனப் பொருள் கூறுவர் வடநூலார். படைத்தற் றொழிற்கு இறைவனாதலால், பிரமனை ஐயன் என்றார். மோந்து என்பதற்கு பகுதி மோ. எய்தல் - அடைதல். (கசஎ)

அரிவை பாகனு மவ்வுழித்
தெரிய வந்து சிறந்ததா
மரையி னன்பெறு மைந்தனுக்
கிரிபு வென்பெய ரிட்டனன்.

(இ - ள்.) அரிவை பாகனும் - பெண்பாகனாகிய சிவபெருமானும், அவ்வுழி - அவ்விடத்தில், தெரிய - (யாவரும்) அறியும்படி, வந்து-வந்து, சிறந்த - சிறப்பமைந்த, தாமரையினன் - பிரமன், பெறும் - பெற்ற, மைந்தனுக்கு - புதல்வனுக்கு, இரிபு என் - இரிபு என்கிற, பெயர் இட்டனன் - பெயரிட்டான் எ - று.

அரிவை பருவம் குறியாது பெண்பொதுவைக் குறித்தது. பாகன் - பங்கன். தாமரையினன் - தாமரை மலரை ஆசனமாக உடையவன். ()

அணியு மாடர வானவன்
இணையின் மாமறை யீறுசொல்
புணர்த னுதொரு பூரண
முணரு மெய்யுணர் வுதவினன்.

(இ - ள்) அணியும் - தரித்த, ஆடு - படம் விரித்தாடுகிற, அரவானவன் - பாம்பையுடைய தேவன், இணையில் - ஒப்பில்லாத, மா - பெருமையுள்ள, மறையீறு சொல் - வேதமுடிவிற் சொல்லப்படுகிற, புணர் - புணர்ப்பையுடைய, தனது - தனது, ஒரு பூரணம் - ஒப்பற்ற பரிபூர்ணத்வத்தை, உணரும் - அறிதற்குரிய, மெய் உணர்வு - மெய்யறிவை, உதவினன் - தந்தருளினன் எ - று.

ஆடு அர அணியும் வானவன் - படமெடுத்தாடுகிற பாம்பை யாபரணமாயணிந்த தேவன். அணியும் என்றமையால் ஆபரணமாக என்று விரித்துரைக்கப்பட்டது. அரா என்னும் குறியதன் கீழாக் குறுகி அர என நின்றது. மறையீறு - வேதாந்தம். இதற்கு இணையில் என்ற தமையாது மா என்றும் விசேடித்தது எற்றுக்கெனின் இறைவனது பூரணஸ்வரூபத்தை யுள்ளவா றுணர்தற் கருவியாயிருப்பதை யுணர்த்தற்கென்க. உள்ளவா றுணர்தலாவது பாம்பைப் பாம்பென்றே யுணர்தல். திரிபாயுணர்தல் - பழுதையைப் பாம்பென் றுணர்தல். (கசக)

எந்தை யேகின னிளையவன்
றந்தை தாயடி தாழ்ந்தனன்
சிந்தை யின்மகிழ் செய்தவர்
தந்தி டும்விடை தான்பெறு.

(இ - ள்.) எந்தை - எமது தந்தையாகிய சிவபிரான், ஏகினன் - போய்விட்டான், இளையவன் - இரிபுவென்னும் புதல்வன், தந்தைதாய் அடி - பிதாமாதாக்களுடைய பாதங்களை, தாழ்ந்தனன் - வணங்கி, சிந்

தையில் மகிழ் செய்து - அவர் மனத்தில் மகிழ்வுண்டாகச்செய்து, அவர் தந்திடும் - அவர் கொடுத்த, விடைபெறா - விடைபெற்று எ - று.

பெறா செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். இது வரும் பாட்டிலுள்ள போய் என்னும் வினைகொண்டு முடிந்தது. தாழ்ந்தனன் முற்றெச்சம். விடை - உத்திரவு. (கட்டளை) (௧௯0)

வனமும் யாறுநல் வரையுமாம்
புனிதநல் லிடம்போ யிராச்
சனக ளுதியர் தங்களுக்
கனக மெய்யுணர் வருளினான்.

(இ - ள்.) வனமும் - காடும், யாறும் - நதிகளும், நல்வரையும் - நல்ல மலைகளும், ஆம் - ஆகிய, புனிதம் - பரிசுத்தமான, நல் இடம் - சிறந்த இடங்களுக்கு, போய் - சென்று, இரா - இருந்து, சனகன் ஆதியர் தங்களுக்கு - சனகன் முதலியோர்க்கு, அனகம் - பரிசுத்தமான, மெய்யுணர்வு - மெய்ஞ்ஞானத்தை, அருளினான் - அருள் செய்தான் எ - று.

வனம் - வடசொல். புனிதம் அனகம் என்பனவும் அவை. இரா - செய்யா வென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். இது அருளினான் என்னும் வினைகொண்டு முடிந்தது. சனகனாதியர் என்றது ஸநக ஸநந்த ஸநத்குமார ஸநாதநர்களை. இரிபு என்பவர் நிதாகருக்கும் அவர் சனகனாதியர்களுக்கும் மெய்யுணர் வருளினார் எனக் கொள்க. இதனை "விசயகேள் பரமஞானம் விளக்கிய ரிபுவு மேனாள், வசையில்சீர் நிதாகனென்னு மறையவன் றனக்கு வந்திங், கசைவிலா வினைய ஞான முபதேசித் தருள்செய் தேகத், திசைபுகழ் நிதாகன் றானுஞ் சனகனாதியர்க்குச் செப்ப" "அன்னவர் தாமும் வானோர்க் கருளுட னுரைத்தா ரிப்பச், சொன்னவிம் முறையே ஞானம் வழிவழி தொடர்ந்து போந்த, தின்னதோர் பெருமைத் தாய வித்தல மெவைக்கு மேலா, முன்னருஞ் சேவை செய்வார்க் கெளிதினி லுய்தற் பாற்றாம்" என்னும் திருக்காளத்திப் புராணச் செய்யுள்களானு முணர்க. இத் திருக்காளத்திப் புராணம் சூதமுனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்கு உபதேசித்தது. (௧௯௧)

மணங்கொ டாமரை வானவ
னணங்க ராவணி யண்ணறாள்
வணங்கி நுண்ணிடை வாணியோ
டிணங்கு தன்னுல கெய்தினான்.

(இ - ள்.) மணம்கொள் தாமரை - மணத்தையுடைய தாமரை மலரில் வீற்றிருக்கிற, வானவன் - பிரமதேவன், அணங்கு-தெய்விகமுள்ள, அரா அணி - பாம்பணிந்த, அண்ணல் - பெரியோனது, தாள் - சீர்பாதத்தை, வணங்கி - தொழுது, நுண் இடை - நுண்ணிடையையுடைய,

வாணியோடு - கலைமகளோடு, இணங்கு - தனக்கிணக்கமான, தன் உலகு எய்தினான் - தன் உலகை யடைந்தான் எ - று.

அராவணி யண்ணல் என்றது சிவபிரானை. தன்னுலகு என்றது சத்தியலோகத்தை. அணங்கு அரா என்பதில் அணங்கு என்பதை பாம்புக்குரிய விசேடணமாக்கி, துன்பஞ்செய்கிற என் றுரைத்தலுமாம். வாணி - வடசொல். வாக்தேவதை யென்பது பொருள் (நாமகள்.) ()

பகவன் வாழுமிப் பதிமிகப்
புகழும் புண்ணிய பூமியுண்
மிகவு யர்ந்ததால் வேந்திது
முகம னென்றுநீ முன்னலை.

(இ - ள்.) பகவன் - சிவபெருமான், வாழும் - வாழ்கிற, இ பதி - இந்தத் தலமானது, மிக - மிகுதியாக, புகழும் - புகழ்தற்குரிய, புண்ணிய பூமியுள் - புண்யபூமிகளுள்ளே, மிகவுயர்ந்ததால் - மிகச் சிறந்திருத்தலால், வேந்து - யாதவவேந்தனே, இது - இச்செய்தி, முகமன் என்று - முகமன் என்று, நீ முன்னலை - நீ நினைக்காதை எ - று.

முகமன் - உபசாரவார்த்தை. முன்னல் - நினைத்தல். பகுதி முன். வேந்து - பண்பாகுபெயர். இது அண்மைவிளியாதலால் இயல்பாயிற்று.

என்று ருக்கரந் தெய்திறை
நன்று கூறலு நாமவேற்
குன்ற னன்மகிழ் கொண்டவன்
றன்று ணைக்கழ றாழ்ந்தனன்.

(இ - ள்.) என்று - என்றுசொல்லி, உருகரந்து எய்து இறை - தன் வடிவை மறைத்துவந்த இறைவன், நன்று கூறலும் - விசதமாகச் சொல்லுதலும், நாமம் - அச்சத்தைத் தருகிற, வேல் - வேற்படையையுடைய, குன்று அன்னன் - மலையை நிகர்த்தவனாகிய வேந்தன், மகிழ்கொண்டு - மகிழ்ந்து, அவன் - அவ்விறைவனது, துணைக்கழல் - திருவடியிணையை, தாழ்ந்தனன் - வணங்கினான் எ - று.

கரத்தல் - மறைத்தல். பகுதி கர. இறை ஆகுபெயர். மகிழ்கொண்டு ஒரு சொன்னீரது. துணை - இரண்டு. அவன்தன் என்பதில் தன் சாரியை. இது பெரும்பாலும் ஆறனுருபுப் புணர்ச்சியில் வரும் (கஙச)

ஐய வின்னுநின் னருளினான்
மையில் வாரண வனத்திறை
செய்ய காதைகள் செப்பென
வெய்ய வேலவன் வேண்டினான்.

(இ - ள்.) ஐய - ஐயனே, நின் அருளினால் - உன் கருணையால், இன்னும் - இன்னமும், மை இல் - குற்றமற்ற, வாரண வனத்து இறை-

வாரணவனத் திறைவனது, செய்ய - செப்பமான, காதைகள் - கதைகளை, செப்பு என - சொல்லக் கடவையென்று, வெய்யவேலவன் - கொடிய வேற்படையையுடைய வேந்தன், வேண்டினன் - பிரார்த்தித்தான் எ - று.

வாரணவனம் - யானைக்காடு. இறை பண்பாகு பெயர். காதை காதா என்னும் வடசொற்றிரிபு. வெய்ய வெம்மைப்பண்படியாகப் பிறந்த பெயரெச்சம். இது வேல் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. ()

கலிவிருத்தம்

ஆதிநான் முகன்கதை யறைந்திட் டோமினி
யோதுதுஞ் சிலந்திபாம் பொருத்த லின்கதை
யாதவ மனனமர்ந் தினிது கேளென
மாதவ வடிவருள் வள்ளல் கூறுவான்.

(இ - ள்.) ஆதி - முதல்வனாகிய, நான்முகன் கதை - பிரமதேவனது கதையை, அறைந்திட்டோம் - சொன்னோம், இனி - இனி, சிலந்தி பாம்பு ஒருத்தலின் கதை - சிலந்தி பாம்பு யானை யென்பவற்றின் கதைகளை, யாதவ - யாதவமஹாராஜனே, மனன் அமர்ந்து - மனமமைந்து, இனிதுகேள் என - இனிதாகக் கேட்கக் கடவையென்று, மாதவ வடிவு - மாதவ வடிவத்தையுடைய, அருள் வள்ளல் - அருட்கொடையாளனாகிய சிவபிரான், கூறுவான் - சொல்வானாயினன் எ - று.

ஒருத்தல் - யானை. மனன் மனம் என்பதனீற்றுப்போலி. அமர்ந்து விரும்பி யெனினுமாம். அமர்தல் - விரும்புதல். பகுதி அமர். (கஉக)

நான்முகச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-சஙச.

பிரமதேவர் சத்தியலோகத்திலே ஒருபகல் நாரதர் முதலிய முனிவர்களும் இந்திரன் முதலிய தேவர்களும் கைகட்டி நிற்கவும், கந்தருவர்கள் யாழிசை பரப்பவும், அரம்பையர் வெண்கவரி வீசவும், பொற்பிரம்பேந்திய கஞ்சுகிகள் முன்னேநின்று இவர் இன்னாரின்னாரென்று காட்டுங்கால் வணங்குபவர்களுக்குத் தக்கவாறு அருள் பாலித்துக்கொண்டு ஆயிரமிதழ்த் தாமரையாசனத்திலே அரசிருந்தனர். அவ்வேளையிலே, பாற்கடலமுதமும் பனிமதிக் கலைகளும் ஒருருக் கொண்டாலொத்த சரஸ்வதியினது அழகின் பெருக்கை விழிகளாற் பருகி, கரையிலாக் காதற் கடலினுளழுந்தி, அருகுளாரனைவரையு மனுப்பிவிட்டு, அக் கலைமகளை நோக்கி, எனது நாவமுதே, எனக்கு நின்பாலோங்கிய ஆசையைத் தவிர்க்க நினதுருவொன்றால் முடியாது; ஆகையால் நூறு வடிவம் கொள்வாயாக" என்றுரைத்து, அவ்வாறே கொண்ட வடிவங்களனைத்திலும், ஆலிங்கனமாதி அறுபத்துநான்கு லீலைகளோடும் கலந்தனர்.

அப்போது யாவருமஞ்ச ஆயுதபாணிகளாய் முப்பதினாயிரம் அரக்கருதித்து, அப் பிரமதேவரை வணங்கி, "தந்தையே, யாங்கள் தீப்பசி தீரும்படி எழு தீவுகளையும் உண்டு எழுகடலையும் குடிப்பேமா? மேருவாதி மலைகளை அம்மனையாக ஆடுவேமா? தாரகைக் குலங்களைத் தப்பாது விழுங்குவேமா? அட்டயானைகளையும் அட்டநாகங்களையும் அட்டதிக்குப் பாலகர்களையும் வெல்லக்கடவேமா? எங்களுக்கு ஓர் குற்றேவலை இசைப்பீராக" என்று கேட்க; அது கேட்ட பிரமதேவர் நாம் பகற்காலத்திலே இம்மங்கையரைச் சேர்ந்ததால் இவரரக்கராக உதித்தனரெனத் துணிந்து, அவரை நோக்கி, "விந்தமலையிலிருப்பீராக" என ஆஞ்ஞாபித்தார். அவர்கள் அங்கடைந்து இந்திராதி தேவர்முதலியோர் ஏவல் கேட்கக் கொடுங்கோலுடையராகி, முனிவர் தவங்களை முற்றமுருக்கியும், மகளிர்தங் கற்பின் வன்மையைத் தவிர்த்தும், அந்தணர் யாகமனைத்தையு மழித்தும், தேவர்கள் சிறப்பைச் சிதைவுறச் சிதைத்தும், அரசு புரிந்திருந்தனர்.

அந்நாளிலே, முனிவர்கள் அவர்களாணைக் கஞ்சி, ஒரு நாழிகைக்குள்ளே, நித்தியகடன்களை முடித்துக்கொண்டு, சடைகுலைந்தாடவோடி, தனித்தனி யவர்களிடஞ் சென்று, இவர்கள் விரைவில் அழியவேண்டுமென்று சிந்தித்துக்கொண்டே, "உங்கட்குச் செல்வம் மேன்மேற் பெருக" என்று வாயால் வாழ்த்தி, நாடோறும் திரிந்துவர; இவர்களோடு வருந்தியுழலும் இந்திரன் ஓர்தினம் பிரமதேவரை யடைந்து, வணங்கித் துதித்து, இவற்றையெல்லா மறிவித்தனன். அவர் அதுகேட்டு மிகவும் கோபித்தவழி, அதினின்று முதித்த உக்கிரனென்னும் புதல்வனை நோக்கி, "மூதிய வரக்கர்களை முன்னவரென்று கருதாது வதைத்து வானவரைக் காப்பாயாக" என்று கட்டளையிட்டு, சிங்கம்பூண்ட ஓர் தேரும், அக்கினியாஸ்திரமும் அளித்தனுப்ப; அவ்வுக்கிரன் தந்தை தாயை வணங்கித் தேரிலேறி, இந்திராதியரேத்த, இருடிகள் வாழ்த்த

விந்தமலையை நோக்கி நடந்தனன். அவ்வுக்கிரனது வன்மையெல்லாம் ஒற்றாலுணர்ந்த திவாந்தகன் சயோத்துங்கன் நீலாங்கன் சமரகேசரி அரிலுண்டவன் முதலிய அரக்கர்கள் கோபக்குறியுடையராய்,பலவித ஆயுதங்களையும் கைக்கொண்டு, சேனைகள் புடைசூழத் தேரிலேறியெதிர்த்து, வீராவேசங்கொண்டு, கடுஞ்சமர் புரிய; உக்கிரன் தக்க கணைகளைத் தவறாது பொழிந்து தனித்தனி மாய்த்து, மற்றைச் சேனாதிபதி முதலிய அரக்கர்மீது அக்கினியாஸ்திரத்தை விடுத்து, அவரனைவரையும் ஒரு நொடியிற் றகித்து, தேவர்கள் பூமழைபொழிய, முனிவர்கள் ஆசீர்வதிக்க, யுத்தகளத்தினீங்கி, பிதாவையடைந்து வணங்கி, "எந்தையே, தேவரீர் பணித்தவாறே யாவையும் முடித்து வந்தேன்" என்று விண்ணப்பஞ் செய்தனன்.

அது கேட்ட பிரமதேவர் மைந்தர்மடிந்த வருத்தத்தால் மனங்கொதித்து நோக்கியவழி, அவ்வுக்கிரனு மடிந்தொழிய, அவர் பெரிதுங் கலங்கி, அப்புத்திரரையேயன்றி இவனையுமடித்த இப்பாவத்தை யொழித்து ஒரு சற்புத்திரனையும் பெறவேண்டுமெனச் சிந்தித்து, தென்கைலைமலையை யடைந்து, நாகலிங்கப்பெருமானைத் தரிசித்து, அம்மலைக்கும் நீலமலைக்குமிடையே யிருந்துகொண்டு விடயவுணர்ச்சிகளையகற்றி, அம்பிகை பாகனைக் குறித்து, அரிய நோன்பு புரிந்து, அப்பெருமான் தரிசனந் தந்தளிக்க வணங்கி, தங் கருத்தை விண்ணப்பஞ் செய்தனர். அக்கடவுள் "நான்முகனே! நமது தென்கைலைச் சிகரத்தைத் தெரிசிக்கப்பெற்றோரது தீவினை சூரியகிரணத்தைக் கண்ட இருள்போல நீங்கும்; ஆகலின், நினது கொலைப்பாவமும் நீங்கிற்று; இனி மாசிமாத மகநக்ஷத்திரத்திலே சூரியோதய காலையில் பொன்முகரியிலே மூழ்கி, இச்சிவலிங்கத்தை நூற்றெட்டுதரம் வலம்வந்து, அத்தனைமுறை நமஸ்கரித்து, அவ்வளவே பஞ்சாக்ஷரத்தையும் உச்சரித்து, மறு மாசிமகமளவும் இங்ஙனம் அநுட்டித்து வருவையேல் நற்புத்திரனைப் பெறுவாய்; இது நினக்குமாத்திரமன்று; இவ்வாறே அநுட்டித்தோர் யாவருமே புத்திரப்பேறடைவர்" என்று கட்டளையிட்டு மறைந்தருளினர்.

அவர் மனைவியோடு அவ்வாறே அநுட்டித்து வருங்கால், ஒரு அரிய புத்திரருதிக்க; அப்பொழுது சிவபெருமான் பிரசன்னராகி, ரிபு எனத் திருநாமந்தரித்து வேதமுடிபிற் கூறப்படும் தமது பரிபூரணத்துவத்தை ஐயமறத் தெளியும் தத்துவஞானத்தையும் அநுக்கிரகித்துவிட் டெழுந்தருளினர். அந்த ரிபுவும் மாதாபிதாக்களை வணங்கி, அவரிடத்திலே மிக்க மகிழ்ச்சியோடு விடைபெற்று, வனம் நதி மலை முதலிய சுத்தஸ்தானங்களிலே போயிருந்துகொண்டு, நிதாகனென்பவனுக் கனுக்கிரகித்து, அவரைக்கொண்டு சனகர் சனந்தனர் சனாதனர் சனற்குமாரர் முதலிய முனிவர்களுக்கு தத்துவஞானத்தைப் பாலித்து வீற்றிருக்க; பிரமதேவர் பெருங்களிப்படைந்து, நாகலிங்கப்பெருமானை நமஸ்கரித்துக் கொண்டு தன்னுலகத்தை யடைந்தார். ஆதலால், யாதவ மஹாராஜனே இத் தலம் புண்ணியபூமிகளனைத்தினும் மிகவுயர்ந்தது என்றுபதேசித்து, அவ்வரசர் வேண்டுகோளின்படியே சிலந்தி பாம்பு யானைகளின் சரித்திரத்தைக் கூறத்தொடங்கினர்.

---

# சீகாளத்திச் சருக்கம்

### தரவுகொச்சகக்கலிப்பா

மணியிமைக்கு மார்பவெழு வாயுகத்தி லொருசிலம்பி
புணருமுதற் பிறப்புணர்வாற் பொன்முகரிப் புனன்மூழ்கி
யிணையிறிருக் கயிலாயத் திறையைவழி படவெண்ணித்[றே.
தணிவிலன்பிற் கோயிறன்வாய்த் தந்துவினுற் சமைத்தன்

(இ - ள்.) மணி - ரத்நஹாரங்கள், இமைக்கும் - பிரகாசிக்கிற, மார்ப - மார்பையுடைய அரசனே, எழுவாயுகத்தில் - முதல்யுகத்தில், ஒரு சிலம்பி - ஒரு சிலந்தியானது, புணரும் - தனக்குண்டாயிருக்கிற, முதற்பிறப்பு உணர்வால் - முற்பிறப்பின் வாசனையாலுண்டான அறிவினுல், பொன்முகரி - பொன்முகரியாற்றின், புனல் - நீரில், மூழ்கி - முழுகி, இணை இல் - ஒப்பில்லாத, திருக்கயிலாயத்து - திருக்கயிலாயத்தில் வீற்றிருக்கிற, இறையை - சிவபெருமானை, வழிபட - வழிபடுதற்கு, எண்ணி - நினைத்து, தணிவு இல் - குறைவில்லாத, அன்பின் - அன்பினுல், கோயில் - திருக்கோயிலை, தன்வாய் - தன் வாயினின்றும் வெளிப்படுகிற, தந்துவினுல் - நூலினுல், சமைத்தன்று - செய்தது எ - று.

மணியிமைக்கு மார்ப என்றது யாதவவேந்தனை. மணி ஆகுபெயர். எழுவாய் - முதல். எழுவாயுகம் என்றது க்ருதயுகத்தை. சிலம்பி - ஒருவகைப் புழு. பொன்முகரி என்பதற்கு பொன்னொளியையும் ஒலியையும் உடையது என்பது பொருள். இதனை ஸ்வர்ணமுகரி யென்பர் வடநூலார். முகரம் ஒலி அதனையுடையது முகரி. "முகரக்களி வண்டடைகிடப்ப" என்ருர் பிறரும். இந்தப்பெயர் பிரமதேவனு லிடப்பெற்றது. இது பொன்முகலியென்றும் வழங்கும். சமைத்தன்று - அன் சாரியை பெற்று வந்த ஒன்றன் படர்க்கை யுடன்பாட் டிறந்தகால வினைமுற்று. இது பிரமனுக்குப் பிரதியாய் உலகத்தைச் சிருட்டித்தது கண்டு அந்தப் பிரமன் கோபித்துச் சபித்ததனுல், சிறு நூலினையுண்டாக்குகிற சிலந்தியாய்ப் பிறந்து, பிறகு அந்தப் பிரமனை வணங்கி அவனது அருளினுல் தென்கயிலைப் பெருமானைப் பூசித்து அரும்பெறன் முத்தி யடையவந்த மாதவனுறனது வடிவமென் றுணர்க இவன் விசுவகன்மனது கண்ணிற் பிறந்தவன். தந்து - வடசொல். (க)

மாமதிலுங் கோபுரமு மண்டபமு மாளிகையுந்
தோமில்கருப் பெயர்த்தலமுஞ் சூளிகையு முதலாய
காமர்திருக் கோயிலெலாங் களிச்சுரும்பு விளையாடுந்
தேமலர்த்தா ரகன்மார்ப செய்ததாற் சிறுசிலந்தி.

(இ - ள்.) களி - தேனுண்ட களிப்பினையுடைய, சுரும்பு - வண்டு கள், விளையாடும் - விளையாடுதற்குரிய, தேம் - தேனையுடைய, மலர்-மலர் களால் தொடுக்கப்பட்ட, தார் - மாலையைத் தரித்த, அகல் - அகன்ற, மார்ப - மார்பையுடையவனே, (யாதவவேந்தனே) மாமதிலும் - உயர்ந்த மதிலும், கோபுரமும்—, மண்டபமும்—, மாளிகையும்—, தோம் இல் - குற்றமற்ற, கருப்பெயர்த் தலமும் - கர்ப்ப க்ருஹமும், சூளிகையும்—, முதலாய - முதலாகிய, காமர் - அழகிய, திருக்கோயில் எல்லாம் - திருக் கோயில் முழுதும், சிறு சிலந்தி - அந்தச் சிறிய சிலந்தியானது, செய் தது - அமைத்தது எ-று.

தோம் தோஷம் என்னும் வடசொல்லின் விகாரம். மாளிகை - சந் நிதி (அந்தராளம்.) கர்ப்பக்ருஹம் - மூலஸ்த்தாநம். சூளிகை - சிகரத் தில் வைக்கும் கலசம். காமமருவு என்பது காமர் என விகாரமாயிற்று. ஆல் - அசை. ஆஸ்சர்யவஸ சகமுமாம். (உ)

இருந்தொர் தினை யளவேனு மிளைப்பாறப் பொழுதின்றிப்
பரிந்தொழிந்த விடமெல்லாம் பண்டுபோ னூலிழைத்து
வருந்திநெடு நாளாக வழுவாது பயிலுநாட்
சுருங்கலிலா வதனன்பு சோதித்தற் கெம்பெருமான்.

(இ - ள்.) ஓர் தினையளவு எனும் - ஒரு தினையளவாயினும், இருந்து- சும்மாவிருந்து, இளைப்பு ஆற - இளைப்பாறுதற்கு, பொழுது இன்றி-நேர மில்லாமல், பரிந்து ஒழிந்த இடம் எல்லாம் - அழிந்தொழிந்த இடமுழு தும், பண்டுபோல் - முன் இருந்ததுபோலவே, நூல் இழைத்து - நூல் நூற்று, வருந்தி - கஷ்டப்பட்டு, நெடுநாளாக - நெடுநாள்களாக, பயிலும் நாள் - பழகிவருகிற நாளில், எம்பெருமான் - சிவபெருமான், அதன் அன்பு-அச் சிலந்தியின் அன்பை, சோதித்தற்கு - சோதனை செய்தற்குத் திருவுளம்கொண்டு எ-று.

சோதித்தற்கு என்னும் வினையெச்சம் வரும் பாட்டிலுள்ள செய் தான் என்னும் வினைகொண்டு முடியும். ஓர் ஒரு என்பதன் விகாரம். தினையென்றது சிறுமைக் கெடுத்துக் காட்டுவதோ ரளவை. "தினைத் துணை நன்றிசெயினும்" என்றார் பெருநாவலர். (ங)

முன்னெரியுந் திருவிளக்கை முழங்கிமே லெழச்செய்தான்
மென்னூலின் றிருக்கோயில் வெந்தொழிந்த தொருநொடி
பொன்னோடை மால்யானைப் புகழ்வேந்த வதுகண்டு [யிற்
றன்னுவி யிழந்ததுபோற் றரைப்பட்ட தச்சிலந்தி.

(இ - ள்.) பொன் - பொன்னினாற் செய்யப்பட்ட, ஓடை - முகப டாத்தை யணிந்த, மால்யானை - பெரிய யானைப்படையையும், புகழ் - சீர்த்தியையும் உடைய, வேந்த - யாதவ மஹாராஜனே, முன் எரியும் -

தன் சந்நிதியி லெரிகிற, திருவிளக்கை - திருவிளக்கினை, முழங்கி - ஜ்வலித்துக் கொண்டு, மேல்எழச் செய்தான் - மேலெழப் பண்ணினன், (பண்ணுதலும்) மெல் நூலின் - மெல்லிய நூலினாற் சமைக்கப்பட்ட, திருக்கோயில் - திருக்கோயிலானது, ஒரு நொடியில் - ஒரு நொடிப் பொழுதில், வெந்து ஒழிந்தது - எரிந்தொழிந்தது, அது கண்டு - அதை நோக்கி, அ சிலந்தி - அந்தச் சிலந்தியானது, தன் ஆவி இழந்ததுபோல்- தன் உயிரை யிழந்தது போலவே, தரைபட்டது - தரையில் வீழ்ந்தது.

பொன் அழகுமாம். மால் மதமயக்கம் என்றலுமொன்று. நொடி - ஆகுபெயர். (௪)

அன்னோவித் திருக்கோயி லழல்பற்றி யவிந்ததுதான்
முன்னாளில் யானாற்று முடிவிறீ வினைச்செயலோ
வென்னாவிக் கொருதுணையா மெம்பிரான் றனக்கிந்தப்
புன்னூலின் றிருக்கோயில் பொருந்தாமை யோவறியேன்.

(இ - ள்.) அன்னோ - அந்தோ, இ - இந்த, திருக்கோயில் - திருக்கோயிலானது, அழல்பற்றி - நெருப்புப் பற்றி, அவிந்தது - அழிந்ததற்குக் காரணம், முன்நாளில் - முற்சநநத்தில், யான் ஆற்றும் - நான்செய்த, முடிவு இல்-முடிவில்லாத, தீவினைச் செயலோ-தீவினையின் செய்கையோ, என் ஆவிக்கு - என் உயிருக்கு, ஒரு துணை ஆம் - ஒப்பற்ற துணையாகிய, எம்பிரான் தனக்கு - எம்பெருமானுக்கு, இந்த —, புல்நூலின் திருக்கோயில் - சிறு நூலாற் சமைக்கப்பட்ட திருக்கோயிலானது, பொருந்தாமையோ - பொருத்தமில்லாமையோ, அறியேன் - உணர்ந்திலேன் எ-று.

அன்னோ - இரக்க விடைச்சொல். அவிந்தது ஆகுபெயர். ஆற்றல் - செய்தல். பகுதி ஆற்று எம்பிரான் தனக்கு என்பதில் தன் சாரியை. ()

ஆயிரநா ளுடல்வருந்தி யரையிருளுந் துயிலாது
வாயினால் வயிற்றிருந்து வளர்நூல்கள் பலவிழைத்துத்
தீயினா லழிந்திடற்கோ செய்தேனித் திருக்கோயி
றாயனையான் றிருவருளுந் தமியேன்பா லிவ்வளவோ.

(இ - ள்.) தீயினால் அழிந்திடற்கோ - நெருப்பினால் எரிந்திடுதற்காகவோ, ஆயிரம் நாள் - பல நாளாக, உடல்வருந்தி - உடம்புநொந்து, அரை இருளும்-நடுராத்திரியிலும், துயிலாது - தூங்காமல், வயிற்றிருந்து வளர் - வயிற்றிலிருந்து வளர்கிற, பல நூல்கள் - எல்லா நூல்களையும், வாயினால் இழைத்து - வாயினால் நூற்று, இ - இந்த, திருக்கோயில் செய்தேன் - இந்தத் திருக்கோயிலைக் கட்டினேன், தாய் அனையான் - தாயை நிகர்த்தவனாகிய சிவபெருமானது, திருவருளும் - திருக்கருணையும், தமியேன்பால் - தமியேனிடத்தில், இவ்வளவோ - இத்தனைதானோ எ-று.

அழிதல் ஈண்டைக்கேற்ப எரிதன்மேற்று. ஆயிரம் என்றது நூற்றுப் பத்தினைக் குறியாது மிகப் பலவென்பதைக் குறித்தது. வாயினால்

இழைத்து என வியையும். இழைத்தல் - செய்தல். அது இங்குக் கட்டுதல்மேற்று. கோயில் கட்டினேன் என்பது மரபு. அழிந்திடற்கோ வென்பதில் ஓகாரம் எதிர்மறையாய் என்றும் நிலைபெற்று அழியாதிருத்தற்கன்றோ வென்பதுபட நின்றது. எல்லாவுயிர்கட்குந் தாய்போற் கருணை சுரப்பவனாதலால் சிவபிரானைத் தாயனையான் என்றார். திருவருளும் என்னு மும்மை உயர்வு சிறப்பு. இறந்தது தழீஇதுயமாம். (சு)

என்றுபல தவவிரங்கி யெம்பெருமா னமர்கோயில்
பொன்றியது கண்டுமுயிர் போக்காமை பொல்லாதென்
றொன்றியவன் புடைச்சிலந்தி யொளிவிளக்கின் வீழ்ந்திறப்ப
லென்றெழுந்த திதுகண்டானடியர் துயர்பொறுக் கறியான்.

(இ - ள்.) என்றுபல - என்று பலவாறு, தவ - மிகவும், இரங்கி - மனமிரங்கி, எம்பெருமான் - எமது இறைவனாகிய சிவபிரான், அமர்கோயில் - அமர்ந்திருந்த கோயிலானது, பொன்றியது கண்டும் - அழிந்ததைப் பார்த்தும், உயிர் போக்காமை - நான் என்பிராணனை விடாதிருத்தல், பொல்லாது என்று - தீதென்று, ஒன்றிய அன்பு உடை - பொருந்திய அன்பினையுடைய, சிலந்தி - சிலந்தியானது, ஒளிவிளக்கில் வீழ்ந்து - ஒளிமயமாயிருக்கிற தீபத்தில் விழுந்து, இறப்பல் என்று - இறப்பேனென்று, எழுந்தது - மேலெழுந்தது, இது - இந்தச் செய்தியை, அடியர் துயர் - தொண்டரது துன்பத்தை, பொறுக்க அறியான் - பொறுத்தற் கறியாதவனாகிய சிவபெருமான், கண்டான் - நோக்கி எ - று.

தவவென்னு முரிசசொல் மிகப் பலவெனப் பொருள்பட்டு நின்றது. அமர்கோயில் - விரும்பி வீற்றிருத்தற்குரிய ஆலயம் என்றுரைத்தலுமாம். பொன்றுதல் - அழிதல். பகுதி பொன்று.. போக்காமை எதிர்மறைத் தொழிற்பெயர். இறப்பல் தன்மை யொருமை வினைமுற்று. அறிவுருவனாகிய சிவபிரான் இச் சிலந்தியினால் அறியாமையுடையனாயினன் என்பதுபட அடியர்துயர் பொறுக்கறியான் என்றார். கண்டான் - முற்றெச்சம். இது வரும் பாட்டிலுள்ள வெளிநின்று என்பதனோடு முடியும்.()

வெளிநின்று திருக்கையால் விளக்கில்விழா வகைவிலக்கி
யளவின்றி யெழுநம்பா லன்புடைய சிலந்திநீ
யுளமொன்று வேட்கையினை யுரைதருது நாமென்று
ளெளிநின்ற நின்னடிக்கீ ழுறுவிப்பா யென்றபதே.

(இ - ள்.) வெளிநின்று - வெளிப்பட்டு நின்று, விளக்கில் - தீபத்தின்மேல், விழாவகை - அந்தச் சிலந்தி விழுந்திறவாதபடி, திருக்கையால் - தனது திருக்கரத்தால், விலக்கி - தடுத்து, நம்பால்-எம்மிடத்தில், அளவு இன்றி எழும் - அளவுகடந் தெழுகின்ற, அன்பு உடைய - அன்பினையுடைய, சிலந்தி - சிலந்தியே, நீ-நீ, உள்ளம் ஒன்று வேட்கையினை - உன்

மனம் விரும்பினபொருளை, உரை - சொல்லக்கடவை, நாம் - யாம், தரு தும் - அதனைத் தருவோம், என்றான்-என்று திருவாய் மலர்ந்தருளினன், (அதுகேட்ட சிலந்தியானது) ஒளிநின்ற - ஒளியுருவாய் நின்ற, நின் அடிக்கீழ் உறுவிப்பாய் என்றது - உன் திருவடியின்கீ ழுறுவிக்கக்கடவை யென்று வேண்டிற்று எ - று.

விலக்குதல் - தடுத்தல். பகுதி விலக்கு. இல்லாமல் எனப் பொருள் படுவதாகிய இன்றியென்னுஞ் சொல் ஈண்டுக் கடந்து எனப் பொருடந்து நின்றது. நம்பால் என்பதில் பால் ஏழனுருபு. அன்பு - பத்தி. சிலந்தி அண்மைவிளி. வேட்கை ஆகுபெயர். ஒளிநின்ற என்றது ஒளியுருவாய் நின்ற என்றவாறு. உறுவிப்பாய் பிறவினை வினைமுற்று. பகுதி உறுவி. (அ)

மறையீறு நன்குணர்ந்து மாதவத்தின் றுறைநின்ற
கறைதீர்ந்த பெரியவர்க்குங் கிடையாத காற்கமலத்
தறவாழி யந்தணன்று னமர்வித்தான் மற்றவன்றன்
குறையாத வருட்பெருமை யாவரே கூறவல்லார்.

(இ - ள்.) (அதுகேட்ட) அறம் ஆழி அந்தணன் - சிவபெருமான், மறை ஈறும் - வேதமுடிவும், நன்கு உணர்ந்து - நன்றாயறிந்து, மா - பெரிய, தவத்தின் துறை நின்று - தவவழியிலே நின்று, கறைதீர்ந்த-களங்கமற்ற, பெரியவர்க்கும் - பெரியோர்க்கும், கிடையாத - கிடைக்காத, கால்கமலத்து - பாததாமரையின் கீழ், அமர்வித்தான் - (அந்தச் சிலந்தியை) அமர்வித்தருளினன், அவன் - அவனது, குறையாத - நிறைந்த, அருள்பெருமை - அருட்பெருமையை, கூறவல்லார் - சொல்லவல்லவர், யாவர் - எவர் எ - று.

மறையீறு என்பதை வேதாந்தம் என்பர் வடநூலார். தவத்தின் துறை - தவவொழுக்கம் எனினுமாம். கறை - களங்கம். அது ஐயத் திரிபுகள். ஐயம்-குற்றியோ மகனோவென்பது. திரிபு பழுதையைப் பாம் பென்பது. அறவாழி யந்தணன் - தருமக்கடலாகிய வேதியன். வேதியன் - வேதப்பொருளாயிருப்பவன். மற்று-அசை. கூறவல்லார் யாவர் என்ற வினா கூறவல்லார் ஒருவருமிலர் என்றவாறு. தன் - சாரியை. மற்று - அசைநிலை. குறையாத என்றது நிறைந்த வென்றபடி. (௯)

வஞ்சித்துறை

இதுசி லந்தியின், கதைக டும்பணி
மதவெ றும்பியின், கதைவி ளம்புதும்.

(இ - ள்.) சிலந்தியின்கதை இது - சிலந்தியின்கதை இதுவாகும், (இனி) கடும்பணிமத எறும்பியின்கதை - கொடிய பாம்பு மத யானை யென்பவற்றின் கதைகளையும், விளம்புதும் - இனிச் சொல்லுவோம் எ - று.

பாம்பிற்குக் கடமையாவது தன்னால் தீண்டப்பட்டவர் யாவரும் தென்றிசை வேந்தன் றிருநகரடைவது. பணி - வடசொல். இதற்கு படத்தையுடைய தென்பது பொருள். எறும்பி - யானை. (௪0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அரவொன் றிரண்டா முகத்தீற்றி
    லருமா மணிகள் கொடுவந்து
விரியும் புகழ்த்தென் கயிலைவரை
    விமலற் பூசித் தொழுகிடவவ்
வரதன் றன்னைப் பூசிப்ப
    வரைபோ னெடுங்கைப் பிறைக்கோட்டு
முரண்வெங் களிறொன் றடைந்ததவண்
    மூன்று முகத்தின் றொடக்கத்தே.

(இ - ள) இரண்டாம் உகத்து ஈற்றில் - இரண்டாம் யுகத்தின் இறுதியில், அர ஒன்று - ஒரு பாம்பானது, (தினந்தோறும்) அருமாமணிகள் - கிடைத்தற்கரிய பெரிய ரத்நங்களை, கொடுவந்து - கொண்டுவந்து, விரியும் - பரந்த, புகழ் - சீர்த்தியையுடைய, தென்கயிலைவரை - தென்கயிலை மலையில் எழுந்தருளியிருக்கிற, விமலன் - நிர்மலனாகிய சிவபிரானை, பூசித்து ஒழுகிட - அர்ச்சித்து ஒழுகாநிற்க, மூன்றும் உகத்தின் தொடக்கத்து - மூன்றும் யுகத்தின் ஆரம்பத்தில், நெடுங்கை - நீட்சியையுடைய துதிக்கையினையும், பிறைகோடு - பிறைபோலும் கொம்பினையுமுடைய, முரண்வெம் களிறு ஒன்று - மாறுபாட்டையுடைய கொடிய யானை யொன்று, அ - அந்த, வரதன் தன்னை பூசிப்ப - அந்தச் சிவபெருமானைப் பூசிக்கும்பொருட்டு, வரைபோல் - மலைபோல, அவண் அடைந்தது - அவ்விடத்தை வந்து சேர்ந்தது எ - று.

வரைபோல் களிறு என்றியைத்து மலையை நிகர்க்கிற ஒரு யானை யென் றுரைத்தலுமாம். உகம் - யுகம் என்னும் வடசொல்லின் விகாரம். இரண்டாம்யுகம் என்றது த்ரேதாயுகத்தை. மூன்றும்யுகம் என்றது த்வாபர யுகத்தை. வரதன் வரதः என்னும் வடசொற்றிரிபு. இதற்குப் பொருள் தன்னடியார் விரும்பின வரங்களைக் கொடுப்பவன் என்பது. இந்தப் பாம்பு திருக்கயிலாயத்தில், சிவபெருமான் ஒருநாள் ஆதிசேடன் முதலிய பாம்புகளை ஆபரணமாகத் தரிக்கும்பொழுது கண்டு, என்றும் தான் காணாத விரகவேதனையடைந்து, மகளிரிடத்துச் சேர்ந்திருப்பதை யறிந்து அவரால் சபிக்கப்பெற்று, பின்பு அவரது அருளால் இந்தத் திருப்பதியிற் பூசித்து முத்தியடையவந்த காளன் என்னும் பாம்பி னுருவ மென்பதும், இந்த யானை, சிவபெருமான் உமாதேவியாருந் தானு மாய்த் தனித்துத் திருக்கயிலையில் வீற்றிருக்கையில், அவர் சந்நிதி வாயி

லைச் சேர்ந்து, வாயிற் காவலர் தடுக்கவும் கேளாமல் உள்ளே போனத னுற் கோவங்கொண்ட உமாதேவியாரால் சபிக்கப்பெற்று யானையுரு வாகி, அவரது கருணையால் சிவபெருமானை வழிபட்டு முத்திபெறவந்த அத்தியென்னும் கணத்தலைவனது உருவமென்பதும் புராணப்ரசித்தம்.()

முழங்கு திரைப்பொன் முகரிநீர்
    மூழ்கிக் கையாற் புனன்முகந்து
குழந்தை மதிய முடித்தபிராற்
    குறுகிப் பாம்பு புனைந்தமணி
விழுந்து சிதறத் தள்ளியந்நீர்
    விழைவி னாட்டிக் கூவிளத்தின்
செழும்பல் லவங்கள் கொடுவந்து
    சென்னி மேலிட் டேகிற்றால்.

(இ - ள்.) (அந்த யானையானது) விழைவின்-அன்புடனே, முழங்கு-சத்திக்கிற, திரை - அலைகளையுடைய, பொன்முகரிநீர் - பொன்முகரி யாற்றின் நீரில், மூழ்கி - முழுகி, கையால் - தன் தும்பிக்கையினால், புனல்முகந்து - நீரை மொண்டுவந்து, குழந்தை மதியம் முடித்த - இளஞ் சந்திரனைத் தரித்த, பிரான் - சிவபெருமானை, குறுகி - அடைந்து, பாம்பு புனைந்த - அந்தப்பாம்பு அலங்கரித்த, மணி - ரத்நங்களை, விழுந்து சிதற - வீழ்ந்து சிதறும்படி, தள்ளி - தள்ளிவிட்டு, அம்நீர் ஆட்டி - (தான் கொணர்ந்த) அழகிய நீரினால் திருமஞ்சனம் செய்து, கூவிளத்தின் - வில் வத்தின், செழும்பல்லவங்கள் - செழுமையாகிய தளிர்களை, கொடு வந்து - கொணர்ந்து, சென்னிமேல் இட்டு - திருமுடிமீது சாத்தி, ஏகி ற்று - போயிற்று எ-று.

மதி - சந்திரன். இது அம்முச்சாரியை பெற்று மதியம் என்றாயிற்று. முழங்கு திரைவினைத்தொகை நிலைத்தொடர். கையென்றது ஈண்டைக் கேற்பத் துதிக்கையைக் குறித்தது. முகந்து என்பதற்குப் பகுதி முக. விழைவு - விருப்பம் (அன்பு.) கூவிளம் - வில்வமரம். பல்லவம் தளிர் எனப் பொருள்படுவதோர் வடசொல். இட்டு - சூட்டியென்றலுமாம். ()

மறுநா ளிரவியெ ழும்பொழுது
    வந்து பாம்பு திருமுடியி
னுறுகூ விளத்தின் பசுந்தழைகண்
    டொளிகான் மணிகள் விழச்சிதறி
யிறையோன் முடியி னிலைக்குப்பை
    யேற்றினார்மற் றியார்கொல்லோ
வறியே னன்னோ வெனவிரங்கி
    யமலற் பூசித் தகன்றதுவே.

(இ - ள்.) மறுநாள் - மறுதினத்தில், இரவி யெழும்பொழுது - சூரியன் உதிக்குங்காலத்தில், பாம்புவந்து - சர்ப்பம் வந்து, திருமுடியில் உறு - திருமுடிமேலுள்ள, கூவிளத்தின் பசுந்தழை கண்டு - வில்வத்தின் பசுமையாகிய இலையைக்கண்டு, அன்னோ-அய்யோ, ஒளிகால் - ஒளியைக் கக்குகிற, மணிகள் - ரத்நங்கள், விழச்சிதறி - விழும்படி சிதறி, இறையோன் முடியில் - இறைவனது திருமுடிமீது, இலைக்குப்பை எற்றினார் - இலைக்குவியலை யேற்றினவர், யார்கொல் - யாவரோ, அறியேன் - தெரிந்திலேன், என இரங்கி - என்றிரங்கி, அமலன் - நிர்மலனாகிய சிவபெருமானை, பூசித்து - ஆராதித்து, அகன்றது - நீங்கிப்போயிற்று எ-று.

ஏ ஈற்றசை. மறுநாள்-அடுத்தநாள். இரவி ரவியென்னும் வடசொல்லின் விகாரம். எழும்பொழுது - உதிக்குங்காலம். ஒளிகால் - ஒளியை வீசுகிற எனினுமாம். எற்றினார் வினையாலணையும் பெயர். அமலன் - நிர்மலன் என்பன வடசொற்கள். இவற்றிற்கு களங்கரஹிதன் என்பது பொருள். (கங)

பின்னே நெடுங்கைக் களிறடைந்து
பெருமான் முடியிற் பன்மணிகண்
டன்னே னருயிரின் றிருமுடிமே
லிட்ட பசுமென் றளிரகற்றிக்
கொன்னே பலகல் லிட்டுவைத்த
கொடியர் யாரோ வறிகிலே
னன்னோ வன்னோ வெனவிரங்கி
யனகற் பூசித் தகன்றதுவே.

(இ - ள்.) பின்னே - பிறகு, நெடுங்கை - நீண்ட துதிக்கையினையுடைய, களிறு - யானையானது, அடைந்து - வந்து, பெருமான் - இறைவனது, முடியில் - திருமுடியில், பலமணி கண்டு - அநேகமான ரத்நங்களைப் பார்த்து, அன்னோ அன்னோ - அந்தோ அந்தோ, என் - எனது, அரு உயிரின் - அருமையாகிய உயிராயிருக்கிற இறைவனது, திருமுடிமேல் - திருமுடிமீது, இட்ட - நான் சூட்டின, பசுமெல் தளிர் - பசுமையாகிய மெல்லிய தளிர்களை, அகற்றி - தள்ளிவிட்டு, கொன்னே-வீணாக, பலகல் இட்டுவைத்த - அநேகமாகிய செங்கற்களை யேற்றிவைத்த, கொடியர் - கொடியவர், யாரோ - எவரோ, அறியேன் - அறிந்திலேன், என இரங்கி - என்றிரக்கமுற்று, அநகன் - சிவபிரானை, பூசித்து அகன்றது - பூஜைசெய்துவிட்டு நீங்கிப்போயிற்று எ-று.

அன்னோ அன்னோவென்னும் அடுக்கு அவலம்பற்றி வந்தது. களிறு என மேல் வருதலால் நெடுங்கை யென்றது துதிக்கையைக் குறித்தது. உடம்பினுண்ணின்று உயிர்களை யியக்குவோனாதலால் சிவபிரானை என்னருயிர் என்றார். மணியென்றது ஈண்டு மாணிக்கத்தைக் குறித்ததாதலால் அதனைச் செங்கல் என்றனம். அநகன் வடசொல். இதற்கு பாபரஹிதன் என்பது பொருள். அகம் - பாபம். அ - எதிர்மறை. (கச)

மற்றை ஞான்று பாம்புவந்து
வரதன் முடிமேற் பசுந்தழைக
ளுற்ற வாறு காண்டலுமே
யுருமே றுண்ட தெனக்கலங்கிச்
சற்று மெண்ணு தொளிர்மணிக
டள்ளிப் பெருமான் முடிமேலென்
பற்ற லாரே யிதுசெய்தார்
பாவி யேன்மேற் பகைமையினால்.

(இ - ள்.) மற்றை ஞான்று - மறுநாள், பாம்புவந்து - பாம்பு அவ்விடத்திற்கு வந்து, வரதன் முடிமேல் - இறைவனது திருமுடிமேல், பசுந் தழைகள் - பசிய இலைகள், உற்ற ஆறு - வந்தவிதத்தை, காண்டலும் - நோக்குதலும், உருமேறு உண்டது என - பேரிடி தன்மேல் விழப்பெற்றதுபோல, கலங்கி - மனங்கலங்கி, என் பற்றலாரே-என்பகைவரே, பாவியேன்மேல் - பாவியாகிய என்மீது, பகைமையினால் - விரோதத்தால், சற்றும் எண்ணாது - சிறிதும் ஆலோசிக்காமல், பெருமான் முடிமேல் - இறைவனது திருமுடியின்மீது, ஒளிர் - விளங்குகிற, மணிகள் - ரத்நங்களை, தள்ளி - நீக்கிவிட்டு, இதுசெய்தார் - இத் தீமையைச் செய்தார்கள் எ - று.

உருமேறு உரும் ஏறு - ஆணியடியென்றலுமாம். பற்றலர் பற்றலார் என விகாரமாயிற்று. இதற்கு அன்பில்லாதவர் என்பது பொருள். வரதன் வரதః என்னும் வடசொல்லின் விகாரம். அன்பர் விரும்பின வரங்களைக் கொடுப்பவன். உருமேறுண்டதெனக் கலங்கியென்றது பாம்பினியற்கைக் குணத்தை விளக்குதற்கென்க. (கூ)

இதுசெய் தகன்றார் தமைக்காணி
னிலங்கு கடுமுள் ளெயிறழுந்தக்
கதழ்வெஞ் சினத்தா லுறக்கவ்விக்
கவ்வி யாவி குடியேனோ
வதுலன் றனக்கிப் பிழைசெய்து
மாவா வுய்ந்து போயினரே
முதல்வன் றனக்கி துடம்பாடோ
வெனப்பற் பலவு மொழிந்திரங்கி.

(இ - ள்.) இது - இந்தச் செய்கையை, செய்து - பண்ணி, அகன்றாரை - நீங்கினவரை, காணின்-காண்பேனாயின், கதழ்வெம் சினத்தால்-மிகுதியாகிய கடுங்கோவத்தினால், இலங்கு - விளங்குகிற, கடுமுள் எயிறு-விஷத்தோடு கூடி முள்ளைப்போற் கூர்மையாகிய என்பற்கள், அழுந்த - (அவர்களுடைய) உடம்பிற் பதியும்படி, உற கவ்வி கவ்வி - மிகுதியாய் கடித்துக் கடித்து, ஆவி - (அவரது) உயிரை, குடியேனோ - பருகமாட்டேனோ, ஆ ஆ - அந்தோ அந்தோ, அதுலன் தனக்கு - சமானரஹிதனு

கிய சிவபெருமானுக்கு, இ பிழைசெய்தும் - இந்தப் பெருங்குற்றத்தைச் செய்தும், உய்ந்துபோயினரே - பிழைத்துப் போனார்களே, ஈது - இது, முதல்வன்தனக்கு - கடவுளுக்கு, உடம்பாடோ-சம்மதமோ, என-என்று, பற்பலவும் மொழிந்து - பல சொற்களையுஞ் சொல்லி, இரங்கி - இரக்க முற்று எ - று.

ஆவா இரக்கவிடைச் சொல்லடுக்கு. முதல்வன் முன்னவன் (தலைவன்.) உடம்பாடு உடன்பாடு என்பன விரண்டும் சம்மதம் என்னும் ஒரு பொருள் குறித்தனவே. (கக)

நாளை யெல்லாங் காண்டுமென
நம்பி ரானைப் பூசித்துக்
காள மகன்ற தொருத்தல்வந்து
கடவுண் முடிமேற் கற்கள்கண்டு
நீளஞ் சனவெற் பெனவீழ்ந்து
நிலத்து நெடுங்கை யுறவடித்து
மூளுந் துயரா லலைபுரட்டு
முந்நீ ரென்ன வரற்றியதே.

(இ - ள்.) நாளை - நாளையத்தினம், எல்லாம் - எல்லாச் செய்தியையும், காண்டும் என - அறிவோம் என்று, எம்பிரானை - எம்பெருமானை, பூசித்து - ஆராதித்து, காளம் - பாம்பானது, அகன்றது - அவ்விடம் விட்டு நீங்கிப்போயிற்று, (அதன்பிறகு) ஒருத்தல் வந்து - யானையானது வந்து, கடவுள் முடிமேல் - இறைவனது திருமுடிமீதுள்ள, கற்கள் கண்டு - ரத்நங்களைப் பார்த்து, நீள் - நீண்ட, அஞ்சனவெற்பு என - கரிய மலைபோல, வீழ்ந்து - விழுந்து, நிலத்து - பூமியில், நெடுங்கை உற - நீண்ட துதிக்கை பொருந்தும்படி, அடித்து - புடைத்து, மூளும் - மேன் மேல் வளர்கிற, துயரால் - துன்பத்தினால், அலைபுரட்டும் - அலைமோதுகிற, முந்நீர் என்ன - கடல்போல, அரற்றியது - புலம்பி ஆரவாரித்தது எ - று.

ஒருத்தல் - ஆண்யானை. காளம் - ஆகுபெயர். அஞ்சனம் - கருமை. அரற்றல் அலறல் எனினும் மொக்கும். முந்நீர்-மூவகை நீர். அவை—ஆற்று நீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்பன. இவற்றா னியன்றதாதல்பற்றி கடலை ஆகுபெயரால் முந்நீரென வழங்குவர். நீர்குணமாதலால் படைத்தல், காத்தல், அழித்தல் என்னு மூன்று குணங்களெனக் கொண்டு, இம் முத்தொழில்களுக்கும் கடல் முதன்மையாயிருப்பதென்றலு மொன்று (கஉ)

எந்தாய் நினக்குத் திருவுளமோ
விதுபன் னிறத்த கற்கடமைச்
செந்தா மரையுங் குவளையுமென்
செழுங்கூ விளத்தின் றளிருமா

நந்தாச் சுடரே கொண்டனையோ
நறுமா மலருஞ் செழுந்தளிரு
மந்தோ வகற்றிக் கற்கடமை
யையா யாங்ஙன் பொறுத்திருந்தாய்.

(இ - ள்.) எந்தாய் - எந்தையே, நந்தா - அவியாத, சுடரே-தீபமே, ஐயா - ஐயனே, இது நினக்கு திருவுளமோ - இது உனக்குத் திருவுளந் தானோ, பல்நிறத்த - பல நிறத்தையுடையனவாகிய, கற்கள் தமை - கற்களை, செந்தாமரையும் - செந்தாமரை மலரும், குவளையும் - நீலோற்பல மலரும், மெல் - மெல்லிய, செழு - செழுமையாகிய, கூவிளத்தின் தளிரும் ஆ - வில்வத்தின் தளிருமாக, கொண்டனையோ - ஏற்றுக்கொண்டாயோ, அந்தோ-ஐயோ, நறுமாமலரும் - மணமுள்ள சிறந்த மலர்களையும், செழுந்தளிரும் - செழுமையாகிய தளிர்களையும், அகற்றி - நீக்கி, கற்கள் தமை - கற்களை, யாங்ஙன் - எவ்வாறு, பொறுத்திருந்தாய் - சுமந்திருந்தாய் எ - று.

திருவுளம்-சம்மதம். சிவபெருமானுக்கு வில்வபத்திரம் மிகவும் உரியதாதலால் மென்செழுங் கூவிளத்தின் தளிர் என்றார். அந்தோ இரங்கற்சொல். யாங்ஙன் - விகாரம். நந்தாச் சுடர் என்றது நித்தியமாய் ஸ்வயம் ப்ரகாசமான ஞானத்தையே ஸ்வரூபமாகவுடையவன் என்றவாறு. தாமரை குவளையென்பன ஆகுபெயர்கள். பொறுத்தல் - சுமத்தல். இது கற்கள் என்றதற் கேற்றபொருள். (கஅ)

ஆவா விறையும் பகைவர்பா
லானாற் றுணையா ரினியெனக்கு
மேவார் தமையுங் காண்கிலேன்
வினையே னென்று பலவிரங்கித்
தாவாப் பகையை நாளைநான்
சாய்த்த லொன்று சாதலொன்றென்
றோவா வன்பிற் பிரான்பூசித்
துவாப்போ யிற்றூற் றன்னுழையே.

(இ - ள்.) ஆவா - ஐயோ, இறையும் - இறைவனும், பகைவர்பால் ஆனால் - விரோதிகள் பக்ஷத்திற் சேர்ந்தால், இனி - இனி, எனக்கு-அடியேனுக்கு, துணையார் - சகாயமாவார் யாவர், வினையேன் - தீவினையேன், மேவார் தமையும் - பகைவரையும், காண்கிலேன்-பார்த்திலேன், என்று-என்று, பல இரங்கி - பலவாறு இரங்கி, தாவா - அழியாத, பகையை - விரோதியை, நாளை - நாளையதினம், (எவ்வகையாலாயினும்) சாய்த்தல் ஒன்று - கொல்லுதல் ஒன்று, சாதல் ஒன்று - நான் இறத்தல் ஒன்று, என்று - என்று சொல்லிக்கொண்டே, ஓவா அன்பின் - நீங்காத அன்பினால், பிரான் பூசித்து - சிவபெருமானைப் பூசித்து, உவா - யானையானது, தன் உழை - தன்னிடத்திற்கு, போயிற்று - போய்விட்டது எ - று.

இறை ஆகுபெயர். இறையும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. பால் - ஏழனுருபு இடப்பொருளது. துணை ஆகுபெயர். மேவார் - சேரா தவர் (பகைவர்.) தவா எனற்பாலது தாவா என விகாரமாயிற்றெதுகை யின்பொருட்டு. பகை ஆகுபெயர். ஓவா என்பதற்குப் பகுதி ஓவு. உவா - யானை. உழை ஏழனுருபு இடப்பொருளது. ஏ - ஈற்றசை. (கக)

கலித்துறை

பிறங்கு செங்கதிர் மண்டல மத்தமாம் பெயரிற்
சிறந்த மால்வரை மருங்கடை தரலினச் சிலம்பிற்
செறிந்த செம்மணிச் சேயொளி பாய்ந்தெனச் சிவந்து
கறங்க லைக்குட கடற்குளித் தனனொளி கரப்ப.

(இ - ள்.) பிறங்கு - பிரகாசிக்கிற, செங்கதிர் - செவந்த கிரணங்களையுடைய சூரியன், சிறந்த - மேலான, அத்தம் ஆம் பெயரின் - அஸ்த கிரி யென்கிற பெயரினையுடைய, மால் - பெரிய, வரைமருங்கு - மலையி னிடத்தில், அடைதரலின் - சேர்தலால், (அப்பொழுது) அ - அந்த, சிலம் பில் - மலையில், செறிந்த - நிறைந்த, செம்மணி - செவந்த ரத்தங்களின், சேயொளி - செவ்வொளி, பாய்ந்தென - பாய்ந்தாற்போல, சிவந்து - சிவக்கப்பெற்று, கறங்கு - ஒலிக்கிற, அலை - அலைகளையுடைய, கடல் - கடலில், ஒளிகரப்ப - தன் ஒளி மறையும்படி, குளித்தனன் - மூழ்கினன் எ - று.

கதிர் - ஆகுபெயர். அஸ்தமனகிரி யென்னும் வடசொல். அத்தமாம் பெயரின் வரையென விகாரமாயிற்று. "அத்தம் மனைய களிறு" என்றும் அத்தமென்றும் பொன்னஞ்சிலம்பு என்றும், பிறரும் இவ்வாறு கூறுதல் காண்க. பாயந்ததனால் எனற் பாலது பாய்ந்தெனத் திரிந்தது. (உ0)

விரவு மேற்கடல் செங்கட லாகவெற் பேறிப்
பரிதி வானவன் விழுதலுந் துளும்பிமேற் பரந்த
குருதி யேயிது வெனக்குட கடல்கிழித் தெழுந்த
வெரிம டங்கலந் தீயென வெழுந்தது செக்கர்.

(இ - ள்.) செக்கர் - செவ்வானமானது, இது - இது, பரிதிவான வன் - சூரியபகவான், விரவும் - பொருந்திய, மேல்கடல்-மேற்குக்கடல், (கருங்கடல்) செங்கடல் ஆக - செங்கடலாகும்படி, வெற்பு - அஸ்தமன கிரியின்மேல், ஏறிவிழுதலும் - ஏறி விழுந்தவுடன், மேல் துளும்பி பரந்த - மேலே தெறித்துப் பரவிய, குருதியே என - உதிரமே யென் னும்படியாகவும், குடகடல் - மேற்குக்கடலை, கிழித்து - பிளந்துகொண்டு, எழுந்த - மேலெழுந்த, எரி - எரிகிற, மடங்கலந்தீ என - வடவைத்தீ யைப்போலவும், எழுந்தது - காணப்பட்டது எ - று.

மடங்கலந்தீ யென்பதில் அம் சாரியை. மடங்கல் தீ - ஊழித்தீ. இதனை வடவாமுகாக்கினியென்றும் வழங்குவர். இது பாடபம் என்றும்

வடசொற்றிரிபு. பரிதிவானவன் - சூரியதேவன் என்றலு மொன்று. செக்கர் - செவ்வானம். (அந்திவானம்) என - போல. (உக)

துணைவ ரைப்பிரிந் துறையிளந் தோகையர் முகமு
மணம்வி ரித்தசெந் தாமரை மலர்களு மொத்த
கணவ ரைப்புணர் மடந்தையர் கருநெடுங் கண்ணு
மணிம லர்ச்செழுங் குவளையு மொத்தன வன்றே

(இ - ள்) (அப்பொழுது) துணைவரை - கணவரை, பிரிந்து உறை - பிரிந்து தனியேவாழ்கிற, இளந்தோகையர் - இளம்பெண்களது, முகமும் - முகங்களும், மணம்விரித்த - வாசனையைப் பரப்பின, செந்தாமரை மலர்களும் - செந்தாமரைப் பூக்களும், ஒத்த - ஒத்திருந்தன, கணவரை - தம் கொழுநரை, புணர் - சேர்ந்த, மடந்தையர் - மாதரது, கருநெடுங் கண்ணும் - கரிய நெடிய கண்களும், அணி - அழகாகிய, மலர்ச்செழுங் குவளையும் - செழுமையாகிய கருங்குவளை மலர்களும், ஒத்தன - ஒத்திருந்தன எ - று.

பத்மினிசாதிப் பெண்களது முகம் தாமரை மலர் மணம்வீச மாதலால் மணம்விரித்த என்னும் விசேடணத்தை முகத்துடனுஞ்சேர்த்துரைத்துக்கொள்க. தோகை ஆகுபெயராய் மயிலையுணர்த்தும். தோகை - கலாபம். மடந்தையர் பருவங்குறியாது பெண்பொதுவைக் குறித்தது. கண்ணுக் குவமையாகப் புணர்க்கப்பட்டமையால் குவளை கருங்குவளையென் றுரை வரையலாயிற்று. அன்று ஏ அசைகள். (உஉ)

இரவி நாயக னிறத்தலுஞ் செய்யமெல் லிதழிற்
கருமை கூரளி திகழ்மழைக் கட்செழுங் கமல
வரிவை யன்னமு நீத்தணி வண்டின மகற்றி
யுருவொ டுங்கினள் கட்புன லிடையறு தொழுக்கி.

(இ - ள்) செய்யமெல் இதழின் - சிவந்த மென்மையாகிய இதழ்களையுடைய, கருமைகூர் - கருமை மிகுந்த, அளிதிகழ் - வண்டுகள் மொய்த்து விளங்குகிற, மழை - மழைபோன் றொழுகாநின்ற, கள் - தேனினையுடைய, செழு - செழுமையாகிய, கமலம் - தாமரை யென்கிற, அரிவை - பெண், இரவி - சூரியனாகிய, நாயகன் - (தன்) கணவன், இறத்தலும் - அஸ்தமித்தவுடனே, அன்னமும் நீத்து - அன்னப் பறவைகளையும் நீக்கி, அணி வண்டு இனம் அகற்றி - அழகிய வண்டுக்கூட்டங்களையும் ஒழித்து, கள்புனல் - தேன்பெருக்கை, இடையறுது ஒழுக்கி - இடைவிடாமல் விட்டு, உரு ஒடுங்கினள் - (தன்) வடிவமொடுங்கினள் எ - று.

வடமொழியில் தாமரைக்காட்டின் பெயராகிய பதுமினி யென்பது பெண்பாற் சொல்லாதலால் அவ்வடமொழி முறைமைபற்றி, கமலவரிவையெனப்பெண்பாலாகக் கூறினர். "நாணென்னு நல்லாள்" மேல்பாற்றிசைப்பெண். "காஞ்சிப் புகழ்மகள்" "மேற்றிசை மகள்" "கீர்த்தித்

தையல்" எனப் பிறர் கூறுதலுங் காண்க. இனி இரவி நாயகன் என்றதும் சூரியனை பத்மினி வல்லபன் என்னும் வடநூன் மரபுபற்றி யென்க. இனி இக்கவியுள், சிவந்த மெல்லிய அதரத்தையும் கருநிறமிகுந்த செவ்வரி பரந்த குளிர்ந்த கண்களையுமுடைய செழுமையாகிய பதுமினி சாதிப் பெண்ணொருத்தி, சூரியன்போலுந் தன்கணவன் இறந்த அளவில் உணவையும் விட்டு, தான் அணிந்திருந்த கைவளையலெல்லாவற்றையும் கழற்றி யெறிந்து இடையறாது கண்ணீரைப் பெருக்கி உடம்பு வாடினள் என்னும் பொருளுந் தோன்றுதல் காண்க. வண்டு - கைவளையாதலை, "வண்டென்ப சங்கு இயற்றும் வளையளி வாளியைம்பேர்" என்பதனுலறிக. உம்மையை வண்டினம் என்பதனோடுங் கூட்டுக. இதழ் - அதரம். அரிவையென்றது பருவங்குறியாது பெண்பொதுவைக் குறித்தது. ()

அண்டர் நாடுதோய் செக்கர்மால் யானையி னழகு
கொண்ட வொற்றைவெண் மருப்பென வெழுபிறைக் கொ
வெண்டி ரைத்தடங் குவளையங் கண்மலர் விழித்துக் [ழுந்தை
கண்டு வப்பொடு முகிழ்த்தன தாமரைக் கைகள்.

(இ - ள்.) வெள் - வெண்மையாகிய, திரை - அலைகளையுடைய, தடம் - தடாகங்கள், அண்டர்நாடு தோய் - தேவலோகத்தை யளாவிய, செக்கர் - செவ்வானமாகிய, மால்யானையின் - பெரிய யானையினது, அழகு கொண்ட - அழகு பொருந்திய, வெள் - வெள்ளிய, ஒற்றை மருப்பு என - ஒற்றைக்கொம்புபோல, எழு - தோன்றிய, பிறைக்கொழுந்தை - இளஞ் சந்திரனை, குவளைமலர் - கருங்குவளை மலராகிய, அம்கண் விழித்து - அழகிய கண்களைத் திறந்து, கண்டு - நோக்கி, உவப்பொடு - களிப்புடனே, தாமரை கைகள் - தாமரைமலராகிய கைகளை, முகிழ்த்தன - குவித்தன எ - று.

பிறைதோன்றிய காலத்தில் தொழுதல் இயல்பு. சூரியன் அஸ்தமித்தலும் செவ்வானமும் பிறையும் தோன்ற. குவளையும் தாமரையும் முறையே மலர்ந்து மலர்ந்து குவிந்தன வென்றவாறு. அண்டர் நாடு - சுவர்க்கலோகம். செக்கர் - செம்மைக்குப் பரியாயம். உவப்பு - சந்தோஷம். முகிழ்த்தல் - கூப்புதல். (உ௪)

மீனி னந்திகழ் நீனிற வானமிவ் விரிநீர்
நானி லத்தினுந் தனதுபே ராணையே நடத்தும்
வேனில் வேந்தனுக் கிரவெனு மொருவன்மேல் விரித்த
நீனி றத்தவெண் முத்தணி மேற்கட்டி நிகர்க்கும்.

(இ - ள்.) மீன் இனம் திகழ் - நக்ஷத்திரக்கூட்டம் விளங்குகின்ற, நீல்நிறம் வானம் - நீலநிறத்தையுடைய ஆகாயமானது, விரிநீர் - பரந்த கடலாற் சூழப்பட்ட, இந்நானிலத்திலும் - இந் நிலவுலகமுழுதும்,

தனது—, பேராணையே - பெரிய ஆஞ்ஞையையே, நடத்தும் - நடத்துகின்ற, வேனில் வேந்தனுக்கு - மன்மதராசனுக்கு, இரவு எனும் ஒருவன் - இராத்திரியாகிய ஒருத்தன், மேல்விரித்த - மேலே பரப்பிய, நீல நிறத்த - நீலநிறத்தையுடைய, வெள்முத்து அணி - வெள்ளிய முத்துக்களால் (இடையிடையே) சித்திரித்த, மேல்கட்டி - மேற்கட்டியை, நிகர்க்கும் - ஒக்கும் எ - று.

நானிலம் - நான்காகிய நிலத்தையுடையது பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. நான்கு நிலங்களாவன :— குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்பவைகளிற் பாலைநீங்க நன்மக்கள் குடியிருத்தற்குரிய மற்றை நான்குமாம்; பாலைக்கு நிலமில்லையாதலால் நீக்கப்பட்டது. "நடுவணைத்திணை நடுவண தொழியப் படுதிரைவையம் பாத்தியபண்பே" மாயோன்மேய காடுறையுலகமுஞ், சேயோன்மேய மைவரை யுலகமும், வேந்தன்மேய தண்புனலுலகமும், வருணன்மேய பெருமணலுலகமும், முல்லை குறிஞ்சி மருதநெய்தலெனச் சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். "நானிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோதுகொண்டு, வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை" என்பதுவும் இக் கருத்தே பற்றி வந்தது. வேனில் வேந்தன் - வசந்த காலத்துக்குத் தலைவன். மேற்கட்டி - விதானம். (௨௫)

சாலு நல்லருட் சங்கரன் றிருவடி தரியா
மாலு நெஞ்சென விருண்டது மலர்தலை வான
மாலு மன்புடைத் துணைபிரிந் தவருமா குலத்த
தோலு நாகமு மன்றிமற் றுயிரெலாந் துயின்ற

(இ-ள்.) சாலும்நல் அருள் - மிகுந்த திருவருளையுடைய, சங்கரன் - பரமசிவனது, திரு அடி - சீர்பாதங்களை, தரியா - விரும்பி நினையாமல், மாலும் - செருக்குகின்ற, நெஞ்சு என - மனம்போல, மலர்தலை வானம் - பரந்த இடத்தையுடைய ஆகாயம், இருண்டது - கறுத்தது, ஆலும் அன்பு உடை - மிக்க அன்பினையுடைய, துணை - (தம்) துணைவரை, பிரிந்தவரும் - பிரிந்த விரகிகளும், ஆகுலத்த - மனக்கலக்கத்தையுடையனவாகிய, தோலும் நாகமும் - யானையும் பாம்பும், அன்றி - அல்லாமல், மற்று உயிர் எலாம் - மற்றையெல்லா வுயிர்களும், துயின்ற - தூங்கின எ - று.

சிவனடி நினையாதவருள்ளம் அஞ்ஞான விருளை அடைதலால் இவ்வாறு கூறினார். "மங்கை பங்கன் சிற்றம்பல மாதரியாக், கூழின்மலி மனம்போன் றிருளாகின்ற கோகிலமே" என்றார் திருக்கோவையாரினும்" தலைமகனைப் பிரிந்த தலைமகளுக்கும், தலைமகளைப் பிரிந்த தலைமகனுக்கும் பொதுப்படத் துணைபிரிந்தவரென்றார். துணை - ஆகுபெயர். (௨௬)

உண் மூணுமா ருயிரினுங் காதலித் தொழுகும்
பெண்ணின் போகமு மறந்துநம் பெரும்பகை பெயர்க்கும்
வண்ண மிவ்விருள் புலர்வதெப் போதென மனத்தி [ம்.
னெண்ணி யெண்ணி நொந்திருந்த வவ்விடத்தி லவ்விரண்டு

(இ - ள்.) அவ்விடத்தில் - அந்த விடத்தில், அவ்விரண்டும் - அவ் வானையும் பாம்பும், உண்ணும் ஊணும் - உண்ணுகின்ற உணவையும், ஆருயிரினும் - அரிய உயிரைக்காட்டினும், காதலித்து ஒழுகும் - விருப்பம் வைத்து நடக்கின்ற, பெண்ணின் போகமும் - பெண்ணின் கலவியையும், மறந்து - மறந்துவிட்டு, நம் பெரும்பகை - நமது பெரிய பகைவரை, பெயர்க்கும் வண்ணம் - ஒழிக்கும்படி. இவ்விருள் புலர்வது - இந்த இருட் பொழுது, விடிவது, எப்போது - எப்பொழுது, என - என்று, மனத்தின்—, எண்ணி எண்ணி - பலமுறை நினைத்து, நொந்திருந்த - வருந்தித் (துயிலாமல்) இருந்தன எ - று.

ஊண் - உண்ணப்படுவது. பகை - இருள் ஆகுபெயர்கள். (உஎ)

உலக மெங்குமோர் திகிரியை யுருட்டுபு விளக்கு
மிலகு சேயொளி மன்னவன் வருதலை யெழிற்பூத்
தலைய வாரண வொற்றரா லுணர்ந்துளந் தருக்கு
நிலைகு லைந்தது கருமைகூர் நீடிருட் குறும்பு.

(இ - ள்) உலகம் எங்கும்-உலகமுழுவதும், ஓர் திகிரியை - ஒற்றைச் சக்கரமாகிய ஒப்பற்ற ஆஞ்ஞா சக்கரத்தை, உருட்டுபு - உருளச்செய்து, (செலுத்தி) விளக்கும் - விளங்கச் செய்கின்ற, இலகு சேயொளி மன்னவன் - விளங்குகின்ற சிவந்த கிரணங்களையுடைய சூரியனாகிய சக்ரவர்த்தி, வருதலை - வருவதனை, எழில்பூத் தலைய - அழகிய தோன்றிப் பூப் போலுஞ் சூட்டினையுடைய, வாரணம் ஒற்றரால் - கோழிகளாகிய தூதர்களால், உணர்ந்து - தெரிந்துகொண்டு, கருமை கூர் நீடு இருள் குறும்பு - கருநிற மிகுந்த நீண்ட இருளாகிய குறுநிலமன்னர் கூட்டம், உளந்தருக்கும் நிலைகுலைந்தது-மனஞ்செருக்கியிருக்குந் தன்மை யொழிந்தது எ-று. இருள் நீங்கிற்றென்பதாம்.

பொழுது புலருங்காலத்துக் கோழி கூவுதலியல்பாதலால் சூரியன் வருதலைக் கோழியா லுணர்ந்த தென்றார். குறும்பு - சாதியை புணர்த் திற்று. ஆய் வேடு என்பனபோல. (உஅ)

அடர்தி ரைக்கடற் றலைமகன் சென்னியி லணிந்த
சுடர்வி ரிந்தொளிர் செம்மணி முடியெனத் தொன்னீர்க்
கடலெ லாஞ்செழுந் துகிர்க்கொடி படர்ந்தெனக் கதிர்கள்
படர வந்தெழுந் தன்றுசே யொளியிளம் பரிதி.

(இ - ள்.) சேயொளி இளம்பரிதி - சிவந்த கிரணங்களையுடைய இளஞாயிறு, தொல்நீர்க்கடல் எலாம் - பழைய கடல்நீர் முழுவதும்,

செழுந்துகிர்க்கொடி படர்ந்து என - செழுமையாகிய பவளக்கொடி படர்ந்தாற்போல, கதிர்கள் படர (தன்) கிரணங்கள் பரவும்படி, அடர் திரைக்கடல் தலைமகன் - நெருங்கிய அலைகளையுடைய சமுத்திரராஜனது, சென்னியில் - முடியில், அணிந்த —, சுடர்விரிந்து ஒளிர் - ஒளிவிட்டு விளங்குகின்ற, செம்மணி முடி என - சிவந்த ரத்நகிரீடம்போல, வந்து எழுந்தன்று - வந்து உதித்தது எ - று.

பரிதி - வடசொல். ஒளி - ஆகுபெயர். தலைமகன் - ஒருசொன்னீரது. கணவன் என்பது பொருள். செம்மணி யென்பதற்கு மாணிக்கமெனப் பொருள் கோடலுமாம். முந்நீர்க்கு முதனீராதலால் கடலைத் தொன்னீர்க்கடல் என விசேடணங் கொடுத்துக் கூறினார். செழுந்துகிர்க் கொடியென்பதில் செழுமை செம்மைப் பண்பு குறித்தது. படர்ந்ததென வெனற்பாலது படர்ந்தெனவென விகாரமாயிற்று. எழுதல் ஈண்டைக்கேற்ப உதித்தற்பொருள் குறித்து நின்றது.　(உக)

வளைக்கு லந்தரு முத்தெறி மறிதிரைக் கடலின்
முளைத்த சேயொளி ஞாயிறு மணிநிற முகுந்த
னிளைத்த நுண்ணிடைத் திருமக ளேரிள முலைக்கட்
டிளைக்கு மார்பிடைக் கவுத்துவ மணியினைச் சிவணும்.

(இ - ள்.) வளைக்குலம் தரும் - சங்கினங்கள் பெறுகின்ற, முத்து - முத்துக்களை, எறி - வீசுகின்ற, மறிதிரைக் கடலின் - மடங்குகின்ற அலைகளையுடைய (கரிய) சமுத்திரத்தில், முளைத்த - உதித்த, சேயொளி ஞாயிறு - சிவந்த கிரணங்களையுடைய சூரியன், மணிநிறம் முகுந்தன் - நீலமணிபோலு நிறத்தையுடைய திருமாலினது, இளைத்த நுண் இடைத் திருமகள் - மெலிந்த நுண்ணிய இடையினையுடைய இலக்குமியினது, ஏர் இளமுலைக்கண் - வளர்ச்சியையுடைய இளைய தனங்களினிடத்தே, திளைக்கும் - அழுந்துகின்ற, மார்பிடை - மார்பினிடத்தே, (உள்ள) கவுத்துவமணியினை (சிவந்த) கௌஸ்துபமென்னும் இரத்தினத்தை, சிவணும் - ஒக்கும் எ - று.

முலைப்பாரத்தைப் பொறுக்கலாற்றாது இடை இளைத்ததென்பது தோன்ற, "இளைத்த நுண்ணிடை" என்றார். ஏர் - எழுச்சி, அது எழுகின்ற நிலைமையென நிகழ்காலமே குறித்து நிற்கும். இனி - அழகுமாம். திளைத்தல் - இடைவிடாது பயிறல். இனி, திருமகளது முலைக்கண்கள் தன்மேல் அழுந்தப்பெற்ற மார்பென்றுமாம் "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்ப" "மலராள் தனத்துள்ளான்" என்றார் பெரியாரும். இனி இடையையும் முலைக்கண்களையுமுடைய திருமகள் வீற்றிருக்கின்ற மார்பென்றுமாம். பரப்பாலும் கருநிறத்தாலும் திருமால் மார்பு கடலுக்கும், ஒளி வீசுதலாலும் செந்நிறத்தாலும் கௌத்துவமணி சூரியனுக்கும் உவமை.　(கூ0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஓங்குபே ராசை மாறு வுறுசுடர்த் தலைவன் றன்னை
நீங்கலின் வாட்ட முற்று நின்றசெங் கமல வல்லி
வீங்கெழில் சிறந்து வாட்டம் வீடியுள் ளலர்ந்து வாழப்
பூங்கதிர்க் கைக ளாரப் புல்லிமெல் லெனத்தை வந்தான்.

(இ - ள்.) ஓங்கு - மேன்மேலும் வளர்கின்ற, பேர் ஆசை - பெரிய ஆசையானது, மாறு - நீங்காத, உறு - மிகுந்த, சுடர்த்தலைவன் - கிரணதிபன், (சூரியனாகிய நாயகன்) தன்னை நீங்கலின் - தன்னைவிட்டுப் பிரிதலால், வாட்டம் உற்று நின்ற - வாட்டமடைந்து நின்ற, செங்கமலம் வல்லி - செந்தாமரைக் கொடியாகிய நாயகி, வீங்கு ஒளி - மிக்க ஒளியினால், சிறந்து-மேம்பட்டு, வாட்டம் வீடி - வாட்டம் நீங்கி, உள் அலர்ந்து-மனமகிழ்ந்து, வாழ - வாழும்படி, பூகதிர் கைகள் - அழகிய கிரணங்களாகிய தன் கைகளால், ஆர - அழுந்த, புல்லி - அணைத்துக்கொண்டு, மெல்லென - மிருதுவாக, தைவந்தான் - தடவினான் எ - று.

ஓங்கு பேர் ஆசைமாறு - நீண்ட பெரிய திசைகளில் நீங்காத, என்று வேறுமொரு பொருள் தோன்றுமாறறிக. தைவரல் - தடவுதல். இதற்குப் பகுதி தைவா. சூரியன் தைவந்தான் என வியையும். (௩௧)

இன்னண மச்செஞ் ஞாயி றெழுவதன் முன்ன மெய்தித்
தன்னமர் கடவுட் பூசை தனக்கிகல் செய்வார்க் காண
வுன்னியோர் சிற்று ருக்கொண் டுமாபதி முடிமே லிட்ட
மென்னறுந் துணரிற் புக்கு வெவ்வர வொளித்த தன்றே.

(இ - ள்.) இன்னணம் - இவ்வாறு, அ - அந்த, செஞ்ஞாயிறு - சூரியன், எழுவதன் முன்னம் - தோன்றுதற்கு முன்பே, அ - அந்த, வெம் அரவு - கொடிய பாம்பானது, எய்தி - சந்நிதியை அடைந்து, தன் அமர்-தனது விருப்பத்துக்கேற்ற, கடவுள்பூசை - தேவதாராதநத்துக்கு, இகல் செய்வார் - விரோதம் பண்ணுவோரை, காண - பார்க்க, உன்னி-நினைத்து, ஓர் - ஒரு, சிறு உருகொண்டு - சிறு வடிவத்தைக்கொண்டு, உமாபதி - உமாநாயகனாகிய சிவபெருமானது, முடிமேல் இட்ட - சிரசின் மீதிட்ட, மெல் - மென்மையாகிய, நறு - மணமுள்ள, துணரில் - பூங்கொத்தில், புக்கு ஒளித்தது - புகுந்து மறைந்தது எ - று.

இன்னவண்ணம் என்பது இன்னணம் என மரூஉவாயிற்று. செஞ்ஞாயிறு - உதயகாலத்துச் சூரியன். உன்னல் - நினைத்தல். பகுதி உன். உமா பதி என்பன வடசொற்கள். உமா என்பது தமிழில் உமையென வரும். இதற்கு "ஆவீறையும்" என்பது விதி. துணர்-பூங்கொத்து. புக்கு

புகு என்னும் பகுதியொற்றிரட்டித்து இறந்தகாலங் காட்டிற்று. அர அரா என்பதன் விகாரம். இதற்கு "குறியதன் கீழாக் குறுகலும்" என்பது விதி. (௩௨)

ஒருத்தலு மவ்வா றெண்ணி யொய்யென வெய்தி யண்ண
றிருத்தகு முடிமே லிட்ட தேமலர் தளிர்க ளிட்டாங்
கிருத்தல்கண் டுள்ளந் தண்ணென் றெம்பிரா னென்பூ சைக்குக்
கருத்துவந் தான்கொ லென்று கரையில்பே ருவகை மூழ்கி.

(இ - ள்.) ஒருத்தலும் - யானையும், அவ்வாறு எண்ணி - அவ்வாறே நினைத்து, ஒய் என - விரைவாக, எய்தி - வந்து, அண்ணல் - சிவபெருமானது, திருத்தகு - அழகுபொருந்திய, முடிமேல் - முடியின்மீது, இட்ட - (தான் நேற்று) அருச்சித்த, தேம்மலர் - மணமுள்ள மலர்களும், தளிர்கள் - தளிர்களும், இட்டாங்கு - (தான்) அருச்சித்தபடியே, இருத்தல் கண்டு - இருப்பதைப் பார்த்து, எம்பிரான் - எம்பெருமான், என் பூசைக்கு - என்பூசனைக்கு, கருத்து உவந்தான் கொல் - திருவுள முவந்தான்போலும், என்று - என்று, கரை இல் - கரையற்ற, பேர் உவகை - பெருங் களிப்புக்கடலில், மூழ்கி - முழுகி எ - று.

ஒய்யென - விரைவுக்குறிப்பு. இட்டவாங்கு என்பது இட்டாங்கு என விகாரமாயிற்று. மூழ்கியென்னும் வினையெச்சம் மேல்வரும் பாட்டிலுள்ள தள்ள என்னும் வினைகொண்டு முடியும. ஒருத்தல் - யானை. தேமலர் தளிர்கள் என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கு நின்றன. உவகை ஆகுபெயர். கரையில் என்ற விசேடணத்தால் உவகைக் கடற் பெருமை விளங்கிற்று. (௩௩)

பின்னருச் சனைசெய் வான்போய்ப் பிறங்குபொன் முகரி யென்னு
நன்னதிப் புனன்மு கந்து நனிவிரைந் தெய்தி யையன்
றன்னெழின் முடியிற் போதுந் தளிருந்தன் கையாற் றள்ளப்
பன்னக வேந்து சீறிப் பனைக்கையின் புழைபுக் கன்றே.

(இ - ள்) பின் - பிறகு, அருச்சனைசெய்வான் - அருச்சனை செய்தற்கு, போய் - சென்று, பிறங்கு - விளங்குகிற, பொன்முகரியென்னும் - பொன்முகரியென்கிற, நல்நதிப்புனல் - சிறந்த யாற்று நீரை, முகந்து - மொண்டுகொண்டு, நனிவிரைந்து எய்தி - மிகு விரைவாய்வந்து, ஐயன் தன் - பரமசிவனது, எழில் முடியில் - அழகிய திருமுடிமேல் உள்ள, போதும் - மலர்களையும், தளிரும் - தளிர்களையும், தன்கையால் தள்ள - தனது துதிக்கையினால் தள்ள, (பூங்கொத்தில் மறைந்திருந்த) பன்னக வேந்து - அந்தச் சர்ப்பராஜன், சீறி - சீறியெழுந்து, பனை - பனைமரம் போன்ற, கையின் - துதிக்கையிலுள்ள, புழை - துவாரத்தில், புக்கன்று - புகுந்துகொண்டது எ - று.

செய்வான் செயவென்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம். இது போய் என்னும் வினைகொண்டு முடிந்தது. புனல் - திருமஞ்சன தீர்த்தம். கை - துதிக்கை. இதற்கு தும்பிக்கை யென்னும் ஒரு பெயரும் வழங்கும். பன்னகம் - வடசொல். இதனை, பந் - ந - கம், எனப் பிரித்து கால்களால் நடவாதது எனப் பொருள் கூறுவர் வடநூலார். இங்ஙனங் கூறவே மார்பினால் நகர்வது என்னும் பொருள் தோன்றிற்று. இப்பொருட்குரிய பதம் உரகம் என்பது. உரம் - மார்பு. கம் - நடப்பது. (நகர்வது.) (கச)

விடமொடுங் கெயிற்று வெய்ய வியாளமத் தகம்பு குந்து
குடையமும் மதத்து நால்வாய்க் குஞ்சர மூழி நாளி
லிடியெனப் பிளிறி யோடி யின்புனன் மொண்டு மொண்டு
கடுவிசை வீசி வீசிக் கையயர்ந் ததன்பின் மாதோ.

(இ - ள்.) விடம் - நஞ்சு, ஒடுக்கு - அடங்கியிருக்கிற, எயிறு - பற்களையுடைய, வெய்ய - கொடிதாகிய, வியாளம் - அந்தப் பாம்பானது, மத்தகம் - அந்த யானையின் சிரத்தில், புகுந்து - (துதிக்கையிலுள்ள துவாரத்தின்வழியாய்) நுழைந்து, குடைய - குடைதலால், மும்மதத்து - மூன்று மதங்களையும், நால்வாய் - தொங்குகிற வாயையுமுடைய, குஞ்சரம் - அந்த யானையானது, ஊழிநாளில் இடி என - பிரளயகாலத்தி லிடிக்கிற இடியைப்போல, பிளிறி - பேரொலிசெய்து, ஓடி - நதிக்கு ஓடி, இன்புனல் - இனிய நீரை, மொண்டுமொண்டு - முகந்து முகந்து, கடுவிசை - அதிவேகமாய், வீசிவீசி - எறிந்தெறிந்து, கை அயர்ந்து - கையலுத்து, அதன்பின் - அதன்பிறகு எ - று.

மாது ஓ அசைகள். மத்தகம் - மஸ்தகம் என்னும் வடசொற்றிரிபு. வெய்ய வெம்மைப் பண்படியாகப்பிறந்த பெயரெச்சம். இது வியாளம் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. இதுவும் மேல்வருங் கவிக ளிரண்டும் ஒரு வினைகொண்டு முடிதலால் குளகம் எனப்படும். இதற்கு "குளகம் பலபாட்டொருவினை கொள்ளும்" என்பது விதி (கரு)

நிலத்திடைக் கைய டித்து நிறைசெழுங் குருதி சோர
வுலத்தொடு மத்த கத்தை யுரிஞ்சியும் வான்றோய் கோட்டுப்
பிலத்துறு வேர்ம ரங்கள் பெயர்ந்திடத் தலையிற் பாய்ந்துங்
குலக்கடு வெகுளி நாகங் குடைதரு மாமை தன்னால்.

(இ - ள்.) நிலத்திடை - தரையின்மேல், கை அடித்தும் - துதிக்கையை அடித்துக்கொண்டும், நிறை - நிறைந்த, செழுங்குருதி சோர - செவ்வுதிரம் ஒழுகும்படி, உலத்தொடு - கற்றிரளோடு, மத்தகத்தை - தலையை, உரிஞ்சியும் - தேய்த்துக்கொண்டும், வான்தோய் - ஆகாயத்தையளாவிய, (உயர்ந்த) கோடு - கிளைகளையும், பிலத்து உறு - பாதாளத்தினளவும் ஊன்றிய, வேர்-வேர்களையும் உடைய, மரங்கள் - விருக்ஷங்கள்,

பக்கம். 263.



பாம்புக்கும் யானைக்கும் முத்திகொடுத்தது.

யர்ந்திட - பேர்ந்து போம்படி, தலையின் - தலையாலே, பாய்ந்தும் - ந்தமரங்களில்) மோதியும், கடுவெகுளி - கொடுங்கோவத்தையுடைய, வகாகம் - சிறந்த அந்தப் பாம்பானது, குடைதல் - குடைவது, தீராமை ன்றல் - ஒழியாமையால் எ - று.

கிலத்திடை யென்பதில் இடை ஏழனுருபு. சோர்தல் - ஒழுகுதல், தி சோர். உலம் - திரள்கல். பிலம் - பாதாளம். தலையின் என்பதில் ன் என்னும் ஐந்தாவது மூன்றாவதன் கருவிப்பொருளில் வந்தது. லம் - உயர்வு. (நுசு)

ம்முடைப் பகையுங் கொன்று நாமுமின் றிறத்து மென்று
மும்மதக் களிநல் யானை முன்னுபு வெகுளி பொங்கிக்
கொம்மெனப் பின்பெ யர்ந்து குழனெடுங் கைமு டக்கி
அம்மவெற் போடு ஞால மதிர்தரப் பாய்ந்த தன்றே.

(இ - ள்.) நம்முடை - நம்முடைய, பகையை வென்று - விரோதியை ஜெயித்து, நாமும் - யாமும், இன்று - இன்றைக்கு, இறத்தும் என்று - சாவோமென்று, மும்மதம் - மூன்று மதங்களையுடைய, களி - களிப்புள்ள, நல்யானை - சிறந்த யானையானது, முன்னுபு - நினைத்து, வெகுளி பொங்கி - கோவம் அதிகரித்து, பின்பெயர்ந்து - (இடம்விட்டு) பின்பெயர்ந்து, குழல் - தொளையுள்ள, நெடுங்கை - நீண்ட துதிக்கையை, முடக்கி - சுருட்டிக்கொண்டு, ஞாலம் - பூமியானது, கொம்மென அதிர்தர - கொம்மென்று அதிரும்படி, வெற்பொடு பாய்ந்தது - (அங்குள்ள) மலைமேல் தாக்கிற்று எ - று.

அன்று ஏ அசைகள். அம்ம - உரையசை. கொம்மென-ஒலிக்குறிப்பு. பகை ஆகுபெயர். இறத்தும் என்பதற்குப் பகுதி இற. மும்மதம் - கன்னமதம், கபோலமதம், கோசமதம் என்பன. கோசம் ஆண்குறி. முன்னுபு செய்புஎன்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். பின்பெயர்தல் - பின்வாங்குதல். அதிர்தர என்பதற்குப் பகுதி அதிர்தா. (நுஎ)

பாய்தலு முழக்கங் கேட்டுப் பண்ணவர் மனந்துண் ணென்றார்
தாதுறு பூவுங் காயு முகுத்தன தருக்க ளெல்லாஞ்
சீதநீ ரருவி யெல்லாஞ் சிதறின பறவை யீட்ட
மீதெழுந் தும்பர் தாரு வியன்சினை புக்க வன்றே.

(இ - ள்.) பாய்தலும் - (அவ்வாறு) தாக்குதலும், முழக்கம் - அந்தப் பெருஞ்சத்தத்தை, கேட்டு - காதினாற் கேட்டு, பண்ணவர் - தேவர், மனம் துண்ணென்றார் - மனம் நடுங்கினார், தருக்கள் எல்லாம் - மரங்கள் எல்லாம், தாது உறு பூவும் - இதழ்நிறைந்த மலர்களையும், காயும் - காய்களையும், உகுத்தன - உதிர்த்தன, அருவி - அருவிகள், சீதநீர் எல்லாம் - குளிர்ந்த நீர்முழுதும், சிதறின - சிந்திவிட்டன, பறவை ஈட்டம் - பறவைக்

கூட்டம், மீது எழுந்து - மேலேயெழுந்து, உம்பர் தாரு - தேவர்களுடைய கற்பக மரத்தின், வியன்சினை - பெருங்கிளைகளை, புக்க-சேர்ந்தன எ - று.

அன்று ஏ அசைகள். துண்ணெனல் அச்சக் குறிப்பு. தாது - மகரந்த மென்றலு மொன்று. தரு - வடசொல். சீதம் என்பதும் அதன் விகாரம். (௩அ)

முழையிடை யிருந்து நோற்கு முனிவரு நனிம ருண்டார்
குழன்மொழி மடவா ரஞ்சிக் கொண்டதம் புலவி நீங்கி
யிழைபுரை நுசுப்பு வாட்டு மிளமுலை முகட ழுந்தத்
தழுவநல் விஞ்சை வேந்தர் தணிப்பரு மகிழ்ச்சி கொண்டார்.

(இ-ள்.) முழையிடை இருந்து - மலைக்குகைகளில் தங்கி, நோற்கும் - தவஞ்செய்கிற, முனிவரும் - முனிவர்களும், நனி - மிகவும், மருண்டார் - வெருண்டார்கள், குழல்மொழி - குழலோசைபோலுஞ் சொற்களையுடைய, மடவார் - மாதர்கள், அஞ்சி - பயந்து, கொண்ட - கொண்டிருந்த, தம்புலவி நீங்கி - தமது ஊடலொழிந்து, இழைபுரை நுசுப்பு - நூலிழையை நிகர்த்த இடையை, வாட்டும்-வருத்துகிற, இளமுலை முகடு - இளமையாகிய தனங்களின் காம்பு, அழுந்த - பதியும்படி, தழுவ - ஆலிங்கனஞ் செய்துகொள்ள, நல்விஞ்சை வேந்தர் - சிறந்த வித்யாதர வேந்தர்கள், தணிப்பு அரு - தணிக்கரிய, மகிழ்ச்சி - சந்தோஷத்தை, கொண்டார் - அடைந்தார்கள் எ - று.

புலவி - புலத்தல். இதனை ஊடல் என்றும் பிணக்கம் என்றும் வழங்குவர். விஞ்சை - வித்தை. விஞ்சைவேந்தர் என்றது மாலிகாஞ்சன முதலிய மாயவித்தையையுடைய வேந்தரை. (௩௯)

தரளவொண் மணிகள் சிந்தத் தலைபிளந் தும்பல் வீழ்ந்த
தரவுமெய் நுறுங்கிற் றங்க ணழற்றிரித் தன்ன வேணிப்
பெரியவன் றேவி யோடும் பெருந்திறல் விடைமேற் றோன்றிப்
பொருவிறன் னுருவ நல்கிப் புரிந்துடன் கொண்டு சென்றான்.

(இ - ள்) உம்பல் - யானையானது, தரளம் ஒள்மணிகள் சிந்த - ஒட்பத்தையுடைய முத்துக்களாகிய மணிகள் சிந்த, தலைபிளந்து வீழ்ந்தது - தலை பிளவுபட்டு விழுந்தது, அரவும்-பாம்பும், மெய் நுறுங்கிற்று - உடல் நெரிந்தது, அங்கண் - அவ்விடத்தில், அழல் திரித்தன்ன - நெருப்பை முறுக்கிவிட்டாற்போன்ற, வேணி - சடாபாரத்தையுடைய, பெரியவன் - பெருமான், தேவியோடும் - பார்வதி தேவியுடனே, பெருந்திறல் - பெருவெற்றியையுடைய, விடைமேல் - இடபத்தின்மீது, தோன்றி - தரிசனந் தந்து, (அவ்விரண்டிற்கும்) பொருவு - ஒப்பற்ற, தன் உருவம் நல்கி - தன்னுருவத்தை யருள்செய்து, புரிந்து - விரும்பி, உடன்கொண்டு சென்றான் - தன்னோடு கொண்டுபோனான் எ - று.

நவமணிகளுள் ஒன்றாதலால் முத்தினை தாளமணியென்றார். தாள மணி-வடசொல். யானைத்தலையில் முத்துண்டென்பதனை, "தந்திவராக மருப்பிப்பி பூகந்தனிக்கதலி, நந்துசலஞ் சலமீன்றலை கொக்கு நளின மின்னார், கந்தாஞ்சாலி கழைகன்னலாவின்பல் கட்செவிகார், இந்து வுடும்பு கராமுத்த மீனுமிருபதுமே" என்பதனாலறிக. விடை - வ்ரு ஷம் என்னும் வடசொற்றிரிபு. தன்னுருவம் நல்கி யென்றது சாரூப்ய பதவியைத்தந்து என்றபடி. (சo)

பாயலை நெடுநீர் வேணிப் பண்ணவன் கயிலா யக்குச்
சீயொடு காள மத்தி யெனும்பெயர்ச் சிலந்தி பாம்பு
மாயிருங் களிறிம் மூன்றும் பரகதி பெற்ற வாற்றா
லாயது சீகா ளத்தி யெனும்பெய ரன்று தொட்டே.

(இ - ள்.) சீயொடு காளம் அத்தியெனும் பெயர் - (முறையே) காளம் ஹஸ்தி யென்னும் வடசொற் பெயர்களையுடைய, சிலந்தி பாம்பு மாயிருங் களிறு - சிலந்தி பாம்பு மிகப்பெரிய யானையாகிய, இம்மூன்றும் - இந்த மூன்றும், பரகதிபெற்ற ஆற்றால் - மேலான பதவியை யடைந்த காரணத்தால், அன்று தொட்டு - அன்று தொடங்கி, பாய் அலை - பாய்கிற அலைகளையுடைய, நெடுநீர் - நெடிய கங்காநதி தங்கிய, வேணி - சடாபாரத்தையுடைய, பண்ணவன் - தேவனாகிய சிவபெருமானது, கயிலாயக்கு - திருக்கயிலைக்கு, சீகாளத்தியெனும் பெயர் - ஸ்ரீகாளஹஸ்தி யென்னும் திருப்பெயர், ஆயது - உண்டாயிற்று எ - று.

கயிலாயத்துக்கு எனற்பாலது அத்துச் சாரியை பெறாது கயிலாயக்கு என வந்தது. மா இரு என்னும் தொடரில் வகரவுடம்படு மெய் தோன்றாமைக்கும் யகரந் தோன்றினமைக்குங் காரணம் உரிச்சொல் லினையாதலென்க. கடலை நெடுநீர் என்றது அதிற் பெரிய நீரொன்றின் மையானென்க. "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத், துண் ணின் றுடற்றும் பசி" என்னுந் திருக்குறளினும் விரிநீர் என்றதற்கும் கருத்திதுவேயாதலறிக. (சக)

கலிவிருத்தம்

என்னமதி யங்குலவு மீர்ஞ்சடை மறைத்தோன்
சொன்னவகை கேட்டுமகிழ் தூங்கியடல் வெள்வேன்
மன்னவ னருட்கடலின் மாணடி பணிந்தா
னின்னுமொரு நன்கதை யிசைத்தருள்க வென்றே.

(இ - ள்.) என்ன - என்று, மதியம் குலவும்-சந்த்ர கண்டம் விளங்கு கின்ற, ஈர்சடை - குளிர்ந்த சடாபாரத்தை, மறைத்தோன் - மறைத் தெழுந்தருளின சிவபெருமான், சொன்னவகை - சொல்லிய விதத்தை,

அடல் வெள்வேல் - வெற்றியும் வெண்மையுமுள்ள வேற்படையையு டைய, மன்னவன்-யாதவவேந்தன், கேட்டு - செவியேற்று, மகிழ்தூங்கி - களிப்படைந்து, இன்னும் - இன்னமும், ஒரு நல்கதை - ஒரு சிறந்த கதையை, இசைத்தருள்க என்று - திருவாய் மலர்ந்தருளுக என்று, அருள் கடலின் - க்ருபாஸமுத்ரமாகிய அந்தப் பெருமானது, மாண் அடி - மாட்சி யமைந்த திருவடியை, பணிந்தான் - வணங்கினன் எ - று.

வெல்வேல் என்றும் பாடம். மதியங் குலவும் என்பதனை மதி அங்கு உலவும் எனவும் கண்ணழித்துப் பொருளுரைத்தலுமாம். கங்கை தங்கிய சடையாதலால் அதனை ஈர்ஞ்சடை என்றார். சடை மறைத் தோன் என்றது விடசங்கமனே. இசைத்தல் - சொல்லல். பகுதி இசை.

மேற்படி வேறு

ஒதினஞ் சிலந்திபாம் பொருத்த லின்கதை
காதுவில் வேட்டுவன் கதைவி ளம்புதும்
யாதவ மனனமர்ந் தினிது கேளென
மாதவ வடிவருள் வள்ளல் கூறுவான்.

(இ - ள்) மாதவ வடிவு - மிகப்பெருந்தவத்தோனது உருவுகொண்டு வந்த, அருள்வள்ளல் - அருட்கொடையாளனாகிய சிவபெருமான், சிலந்தி பாம்பு ஒருத்தலின் கதை - சிலந்தி பாம்பு யானை யென்பவற்றின் சரி தத்தை, ஓதினம் - சொன்னோம், (இனி) காதுவில் - போர் செய்தற்குரிய வில்லினையுடைய, வேட்டுவன் கதை - வேடனாகிய கண்ணப்பன் சரி தத்தை, விளம்புதும் - யாம் கூறுவோம், யாதவ - யாதவ வேந்தனே, மனன் அமர்ந்து - மனவிருப்பங்கொண்டு, இனிதுகேள் என - இனிதாகக் கேட்கக் கடவையென்று, கூறுவான் - சொல்வானாயினன் எ - று.

காதுவில் வினைத்தொகை நிலைத்தொடர். மாதவ வடிவு என்ப தற்கு மன்மதனுக்கு நிகரான அழகுள்ளவன் என்றுரையுரைத்தலுமாம். மாதவன் - மாதவ: என்னும் வடசொற்றிரிபு. இதற்கு வசந்தகால மன் மதன் என்பது பொருள். "வேனில்வேள்கணை" என்றருளினர் மணி வாசகரும். (சரு)

## சீகாளத்திச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - சஎஎ.

---

முற்சென்ற திரேதாயுகத்திலே, ஒரு சிலந்தி பூர்வ ஜன்ம உணர்ச்சியால் பொன்முகரியிலே ஸ்நானஞ்செய்து தென்கைலாயப் பெருமானை வழிபடச் சிந்தித்து, அன்பினது முதிர்ச்சியால் வயிற்றிலிருந்து வளர்கின்ற நூல்களை யெல்லாம் வாயினாலே இழைத்து இழைத்து அவற்றினால் மதில், கோபுரம், மண்டபம், மாளிகை, கருப்பக்கிருக முதலியவைகள் செய்து, நாடோறும் இளைப்பாறுதற்குத் தினைப்பொழுது மில்லாமல், அறுபட்ட இடங்களை முன்போலவே புதுக்கிக்கொண்டிருந்தது. அப்பொழுது பெருமான் அதனது அன்பைச் சோதித்தற்குத் திருவுளங் கொண்டு, முன்னெரியும் தீபத்தைச் சுடர்விட்டெழும்படிசெய்து, ஒரு கொடியினுள்ளே அவ்வாலயத்தைத் தகித்தருள; அதை நோக்கிய அச்சிலம்பியானது "அந்தோ! அந்தோ!! இத் திருக்கோயிலானது அக்கினிபற்றி யழிந்தது யான் முற்செய்த தீவினையோ! என துயிர்த்துணைவராகிய எம்பெருமானுக்கு இப்புல்லிய ஆலயத்திலே விருப்பமில்லாமையோ! யானறியேன். இவ்வாறழிதற்கோ அனேக நாளாக வருந்தி அர்த்த யாமத்திலும் நித்திரையின்றிச் செய்தேன். இப்பெருமான் எளியேனிடத்துவைத்த திருவருளும் இவ்வளவுதானோ!" என்று புலம்பி, எம்பெருமான் கோயிலழிந்தும் யான் உயிரோடிருப்பது தகுதியன்றெனக் கருதி, விளக்கிலே வீழ்ந்திறக்கும்படி துணிந்தெழுந்தது. அதை யுணர்ந்த அருட்பெருமான் வெளிப்பட்டு, விளக்கில் விழாவண்ணம் விலக்கி, "சிலந்தியே, நினது விருப்பம் யாது?" என வினவி, அதன் வேண்டுகோளின்படியே வேதமுடிவை யுணர்ந்த மெய்த்தவர்களுக்கும் கிடைத்தற் கரிய திருவடியிலே கலப்பித்தருளினார்.

பின்பு திரேதாயுகத்தினது முடிவிலே ஒரு பாம்பு நாடோறும் அரிய இரத்தினங்களைக்கொண்டு அப் பரம்பொருளை வழிபட்டுவர; துவாபரயுகத்தின் முதலிலே ஒரு யானையும் பரிவோடு பொன்முகரியிலே ஸ்நானஞ்செய்து, துளைக்கையினால் திருமஞ்சன முகந்துவந்து, அப்பாம்பணிந்த மணிகளனைத்தையும் சிதறத் தள்ளிவிட்டு, அபிஷேகஞ்செய்து, வில்வத்தளிர்களைச் சூட்டிச் சென்றது. மறுநாள் சூரியோதயத்திலே பாம்பு வந்து அத்தளிர்களைக் கண்டு "அன்னோ! அன்னோ!! திருமுடியிலே ஒளிபெற்ற மணிகளைச் சிதறச்செய்து இலைக்குப்பையை யேற்றினவர் யாவரோ அறியேன்" என இரங்கிப் பூசித்து நீங்க; பின்னை யானையடைந்து, அம்மணிகளைக் கண்டு, "ஐயோ! யான் சூட்டிய பசிய மெல்லிய தளிர்களையும் மலர்களையும் அகற்றி, பல கற்களையிட்டு வைத்த கொடியவர் யாவரோ உணரேன்" என்று கலங்கி, அப் பரமனைப் பூசித் தகன்றது. மற்றை நாளிலே பாம்பு வந்து, அவ்விறைவனது திருமுடியிலே பத்திரபுஷ்பங்களைக் கண்டவுடனே மிக அயர்ந்து, ஆ ஆ! சிறிது மென்னாது இம்மணிகளைச் சிதறி இக்கொடுஞ்செய்கை புரிந்தோர் எனது பகைவரே. இது செய்தும் பிழைத்துச் சென்றனரே! அவரைக் காண்

பேனுயின் விஷப்பற்க ளமுந்தும்படி கவ்விக்கவ்வி உயிர் குடியேனே! இது முதல்வனுக் குடன்பாடோ!" என்றேங்கி, நாளை யெல்லாங் காண்பேமென்று நம்பிரானைப் பூசித்துச் செல்ல; யானைவந்து அவ்வரவ மணிகளைக் கண்டு, பூமியிலே நெடிய கையை மோதிக்கொண்டு வீழ்ந்து புலம்பி, "எந்தாய், இது நினக்குத் திருவுளமோ? இக் கற்களை எல்லாம் தாமரை குவளை வில்வமாகத் தரித்தீரோ? இவற்றை எவ்வாறு பொறுத்திருந்தீர்? ஆ ஆ! தேவரீரும் பகைவர் பக்ஷமாக இருந்தால், எனக்குத் துணை யாவார் யாவர்? பகைவரையுங் கண்டேனில்லை" எனத் துக்கித்து, "யான் எவ்விதத்திலும் நாளை என் பகைவரைக் கொல்வேன்; அல்லது சாவேன்" என்று நிச்சயித்துக்கொண்டு அண்ணலைப் பூசித்தகன்று, அன்றிரவு முழுதும் நித்திரையின்றி விடியற்கால வரவை நோக்கியிருந்தது.

அரவமும் இவ்வாறே சிந்தித்துக்கொண்டு நித்திரையின்றியிருந்து, சூரியனுதிக்கு முன்னமே சந்நிதியை யடைந்து, அப்பரமன் முடியிலே சூட்டப்பட்டிருக்கும் பூங்கொத்திலே உடலைச் சுருக்கிக்கொண்டு, பகைவரைக் காணவேண்டுமென்று எண்ணியிருந்தது. யானையும் விரைய வந்து, பத்திர புஷ்பங்கள் தான் சூட்டியபடியே யிருத்தல்கண்டு மனங் குளிர்ந்து, "சிவபெருமான் என் பூசைக்கு இன்றுதான் திருவுள மகிழ்ந்தார்போலும்" என்று களிப்படைந்து, பின்பு பொன்முகரியிலே மூழ்கி திருமஞ்சன முகந்துவந்து, விமலரது திருமுடியிலிருக்கும் பத்திரபுஷ்பங்களைக் கையாற் றள்ள; அவற்றில் மறைந்திருந்த அரவஞ் சீறி, அக்கையிலுள்ள துவாரத்தின் வழியாக மத்தகத்திற் புகுந்து குடைந்தது. யானை சகியாது ஊழிக்காலத் திடிபோல முழங்கி, நீரை முகந்து முகந்து விசையாக வீசி வீசிக் கைசோர்ந்து, அதன் பின்னர் பூமியிலே புழைக்கையை மோதியும், உதிரஞ்சோர மத்தகத்தை யுரிஞ்சியும், மரங்கள் பெயரத் தரையிற் பாய்ந்தும், அக்குடைவு தீராமையால், "நம்முடைய பகையையுங் கொன்று நாமும் இறப்பேம்" எனச் சிந்தித்துச் சினம்பெருகி, துளைக்கையை முடக்கிக்கொண்டு, பூமியுமதிரும்படி பின்பெயர்ந்து பாய்ந்து, தலைபிளந்து வீழ்ந்தது. அரவமும் மெய்நுறுங்கியது. அவ்விடத்திலே உமாபதியார் தேவியாரோடு விடைமேற்றோன்றி, தரிசனந்தந்து, அவ்விரண்டற்கும் சாரூபமளித்து, உடன்கொண்டு சென்றனர். இம்மூன்றும் முத்தி யடைந்தமையால், அத்தலத்திற்குச் *சீகாளத்தியென்னுந் திருநாமமுண்டாயிது. என்றருளிச்செய்து, அவ்வரசர் வேண்டுகோளின்படியே கண்ணப்பநாயனார் சரித்திரத்தைக் கூறத் தொடங்கினர்.

*சீ - சிலந்தி; காளம் - பாம்பு; அத்தி - யானை.

சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்தது.

# கண்ணப்பச் சருக்கம்.

---

கலித்துறை

மதியின் மானிளங் கன்றினை வரிசிலைக் குறவர்
குதலை மென்மொழிப் பேதையர் பச்சிளங் கொடிப்புல்
பதும மென்கையா னீட்டுபு பரிவுட னழைக்கும்
புதுமை கொண்டவெற் புடுத்தது பொத்தப்பி நாடு.

(இ - ள்.) மதியில் - சந்திரனிடத்திலுள்ள, மான் - மானினது, இளங்கன்றினை - இளங்கன்றை, வரி - வரிந்து கட்டப்பட்டிருக்கிற, சிலை - வில்லையுடைய, குறவர்-குறவரது, மெல் - மென்மையாகிய, குதலை மொழி - மழலைச் சொற்களையுடைய, பேதையர்-பேதைப் பருவப்பெண்கள், பசு இளங் கொடிப்புல் - பசுமையும் இளமையுமுள்ள கொடிப் புல்லை, மெல் - மெல்லிய, பதுமம் - தாமரை மலர்போன்ற, கையால்-கையினால், நீட்டுபு - நீட்டி, பரிவுடன் அழைக்கும் - விருப்பத்தோடு அழைத்தலாகிய, புதுமைகொண்ட - வியப்பைக் கொண்டிருக்கிற, வெற்பு - மலைகளால், உடுத்தது - சூழப்பெற்றது, (யாதெனின்) பொத்தப்பி நாடு - பொத்தப்பி நாடாம் எ-று.

வரிசிலை - நீண்டவில் எனினுமாம். சிலை ஶிலா என்னும் வட சொற்றிரிபு. பேதையர் எழாட்டைப் பிராயத்துப் பெண்கள். கொடிப் புல் - ஓர் வகைப்புல். நீட்டுபு - செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். இது அழைக்கும் என்னும் வினைகொண்டது. (௧)

தாவி லத்திரு நாட்டசீ றூர்களிற் றலைமை
மேவி நீணறுஞ் சந்தன நிரைத்துவெண் கவரி
மாவின் மென்மயிர்க் கற்றைவேய் சிற்றில்கள் வயங்கி
யோவில் சீருடைப் பூரெனக் குறிச்சியொன் றுண்டால்.

(இ - ள்.) தாவு இல் - கெடுதலில்லாத, அ - அந்த, திருநாட்ட - திருநாட்டிலுள்ளன வாகிய, சீறூர்களில் - சிற்றூர்களில், தலைமை மேவி - தலைமை யடைந்து, நீள் - நீண்ட, நறு சந்தனம் நிரைத்து - மணமுள்ள சந்தன மரங்களை வரிசையாக வுடையதாகி, வெள்கவரி மாவின் - வெண்

கவரிமாவினது, மெல் மயிர் கற்றை - மெல்லிய மயிர்க்கற்றை, வேய் - மூங்கில், வயங்கி - விளக்கமுற்று, ஓவு இல் - நீங்காத, சீர் - சிறப்பினை யுடைய, உடுப்பூர் என - உடுப்பூரென்று, குறிச்சி ஒன்று உண்டு - ஒரு குறிச்சியுண்டு எ-று.

ஆல் - அசை. தாவு தவு என்பதன் விகாரம். தவுதல் தாவுதல் என்பதன் மரூஉ. சீறூர் சிற்றூர் என்பதன் மரூஉ. இது, "சீறூர் மரைய தளிற் றங்குகங்குற் சிறுதுயிற்கே" "சிலம்பணிகொண்ட நஞ்சீறூர்க் குரைமின்கள் சென்னெறியே" என்றற் றொடக்கத் தான்றோர் திருவாக்குக்களால் விசதம். கவரிமா - ஒரு மிருகவிசேடம். கற்றை - திரட்சி. குறிச்சி - சிற்றூர். இது தென்னாட்டில் உள்ள நாச்சி குறிச்சி பாஞ்சாலங்குறிச்சி தொவரங்குறிச்சி முதலியன போன்றது. (உ)

வேடர் மங்கையர் முன்றிலி னின்றபூ வேங்கை
யாடு கொம்பரிற் றொடுத்தபூந் தொட்டிலி னமர்ந்த
தேட ரும்பசுங் குழவிதா லாட்டுசெவ் வழியின்
பாடல் கேட்டுமா மயிலுறங் குவமலைப் பக்கம்.

(இ - ள்.) மலைப்பக்கம் - மலைப்பக்கத்தில் உள்ள, வேடர் மங்கையர் - வேடமாதர், முன்றிலில் நின்ற - தமது முற்றத்தி னிற்கிற, பூ - அழகிய, வேங்கை - வேங்கை மரங்களின், ஆடு - அசையாநின்ற, கொம்பரின் - கிளைகளில், தொடுத்த - கட்டப்பட்ட, பூ - அழகாகிய, தொட்டிலில் அமர்ந்த - தொட்டில்களில் அமர்ந்திருக்கிற, தேடு அரு - தேடுதற்கரிதாகிய, பசுங்குழவி - பசுங்குழந்தைகளை, தாலாட்டு - தாலாட்டுதற்கண் பாடப்படுகிற, செவ்வழியின் பாடல்-செவ்வழிப் பண்ணோடு பாடப்படுகிற பாடலை, கேட்டு - செவியேற்று, மாமயில் - அழகிய மயில்கள், உறங்குவ - தூங்குவன எ-று.

மங்கையர் என்றது பருவங்குறியாது பெண் பொதுவைக் குறித்தது. முன்றில் இல் முன் என்பதன் மரூஉ. தொடுத்தல் - கட்டுதல். பசுங்குழவி - மிகவும் இளங்குழந்தை. செவ்வழி - ஓர் பண் விசேடம். மாமயில் - கருமையாகிய மயில் எனினு மமையும். (ங)

இரும்பிற் செய்தன திண்புயத் திறவுளர் மைந்தர்
விரும்பப் பின்றிரிந் திளம்புலி கற்குமால் வீரம்
பெருங்கைச் செம்புகர் முகத்திளம் பிடியினம் பிணைபோற்
கருங்கட் செய்யவாய்க் குறத்திய ரணிநடை கற்கும்.

(இ - ள்) இளம்புலி - இளம் புலிகள், இரும்பின் - இரும்பினால், செய்தன்ன - செய்தாற்போன்ற, திண்புயத்து - வலிய தோள்களை யுடைய, இறவுளர் மைந்தர்-வேடச்சிறுவர், விரும்ப-விரும்பும்படி, பின்

திரிந்து - அவர்கள் பின்னே திரிந்து, மால் வீரம் - பெரிய வீரகுணத்தை, கற்கும் - கற்றுக்கொள்ளும், பெருங்கை - பெரிய துதிக்கையினையும், செம்புகர் முகத்து - செம்புள்ளிகளோடு கூடிய முகத்தினையுமுடைய, இளம்பிடி இனம்-இளமையாகிய பெண் யானைகளின் கூட்டம், பிணைபோல் - பெண்மான் போலும், கருங்கண் - கரிய கண்களையும், செய்யவாய் - செவந்த வாயினையுமுடைய, குறத்தியர் - குறமாதரது, அணி நடை - அழகாகிய நடையை, கற்கும் - கற்றுக்கொள்ளும் எ-று.

இரும்பிற் செய்தன திண்புயம் என்றதனால் தோள்வலியும், இளம்புலி வீரம் கற்கும் என்றதனால் வீரப்பெருமையும், பிடியினம் அணிநடை கற்கும் என்றமையால் நடையழகும் விளங்குகின்றன. (ச)

வென்றிக் குஞ்சர மத்தக முத்தமும் வேயிற்
பன்றிக் கோட்டிடை வருமொளி முத்தமும் பரப்பி
முன்றிற் பற்பல சிற்றில்கள் செய்யுமான் முனியாக்
குன்றிச் செம்மணி யணியுடைப் பேதையர் குலமே.

(இ - ள்.) முனியா-அழகாகிய, செம்-செந்நிறமுள்ள, குன்றி மணி-குன்றிமணியாலாகிய, அணி உடை - கழுத்தணியையுடைய, பேதையர் குலம் - பேதைமாதரது கூட்டம், வென்றி - வெற்றியையுடைய, குஞ்சரமத்தகம் - யானை மத்தகத்திலுண்டாகிற, முத்தமும் - முத்தும், வேயில் - மூங்கிலிலும், பன்றிக்கோட்டிடைவரும் - பன்றிக் கொம்பிலுண்டாகிற, ஒளி முத்தமும் - ஒளியையுடைய முத்தும், பரப்பி - விரித்து, முன்றில் - தமது முற்றங்களில், பற்பல-பலப்பலவாகிய, சிறு இல்கள் செய்யும் - சிறு வீடுகளை யுண்டாக்கும் எ-று.

வெற்றி வென்றியென மெலிந்து நின்றது. பகுதி வெல். குஞ்சரம் வடசொல். இதற்குக் காட்டுப் புதல்களிற் சஞ்சரிப்பது என்பது பொருள். முத்தம் - முக்தம் எனனும் வடசொற்றிரிபு. முனியா வென்றமையால் அழகாகிய வென் றுரைக்கலாயிற்று. (ரு)

நெடிய சந்தனக் காற்கரி மருப்பித ணின்று
கடிகொள் பைந்தினை கவர்பசுங் கிளியினங் கடியு
மடநல் லாரிசை கேட்டலு மாடக நல்யாழ்
தடவல் விட்டுவிச் சாதரர் செவித்துணை தாழ்ப்பார்.

(இ-ள்.) நெடிய - நெடிதாகிய, சந்தனக்கால் - சந்தனமரத்தின் கால் (நட்டு), கரிமருப்பு - யானைக்கொம்பினாற் செய்யப்பட்டிருக்கிற, இதண் நின்று - பரண்மேலிருந்து, கடி கொள் - காவலைக்கொண்ட, பைந்தினை - பசிய தினைக்கதிர்களை, கவர் - கவர்ந்துகொண்டுபோகிற, பசுங்கிளி

இனம் - பசுங்கிளிகளின் கூட்டத்தை, கடியும்-தூரத்துகிற, மடநல்லார் - இளம் பெண்களது, இசை கேட்டலும்-சொல்லைச் செவிமடுத்தலும், மாடகம் - முறுக்காணிகளையுடைய, நல்யாழ் - சிறந்த வீணையை, தடவல்விட்டு - வருடுதலொழிந்து, விச்சாதரர் - வித்யாதரர், செவித்துணை - தமது இரண்டு காதுகளையும், தாழ்ப்பார் - சாய்ப்பார்கள் எ-று.

சந்தநக்கால் - சந்தநமரத்தூண். கரி - துதிக்கையினையுடையதெனப் பொருள்படுவதோர் வடசொல். கடிதல்-ஓட்டுதல். பகுதி கடி. இசை - பாட்டு எனினுமாம். விச்சாதரர் - வித்யாதரர் என்னும் வடசொற் றிரிபு. (௬)

இனைய பற்பல பெருவள மெய்துமவ் வூரிற்
குனியு நோன்சிலைக் குறவர்தங் குஞ்சிதோய் கழற்கால்
வனச ராதிப னாகனென் பானிகல் வாட்கண்
மனைவி தத்தையென் பாளொடு வாழ்ந்தினி திருந்தான்.

(இ - ள்.) இனைய - இத்தன்மையவாகிய, பற்பல-பலப்பலவாகிய, பெருவளம் எய்தும் - பெரிதாகிய வளங்களுள்ள, அ ஊரில் - அந்த வூரில், குனியும் - வளைகின்ற, நோன்சிலை-பெரிய வில்லையுடைய, குறவர்-குறவருடைய, குஞ்சிதோய் - குஞ்சியால் தீண்டப்படுகிற, கழல் - வீரக்கழலணிந்த, வனசர அதிபன் - வேடர் தலைவனாகிய, நாகன் என்பான்-நாகனென்று சொல்லப்படுவோன், இகல்வாள் - வலிய வாட்படைபோன்ற, கண் - கண்களையுடைய, மனைவி - தன் இல்லாளாகிய, தத்தையென்பாளொடு - தத்தை யென்பவளோடு கூடி, இனிது - இனிதாக, வாழ்ந்திருந்தான் - வாழ்ந்துகொண்டிருந்தான் எ-று.

வளம் - நிலம் நீர் முதலிய பல வளங்கள். எய்தல் - பொருந்தியிருத்தல். பகுதி எய்து. குனிதல் - வளைதல். பகுதி குனி. இது தன்வினை, பிறவினையில் குனித்தல் என வரும். இவ்வாறு ஒரு சொற் பகுதியே தன்வினை பிறவினைகளில் வருமாயின் அதனைப் பொதுவினைப் பகுதியென்பர். தம் - சாரியை. குஞ்சி-ஆண்மயிர் (குடுமி.) இது தோய்கழல் என்றமையால் குறவர் வந்து காலில் வீழ்ந்து வணங்குவர் என்றதாயிற்று. வனசரன் - காட்டில் சஞ்சரிப்பவன். இது வடசொல். அதிபன் - வடசொற்றிரிபு. என்பான் என்பாள் என்பன செயப்பாட்டு வினைப்பொருள.

வாழு நாளின்மென் மழலையஞ் சொன்மக வின்மைத்
தாழ்வி னானனி மனங்கவன் றிறவுளர் தலைவன்
வீழி வாய்க்கய லரிமதர் நெடுங்கண்வேய் மென்றோ
ளேழை நுண்ணிடை மனைவியோ டின்னண மெண்ணும்.

(இ - ள்.) வாழும் நாளில் - இங்ஙனம் வாழ்ந்துவரும் காலத்தில், மெல் - மிருதுவாகிய, அம் - அழகிய, மழலைச் சொல் - மழலைச் சொல்லையுடைய, மகவு இன்மை - குழந்தையில்லாமையாகிய, தாழ்வினால்-குறைவினால், நனி - மிகுதியாய், மனம் கவன்று - மனக்கவற்சியடைந்து, இறவுளர் தலைவன் - வேடர் தலைவனாகிய நாகன் என்பவன், வீழிவாய்-வீழிக்கனிபோலும் அதரத்தையும், கயல் அரிமதர் நெடுங்கண்-சேல்மீன் போன்ற வரிபடர்ந்த மதர்த்த நெடிய கண்களையும், மெல் - மெல்லிய, வேய்தோள் - மூங்கில்போலுந் தோள்களையுமுடைய, ஏழை - ஏழையாகிய, நுண் இடை மனைவியோடு - சிற்றிடையையுடைய இல்லாளோடு, இன்னணம் - இவ்வாறாக, எண்ணும் - ஆலோசிப்பானாயினன் எ-று.

கவன்று என்பதற்குப் பகுதி கவல். வீழிவாய் என்றது அதரத்தை அரி - செவ்வரி (இரேகை.) இன்னணம் - இன்ன வண்ணம் என்பதன் மரூஉ. (அ)

கண்ணில் யாக்கையுந் திங்களில் கங்குலுங் கண்போ
லண்ணன் மந்திரி யில்லர சாட்சியு மருளி
றிண்ணெ னெஞ்சமும் புலவரி லவையுமொண் டீம்பால்
வண்ண வாயிள மக்களில் வாழ்வுமொப் பாமால்.

(இ - ள்.) கண் இல் யாக்கையும் - கண்ணில்லாத வுடம்பும், திங்கள் இல் கங்குலும்-சந்த்ரனில்லாத இரவும், கண்போல் - கண்போன்ற, அண்ணல் - பெருமையிற் சிறந்த, மந்திரி இல் - மந்திரியில்லாத, அரசாட்சியும் - ராஜரிகமும், அருள் இல் - கருணையில்லாத, திண்ணென் நெஞ்சமும் - கடிநசித்தமும், புலவர் இல் அவையும்-வித்வான்களில்லாத சபையும், ஒள் - ஒட்பமாகிய, தீ - இனிமையாகிய, பால்-பால் மணமாறாத, வண்ணம்-அழகாகிய, வாய் - வாயினையுடைய, இளமக்கள் இல் வாழ்வும்- இளம் புதல்வரில்லாத வாழ்க்கையும், ஒப்பு ஆம் - நிகராகும் எ-று.

யாக்கை - ஆகுபெயர். ஸப்த தாதுக்களால் கட்டப்பட்டதென்பது பொருள். கங்குல் - இராக்காலம். புலவர் அறிவுடையோர் எனினுமாம். புலம் - அறிவு. வாழ்வு - வாழ்நாள் என்றலுமொன்று. ஆல் அசை. (க)

சேற ளைந்தமென் சீறடித் தளிரொடு தீம்பாற்
சோற ளைந்தகைத் தாமரை யோடுசெந் துகிர்வா
யூறு நீர்நனை மார்பினோ டிளமகா ரூந்தி
யேறு மின்பமுள் ளதனையே யுடம்பென விசைப்பார்.

(இ - ள்.) சேறு அளைந்த - சேறு படப்பட்ட, மெல் - மெல்லிய, சிறு அடி - சிற்றடியாகிய, தளிரொடு ... ளை. தீம்பால் சோறு

அளைந்த - இனிய பாற்சோறு பூசப்பட்ட, கைத்தாமரையோடு-தாமரை மலர்போலுங் கையுடனும், செம்துகிர்வாய் - செம்பவளம்போலும் வாயினிடத்தில், ஊறும் - சுரக்கிற, நீர் - நீரினால், நனை - நனைக்கப்படுகிற, மார்பினோடு - மார்புடனும், இளமகார்-இளஞ்சிறார், உந்திவரும்-தள்ளியெழுவதனாலுண்டாகிற,இன்பம் உள்ளதனையே-இன்பமுடையதனையே, உடம்பு என இசைப்பார் - உடம்பென்று சொல்லுவர் (அறிஞர்) எ-று.

தளிரொடு முதலிய வற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. உந்தல் - தள்ளல் (நூக்கல்). பகுதி உந்து. உள்ளதனையே - உடையதையே. இதில் ஏகாரம் பிரிநிலை தேற்றமுமாம். இசைத்தல் - சொல்லல். பகுதி இசை. இசைப்பார் என்னும் பயனிலைக்குத் தோன்றா வெழுவாயாகிய அறிஞர் என்பது வருவித் துரைக்கப்பட்டது. (கo)

அரிகொள் பொன்புனை கிண்கிணி தண்டையோ டணிந்த
தருண மென்றளிர்ச் சீறடித் தளர்நடைச் சிறுவர்
மருவ றுதசெவ் வாம்பல்வாய் மழலையா ரமுதம்
பருகி லாச்செவி பாவையின் செவியெனப் படுமால்.

(இ-ள்.) அரிகொள் - ஒளியைக்கொண்ட, பொன்-பொன்னினால், புனை - செய்யப்பட்ட, கிங்கிணி தண்டையோடு அணிந்த-கிங்கிணியைத் தண்டையோடு சேர்த்துத் தரித்த, தருணம்-இளமையாகிய, மெல்-மிருதுத்வமுள்ள, தளிர் - தளிர்போன்ற, சீறடி-சிற்றடியால் நடக்கிற, தளர் நடை - தளர்ந்த நடையையுடைய, சிறுவர் - மக்களது, மரு அறுத - மணம் நீங்காத, செவ்வாம்பல்வாய்-செவ்வல்லி மலர்போலும் வாயிலுண்டாகிற, ஆர் அமுதம் - அரிய அமிர்தத்தை, பருகு இல்லா - பருகுதலில்லாத, செவி - காது, பாவையின் செவி எனப்படும் - பிரதிமையின் செவியென்று சொல்லப்படும் எ-று.

ஆல் - அசை. அரி - ஒளி. கிண்கிணி-கிங்கிணி யென்னும் வடசொற்றிரிபு. கிங்கிணி தண்டை யென்பவற்றைப் பாத ஜாலம் என்பர் வடநூலார். தருணம் - இளமை. தளர் நடை - தத்தடியிட்டு நடக்கும் நடை. மரு - மணம். இது ஈண்டைக்கேற்பப் பால் மணத்தைக் குறித்தது. மழலை - குதலைச்சொல் (ஓசை நிரம்பாத சொல்). அமுதம் என்றதற்கேற்பப் பருகிலா என்றார். பருகுதல் - குடித்தல். பகுதி பருகு. பாவை-சித்திரித்த பிரதிமை. (கக)

இம்மை யின்பொடு மறுமையி னின்பமென் றிரண்டு
மும்மென் னமர்ந்தரை யில்லவர்க் கில்லைமற் றதனு
லெம்மை யாளுடை முருகவே ளடிமல ரிறைஞ்சிச்
செ[illegible]துவ மெனச்சிந்தை செய்தான்.

(இ - ள்.) இம்மை இன்பொடு - இம்மையின்பத்துடன், மறுமையின் இன்பம் என்ற - மறுமையின்பமென்று சொல்லப்பட்ட, இரண்டும் - இரண்டின்பங்களும், அம் - அழகும், மெல் - மென்மையுமுள்ள, மைந்தரை - மக்களை, இல்லவர்க்கு - உடையரல்லாதவர்களுக்கு, இல்லை - இல்லையாகும், அதனால் - அந்த ஹேதுவினால், எம்மை ஆள் உடை - எங்களை அடிமைகளாகவுடைய, முருகவேள் - முருகவேளின், அடிமலர் - பாத தாமரைமலரை, இறைஞ்சி - வணங்கி, செம்மை - செம்மையாகிய, நல் - சிறந்த, மகன் - மகனை, பெறுகுவம் என - பெறுவோமென்று, சிந்தை செய்தான் - சிந்தித்தான் எ-று.

இம்மையின்பம் - இகலோக சுகம். மறுமையின்பம் - பரலோக சுகம். இவ்விரண்டையும் ஐஹிகம் ஆமுஷ்மிகம் என்பர் வடநூலார். என்ற இரண்டு என்பதில் நிலைமொழி யீற்றகரம் தொகுத்தல் பெற்றது. இல்லவர் என்பதில் இன்மை உடைமைக்கு மறுதலையாகிய இன்மை. மற்று வினைமாற்று. அசைநிலை யெனினுமாம். ஆள் - ஆகுபெயர். அடிமலர் என்றதனால் திருவடியின் சிறப்பு விளங்கிற்று. இறைஞ்சல்-வணங்கல். பகுதி - இறைஞ்சு. சிந்தை செய்தான் ஒரு சொன்னீரது. (கஉ)

சிந்தை செய்தவன் வரைபக வெறிசுடர்ச் செவ்வே
லெந்தை வாழ்வதற் கேற்றதோர் சினகர மியற்றி
நந்து பூசனை நடத்துபு நடிக்குமா மயிலும்
வெந்தி றற்கொழுஞ் சூட்டுவா ரணங்களும் விடுத்தான்.

(இ - ள்.) சிந்தை செய்தவன் - (இவ்வாறு) சிந்தித்தவனாகிய நாகன், வரை - கிரவுஞ்ச மலையானது, பக - பிளக்க, எறி - விடுத்த, சுடர் - ஒளியையுடைய, செவ்வேல் - செவந்த வேற்படையையுடைய, எந்தை - எமது தந்தையாகிய முருகக்கடவுள், வாழ்வதற்கு - நித்யவாசம் பண்ணுவதற்கு, ஏற்றது - தகுதியானதாகிய, ஓர் - ஒரு, சினகரம் - கோயிலை, இயற்றி - அமைத்து, நந்து - மிகுதியாகிய, பூசனை - பூஜையை, நடத்துபு - நடத்தி, நடிக்கும் - ஆடுகிற, மா - அழகாகிய, மயிலும் - மயில்களையும், வெம்திறல் - கொடிய வெற்றியையும், கொழுஞ்சூட்டு - கொழுமையாகிய உச்சிக் கொண்டையையும் உடைய, வாரணங்களும் - கோழிச் சேவல்களையும், விடுத்தான் - விட்டு வைத்தான் எ-று.

சிந்தை செய்தவன் ஒரு சொல்லாய் சிந்தித்தல் எனப் பொருள் பட்டு நின்றது. பகவெறி சுடர்ச் செவ்வே லெந்தையென மேல் வருதலால் வரையென்றது கிரவுஞ்ச மலையைக் குறித்தது. வரைபகவெறிந்த என்ற விசேடணத்தால் எந்தை யென்றது முருகக்கடவுளைக் குறித்தது. நடத்துபு செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். இது விடுத்தான் என்னும் வினைகொண்டு மு... (கங)

இரலை தொண்டகந் துடிமுதற் பறையொலி யீண்டத்
திருவி ழாவயர்ந் திலங்குசெங் காந்தளந் தெரிய
லுருவ வேலனைக் கூயகன் களனணி யுறுத்து
வெருவ ருந்தகை வெறியயர் வித்தனன் விழைவால்.

(இ - ள்) விழைவால் - அன்பினால், இரலை—, தொண்டகம்—, துடி—, முதல் - முதலாகிய, பறை ஒலி ஈண்ட - பறையோசை மிகா நிற்க, திருவிழா அயர்ந்து - திருவிழாச் செய்து, இலங்கு - விளங்குகிற, அம் - அழகாகிய, செங்காந்தள் தெரியல் - செங்காந்தட் பூமாலை யணிந்த, உருவம் - உருவத்தையுடைய, வேலனை கூய் - வேலனை யழைத்து, அகன் - விசாலமான, களன் - ஆடிடத்தை, அணியுறுத்து - அலங்கரித்து, வெருவருந்தகை - (கண்டோர்) அஞ்சுதற்குரிய பெருமையுள்ள, வெறி - வெறியாடலை, அயர்வித்தனன் - செய்வித்தான் எ-று.

இரலை முதலாயின - வாத்ய விசேடங்களின் பெயர்கள். துடி - இடக்கை. பறையை மேளம் என வழங்குவர். ஈண்டல் - மிகல். திருவிழாவை உத்ஸவம் என்பர் வடநூலார். வேலன்-படிமத்தோன் (பூசாரி). களன் - வெறியாட்டயருமிடம். வெறி - வெறியாடல். (ஆவேசங் கொண்டு குதித்தல்) விழைவு - பத்தி யெனினுமாம். (கச)

கடிகொ ளவ்வெறி யாட்டிடை யாவருங் காணச்
சுடர்செய் வேற்படைக் குரிசிலவ் வேலன்மேற் றோன்றி
யொடிவி லன்பொடு செய்தவிச் சிறப்பினுக் குவந்தேம்
படியெ லாம்புகழ் மகற்றரு குவமெனப் பகர்ந்தான்.

(இ - ள்.) கடிகொள் - விளக்கத்தைக்கொண்ட, அ - அந்த, வெறியாட்டிடை - வெறியாடலின்கண், யாவரும் காண - எல்லாரும் பார்க்க, சுடர்செய் - ஒளியைச் செய்கிற, வேற்படை குரிசில் - வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள், அ - அந்த, வேலன்மேல் தோன்றி-வேலன்மீது ஆவேசித்து, ஒடிவு இல் - குறைவில்லாத, அன்பொடு - பத்தியினால், செய்த - (நீங்கள்) பண்ணின, இ - இந்த, சிறப்பினுக்கு - திருவிழாவினுக்கு, உவந்தேம் - மகிழ்ந்தோம், படி எல்லாம் புகழ் - எல்லா வுலகத்தாரும் புகழ்தற்குரிய, மகன் - ஒரு புதல்வனை, தருகுவம் என - அருள் செய்வோமென்று, பகர்ந்தான் - திருவாய் மலர்ந்தருளினான் எ-று.

குரிசில் - பெருமையிற் சிறந்தோன். அது சுடர்செய் வேற்படையென்ற விசேடணத்தால் முருகக்கடவுளைக் குறித்தது. சிறப்பு - திருவிழா. "சிறப்பொடு பூசனை செல்லாது வானம், வறக்குமேல் வானோர்க்கு மீண்டு" என்னுந் திருக்குறளுரையினால் இச்செய்தி இனிது விளங்கும். உவந்தேம் என்பதற்குப் பகுதி உவ. படி-பூமி. (உலகம்).

பகர்ந்த சொல்லமு தந்துணைச் செவிகளாற் பருகி
யுகந்த மாமகிழ் வெய்திய தத்தையு முவகை
மிகுந்த நாகனுந் திருவடி மலர்மிசை வீழ்ந்து
புகழ்ந்து நின்றனர் மறைந்தன னருட்கடற் புனிதன்.

(இ-ள்.) பகர்ந்த - சொன்ன, சொல் - சொல்லாகிய, அமுதம் - அமிர்தத்தை, துணைசெவிகளால் - இரண்டு காதுகளால், பருகி - குடித்து, உகந்த - ஏற்ற, மாமகிழ்வு எய்திய - பெரு மகிழ்ச்சியை யடைந்த, தத்தையும் - தத்தை யென்பவளும், உவகை மிகுந்த - மகிழ்ச்சி மிகுந்த, நாகனும் - நாகன் என்பவனும், திருவடி மலர்மிசை வீழ்ந்து - ஸ்ரீ பாத தாமரை மலர்மீது விழுந்து, புகழ்ந்து - புகழ்ந்தெழுந்து, நின்றனர் - நின்றார்கள், (நிற்றலும்) அருள்கடல் - கருணை சமுத்ரமாகிய புனிதன் - பரிசுத்தன், மறைந்தனன் - மறைந்தருளினன் எ-று.

பகர்தல் - சொல்லல். பகுதி பகர். சொல் அமுதம் - சொல்லாகிய அமுதம் என விரியும். அமுதம் என்றதற் கேற்பப் பருகி யென்றார். நின்றனர் என்பதற்கு எழுந்து நின்றனர் என் றுரைத்தது எற்றுக்கெனின், வீழ்ந்து என்றதைத் தவிர்த்தற் கென்க. புனிதம்-பரிசுத்தம் அதனை யுடையவன் புனிதன். (கசு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

பின்னரவ் வெறியாட் டாளன் பெறப்பெருஞ் சிறப்புச் செய்து
துன்னிநின் றகலாச் சுற்றத் தொகைக்கெலா மகிழ்ச்சி செய்து
தன்னமர் மனையுந் தானுந் தளிர்த்துள மினிதி ருந்தா
னன்னமன் னவள்சின் னாளி லரும்பெறற் கருப்ப முற்றாள்.

(இ - ள்.) பின்னர் - அதன்பிறகு, அ - அந்த, வெறியாட்டாளன் - பூசாரி, பெற - பெறும்படி, பெருஞ் சிறப்புசெய்து - பெருஞ் சிறப்புக்களைச் செய்து, துன்னி நின்று - நெருங்கி நின்று, அகலா - நீங்காத, சுற்றத் தொகைக்கு எல்லாம் - பந்து வர்க்கத்துக் கெல்லாம், மகிழ்ச்சி செய்து-சந்தோஷத்தை யுண்டாக்கி, தன் அமர் மனையும் - தன்னை விரும்பின மனைவியும், தானும்—, உள்ளம் தளிர்த்து இனிது இருந்தான் - மனங்களித் தினிதிருந்தான், அன்னம் அன்னவள்-அன்னத்தை நிகர்த்தவளாகிய தத்தையும், சில் நாளில் - சிலநாளில், அரும்பெறல் - பெறுதற்கரிதாகிய, கருப்பம் உற்றாள் - கருப்பங்கொண்டாள் எ-று.

"சுற்றத்திற் கழகு சூழ விருத்தல்" என்றதற் கிலக்கியமா யிருப்பவாதலால், "துன்னிநின் றகலாச்சுற்றத் தொகைக்கெலா மகிழ்ச்சி செய்து" என்றார். அமர்தல்-விரும்புதல். பகுதி அமர். மனை-ஆகுபெயர்.

ண்டுகொ லென்னு மைய மொழிந்தது மருங்குல் கோங்கின்
வண்டுறு முகுள மென்ன வனமுலை முகங்க றுத்த
பண்டுவ மைக்கு டைந்த பசியவேய்க் குலமு வப்பத்
துண்டவெண் மதிநு தற்குத் தோட்டுணை மெலிந்த வன்றே.

(இ - ள்) வெள் துண்ட மதிநுதற்கு - வெண்மையாகிய சந்த்ரகண்டத்தை நிகர்த்த நெற்றியையுடையவளாகிய தத்தைக்கு, மருங்குல் - இடையானது, உண்டு கொல் என்னும் - உண்டோ வென்கிற, ஐயம் - சந்தேகமானது, ஒழிந்தது - நீங்கிவிட்டது, கோங்கின் - கோங்கினது, வண்டு உறும் - வண்டுகள் மொய்க்கிற, முகுளம் என்ன - முகைபோல, வனமுலை முகம் - அழகிய முலைமுகம், கறுத்த-கறுத்தன, பண்டு-முன்பு, உவமைக்கு உடைந்த - ஒப்பாதற்குத் தோல்வியடைந்த, பசிய - பசுமையாகிய, வேய்க்குலம் - மூங்கிற் கூட்டம், உவப்ப - மகிழும்படி, தோள் துணை - இரண்டு தோள்களும், மெலிந்த - இளைத்தன எ-று.

அன்று ஏ அசைகள். உண்டோ என்பதற்கு உண்டோ இல்லையோ வென் றுரைப்பினுமாம். கோங்கு - ஓர் மரவிசேடம். வண்டுறல் மணத்திற் கென்க. முகுளம் - வடசொல். இதற்கு அரும்பு என்பது பொருள். மொட்டு என்றுங் கூறுவர். "மொட்டரு மலர்பறித் திறைஞ்சி" என்றார் பெரியாரும். முகை யென்றும் வழங்குவர். "முல்லை முகையென்றும் முத்தென் றிவைபிதற்றும், கல்லாப் புன்மாக்கள் கவற்ற விடுவனோ" என்பது நாலடியார். முலைமுகம் - முலைநுனி. உடைதல் - தோற்றல். துணை - இரண்டு. (கஅ)

மகவுடன் வயிற்றி ருந்து வளர்புகழ் பரந்த தென்ன
மிகவுடல் விளர்த்த துண்டி வெறுப்புவந் ததுபு ளிங்கூ
ழகனமர்ந் துண்ணும் வேட்கை யடைந்தது நடையோய்ந் தன்று
தகைமலர் மென்பூங் கோதை தான்பெருஞ் சுமையா யிற்றால்.

(இ - ள்.) வளர்புகழ் - வளராநின்ற புகழானது, வயிற்று இருந்து - கருப்பத்திலிருந்துகொண்டு, மகவுடன் - சிசுவுடனே, வளர்ந்தது என்ன - வளர்ந்ததென்று சொல்லும்படி, உடல் - சரீரமானது, மிக விளர்த்தது - மிகுதியாக வெளுத்துப்போயிற்று, உண்டி வெறுப்பு வந்தது - உணவு வெறுத்தலுண்டாயிற்று, புளிங்கூழ் - புளித்த கூழை, அகன் அமர்ந்து - மன விருப்பத்தோடு, உண்ணும் - உண்ணவேண்டுமென்கிற, வேட்கை - ஆசையானது, அடைந்தது-உண்டாயிற்று, நடை ஓய்ந்தன்று - நடை தளர்ந்தது, தகை - பெரிய, மெல் - மிருதுவாகிய, மலர் - மலர்ந்த, பூங்கோதை தான்-பூமாலையும், பெருஞ் சுமையாயிற்று- பெரும் பாரமாயிற்று எ-று.

மகவுடன் வயிற்றிருந்து வளர்புகழ் பரந்தது என்ன மிகவுடல் விளர்த்தது என்றமையால் புகழ்க்கு நிறம் வெண்மை யென்பது பெறப் பட்டது. அகன் ஈற்றுப்போலி. வேட்கை-வேட்டல், விரும்புதல் என்பது பொருள். பகுதி வேள். ஆல் அசை. ஆஸ்சர்ய ஸூசகம் எனினுமாம். (கக)

கலிவிருத்தம்

இன்ன வாறு வயாநலி வெய்திய
கன்ன லின்மொழிக் காரிகை பெற்றனண்
மன்னு தங்குல மாசு துடைத்திடும்
பொன்னி னன்ன புதல்வனை யென்பவே.

(இ - ள்.) இன்னவாறு - இவ்விதமாக, வயாநலிவு எய்திய - கர்ப்ப நோயை யடைந்த, கன்னல் - கருப்பஞ்சாறு போன்ற, இன்மொழி-இன் சொல்லையுடைய, காரிகை-பெண்ணானவள், (தத்தையானவள்) மன்னு-நிலைபெற்ற, தம்குலம் மாசு - தமது குலக்குற்றத்தை, துடைத்திடும் - ஒழித்தற்குரிய, பொன்னின் அன்ன - பொன்னை நிகர்த்த, புதல்வனை-புத்திரனை, பெற்றனள் என்ப - ஈன்றனள் என்பர் (அறிஞர்) எ-று.

வயா - கர்ப்பநோய். கன்னல்-ஆகுபெயர். காரிகையும் அது. மாசு-கொலையாதிகள். பொன்னின் உருபு மயக்கம். என்பவென்னும் வினைக் கெழுவாயாகிய அறிஞர் என்பது வருவித் துரைக்கப்பட்டது. (உ0)

பெறல ருஞ்சேய் பிறந்தெனக் கானவ
ரிறைம கிழ்ச்சி யிருங்கடன் மூழ்கினன்
பொறையு யிர்த்தவப் பொற்றொடி யெய்திய
வுறும கிழ்ச்சி யுரைப்பவர் யாவரே.

(இ - ள்.) பெறல் அரு - பெறுதற்கரிய, சேய் - புதல்வன், பிறந்தென - பிறந்தானென்று, கானவர் இறை - வேடர்க்கரசனாகிய நாகன் என்பவன், மகிழ்ச்சி - சந்தோஷமாகிய, இருகடல்-பெரிய சமுத்திரத்தில், மூழ்கினன் - முழுகினன், பொறை உயிர்த்த - புதல்வனை யீன்ற, அ - அந்த, பொன் தொடி - தத்தை என்னும் பெண்ணானவள், எய்திய-அடைந்த, உறு - மிகுந்த, மகிழ்ச்சி - சந்தோஷத்தை, உரைப்பவர் - சொல்லவல்லவர், யாவர் - எவர் எ-று.

ஏ ஈற்றசை. பிறந்தது என எனற்பாலது பிறந்தென என விகாரமாயிற்று. கானவர் - காட்டில் சஞ்சரிப்போர். இறை - ஆகுபெயர். இருமை - பெருமை. கடல் என்பதனீற்றில் ஏழனுருபு தொக்கது. மூழ்கினன் என்பதற்குப் பகுதி மூழ்கு. பொறை உயிர்த்தல் - ஈனல். இதற்குப் பகுதி பொறையுயிர். பொற்றொடி - அன்மொழித் தொகைத்

காரணப்பெயர். உறு என்னும் உரிச்சொல் மிகுதிப்பொருட்டு. யாவர் என்னும் வினா ஒருவரும் இலர் என்னும் பொருள்தந்து நின்றது. (உ௪)

நண்ணு மோகையி னாகன் பெருஞ்சிறப்
பண்ணல் வேற்படை யையனுக் காற்றினான்
பெண்ணு மாணும் பெருமகிழ் வெய்தலா
னெண்ணெ யாட்டணி யெங்கு நிகழ்ந்ததே.

(இ - ள்.) நண்ணும் - அடைந்த, ஓகையின் - மகிழ்ச்சியையுடைய, நாகன் - நாகன் என்பவன், அண்ணல் - பெருமை பொருந்திய, வேல் படை - வேலாயுதத்தையுடைய, ஐயனுக்கு-முருகக்கடவுளுக்கு, பெருஞ் சிறப்பு ஆற்றினான் - பெரிய திருவிழாவினைச் செய்தான், பெண்ணும் ஆணும் - பெண்மக்களும் ஆண்மக்களும், பெருமகிழ்வு எய்தலால்-பெரு மகிழ்ச்சியை அடைதலால், எண்ணெய் ஆட்டு-எண்ணெயாடலின், அணி-அழகானது, எங்கும் - எவ்விடத்தும் நிகழ்ந்தது - நடந்தது எ-று.

ஏ - ஈற்றசை. ஓகை - உவகை என்பதன் மரூஉ. சிறப்பு-திருவிழா. ஐயன் என்றது அண்ணல். வேற்படை என்னும் விசேடணத்தால் முருகக்கடவுளை உணர்த்திற்று. ஆற்றல் - செய்தல். பகுதி ஆற்று. எண்ணெயாட்டு - எண்ணெய் ஆடல் (மஞ்சள்நீர் ஆடல்.) (உ௨)

தாவு கோச்சகக்கலிப்பா

மணியினைமண் ணுறுத்தாங்கு வாசவான் புனலாட்டிப்
பணைகொள்குவி முலைபிலிற்றும் பால்பெய்து நிலந்தேய்த்த
வணிதிலகஞ் சிறுநுதலி லணிந்துமுலைப் பாலூட்டி
யிணையில்கரி மருப்பினிய லெழிற்றொட்டி லேற்றினார்.

(இ - ள்.) மணியினை - அரதநத்தை, மண்ணுறுத்தாங்கு - அலங்கரித்ததுபோல, வாசம் - மணமுள்ள, வான் - பெருமைபொருந்திய, புனல் ஆட்டி - ஸ்நாநம் செய்வித்து, பணைகொள் - பருத்தலைக்கொண்ட, குவிமுலை - குவிந்த ஸ்தநங்கள், பிலிற்றும் - சிந்துகிற, பால்பெய்து - பாலூற்றி, நிலம் தேய்த்த - நிலத்திற் றேய்த்து வழித்த, அணி திலகம்-அழகிய பொட்டினை, சிறுநுதலில் அணிந்து - சிறிய நெற்றியில் தரித்து, முலைப்பால் ஊட்டி - முலைப்பாலை யுண்பித்து, இணைஇல் - ஒப்பற்ற, கரி மருப்பின் இயல் - யானைக்கொம்பினாற் செய்யப்பெற்ற, எழில் - அழகாகிய, தொட்டில் ஏற்றினார் - தொட்டிலில் ஏற்றினார்கள் எ-று.

மணி - மாணிக்கம் எனினுமாம். மண்ணுறுத்தல் - அலங்கரித்தல். பணை முதனிலைத் தொழிற்பெயர். பிலிற்றல்-சிந்துதல். பகுதி பிலிற்று. கரி - வடசொல். இதற்குத் துதிக்கையையுடையது என்பது பொருள். கரம் - கை. (துதிக்கை.) அதனையுடையது கரி. மருப்பு - கொம்பு. ()

பூங்குழல்வே னெடுங்கண்ணாள் புனலாட்டிப் புனைந்துதர
வாங்குசிலை மறவர்கோன் மணிமகனைத் தடக்கையாற்
றாங்குபுதிண் ணென்றிருந்த தன்மையாற் றிண்ணனெனத்
தேங்கியபே ருவகையொடுந் திருநாமஞ் சாத்தினான்.

(இ - ள்.) பூகுழல் - மலரையணிந்த கூந்தலையும், வேல்நெடு கண்ணாள் - வேல்போலும் நெடிய கண்களையு முடையவளாகிய தத்தையானவள், புனல் ஆட்டி - நீராட்டி, புனைந்து தர - அலங்கரித்துக் கொடுக்க, வாங்கு - வளைந்த, சிலை - வில்லையேந்திய, மறவர்கோன் - வேடராஜனாகிய நாகனானவன், மணிமகனை - அழகிய புதல்வனை, தடக்கையால்-தன் பெரிய கைகளால், தாங்குபு - தாங்கி, (அந்தப் புதல்வன்) திண்ணென்றிருந்த தன்மையால் - திண்ணென் றிருந்த காரணத்தால், தேங்கிய- பெருகிய, பேருவகையொடும் - பெருங்களிப்புடன், திண்ணன் என- திண்ணனென்று, திருநாமம் சாத்தினான் - (அந்தப் புதல்வனுக்கு) திருப் பெயர் தரிப்பித்தான் எ-று.

வாங்கல்- வளைத்தல். கோ-அரசன். அது னகரச்சாரியை பெற்றுக் கோன் என்றாயிற்று. தாங்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். திண்ணென்றிருத்தல் - வலிதாயிருத்தல். தேங்கிய-நிறைந்த வெனினுமாம். (உஅ)

திண்வளருங் கரிமருப்பாற் செய்தசைபூந் தொட்டிலின்மேல்
விண்வளரும் புனிற்றுநிலா வெண்மதியின் வளர்மைந்தன்
றண்வளரும் பாலாழித் தரங்கமிசை நாகணையிற்
கண்வளருந் துழாயலங்கற் கதிர்மணிவண் ணனைப்போலும்.

(இ - ள்.) திண் வளரும் - வலிமிகுந்த, கரிமருப்பால் செய்து - யானைக்கொம்பினாற் செய்யப்பெற்று, அசை - அசையாநின்ற, பூ-அழகாகிய, தொட்டிலின்மேல் - தொட்டிலின்மீது, விண்வளரும் - ஆகாயத்தில் வளர்கிற, புனிற்று நிலா - இளஞ் சந்திரிகையையுடைய, வெள் மதியின் - வெண்டிங்கள்போல, வளர் - வளராநின்ற, மைந்தன் - பாலகன், தண் வளரும் - குளிர்ச்சி மிகுந்த, பால் ஆழி - பாற் கடலின், தரங்கமிசை - அலையின்மேல், நாகணையில் - பாம்பணையில், கண் வளரும்-கண்ணுறங்குகிற, துழாய் - திருத்துழாயினாற் றொடுக்கப்பட்ட, அலங்கல் - மாலையணிந்த, கதிர் - ஒளியையுடைய, மணிவண்ணனைப்போலும்-மணிவண்ணனை நிகர்த்திருப்பான் எ-று.

புனிறு - ஈன்றணிமை. (மிக்க இளமை). மதியின் என்பதில் இன் ஐந்தாவதன் ஒப்புப்பொருட்டு. ஆழி - ஆழமுடையது. கடலினும் ஆழமுடையது வேறொன்றின்மையால் கடலை ஆழியென வழங்குவாராயினர். தரங்கம் - வடசொல், இதற்குத் திரைதலையுடைய தென்பது பொருள்.

மலயமா ருதம்புகுந்த மடுக்கமல மெனநீரிற்
கலைகெழுமா மதியமெனக் கவின்கொடிரு முகமசைய
விலவிதழ்வா யமுதொழுக வெழின்மார்ப மிசையெடுத்துச்
சிலைமறவர் குலதிலகஞ் செங்கீரை யாடிற்றே.

(இ - ள்.) மலயமாருதம் புகுந்த - தென்றற்காற்று வீசப்பெற்ற, மடு - மடுவிலுள்ள, கமலம் என - தாமரை மலர்போல, நீரில் - நீரினில், கலைகெழு - கலைகளோடு கூடிய, மாமதியம் என-பூர்ண சந்திரன்போல, கவின்கொள் - அழகைக்கொண்ட, திருமுகம் அசைய - திருமுகமானது அசையாநிற்க, இலவு இதழ்வாய் - இலவமலரி னிதழ்போலும் வாயினிடத்து, அமுது ஒழுக - அமிர்தம் சிந்தாநிற்க, எழில் மார்பம் - அழகிய மார்பை, மிசை எடுத்து - மேலே தூக்கி, சிலை மறவர்குலம் - வில்வேடர் குலத்துக்கு, திலகம் - திலகமானது, செங்கீரை ஆடிற்று - செங்கீரை யாடியது எ-று.

மலயம் - பொதியமலை. மாருதம் - காற்று. தென்றற்காற்று அவ்விடத்தினின்றும் வருதலால் அதற்கு மலயமாருதம் எனப் பெயராயிற்று. கமலம் - தாமரை. இது அருபெயராய் இதன் மலரை புணர்த்திற்று. இது வடசொல். இதற்கு நீரை யலங்கரிப்பதெனப் பொருள் கூறுவர் வடநூலார். வாயமுது - எச்சில், பாலுமாம். திலகம் ஆடிற்று என வினையும். (உகூ)

தருணமதி நிலத்தினிடைத் தவழ்வதெனத் தவழ்ந்து
பொருதிரைவார் கடலாடைப் புவிமகள்செய் புண்ணியத்தாற்
றிருவடிமா மலர்சுமப்பச் சேர்த்திளமென் னடைபயின்றான்
குருதிவடி யிலங்கிலைவேற் குகனருளாற் பெறுமைந்தன்.

(இ - ள்.) குருதிவடி - அரத்தம் வடிகிற, இலங்கு - பிரகாசிக்கிற, இலை - இலைவடிவினதாகிய, வேல்-வேலாயுதத்தையுடைய, குகன் - முருகக்கடவுளின், அருளால் - திருவருட் பிரசாதத்தால், பெறும் - பெற்ற, மைந்தன் - புதல்வனாகிய திண்ணன், தருணமதி - பாலசந்திரன், நிலத்திடை - பூமியின்மேல், தவழ்வது என - தவழ்வதுபோல, தவழ்ந்து - தவழ்ந்து, பொரு-மோதுகிற, திரை - அலைகளையுடைய, வார் - நீண்ட, கடல் - சமுத்திரமாகிய, ஆடை - ஆடையையுடுத்த, புவிமகள் - பூதேவியானவள், செய் - பண்ணின, புண்ணியத்தால் - சுக்ருதத்தால், திருவடி மாமலர் சுமப்ப-அழகிய பாததாமரைமலரைத் தாங்க, சேர்த்து-ஒன்றோடொன்று சேர்த்து, மெல் - மிருதுவாகிய, இளநடை பயின்றான் - இளநடை பழகலுற்றான் எ-று.

மைந்தன் பயின்றான் என வியையும். தவழ்தந்து என்பதற்குப் பகுதி தவழ்தா. இளநடை - தளர்நடை. வார்-நீரெனினுமாம். கடலாடை - பண்புத்தொகை நிலைத்தொடர். பயின்றான் என்பதற்குப் பகுதி பயில். வடி - வடித்தவென்றலு மொன்று. வடித்தல் - நீட்டல். (உஎ)

குன்றிவட மரைதயங்கக் கொடுவரிவள் ளுகிர்க்கோவை
நன்றுகழுத் தினிலிலங்க நனந்தலைச்சீ றூர்முழுது
மொன்றுசிறு ரொடுசிறுதே ருருட்டியும்பே தையரிழைத்த
துன்றுமணிச் சிற்றில்லந் துடைத்தும்விளை யாட்டயர்ந்தான்.

(இ - ள்.) குன்றிவடம் - குன்றிமணிமாலை, அரை - திருவரையில், தயங்க - விளங்க, கொடுவரி - புலியின், வள் - கூர்மையுள்ள, உகிர்-நகத் தாற் றொடுத்த, கோவை - மாலையானது, நன்று - நன்றாக, கழுத்தினில் இயங்க - கண்டத்தில் பிரகாசிக்க, நனந்தலை - விஸ்தாரமான, சீறூர் முழுதும் ஒன்று - சிற்றூர் முழுதிலுள்ள, சிறுரொடு - சிறுவரோடு கூடி, சிறுதேர் உருட்டியும் - சிறுதேரோட்டியும், பேதையர் இழைத்த - பேதைப் பெண்கள் சமைத்த, துன்றும் - நெருங்கின, மணி - அழகாகிய, சிறு இல்லம் சிதைத்தும் - சிறு வீட்டினை யழித்தும், விளையாட்டு அயர்ந்தான் - விளையாடினான் எ-று.

குன்றி ஆகுபெயர். கொடுவரி-புலி. கோடுவரி யெனற்பாலது கொடு வரியென்றாயிற்று. வளைந்த கீற்றுக்களை யுடையதென்பது பொருள். வள் - கூர்மை. கோவை - ஆகுபெயர். சிறுவர் எனற்பாலது சிறார் என மரூஉவாயிற்று. பேதையர் - எழாட்டைப் பிராயப் பெண்கள். இழைத்தல் - செய்தல். பகுதி இழை. விளையாட்டயர்ந்தான் ஒருசொன் னீரது. (உஅ)

ஆர்நாரின் றிண்கயிற்றா லமைச்சிறுகோல் வளைத்தவில்லுங்
கூர்வாய்முண் ணுனிபதித்த கோற்கோலுங் கைக்கொண்டு
கார்மேனி மைந்தரொடு கான்புகுந்து கொடுவிலங்கி
னேர்வாய்மென் குருளைபல வெய்தல்செய்தான் விளையாட்டால்.

(இ - ள்) ஆர் நாரின் - நிறைந்த நாரினாற்றிரித்த, திண்கயிற்றால் - வலிய கயிற்றினால், அமை - மூங்கிலின், சிறுகோல் - சிறிய கோலை, வளைத்த - வளைத்துச்செய்த, வில்லும் - வில்லினையும், கூர்வாய்முள் - கூர்மைவாய்ந்த முள்ளை, நுனிபதித்த - நுனியிற் பதித்த, கோல் கோலும் - அம்புக் கோலினையும், கைக்கொண்டு - கையிற் கொண்டு, கார் மேனி - கருமையாகிய வுடம்பினையுடைய, மைந்தரொடு - சிறுவரோடு கூடி, கான்புகுந்து - காட்டிற் பிரவேசித்து, கொடு - கொடிதாகிய, விலங்கின் - மிருகங்களின், ஏர்வாய் - அழகு வாய்ந்த, மெல் - மெல்லிய, பலகுருளை - பல குட்டிகளை, விளையாட்டால் - விளையாடலாக, எய்தல் செய்தான் - எய்தான் எ-று.

அமை - மூங்கில். கார்மேனி மைந்தர் என்றதனால் அம் மறவர் குலத்தில் செந்நிறமுடையர் அரியர் என்ப தினிது விளங்கிற்று. எய்தல் செய்தான் ஒரு சொல். (உக)

வாமிளமான் கன்றுகளும் வள்ளுகிர்நோன் ருட்புலியின்
கோமளநற் குருளைகளுங் குடாவடியின் குட்டிகளுந்
தாமிழைத்த முற்றவத்தாற் சவரர்குலா திபன்பயந்த
மாமகனார் கைப்பட்டு வளர்ந்தவற்றிற் களவில்லை.

(இ - ள்.) வாம் - தாவுமியல்புள்ள, மான் - மானின், இளங்கன்றுகளும்—, வள் உகிர் - கூர்மையாகிய நகங்களையும், நோன்தாள் - பெரிய கால்களையும் உடைய, புலியின் - புலிகளின், நல் - அழகிய, கோமளம் - மிருதுவாகிய, குருளைகளும் - குட்டிகளும், குடாவடியின் குட்டிகளும் - கரடிக்குட்டிகளும், தாம் இழைத்த - தாங்கள் செய்த, முன் தவத்தால் - முற்றவப்பயனால், சவரர்குலம் அதிபன்-வேடர்குலாதிபனாகிய நாகன், பயந்த - பெற்ற, மாமகனார் கைப்பட்டு - அழகிய புதல்வராகிய திண்ணனார் கையிற்சிக்கி, வளர்ந்தவற்றிற்கு-வளர்ந்தவைகளுக்கு, அளவு இல்லை - ஓரெல்லையில்லை எ - று.

வாவும் எனற்பாலது வாம் என விகாரமாயிற்று. குடாவடி - கரடி. சவரர் - வேடர். அதிபன் - அரசன். பயத்தல் - பெறல். பகுதி பய. (கூ0)

இவ்வகைய விளையாட்டோ டிளமைந்தன் வளருநாட்
கைவ்வலிய சிலைவிஞ்சை கற்பிக்கும் பருவம்வரத்
தெவ்வடுதோட் குன்றவர்கோன் றேயத்து மறவரெலா
மவ்வழிவந் துறக்கூட்டி யடர்சிலையின் விழாநடத்தி.

(இ - ள்.) இவ்வகைய விளையாட்டோடு - இவ்விதமாகிய விளையாட்டுடனே, இளமைந்தன் - இளம்புதல்வன், வளரும் நாள் - வளர்கின்ற காலத்தில், கைவலிய - கையில்வல்ல, சிலை விஞ்சை - வில்வித்தையை, கற்பிக்கும் - கற்பித்தற்குரிய, பருவம் வர - பருவம் வருதலும், தெவ் அடு - பகைவரைக் கொல்லுகிற, தோள் - புயவலிமிகுந்த, குன்றவர் கோன் - குறவர்க்கரசனாகிய நாகன், தேயத்து மறவர் எல்லாம்-தேசத்திலுள்ள வேடரெல்லாரும், அவ்வழி - அவ்விடத்தில், வந்து உற - வந்து சேரும்படி, கூட்டி - சேர்த்து, அடர் - (பகைவரை) கொல்லுதற்குரிய, சிலையின்விழா நடத்தி - வில்விழா நடத்தி எ-று.

கைவலிய என்றது கைதேர்ந்த என்றபடி. விஞ்சை வித்யா என்னும் வடசொற்றிரிபு. பருவம் - தருணம். தெவ் - ஆகுபெயர். விழா - திருவிழா (உத்ஸவம்). (கூக)

பின்புசிலை யாசாற்குப் பெருஞ்சிறப்புச் செய்தடிக
ளென்பழைய குடிநிறுத்திவ் விளையோற்குச் சிலைக்கல்வி
யன்பினொடு கொடுக்கவென்று னதற்கிசைதொல் லாசிரிய
னன்பகலில் வரன்முறையே நற்சிலைகைப் பிடிப்பித்தான்.

(இ - ள்.) பின்பு-பிறகு, சிலை ஆசான்கு-வில்லாசிரியனுக்கு, பெருஞ் சிறப்புச்செய்து - பெரிய சம்மானஞ் செய்து, அடிகள் - சுவாமீ, என் - எனது, பழையகுடி - பழமையாகிய குடியை, நிறுத்து - நிலை பெறுத்தற் குரிய, இ - இந்த, இளையோற்கு - சிறுவனுக்கு, சிலைக்கல்வி - வில்வித் தையை, அன்பினொடு - அன்புடனே, கொடுக்க - கற்பிக்கக் கடவாய், என்றான் - என்று சொன்னான், அதற்கு - அந்த வேண்டுகோளுக்கு, இசை - இசைந்த, தொல் ஆசிரியன் - பழைய ஆசிரியன், நன்பகலில் - சுபமுகூர்த்தத்தில், வரல்முறையே - வரலாற்று முறைப்படியே, நற் சிலை - சிறந்த வில்லினை, கை-கையால், பிடிப்பித்தான் - பிடிக்கச் செய் தான் எ-று.

அடிகள் அண்மைவிளியாதலா லியல்பாயிற்று. நற்சிலை அழகிய வில் என்றலுமாம். (௩௨)

முற்பிறப்பிற் பல்பெரும்போர் முடித்தசிலை விஞ்சையெலா
மற்பழுத்த குவவுத்தோள் வனசரர்தம் பெருமாற்கு
விற்பிடித்த காலத்தே விளங்கியதஞ் சனம்விழியிற் [போல்.
பொற்பவிட்ட பொழுதேகீழ்ப் பொருள்வைப்புக் காண்பது

(இ - ள்.) விழியில் - கண்ணில், பொற்ப - அழகுண்டாக, அஞ்சனம் இட்ட பொழுதே - அஞ்சனமிட்ட காலத்திலேயே, கீழ் - நிலத்தின்கீழ் புதைக்கப்பட்டிருக்கிற, பொருள் வைப்பு - பணப்புதையல், காண்பது போல் - காணப்படுவதுபோல, முன்பிறப்பில் - முற்சனனத்தில், பல் - அநேகமாகிய, பெரும்போர் முடித்த - பெரிய யுத்தத்தைப் பண்ணி முடித்த, சிலைவிஞ்சை எல்லாம் - வில்வித்தையாவும், மல் பழுத்த - மற் போர்த்தொழில் முதிர்ந்த, குவவு - திரண்ட, தோள் - புயங்களையுடைய, வனசரர்தம் பெருமாற்கு - மறவர் கோனுக்கு, வில்பிடித்த காலத்தே - வில்லைப் பிடித்த காலத்திலேயே, விளங்கியது - விசதமாயிற்று எ-று.

முடித்த-வென்ற. வனசரர்-காட்டிற் சஞ்சரிப்பவர். தம்-சாரியை. பொற்ப பொற்பு என்னும் பெயரடியாகப் பிறந்த வினையெச்சம். (௩௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

கொள்வலிச் சிலையின் விஞ்சை குறைவற நிரம்பிக் காளை
முள்ளெயிற் றரவு யர்த்தோன் முரட்படை முழுதுங் கொன்ற
வெள்வயப் புரவித் திண்டேர் விசயன்வேட் டுவக்கு லத்தி
னுள்ளவ தரித்தான் கொல்லென் றுரைதர வொருகு நாளில்.

(இ - ள்.) வலிகொள் - வலிகொண்ட, சிலையின் விஞ்சை - வில்வித்தையை, காளை - காளைப்பருவத்தையுடைய திண்ணன், குறைவு அற - குறைவில்லாதபடி, நிரம்பி - நிறையப் பெற்று, முள் எயிறு - முள் போன்ற பல்லையுடைய, அர - பாம்பை, உயர்த்தோன் - கொடியாகவுடைய வணங்கிய துரியோதநனது, முரண்படைமுழுதும் - வலிய சேனை முழுமையும், கொன்ற—, வெள்வயப்புரவி - வெற்றியையுடைய வெள்ளைக் குதிரை கட்டிய, திண்தேர் - வலிய தேரையுடைய, விசயன் - அருச்சுநன், வேட்டுவக் குலத்தினுள்-வேடர் குலத்தில், அவதரித்தான் கொல் என்று - அவதரித்தானோ வென்று, உரைதர-யாவரும் புகழ்ந்து சொல்லும்படி, ஒழுகும் நாளில் - நடக்குங் காலத்தில் எ-று.

அர ஆகுபெயர். வயம் - வெற்றி. கொல் - ஐயப்பொருட்டு. உரைதர ஒரு சொல். பகுதி உரைதா. (௩௪)

சேட்டிளஞ் சிங்க மன்ன செம்மலைத் தந்தை கன்னி
வேட்டமா டுவித்த லாற்ற விழைந்தன னதனை நன்கு
கூட்டிட வனதெய் வங்கள் கொள்பலி கொடுப்ப வுன்னிக்
கோட்டுறு வரிவில் வேடர் குழுவொடு வனத்திற் புக்கான்.

(இ - ள்.) சேடு - பெருமை பொருந்திய, இளஞ்சிங்கம் அன்ன - இளஞ்சிங்கம் போன்ற, செம்மலை - திண்ணனை, தந்தை - பிதாவாகிய நாகன், கன்னிவேட்டம் ஆடுவித்தல் - இளவேட்டை யாடுவித்தலை, ஆற்ற - செய்ய, விழைந்தனன் - விரும்பினன், அதனை-அவ்விஷயத்தை, நன்கு - நன்றாக, கூட்டிட - கைகூட்டும்படி, வனதெய்வங்கள் - வனதேவதைகள், கொள்-கொள்ளுதற்குரிய, பலி-பலியை, கொடுப்ப-கொடுக்க, உன்னி - நினைத்து, கோட்டு உறு - வளைத்தலைப் பொருந்தின, வரிவில் - வரிவில்லையுடைய, வேடர் குழுவொடு - வேடர் கூட்டத்துடன், வனத்தில் புக்கான் - காட்டில் பிரவேசித்தான் எ-று.

சேடு - பெருமை. செம்மல் - பெருமையுடையோன். விழைதல் - விரும்புதல். பகுதி விழை. உன்னல் - நினைத்தல். பகுதி உன். கோட்டுதல் - வளைத்தல். பகுதி கோட்டு. வரிவில் - நீண்டவில். வரிந்து கட்டினவில் எனினுமாம். (௩௫)

கலிவிருத்தம்

புக்கவன் குழைசிலைப் புளிஞர் யாரையு
மைக்கருங் கயல்புரை வாட்கண் ணரொடு
தொக்கிருஞ் சுனைப்புன ரேய்ந்து வம்மெனு
வக்கணங் கானுநீ ராடப் போயினான்.

(இ - ள்.) புக்கவன் - பிரவேசித்தவன், குழைசிலை-வளைத்த வில்லையுடைய, புளிஞர் யாரையும் - வேடரெல்லாரையும், (நோக்கி) மை - மையெழுதப்பெற்று, கருங்கயல் புரை - கரிய சேல்மீனை நிகர்த்த, வாள்

கண்ணூரொடு - வாட்கண்களையுடையவராகிய மாதரோடு, தொக்கு - கூடி, இரு - பெரிய, சுனைப்புனல் - சுனைநீரில், தோய்ந்து - மூழ்கி, வம் எனு - வாரும் என்று சொல்லி, அக்கணம் - அக்கணமே, தானும்—, நீராடப் போயினன் - நீராடச்சென்றான் எ-று.

குழைத்தல் வளைத்தல். பகுதி குழை. வாட்கண் - ஒளியையுடைய கண். வாள்போலுங் கண் எனினுமாம். தொக்கு என்பதற்குப் பகுதி தொகு. தோய்தல் - மூழ்குதல். வம் வாரும் என்பதன் விகாரம். (௩௬)

குரைகட லின்னுமக் குறிய மாதவன்
பருகினும் பருகுமென் றஞ்சிப் பாழிமால்
வரையரண் புகுந்தென வயங்கு பூஞ்சுனை
தெரிவைய ரொடுமறச் செல்வ ரெய்தினர்.

(இ - ள்.) குரைகடல் - ஒலிக்கின்ற கடலானது, இன்னும் - மேலும், அ - அந்த, குறிய - உருவிற் குறியனாகிய, மாதவன் - பெரிய தவத்தின னாகிய அகத்தியன், பருகினும் பருகும் என்று - குடித்தாலும் குடிப்பா னென்று, அஞ்சி - பயந்து, பாழிமால் - மிகப் பெரிய, வரையரண் புகுந் தென - மலையரணிற் புகுந்தது போல, வயங்கு-விளங்குகிற, பூஞ்சுனை - அழகிய சுனைகளுக்கு, தெரிவையரொடும் - தங்கள் மனைவியருடனே, மறச்செல்வர் - வேட்டுவச் செல்வர், எய்தினர்-வந்துசேர்ந்தார்கள் எ-று.

குரைத்தல் ஒலித்தல். பகுதி குரை. குறிய வென்ற விசேடணத்தா லும் பருகினும் பருகுமென மேல் வருதலானும் மாதவன் என்றது அகத்திய முனிவனை யுணர்த்திற்று. அரண் - காவல். தெரிவையர் என்றது பருவங் குறியாது பெண்பொதுவைக் குறித்தது. எய்தல் - அடைதல். பகுதி எய்து. (௩௭)

ஒலிவளைக் கையின ருற்ற போதிரி
பலவிதப் பறவையின் பறையின் காற்றினான்
மலிசுனைக் குவளைக ளசைதன் மாதர்கண்
ணலிபகைக் குடனனி நடுங்கல் போலுமே.

(இ - ள்.) ஒலி - ஒலிக்கின்ற, வளை - வளையலணிந்த, கையினர் - கையினை யுடையவராகிய மாதர், உற்றபோது - அடைந்தபோது, இரி - ஓடிப்போன, பலவிதம் - பலவகையாகிய, பறவையின் - பறவைகளு டைய, பறையின் - சிறகுகளின், காற்றினால் - காற்றின் விசையினால், மலி - மிகுந்த, சுனை - சுனைகளிலுள்ள, குவளைகள் அசைதல் - குவளை மலர்கள் அசைதல், நலி - வருத்துகிற, மாதர்கண் - மாதர் கண்ணாகிய, பகைக்கு-விரோதிக்கு, நனி மிகுதியாய், உடல் நடுங்கல் போலும்-உடம்பு நடுங்குதலை நிகர்க்கும் எ-று.

பறவைக ளஞ்சுதற்குக் காரணம் மாதர் கைவளையொலி. பறை ஆகு பெயர். சிறகு என்பது பொருள். பகை ஆகுபெயர். கலிதல் - வருந் துதல். பகுதி கலி. இது பொதுவினைப் பகுதி. கனி மிகுதிப் பொருட் டாகிய வுரிச்சொல். ஏ - ஈற்றசை. (௩௮)

மற்றவர் புகுதலின் மணங்கொள் பூவினுட்
டுற்றவண் டிரிதர றாய நீர்ச்சுனை
யற்றைநாள் வரையும்புக் காடு வார்ப்பெறா
துற்றநீள் பழிவிடுத் தோடல் போலுமே.

(இ - ள்.) அவர் புகுதலின் - அவர் பிரவேசித்தலால், மணம்கொள் - வாசனையைக்கொண்ட, பூவினுள் - மலரினுள்ளே, துற்ற - நெருங்கி யிருந்த, வண்டு - வண்டுகள், இரிதரல் - ஓடிப்போதல், தூய - பரிசுத்த மான, நீர் - நீரையுடைய, சுனை—, அற்றைநாள் வரையும் - அந்த நாள் வரையும், புக்கு ஆடுவார் பெறாது - வந்தாடுவாரைப் பெறாமல், உற்ற - அடைந்திருந்த, நீள் - பெரிய, பழி - நிந்தையானது, விடுத்து ஓடல்போ லும் - விட்டோடிப் போவதை நிகர்த்திருக்கும் எ-று.

மற்று - அசை. புகுதலின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றாவதன் கருவிப்பொருடந்து நின்றது. துற்ற என்பதற்குப் பகுதி துறு. ஆடுவார் - மூழ்குவோர். வண்டு இரிதரல் பழிவிடுத்தோடல் போலும் என்றமையால் பழிக்குநிறம் கருமையென்பது விளங்கிற்று. ()

மேற்படி வேறு

செய்ய தாமரைத் தேமல ரன்னலா
ரைய வாண்முகத் தோடுற வாடின
மொய்ய ரும்புகண் முத்தந் துயல்வரும்
வெய்ய கொங்கை விருந்தெதிர் கொண்டவே.

(இ - ள்.) தேம்-மணங்கொண்ட, செய்யதாமரைமலர்-, அன்னலார் - மாதராது, ஐய - அழகிய, வாள் - ஒளியையுடைய, முகத்தோடு - முகங் களுடன், உறவாடின - நட்பாடின, மொய் - நெருங்கின, அரும்புகள் - மொட்டுகள், முத்தம் - முத்துவடம், துயல்வரும் - புரளாநின்ற, வெய்ய- விருப்பத்தை யுண்டாக்குகிற, கொங்கை - தனங்களாகிய, விருந்து - விருந்தினரை, எதிர்கொண்ட - எதிர்கொண்டழைத்தன எ-று.

செய்ய - செம்மைப் பண்படியாகப் பிறந்த பெயரெச்சம். ஐ-அழகு. வாள் - ஒளி. உறவாடல் - நட்பாடல். முத்தம் முக்தம் என்னும் வட சொற்றிரிபு. துயல்வரும் என்பதற்குப் பகுதி துயல்வா. எதிர்கோடல் - வரவேற்றல். விருந்து ஆகுபெயர். (௪௦)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தாமரை முகத்தர் குவளையங் கண்ணார்
சைவலக் கூந்தலர் வள்ளைக்
காமரு குழைய ரன்னமென் னடையர்
கமலநீள் வளையமென் றோளர்
நேமியம் பறவைக் குவிமுலைத் தடத்தர்
நிறையித ழாம்பலம் வாய
ராமட மகளிர் நீரைவிட் டகலா
தகனமர்ந் தாடின ரன்றே.

(இ - ள்.) தாமரைமுகத்தர் - தாமரைமலர்போலும் முகத்தையுடையவரும், குவளை அம் கண்ணர் - குவளைமலர்போலும் கண்களையுடையவரும், சைவலம் கூந்தலர் - நீர்ப்பாசிபோலும் கூந்தலையுடையவரும், வள்ளைகாமர் குழையர் - வள்ளைத்தண்டுபோலும் அழகிய குழையையுடையவரும், அன்னம் மெல் நடையர் - அன்னநடைபோலும் மெல்லிய நடையையுடையவரும், கமலம்நீள்வளையம் மெல்தோளர் - தாமரையின் நீண்ட வளையம்போலும் மெல்லிய தோள்களையுடையவரும், நேமி அம் பறவை குவிமுலைத்தடத்தர் - அழகிய சக்ரவாகப் பறவைபோலும் குவிந்த ஸ்தநதடத்தையுடையவரும், நிறை இதழ் ஆம்பல் அம்வாயர் - நிறைந்த இதழ்களையுடைய செவ்வல்லிமலர்போலும் வாயினையுடையவரும், அம் - அழகிய, மடமகளிர் - இளம் பெண்கள், நீரைவிட்டு அகலாது - நீரைவிட்டு நீங்காமல், அகன் அமர்ந்து - மனம்விரும்பி, ஆடினர் - மூழ்கினார்கள் எ-று.

அன்று ஏ அசைகள். சைவலம் - வடசொல். காமர் - அழகு; இது உகரச்சாரியையேற்றுக் காமருவென்றாயிற்று. கமலவளையம் - தாமரையுட் சுருள். அகம் அகன் எனப் போலியாயிற்று. (ச௫)

இவ்வுழி மூழ்கி வேறிடத் தெழுவ
லென்னைநீர் காண்கென மூழ்கி
யவ்வகை யெழுந்த சிற்றிடைப் பெருந்தோ
ளணியிழை யளகவாண் முகத்தைச்
சைவலத் தருகு மலர்ந்தசெங் கமலத்
தனிமல ரெனமனத் தெண்ணிக்
கொவ்வைவாய் மகளி ரெழுந்தில ளென்று
குளிர்புனற் பரப்பெலாம் பார்ப்பார்.

(இ - ள்.) இவ்வுழிமூழ்கி - இவ்விடத்தில் முழுகி, வேறு இடத்து எழுவல் - வேறோரிடத்தி லெழுவேன், என்னை நீர் காண்கென மூழ்கி -

என்னை நீர் கண்டுபிடியுமென்று சொல்லி முழுகி, அவ்வகை எழுந்த - அவ்வாறே யெழுந்த, சிறு இடை - சிறிய இடையையும், பெருந்தோள் - பெருந்தோள்களையும் உடைய, அணியிழை - ஒரு பெண்ணினது, அளகம் - அளகத்தோடு கூடிய, வாள்முகத்தை - ஒளிமுகத்தை, சைவலத்து அருகு - சைவலத்தினருகில், மலர்ந்த - பூத்த, தனி - ஒப்பற்ற, செங்கமலமலர் என - செந்தாமரைமலரென்று, மனத்து எண்ணி - மனத்தில் நினைத்து, கொவ்வைவாய் - கோவைக்கனிபோலும் அதரத்தையுடைய, மகளிர் - மாதர், எழுந்திலள் என்று - எழுந்திலளென்றெண்ணி, குளிர் - குளிர்ந்த, புனல் பரப்பு எல்லாம் - நீர்ப்பரம்பு முழுதும், பார்ப்பார் - தேடிப்பார்ப்பார் எ-று.

காண்கவென வெனற்பாலது காண்கென வென விகாரமாயிற்று. அணியிழை - அன்மொழித்தொகைக் காரணப்பெயர். அளகம் - வடசொல். கூந்தல் என்பது பொருள். வாய் என்றது இவ்விடத்து அதரத்தைக் குறித்தது. (சஉ)

கலிவிருத்தம்

முரிதி ரைப்புனன் மூழ்கி யெழுதரு
மரிம தர்க்கணு ளங்கலும் வாண்முக
மிரைதி ரைக்கட லின்கண் ணெழுதல்செய்
விரிக திர்க்கலை வெண்மதி யொத்ததே.

(இ - ள்.) முரி - முரிந்துவிழுகிற, திரை - அலைகளையுடைய, புனல் - நீரில், மூழ்கி எழுதரும் - முழுகியெழுந்திருக்கிற, அரி - இரேகைகள் படர்ந்த, மதர்கண்ணாள் - மதர்த்த கண்களையுடையவளது, அம்கலும் - அழகொழுகாநின்ற, வாள்முகம் - ஒளிமுகத்தை, இரை - ஒலிக்கிற, திரை - அலைகளையுடைய, கடலின் கண் - கடலினிடத்தே, எழுதல் செய் - எழாநின்ற, விரிகதிர் - விரிந்த கிரணங்களையும், கலை - கலைகளையுமுடைய, வெள்மதி ஒத்தது - வெண்மையாகிய முழுமதியை யொத்திருந்தது எ-று.

எழுதரு என்பதற்குப் பகுதி எழுதா. எழுதல்செய் - ஒருசொல். விரிகதிர்க் கலையென்னும் விசேடணத்தால் வெண்மதி பூர்ணசந்த்ரன் என்னும் பொருள்தந்து நின்றது. ஏ - ஈற்றசை. (சங)

அன்ன மென்னவந் தீம்புன லாடிய
பொன்னி னன்ன பொறிசுணங் கம்முலைக்
கன்ன லின்மொழி யார்கரை யேறினர்
துன்னு பைந்தழைத் தூசுடுத் தாரரோ.

(இ - ள்.) அன்னம் என்ன - அன்னம்போல, அம் - அழகிய, தீ - இனிய, புனல் - நீரில், ஆடிய - மூழ்கின, பொன்னின் அன்ன - பொற்

பொடி போன்ற, பொறிசுணங்கு - புள்ளிகள்போலும் தேமல், அம்முலை - அழகிய தனங்களையும், கன்னல் - கருப்பஞ்சாறுபோன்ற, இன்மொழியார் - இன்சொல்லையுமுடையவராகிய மாதர், கரை ஏறினார் - கரைமேலேறி, துன்னு - நெருங்கின, பை - பசுமையையுடைய, தழைதூசு - இலையாடையை, உடுத்தார் - உடுத்துக்கொண்டார்கள் எ-று.

பொன்னினன்ன உருபு மயக்கம். கன்னல் ஆகுபெயர். தழைத்தூசு - இலையாடை. அரோ - அசை. (சச)

அங்கு நின்றக லங்கயற் கண்ணினார்
மங்குல் கண்படு மாமலர்ச் சோலையுட்
பொங்கு மோகையிற் போய்க்கட வுட்கலர்
கொங்கு நாண்மலர் கொய்யத் தொடங்கினார்.

(இ - ள்.) அங்கு நின்று - அவ்விடத்திலிருந்து, அகல் - நீங்கின, அம் - அழகிய, கயல்கண்ணினார் - சேல்மீன்போலுங் கண்களையுடையவராகிய மாதர், மங்குல் கண்படு - மேகங்களுறங்குகிற, மா - பெரிய, மலர்ச்சோலையுள் - பூஞ்சோலையில், பொங்கும் - மிகுந்த, ஓகையின் போய் - மகிழ்ச்சியோடுசென்று, கடவுட்கு - தேவதார்ச்சனையின்பொருட்டு, அலர் - விரிந்த, கொங்கு - மணமுள்ள, நாள்மலர் - புதியமலர்களை, கொய்யத்தொடங்கினார் - பறிக்கத்தொடங்கினார்கள் எ-று.

கண்படுதல் ஒருசொல். உறங்குதல் என்பது பொருள். பொங்குதல் - மிகுதல். நாள்மலர் - புதுப்பூ (அன்றலர்ந்த மலர்). (சரு)

தம்மை மஞ்ஞை தழைசிறை மென்குயி
லம்மென் பூவை கிளியென் றறைந்திடன்
மெய்ம்மை யாக விளங்கிழை யார்விரை
விம்மு பூந்தரு மீமிசை யேறினார்.

(இ - ள்.) தம்மை - தங்களை, மஞ்ஞை - மயில், தழைசிறைமெல்குயில் - செழித்த சிறகுகளையுடைய மெல்லிய குயில், அம்மெல் பூவை - அழகாகிய மெல்லிய நாகணவாய்ப்புள், கிளி - கிள்ளை, என்று அறைந்திடல் - என்று உலகத்தார் சொல்லுதல், மெய்ம்மையாக - உண்மையாம்படி, விளங்கு இழையார் - மாதர்கள், விரைவிம்மு - மணமிகுந்த, பூந்தரு மீமிசை - மலர்மரங்களின்மேல், ஏறினார் - ஏறினார்கள் எ-று.

அறைதல் - சொல்லல், பகுதி அறை. இழை - ஆபரணம். விளங்கிழையார் - பிரகாசிக்கிற ஆபரணமணிந்தவர் (மாதர்). மீமிசை ஒருபொருட் பன்மொழி. (சசா)

கொங்கு தங்கிய கோங்கலர் கொய்யுமோர்
மங்கை கொம்பின் மறைந்துநின் றொளிறில்
பொங்கு வெம்முலை பூமுகி ழாமென
வங்கை கொண்டுதொட் டன்மையின் வெள்கினாள்.

(இ - ள்.) கொங்குதங்கிய - மணம்பொருந்திய, கோங்கு அலர் - கோங்கம்பூவை, கொய்யும் - பறிக்கிற, ஓர் - ஒரு, மங்கை - மாது, கொம்பில் மறைந்து நின்றாள் - கிளையில் மறைந்து நின்றவளாகிய வேறொரு மாதின், எழில்பொங்கு - அழகு மிக்க, வெம் - விருப்பத்தையுண்டாக்குகிற, முலை - தனத்தை, பூமுகிழ் ஆம் என - மலரும் பருவமொட்டென்றெண்ணி, அங்கைகொண்டு தொட்டு - தனது அங்கையினால் தீண்டி, அன்மையின்-(மொட்டு) அல்லாமையால், நாணினான்-வெள்கினான் எ-று.

கோங்கு-கன்னிகாரமரம். மங்கை யென்றது ஈண்டுப் பருவங் குறியாது பெண்பொதுவைக் குறித்தது. முகிழ் - மொட்டு (அரும்பு). கொண்டு மூன்றுவதன் சொல்லுருபு. அன்மையின் என்பதில் இன் என்னுமைந்தாவது மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது. (சஎ)

கிராதர் தங்குலக் கிஞ்சுக வாய்மலர்
விராய வோதியர் வேங்கைமே னின்றனர்
குராவ லாமற் குடைந்தளி பாடுபூம்
பராரை வேங்கையும் பாவைகள் பூத்தென.

(இ - ள்.) குரா அல்லாமல் - குராமரமேயன்றி, அளி - வண்டுகள், குடைந்துபாடு - கிண்டிபாடுதற்குரிய, பூ - அழகிய, பருஅரை - பருத்த அரையையுடைய, வேங்கையும் - வேங்கைமரமும், பாவைகண் பூத்தென - பாவைகளைப் பூத்தாற்போல, கிராதர்தம் குலம் - வேடர்குலத்திற் பிறந்த, கிஞ்சுகம் - முருக்கமலர்போலும், வாய் - அதரத்தையும், மலர்விராய ஓதியர் - பூமுடித்த கூந்தலையுமுடைய மாதர், வேங்கைமேல் நின்றனர் - வேங்கைமரத்தின்மேல் ஏறி நின்றார்கள் எ-று.

கிராதர் - வடசொல். கிஞ்சுகமும் அது. ஓதி - கூந்தல். வேங்கை யென்றது ஒருவகை மரத்தையும் புலியையுங் குறித்தன. பருஅரை பராரையென மரூஉவாயிற்று. பாவைகள் - பிரதிமைகள் (பொம்மைகள்). ()

மைய கண்ணியொர் மங்கையொ ராடவன்
கைய டிக்கவின் காணிய மாதுநீ
செய்ய விச்சினைத் தேமல ரெட்டுபு
கொய்ய வல்லைகொ லென்றலுங் கூசினாள்.

(இ - ள்.) ஓர் ஆடவன்-ஒரு ஆண்மகன், மைய - அஞ்சனமெழுதிய, கண்ணி - கண்களையுடையவளாகிய, ஓர் மங்கை - ஒரு மங்கைப் பெண்ணின், கைஅடி - அடிக்கையின், கவின் - அழகை, காணிய - பார்க்கும் பொருட்டு, மாது - பெண்ணே, நீ - நீ, செய்ய - செவ்விய, இ - இந்த, சினை - கிளையிலுள்ள, தேம் - மணமுள்ள, மலர் - பூவை, எட்டுபு-எட்டி, கொய்யவல்லைகொல் - பறிக்கவல்லையோ, என்றலும் - என்று கேட்டலும், கூசினாள் - நாணினாள் எ-று.

காணிய-செய்யிய வென்னும் வாய்பாட் டெதிர்கால வினையெச்சம். மாது அண்மைவிளி. எட்டுபு - செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். கூசினுள் என்பதிற் பகுதி கூச. (௫௯)

வீவி லாற்றலொர் மீளி யொருநடை
யோவ மன்னு ளுயர்சினைப் பூப்பெறத்
தாவல் கண்டதைத் தாழ்வித் தனனவ
னாவி யன்னவ ளாய்மலர் சிந்தினுள்.

(இ - ள்.) வீவு இல்-கெடுதலில்லாத, ஆற்றல் - வல்லமையுள்ள, ஓர் மீளி - ஒரு விடலையானவன், ஒரு - ஒப்பற்ற, நடை ஓவம் அன்னாள்-நடக்கும் இயல்புவாய்ந்த சித்திரப்பாவையன்ன ஒரு மாதானவள், உயர் - உயர்ந்த, சினை - கிளையிலுள்ள, பூபெற - மலரைப் பெறும்பொருட்டு, தாவல்கண்டு - தாவுதலைப் பார்த்து, அதை - அந்தக்கிளையை, தாழ்வித்தனன் - தாழ்த்தினன், (அதைக்கண்ட) அவன் - அவனது, ஆவி அன்னாள் - உயிர்போல்வாளாகிய மாது, ஆய்-ஆராய்ந்து பறித்த, மலர்-மலர்களை, சிந்தினுள் - (தரையில்) கொட்டிவிட்டாள் எ-று.

மீளி விடலை யென்பன காளைப்பருவ முடையவனை யுணர்த்துஞ் சொற்கள். "ஓர் விடலையின்போம் காலொத்தன" என்றார் மணிவாசகர். ஓவியம் ஓவம் என மரூஉவாயிற்று. தாழ்வித்தனன் - ஒரு சொன்னீரது. அவன் ஆவியன்னவள் என்றது அவனது பிராணநாயகியை யுணர்த்திற்று. (௬0)

மாதர் தமமடி வைத்தலிற் பற்பல
வீத தைந்த விதமறிந் தாரல
ரீத சோகநா மேறிய பின்மிகப்
போது கொண்ட புதுமையென் னென்றனர்.

(இ - ள்.) மாதர் - பெண்கள், தம் அடி வைத்தலின்-தம் பாதத்தை வைத்தலால், பற்பல - பலப்பல வகையவாகிய, வீ - மலர்கள், ததைந்த - நெருங்கிய, விதம் - வகையை, அறிந்தார் அல்லர் - உணர்ந்திலராகி, ஈது அசோகம் - இந்த அசோகமரமானது, நாம் ஏறியபின் - நாம் ஏறின பிறகு, மிக - மிகுதியாக, போதுகொண்ட - பேரரும்புகளை யரும்பின, புதுமை என் - புதுமையென்ன, என்றனர் - என்று பேசிக்கொண்டனர் எ-று.

மாது அழகு, அதனையுடையவர் மாதர். ததைதல் - நெருங்குதல், பகுதி ததை. போது - பேரரும்பு (மலரும் பருவத்தரும்பு). இதனை "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலரு மிந்நோய்" எனும் பெருநாவலர் திருவாக்கினுலறிக. (௬௧)

வடுவ கிர்க்கணாற் றம்மொடு மாறுகொள்
படியி னாலிடம் பார்த்து வளைந்தெனக்
கடிகொள் வண்டின் கணங்கண் மணங்கமழ்
துடிகொ ணுண்ணிடைத் தோகையர்ச் சூழ்ந்தவே.

(இ - ள்.) வடுவகிர் - வடுவகிர்போன்ற, கண்ணால் - கண்களால், தம்மொடு - தம்முடனே, மாறுகொள் படியினால் - பகைமைகொண்ட காரணத்தால், இடம் பார்த்து - இடம் நோக்கி, வளைந்தென - வளைந்துகொண்டாற்போல, கடிகொள் - மணத்தைக் கொண்டிருக்கிற, வண்டின் கணங்கள் - வண்டின் கூட்டங்கள், மணம்கமழ் - மணம் வீசுகிற, துடிகொள் - துடியினுருவைக்கொண்ட, நுண் இடை - நுண்ணிய இடையினையுடைய, தோகையர்-மாதரை, சூழ்ந்த - வளைந்துகொண்டன எ-று.

வடுவகிர் - மாம்பிஞ்சின் பிளவு. "மாவடுவகிரன்ன கண்ணிபங்கா" என்றார் மணிவாசகர். இடம் பார்த்து என்றது சமயம்பார்த்து என்றபடி. கணம் - வடசொல், கூட்டம் என்பது பொருள். துடி - இடக்கை (உடுக்கு). தோகையர் - மயிற்சாயலையுடையவர். (௫௨)

தாதளைந் தளி தாழிசை பாடுதண்
போது கொய்த புதுத்தளிர் மேனியார்
காத லன்பிற் கணவரோ டெய்தினார்
தீது தீர்க்குமத் தெய்வ நிலயமே.

(இ - ள்.) தாது அளைந்து - தாது பூசிக்கொண்டு, அளி - வண்டுகள், தாழிசைபாடு - தாழிசைபாடித் திரிதற்கிடமாகிய, தண்போது கொய்த - குளிர்ந்த போதுகளைப் பறித்த, புதுதளிர்மேனியார் - புதிய தளிர்போலும் மேனியையுடையவராகிய மாதர், காதல் அன்பின் - காதலும் அன்புமுள்ள, கணவரோடு - தமது கொழுநரோடு, தீது தீர்க்கும் - தீமையையொழிக்கிற, அ - அந்த, தெய்வநிலயம் - தேவாலயத்தை, எய்தினார் - அடைந்தார்கள் எ-று.

தாது - மகரந்தம், தேன் எனினுமாம். தாழிசை - பாட்டினோர் வகை. மேனியார் - மிருதுவாகிய சரீரத்தையுடையவர், நிறமுள்ளவர் எனினுமமையும். காதல் - மிகுந்த ஆசை. அன்பு - இயற்கையாகிய அபேக்ஷை. தெய்வநிலயம் - தேவாலயம். நிலயம் - நித்யவாஸம் பண்ணு மிடம், இது வடசொல். எய்தல் - அடைதல், பகுதி எய்து, (௫௩)

கந்த மாருங் கடிமலர்ப் பைஞ்சுனை
யந்த ணீர்படிந் தவ்வழி யெய்தினான்
மந்த ராசல மென்ன வளர்ந்ததோ
ணந்து பேரிசை நாகன் கிராதர்கோன்.

(இ - ள்.) மந்தரம் அசலம் என்ன - மந்தரமலைபோல, வளர்ந்த - பருத்திருக்கிற, தோள் - புயங்களையும், நந்து - பெருகிய, பேர் இசை -

பெரும் புகழையுமுடைய, கிராதர்கோன் - வேடர்க்கரசனாகிய, நாகன் - நாகனென்பவன், கந்தம்மாறா - மணமறாத, கடிமலர் - விளக்கமான மலர்கள் மலர்ந்த, பைஞ்சுனை - பசிய சுனையின், அம்தண் - அழகும் தட்பமுமுள்ள, நீர்-நீரில், படிந்து-முழுகி, அவ்வுழி எய்தினான் - அவ்விடத்தையடைந்தான் எ-று.

படிதல் - மூழ்குதல், பகுதி படி. உழி - இடம். மந்தரம் அசலம் என்பன வடசொற்கள். மந்தரம் ஓர் மலையின் பெயர். அசலம் அசையாதிருப்பது எனப் பொருள்படுவதோர் வடசொல். (சலம் - அசைவு. அ - எதிர்மறை.) நந்துதல் - மிகுதல், பகுதி நந்து. கோ - அரசன் என்னும் பொருடருவதோர் சொல், அது னகரச்சாரியைபெற்று கோன் என்றாயிற்று. (கச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

விரிமலர்த் தொடைக ளாலும் விளங்குவெண் கவரி யாலும்
வெருவரு தெய்வம் வாழும் வீழுடை விலங்கு நீள்கோட்
டிருள்படத் தழைந்த கோளி யெழில்பெற வணிந்து பூசை
புரிபவற் கூவிப் பூசை புரிவித்தான் வரிவி னாகன்.

(இ - ள்.) விரி - விரிந்த, மலர்தொடைகளாலும் - பூமாலைகளாலும், விளங்குவெண்கவரியாலும் - பிரகாசிக்கிற வெண்கவரிகளாலும், வெருவரு - அஞ்சுதற்குரிய, தெய்வம்வாழும் - தேவதை வாழ்கிற, வீழ்உடை - விழுதுகளையுடைய, விலங்கு - விலகிய, நீள்கோட்டு - நீண்ட கிளைகளையுடைய, இருள்பட - இருட்சியுண்டாக, தழைத்த, - செழித்த, கோளி- கோளியை, எழில்பெற - அழகுண்டாக, அணிந்து-அலங்கரித்து, பூசை புரிபவன் - பூசை செய்பவனை, கூவி - அழைத்து, (அவனைக்கொண்டு) வரிவில்நாகன் - நீண்ட வில்லையுடைய நாகனெனவன், பூசைபுரிவித்தான்- பூசை செய்வித்தான் எ-று.

தொடுக்கப்படுதலால் மாலைக்குத் தொடையென்னும் பெயர் வாய்ந்தது. வெண்கவரி - வெண்சாமரை. வீழ் - விழுது. கோளி - பூவாது காய்க்குமரம் (ஆலமரம்). அணிதல் என்பதிற் பகுதி அணி. வரிவில்-கட்டமைந்தவில் எனினுமாம். (கரு)

கானக முழுதும் வாசங் கமழ்தரக் குக்கு லத்தி
னீனறும் புகையெ ழுப்பி நெடுநிலங் குருதி பாய
நாநெடுஞ் செவிய கோட்ட நண்ணிய திரிம ருப்பி
னூனமொன் றனு மில்லா வுயர்விடை பலப டுத்தான்.

(இ - ள்.) கானகமுழுதும் - காடு முழுதும், வாசம் கமழ்தர - மணக்கும்படி, குக்குலத்தின் ஈன் - குங்கிலியத்தால் தரப்பட்ட, நறும்புகை எழுப்பி - மணப்புகையுண்டாக்கி, நெடு-பெரிய, நிலம் - தரையில், குருதி பாய - இரத்தவெள்ளம் பரவியோடாநிற்க, நெடுநா - நெடிய நாவினை

யும், செவிய - செவியினையும், கோட்ட நண்ணிய - வளைவையுடைய, திரிமருப்பின் - முறுக்கின கொம்பினையுடையதாய், ஊனம் ஒன்றுனும் இல்லா - ஒரு குறைவாயினுமில்லாத, உயர் - சிறந்த, பலவிடை - பல ஆட்டுக் கடாக்களை, படுத்தான் - பலிகொடுத்தான் எ-று.

கமழ்தர வென்பதிற் பகுதி கமழ்தா. குங்கிலியம் எனற்பாலது குக்குலம் என விகாரமாயிற்று. கோட்டம்-கோணுதல் (வளைவு). மருப்பு-கொம்பு. நாவெனடுஞ் செவிய கோட்ட நண்ணிய திரிமருப்பின் ஊன மொன் றுனு மில்லாவென்ற விசேடணத்தால் விடை ஆட்டுக்கடாவைக் குறித்தது. (௩௬)

தேன்பழுங் கிழங்கு தொப்பி செறியமை யரிசி யட்ட
வான்பதந் தினையின் மாவை வனத்தின்வா லரிசி நன்மா
வான்பயம் பெய்த மைத்த வல்சிதேக் கிலையிற் பெய்து
கான்பயில் கடவுட் கேற்றிக் களித்தனன் றேவ ராளன்.

(இ - ள்.) தேன்—, பழம்—, கிழங்கு—, தொப்பி—, செறி - மிகுதியாயிருக்க, அமை அரிசி - மூங்கிலரிசி, அட்ட - சமைத்த, வான்பதம் - சிறந்த சோறு, தினையின் மாவை—, வனத்தின் வாலரிசி நல்மா - காட்டு வாலரிசியின் நல்மாவை, ஆன்பயம் பெய்து அமைத்த வல்சி-பசுவின்பாலூற்றிச் சமைத்த சோறு, தேக்கிலையில் பெய்து-தேக்கிலையில் வைத்து, கான்பயில் கடவுட்கு - காட்டில் வாழ்கிற வனதேவதைக்கு, ஏற்றி - ஏற்பித்து, தேவராளன்-பூசைசெய்வோன், களித்தனன் - மகிழ்ந்தான் எ-று.

தொப்பி - ஓர் தானியம். அமை மூங்கில். அட்ட என்பதற்குப் பகுதி அடு. பதம் - சோறு. ஆ - பசு, இது னகரச்சாரியை பெற்று ஆன் என்றாயிற்று. பயம் - பால், இது வடசொல் (பயஃ). வல்சி - சோறு. இது "வல்சியி னெண்கு வளர்புற் றகழ" என்னும் மணிவாசகர் திருவாக்கி னொலினிது விளங்கும். தேவராளன் - பூசாரி. (௩௭)

மறவமெல் லணங்க னாரும் வனதெய்வம் பராய்வ ணங்கி
முறையறி தேவ ராளன் முழுவிடைக் குருதி தோய்செந்
நிறமுறு சேடை சாத்து நெற்றியர் தெய்வ முண்ட
வுறுசுவை யுண்டி யெல்லா முண்டுளங் களித்தா ரன்றே.

(இ - ள்.) மறவர் - மறவர்குலத்திற் பிறந்த, மெல் - மெல்லிய, அணங்கு அன்னாரும் - தெய்வப்பெண்களை நிகர்த்த மாதரும், வனதெய்வம் - வனதேவதையை, பராய் - துதித்து, வணங்கி - தொழுது, முறை அறி - சம்ப்ரதாய க்ரமமறிந்த, தேவராளன் - பூசாரி, முழுவிடை-பெரிய ஆட்டுக் கடாவின், குருதிதோய் - உதிரம்படிந்த, செந்நிறம் உறு - செந்நிறம் பொருந்திய, சேடைசாத்தும் - சேடையணிந்த, நெற்றியர் - நெற்றியையுடையவராய், தெய்வம் உண்ட - தேவதை உகர்ந்தருளின, உறு சுவை -

மிக்க சுவையினையுடைய, உண்டியெல்லாம் - உணவுகளெல்லாவற்றை யும், உண்டு - புசித்து, உள்ளம் களித்தார் - மனமகிழ்ந்தார் எ-று.

அணங்கு - தெய்வப்பெண். பரவி யெனற்பாலது பராய் என விகாரமாயிற்று. பரவுதல் - துதித்தல், பகுதி பரவு. இது நாவின் றொழில். வணங்கல் - தொழுதல். பகுதி வணங்கு. இது காயத்தின் றொழில். இவ்விரண்டைச் சொல்லவே மனத்தின் றொழிலாகிய சிந்தனையு மடங்கிற்று. இந்த மனம் வாக்கு காயம் என்பவற்றை மநோவாக் காயம் என்பர் வடநூலார். கரணத்ரயம் என்றும் த்ரிகரணம் என்றும் கூறுவர். சேடை - பொட்டு. தெய்வம் - வநதேவதை. உண்ட என்றது உண்டெஞ்சின என்றவாறு. உள்ளம் - ஆகுபெயர். (௯அ)

வெடிகுரற் சிலைக்கைச் செங்கண் வேடரும் பவளச் செவ்வாய்த்
தடமலர்க் கருங்க ணாருந் தசும்பினு ணிறைத்து வைத்த
வடிகொள்கட் டேற லங்கை மடக்குபு நிறைய வுண்டா [ர்.
ருடைநடை சொற்கள் சோர வொருவர்மே லொருவர் வீழ்ந்தா

(இ - ள்.) வெடிகுரல் - வெடித்த குரலையும், சிலைகை - வில்லேந்திய கையையும், செங்கண் - சிவந்த கண்களையுமுடைய, வேடரும் - வேட்டுவரும், பவளம் செவ்வாய் - பவளம்போலுஞ் செவ்வாயையும், தடம் மலர் - நீர்ப்பூவாகிய குவளைமலர்போன்ற, கருங்கண்ணாரும் - கருங்கண்களையும் உடையவராகிய மாதரும், தசும்பினுள் நிறைத்து வைத்த - மிடாக்களில் நிரப்பிவைத்த, வடிகொள் - வடிகட்டின, கள் தேறல் - கட்டெளிவை, அங்கை மடக்குபு - அகங்கையை மடக்கிக்கொண்டு, நிறைய - வயிறு நிரம்ப, உண்டார் - குடித்து, உடைநடை சொற்கள் சோர - உடை நடை சொற்கள் என்னு மூன்றும் தளராநிற்க, ஒருவர் மேல் ஒருவர் வீழ்ந்தார் - ஒருவர்மீதொருவர் விழுந்தார் எ-று.

வெடிகுரல் - உரத்தசத்தம். வெயிலாதிகளிற் சஞ்சரித்தல் கள்ளுண்டல் முதலியவற்றாற் சிவந்திருத்த லியல்பாதலால் செங்கண் என்றார். பவளம் - ப்ரவாளம் என்னும் வடசொற்றிரிபு. தசும்பு - வாயகன்ற மட்பானை. வடிகொள் - வடித்த. மடக்குபு - செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். உண்டார் முற்றெச்சம். உடைசோர என்பதற்கு ஆடையவிழ எனவும், நடைசோர என்பதற்கு நடை தடுமாற எனவும், சொற்கள் சோர என்பதற்கு சொற்கள் குழற எனவும் உரைத்துக் கொள்க. உடை நடை சொற்கள் சோர்தற்கும் ஒருவர்மே லொருவர் வீழ்தற்கும் காரணம் கள்ளுண்டலாலாகிய களிப்பு. (களிப்பு-மயக்கம்) ()

சிற்றிடை யொருத்தி தைத்த தேக்கிலைத் தேற லேந்தி
மற்றத னகந்தோன் றுந்தன் மதிமுக நோக்கி யுண்டாள்
கற்றையங் கதிர்வெண் டிங்கள் கள்ளொடென் வயிறு புக்கின்
றெற்றுமு நிலவு நம்மூர்க் கினியிலை யுண்மை யென்றாள்.

(இ - ள்.) சிறு இடை ஒருத்தி - சிற்றிடையினளாகிய ஒருமாது, தைத்த தேக்கு இலை - தைத்த தேக்கிலையில், தேறல் ஏந்தி - கட்டெளிவை யேந்திக்கொண்டு, அதன் அகம் தோன்றும் - அதனுள்ளே காணப்படுகிற, தன்-தனது, மதிமுகம் நோக்கி - பூர்ணசந்திரனை நிகர்த்த முகத்தைப் பார்த்துக்கொண்டே, உண்டாள் - குடித்து, கற்றை அம் கதிர் - அழகிய கிரணக்கற்றையையுடைய, வெண் திங்கள் - வெள்ளிய சந்திரனானவன், கள்ளொடு - யான் பருகின கள்ளுடனே, என்வயிறுபுக்கு - என் வயிற்றிற் புகுந்து, இன்று இற்றது - இன்று ஜீர்ணித்துப் போயிற்று. (ஆதலால்) இனி-இனிமேல், நம் ஊர்க்கு-நமது ஊருக்கு, நிலவு இல்லை-சந்திரன் தோன்றுதலில்லை, உண்மை யென்றாள்-இது சத்தியம் என்று சொன்னாள் எ-று.

தைத்த தேக்கிலை - தேக்கிலைத் தொன்னை. இதனைக் கல்லையென்றுங் கூறுவர். உண்டாள் - முற்றெச்சம். (௫௦)

களிதரு தேற லுண்டு களித்தியேற் பரிதிச் செல்வ
விளிவினின் வெம்மை யாறி வெண்ணிலாத் திங்கள் போலக்
குளிர்கதிர் பெறுவை யீவல் கொள்கெனப் பிழிய லேந்தி
யினிமொழி யொருத்தி வானத் தியல்சுட ரழைத்து நின்றாள்.

(இ - ள்) இனிமொழி ஒருத்தி-தாழ்ந்த சொற்களையுடைய ஒருத்தி, பருதிச் செல்வ - சூரியபகவானே, களிதரு - களிப்பை யுண்டாக்குகிற, தேறல் - கட்டெளிவை, உண்டு - பருகி, களித்தியேல்-களிப்பாயாயின், விளிவு இல் - நீங்குதலில்லாத, நின் வெம்மை ஆறி - உன் வெப்பம் தணிந்து, வெள்நிலா - வெண்மையாகிய சந்திரிகையை யுடைய, திங்கள் போல - சந்திரன்போல, குளிர்கதிர் பெறுவை - குளிர்ந்த கிரணங்களைப் பெறுவாய், ஈவல்-கொடுப்பேன், கொள்க என-ஏற்றுக்கொள்க வென்று சொல்லி, பிழியல் ஏந்தி - கள்ளைக் கையிலேந்திக்கொண்டு, வானத்து இயல் - ஆகாயத்திலுள்ள, சுடர் - சூரியனை, அழைத்து நின்றாள் - கூப்பிட்டுக்கொண்டு நின்றனள் எ-று.

களி - கட்குடியாலுண்டாகும் மனவெழுச்சி (மயக்கம் எனினுமாம்). ஏல் எனின் என்பதன் மரூஉ. திங்கள்போல என்றது சந்திரன் குளிர்கதிர் பெற்றிருத்தல்போல என்றபடி. கொள்கென கொள்கவென என்பதன் விகாரம். இயலல் - சஞ்சரித்தல் என்றலுமாம். (௫௧)

செறிதொடி யொருத்தி யுண்ட தேம்பிழி மயக்கந் தன்னாற்
பிறனொரு வனைத்தன் காதற் பிரிவருங் கொழுந னென்றே
யிறுகிள முலைய ழுந்த விறுகுறத் தழுவி னாளக்
கறைகெழு வேலி னானக் கள்ளினைப் பலபு கழ்ந்தான்.

(இ - ள்.) செறி - நெருங்கின, தொடி - வளையலையணிந்த, ஒருத்தி - ஒரு பெண்ணானவள், உண்ட - தான் குடித்த, தேம்பிழி மயக்கம் தன்

ளுல் - கட்குடி வெறியால், பிறன் ஒருவனை-அயலானொருவனை, காதல் - ஆசையுள்ள, பிரிவு அரு - பிரிதற் கருமையான, தன் கொழுநன் என்றே - தன் கணவனென்று நினைத்தே, இறுகு - இறுகின, இளமுலை அழுந்த - இளமுலைகள் அழுந்தும்படி, இறுகுற - இறுக, தழுவினள் - ஆலிங்கனம் செய்துகொண்டாள், அ - அந்த, கறைகெழு - உதிரம் தோய்ந்த, வேலினன் - வேற்படையையுடையவன், அ கள்ளினை - அந்தக் கள்ளை, பல புகழ்ந்தான் - பலவாறு புகழ்ந்துகொண்டான் எ - று.

செறிதொடி - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப்பெயர். அழுந்த வென்பதற்கு மார்பிலழுந்தவென் றுரைத்துக் கொள்க. கறை - உதிரக்கறை யென்றலுமாம். (சுஉ)

கருங்கணொ ளொருத்தி தன்வாய்க் கடைவழி நுரைவேட் டெய்து
சுரும்பினை வளைக ளார்ப்பத் தோன்றியங் கையா லோச்சி
விரும்புநின் பெண்டிர் பாற்போய் விம்மவாய் பருகென் றூடிஞ்
வருந்தலை மகனோ டூடி வைதல்போல் வைது நின்றாள்.

(இ - ள்.) கருங்கண்ணாள் ஒருத்தி-கருங்கண்களை யுடையவளாகிய ஒரு பெண்ணனவள், தன் - தனது, கடைவாய்வழி-கடைவாயில் ஒழுகுகிற, நுரை - நுரையை, வேட்டு எய்தும் - விரும்பிவருகிற, சுரும்பினை - ஆண்வண்டை, வளைகள் ஆர்ப்ப - வளையல் ஒலிக்க, தோன்றி - காந்தள் மலர்போலும், கையால் - கைகளால், ஓச்சி - துரத்தி, விரும்பும் - இச்சிக்கிற, நின்-உனது, பெண்டிர்பால் போய் - மகளிரிடத்தேசென்று, வாய்விம்ம - வாய் நிறைய, பருகு என்று - பருகக் கடவாயென்று, ஊடி-பிணங்கி, வரும் - தன்னை நோக்கி வருகிற, தலைமகனோடு - தன் கணவனோடு, ஊடி - பிணங்கி, வைதல்போல் - வைவதுபோல, வைது நின்றாள் - வைதுகொண்டே நின்றனள் எ-று.

வாய்க்கடை - கடைவாய் என முன்பின்னாய் மாற்றி யுரைக்கப்பட்டது. வேட்டு என்பதற்குப் பகுதி வேள். தோன்றி ஆகுபெயர். பொருள் - செங்காந்தட்பூ. ஓச்சல் - துரத்தல், பகுதி ஓச்சு. வாய் - அதராம்ருதத்தை. ஊடல் - பிணங்கல், பகுதி ஊடு. (சுங)

மணங்கமழ் மலர்து தைந்த வஞ்சியங் கொடியினைத்தன்
வணங்கிடை யவளென் றுன்பூ வாயைத்தே னொழுக லஞ்சி
யணங்குநீ திறந்திடாயே லளியனே னுய்வ னோவென்
றுணங்கிய மனத்தாற் றாழா வொருமகன் களிப்பு மிக்கான்.

(இ - ள்.) மணம் - மணம் வீசுகிற, மலர்துதைந்த - மலர் மிகுந்த, வஞ்சியங் கொடியினை - வஞ்சியங் கொடியை, தன் - தனது, வணங்கு இடையவள் என்று - மனைவியென்று எண்ணி, உன் - உனது, பூவாயை-

மலர் வாயை, தேன் ஒழுகல் அஞ்சி - தேன் ஒழுகுதற்கு பயந்து, அணங்கு - அணங்கே, நீ திறந்திடாயேல் - நீ திறவாயானால், அளியனேன் - எளியேன், உய்வனோ-பிழைப்பேனோ, என்று - என்று சொல்லா நின்று, உணங்கிய மனத்தால் - வருந்தின மனத்தோடு, தாழா - தாழ்ந்து, ஒரு மகன் - ஒரு ஆடவன், களிப்பு மிக்கான் - களிமிகுந்தான் எ-று.

துதைதல் - நெருங்குதலுமாம். வஞ்சி - கொடியின் பொதுப்பெயர், வஞ்சிக்கொடியென ஒருவகைக் கொடிப்பெயர் எனினு மமையும். பூவாய் - மலர்போலும் வாய் என்றும் மலராகிய வாயென்றும் உரைக்க. அணங்கு அண்மைவிளி, தெய்வப் பெண்ணே யென்பது பொருள். அளியனேன் என்பதற்கு எழையேன் என்றும் வண்டுபோல்வேன் என்றும் உரைத்துக் கொள்க. (௬௪)

உண்கடுங் கண்ம யக்க மொழிந்தபிற் கணவ ராட்டப்
பண்படு கிளவி நல்லார் படர்முலை வடம்பி ணங்கக்
கண்கொள லருநு சுப்புக் கவன்றழ நுதல்வி யர்ப்ப
விண்பொரு சினைய வாலின் வீழூச லாடி னரால்.

(இ - ள்.) பண்படுகிளவி - பண்போலுஞ் சொல்லையுடைய, நல்லார் - மாதர், உண் - தாமுண்ட, கள்மயக்கம் ஒழிந்தபின் - கள்மயக்கம் நீங்கின பிறகு, கணவர் ஆட்ட - தம் கொழுநர் ஆட்ட, படர் - பரந்த, முலை - தனமீதணிந்த, வடம் - ஆரங்கள், பிணங்க - ஒன்றோடொன்று தாக்கிச் சிக்குண்ண, கண் கொள்ளல் அரு - நோக்குதற் கரிய, நுசுப்பு - இடையானது, கவன்று அழ - துக்கித்து அழாநிற்க, நுதல்வியர்ப்ப - நெற்றி வேர்க்க, விண்பொரு சினைய - ஆகாயத்தை யளாவிய கிளைகளையுடைய, ஆலின் வீழ் - ஆலவிழுதாகிய, ஊசல் - ஊசலில், ஆடினர் - ஆடினார்கள் எ-று.

மயக்கத்தை யுண்டாக்கி அறிவை மயக்கலால் கள்ளினைக் கடுங்கள் என்றார். இங்குக் கடுமை செறலின் கண் வந்த விசேடணம். மயக்கம் தொழிற்பெயர். கிளவி-சொல், கண்ணுக்குப் புலப்படாத இடை என்றற்கு கண்கொள லருநுசுப்பு என்றார். கவன்று என்பதற்குப் பகுதி கவல். சினை - கிளை. வீழ் - விழுது. (௬௫)

பொரிமல ரனைய புன்கம் புதுநிழற் புளினந் தோறும்
விரிகதிர்ச் செஞ்ஞா யிற்றின் வெயில்புகாப் பொதும்பர் தோறுந்
தருமிடை யடுக்கந் தோறுந் தமாலநீ ளரங்கந் தோறும்
வரிசிலை மறவர் செவ்வாய் மறத்தியர் போக முண்டார்.

(இ - ள்.) வரிசிலை - நீண்ட வில்லையுடைய, மாதர் - வேடர், பொரி மலர் அனைய - பொரிந்த பூப்போன்ற, புன்கம் - புன்கமரத்தின், புது நிழல் - புதிய நிழலைத் தருகிற, புளினம் தோறும் - மணற்றிட்டைகள்

தோறும், விரி - விரிந்த, கதிர் - கிரணங்களையுடைய, செஞ்ஞாயிற்றின் வெயில் - செவந்த சூரியனது வெயில், புகா - நுழையப் பெறாத, பொதும்பர் தோறும் - சோலைதோறும், தருமிடை - மரங்கள் நெருங்கின, அடுக்கம் தோறும் - பக்க மலைதோறும், தமாலம் - பசிலை மரங்களின், நீள் - நீண்ட, அரங்கம் தோறும் - இடந்தோறும், செவ்வாய் - செவந்த வாயினையுடைய, மறத்தியர் - வேடமாதரது, போகம் - போகசுகத்தை, உண்டார் - அநுபவித்தார்கள் எ-று.

புன்கு அம் சாரியைபெற்று புன்கம் என்றாயிற்று. புளினம் - மணற்றிட்டை, இது வடசொல், தமாலம் என்பதும் அது, பசிலை மரமென்பது இதற்குப் பொருள். செவ்வாய் - என்றது செவந்த அதரத்தை. போகம் ஆகுபெயராய் போகசுகத்தை யுணர்த்திற்று. (சுசு)

மீமிசை நின்ற சைந்து விழுமணி யருவி பார்த்துங்
காமரு மணிக்க லாபக் களிமயி லாடல் கண்டுந்
தேமலர் வனத்து லாயுஞ் சிலம்பெதிர் கூய ழைத்து
மாமதி முகத்தி னார்தம் மகிழ்நரோ டாடி னாரே.

(இ - ள்.) மாமதி முகத்தினார் - பூர்ணசந்திரன்போலும் முகத்தையுடைய மாதர், மீமிசைநின்று - மேலிடத்தினின்று, அசைந்துவிழும் - அசையாநின்று விழுகிற, மணி - அழகிய, அருவிபார்த்தும் - அருவிகளை நோக்கியும், காமர் - அழகாகிய, மணி - நீலரத்நம்போலும், கலாபம் - தோகையையுடைய, களிமயில் ஆடல் கண்டும் - களிப்பையுடைய மயில்கள் ஆடுதலை நோக்கியும், தேம்மலர் வனத்து - மணத்தையுடைய பூஞ்சோலையில், உலாவும் - உலாவியும், சிலம்பெதிர் கூய் அழைத்தும்—, தம் மகிழ்நரோடு - தம் கணவரோடு கூடி, ஆடினார் - விளையாடினார்கள் எ-று.

விழும் என்பதற்கு ஒழுகுகிற என்றுரைப்பினுமாம். மணியருவி என்பதற்கு மணிகளை வாரிக்கொண்டு வருகிற என்றலுமொன்று. கலாபம் - வடசொல். சிலம்பெதிர் கூவுதலாவது மலைச்சிலைக்கெதிரே நின்று தாம் அழைத்தல்போல அதுவும் எதிரொலி கொடுக்கக் கூவுதல். "சிலம்பெதிர் கூய்வருத்தம் பயின்று கொல்லோ வல்லிமெல்லியல் வாடியதே" என்பது திருக்கோவையார். (சுஎ)

இன்னண மெங்கு மாடி யெய்திய சிலைவல் லாரு
மின்னிடை யழுதி ரங்க வீங்கிய குவவுக் கொங்கைப்
பொன்னனார் தாமுஞ் சூழ்ந்து போதர வனத்தி னீங்கித்
தன்னம ருடுப்பூர் புக்கான் றடக்கைமால் யானை யன்னான்.

(இ - ள்.) தடக்கைமால் - நீண்ட துதிக்கையினையும் மதமயக்கத்தையுமுடைய, யானை அன்னான் - யானையை நிகர்த்தவனாகிய நாகன், இன்ன

ணம் - இவ்வாறு, எங்கும் ஆடி - எவ்விடத்தும் விளையாடி, எய்திய - வந்த, சிலைவல்லாரும் - வேடரும், மின் இடை - மின்போலு மிடையா னது, அழுது இரங்க - அழுதிரங்கும்படி, வீங்கிய - பருத்த, குவ்வுகொங் கை - குவிந்த தனங்களையுடைய, பொன் அன்னார் தாமும் - திருமகளை நிகர்த்தவராகிய மாதர்களும், சூழ்ந்து போதர - சுற்றிவர, வனத்தின் நீங்கி - காட்டைவிட்டு நீங்கி, தன் அமர் - தனது விருப்பத்திற்குரிய, உடுப்பூர் புக்கான் - உடுப்பூரில் பிரவேசித்தான் எ-று.

இன்னணம் இன்னவண்ணம் என்பதன் விகாரம். சிலைவல்லார் - வில்வித்தையில் வல்லவர். அமர்தல் - விரும்புதல். மால்யானை-பெரிய யானையென்றலு மமையும். (சுஅ)

மற்றைஞான் றருக ழைத்து மைந்தனை யைய கேட்டி
யிற்றைநாண் முதலா நீயே யிறவுளர்க் கிறைவ னாகிப்
பற்றலர் முனைமு ருக்கிப் பகைப்புலங் கவர்ந்து கொற்றம்
பெற்றுமா வேட்டை யாடிப் பெரிதுவாழ்ந் திருத்தி யென்றே.

(இ - ள்.) மற்றை ஞான்று - மறுநாள், மைந்தனை - தன் புதல்வனை, அருகு அழைத்து - சமீபத்தில் அழைத்து, ஐய - ஐயனே, கேட்டி - (யான் சொல்லுவதை) கேட்கக் கடவை, (என்னெனின்) இற்றைநாள் முதலா - இன்று முதலாக, நீயே - நீதானே, இறவுளர்க்கு - வேடருக்கு, இறைவன் ஆகி - அரசனாகி, பற்றலர் - பகைவரை, முனைமுருக்கி-போர் முகத்தில் வென்று, பகைபுலம் கவர்ந்து - பகைவரது நாட்டினைக் கவர்ந்து, கொற்றம் பெற்று - வெற்றியடைந்து, மாவேட்டையாடி - மிருக வேட்டையாடி, பெரிது - நெடுங்காலம், வாழ்ந்திருத்தி - வாழ்ந்திருக்கக் கடவை, என்று - என்று சொல்லி எ-று.

இறவுளர் - வேடர். புலம்-இடம், அது இங்கு நாட்டைக் குறித்தது. மா மிருகங்களுக்குப் பொதுப்பெயர். வாழ்ந்திருத்தியென மேல் வருதலால் பெரிது என்றது நெடுங்காலத்தைக் குறித்தது. (சுகூ)

வழிவழி வந்த வெற்றி வரிசிலை கைக்கொ டுத்துக்
கழிபெருங் காத றன்னாற் கன்னவி றோண்மெ ழுங்கத்
தழுவிநங் கடவுட் செவ்வே டன்னரு டுணையாச் சென்று
மழவிடை கன்னி வேட்டம் வாய்த்துடன் வருக வென்றான்.

(இ - ள்.) வழிவழி வந்த - வழிவழியாய் வந்த, வெற்றி - வெற்றியைத் தருகிற, வரிசிலை - நீண்ட வில்லை, கை கொடுத்து - கையிற் கொடுத்து, கழிபெருங் காதல்தன்னால் - மிக்க ஆசையோடு, கல் நவில் - மலையென்று சொல்லத்தக்க, தோள் - புயங்கள், ஒழுங்க-அழுந்த, தழுவி-ஆலிங்கனம் செய்துகொண்டு, நம் கடவுள் - நமது தெய்வமாகிய, செவ்

வேள் தன் - முருகக்கடவுளின், அருள் துணையால் - திருவருட்டுணையால், சென்று-போய், கன்னிவேட்டம் வாய்த்து-கன்னிவேட்டையாடி, உடன்-உடனே, வருக - வரக்கடவை, என்றான் - என்று சொன்னான் எ-று.

நவிலல் - சொல்லல், பகுதி நவில். ஒழுங்கல் - அழுந்தல், பகுதி ஒழுங்கு. துணை - உதவி. மழவிடை - அண்மைவிளி, இளங்காளையே யென்பது பொருள். கன்னிவேட்டம் - முதல் வேட்டை. (எ0)

என்றதன் றாதை பொற்றா ளிறைஞ்சுபு விடைகொண் டன்னை
தன்றிரு வடிப ணிந்தான் றாயெனைப் பெற்ற தாயே
மன்றலங் களிறே யிங்கு வருகென வெடுத்துப் புல்லிக்
குன்றுறழ் முலைப்பால் சோரக் குழைந்துநெஞ் சுச்சி மோந்தாள்.

(இ - ள்.) என்ற - என்று சொன்ன, தன் தாதை - தன் பிதாவின், பொன்தாள் - அழகிய பாதங்களை, இறைஞ்சுபு - வணங்கி, விடைகொண்டு - விடைபெற்று, அன்னைதன் - தாயின், திருவடிபணிந்தான் - திருவடியை வணங்கினான், தாய் - தாயானவள், எனை பெற்ற தாயே—, மன்றலங்களிறே—, இங்கு வருக என - இங்கே வாவென்றழைத்து, எடுத்து புல்லி - எடுத்துத் தழுவி, குன்று உறழ் - மலையை நிகர்த்த, முலை - தனங்களினின்று, பால் சோர - பாலொழுக, நெஞ்சு குழைந்து - மனங்குழைந்து, உச்சிமோந்தாள் - உச்சியை மோந்து கொண்டாள் எ-று.

இறைஞ்சுபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம், இது விடை கொண்டு என்னும் வினைகொண்டு முடிந்தது. மன்றலங்களிறு - சுகந்த மதஜலத்தையுடைய யானை. (எக)

போகுகா னெறிக ளெல்லாம் புதுமலர்த் தண்ணென் சோலை
யாகவே புகுந்து வேட்ட மாடிமுட் கிழியு மின்றிச்
சேகுநோன் சிலையா ரோடுந் திரும்புக கண்ணே றின்றி
மேகமே யனையா யென்று வெண்பொடி சாத்தி னாளால்.

(இ - ள்.) போகு - நீ செல்லுகிற, கான் நெறிகள் எல்லாம் - காட்டு வழிகள் யாவும், புதுமலர் - புதியமலர்களையுடைய, தண்ணென் சோலையாகவே - குளிர்ந்த சோலையாயிருக்க, புகுந்து - பிரவேசித்து, வேட்டம் ஆடி - வேட்டையாடி, முள்கிழியும் இன்றி - முட்கீறலு மில்லாமல், சேகு - வயிரம் பற்றிய, நோன் - பெரிய, சிலையார் ஓடும் - வில்லாளிகளோடும், கண்ணேறு இன்றி - கண்ணெச்சிற் படாமல், திரும்புக - மீண்டு வருவாயாக, மேகமே அனையாய் - மேகத்தை நிகர்த்தவனே, என்று - என்று வாழ்த்தி, வெண்பொடி சாத்தினாள் - திருவெண்ணீறு அணிந்தனள் எ-று.

ஆல் - அசை. முட்கிழி - முள்ளினால் கீறப்படுதல். சேகு - உறுதி யெனினுமாம். கண்ணேறு - கண்ணெச்சில் (கண் திருஷ்டி). வெண்

பொடி - விபூதி. மேகமேயனையாய் என்றது கருநிறத் திருவுருவைக் குறித்தென்க, உதாரகுண முன்னவனே யென்றாள் எனினுமாம். (எஉ)

தாயடி மறித்துந் தாழ்ந்து தரும்விடை கொண்டு நீங்கி
மேயநீ னிறங்கொள் கச்சை விசித்துடை வாளும் யாத்திட்
டாயிளந் தளிர்தொ டுத்த வலங்கலங் கண்ணி வேய்ந்து
மாயவன் றொடுதோ றொட்டு வரிசிலை யெடுத்துக் கொண்டான்.

(இ - ள்.) தாய் - தாயினது, அடி - பாதங்களை, மறித்தும் - மீட்டும், தாழ்ந்து - வணங்கி, தரும் - அவள் தந்த, விடைகொண்டு நீங்கி - விடைபெற்று நீங்கி, மேய - தனக்கிசைந்த, நீல் நிறங்கொள் கச்சை - நீனிறக் கச்சையை, விசித்து - அரையில் கட்டி, உடைவாளும் யாத்திட்டு - உடைவாளினையும் கட்டி, ஆய் - ஆராய்ந்து பறித்த, இளந்தளிர் தொடுத்த - இளந்தளிர்களால் கட்டப்பட்ட, அலங்கல் - அசையாநின்ற, அம் - அழகாகிய, கண்ணி - மாலையை, வேய்ந்து - தரித்து, மாயவன் - மாயவனால், தொடு - தைக்கப்பட்ட, தோல் - தோற்செருப்பை, தொட்டு - தொடுத்து, வரிசிலை - நீண்ட வில்லை, எடுத்துக்கொண்டான் - கையிற் பிடித்துக்கொண்டான் எ-று.

விடை - விடுத்தல் (உத்திரவு). நீலம் எனற்பாலது நீல் என விகாரமாயிற்று. விசித்தல் - கட்டுதல். உடைவாள் - அரையிற் கட்டும் வாள். யாத்தல் - கட்டுதல். வேய்தல் - தரித்தல் (சூடுதல்). மாயவன் - துன்னன். தோல் ஆகுபெயராய்ச் செருப்பைக் குறித்தது. (எஙு)

மலர்தலை யுலகில் யார்க்கும் வணங்கிலாக் கொடும ரத்தைக்
குலவரை யனைய தோளான் குணங்கொளீஇ வணங்கு வித்தான்
வலிகெழு சிலைகு ழைக்கும் வன்மைவான் குடிப்பி றந்தோர்
சிலர்கொடு மரம்வ ணக்கஞ் செயலிறும் பூது கொல்லோ.

(இ - ள்.) மலர் - பரந்த, தலை - இடத்தையுடைய, உலகில் - உலகத்தில், யார்க்கும் - எவர்களுக்கும், வளர்கிலா - வளையாத, கொடுமரம் - வில்லை, குலவரை அனையதோளான் - குலபர்வதங்களை நிகர்த்த புயங்களையுடையவன், குணம் கொளீஇ - குணங்கொளுவி, வணங்கு வித்தான் - வளைத்தான், வலிகெழு - வலிமையுள்ள, சிலை குழைக்கும் வன்மை - மலையைவளைக்கும் வன்மையுள்ள, வான்குடிப் பிறந்தோர் - பெரிய குடியிற் பிறந்தவர்களாகிய, சிலர்-சிலபேர், கொடுமரம் - வில்லை, வணக்கம் செயல் - வளைத்தல், இறும்பூது கொல்லோ - ஆச்சரியமோ எ-று.

வணங்கல் - வளைதல். கொடுமரம் - வில். கோடுமரம் கொடுமரம் என விகாரமாயிற்று. குலவரை - குலமலைகள், இவற்றை குலாசலம் என்பர் வடநூலார். குணங்கொளுவுதல் - நாணேற்றல். குழைத்தல் -

வளைத்தல். வணக்கஞ் செயல் ஒரு சொன்னீரது, வணக்குதல் என்பது பொருள். (எச)

இருமுது குரவர் கேளா வீண்டிய மயிர்பொ டிப்பத்
தருமிசைப் பறவை யெல்லாந் தனித்தனி வெருவி யோட
வெருள்கொடு விலங்கி னீட்டம் வேறுவே றிரிதல் செய்ய
வரைபொரு தோளி னன்றை வந்துநா ணொலிசெய் தானல்.

(இ - ள்.) இருமுது குரவர் கேளா - இருமுது குரவர்கள் கேட்டு, ஈண்டிய - நெருங்கின, மயிர்பொடிப்ப - மயிர் சிலிர்க்கவும், தருமிசை - மரங்களின்மேலிருந்த, பறவை யெல்லாம் - பக்ஷிகளெல்லாம், தனித்தனி - தனித்தனியாக, வெருவியோட-அஞ்சியோடவும், விலங்கின் ஈட்டம் - மிருகங்களின் கூட்டங்கள், வெருள் கொடு - அஞ்சி, வேறு வேறு-தனித்தனியாக, இரிதல் செய்ய - ஓடவும், வரைபொரு - மலையை நிகர்த்த, தோளினன் - புயங்களையுடையவனாகிய திண்ணன், நாண் - தன் வில் நாணினை, தைவந்து - வருடி, ஒலி செய்தான் - தொனிப்பித்தான். எ-று.

இருமுது குரவர் தாய்தந்தையர். கேளா செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். ஈண்டிய என்பதற்குப் பகுதி ஈண்டு. பொடித்தல் - அரும்புதலுமாம். இதனை, ரோமாஞ்சலி யென்பர் வடநூலார். வெருவியென்பதற்குப் பகுதி வெருவு. வெருள்கொடு ஒரு சொல். வெருண்டு என்பது பொருள். இரிதல் செய்ய என்பதும் அது. இரிந்து என்பது பொருள். வரைபொரு தோளினன் என்பதற்கு மலையோடு போர்செய்தற்குரிய தோளின் என்றுரைத்தலுமாம். தைவந்து என்பதற்குப் பகுதி தைவா. (எகு)

வில்லின ரம்பி னார்வெவ் வெடிபடு குரலர் காலிற்
செல்பவர் மின்னு வாளர் செறிமழை மேக மன்னார்
கொல்லடி பிடிது ரத்து குத்துவெட் டெறியெய் யென்னுஞ்
சொல்லினர் தணியாச் சீற்றத் துப்பினர் சூழச் சென்றான்.

(இ - ள்.) வில்லினர் - வில்லையுடையவர்களும், அம்பினார் - அம்பையுடையவர்களும், வெவ்வெடி படுகுரலர்-வெல்லுதற்குரிய உரத்த குரலையுடையவர்களும், காலின்செல்பவர் - வாயுவேகம்போல நடப்பவர்களும், மின்னுவாளர் - மின்னுகிற வாட்படையை யுடையவர்களும், செறிமழை மேகம் அன்னார் - மிக்க மழைகாலத்து மேகத்தை நிகர்த்தவர்களும், கொல்—, அடி—, பிடி—, துரத்து—, குத்து—, வெட்டு—, எறி—, எய்—, என்னும் - என்கிற, சொல்லினர் - சொற்களை யுடையவர்களும், தணியாசீற்றம் - ஆறாத கோபத்தையுடைய, துப்பினர்-வலியரும் ஆகிய பலரும், சூழ - தன்னைச் சுற்றிவர, சென்றான் - போயினன் எ-று.

*கால் - காற்று. தணிதல் - ஆறுதல். சீற்றம்-கோவம், பகுதி சீறு. துப்பு - வலி.* (எசு)

கணைபிற கொழிய வோடுங் கடுப்பின கொடுங் கூர்ம் பல்ல
தணிவரு சினத்த வேட்டந் தனித்தனி யாட வல்ல
வணியெயிற் றழல்வெஞ் சீற்றத் தரியின்மேல் விடினுஞ் செல்வ
பிணிதொடர் பாசத் தோடு பெருவலி நாய்கள் சென்ற.

(இ - ள்.) கணை-அம்புகள், பிறகு ஒழிய - பின்னிட்டொழிய, ஓடும்-ஓடுகிற, கடுப்பின - வேகத்தையுடையனவும், கொடும்கூர்ம்பல்ல - வளைவாகிய கூரிய பற்களையுடையனவும், தணிவு அரு - ஆறாத, சினத்த - கோவமுள்ளனவும், தனித்தனி - தனித்தனியாக, வேட்டம் ஆடவல்ல - வேட்டையாட வல்லனவும், அணி எயிற்று - வரிசையாகிய பற்களையும், அழல் - நெருப்புப்போலும், வெம் சீற்றத்து - கொடுங் கோவத்தையுமுடைய, அரியின் மேல் - சிங்கத்தின்மீது, விடினும் - ஏவினும், செல்வ - போவனவும், (ஆகிய) பெருவலிநாய்கள் - மிக்க வலியுள்ள நாய்கள், பிணிதொடர் பாசத்தோடும் - கட்டுக்கயிற்றுடன், சென்ற - பின்தொடர்ந்துபோயின எ - று.

கடுப்பு - வேகம். பிணி - கட்டு. பாசம் - கயிறு. அரி - வடசொற்றிரிபு. (எஎ)

வலத்தினு மிடத்து முன்னும் பின்னரு மாறி மாறிக்
கொலைத்தொழிற் சுருள்வா னீணாக் கொடுஞ்செவி ஞமலி செல்ல
வுலப்பில்பே ராற்றல் வேட ரொடுவிரைத் துவலைக் கண்ணி
மிலைச்சிய வேடர் வேந்தன் வேட்டையங் காடு புக்கான்.

(இ - ள்) விரை - மணமுள்ள, துவலை - தேன் துளிகளையுடைய, கண்ணி - மலர்மாலையை, மிலைச்சிய - தரித்த, வேடர் வேந்தன் - வேடராஜனாகிய திண்ணன், வலத்தினும் - வலப்பக்கத்திலும், இடத்தும் - இடப்பக்கத்திலும், முன்னும் - முற்பக்கத்திலும், பின்னரும்-பிற்பக்கத்திலும், மாறி மாறி—, கொலைத்தொழில் - கொல்லுந் தொழிலையும், சுருள்வால் - சுருண்ட வாலினையும், நீள்நா - நீண்ட நாக்கினையும், கொடுஞ்செவி-வளைந்த காதினையும் உடைய, ஞமலி - நாய்கள், செல்ல - போக, உலப்பு இல் - கெடுதலில்லாத, பேர் ஆற்றல் - பெருவலியையுடைய, வேடரொடு-வேடருடன், வேட்டையங் காடுபுக்கான்-வேட்டையாடுதற்குரிய காட்டில் பிரவேசித்தான் எ-று.

வலம் - வலப்பக்கம். இடம் - இடப்பக்கம். கோடும் செவியெனற்பாலது கொடுஞ்செவியெனக் குறுக்கல் பெற்றது. உலப்பு - கெடுதல். மிலைச்சல் - தரித்தல், பகுதி மிலைச்சு. (எஅ)

பலபல விலங்கி னீட்டம் பயிலிட மறிந்து சுற்றும்
வலிவலை சூழ்ந்து சேணில் வழியொதுக் கியபின் வேடர்
கலிகெழு துடிகள் பம்பை கடுங்குர லிரலை யாதி
யொலியெழு வித்து மாக்க ளுறுவலை புகத்து ரந்தார்.

(இ - ள்.) பலபல - பற்பலவாகிய, விலங்கின் ஈட்டம் - மிருகத் தொகுதி, பயில் இடம் அறிந்து - சஞ்சரிக்கிற இடம் தெரிந்து, சுற்றும் - சுற்றிலும், வலி - வலிவுள்ள, வலை சூழ்ந்து - வலைகட்டி, சேணில்வழி - நெடுந்தூரவழியை, ஒதுக்கியபின் - ஒதுக்கின பிறகு, வேடர்-வேடர்கள், கலிகெழு - ஓசை மிகுந்த, துடிகள் - உடுக்கைகள், பம்பை - பம்பைகள், கடும் குரல் இரலை - பேரொலியையுடைய இரலை, ஆதி - முதலாகிய வாத்தியங்களை, ஒலியெழுவித்து - ஒலியெழுப்பி, மாக்கள் - மிருகங்கள், உறு - மிகுதியாக, வலைபுக - வலையிற் சிக்கும்படி, துரந்தார் - துரத்தினார்கள் எ - று.

விலங்கு - மிருகங்களின் பொதுப்பெயர். பயிலல் - சஞ்சரித்தல். சூழ்தல் - வளைத்தல். துடி, பம்பை, இரலை என்பன வாச்சிய விசேஷங்கள். மாக்கள் - மிருகங்கள். துரத்தல் - ஓட்டுதல். (எக)

புக்கபிற் றாமும் புக்குப் புகுவழி யொடியெ றிந்து
மிக்கவல் லுழுவை கேழன் மிடைமயிர்க் கரடி முன்னாத்
தொக்கபல் விலங்கின் பார்வை சூழ்வலைப் பரப்புள் விட்டார்
மைக்கருஞ் சிலைக்கை வேடர் வயின்வயின் மறைந்து நின்றார்.

(இ - ள்) புக்கபின் - (அம்மிருகங்கள் வலையில்) புகுந்த பிறகு, தாமும் புக்கு-தாமும் புகுந்து, புகுவழி - அவை போம்வழியில், ஒடியெறிந்து - கவண்கல் வீசி, மிக்க - மிகுதியாகிய, வல் - வலியுள்ள, உழுவை - புலி, கேழல் - பன்றி, மிடைமயிர்க் கரடி - நெருங்கிய மயிரையுடைய கரடி, முன் ஆ - முதலாக, தொக்க - கூடின, பல் விலங்கின் பார்வை - பல மிருகங்களின் பார்வைகளும், சூழ் - தம்மை வளைத்திருக்கிற, வலை பரப்புள் - விரிந்த வலையினுள், விட்டார் - விட்டார்கள், மை - மேகம் போல, கரு - கருநிறமுள்ள, சிலைக்கை வேடர் - வில்லேந்திய கையை யுடைய வேடர்கள், வயின் வயின் - இடங்கள்தோறும், மறைந்து நின்றார் - ஒளித்து நின்றார்கள் எ-று.

வயின்வயின் - எழனுருபு இரண்டடுக்கி எல்லாவிடங்களினும் என்னும் பொருள் தந்து நின்றது. பார்வை - பார்வை மிருகம், இது பழகிதம் இனமாகிய மிருகங்களை தமது குரலால் அகப்படுத்த வல்லது. (அ0)

கலிவிருத்தம்

விட்ட பார்வையின் விளியி னலவண்
கிட்டி வந்தமான் கிளையெ லாமுடன்
பட்டு வீழ்தரப் பகழி தூவினார்
மட்டி லாவலி வல்வில் வேடரே

(இ - ள்.) விட்ட - விடுத்த, பார்வையின் - பார்வை மிருகங்களின், விளியினல் - குரலால், அவண் - அவ்விடத்து, கிட்டிவந்த - சமீபித்து வந்த, மான்கிளை யெல்லாம் - மான்கூட்டம் முழுதும், உடன் - உடனே, பட்டு - வலையுள் அகப்பட்டு, வீழ்தர - விழ, மட்டு இல்லா வலி - அளவற்ற வலியையும், வல்வில் - வலிய வில்லையுமுடைய, வேடர் - வேடர்கள், பகழி தூவினார் - அம்புகளை சொரிந்தார்கள் எ-று.

விளி - குரல். கிளை - கூட்டம். 'வீழ்தர என்பதற்குப் பகுதி வீழ்தா. தூவுதல் - மிகச் சொரிதல். (அக)

காலிற் செல்லுநாய்க் கணந்த டுத்தலாற்
சாலச் சீறுபு தடையுட் பட்டமா
நீலக் குன்றொடு நிகர்க ளிற்றினம்
வேலிற் குத்தினார் சிலவர் வேடரே.

(இ - ள்) காலின் - காற்றைப்போல, செல்லும் - விரைந்து ஓடுகிற, நாய்கணம் - நாய்க்கூட்டம், தடுத்தலால் - மறித்தலால், சால - மிகுதியும், சீறுபு - சீறி, தடையுள்பட்ட - தடையுள்ளே சிக்கின, மா - மிருகங்கள், நீலக்குன்றொடு - நீலமலையோடு, நிகர் - நிகர்த்த, களிறு இனம் - யானைக்கூட்டம், (ஆகிய இவற்றை) சிலவர் வேடர் - சில வேடர்கள், வேலின் - தம் கையிலுள்ள வேற்படையினால், குத்தினார் - குத்தினார்கள் எ-று.

கால் - காற்று. கணம் - வடசொல். சீறுபு - செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். வேலின் என்பதில் இன் என்னும் ஐந்தனுருபு மூன்றாவதன் கருவிப் பொருளில் வந்தது. சிலவல்வேடர் எனப் பாடமோதி சில வலிய வேடர் எனப் பொருள் கூறினும் அமையும். (அஉ)

மேற்படி வேறு

மிடைசெடியிடை மறைமறவர்கள் விடுகணையுட லுருவப்
படுதலுமய லுறுகொடுவரி பாய்தந்ததென் றதனைச்
சுடுதழலடு வெகுளியினொடு தொடர்குடர்சரி தரவெண்
டடமுழைவளர் பிறையெயிறுறத் தாக்கியதொரு கருமா.

(இ - ள்.) மிடை - நெருங்கின, செடியிடை - செடிகளில், மறை - ஒளித்திருக்கிற, மறவர்கள் - வேடர்கள், விடு - ஏவின, கணை - அம்பானது, உடல் - தன்னுடம்பில், உருவ - ஊடுருவுமபடி, படுதலும் - சென்று பட்டவுடன், அயல் உறு - பக்கத்திலிருந்த, கொடுவரி - புலியானது, பாய்தந்தது என்று - பாய்ந்ததென்றெண்ணி, அதனை - அந்தப் புலியை, சுடு - சுடுகிற, தழல் அடு - நெருப்பையும் வெல்லுதற்குரிய, வெகுளியினொடு - கோவத்துடன், தொடர் - தொடர்ந்திருக்கிற, குடர் - குடலானது, சரிதர - சரியும்படி, வெள்-வெண்மையாகிய, தடம்-பெரிய, முனைவளர் - கூர்மை மிகுந்த, பிறை - பிறைபோன்ற, எயிறு உற-பல்லானது பதியும்படி, ஒரு கருமா - ஒரு பன்றியானது, தாக்கியது - அந்தப் புலியின்மேற் பாய்ந்தது எ-று.

மிடைதல் - நெருங்குதல். கோவமிகுதி தோன்ற சுடுதழலடு வெகுளி என்றார். குடர் குடல் என்பதனீற்றுப்போலி. சரிதர என்பதற்குப் பகுதி சரிதா. (அ௩)

பரியவரைமர நிரைமறைவரி படுசிலைமுர ணுரவோர்
பொருவிரைசர முருவியவுடல் பொருவருமொரு கருமா
வெரிபுரைதரு பெருவெகுளியொ டெய்கணைவழி போயவ்
விருடருமர முரிதரவுரு மெனத்தாக்கிய தன்றே.

(இ - ள்.) பரி அரை - பெரிய வரைகளையுடைய, மரநிரை - மரங்களின் வரிசையில், மறை - பதுங்கியிருந்த, வரி - நீண்ட, படு - கொல்லுதற்குரிய, சிலை - வில்லினையும், முரண்-வலியினையும் உடைய, உரவோர்-வலியராகிய வேடர்கள் எய்த, பொரு - போர்க்குரிய, விரை - விரைந்து செல்லுகிற, சரம் - பாணமானது, உருவிய - தைத்துருவிய, உடல் - உடம்பினையுடைய, பொருவு அரு - ஒப்பற்ற, ஒரு கருமா - ஒரு பன்றியானது, எரிபுரைதரு - நெருப்பை நிகர்த்த, பெருவெகுளியொடு-பெருங்கோவத்துடன், எய்கணை வழிபோய் - எய்யப்பட்ட அம்பின் வழியாகச் சென்று, அ - அந்த, இருள்தரும் மரம் - இருளைத் தருகிற மரமானது, முரிதர - முரியும்படி, உரும் என - இடியைப்போல, தாக்கியது - முட்டியது எ-று.

அன்று ஏ அசைகள். பரு அரை பராரையென வருதல்போலப் பரியரையென வந்தது. இதனை மரூஉ வென்பர். சரம் - வடசொற்றிரிபு. எரி - ஆகுபெயர். புரைதரு என்பதற்குப் பகுதி புரைதா. முரிதர என்பதற்குப் பகுதி முரிதா. (அ௪)

எழுவுடனெழின் முழவிழிவுசெய் தெழுபெருவலி கெழுதோண்
முழுமறவரி னொழுகியகணை முழுகியவுட லுழுவை
வழைகுழைகழை விழைநிழலிடு மழைதவழ்மலை யதிரத்
தழைசெவிமழ வழுவைகள்விழத் தாக்கியதுறு விசையால்.

(இ - ள்.) எழுவுடன் - எழுவோடு, எழில் - அழகமைந்த, முழவு-மத்தளத்தையும், இழிவுசெய்து எழு - இழித்தெழுந்த, பெருவலி கெழு தோள் - பெருவலியமைந்த, புயங்களையுடைய, முழுமறவரின் - முழுவேடர்களால், ஒழுகிய கணை - எய்யப்பட்ட அம்புகள், முழுகிய உடல்-குளித்த வுடம்பையுடைய, உழுவை - புலியானது, வழை - வழை மரமும், குழைகழை - இலைகளடர்ந்த மூங்கிலும், விழை - யாவரும் விரும்புகிற, நிழல் இடு - நிழலைத்தருகிற, மழை தவழ் - மேகங்கள் தவழ்கிற, மலை அதிர - மலைகள் அதிரும்படி, தழை செவி - தழைந்த காதுகளையுடைய, மழவழுவைகள் - இளமையுள்ள யானைகள், விழ - கீழே விழும்படி, உறு விசையால் - மிக்க வேகத்தோடு, தாக்கியது - சென்று மோதிற்று எ-று.

எழு - எஃகு. முழுகுதல் - தைத்தல். வழை - சுரபுன்னைமரம். விழைதல் - விரும்புதல். மழ வழுவைகள் - யானைக்கன்றுகள். (அ௭)

வெய்யவர்குல முய்வகைவரு மெய்யருள்பெறு திண்ண
னையமிறுணை மொய்வலிகெழு மையவில்வல சில்லர்
மையொடுநிகர் மெய்புருவிய வையுறுமுனை முள்ளை
யெய்யுதறின வொய்யெனவெதி ரெய்யடுகணை யென்ன.

(இ - ள்.) வெய்யவர் குலம் - வேடர் குலமானது, உய்வகைவரு-உய்யும்படி அவதரித்த, மெய் அருள்பெறு - உண்மையாகிய அருள்பெற்ற, திண்ணன் - கண்ணப்பனும், ஐயம் இல் - சந்தேகமில்லாத, துணை-உதவியாகிய, மொய்வலி கெழும் - மிக்க வலியுடைய, ஐய - அழகாகிய, வில் வல்ல சில்லர்-வில்வல்லவராகிய சிலவேடர்களும, மையொடு நிகர்-மேகத்தை நிகர்த்த, மெய் - தம் உடம்பில், உருவிய - தைத்து உருவிப்போன, வையுறு - கூர்மை மிகுந்த, முனை முள்ளை - நுனியையுடைய முள்ளை, எய் - முட்பன்றிகள், எதிர் எய் - எதிராக எய்கின்ற, அடு - கொல்லுகின்ற, கணையென்ன - அம்புகள்போல, ஒய்யென - விரைவாக, உதறின- உதறிவிட்டன எ-று.

வெய்யவர் - வேடர், இவரை வெய்யவர் என்றது கொலைத் தொழிலர் என்றற்கு. ஐயம் இல் துணை - நம்புதற்குரிய துணை. முனை முள்-ஓர் ஆயுத விசேடம். (அ௮)

மேற்படி வேறு

கனைமாமழை யிடிபோலதிர் கடுவாய்மரை யாமா
வினையாவலி யுடைமாகளி றெழுவாய்வனம் வாழ்மா
வனைவார்கழன் மதயானைகண் மலைவார்விடு வார்கோண்
முனைவாளிக ளுடன்மூழ்கலின் முளவாயின மாதோ.

(இ - ள்.) கனை - முழங்குகின்ற, மா-பெரிய, மழை-மேகத்தின் கண்ணதாகிய, இடிபோல் - இடியைப்போல, அதிர்-முழங்குகின்ற, கடுவாய்-

கொடிய வாயினையுடைய, மரை-மரையும், ஆமா - காட்டுமாடும், இனையா-இளைக்காத, வலியுடை - வலிமையையுடைய, மா களிறு - பெரிய யானைகள், எழுவாய்- முதலாக, வனம் வாழ் - காட்டில் வாழ்கின்ற, மா-மிருகங்கள், வனை-அலங்கரிக்கப்பெற்ற, வார்-நீண்ட கழல்-வீரகண்டையையணிந்த, மதயானைகள்-மதத்தையுடைய யானைகள், மலைவார்விடு - போர் செய்பவராகிய வேடர்விடுகின்ற, வார் - நீண்ட, கோல் - வளைவாகிய, முனை-கூர்மையுள்ள, வாளிகள்-அம்புகள், உடல் - தமது உடம்பில், மூழ்கலின்-தைத்து உருவதினால், முளவு ஆயின - முட்பன்றிகள் போன்றன எ - று.

மாது ஓ அசைகள். கனைத்தல்-முழங்குதல். மரை-மிருகவிசேடம். இனைதல்-வருந்துதல் என்றலுமாம். மலைதல் - போர்செய்தல். மூழ்கல் குளித்தல் எனினுமாம். (அஎ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இவ்வகை பலவி லங்கி னீட்டமு நாழி லாட்டித்
தெவ்வடு வரிசி லைக்கைத் திண்ணன்மா வேட்ட முற்றிக்
கௌவைகொள் கான நீங்கிக் கடுந்திறன் மறவ ரோடு
மெவ்வமி றனதூர் புக்கா னீன்றவர்க் குவகை பொங்க.

(இ - ள்.) இவ்வகை - இவ்விதமாக, பல விலங்கின் ஈட்டமும் - பல மிருகங்களின் கூட்டத்தையும், நாழிலாட்டி-அதஞ்செய்து, தெவ் அடு - பகைவரைக் கொல்லுகின்ற, வரி - கட்டமைந்த, சிலை - வில்லேந்திய, கை - கையினையுடைய, திண்ணன் - கண்ணப்பன், மாவேட்டம் முற்றி - மிருகங்களின் வேட்டையாடி, கவ்வைகொள் - துன்பத்தை தருகிற, கானம் நீங்கி-காட்டைவிட்டு, கடுந்திறன் - மிக்க வலியுள்ள, மறவரோடு - வேடர்களுடன், எவ்வம் இல் - யாதொரு குறையுமில்லாத, தனது - தன்னுடைய, ஊர் - ஊரில், ஈன்றவர்க்கு - தன்னைப்பெற்றவர்களாகிய தாய் தந்தையர்களுக்கு, உவகை பொங்க - களிப்பு மிகும்படி, புக்கான் - புகுந்தான் எ - று.

மா - மிருகம். வேட்டம் - வேட்டை. முற்றல் - முடித்தல். உவகை என்பதனை ஓகை என்றும் வழங்குவர். பொங்குதல்-மிகுதல். (அஅ)

பின்னரும் பலகால் வேட்டம் பெருவலிக் காளை யாடி
யன்னையு மத்த னுங்கண் டகமகிழ் பூப்ப வைகிக் [நாட்
கொன்னுனைப் பகழி வேடர் குலத்தொடும் வாழ்த்த வோர்
டன்னுளம் வேட்ட மூக்கச் சரம்புகா வனம்பு குந்தான்.

(இ - ள்.) பின்னரும்-பின்னும், பலகால்-பலதரம், பெருவலி, பெருவலியையுடைய, காளை - காளைப்பருவமுள்ள திண்ணன், வேட்டம் ஆடி - வேட்டையாடுதல் செய்த, அன்னையும் அத்தனும்-தாயுந்தந்தையும், கண்டு,

பார்த்து, அகம் மகிழ்பூப்ப-மனக்களிப்புண்டாக, வைகி-வாழ்ந்து, கொல் நுனை - கொல்லுதற்குரிய நுனியையுடைய, பகழி அம்பு ஏந்திய, வேடர்-வேடர்கள், குலத்தொடும் - தமது சந்ததியாரோடும், வ ழ்த்த - வாழ்த்தவும், ஓர்நாள்-ஒருதினம், தன் உள்ளம்-தன்மனமானது, வேட்டம் ஊக்க-வேட்டையில் முயற்சிக்க, சரம்புகா - அம்பு நுழையாத, வனம் புகுந்தான் - காட்டிற் பிரவேசித்தான் எ - று.

இளம் குமரனுதலால் திண்ணனை காளை என்றார். வேட்டம் ஆடி என வியையும். மகிழ்பூப்ப என்றது மகிழ்ச்சிமிக என்றபடி. வைகுதல் - தங்குதல் அது இவ்விடத்திற் கேற்ப வாழ்தல் எனப் பொருள்பட்டு நின்றது. ஊக்கல் - உற்சாகப்படுத்தல். (அகூ)

புகுந்தவன் கான மெங்கும் புக்குலாய் மிகவி ளைத்து
மிகுந்தழை மிடைம ரத்தின் மென்னிழ றனிது யின்றான்
முகுந்தனை வாளி யாக்கி முரணின ரரணம வேவ
நகுந்தனி முதல்வ னன்னான் கனவிடை நண்ணினானே.

(இ - ள்.) புகுந்தவன் - பிரவேசித்தவனான திண்ணன், கானம் எங்கும் - அந்த காட்டின் எவ்விடத்தும், புக்கு உலாய் - போய் உலாவி, மிக இளைத்து - மிகுதியாய் இளைத்து, மிகும் - மிகுதியாகிய, தழை - இலைகள், மிடை - நெருங்கின, மரத்தின் - ஒரு மரத்தினது, மெல் நிழல் - குளிர்ந்த நிழலில், தனி துயின்றான் - தனியேபடுத்து உறங்கினான், (அச்சமயத்தில்) முகுந்தனை - விஷ்ணுவை, வாளியாக்கி - அம்பாக்கிக்கொண்டு, முரணினர் - வலியராகிய முப்புறத்தாரது, அரணம் - மும்மதில்களும், வேவ - வேகும்படி, நகும் - சிரித்த, தனி - ஒப்பற்ற, முதல்வன் - முதல்வனாகிய சிவபெருமான், அன்னான் - அந்தத் திண்ணனது, கனவிடை - சொற்பனத்தில், நண்ணினான் - எழுந்தருளினான் எ - று.

இளைத்தல் - மெலிதல். மிடைதல் - நெருங்குதல். மெல் நிழல் - என்பதில் மென்மை குளிர்ச்சிமேலது. மும்மதில்கள் என்றது இரும்பு மதில், வெள்ளிமதில், பொன்மதில் என்பவற்றை. இது "இரும்புறு மா மதில் பொன்னிஞ்சி வெள்ளிப் புரிசையன்றோர், துரும்புறச் செற்றகொற்றத் தெம்பிரான் றில்லைச்சூழ் பொழிற்கே" என்பதனால் இனிது விளங்கும். (கூ0)

பூசிய திருவெண் ணீறும் புலியத ளுடையுஞ் செக்கர்
கூசுபொன் சடையுங் கொண்ட கோலத்தோ டெதிர்நின் றொன்று
பேசுத லிலாத மைந்த விவ்வரை வடமூ லத்திற்
காசில்பொன் முகரி யாற்றங் கரையிலோ ரிலிங்க முண்டால்.

(இ - ள்.) பூசிய - பூசப்பட்ட, திருவெண்ணீறும் - விபூதியும், புலி அதள் - புலித்தோலாகிய, உடையும் - உடுக்கையும், செக்கர் - செவ்வான

மானது, கூசு - நாணுதற்குரிய, பொன்சடையும் - பொன்னிறமாகிய சடையும், கொண்ட - கொண்டிருக்கிற, கோலத்தோடு - வேடத்துடன், எதிர்நின்று - எதிரேநின்று, ஒன்றும் - சிறிதும், ஏசுதல் இல்லாத - பழிப்பில்லாத, மைந்த - சிறுவனே, இ-இந்த, வரை - மலையின், வடமூலத்தில்-கல்லால மரத்தடியில், காசு இல் - குற்றமற்ற, பொன்முகரியாற்றங்கரையில் - பொன் முகரி நதியின் கரையில் ஓர் - ஒரு, இலிங்கம் உண்டு - ஒரு சிவலிங்கமுண்டு எ - று.

உடுக்கை - ஆடை. கோலம் - திருக்கோலம் (வேடம்). மூலம் - அடி. பொன்முகரியாற்றை ஸுவர்ணமுகரிநதியென்பர் வடநூலார்.

அதுதுய ரனைத்தும் வீட்டி யரும்பெற லின்ப நல்கு
மதவலி யதைநீ சென்று வணங்குதி யென்று ரைத்துக்
கதுமென மறைந்தா னங்கே கண்விழித் திறும்பூதெய்தி
யெதிரில்பே ராற்ற லான்றிக் கெங்கணு நோக்கி நின்றான்.

(இ - ள்) அது - அந்த நதியானது, துயர் அனைத்தும் - துன்பங்களெல்லாவற்றையும், வீட்டி - ஒழித்து, பெறல் அரு - பெறுதற்கரிய, இன்பம் நல்கும் - சுகத்தைத்தரும், மதவலி - மதவலியே, அதை - அந்த லிங்கத்தை, நீசென்று வணங்குதி என்று உரைத்து-நீபோய்த் தொழுவாயாக வென்று சொல்லி, கதுமென - விரைவாக, மறைந்தான் - மறைந்தருளினன், ஆங்கே - அப்பொழுதே, கண் விழித்து-கண்திறந்து, இறும்பூது எய்தி - ஆச்சரியமடைந்து, எதிர் இல் - தனக்கு நிகரொருவரில்லாத, பேர் ஆற்றலான் - பெருவலியுடையவனாகிய திண்ணன், திக்கு எங்கணும் - எல்லாத் திக்குகளிலும், நோக்கி நின்றான் - பார்த்து நின்றான் எ - று.

வீட்டல் - ஒழித்தல். அரும்பெறல் என்பதனை பெறல் அரும் என மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது. நல்கல்-தருதல், பகுதி நல்கு. மதவலி - மதச்செருக் குடையவன். (கூஉ)

ஆயகா லையில்வில் வேட ரார்ப்பினா லெழுந்து கான்சூழ்
போயவல் வலைப ரிந்து பொருகடுங் காலிற் பொங்கி
மாயிருங் கேழ லொன்று மலைபுகப் போதல் கண்டான்
காயழல் வெகுளி யான்பின் கையில்வில் லொடுது ரந்தான்.

(இ - ள்.) ஆயகாலையில் - அவ்வாறு நோக்கிநின்ற காலத்தில், வில் வேடர் - வில்வேடர்கள், ஆர்ப்பினால் - ஆரவாரத்தோடு, எழுந்து - புறப்பட்டு, கான் - காட்டில், சூழ்போய - வளைத்துக் கட்டியிருந்த, வல்வலை - வலிய வலையை, பரிந்து - அறுத்து, பொரு - மோதுகிற, கடுங்காலின் - பெருங்காற்றுப்போல, பொங்கி - சீறியெழுந்து, மாயிருங் கேழல் ஒன்று -

மிகப்பெரிய பன்றியொன்று, மலை புகப் போதல் - மலையில் பிரவேசிக்கப் போதலை, கண்டான் - பார்த்து, காய் - எரிகிற, அழல் - நெருப்புப்போன்ற, வெகுளியான்-கோவத்தையுடையவனாகிய திண்ணன், பின் - அதன் பின்னே, கையில் வில்லொடு - தன்கையிலேந்திய வில்லுடனே, தூர்ந்தான் - (அந்தப் பன்றியை) துரத்திக்கொண்டு போனான் எ - று.

கான் - கானம் என்னும் வடசொற்றிரிபு. ஆர்ப்பு - ஆரவாரம் (பேரிரைச்சல்). சூழ்போய - ஒருசொல், பகுதி சூழ்போ. பரிதல் - அறுத்தல். மாயிரு - ஒருபொருட் பன்மொழி. (கரு)

துரந்துபின் செல்லச் செல்லத் துனைவிற்போ யெறுழி யாற்கீ
ழிருந்தரு ளிலிங்கத் தின்பா லெய்தலு மறைந்த தண்ணல்
வரம்பில்விம் மிதத்த னாகி மற்றிது மறைந்த தென்னோ
தெரிந்தில மென்று நின்றான் சிவலிங்க மிருத்தல் கண்டான்.

(இ - ள்.) துரந்து - துரத்திக்கொண்டு, பின்செல்லச்செல்ல - பின் தொடர்ந்து போகப்போக, எறுழி - அந்தப் பன்றியானது, துனைவின் போய்-விரைவாகச்சென்று, ஆல்கீழ் இருந்தருள் - கல்லாலமரத்தின் அடியில் எழுந்தருளியிருந்த, இலிங்கத்தின்பால் எய்தலும் - சிவலிங்கத்தின் பக்கத்தில் சேர்ந்தவுடன், மறைந்தது - மறைந்துவிட்டது, (மறைதலும்) அண்ணல் - திண்ணன், வரம்பு இல் - எல்லையற்ற, விம்மிதத்தன் ஆகி - வியப்புடையவனாகி, இது - இந்தப் பன்றியானது, மறைந்தது - மறைந்து போனது, என்னோ-என்னவியப்பு, தெரிந்திலம் என்று நின்றான் - அறிந்திலம் என்று நின்று, சிவலிங்கம் இருத்தல் கண்டான் - சிவலிங்கமிருப்பதைப் பார்த்தான் எ - று.

துனைவு - விரைவு. பால் - எழனுருபு. அண்ணல் - பெருமையிற் சிறந்தோன் (திண்ணன்). விம்மிதம் - விஸ்மிதம் என்னும் வடசொற்றிரிபு. நின்றான் முற்றெச்சம். (கசா)

காண்டலுங் கடவு ளார்தங் கருணைநோக் கினிது பெற்று
மாண்டகு மிரதந் தோய்ந்த வல்லிரும் புருவ மாறி
யீண்டொளி கெழுபொன் னாவ தென்னமுற் குணங்கண் மாறி
யாண்டகை யிறைவன் றன்பா லன்பொரு வடிவ மானான்.

(இ - ள்) காண்டலும் - கண்டவுடன், கடவுளார் - இறைவருடைய, கருணைநோக்கு - கிருபாநோக்கத்தை, இனிது பெற்று - இனிதாய் அடைந்து, மாண்தகும் - மாட்சிமை பொருந்திய, இரதம் தோய்ந்த - ரசத்தில் தோய்த்த, வல் இரும்பு - வலிய இரும்பானது, உருவம் மாறி - வடிவு வேறுபட்டு, ஈண்டு ஒளிகெழு - மிக்க ஒளிபொருந்திய, பொன் ஆவது என்ன - சுவர்ணமாவது போல, முன் குணங்கள் மாறி - முன்னிருந்த

குணங்களெல்லாம் மாறுபட்டு, ஆண்தகை - திண்ணனுனவன், இறைவன் பால் - சிவபிரானிடத்து, அன்பு - அன்பே, ஒரு வடிவமானுன் - ஓருருவ மானுன் எ - று.

தம் தன் இரண்டும் சாரியைகள். கடவுளார் என்றது சிவலிங்கப் பெருமானுரை. இரதம் - பாதரசம். ஆண்தகை - புருடரிற் சிறந்தவன் (புருஷோத்தமன்). (கரு)

நாள்பல பிரிந்தி ருந்து நண்ணிய சிறுச தங்கைத்
தாளிள மகனைக் கண்ட தாயெனத் தாழா தோடி
நீளெழு வனைய தோள்கண் ஞெமுங்குறத் தழுவி மோந்து
வாளழ லரக்கி னன்ன மனத்தினுன் முத்தங் கொண்டான்.

(இ - ள்.) பலநாள் - அநேக நாள்கள், பிரிந்திருந்து - விட்டிருந்து, நண்ணிய - வந்த, சிறுசதங்கைதாள் - சிறு சதங்கை யணிந்த பாதத்தை யுடைய, இளமகனை - இளஞ்சிறுவனை, கண்ட - பார்த்த, தாய்என - தாய் போல, தாழாது - தாமதியாமல், ஓடி - விரைந்து சென்று, நீள் - நீண்ட, எழு அனைய - எழுத்தூண் போன்ற, தோள்கள் - புஜங்கள், ஞெமுங்குற - அழுந்தும்படி, தழுவி - அணைத்து, மோந்து - முகர்ந்து, வாள் - ஒளிபொருந்திய, அழல் - நெருப்பிலிட்ட, அரக்கின் அன்ன - அரக்குப்போல, மனத்தினுன் - மனம் உருகினவனுய், முத்தம் கொண்டான் - முத்தமிட்டான் எ - று.

தாழ்தல் - தாமதித்தல். மனத்தினுன் - முற்றெச்சம். (கசு)

செய்யகண் ணீர ரும்பச் செறிமயிர் பொடிப்ப வாதன்
கையகப் பட்ட தெய்வக் கதிர்விடு மணியி னுயேற்
கையன்வந் தகப்பட் டானென் றணியெயி றிலங்க நக்கு
மெய்யெலா மெய்யன் பாய விடலைமற் றின்ன சொல்வான்.

(இ - ள்.) செய்யகண் - சிவந்த கண்களில், நீர் அரும்ப - நீர் சிந்த, செறிமயிர் பொடிப்ப - நெருங்கிய மயிர் சிலிர்க்க, ஆதன்கை - குருடன் கையில், அகப்பட்ட - சிக்கின, கதிர்விடு - ஒளி வீசுகின்ற, தெய்வம் - தைவீகமான, மணியின் - சிந்தாமணிபோல, நாயேற்கு - நாயினேனுக்கு, ஐயன் - கடவுளானவன், வந்து அகப்பட்டான் என்று - வந்து சிக்கினுனென்று, அணி - வரிசையாகிய, எயிறு இலங்க - பற்கள் வெளித்தோன்றும்படி, நக்கு - சிரித்து, மெய் எல்லாம் - உடல் முழுதும், மெய் அன்பு ஆய - மெய்யன் புருவமாகிய, விடலை - காளைப்பருவமுள்ள திண்ணனுனவன், இன்னசொல்வான் - இவற்றை சொல்வானுயினுன் எ - று.

மற்று - அசை. பொடித்தல் - சிலிர்த்தல், பகுதி பொடி. மணி என்றது அரதனத்தின் பொதுப்பெயர் என்றலுமாம். நக்கு - பகுதி நகு. இது ஒற்றிரட்டித்து இறந்தகாலம் காட்டிற்று. (கஎ)

யானையும் புலியு மெண்கும் யாளியு முளவுங் கூர்ங்கோட்
டேனமுந் திரியுங் காட்டு ளெந்தைநீ துணையு மின்றிக்
கூனல்விற் றடக்கை வேடர் குலமென விருப்ப தென்னே
யூனுண வுனக்கி யாவ ருண்கெனத் தருவா ரந்தோ.

(இ - ள்.) யானையும்—, புலியும்—, எண்கும் - கரடியும், யாளியும்— முளவும் - முட்பன்றியும், கூர்கோட்டு - கூர்மையான கொம்பினையுடைய, ஏனமும் - பன்றியும், திரியும் - சஞ்சரிக்கிற, காட்டுள் - வனத்தில், எந்தைநீ - எமது தந்தையாகிய நீ, துணையும் இன்றி - ஓர் உதவியும் இல்லாமல், கூனல் வில்-வளைவாகிய வில்லை எந்தின, தடக்கை - பெரிய கையையுடைய, வேடர்குலம் என்ன - வேடர்கள் கூட்டத்தைப்போல, இருப்பது - தங்கியிருத்தல், என்னே - யாது காரணத்தினாலோ, உனக்கு—, ஊன் உணவு - மாமிசபோஜனம், உண்க என - உண்ணக்கடவை என்று, தருவார் - கொடுப்பவர், யாவர் - எவர், அந்தோ - ஐயோ எ - று.

எண்கு - கரடி. முளவு - முட்பன்றி. ஏனம் - பன்றி. (கூ அ)

தேனொடு தினையின் பிண்டி தீம்பழங் காய்கி ழங்கு
மானொடு முயலெய் கேழல் வல்லுடும் பழுங்கி வற்றி
னூனுண வென்றிவ் வெல்லா முதவுவல் யானே நல்ல
கானவர் துணையுண் டெம்மூர் காண்டிவா வென்று நின்றான்.

(இ - ள்.) தேனொடு - தேனோடு சேர்த்துப் பிசைந்த, தினையின் பிண்டி - தினைமா, தீபழம் - மதுரமான கனிகள், காய் - காய்கள், கிழங்கு-கிழங்குகள், மானொடு-மானுடனே, முயல் எய் - முட்பன்றி, கேழல்-பன்றி, வல் உடும்பு - வலிய உடும்பு, அழுங்கு-ஆமை, இவற்றின் - (ஆகிய) இவைகளின், ஊன் உணவு - மாமிசபோஜனம், என்ற - சொல்லப்பட்ட, இவ்வெல்லாம் - இவையாவும், யானே உதவுவல்-நானே தருவேன், நல்ல கானவர் துணை உண்டு - நல்ல வேடரது சகாயமும் உண்டு, எம் ஊர் - எமது ஊரை, காண்டி - பார்ப்பாய், வாவென்று - வரக்கடவை என்று சொல்லி, நின்றான் - நின்றனன் எ - று.

உதவல் - தருதல். கானவர்-காட்டில் வாழ்வோர் (வேடர்). என்ற இவ்வெல்லாம் எனற்பாலது. நிலைமொழி ஈற்றகரம் தொகுத்தலாய் என்றிவ்வெல்லாம் என்று ஆயிற்று. (கூகூ)

சாமிநீ தனியே மீண்டுத் தங்குத றரித்த லாற்றே
னேமநல் லுடுப்பூர்க் கின்னே யென்னொடு வருதல் வேண்டு
நீமன மிரங்கா யெந்தா யெனப்பல நிகழ்த்தி னனக்
கார்மழை யனையா னற்புக் கடலினுக் கெல்லை யுண்டோ.

(இ - ள்.) சாமி - இறைவனே, ஈண்டு - இந்தக் காட்டில், நீ தனியே தங்குதல்-த் தனியாய் இருத்தல்பற்றி, தரித்தல் ஆற்றேன் - நான் சகிக்க மாட்டேன், ஏமம் - காவலோடு கூடின, நல் - நல்ல, உடுப்பூர்க்கு-உடுப்பூருக்கு, இன்னே-இப்பொழுதே, என்னொடு வருதல் வேண்டும்-என்னுடன் வரல்வேண்டும், எந்தாய் - எந்தையே, நீமனம் இரங்காய் - நீ மனம் இரங்கல் வேண்டும், என - என்று, பல-பலசொற்களை, நிகழ்த்தினன்-சொல்லினன், அ-அந்த, கார்மழை அனையான் - கார்காலத்து மேகத்தை நிகர்த்த திண்ணனது, அற்புகடலினுக்கு-அன்பாகிய கடலுக்கு, எல்லை உண்டோ-கரை உண்டோ எ-று.

நிகழ்த்தல் - ஈண்டைக்கேற்ப சொல்லுதலைக் குறித்தது. கார் - கார்ப்பருவம். அற்பு - அன்பு என்பதன் விகாரம். உண்டோ என்னும் ஓகாரம் எதிர்மறை. (கூ00)

மறுமொழி யிறைவ னொன்றும் வழங்கல னிருப்ப மீளி
யிறைதிரு வுளத்தி னெண்ண மிவ்வயி னிருத்தல் போலுஞ்
சிறியனே னினியித் தெய்வ சிகாமணி தன்னை நீங்கி
யுறுவனோ வுயிரி னோடென் றுரைத்தன னின்றா னங்கே.

(இ - ள்.) இறைவன் - சிவலிங்கப்பெருமான், மறுமொழி ஒன்றும்-விடையொன்றாயினும், வழங்கலன் இருப்ப - கொடாதிருத்தலும், மீளி-திண்ணன், இவ்வயின் இருத்தல் - இவ்விடத்தி லிருப்பதே, இறை - இறைவனது, திருவுளத்தில் எண்ணம்போலும்-திருவுள்ளத்திலெண்ணம் போலும், இனி - இனிமேல், சிறியனேன்-சிறியேன், இ - இந்த, தெய்வ சிகாமணி தன்னை நீங்கி - தெய்வ சூடாமணியை விட்டு, உயிரினோடு உய்வனோ - உயிரோடு பிழைத்திருப்பேனோ, என்று உரைத்தனன் - என்று சொல்லி, ஆங்கே நின்றான் - அவ்விடத்திற்றானே நின்றிருந்தான் எ-று.

வழங்கலன் முற்றெச்சம். மீளி - காளை; (யவ்வன பருவமுடையவன்). வயின் ஏழனுருபு. இடப்பொருள் குறித்தது. உறுதல்-பிழைத்தலெனப் பொருள்தந்து நின்றது. உரைத்தனன் முற்றெச்சம். (கூ0க)

அண்ணறன் முடியிற் றாநீ ராட்டிபு முருகு விம்முந்
தண்ணுறு மலர்மா லாரத் தளிர்சூட்டி யிருத்தல் காணாஉப்
பண்ணவன் றனக்கீ தேற்ற பணியெனத் தேறி யுள்ள
மண்ணெழூ வனைய தோளான் மற்றது கடைப்பி டித்தான்.

(இ - ள்.) அண்ணல் முடியில் - இறைவனது திருமுடிமீது, தூநீர் ஆட்டிபு - பரிசுத்தமான நீராட்டல் செய்து, முருகு விம்மும்-மணமிகுந்த, தண் உறுமலர்-குளிர்ச்சியையுடைய புட்பங்களையும், மாலாரத்தளிர்-வில்

வத்தனிர், (என்பவற்றை) சூட்டியிருத்தல் - முடித்திருப்பதை, காணூஉ- கண்டு, பண்ணவன் தனக்கு - இறைவனுக்கு, ஈது - இது, எற்றபணி என - தகுதியாகிய தொண்டென்று, உள்ளம் தேறி - மனம் தெளிந்து, மண் - அலங்கரிக்கப்பெற்ற, எழு அனைய - எழுத்தூண் போன்ற, தோளான் - புயங்களையுடைய திண்ணன், அது - அதனையே, கடைப்பிடித்தான் - உறுதியாகப் பற்றினன் எ-று.

ஆட்டுபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். காணூஉ என்பதும் அது. மற்று அசை. தைவிகம் முழுதும் அமைந்திருத்தல் பற்றி இறைவனைப் பண்ணவன் என்றார். (கo௨)

பின்புவேட் டுவர்தங் கோமான் பெரும்பக லாயிற் றன்னோ
வென்பெருந் துணையாய் நின்ற விறைவனார் மிகப்ப சித்தா
ரின்சுவை யூன்கொ ணர்ந்திங் கிடல்வேண்டு மென்ன நீங்கிற்
கொன்சின விலங்கி னீட்டங் குறுகியென் செயுமோ கெட்டேன்.

(இ - ள்.) பின்பு - பிறகு, வேட்டுவர் கோமான் - வேடர்களுக்குத் தலைவனாகிய திண்ணன், பெரும்பகல் ஆயிற்று - மத்தியானமாயிற்று, அன்னோ - ஐயோ, என் பெருந்துணையாய் நின்ற - எனது பேருதவியாய் நின்ற, இறைவனார்-கடவுளானவர், மிகப் பசித்தார் - மிகுதியாகப் பசித்திருக்கிறார், இங்கு - இவ்விடத்தில், இன்சுவை - இனிய சுவையுள்ள, ஊன்-மாமிசத்தை, கொணர்ந்து—, இடல் வேண்டும் என்ன - படைக்க வேண்டுமென்று, நீங்கின் - விட்டுப்போனால், கொல் - கொல்லுதற்குரிய, சினம் - கோபத்தையுடைய, விலங்கின் ஈட்டம் - மிருகங்களின் கூட்டம், குறுகி - வந்து, என் செய்யுமோ - என்னதீமை செய்யுமோ எ-று.

கெட்டேன் இரக்கவிடைச்சொல். பெரும்பகல்-கடும்பகல். குறுகி- கிட்டியெனினுமாம். (கoங)

என்றுசா லவுமி ரங்கி யெரிபசி மிகாத முன்னஞ்
சென்றொரு கணத்துட் கொண்டு திரும்புவ மெனத்து ணிந்து
குன்றிடை யெனக்கு வாய்த்த குலமணி விளக்கே யெந்தா
யுன்றழற் பசித ணிப்ப வுறுசுவை யிறைச்சி கொண்டே.

(இ - ள்.) என்று - என்று சொல்லிக்கொண்டு, சாலவும் இரங்கி - மிகவும் இரக்கமுற்று, எரிபசி மிகாத முன்னம் - எரிகிற பசிநோய் மிகுவதற்கு முன்னே, சென்று - போய், ஒரு கணத்துள் - ஒரு கணப்பொழுதுக் குள்ளே, கொண்டு - சேகரித்துக்கொண்டு, திரும்புவம் என துணிந்து - மீள்வோமென்று நிச்சயித்து, குன்றிடை - மலையின்மீது, எனக்கு வாய்த்த - எனக்குக் கிடைத்த, குலம் - மேன்மையாகிய, மணிவிளக்கே- ரத்நதீபமே, எந்தாய் - என் தந்தையே, உன் - உனது, தழல்பசி - பசியா

கிய நெருப்பை, தணிப்ப - ஆற்றும்பொருட்டு, உறுசுவை - மிக்க சுவையினையுடைய, இறைச்சிகொண்டு - மாமிசத்தைச் சேகரித்துக்கொண்டு எ - று.

கணம் க்ஷணம் என்னும் வடசொற்றிரிபு. எந்தாய் என் தந்தாய் என்பதன் மரூஉ. (கா௱௪)

உழுந்துருள் பொழுதின் மீள்வே னொருகண மேனுந் தாழேன்
வழங்குறு கொடுவி லங்கு வருமென வஞ்சே லைய
வெழுந்துமேல் வந்த தாயி னென்னையொய் யெனக்கூ வென்று
குழைந்தவிற் றடக்கை கூப்பிக் குறவர்கோ னரிதி னீங்கி.

(இ - ள்.) உழுந்து உருள்பொழுதின் - உழுந்துருளுங் காலத்துக்குள்ளே, மீள்வேன் - மீண்டுவருவேன், ஒரு கணம் எனும் - ஒரு க்ஷணிகமாயினும், தாழேன் - தாமதிக்கமாட்டேன், வழங்குறு - இங்கே சஞ்சரிக்கிற, கொடுவிலங்கு - கொடிய மிருகங்கள், வரும் என - வருமேயென்று, அஞ்சேல் - அஞ்சாதே, ஐய - ஐயனே, எழுந்து மேல்வந்ததாயின் - மேலெழுந்து வந்ததானால், என்னை - அடியேனை, ஒய்யென - விரைவாக, கூவு என்று-அழையென்று, குழைந்த - வளைந்த, வில் - வில்லைத் தாங்கிய, தடக்கைகூப்பி - பெரிய கையைக் குவித்து, குறவர்கோன் - வேடர்க்கரசனாகிய திண்ணன், அரிதின் நீங்கி - நீங்குதற் கரியவனாய் நீங்கி எ - று.

வழங்கல் - சஞ்சரித்தல். குழைதல் - வளைதல். கை கூப்புதல் - அஞ்சலித்தல். (கா௱௫)

கடிக்கடி மனையு ணின்ற கன்றகல் புனிற்றாப் போல
வடிக்கடி திரும்பி நின்றே யையர்தந் தனிமைக் கேங்கி
வடிக்கடி யம்பு பட்டு மழைமுகி லெனக்கி டக்குங்
கிடிக்கடி வேட்டைக் கானங் கிளர்கடுங் காலிற் சென்றான்.

(இ - ள்.) கடி - விளக்கமும், கடி - காவலும் உள்ள, கன்று அகல் - கன்றைப்பிரிந்த, புனிறு ஆபோல-புனிற்றுப் பசுவைப்போல, அடிக்கடி - உடனுக்குடனே, திரும்பி நின்று—, ஐயர் - இறைவரது, தனிமைக்கு - தனிமையாயிருப்பதற்கு, ஏங்கி - இரங்கி, வடி - வடிக்கப்பெற்று, கடி - கூர்மையுண்டாக்கின, அம்புபட்டு-அம்புதைத்து, மழைமுகில் என-மழைக்காலத்து மேகம்போல, கிடக்கும் - கிடக்கிற, கடி - விரைந்து செல்லுகின்ற, கிடிவேட்டை - பன்றிவேட்டை ஆடுதற்குரிய, கானம் - காட்டிற்கு, கிளர் - மிகுந்த, கடுங்காலின் - கடுங்காற்றுப்போல, சென்றான் - போயினன் எ - று.

புனிற்று ஆ - ஈன்றணிமையையுடைய பசு. தனிமை - ஒன்றியாய் இருத்தல். இதனை ஏகாந்தம் என்பர் வடநூலார். ஏங்கல் - இரங்கல்,

பகுதி ஏக்கு. வடித்தல் - தட்டுதல், கடி-கூர்மை. கிடி - பன்றி, இது வடசொற்றிரிபு. கால் - காற்று. (௧0௯)

கொழுந்தசை மோழ லொன்று குறவர்கோன் றானே யேந்தி
முழங்கலை யெறியு நன்னீர் முகரியின் றீரஞ் சார்ந்தோர்
செழுந்தரு நிழலின் வைத்துத் தீயர ணியினா லாக்கி
யெழுந்துறு மயிர்க டிந்தவ் வெறுழியை வாளி னீர்ந்தான்.

(இ - ள்.) கொழுதசை - கொழுமையாகிய மாமிசத்தையுடைய, மோழல் ஒன்று - ஒரு பன்றியை, (கொன்று) குறவர்கோன் - வேடர்க்கரசனாகிய திண்ணன், தானே ஏந்தி - தானே ஏந்திக்கொண்டு, முழங்கு-சப்திக்கின்ற, அலை எறியும் - அலை வீசுகின்ற, நல் நீர் - நல்ல நீரையுடைய, முகரியின் - பொன்முகரியாற்றின், தீரம் - கரையை, சார்ந்து - அடைந்து, ஓர்-ஒரு, செழு - செழுமையாகிய, தருநிழலில் - மரநிழலில், வைத்து—, அரணியினால் - அரணியைக்கொண்டு, தீ ஆக்கி - நெருப்பையுண்டாக்கி, எழுந்து உறும் - மிக நீண்ட, மயிர்கடிந்து - மயிரைத்தீய்த்து, அ - அந்த, எறுழியை - பன்றியை, வாளின் ஈர்ந்தான் - வாளினால் பிளந்தான் எ-று.

தசை - சதை என்பதன் மரூஉ. கோ - அரசன் இது னகரச்சாரியை பெற்று கோன் என்றாயிற்று. தீரம் - கரை, இது வடசொல். அரணி - தீக்கடைகோல். ஈர்ந்தான் - வகிர்ந்தான் என்றலுமாம். (௧0௭)

ஈர்ந்துசெந் தசையுட் சால வின்சுவை யுடைய வெல்லாந்
தேர்ந்துவே றெடுத்தெ டுத்துத் தேக்கிலை யதனுட் பெய்து
கூர்ந்தவா யம்பிற் கோத்துக் கொந்தழல் பதத்திற் காய்ச்சி
யார்ந்தபே ரன்பன் வாய்ப்பெய் தருஞ்சுவை பார்க்க லுற்றான்.

(இ - ள்.) ஈர்ந்து - வகிர்ந்து, செந்தசையுள் - சிவந்த மாமிசத்தில், சால - மிகுதியாக, இன்சுவை உடைய எல்லாம், இனிய சுவை உடையனவாகிய எல்லாவற்றையும், தேர்ந்து - தேடி, வேறு எடுத்து எடுத்து-வேறுவேறாக எடுத்து, தேக்கு இலை அதனுள் பெய்து - தேக்கிலைத்தொன்னையில் வைத்து, கூர்ந்த - கூர்மையாகிய, வாய் - நுனியையுடைய, அம்பில் கோத்து - அம்பிலே கோத்து, கொந்து அழல் - கொதிக்கிற நெருப்பில், பதத்தில் காய்ச்சி - பதமாக வதக்கி, ஆர்ந்தபேர் அன்பன் - மிக்க பேரன்பினனாகிய திண்ணன், வாய் பெய்து - தன் வாயில் இட்டு, அரும் சுவை பார்க்கலுற்றான் - அருமையாகிய சுவையை பார்க்கத் தொடங்கினான் எ - று.

தேர்தல் - ஆராய்தல். தேக்கிலை என்றது தேக்கிலைக் கல்லையை. பதம் - பக்குவம். சுவை - உருசி. (௧0௮)

பல்லினுன் மெல்ல மெல்லப் பன்முறை யதுக்கிப் பார்த்து
நல்லன விறைச்சி யெல்லா நவையிறேக் கிலையிற் றைத்த
கல்லையுள் வாங்கி வைத்துக் கழிசுவை யிலாத வெல்லாம்
வல்லைவெள் ளிடையு மிழ்ந்தான் வருபவக் கடல மிழ்ந்தான்.

(இ - ள்.) பல்லினுல் - பல்லைக்கொண்டு, மெல்ல மெல்ல - மெள்ள மெள்ள, பல்முறை-பலதரம், அதுக்கிப்பார்த்து - அமுக்கிப்பார்த்து, நல்லன இறைச்சி எல்லாம் - நல்ல மாமிசத்தை எல்லாம், நவை இல் - குற்றமில்லாத, தேக்கு இலையின் தைத்த - தேக்கு இலையினுல் தைத்த, கல்லையின் வாங்கி வைத்து - தொன்னையில் எடுத்துவைத்து, கழிசுவை இல்லாத எல்லாம் - மிக்க சுவை இல்லாத மாமிசத்தை எல்லாம், வல்லை - விரைவாக, வெள்ளிடை - வெற்றிடத்தில், உமிழ்ந்தான் - துப்பிவிட்டான், (இவன் யார் என்ருல்) வரு - இனி வரப்போகிற, பவக்கடல் - பிறவிக்கடலில், அமிழ்ந்தான் - மூழ்காதவனுகிய திண்ணன் எ - று.

அதுக்கல் - அமுக்குதல். தேக்கிலையின் என்பதில் இன் என்னும் ஐந்தனுருபு மூன்ருவதன் கருவிப் பொருளில் வந்தது. கழி - மிகுதிப் பொருள் தரும் உரிச்சொல். பவம் -பிறப்பு, இது வடசொற்றிரிபு. (௧0௯)

பூந்தளி ரோடு கொய்த புதுமலர் தலையிற் பெய்து
தாந்திர விதியென் றூட்டுந் தண்புனல் வாய்மு கந்து
தீந்தசை யமுது பெய்த தேக்கிலைத் தளிகை யோர்கை
யேந்தியம் பொடுவில் லோர்கை யெடுத்துவல் விரைவிற் போந் [தான்.

(இ - ள்.) பூ - அழகாகிய, தளிரோடு - தளிருடன், கொய்த - பறித்த, புதுமலர் - புதியமலர்களை, தலையில் - (சிவலிங்கப்பெருமானது) திருமுடியில், பெய்து - இட்டு, தாந்திரவிதி என்று - வேதசாத்திர நூல்களின் விதி என்று கொண்டு, ஆட்டும் - ஆட்டுகின்ற, தண்புனல் - மிகுந்த நீரை, வாய்முகந்து - தன்வாயினுல் மொண்டு, தீதசை - இன்சுவையுள்ள மாமிசமாகிய, அமுது - உணவை, பெய்த - வைத்த, தேக்கிலை தளிகை - தேக்கிலையாற் செய்த உண்கலத்தை, ஓர்கை ஏந்தி - ஒருகையில் ஏந்திக்கொண்டு, அம்பொடுவில் - அம்போடுகூடிய வில்லை, ஓர் கை எடுத்து - ஒரு கையினுல் எடுத்துக்கொண்டு, வல் விரைவில் - மிகு வேகமாக, போந்தான் - வந்தான் எ - று.

தாந்திரம் - தந்திரம் என்பதன் நீட்டல் விகாரம். விதி - முறை. முகத்தல் - மொள்ளல். வல்விரைவு என்பதில் வல் மிகுதிப்பொருள் தந்து நின்றது. (௧௧0)

### மேற்படி வேறு

என்னு ருயிர்க்குத் துணையாவா ரெரிவெம் பசியா லிளைத்தாரோ
வன்னே கொடிய விலங்கினத்தா லச்சுற் றுரோவெனப் பதைத்துத்
தன்னு தரவிற் பார்ப்பருந்தத் தாழா தோடும் பறவையென
முன்னு மனமும் பின்னாக முதல்வன் றன்பா லோடினன்.

(இ - ள்.) என் ஆர் உயிர்க்கு - எனது அரிய உயிர்க்கு, துணையாவார் - உதவியாவாராகிய சிவலிங்கப் பெருமானானவர், எரி - எரிகின்ற, வெம்பசியால் - கொடிய பசியினால், இளைத்தாரோ - மெலிந்தாரோ, அன்னே - ஐயோ, கொடிய விலங்கு இனத்தால் - கொடிதாகிய மிருகங்களின் கூட்டத்தால், அச்சு உற்றுரோ - அஞ்சினாரோ, என - என்று, பதைத்து - துடித்து, தன் ஆதரவின் - தன் அன்பினால், பார்ப்பு அருந்த - குஞ்சுகள் உண்ணும் பொருட்டு, தாழாது - தாமதம் செய்யாமல், ஓடும் - ஓடுகிற, பறவை என - பட்சிபோல, முன் ஆம் - (வேகத்தில்) முற்பட்டதாகிய, மனமும் - மனதும், பின்னாக - பின்னிடும்படி, முதல்வன் தன்பால் - சிவலிங்கப்பெருமானிடத்து, ஓடினன் - ஓடினன் எ - று.

அச்சம் உற்றுரோ எனற்பலது அச்சுற்றுரோ என விகாரமாயிற்று. ஆதரவு - மிகுவிருப்பம் (அன்பு). முதல்வன் தன்பால் - என்பதில், தன் சாரியை. (கககா)

சென்று குறுகி யெம்பெருமான் றீயேன் வரவு தாழ்த்தலினாற்
கன்று பசியால் வருந்தினையே யென்று கரைந்து திருமுடிமேற்
றுன்று தளிருஞ் செழும்போதுந் தொடுதோ லடியான் மாற்றிவா
யொன்று நீராற் பிரானுடலோ டுள்ளங் குளிர வாட்டினன்.

(இ - ள்.) சென்று - போய், குறுகி - நெருங்கி, எம்பெருமான் - எம்பெருமானே, தீயேன் வரவு - தீயனேனது வருகை, தாழ்த்தலினால் - தாமதித்ததனால், கன்று - வருத்துகின்ற, பசியால் - பசியினால், வருந்தினையே - வருத்தமுற்றாயே, என்று - என்று சொல்லி, கரைந்து - மனம் உருகி, திருமுடிமேல் - (இறைவனது) திருமுடிமீது, துன்று - மிகுதியாகிய, தளிரும் - தளிர்களையும், செழுபோது - செழிய மலர்களையும், தொடுதோல் - செருப்பணிந்த, அடியால் - காலினால், மாற்றி - தள்ளி, வாய் - தன் வாயினிடத்து, ஒன்றும் - இருக்கிற, நீரால் - நீரினால், பிரான் - இறைவனது, உடலோடு - திருமேனியுடன், உள்ளம் - திரு உள்ளமும், குளிர - குளிர்ச்சியடையும்படி, ஆட்டினன் - நீராட்டினன் எ - று.

குறுகல் - கிட்டல் (சமீபித்தல்). தொடுதோல் - செருப்பு. மாற்றுதல் - ஈண்டைக் கேற்ப தள்ளுதல் எனப் பொருள்தந்து நின்றது. உள்ளம் - மனம். (ககஉ)

ஆட்டித் தலையி லிருந்தகம ழலருந் தளிருமெடுத் திறைஞ்சிச் [த்
சூட்டித் திருமுன் னிலைக்கலத்திற் றூய விறைச்சிப் போனகம்வை
ஈட்டற் கரியபெரும்பொருளே யெந்தா யுண்கென் றினியசொலி
யூட்டிப் பிரியா தருகுநின்றா னுவகைக் கடற்குக் கரைகாணான்.

(இ - ள்.) ஆட்டி - நீராட்டி, தலையிலிருந்த - திருமுடிமீதிருந்த, கமழ் - மணக்கிற, அலரும் - மலர்களையும், தளிரும் - தளிர்களையும், எடுத்திறைஞ்சிச் சூட்டி - தலையையுயர்த்தி வளைத்துச் சூட்டி, திருமுன் - சந்நிதியில், இலைக்கலத்தில் - தொன்னையில், தூய - பரிசுத்தமாகிய, இறைச்சி போனகம் வைத்து - மாமிசபோஜனத்தை படைத்து, ஈட்டற்கு அரிய - பெருதற்கு அரிதாகிய, பெரும் பொருளே - பெரிய செல்வமே, எந்தாய்-எமது தந்தையே, உண்க என்று-அமுதுசெய்யக் கடவை என்று, இனிய சொலி - இனிய வார்த்தைகளைச் சொல்லி, ஊட்டி - உண்பித்து, பிரியாது - நீங்காமல், அருகு நின்றான் - சமீபத்தில் நின்றான், (அவன் யார் எனில்) உவகை கடற்கு - சந்தோஷ சாகரத்திற்கு, கரைகாணான் - எல்லை காணாதவனாகிய திண்ணன் எ - று.

இலைக்கலம் - இலையினாற் செய்த உண்கலம். போனகம் - திசைச் சொல். எந்தாய் - என் தந்தையே என்பதன் மரூஉ. உண்க எனற் பாலதில் நிலைமொழி ஈற்றகரம் தொகுத்து நின்றது. உவகை - ஓகை என்பதன் திரிபு. (கக௩)

கலித்துறை

கால மங்கதில் வேடர்தந் தலைவனைக் காணார்
சால வச்சுறீஇக் காடெலாந் தேடியத் தடங்கோட்
டால மூலத்தி னிருந்தரு ளண்ணறன் னருகு
நீல மால்வரை நின்றென நிற்பவற் கண்டார்.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்தில், காலம் அதில் - அக்காலத்தில், வேடர் - வேடர்கள், தம் தலைவனை - தமது முதல்வனை, காணார் - காணாதவராகி, சால - மிகவும், அச்சுறீஇ - அஞ்சி, காடு எல்லாம்தேடி - கானகமுழுதும் தேடி, அ - அந்த, தடம் - பெரிய, கோட்டு - சிகரத்திலுள்ள, ஆலமூலத்தில் - ஆலமரத்தினடியில், இருந்தருள் - எழுந்தருளியிருக்கிற, அண்ணல் - சிவலிங்கப் பெருமானுக்கு, அருகு - சமீபத்தில், மால் - பெரிய, நீலவரை - நீலமலையானது, நின்றென - நின்றாற்போல, நிற்பவன் - நிற்பவனாகிய திண்ணனை, கண்டார் - பார்த்தார்கள் எ - று.

காணார் - முற்றெச்சம். கோடு - மலை. மூலம் - வேர். நீலவரை - கருமலை. (கக௪)

அருகு சென்றடைந் தையநீ யெங்களை யகன்றிப்
பெரிய மால்வரை யடைந்ததென் பிழைத்தனங் கொல்லோ
பரிதி வானவ னண்பகல் கடந்தனன் பசித்தாய்
முருக விவ்வுழி நிற்பதென் வருகென மொழிந்தார்.

(இ - ள்.) அருகு சென்று அடைந்து - அருகேபோய் சேர்ந்து, ஐய - ஐயனே, நீ எங்களை அகன்று - நீ எம்மை நீங்கி, இ - இந்த, பெரிய மால் வரை - மிகப் பெரிய மலையை, அடைந்தது - சேர்ந்தது, என் - யாதுகாரணத்தால், பிழைத்தனம் கொல்லோ - யாம் பிழைசெய்தோமோ, பரிதி வானவன் - சூரிய பகவான், நண்பகல் கடந்தனன் - நடுப்பகற்பொழுதை தாண்டினன், முருக பசித்தாய் - மிகப் பசித்திருக்கிறாய், இவ்வுழி - இவ் விடத்து, நிற்பது - நிற்பதன் காரணம், என்-யாது, வருக என - வருவாயாகவென்று, மொழிந்தார் - சொல்லினர் எ - று.

அகன்று - பகுதி அகல். பரிதி வடசொல். முருகுதல் - மிகுதல், பகுதி முருகு. இவ்வுழி என்பதில் உழி ஏழனுருபு இடப் பொருளது. (கக௫)

கரைந்த சொற்கெலா மெதிர்மொழி கொடாமையிற் கவன்று
பெருந்த காயுனக் கெங்கண்மேன் முனிவென்கொல் பேசாய்
வருந்தி நீயிவண் வந்தமை யறிந்திலம் வள்ளா
லிரங்கு வார்கழ னின்னடி யறியவென் றிசைத்தார்.

(இ - ள்.) கரைந்த - சொல்லிய, சொற்கு எல்லாம் - சொற்களுக்கு எல்லாம், எதிர்மொழி கொடாமையின் - விடை கொடாமையால், கவன்று - மனம் வருந்தி, பெருந்தகாய் - மிகப் பெருமையுடையவனே, உனக்கு - தேவரீருக்கு, எங்கள்மேல் - எங்கள்மீது, முனிவு என்கொல் - கோபம் யாதினாலோ, பேசாய்-சொல்லாய், வள்ளால் - வள்ளலே, நீ—, இவண் - இவ்விடத்திற்கு, வருந்திவந்தமை - வருத்தமுற்று வந்ததற்குக் காரணம், அறிந்திலம் - தெறிந்திலேம், இரங்கு - சப்திக்கின்ற, வார் கழல் - நீண்ட வீரக்கழல் அணிந்த, நின் அடி அறிய - உனது திருவடி அறிய, என்று இசைத்தார் -என்று சொல்லினார்கள் எ - று.

கரைதல் - சொல்லுதல், பகுதி கரை. கொடாமையின் என்பதில் (இன்) என்னும் ஐந்தனுருபு மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது. கவன்று என்பதற்கு பகுதி கவல். வள்ளால் என்பது விளிப்பெயர். இரங்கல் - சத்தித்தல். நின்னடி யறிய என்றது சூளுரைத்தற் குறிப்பு. (கக௬)

மற்ற தற்குமொன் றுரைத்தில னிற்பவம் மறவர்
கொற்ற வில்லுடைக் குரிசினீ யுளத்திலென் கொண்டாய்
சற்று மெம்மிடத் தன்பிலை யாயினை தலைவ
குற்ற மெம்வயிற் கண்டதுண் டேற்பிற கூறாய்.

(இ - ள்.) மற்று - மேலும், அதற்கும் - அவர்கள் கேட்டதற்கும், ஒன்று உரைத்திலன் - ஒருவார்த்தையும் சொல்லாமல், நிற்ப - (திண்ணன்) நிற்றலும், அ - அந்த, மறவர்—, கொற்றம் - வெற்றியைத்தருகிற, வில் உடை - வில்லையுடைய, குரிசில் -அரசனே, நீ—, உள்ளத்தில் - உன் மன

தில், என்கொண்டாய் - என்ன கருதினாய், எம் இடத்து - எம்மீது, சற்றும் - சிறிதாயினும், அன்பு இல்லை ஆயினை - கருணையில்லாதவன் ஆனாய், தலைவ - முதல்வனே, எம்வயின் - எம்மிடத்தில், குற்றம் கண்டது உண்டேல் - குற்றங் காணப்பட்டது உளதாயின், கூறாய் - அந்தக் குற்றம் இன்னதென்று சொல்வாய் எ - று.

உரைத்திலன் முற்றெச்சம். குரிசில் அண்மைவிளி. வயின் ஏழனுருபு. இடப்பொருளது. உண்டேல் என்பதில் ஏல் எனின் என்பதன் மரூஉ. (கக௭)

என்று பற்பல திறத்தினு லுரைக்கவு மிளையோ
னொன்றும் வாய்திறந் தானல னோவியம் போலக்
குன்ற வில்லியை நோக்கிநின் றானவர் குறித்து
மன்ற வெஞ்சின மன்றிது வென்னென மருண்டார்.

(இ - ள்.) என்று—, பற்பல திறத்தினால் - பலப்பல வகையால், உரைக்கவும் - சொல்லவும், இளையோன் - இளைஞனாகிய திண்ணன், ஒன்றும் - சிறிதும், வாய் திறந்தான் அல்லன் - வாய் திறந்திலன், குன்ற வில்லியை நோக்கி - சிவலிங்கப் பெருமானைப் பார்த்துக்கொண்டே, ஓவியம்போல - சித்திரப் பாவைபோல, நின்றான் - நின்றனன், அவர் - அந்தமறவர், குறித்து - ஆலோசித்து, இது - இவ்வாறு நிற்பது, வெம் சினம் அன்று - கொடுங்கோவத்தினால் அல்ல, என் என - வேறு என்ன காரணத்தினாலோ வென்று, மருண்டார் - மயங்கி நின்றார்கள் எ - று.

திறம் - வகை. வாய்திறந்தானல்லன் முற்றெச்சம். குன்றவில்லி-மேருமலையை வில்லாகச் செய்துகொண்டவன். (கக௮)

இங்கு நின்றவித் தெய்வத மிவனிடத் தேறித்
தங்கி நின்றதோ வென்கொலோ வறிகிலந் தமியே
மங்கு நம்மொடு வருபவ னலனிவ னந்தோ
நங்க டொல்குலத் தலைவனா நாகற்கென் னுரைப்போம்.

(இ - ள்.) இங்குநின்ற - இவ்விடத்திலிருக்கிற, இ - இந்த, தெய்வதம் - வனதேவதை, இவன் இடத்து ஏறி - இவன்மேலேறி, தங்கி நின்றதோ - நிலைத்து நின்றுவிட்டதோ, என்கொலோ - யாதோ, அறிந்திலம்-தெறிந்திலேம், தமியேம் - தமியராகிய நாம், இவன் - இந்தத்திண்ணன், நம்மொடு - நம்முடன் கூடி, அங்கு வருபவன் அல்லன் - அங்கே வருவோனல்லன், அந்தோ - ஐயோ, நங்கள் - நமது, தொல்குலம் - பழமையாகிய குலத்துக்கு, தலைவன் - முதல்வனாகிய, நாகற்கு - நாகனுக்கு, என் உரைப்போம் - என்ன சொல்வோம் எ - று.

இங்கு நின்ற வித்தெய்வதம் என்றது இதோ எதிரே நிற்கிற இந்தத் தெய்வம் எனினுமாம். ஏறியென்றது ஆவேசித்து என்றபடி. (ககக)

தத்தை யாகிய தத்தையந் தேமொழித் தையன்
மத்த யானைபோ லென்மக னெங்கெனின் மறுசொ
லெத்தி றத்தினுற் சொல்லுது மெனப்பல விரங்கி
யெய்த்து நின்றனர் வசிக்கவோ ருபாயமு மில்லார்.

(இ - ள்.) தத்தை ஆகிய - தத்தையென்னும் பெயருள்ளவளாகிய, தத்தை அம் தேம்மொழி - கிளிமொழிபோலும் இன்சொல்லையுடைய, தையல் - மாது, மத்தயானைபோல் - மத்தயானைபோன்ற, என் மகன் - என் புதல்வன், எங்கு எனின் - எங்கேயென்று கேட்டால், எத்திறத்தினுல் - எவ்வகையால், மறுசொல் சொல்லுதும் - மறுமொழி கூறுவோம், என - என்று, பல இரங்கி - பலவகையாக இரக்கங்கொண்டு, வசிக்க - (திண்ணனை) வசிகரிக்க, ஓர் உபாயமும் இல்லார் - ஒரு தந்திரமும் அறியாதவர்களாய், எய்த்து நின்றனர்-இளைத்து நின்ருர்கள் எ - று.

தையல் - கைபுனையப்பட்டவள் (அலங்கரிக்கப் பெற்றவள்). இல்லார் முற்றெச்சம். (கஉ0)

குழைக்கு நோன்சிலை நாகனே டிச்செயல் கூறி
யழைத்து வந்தன மெனிலவ னெத்திறத் தானும்
பிழைக்கு மாறியற் றுவனெனத் துணிந்தனர் பெயர்ந்தார்
தழைத்த லைப்புலா நறும்வாய்ச் செய்யகட் சவரர்.

(இ - ள்.) குழைக்கும் - வளைத்தற்குரிய, நோன்சிலை-பெரிய வில்லையுடைய, நாகனேடு - நாகனுடன், இச்செயல் கூறி - இந்தச் செய்தியைச் சொல்லி, அழைத்து வந்தனம் எனில் - அழைத்து வந்தோமென்று சொன்னுல், அவன்—, எத்திறத்தானும் - எவ்வகையாலாயினும், பிழைக்கு - (இந்த தேவதையின்) குற்றத்திற்கு, மாறு இயற்றுவன் என - பரிகாரம் செய்வானென்று, துணிந்தனர் - நிச்சயித்து, பெயர்ந்தார் - சென்ருர்கள், (யாரெனின்) தழைதலை - இலை செருகின சிரசையும், புலால் நாறும்வாய் - மாமிசம் நாறுகிற வாயையும், செய்யகண்-செவந்த கண்களையும் உடைய, சவரர் - வேடர் எ - று.

குழைத்தல் - வளைத்தல், பகுதி குழை. சிலை ஶிலா என்னும் வடசொற்றிரிபு. துணிந்தனர் முற்றெச்சம். சவரர் - ஸவரம் என்னும் வடசொற்றிரிபு. (கஉக)

அன்ன காலையி லாயிரங் கதிர்ச்சுட ரரசன்
மன்னு திண்ணனன் பப்புறத் துலகெலாம் வழங்கப்
பன்னு வேமெனப் போதல்போற் குடதிசைப் பராரைச்
சென்னி வான்றெடு மலைமறைந் தானிருள் செறிய.

(இ - ள்.) அன்னகாலையில் - அந்தவேளையில், ஆயிரம் கதிர்-ஆயிரம் கிரணங்களையுடைய, சுடர்க்கு அரசன் - சூரியன், மன்னு - நிலைபெற்ற,

திண்ணன் அன்பு - திண்ணனது அன்பானது, அப்புறத்து உலகு எல்லாம் வழங்க - அப்புறத்துள்ள எல்லா வுலகங்களிலும் வழங்கும்படி, பன்னுவேம் என - சென்று சொல்லுவோமென்று, போதல்போல் - போவதுபோல, குடதிசை - மேற்றிசையிலுள்ள, பராரை - பருத்த அடிவாரத்தையும், வான்தொடு சென்னி - ஆகாயத்தைத் தீண்டுகிற சிகரத்தையும் உடைய, மலை - மலையினிடத்தே, இருள் செறிய - (இப்புறத்துலகெல்லாம்) இருள் மூடிக்கொள்ளும்படி, மறைந்தான் - மறைந்துவிட்டான் எ - று.

சுடர்க்கரசன் என்று சூரியனைச் சிறப்பித்தது யாதினாலெனின் முச்சுடர்களிற் சிறந்திருத்தல் பற்றி யென்க. முச்சுடர்களாவன - சோமசூரியாக்கினிகள். சுடர் - ஒளியுடைப்பொருள். அப்புறம் என்றது மேருமலைக் கப்புறம் என்றவாறு. வயங்க எனப் பாடமோதி பிரகாசிக்க என்றுரைத்தலுமாம். பன்னுதல் - சொல்லுதல். குடதிசை மலையெனவியையும். (கஉஉ)

அரவு மிழ்ந்தசெம் மணிக்கண மிமைத்தலி னலரி
யிரைதி ரைக்கடன் மூழ்கியுங் கங்குலங் கில்லை
யிருள்கெ டச்சுடர் விரிதரு விலைவரம் பில்லா
வுருவ மாமணி பலவுள விடத்திர வுண்டோ.

(இ - ள்.) அரவு - பாம்புகள், உமிழ்ந்த - கக்கின, செம்மணிக்கணம் - செவந்த மாணிக்கத்தொகுதி, இமைத்தலின் - பிரகாசித்தலால, அலரி - சூரியன், இரை - ஒலிக்கிற, திரை - அலைகளையுடைய, கடல் - சமுத்திரத்தில், மூழ்கியும் - முழுகியும், அங்கு - அந்த மலையில், கங்குல் இல்லை - இரவில்லையாயிற்று, இருள்கெட - இருளொழிய, சுடர் விரிதரு - ஒளியை விரிக்கிற, விலைவரம்பு இல்லா - விலைக் கெல்லையில்லாத, உருவம்மா - உருவத்தாற் பெரிய, பலமணி உள்ளவிடத்து - அநேகமான மாணிக்கங்களுள்ள இடத்தில், இரவு உண்டோ - இரவு உளதோ எ - று.

அரவுமிழ்ந்த செம்மணி யென்றது மாணிக்கத்தை. கணம் - வடசொற்றிரிபு. மூழ்கல் - குளித்தல். விரிதரு என்பதற்குப் பகுதி விரிதா. உண்டோவென்னும் ஓகாரம் எதிர்மறை. (கஉங)

அண்ணலைக்கொடு விலங்கினங் குறுகுத லஞ்சி
வண்ணு திக்கணை தொடுத்தகூன் வில்லொடு மறந்துங்
கண்ணி மைத்தில னாகியே வைகறை காறு
மண்ணெ ழூப்புரை தோளினின் முனிறை மருங்கு.

(இ - ள்.) மண் - அலங்கரிக்கப்பெற்ற, எழுபுரை - எஃகத்தை யொத்த, தோளன் - புயங்களையுடையவனாகிய திண்ணன், அண்ணலை - சிவலிங்கப்பெருமானை, கொடு - கொடிய, விலங்கு இனம் - மிருகக் கூட்

டங்கள், குறுகுதல் - கிட்டுதற்கு, அஞ்சி - பயந்து, வள் - கூர்மையாகிய, நுதி - நுனியையுடைய, கணைதொடுத்த - அம்புபூட்டின, கூன்வில்லொடு - வளைவாகிய வில்லுடனே, மறந்தும் - மறந்தாயினும், கண் இமைத்திலன் ஆகி - கண்ணிமைக்காதவனாகி, வைகறைகாறும் - விடியற்காலத்தளவும், இறைமருங்கு - சிவலிங்கப்பெருமான் பக்கத்தில், நின்றான் - நின்றுகொண்டிருந்தான் எ-று.

காறும் - அளவும். மண்ணல் - அலங்கரித்தல். புரைதல் - ஒத்திருத்தல். தோளன் நின்றான் என வியையும். (கஉச)

அன்ப ரன்பினுக் ககப்படு பேரரு ளாழிக்
கின்ப வூன்றிரு வமுதமாக் கியவுளத் தெண்ணி
வன்பெ ருஞ்சிலைத் தடக்கையான் வைகறைப் போது
பொன்ப ரந்தொளிர் மால்வரைச் சாரலிற் போந்தான்.

(இ - ள்.) அன்பர் - அன்பரது, அன்பினுக்கு - பத்திக்கு, அகப்படு - உட்படுகிற, பேர் அருள் ஆழிக்கு - பெரிய கருணைக்கடலாகிய சிவலிங்கப் பெருமானுக்கு, இன்பம் - இன்பத்தைத் தருகிற, ஊன் - மாமிசத்தை, திருஅமுதம் ஆக்கிய - நல்லுணவாக்க, உள்ளத்து எண்ணி - மனத்தில் நினைத்து, வல்பெருஞ்சிலை - வலிய பெரிய வில்லைத்தாங்கிய, தடக்கையான் - பெரிய கையையுடைய திண்ணன், வைகறைப்போது - விடியற்காலத்தில், பொன்பரந்து ஒளிர் - பொன்பரவிப் பிரகாசிக்கிற, மால் - பெரிய, வரைச்சாரலில் - மலைச்சாரலில், போந்தான் - அடைந்தான் எ-று.

அகப்படல் - சிக்கல். உட்படுதல் எனினுமாம். ஆக்கிய - செய்யிய வென்னும் வாய்பாட்டெதிர்கால வினையெச்சம். போது - பொழுது. பொன் அழகு எனினுமாம். வரைச்சாரல் - மலையடிவாரம். (கஉரு)

வீட்ட வாவுடை யார்க்கரு ளருமொரு விமல
னாட்ட மாகிய தான்கொள்புண் ணாற்றிடு நம்பி
வேட்ட மாடுதல் காணிய விரும்பிவந் தென்னக்
கோட்ட வார்திரைக் கடலெழுந் தான்சுடர்க் கோமான்.

(இ - ள்.) வீடு அவா உடையார்க்கு - மோக்ஷதாகமுள்ளவர்களாகிய அன்பருக்கு, அருள்தரும் - கிருபைசெய்கிற, ஒரு - ஒப்பற்ற, விமலன் - நிர்மலனாகிய, சிவபெருமானது, ஆட்டம் ஆகிய - விளையாட்டாகிய, தான் கொள்புண் - தான் கொண்ட புண்ணை, ஆற்றிடும் - ஆற்றுகிற, நம்பி - திண்ணன், வேட்டம் ஆடுதல் - வேட்டையாடுதலை, காணிய - நோக்கும் பொருட்டு, விரும்பிவந்தென்ன - விரும்பி வந்தாற்போல, கோட்டம் - வளைவாகிய, வார்திரை - நீண்ட அலைகளையுடைய, கடல் - கடலின்கண், சுடர்க்கோமான் - முச்சுடர்களுள் தலைவனாகிய சூரியன் எழுந்தான் - உதித்தான் எ-று.

அருள்தரும் ஒருசொல், பகுதி அருள்தா விமலன் மலரகிதன், நிர்மலன் என்பதும் இப்பொருளதே, இவை வடசொற்கள். நம்பி - மங்கள குணபூர்ணன். காணிய - காண, இது செயவென வாய்பாட்டெதிர்கால வினையெச்சம். வந்தாலென்ன வென்றபாலது வந்தென்னவென விகாரமாயிற்று. கோடு - வளைவு. திரை ஆகுபெயர். ஒளியுடைப்பொருள்களெல்லாவற்றுள்ளுஞ் சிறந்தவனாதலால் சூரியனை சுடர்க்கோமான் என்றார். (கஉசு)

கலிவிருத்தம்

பொங்கு வெஞ்சினப் புண்கமழ் வாளுகிர்ச்
சிங்க மன்னான் செயனிற்க மற்றினிக்
கங்கை வார்சடைக் கண்ணுத ருண்முத
றங்கு நெஞ்சத் தவன்செயல் சாற்றுவாம்.

(இ - ள்.) பொங்கு - மிகுந்த, வெஞ்சினம் - கடுங் கோவத்தையும், புண்கமழ் - மாமிசம் நாறுகிற, வாள் உகிர் - வாள்போலும் நகத்தையுமுடைய, சிங்கம் அன்னான் - சிங்கம் போன்றவனாகிய திண்ணனது, செயல் நிற்க — செய்கை இம்மட்டில் நிற்கட்டும், இனி - இனிமேல், கங்கை - கங்காநதியைத் தாங்கிய, வார்சடை - நீண்ட சடையினையும், கண்ணுதல் - நெற்றிக்கண்ணையுமுடைய சிவபெருமானது, தாள் முதல் - திருவடியின்கண், தங்கும்- நிலைபெற்ற, நெஞ்சத்தவன் - மனத்தையுடையவனாகிய சிவகோசரியென்னும் அந்தணனது, செயல் - செய்தியை, சாற்றுவாம் - சொல்லுவோம் எ-று.

புண் என்றதனால் கமழ் என்பதற்கு நாறுகிற எனப் பொருள் வரையலாயிற்று. பொங்குதல் - மிகுதல். கொதித்தல் எனினுமாம். வள்ளுகிர் எனப் பாடமோதி, கூர்மையாகிய நகம் என்றலுமொன்று. சிங்கம்-வடசொற்றிரிபு. கங்கை யென்பதும் சடையென்பதும் அவை. முதல் - ஏழனுருபு இடப்பொருளது. நெஞ்சத்து அவன் எனப் பிரித்து மனத்தை யுடையவனாகிய அந்த அந்தணன் என்றுரைப்பினுமாம். (கஉஎ)

அருளு மானப் பொறையு மறிவொடு
தெருளு நோன்புஞ் சிவனிடத் தன்பினோ
டிருளிற் றீரவா வின்மையுங் கல்வியு
மருளின் மெய்ம்மையு மாணுரு வாயினன்.

(இ - ள்.) அருளும் - கருணையும், ஆனபொறையும் - நீங்காத பொறுமையும், அறிவொடு - ஞானத்துடனே, தெருளும்-தெளிவும், நோன்பும்-விரதமும், சிவனிடத்து அன்பினோடு - சிவபத்தியுடனே, இருளின்தீர் - அஞ்ஞான இருளினின்றும் நீங்கினதாகிய, அவா இன்மையும் - நிராசையும், கல்வியும் - வித்தையும், மருள் இல் - மருட்சியில்லாத, மெய்ம்மையும் - சத்தியமும், (ஆகிய இவைகளே) மாண் - மாட்சிமைப்பட்ட, உரு ஆயினன் - ஓர் வடிவாகப் பெற்றவன் எ-று.

நிராசைபுண்டாளுலன்றி அஞ்ஞானவிருள் நீங்காதென்பது தோன்ற இருளிற் றீரவாவின்மையும் என்றார். கல்வி - அறிவுநூற்கல்வி. அருள் முதல் மெய்ம்மை யீறாகச் சொல்லப்பட்டவைகளே. மாணுருவாயினன் என்றது பூதவுடம்பினனல்லனென்பது தோன்றற்கென்க. (கஉஅ)

வெறுப்பில் சந்தன மெய்யெலாம் பூசிநின்
றிறப்ப வின்ப மியற்றுநர் தங்கணுங்
கறுத்தெ ழுந்தெதிர் காயழற் பெய்துதுன்
புறுத்து வார்கணு மொத்த வுளத்தினன்.

(இ - ள்.) வெறுப்பு இல் - வெறுத்தலில்லாத, சந்தனம் - சந்தனத்தை, மெய் எல்லாம்-உடம்பு முழுதும், பூசி நின்று—, இறப்ப-மிகுதியாக, இன்பம் இயற்றுநர் கண்ணும் - சந்தோஷத்தை யுண்டுபண்ணுவோ ரிடத்திலும், கறுத்து எழுந்து - கோவித்தெழுந்து, எதிர் - எதிரில், காய் - எரிகிற, அழல் பெய்து - நெருப்பிலிட்டு, துன்புறுத்துவார் கண்ணும் - துன்பத்தை யுண்டாக்குவோரிடத்திலும், ஒத்த - சமமான, உள்ளத்தினன்- மனமுடையவன் எ-று.

யாவரும் விரும்புதற்குரிய தென்றற்கு வெறுப்பில் சந்தனம் என்றார். தம் சாரியை. கறுத்தல்-கோவித்தல். "கன்றிக் கறுத்தெழுந்து காய்வாரோடு" என்றார் பெரியாரும். அழலுக்கு காய் என அடைகொடுத்தமையால் சந்தனத்திற்குக் குளிர் என்னும் அடைசேர்த் துரைத்துக்கொள்க. துன்புறுத்தல் ஒருசொன்னீரது, பகுதி துன்புறு. உம்மையிரண்டனுள் முன்னையது எதிரது தழீஇயதும் பின்னையது இறந்தது தழீஇயதுமாம். கண் இரண்டும் ஏழனுருபுகள். (கஉக)

நீடுங் கார்க்குழ லீளரி வாள்விழி
வாடுஞ் சிற்றிடை மாதர்கள் புல்லினு
நாடுந் தன்னுளந் தாயென நண்ணுவா
னோடும் பொன்னு மொருநிகர் நோக்குவான்.

(இ - ள்.) நீடும் - நீண்ட, கார்குழல் - கருங் கூந்தலையும், நீள் அரிவாள் விழி - நீண்ட அரிபடர்ந்த வாட்படை போன்ற கண்களையும், வாடும் சிறு இடை - தளர்கின்ற நுண்ணிடையையும் உடைய, மாதர்கள் - பெண்கள், புல்லினும் - (தாமேவந்து) தழுவிக்கொண்டாலும், நாடும் தன் உள்ளம் - (அவர்களை) விரும்புதற்குரிய தன் மனத்தில், தாய் என நண்ணுவான் - தாயென்று பாவித்திருப்பான், ஓடும் பொன்னும் - ஓட்டினையும் பொன்னினையும், ஒருநிகர் நோக்குவான் - ஒருசமமாகப் பார்ப்பான் எ-று.

இளமைப்பருவங் குறித்தற்கு நீடுங் கார்க்குழல் என்றார். சிற்றிடை வாடுதல் எற்றுக்கெனின் முலைப்பாரந் தாங்கற் காற்றாமையென்க. பெண்

கட்கு பிறபெயர்கள் பலவிருக்க, அவரது அழகின் மிகுதிதோன்ற மாதர் என்றார். மாதர் - அழகு. புல்லல் - தழுவல், பகுதி புல். "ஓடும் பொன்னு முறவும்பகையும்" என்றார் பெரியாரும். நோக்குவான் என்பதற்கு எண்ணுவானென் றுரைத்தலுமாம். (௩௨௰)

ஈச னார்தம் மிணைபடித் தாமரைப்
பூசை செய்தொழி லாப்பூண்டு செய்திடு
மாசை மேல்கொண் டறுமனத் தான்சிவ
கோச னென்னுங் குணப்பெருங் குன்றனான்.

(இ - ள்) ஈசனார் - சிவபெருமானாரது, இணை - இரண்டாகிய, அடித்தாமரை - பாததாமரைமலரின், பூசை - பூசையே, செய்தொழிலா பூண்டு - தனக்குச் செய்தற்குரிய தொழிலாகக்கொண்டு, செய்திடும் - செய்து வருகிற, ஆசைமேற்கொண்டு - அன்பு மிகுந்தவனாகி, அறு - (அவ்வன்பு ஒருக்காலும்) நீங்காத, மனத்தான்-மனத்தையுடையவன், சிவகோசன் என்னும் - சிவகோசன் என்று சொல்லப்படுகிற, பெரு - பெரிய, குணக்குன்று அன்னான் - குணமலைபோல்பவன் எ-று.

தம் - சாரியை. திருவடி தாமரைமலரினுஞ்சிறந்த அழகுடைத்தென்பது தோன்ற இணை அடித்தாமரை என்றார். "பாததாமரையினுண்டுகள்" என்றும், "தாதும் பொருதவடித்தாமரைசென்று சார்வதற்கோ" என்றும் பெரியாரும் பணித்தார். குணக்கோட்டமில்லாதவன் என்றற்கு, குணப்பெருங் குன்றனான் என்றார். (௩௨௧)

இரவி வந்தெழு முன்ன மெழுந்துபோய்
முரிதி ரைப்புனன் மூழ்கி விதிமுறை
விரைசெய் போதொடு மென்புன லுங்கொடு
புரிச டைப்பிராற் பூசிப்ப வெய்தினான்.

(இ - ள்.) இரவி - சூரியன், வந்து எழுமுன்னம் - வந்து உதித்தற்கு முன்பே, எழுந்துபோய் - எழுந்துசென்று, முரி - மடங்குகிற, திரை - அலைகளையுடைய, புனல் - நீரில், மூழ்கி - குளித்து, விதிமுறை - விதிமுறையாக, போதொடு - புஷ்பங்களோடு, மெல்புனலும்கொடு - மென்மையாகிய நீரையுங்கொண்டு, புரிசடை - முறுக்கப்பட்ட சடையினையுடைய, பிரான் - சிவபிரானை, பூசிப்ப - பூசைசெய்ய, எய்தினான் - வந்தான் எ-று.

இரவி - ரவியென்னும் வடசொற்றிரிபு. விதிமுறை யென்றது புட்ப விதிமுறையைக் குறித்தது. போது - பேரரும்பு. மென்புனல் என்றமையால் சிவபிரானார்க்கு நோயுண்டாமென் றஞ்சினார்போலு மென்று நீக்கப்படுகிறது. மென்புனல் - இலேசான நீர், இதனால் நோயுண்டாகாதென்பது பிரசித்தம். மறவர்கோனாகிய திண்ணனுக்கு இவ்வாறாகிய வைத்தியத்தேர்ச்சியுண்டாயிருத்தல் வியப்பினும் வியப்பாமென்க. (௩௨௨)

தலைமி சைத்திரு மஞ்சனந் தாங்குபு
மலர்பெய் கூடையு மேந்துபு வல்வினை
விலகு மண்ணறன் னாமம் விளம்புபு
புலவ னையன் றிருமுன்பு போயினான்.

(இ - ள்.) தலைமிசை - சிரத்தின்மேல், திருமஞ்சனம் தாங்குபு - திருமஞ்சனத்தைச் சுமந்துகொண்டு, மலர்பெய்கூடையும் ஏந்துபு - புட்பக்கூடையையும் ஏந்திக்கொண்டு, வல்வினை - வலிய வினைகள், விலகும்கண்டு விலகுதற்குரிய, அண்ணல் - சிவபெருமானது, நாமம் - திருநாமத்தை, விளம்புபு - உச்சரித்துக்கொண்டு, புலவன் - அறிவுருவனாகிய, ஐயன் - சிவபெருமானது, திருமுன்பு போயினான் - சந்நிதிக்கெதிரே சென்றான் எ-று.

தாங்குபு ஏந்துபு விளம்புபு என்பன செய்பு என்னும் வாய்பாட்டிறந்த கால வினையெச்சங்கள். மலர்பெய்கூடையை பூக்குடலையென வழங்குவர். அண்ணறன்னாமம் என்றது திருவைந்தெழுத்தை. ஐயன் என்பதற்கு அழகன் என்றுரைத்தலுமாம். புலவன் என்றது முச்சங்கங்களினுந் தலைமைப் புலவனாயிருந்தமைபற்றி யென்க. (கூடு)

தேன்கு லத்தொடு செவ்வழி வண்டுளர்
கான்க டுக்கையங் கண்ணியன் முன்பெலா
மூன்கி டத்தல்கண் டுள்ள நடுங்கியே
தான்கு தித்தய லோடினன் றாழ்விலான்.

(இ - ள்.) தேன்குலத்தொடு - தேன்வண்டின் கூட்டத்துடன், வண்டு - கருவண்டுகளும், செவ்வழி உளர் - செவ்வழிப்பண்ணைப் பாடுதற்கிடமாயிருக்கிறதும், கான் - மணமுள்ளதும் ஆகிய, கடுக்கையங்கண்ணியன் முன்பு எல்லாம் - சிவலிங்கப்பெருமானது சந்நிதிமுழுதும், ஊன்கிடத்தல் கண்டு - மாமிசம் கிடப்பதைப் பார்த்து, உள்ளம் நடுங்கி - மனங்கலங்கி, குதித்து - தாண்டி, அயல் பக்கத்தில், ஓடினன் - ஓடிப்போயினன், (யார் எனின்) தாழ்வு இல்லான் - குறைவற்றவனாகிய அந்தணன் எ-று.

கடுக்கையங்கண்ணியன் - கொன்றைமலர்மாலையை யணிந்தவன். அம் அழகென்றாயினும் சாரியையென்றாயினும் உரைத்துக்கொள்க. தான் அசை. உயர்குடியிற் பிறந்த அந்தணனாதலால் தாழ்விலான் என்றார். ()

தாவுகொச்சகக்கலிப்பா

மேவார்வந் தடிபணியும் விண்ணோர்கண் முடிமணிக
ளோவாது கிடந்தொளிரு முடையபிரான் றிருமுன்னர்
ாவாவிக் கொடும்பாவ மார்செய்தா ரிதுசெய்யத்
தேவாதி தேவனார் திருவுள்ள மிசைந்தாரோ.

(இ - ள்.) மேவார்வந்து - பகைவர்வந்து, அடிபணியும் - திருவடியை வணங்குதற் குரியதும், விண்ணோர்கள் - தேவர்களுடைய, முடிமணிகள் - கிரீடரத்நங்கள், ஓவாது - நீங்காமல், கிடந்து ஒளிரும் - உதிர்ந்து பிரகாசித்துக்கொண்டிருக்கிறதும் ஆகிய, உடையபிரான் திருமுன்னர் - சிவலிங்கப்பெருமான் சந்நிதிக்கெதிரில், இ - இந்த, கொடும்பாவம் - கொடிய பாவத்தொழிலை, ஆர்செய்தார் - எவர் செய்தாரோ, ஆவா - அந்தோ, இது செய்ய - இதனையொருவர் செய்ய, தேவாதி தேவனார் - சிவபெருமானனவர், திருவுள்ளம் இசைந்தாரோ - திருவுளமிசைந்திருந்தாரோ எ-று.

மேவார் - இணங்கியிராதார் (பகைவர்). ஓவல் - நீங்கல். ஒளிர்தல் - பிரகாசித்தல், பகுதி ஒளிர். இன்னதை உடையவனென்னாது வாளா உடையபிரான் என்றமையால், எல்லாப் பொருள்களையு முடையபிரான் என்றார். "உத்தமனத்த னுடையா னடியே நினைந்துருகி" "உடையானே நின்றனையுள்கி" என்றற்றொடக்கத் தான்றோர் திருவாக்குக்களாலும் இது இனிது விளங்கும். ஆவா - இரக்கக் குறிப்பிடைச்சொல். (கரு௯)

கொல்லாமை யறியாமைக் குணமாகக் கொண்டொழுகும்
பொல்லாத சிலைவேடப் புலைஞரே யிதுசெய்வா
ரொல்லாத செயலிதையன் புடையோர்கள் கண்டக்கா
னில்லாம லிறந்திடுவர் நிற்கின்றேன் கொடுவினையேன்.

(இ - ள்) கொல்லாமை - கொல்லாமையை, அறியாமை - அறியாதிருத்தலையே, குணமாகக்கொண்டு ஒழுகும் - குணமாகத் தம்மனத்தில் நினைத்து அத் தீநெறிக்கண்ணே ஒழுகாநின்ற, பொல்லாத - கொடிய, சிலை - விற்கையையுடைய, வேடப்புலைஞரே - வேடராகிய நீசரே, இது செய்வார் - இந்தக் கொடுஞ்செயலைச் செய்வார்கள், ஒல்லாதசெயல் - யாவர்க்குந்தகாத செய்கையாகிய, இதை - இதனை, அன்பு உடையோர்கள் - அன்பரானவர்கள், கண்டக்கால் - பார்த்தால், நில்லாமல் - சற்றுநேரமாயினும் இவ்வுலகிலிருக்காமல், இறந்திடுவர் - செத்திடுவார், கொடுவினையேன் - கொடிய வினையையுடையேனாகிய நான், நிற்கின்றேன் - இறவாதிருக்கிறேன் எ-று.

கொல்லாமை - கொலைசெய்யாமை. குணமாக - நற்குணமாக. சிலை - சிலா என்னும் வடசொற்றிரிபு. புலைஞரே என்னும் ஏகாரம் வேறொருவர் செய்யார் என்பதை விளக்கவந்தமையால் தேற்றம் பிரிநிலையுமாம். ()

என்றுபல பலகூறி யிணையிலா னழுதிரங்கிக்
கன்றுமிடற் றிறைபூசா காலமிகத் தாழ்க்கநா
னின்றதனாற் பயனென்னே யெனநினைந்து புலவெல்லாந்
துன்றுமல காலகலத் துடைத்தாப்பி நீர்தெளித்தான்.

(இ - ள்.) என்று - என்றிவ்வாறு, பல பலகூறி - பலப்பல சொற்களைச் சொல்லி, இணையிலான் - ஒப்பற்றவனாகிய வேதியன், அழுது இர

ங்கி - அழுது இரக்கமடைந்து, கன்றும் மிடறு - நீல கண்டத்தையுடைய, இறை - இறைவரது, பூசாகாலம் - ஆராதநகாலம், மிகதாழ்க்க - மிகுதியாய்த் தாமதிக்க, நான் நின்றதனால் - நான் நிற்பதனாலுளதாகிய, பயன் என் - பிரயோசநம்-யாது, என நினைந்து - என்று ஆலோசித்து, துன்றும்-நெருங்கின, அலகால் - துடைப்பத்தால், புலவு எல்லாம் - மாமிசமுழுதையும், அகலதுடைத்து - ஒழியும்படி துடைத்து, ஆப்பிநீர் தெளித்தான்-ஆப்பிநீரைப் புரோக்ஷித்தான் எ-று.

கன்றுதல் - கறுத்தல், பகுதி கன்று. மிடறு - கண்டம். இறை பண்பாகுபெயர். பூசாகாலம் - வடசொல். தாழ்த்தல் - தாமதித்தல், பகுதி தாழ். என்னேயென்னும் ஏகாரம் எதிர்மறை. புலவு - மாமிசம். அலகு-துடைப்பம். ஆப்பி - ஆவின்பீ. (பீ - மலம்) இதனை சாணியென்றும் சாணம் என்றும் வழங்குவர். தெளித்தல் - இறைத்தல் (சிந்துதல்). (கருஎ)

பின்னரடைந் தலைபுரட்டும் பெருந்தீர்த்தம் படிந்தாடிச்
சொன்னமறை மந்திரத்தா றூய்தன்மை கடிந்ததற்பின்
மன்னுமுருத் திரசமக நமகத்தால் வானவர்கோன்
சென்னிமிசைப் புனலாட்டித் திருமலர்கொண் டருச்சித்தான்.

(இ - ள்) பின்னர் - அதன்பிறகு, அடைந்து-சென்று, அலைபுரட்டும்-அலை வீசாநின்ற, பெருந்தீர்த்தம் - பெரிய புண்ணியதீர்த்தத்தில், படிந்து ஆடி - குளித்தாடி, சொன்ன - சொல்லப்பட்டிருக்கிற, மறை மந்திரத்தால் - வேதமந்திரத்தால், தூய்து அன்மை - அசுத்தத்தை, கடிந்ததற்பின்-ஒழித்தபிறகு, மன்னும் - நிலைபெற்ற, உருத்திரசமகநமகத்தால் - ருத்ர சமகநமகத்தால், வானவர்கோன் - தேவர்கோனாகிய சிவலிங்கப்பெருமானது, சென்னிமிசை - திருமுடியின்மீது, புனல் ஆட்டி - நீர்த்தமாட்டி, திருமலர்கொண்டு - அழகிய மலர்களினால், அருச்சித்தான் - அர்ச்சனை செய்தான் எ-று.

தூய்து அன்மையை திட்டு என்றும் வழங்குவர். கடிதல் - ஒழித்தல், பகுதி கடி. உருத்திரசமகநமகம் - ருத்ரசமகநமகம் என்னும் வடசொற்றிரிபு. இதன் விரிவினை வேதியர்வாய்க்கேட் டுணரவேண்டுதலால் யாமீண்டு விரித்திலம். கொண்டு மூன்றுவதன் சொல்லுருபு. (கருஅ)

முன்னர்நின்று கைதலைமேன் முகிழ்த்திருகண் ணீர்பாயத்
துன்னியமெய்ம் மயிர்பொடிப்பச் சுடுதழல்வாய்ப் பட்டவரக்
கென்னமன நனியுருகி யிளைதமிக நாத்தழும்ப
மன்னுமனை னெடுசாம மறைக்கீதம் பாடினான்.

(இ - ள்.) முன்னர் நின்று - சந்நிதியில் நின்று, தலைமேல் - சிரசின்மீது, கைமுகிழ்த்து - கைகுவித்து, இருகண் - இரண்டு கண்களிலும், நீர் அரும்ப - நீரொழுகவும், மெய் - உடம்பின்மேலுள்ள, துன்னிய அடர்ந்த, மயிர் பொடிப்ப - மயிர் சிலிர்க்கவும், சுடுதழல் வாய்பட்ட - எரிகிற தீயி

லகப்பட்ட, அரக்கு என்ன - அரக்குப்போல, மனம்நனி உருகி இளக - மனம் மிகுதியாயுருகி நெகிழவும், நாமிக தழும்ப-நாமிகுதியாகத் தழும்பேற வும், மன்னும் மன்னொடு-நிலைபெற்ற மனத்துடனிருந்து, சாமமறைக்கீதம் பாடினன்-சாமவேதகீதத்தைப் பாடினன் எ-று.

கை தலைமேல் முகிழ்த்தலே அஞ்ஜலியென்பர் வடநூலார். வாய் எழு னுருபு. நாத்தழும்ப - நாவிற்றழும்புண்டாக. (தழும்பு - வடு.) "எத்தே னுத்தழும் பேற" என்றார் மணிவாசகரும். மன்னுமனன் - அசையாத மனம் (சலநமில்லாத மனம்). மனம் இறைவற் பாடுங்காற் சலிக்குமாயின் நக்கீரர் பட்டபாடு படுவரென்பது இனிது விளங்கும். சாமமறைக்கீதம்- ஸாமகானம். (கடக)

பற்பலகால் வலஞ்செய்து பணிந்தரிது நீங்கிப்போய்ச்
சிற்பரனா ரடிமறவாச் சிந்தையன்றன் னிடத்தடைந்தான்
முற்பகல்வே டர்கணோற்ற முழுநோன்பா லவதரித்த
விற்படுகார் மழையன்ன விடலைசெயல் விளம்புவாம்.

(இ - ள்.) பற்பலகால் - அநேகந்தரம், வலம் செய்து - பிரதக்ஷிணம் செய்து, பணிந்து - வணங்கி, அரிது நீங்கிப் போய் - அரிதாக நீங்கிச் சென்று, சிற்பரன் அடி மறவா - சிற்பரனது திருவடியை மறவாத, சிந்தையன் - மனத்தை யுடையவனாகிய வேதியன், தன் இடத்து அடைந்தான்- தனது இடத்தைச் சேர்ந்தான். முற்பகல் - முன்னாளில், வேடர்கள் நோற்ற - வேடர்கள் நோற்ற, முழு நோன்பால் - சிறந்த நோன்பினால், அவதரித்த - திருவவதாரஞ் செய்தருளின, வில் படு - வில்லோடு கூடின, கார்மழை அன்ன - கரிய மேகம்போன்ற, விடலை - திண்ணனது, செயல்- செய்கையை, விளம்புவாம் - (இனி) சொல்லுவோம் எ-று.

அரிது நீங்கலாவது நீங்க மனமில்லாது நீங்குதல். நோன்பு-விரதம், புண்ணியம் எனினும் தவம் எனினும் அமையும். விடலை - காளைப்பருவ முடையவன். "விடலையின் போர்கா லொத்தன விலையேன்பெற்ற மாணி ழைகான் மலரே" என்றார் மணிவாசகரும் (கசய)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

எழுவினங் கவற்றுந் தோளா னேறுகாற் பன்றி செல்லும்
வழியறிந் தொளிநின் றெய்து மான்றுயி லிடனறிந்து
குழைநெடுஞ் சிலையிற் பூட்டு கோலொடு முருவ வெய்து
முழுவலன் புடையான் முன்போ னூறுகவை யமுதமைந்தான்.

(இ - ள்.) எழு இனம் - எழுவின் இனத்தை, கவற்று - கவலைப்படுத்து கிற, தோளான் - புயங்களையுடைய திண்ணன், ஏறுகால்பன்றி - உயர்ந்த கால்களையுடையபன்றி, செல்லும் - செல்லுகிற, வழி அறிந்து - வழியைத் தெரிந்துகொண்டு, ஒளி நின்று எய்தும் - மறைந்துநின்று வெளிப்படுகிற, மான் - மான்கள், துயில் இடன் அறிந்து - தூங்குமிடத்தைத் தெரிந்து

கொண்டு, (அவற்றை) குழை-வளைத்த, நெடுஞ்சிலையில் - நீண்ட வில்லில், பூட்டு - தொடுத்த, கோல் - அம்பை, உடல் உருவ எய்தும் - உடம்புருவும் படியெய்தும், உழுவல் அன்பு உடையான் - உழுவன்புடையவனாகிய திண்ணன், முன்போல் - முன்போலவே, உறுசுவை - மிக்கசுவையுள்ள, அமுது அமைத்தான் - உணவினை அமைத்தான் எ-று.

கவற்று என்பதற்குப் பகுதி கவல். எழு - எஃகம். சிலை பரிலா என்னும் வடசொற்றிரிபு. உழுவலன்பு - எழுமையுந்தொடர்ந்த அன்பு. "உழுவலன்பிற் பழவடியார்" என்றார் பிறரும். (கசக)

பின்புகோற் றேனி ரம்பப் பெய்துகொண் டிறைப சிக்கு
மென்பதாற் றான்றொ டுத்த வேயென விரைவி னோடி
முன்புபோற் பூசை முற்றி முனிவிலின் னமுத ருத்தி
யன்பினாற் கடலி னன்னா னருகுநீங் காது நின்றான்.

(இ - ள்.) பின்பு - பிறகு, கோற்றேன் - கொம்புத்தேனை, நிரம்ப பெய்துகொண்டு - நிறைய வார்த்துக்கொண்டு, இறை - இறைவன், பசிக்கும் என்பதால்-பசித்திருக்குமென்னுங் கருத்தால், தான்தொடுத்த - தான் தொடுத்துவிட்ட, ஏ என - அம்புபோல, விரைவின் ஓடி - விரைவாக வோடிப்போய், முன்புபோல் - முன்போலவே, பூசைமுற்றி - பூசையை முடித்து, முனிவு இல் - வெறுப்பில்லாத, இன் அமுது அருத்தி - இனிய அமுதத்தை உண்பித்து, அன்பினால் கடலின் அன்னான் - கடல்போலப் பேரன்புடையவனாகிய திண்ணன், அருகு - இறைவனது சமீபத்தில், நீங்காது நின்றான் - இடையறாது நின்றிருந்தான் எ-று.

கோல் தேன் - உயர்ந்த மரக்கிளையில் கட்டப்பட்ட தேன். "மாற்றேனெனவந்த காலனை யோலமிட வடர்த்த கோற்றேன்" என்றார் மணிவாசகரும். இறை - ஆகுபெயர். முற்றல் - முடித்தல். (கசஉ)

அந்தவே ளையில்வில் லோரா லரும்பெறற் புதல்வன் செய்தி
தந்தையுந் தாயுங் கேட்டுத் தணிப்பருங் கலுழ்ச்சி கொண்டு
வந்துபற் பலதி றத்தால் வசிப்பவும் வசமா காதைச் [தே.
சிந்தைநொந் தினியென் னென்று சென்றனர் மகனிற் றீர்ந்

(இ - ள்.) அந்தவேளையில் - அந்தக் காலத்தில், வில்லோரால் - வில் வேடரால், அரும்பெறல் - பெறுதற்கரிய, புதல்வன்செய்தி - மகன்செய்தியை, தந்தையும் தாயும்கேட்டு - தந்தையும் தாயும் கேள்விப்பட்டு, தணிப்பு அரு - தணித்தற்கரிதாகிய, கலுழ்ச்சிகொண்டு - அழுகையைக்கொண்டு, வந்து - வந்து, பற்பல திறத்தால் - அநேக விதத்தால், வசிப்பவும் - வசிக்கவும், வசம் ஆகான் ஆ - வசம் ஆகாதவனாயிருக்கக் கண்டு, சிந்தை நொந்து-மனம் வருந்தி, இனி என் என்று - இனியென்செய்வோமென்று, மகனின் தீர்ந்து - மகனைவிட்டு நீங்கி, சென்றனர் - போயினர் எ-று.

வேலை - வேளை. வில்லருக்கையராதலால் வேடரை வில்லோர் என்றார். கலுழ்ச்சி - அழுகை. தீர்தல் - விட்டொழிதல். (கசுக)

அன்னவ ரடைந்த வாறு மகன்றது மறியா தண்ண
றன்னொடு பிணித்த நெஞ்சிற் சவரர்கோன் பகற்போ தெல்லாங்
கொன்னவில் விலங்கி னீட்டங் கொன்றிறைக் கமுத நருத்தித்
துன்னிருட் காலந் துஞ்சான் றொண்டுசெய் தொழுகா நிற்ப.

(இ-ள்.) அன்னவர் - அந்தத் தந்தைதாயர், அடைந்தவாறும் - வந்த செய்தியும், அகன்றதும் - போனசெய்தியும், சவரர்கோன் - வேடர் குலாதிபனாகிய திண்ணனன், அறியாது - அறியாமல், - அண்ணல் தன்னொடு பிணித்த நெஞ்சின் - சிவலிங்கப்பெருமானிடத்துப் பிணிக்கப்பட்ட மனமுடையவனாய், பகற்போது எல்லாம் - பகற்காலமுழுதும், கொன்நவில் - அச்சத்தை விளைக்கிற, விலங்கின் ஈட்டம் - மிருகசமூகத்தை, கொன்று - வதைத்து, இறைக்கு - சிவலிங்கப்பெருமானுக்கு, அமுது அருத்தி - அமுதூட்டி, துன் - மிக்க, இருட்காலம் - இராக்காலமுழுதும், துஞ்சான் - தூங்காதவனாய், தொண்டுசெய்து ஒழுகாநிற்ப - பணிவிடைசெய்தொழுகாநிற்க எ-று.

சிவலிங்கப்பெருமானை அண்ணல் என்றார். அவனிற்சிறந்தோரொருவனின்மையின். விலங்கு-மிருகம். துஞ்சான் முற்றெச்சம். (கசுச)

வழுவறு முனியும் வந்து வைகலுந் திருமு னான்கண்
டழுதழு திரங்கி யேங்கி யகற்றுபு புனிதஞ் செய்து
மழவிடை யவற்பூ சித்து மனந்துயர்க் கடலி னாழ்த்தி
யொழுகிட மற்ற வன்பா லுறுதுய ரொழித்தல் வேண்டி.

(இ - ள்) வழுவறு - குற்றமற்ற, முனியும் - வேதியனும், வந்து-வந்து, வைகலும் - நாடோறும், திருமுன் - சந்நிதிக்கெதிரே, ஊன்கண்டு - மாமிசம் கிடத்தலைக்கண்டு, அழுது - அழுது, இரங்கி ஏங்கி - இரக்கமும் ஏக்கமும் அடைந்து, அகற்றுபு - அந்தத்தசையையொதுக்கி, புனிதம்செய்து - சுத்தப்படுத்தி, மழவிடையவன் பூசித்து-சிவபெருமானைப் பூசித்து, மனம் - தன் மனத்தை, துயர்கடலில் ஆழ்த்தி-துன்பக்கடலில் அழுத்தி, ஒழுகிட - ஒழுகாநிற்க, அவன்பால் உறுதுயர் - அவனிடத்துள்ள மிக்க துன்பத்தை, ஒழித்தல்வேண்டி - ஒழித்தலைத் திருவுளம்பற்றி எ-று.

அகற்றுபு செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். மழவிடையவன் - இளவேற்றையுடையவன். மற்று - அசை. (கசுரு)

கங்குலேந் தாவ தன்கண் கனவிடைத் திருக்கா ளத்திச்
சங்கரன் வந்து சொல்லுந் தவத்துறை பயின்ற மேலோ
யிங்குநீ நம்முன் கண்ட திறைச்சியென் றினையல் வாழி
யங்கது நாம ருந்து மரும்பெற லமுதங் கண்டாய்.

(இ-ள்) கங்குல்-இரவில், ஐந்தாவதன்கண் - ஐந்துநாழிகைப்பொழுதில், கனவிடை - கனவில், திருக்காளத்தி சங்கரன் - திருக்காளத்திச் சிவபிரான், வந்து-எழுந்தருளி, சொல்லும்-சொல்லுகிறான், (எவ்வாறெனில்) தவத்துறை-தபோமார்க்கத்தில், பயின்ற-பழகின, மேலோய்-மேலோனே, இங்கு - இவ்விடத்தில், நீ நம்முன் கண்டது - நீ யெம்மெதிரேயிருக்கக் கண்டது, இறைச்சியென்று - தசையென்றெண்ணி, இனையல் - வருந்தாதை, அது - அது, நாம் அருந்தும் - யாம் புசிக்கிற, பெறல் அரு-பெறுதற்கரிய, அமுதம் - அமிர்தமாம் எ-று.

இனைதல்-வருந்தல், பகுதி இனை. வாழிகண்டாய் என்பன அசைகள்.

அதுநமக் கிடுவோன் செய்தி யறைகுது மம்ம தெய்வ
நதிபல படிந்து நோற்று நவையிறா னங்கள் செய்தும்
விதிபுறங் கண்டு பெற்ற மெல்லெழின் மகன்மேற் றாய்க்குப்
புதியவன் பெனைத்த னைத்தப் புண்ணியற் கென்மே லன்பு

(இ-ள்) அது - அதை, நமக்கு - எமக்கு, இடுவோன் - படைப்பவனது, செய்தி - சங்கதியை, அறைகுதும் - சொல்வோம், தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, பலநதி - பல நதிகளில், படிந்தும் - மூழ்கியும், நோற்றும் - விரதங்களை யநுஷ்டித்தும், நவை இல் - குற்றமற்ற, தானங்கள் செய்தும் - தானங்கள் பண்ணியும், விதி - ஊழையும், புறங்கண்டு - புறங்கண்டு, பெற்ற - ஈன்ற, மெல் எழில் - மென்மையாகிய அழகுள்ள, மகன் மேல்-புதல்வன்மீது, தாய்க்கு - ஈன்றவளுக்கு, புதிய அன்பு - புதிய அன்பானது, எனைத்து - எவ்வளவினதோ, அ புண்ணியற்கு-அந்தப் புண்ணியவானுக்கு, என்மேல் அன்பு - என்மீது அன்பானது, அனைத்து - அவ்வளவினதாம் எ-று.

புறங்கண்டு என்றது தோல்வியடையச்செய்து என்றபடி. அம்ம அசை.

மற்றவன் செருப்புக் காலான் மணங்கமழ் நமது சென்னி
யுற்றபூ மாற்றுங் காலத் துடம்பெலா மயிர்பொ டிப்பச்
சிற்றிள மகன்பூங் கையாற் றிருமுலை வருடப் பட்ட
பெற்றதா யென்ன நெஞ்சம் பெரிதுநெ குதுமா லன்ப.

(இ-ள்) அன்ப - அன்பனே, அவன் - அவன், செருப்புக்காலால்-செருப்புக் காலினால், மணம் கமழ் - மணம் வீசுகிற, நமது சென்னி உற்ற- எமது சிரத்தில் உற்ற, பூ-மலர்களை, மாற்றும் காலத்து-களையுங்காலத்தில், உடம்பு எல்லாம் - சரீரமுழுதிலுமுள்ள, மயிர்பொடிப்ப - மயிர் சிலிர்க்க, சிறு இளமகன் - சிறுபிள்ளைகள், கையால் - கையைக்கொண்டு, திருமுலை-அழகிய முலைகளை, வருடப்பட்ட - தடவப்பட்ட, பெற்றதாய் என்ன-ஈன்ற தாய்போல, நெஞ்சம் - எமதுமனம், பெரிது-மிகுதியாய், உருகுதும்-கரையும் எ-று.

மற்று ஆல் என்பன அசைகள். மாற்றல் - களைதல். உருகுறும் நசொன் னீரது. (கசஅ)

ஐந்தடர் முனிவ நம்மே லவனுமிழ் கின்ற தியாற்றுட்
டந்தநீ ராயி னன்றே தாழ்சடை முனிவ ராட்டு
நந்துமந் திரநன் னீரி னனியினி தெனலா முண்ணின்
றுந்திமே லெழுந்து பொங்கி யொழுகிய பேரன் பாமால்.

(இ - ள்.) ஐந்து - ஐம்பொறிகளை, அடர் - வென்ற, முனிவ - முனிவனே, நம்மேல் - எம்மீது, அவன் உமிழ்கின்றது - அவன் உமிழா நின்றது, யாற்றுள் - நதியினின்றும், தந்த - கொணர்ந்த, நீர் ஆயின்-நீரானால், நன்றே - நல்லதோ, தாழ்சடை - நீண்ட சடையையுடைய, முனிவர் ஆட்டும் - முனிவர் கொணர்ந்து அபிஷேகம் செய்கிற, நந்தும் - மிகுந்த, மந்திர நன்னீரின் - அபிமந்த்ரித் தாட்டுகிற நல்லநீரினும், நனி - மிகவும், இனிது எனலாம் - இனிதாமென்று சொல்லலாம், உள் நின்று - உள்ளேயிருந்து, உந்திமேலெழுந்து - தள்ளப்பட்டு மேலெழுந்து, பொங்கி - பொங்கி, ஒழுகிய - ஒழுகின, பேரன்பு ஆம் - பேரன்பேயாகும் எ - று.

ஆல் - அசை. உந்தி - கொப்பூழ் எனினுமாம். (கசகூ)

வள்ளுகி ருழுவை நோன்றாண் மாதவக் கிழவன் முன்னோ
ரொள்ளிய வாழ்த்து நாம மொராயிர முரைத்துச் சாத்துங்
கள்ளவிழ் மலரி னன்னோன் கழுத்துற வளைந்து சூட்டு
மெள்ளுறு மயிர்கள் சூழ்ந்த வீர்மல ரெமக்கு நல்ல.

(இ - ள்.) வள் - கூர்மையாகிய, உகிர் - நகங்களையுடைய, உழுவை - புலியின், நோன்தாள் - பெரிய கால்களையுடைய, மாதவக் கிழவன் - பெரிய தபோதநன், முன்னோர் - முற்காலத்தில், ஒள்ளிய - ஒட்பமாகிய, வாழ்த்து நாமம் - வாழ்த்துப் பேர்கள், ஒரு ஆயிரம் உரைத்து - ஒரு ஆயிரம் சொல்லி, சாத்தும் - அருச்சிக்கிற, கள் அவிழ் - தேனோடு மலர்கிற, மலரின் - மலர்களினும், அன்னோன் - அவன், கழுத்து உற வளைந்து - கழுத்தில் மிகுதியாய்ச் சுற்றிச் சாத்துகிற, எள் உறும் - இகழ்தற்குரிய, மயிர்கள் சூழ்ந்த - மயிர்கள் நெருங்கின, ஈர் மலர் - குளிர்ந்த மலர்கள், எமக்கு நல்ல - எமக்கு இன்பத்தைத் தருவனவாம் எ - று.

வள்ளுகிருழுவை நோன்றாள் மாதவக் கிழவன் என்றது புலிக்கால் முனிவனை, இவனை வ்யாக்ரபாதன் என்பர் வடநூலார். வாழ்த்துநாமமொராயிரத்தை ஸஹஸ்ரநாமம் என்பர். (கரு0)

இந்திரன் முதலோர் செம்பொ னெரிமணிக் கலத்தி லேந்து
மந்தர வரையி னுழி மதித்தவா ரமுத மெல்லா
முந்துதன் வாய்ப்பெய் தாய்ந்த முழுச்சுவைச் சூட்டி றைச்சி
வெந்திற றந்த பின்னர் வேம்பொடு கடுவு மான.

(இ - ள்.) இந்திரன் முதலோர் - இந்திரன் முதலானோர், செம்பொன் - செம்பொன்னாற் செய்யப்பட்ட, எரிமணி கலத்தில் ஏந்தும் - விளங்குகிற ரத்ந பாத்திரத்திலேந்தி வருகிற, மந்தரவரையின் - மந்தர மலையினால், ஆழி - பாற்கடலை, மதித்த - கடைந்தெடுத்த, ஆர் - அருமையான, அமுதம் எல்லாம் - அமிர்த முழுதும், வெந்திறல் - திண்ணன், முந்து - முன்னே, தன்வாய் பெய்து - தன் வாயிலிட்டு, ஆய்ந்த - ஆராய்ந்தெடுத்த, முழுச்சுவை - மிக்க சுவையுள்ள, சூட்டு இறைச்சி - வெப்பமான தசையை, தந்த பின்னர் - கொடுத்த பிறகு, வேம்பொடு - வேம்புடனே, கடுவும் ஆன - நஞ்சுமாயின எ - று.

ஆழி - கடல், அது இங்குப் பாற்கடலைக் குறித்தது. சூட்டிறைச்சி - தூலைக்கறியெனினுமாம். வெந்திறல் - அன்மொழித்தொகையாய் திண்ணனை யுணர்த்திற்று. (க௬க)

ஏசுத லிலாவ றத்தோ யெமக்கவ னெம்மு னின்று
மாசில்பே ரன்பி னோடு வாய்திறந் துரைக்குஞ் சொற்போ
லாசக லறிவின் மிக்க வைம்புலப் பகைவர் பாடுங்
காசறு சாம வேத கானமு மினிய தன்றே.

(இ - ள்.) ஏசுதல் இல்லா - நிந்தை யில்லாத, அறத்தோய் - தர்ம மார்க்கத்தை யுடையவனே, எமக்கு - எமக்கு, அவன் - அந்தத் திண்ணன், எம்முன் நின்று - எமக்கெதிரே நின்று, மாசு இல் - களங்கமில்லாத, பேரன்பினொடு - பேரன்புடனே, வாய் திறந்து உரைக்கும் - வாய் திறந்து சொல்லுகிற, சொல்போல் - சொல்லைப்போல, ஆசு அக - குற்ற மற, அறிவில் மிக்க - அறிவிற் சிறந்த, ஐம்புலப் பகைவர் - ஞானிகள், பாடும் - பாடுகிற, காசு அறு - குற்றமற்ற, சாமவேத கானமும் - சாம வேத கீதமும், இனியது அன்று - இனிமையைத் தருவதன்று எ - று.

ஐம்புலப் பகைவர் - ஐம்புலன்களை வென்றவர். ஐம்புலன்களாவன - சப்த ஸ்பர்ஸ ரூப ரச கந்தங்கள். (க௬உ)

அவன்மன நமக்குக் கோயி லவனுரை பலவு மோத்தா
மவன்முய றொழில்க ளெல்லா மறத்தொழி லையமில்லை
யவனியல் காட்டு கின்றோ மன்பநீ நாளை யேவந்
தவனறியாத வண்ண மயலொளித் திருத்தி யென்றான்.

(இ - ள்.) அவன் மனம் - அவனது மனமே, நமக்கு கோயில் - எமக்குக் கோயிலாம், அவன் உரை பலவும் - அவனது சொற்கள் பலவும், ஓத்து ஆம் - வேதமாம், அவன் முயல் தொழில்கள் எல்லாம் - அவன் முயன்று செய்கிற தொழில்கள் யாவும், அறத்தொழில் - அறச் செயல்களே, ஐயம் இல்லை - சந்தேகமில்லை, அவன் இயல் - அவனது இயற்

கையை, காட்டுகின்றும் - யாம் உமக்குக் காட்டுவோம், அன்ப - அன்பனே, நீ நாளை வந்து - நீ நாளைக்கு வந்து, அவன் அறியாத வண்ணம் - அவனறியாதபடி, அயல் - பக்கத்தில், ஒளித்து இருத்தி - மறைந்திருப்பாயாக, என்றான் - என்று சொன்னான் எ - று.

கோயில்-ஆலயம். உரை-சொல். இயல்-குணம் எனினுமாம். அயல்-அருகு என்றலுமொன்று. (கஙஉ)

இன்னணம் பலவுங் கூறி யினித்துய ரொழிதி யென்று
பொன்னிறம் பழுத்த கொன்றைப் புதுநறுங் கண்ணி வேய்ந்த
சென்னியந் தணன்ம றைந்தான் சிவகோச முனியெ ழுந்து
முன்னவன் கருணை யாற்சொன் மொழிநினைந் ததிச யித்தே.

(இ - ள்.) இன்னணம் - இவ்வண்ணமாக, பலவும் கூறி - பலவற்றையுஞ் சொல்லி, இனி - இனி, துயர் ஒழிதியென்று - துன்பத்தை நீக்குவாயென்று, பொன் நலம் பழுத்த - பொன்னினழகு மிகுந்த, கொன்றை - கொன்றை மலரால் தொடுக்கப்பட்ட, புதுமலர்க் கண்ணிவேய்ந்த - புதிய மலர்மாலையைத் தரித்த, சென்னி - சிரசையுடைய, அந்தணன் - சிவபிரான், மறைந்தான் - மறைந்து போயினன், சிவகோசமுனி - சிவகோச முனிவன், எழுந்து - எழுந்து, முன்னவன் - சிவபிரான், கருணையால் சொல் - கருணையாற் சொன்ன, மொழி - சொற்களை, நினைந்து - நினைத்து, அதிசயித்து - வியந்து எ - று.

அந்தணன் முன்னவன் என்பன சிவபெருமானைக் குறித்தன. (கஙச)

ஞாயிறு குணக்குன்ற நண்ணுதன் முன்னமே போய்ப்
பாயலை முகரி நன்னீர்ப் படிந்துநித் தியந ரப்பி
யாயிரம் பெயரி னான்ற னருச்சனை முடித்து மற்றத்
தூயநல் லிலிங்கத் தின்பின் றோன்றிடா தொளித்தி ருந்தான்.

(இ - ள.) ஞாயிறு - சூரியன், குணக்குன்றம் - கீட்டிசைமலையை, நண்ணுதல் முன்னமே - அடைவதற்கு முன்பே, போய் - சென்று, பாய் - பாய்கிற, அலை-அலைகளையுடைய, முகரி - முகரியாற்றின், நல்நீர் - சிறந்த தீர்த்தத்தில், படிந்து - முழுகி, நித்தியம் நிரப்பி - நித்திய கர்மங்களை முடித்து, ஆயிரம் பெயரினான் - ஆயிரந் திருநாமங்களை யுடையவனாகிய சிவபெருமானது, அருச்சனை முடித்து - அர்ச்சனையைப் பூர்த்தி செய்து, அ-அந்த, தூய-பரிசுத்தமான, நல் - சிறந்த, இலிங்கத்தின் பின்-சிவலிங்கப் பெருமானுக்குப் பிற்பக்கத்தில், தோன்றிடாது - ஒருவருக்கும் தெரியாத வண்ணம், ஒளித்திருந்தான் - மறைந்திருந்தான் எ - று.

குணக்குன்றம் - உதயகிரி. குணக்குன்றம் நண்ணுதல் முன்னம் என்றது பொழுது விடியுமுன்னே யென்றபடி. (கஙரு)

முனிவரு முன்னம் வேட்ட முன்னுபு சென்ற வென்றிக்
குனிசிலை மறவர்த் தாங்குங் கோமகன் வேட்ட மாடிப்
புனிதனுக் கமுதங் கொண்டு பொருக்கென மீண்டா னங்கட்
பனிதரு துன்பங் காட்டும் பற்பல நிமித்தங் கண்டான்.

(இ - ள்.) முனி - சிவகோசமுனி, வருமுன்னம் - வருதற்கு முன்பே, வேட்டம் முன்னுபு - வேட்டையாட நினைத்து, சென்ற-போன, வென்றி- வெற்றியமைந்த, குனிசிலை - வளைந்த வில்லையுடைய, மறவர்த்தாங்கும்- வேடரைக் காக்கின்ற, கோமகன் - ராஜகுமாரனாகிய திண்ணன், வேட்டம் ஆடி - வேட்டையாடி, புனிதனுக்கு - பரிசுத்தனாகிய சிவபெருமானுக்கு, அமுதம் கொண்டு - அமுதமேந்தி, பொருக்கென - விரைவாக, மீண்டான் - திரும்பினான், (திரும்பினவன்) அங்கண்-அவ்விடத்தில், பனி தரு - நடுங்குதற்குரிய, துன்பம்-துன்பங்களை, காட்டும் - காட்டுகிற, பற்பல நிமித்தம்-மிகப் பலவாகிய சகுனங்களை, கண்டான்-பார்த்தான் எ-று.

முன்னுபு - செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். பனிதரல் - நடுங்கல், பகுதி பனிதா. துன்பங்காட்டும் நிமித்தம் - துர் நிமித்தம். (கஙசு)

வழியிடை நிமித்த மென்ன மற்றியான் கண்ட வெல்லாம்
பழிபடு நிமித்த மென்னை பாவஞ்சோர் குருதி காட்டுங்
கழிசுவை யமுத முத்தங் கண்மணி யுயிரெ னக்கா [றேன்.
மழகனெம் பெருமா னென்னுற் றனன்கொலோ வறித றேற்

(இ - ள்.) வழியிடை - மார்க்கத்தில், நிமித்தம் எல்லாம் - குறிகள் யாவும், என்ன - என்னவாம், யான் கண்ட எல்லாம் - நான் கண்டன வெல்லாம், பழிபடும் நிமித்தம் - பழியுண்டாதற்குரிய நிமித்தங்களாம், என்ன பாவம் - என்ன பாவம், சோர்குருதி காட்டும் - ஒழுகுகிற உதிரத்தைக் காட்டுகிறது, கழிசுவை அமுதம் - மிக்க சுவையுள்ள அமுதம், கண் மணி - கண்மணி, முத்தம் காட்டும் - முத்தத்தைக் காட்டுகிறது, எனக்கு உயிர் ஆம் - எனக்கு உயிர் போல்பவனாகிய, அழகன் எம்பெருமான் - அழகனுமாகிய எம்பெருமான், என் உற்றனன் கொலோ - என்னுற்றனனோ, அறிதல் தேற்றேன் - அறியேன் எ - று.

கண்மணி முத்தங்காட்டும் என்றது கண்களில் நீரொழுகா நின்ற தென்றபடி. அறிதறேற்றேன் - ஒருசொல். (கஙஎ)

ஏனமனந் தலங்கி பொய்யென் றெழுந்துவலிக் காளை செல்லச்
சினவிடை வன்று யர்த்த செக்கர்நீர்ச் சடையுநு தற்கட்
புனிதன்மற் றவனன் பெல்லாம் புண்ணிய முனிக்குக் காட்ட
நினைபுதன் வலக்கண் செம்புண் ணீருற நின்றாங் கண்டான்.

(இ - ள்.) என - என்று, மனம் கலங்கி - மனநடுங்கி, ஒய்யென்று - விரைவாக, எறுழ்வலி - மிக்க வலியையுடைய, காளை - திண்ணன், செல்ல - போக, சினம் - கோவமுள்ள, விடை-இடபக்கொடியை, வலன் உயர்த்த - வலப்பக்கத்திலுயர்த்த, செக்கர் - செந்நிறமும், ஈர் - குளிர்ச்சியுமுள்ள, சடை - சடையையும், நுதல்கண் - நெற்றிக் கண்ணையும் உடைய, புனிதன் - சிவபிரான், அவன் - அந்தத் திண்ணனது, அன்பு எல்லாம் - அன்பு முழுதும், புண்ணியம் - புண்ணியத்தையுடைய, முனிக்கு - சிவகோச முனிக்கு, காட்ட நினைபு - காட்ட நினைத்து, தன் வலக்கண் - தன் வலக்கண்ணில், செம் - செவந்த, புண்ணீர் - உதிரமானது, உக - மிகுதியாய் சிந்த, நின்றான் - நின்றனன், கண்டான் - (அப்படி நிற்றலை திண்ணன்) கண்டான் எ - று.

புனிதன் - பரிசுத்தன். உக நின்றான் என்றும் பாடம். புண்ணீர் - ஒருசொன்னீரது. (கஙஅ)

காண்டலும் வாய்நீர் சிந்தக் கையிலூன் சிதற லம்புங்
கோண்டரு சிலையும் வீழக் குஞ்சிப்பூ விறைய வாட்டு
நாண்டொட ரற்ற காலை நாடகப் பாவை போலத்
தூண்டரு தடந்தோட் காளை துண்ணென நிலத்து வீழ்ந்தான்.

(இ - ள்.) காண்டலும் - கண்டவுடன், வாய்நீர் - வாய்நீர் சிந்தவும், கையில் ஊன் சிதற - கையிலுள்ள இறைச்சி சிதறவும், அம்பும் - அம்புகளும், கோண்தரு சிலையும் - வளைந்த வில்லும், வீழ - விழவும், குஞ்சி-தன் குடுமியிற் செருகின, பூ - மலர்கள், இறைய - இறையவும், ஆட்டும் - ஆட்டுகிற, நாண் தொடர் அற்றகாலை - கயிற்றின் தொடர்பு அற்ற காலத்தில், நாடகப்பாவை போல - நாடகப்பாவையை நிகர்க்க, தூண் தரு - தூணையொத்த, தடம்தோள் - பெரிய புயங்களையுடைய, காளை - திண்ணனாகிய வன், துண்ணென - விரைவாக, நிலத்து வீழ்ந்தான் - பூமியின்மேல் விழுந்தான். எ-று.

குஞ்சி - ஆண்மயிர், (குடுமி). நாடகப்பாவை - நாடகப்பிரதிமை. ()

நெடும்பொழு துள்ளு யிர்ப்பு நின்றுயி ருலந்தா ரென்னக்
கிடந்துபின் கையா றெய்தக் கெடுநினை வடைந்தெ ழுந்தே
யொடுங்கலி றுயரா னெஞ்ச முன்னைப்பட் டுருமே றுண்ட
மடங்கலே றென்ன நம்பி வாய்விட்டான் கண்ணீர் வார.

(இ - ள்.) நெடும்பொழுது - நெடுநேரம், உள் உயிர்ப்பு நின்று - உள் மூச்சு நின்று, உயிர் உலந்தார் என்ன - உயிர் நீங்கினவர்போல, கிடந்து - வீழ்ந்திருந்து, பின் - பிறகு, கையாறு எய்த - துன்பமுண்டாதலால், கெடு நினைவு அடைந்து - நினைவிழந்தவனாகி, எழுந்து - எழுந்து, ஒடுங்கல் இல் - குறையாத, துயரால் - துன்பத்தினால், நெஞ்சம் - மனமானது,

உண்ணப்பட்டு - விழுங்கப்பட்டு, உரும் ஏறு உண்ட - இடியேறுண்ட, மடங்கல் ஏறு என்ன - ஆண்சிங்கம் போல, நம்பி - திண்ணனாவன் கண்ணீர்வார-கண்ணீரொழுக, வாய்விட்டான்-வாய்திறந்தழுதான் எ-று.

உயிருவந்தார் - இறந்தவர். ஒடுங்கலில் துயர் - பெருந்துன்பம். உரு மேறு - ஆணிடி. வார்தல் - ஒழுகுதல். (கசO)

முழுவலித் தடக்கை யாற்றன் முகமெலாங் குருதி பொங்கி
யொழுகிய வடித்துக் கொண்டா னுறுகண்ணீர் வெள்ளம் போர்த்த
வெழில்கனி மார்பு வீங்க வெற்றினன் றலைபி ளக்கக்
கழிதுயர்க் கடலி னாழ்ந்தான் கல்லொடு மோதி னானால்.

(இ - ள்.) முழுவலி - மிக்க வலிமையுடைய, தடக்கையால் - தனது பெரிய கைகளால், தன் - தனது, முகமெல்லாம் - முகமுழுதும், குருதி பொங்கி - உதிரம் பொங்கி, ஒழுகிய - ஒழுகாநிற்க, அடித்துக்கொண்டான் அறைந்துக்கொண்டான், உறு - மிக்க, கண்ணீர் வெள்ளம் போர்த்த கண்ணீர் பிரவாகம்போல் மூடிக்கொண்டன, எழில்கனி - அழகு மிகுந்த மார்பு வீங்க - நெஞ்சானது புடைக்கும்படி, எற்றினன் - அறைந்து கொண்டான், தலை பிளக்க - தலை பிளக்கும்படி, கழி - மிகுந்த, துயர் கடலில் - துக்கசாகரத்தில், ஆழ்ந்தான் - அழுந்தினன், கல்லொடு மோதி னான் - கல்லின்கண் மோதிக்கொண்டான் எ-று.

முழுவலி என்பதில் முழுமை மிகுதிப்பொருளில் வந்தது. ஒழுகிய செய்யியவென்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். (கசக

ஓடுவன் மீள்வன் வீழ்வ னுருள்குவ னெழுந்து விம்ம
னீடுவ னந்தோ வென்பன் னெட்டுயிர்ப் பெறிவ னெஞ்சம்
வாடுவன் பொங்கிப் பொங்கி வாய்விட்டு முகத்தைக் கையா
லூடுவ னழுவன் கைகண் மோதுவன் கற்க ளோடே.

(இ - ள்.) ஓடுவன் - ஓடுவான், மீள்வன் - திரும்புவான், வீழ்வன் விழுவான், உருள்குவன் - உருளுவான், எழுந்து விம்ம நீடுவன் - எழுந்து மிகுதியாக நிமிர்வான், அந்தோ என்பன் - ஐயோ என்பான், நெட் உயிர்ப்பு எறிவன் - பெருமூச்சு விடுவான், நெஞ்சம் வாடுவன் - மனம் வா வான், பொங்கிப் பொங்கி - மேலும் மேலும், வாய் விட்டு - வாய் திறந்து முகத்தை கையால் மூடுவன் - முகத்தை கைகளால் மூடுவான், அழுவன் அழுவான், கற்களோடே - கற்களின்மேல், கைகள் - கைகளை, மோதுவ அறைந்து கொள்வான் எ - று.

நெட்டு உயிர்ப்பு - நெடு உயிர்ப்பு எனப் பிரிந்து பெருமூச்சென பொருள் தரும். (கசஉ

எவ்வமி லெந்தை யார்க்கிங் கிதுவந்த தெனக்கொன் றூராம்
வெவ்வலி யழற்சீற் றத்து வேட்டுவ ராலோ வன்றி
யிவ்வரை விலங்கி னாலோ யாதென வறிதல் தேற்றே
னவ்வுறு தெவ்வைக் காணி னாவிகூட் டுண்கி லேனே.

(இ - ள்.) எவ்வம் இல் - குறைவு இல்லாத, எந்தையார்க்கு - எமது தந்தையாராகிய சிவலிங்கப் பெருமானுக்கு, இங்கு-இவ்விடத்து, இது வந்தது - இந்த அவஸ்தை நேரிட்டது, எனக்கு ஒன்னார் ஆம் - எனக்கு பகைவராகிய, வெவ்வலி-மிக்க வலியையும், அழல் - நெருப்புப் போன்ற, சீற்றத்து - கோபத்தையுமுடைய, வேட்டுவராலோ - வேடர்களினாலேயோ, அன்றி - அல்லாமல், இவ்வரை - இம்மலையிலுள்ள, விலங்கினாலோ - மிருகங்களாலேயோ, யாதென - யாதோவென்று, அறிதல் தேற்றேன் - அறியேன், அ - அந்த, உறு தெவ்வை - பெரும்பகைவரை, காணின் - காண்பேனாயின், ஆவி - அவர்கள் உயிரை, கூட்டுண்டு - கொள்ளைகொண்டு, உண்கிலேனோ - உண்டுவிட மாட்டேனோ எ - று.

சீற்றம் - கோவம். அறிதல் தேற்றேன் என்றது ஒரு சொன்னீரது. தெவ் - பண்பாகுபெயர். கூட்டுணல் - ஒரு சொல். (கசங.)

மலையிடை யெனக்கு வாய்த்த மாகத மணியே செம்பொ
னிலகொளிக் குன்றே யெந்தா யெம்பிரா னின்கண் புண்ணீர்
கலுழ்தரற் கென்னை கொல்லோ காரணந் திருவாய் சற்று
மலர்கிலை யென்கொ லென்றா னாவிசோர்ந் தருகு சென்றான்.

(இ - ள்.) மலையிடை - மலையின்கண், எனக்கு வாய்த்த - எனக்கு கிடைத்த, மரகத மணியே - பச்சை மணியே, செம்பொன் - செம்பொன்னால் இயன்ற, இலகு ஒளி - விளங்குகின்ற பிரகாசத்தையுடைய, குன்றே-மலையே, எந்தாய் - என் தந்தையே, எம்பிரான் - எம் பெருமானே, நின் கண் - உன் கண்ணில், புண்ணீர் கலுழ்தரற்கு - உதிரம் ஒழுகுதற்கு, காரணம் என்னை கொல்லோ - காரணம் என்னையோ, சற்றும் - சிறிதாயினும், திருவாய் மலர்கிலை - திருவாய் திறந்திலை, என் கொல் - என்னே, என்றான் - சொல்லி, ஆவி சோர்ந்து - உயிர் தளர்ந்து, அருகு சென்றான் - கிட்டப் போயினன் எ - று.

கலுழ்தல் - ஒழுகுதல். மலர்தல்-திறத்தல். அருகு - சமீபம். (கசச)

கையினிற் றுடைத்தான் பல்காற் காவுத றவிரா தாக [லாம்
மையனைத் தழுவிக் கொண்டா னலறினா னெடும்போ தெல்
பையென விடுத்துப் பின்பு பச்சிலை மருந்து தந்து
பெய்யினோய் தீரு மென்று பெயர்ந்தனன் மருந்து கொய்ய.

(இ - ள்.) பலகால் - பலதரம், கையினில் - கையினால், துடைத்தான்- துடைத்தனன், (துடைத்தும்) காலுதல்-உதிரம் ஒழுகுதல், தவிராது ஆக- ஒழியாதாக, ஐயனை-சிவலிங்கப் பெருமானை, தழுவிக்கொண்டான்-ஆலிங்கனஞ் செய்துக்கொண்டான், அலறினன் - அரற்றினன், உலறினன்-குளறினன், நெடும்போது எல்லாம் - நெடும்பொழுது எல்லாம், பையென விடுத்து - மெள்ள விட்டு, பின்பு - பிறகு, பச்சிலை மருந்து தந்து - பச்சிலை மருந்தை கொண்டு வந்து, பெய்யின் - பிழிந்தால், நோய் தீரும் என்று - கண்வலி நீங்கும் என்று, மருந்துகொய்ய பெயர்ந்தனன் - மருந்து பறிக்கச் சென்றனன் எ - று.

காலுதல் - ஒழுகுதல். தவிர்தல்-ஒழிதல். பெய்தல் - பிழிதல். மருந்து என்றது பச்சிலை மருந்தை. (௧௯௩)

கானெலாம் புகுந்து சென்று கண்டன வெல்லாங் கொய்து
கூனுலாஞ் சிலைக்கை வேடர் கோமகன் றுனைவிற் போந்து
வேனிலாற் காய்ந்த தேவின் விழியிடைப் பெய்தான் சோரி
நீனிலா வண்ணங் கண்டான் றலையன்ப னாவி சோர்ந்தான்.

(இ - ள்.) கான் எல்லாம் - காடு முழுதும், புகுந்துசென்று - நுழைந்து போய், கண்டன எல்லாம் கொய்து - கண்டவற்றையெல்லாம் பறித்து, கூன் உலாம் - வளைவையுடைய, சிலை - வில்லைத்தரித்த, கை - கையினையுடைய, வேடர்கோமகன் - வேடர் தலைவனாகிய திண்ணன், துனைவின் போந்து - விரைவாகவந்து, வேனிலான் - மன்மதனை, காய்ந்த - எரித்த, தேவின் - தேவனது, விழியிடை - கண்ணில், பெய்தான் - பிழிந்தான், (பிழிந்தும்) சோரி - உதிரமானது, நில்லாவண்ணம் கண்டான் - நிற்காத விதத்தைக்கண்டு, தலையன்பன் - திண்ணன், ஆவி சோர்ந்தான் - உயிர் தளர்ந்தான் எ-று.

துனைவு - விரைவு. போந்து-போதந்து என்பதன் விகாரம். வசந்தருது மன்மதன் மிக்கு விளங்குங் காலமாதலால், அவனை வேனிலான் என்றார். வேனிலாற் காய்ந்ததேவ என்றது சிவபிரானை. கண்டான் - முற்றெச்சம். (௧௯௪)

யானினி யிதற்கென் செய்வே னெனவெண்ணி நிற்ப வூனுக்
கூனிடல் வேண்டு மென்னு முரைகண்டு தன்கண் வாங்கி
வானவன் றடங்க ணிட்டான் மாறுமென் றுளம்வ லித்துக்
கானவர் பெருமான் றன்கண் கணையினா லிடந்திட் டானால்.

(இ - ள்.) யான் - நான், இனி - இனி, இதற்கு - இந்த ஆபத்துக்கு, என்செய்வேன் என - யாது செய்வேனென்று, எண்ணி நிற்ப - நினைந்து நிற்க, ஊனுக்கு ஊன் இடல் வேண்டும் என்னும் - தசைக்குத் தசையிட வேண்டுமென்கிற, உரைகண்டு - சொல்லை நினைத்து, தன்கண் வாங்கி-தன்

கண்ணைத்தோண்டி, வானவன் - சிவலிங்கப்பெருமானது, தடம் கண் இட்டால் - பெரிய கண்ணில் வைத்தால், மாறும் என்று - இந்த நோய் தீருமென்று, உள்ளம் வலித்து - மனவுறுதிகொண்டு, கானவர்பெருமான் - வேடர்பெருமானாகிய திண்ணனார், தன்கண் - தன் கண்ணை, கணையினால்- அம்பினால், இடந்திட்டான் - தோண்டினான் எ-று.

உரை - பழமொழி. வலித்தல் - உறுதிகொள்ளல். இடத்தல் - தோண்டுதல். (கசுஎ)

இடந்ததன் கண்ணை யண்ண லிறைகண்ணி லப்பச் சோரி
மடந்தையோர் பங்க னங்கே மாற்றினா னதனைக் கண்டா
னடங்கரு மகிழ்ச்சி யென்னு மாழ்கட லதனுட் டாழ்ந்து
முடங்குளை மடங்க லன்னான் முழவுத்தோள் கொட்டி யார்த்தான்

(இ - ள்.) இடந்த - தோண்டின, தன்கண்ணை-தன் விழியை, அண்ணல் - பெருமையுள்ள, இறைகண்ணில் அப்ப - இறைவன்கண்ணில் அப்புதலும், சோரி - உதிரத்தை, மடந்தை ஓர்பங்கன் - உமாதேவிபங்கனாகிய சிவபிரான், ஆங்கே - அப்பொழுதே, மாற்றினான் - நிறுத்தினான், அதனை - அச்செய்தியை, முடங்கு உளை - வளைவாகிய புறமயிரையுடைய, மடங்கல் அன்னான் - சிங்கத்தை நிகர்த்தவனாகிய திண்ணன், கண்டான் - கண்டு, அடங்கு அரு - அடங்குதலில்லாத, மகிழ்ச்சி யென்னும் - சந்தோஷமென்கிற, ஆழ்கடலதனுள் - ஆழமாகிய கடலில், தாழ்ந்து-முழுகி, முழவு - மத்தளம்போன்ற, தோள் - புயங்களை, கொட்டி - தட்டிக்கொண்டு, ஆர்த்தான் - ஆரவாரித்தான் எ-று.

கண்டான் - முற்றெச்சம். தாழ்தல் - முழுகுதல். (கசுஅ)

ஓடினான் றிசைக ளெல்லா முடம்பெலாங் குலுங்க நக்கான்
பாடினான் வாயில் வந்த படியெலாங் கைகள் கொட்டி
யாடினான் றுள்ளித் துள்ளி யாரவா ரித்தா னின்று
நாடினான் செய்த செய்கை நன்றுநன் றெனவி யந்தான்.

(இ - ள்.) திசைகள் எல்லாம் ஓடினான் - திக்குகள்தோறும் ஓடினான், உடம்பு எல்லாம் குலுங்க - உடல்முழுதும் குலுங்கும்படி, நக்கான் - சிரித்தான், வாயில்வந்தபடி யெல்லாம் - வாயில்வந்தவாறெல்லாம், பாடினான் - பாடினான், கைகள் கொட்டி ஆடினான் - கைகளைக் கொட்டிக்கொண்டு கூத்தாடினான், துள்ளி துள்ளி - குதித்து குதித்து, ஆரவாரித்தான் - ஆரவாரித்தான், நின்று நாடினான்- நின்று ஆலோசித்து, நான்செய்த செய்கை- நான் செய்த காரியம், நன்றுநன்று என - நல்லது நல்லதென்று சொல்லி, வியந்தான் - புகழ்ந்துகொண்டான் எ-று.

நக்கான் என்பதற்குப் பகுதி நகு. நாடினான் - முற்றெச்சம். வியந்தான் என்பதற்குப் பகுதி விய. (கசுகூ)

இன்னண முவகை வெள்ளத் திடையவ னுலாவும் வேலை
முன்னவன் பின்னு மன்னான் முதிர்ந்தபே ரன்பு காட்டச்
செந்நிறக் குருதி மற்றைத் திருவிழி யினுஞ்சோர் வித்தா
னன்னது மைந்த னார்வ வார்கலி குடித்த தன்றே.

(இ - ள்.) இன்னணம் - இந்தப் பிரகாரம், உவகை வெள்ளத்திடை - களிப்பாகிய கடலில், அவன் - அந்தத் திண்ணன், உலாவும் காலை - திரியுங்காலத்தில், முன்னவன் - முதல்வனாகிய சிவபெருமான், பின்னும் - மேலும், அன்னான் - அந்தத் திண்ணனது, முதிர்ந்த - பழுத்த, பேரன்பு - பேரன்பை, காட்ட - உலகினர்க்குக் காட்டும் பொருட்டு, மற்றைத் திருவிழியினும் - வேறொரு கண்ணிலும், செந்நிறக் குருதி - செந்நிறத்தையுடைய உதிரத்தை, சோர்வித்தான் - ஒழுகப் பண்ணினான், அன்னது - அந்தச் செய்கை, மைந்தன் - திண்ணனது, ஆர்வம்-அன்பாகிய, ஆர்கலி - கடலை, குடித்தது - பருகிவிட்டது எ - று.

சோர்தல் - ஒழுகுதல். மைந்து - திண்மையாதலால் மைந்தன் என்றது திண்ணன் என்னும் பொருள் குறித்தது. (கஎ0)

எரிநிர யத்து ணின்று மேறுபு துறக்கம் புக்கா
னொருவன்மற் றதனுட் பின்னும் வீழ்ந்தென வுவகை மாறிக்
கரையிலாத் துன்ப வெள்ளக் கடலினு ளழுந்தி யேங்கி [ன்.
வரைபுரை தோளான் பின்னு மருந்துடை மையிற்றெ ளிந்தா

(இ - ள்.) எரி நிரயத்துள் நின்றும் - எரிவாய் நரகத்துளிருந்து, ஏறுபு - மேலேறி, துறக்கம் புக்கான் - சுவர்க்க லோகத்தை யடைந்தவனாகிய, ஒருவன் - ஒருத்தன், பின்னும் - மேலும், அதனுள் வீழ்ந்தென - அதில் விழுந்தாற்போல, உவகை மாறி - மகிழ்ச்சி நீங்கி, கரை இல்லா - கரையற்ற, துன்பவெள்ளக் கடலினுள் - துக்கப் பெருக்காகிய கடலில், அழுந்தி - ஆழ்ந்து, ஏங்கி - ஏக்கமுற்று, வரை புரை தோளான் - மலையை நிகர்த்த புயங்களையுடையவனாகிய திண்ணன், பின்னும்-மேலும், மருந்து- மருந்தை, உடைமையின் - தான் உடைத்தாயிருத்தலை, தெளிந்தான் - அறிந்துகொண்டான் எ - று.

ஏறுபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (கஎக)

இன்னுமோர் கண்ணெ னக்குண் டாதலி னிதற்கஞ் சேனென்
றன்னது களைந்த காலை யையர்கண் ணுறுதற் காகத்
தன்னொரு செருப்புக் காலைத் தம்பிரான் கண்ணி னூன்றிப்
பின்னடு கணைகண் வைத்தான் பிரானது பொறுக்க லாற்றான்.

(இ - ள்.) இன்னும் - இன்னமும், ஓர்கண் - ஒருகண், எனக்கு உண்டு ஆதலின் - எனக்குண்டாயிருத்தலால், இதற்கு அஞ்சேன் என்று - இதற்கு அஞ்சேன் என்று, அன்னது - அதனை, களைந்த காலை - தோண்டின

போது, ஐயர் கண் - இறைவரது கண், அறிதற்காக - அறியும் பொருட்டு, தன்-தனீது, ஒரு செருப்புக்காலை - ஒரு செருப்படியை, தம்பிரான் கண்ணில் ஊன்றி - சிவபிரான் கண்ணில் ஊன்றிக்கொண்டு, பின் - பிறகு, அடுகணை - கொல்கிற அம்பை, கண் வைத்தான் - தன் கண்ணில் வைத்தான், பிரான் - தம்பிரான், அது - அச்செய்கையை, பொறுக்கலாற்றான் - சகிக்கலாற்றாதவனாகி எ - று.

அறிதற்கு - இன்ன இடத்திலிருப்பதென்பதை யறிதற்கு. அடு என்றது கணைக்கேற்ற விசேடணம். (கஎஉ)

மறைமொழி பிறந்த தம்வாய் மலர்திறந் தருட்பே ராழி [டே
யிறைவர் கண்ணப்ப நிற்க வென மூக்கால் மொழிந்து கொண்
கறையணற் கங்கணத்த கையினாற் பிடித்தார் செங்கை
யுறுநறைப் பொலம்பூ மாரி யும்பர்மண் புதையப் பெய்தார்.

(இ-ள்.) மறைமொழி பிறந்த - வேதவாக்கியம் பிறந்த, தம் - தமது, வாய்மலர்திறந்து - திருவாய்மலரைத் திறந்து, அருள்பேராழி இறைவர்- பேரருட்கடலாகிய இறைவர், கண்ணப்ப - கண்ணப்பனே, நிற்க என - நிற்கவென்று, மூக்கால் மொழிந்துகொண்டே - மூன்றுதரஞ் சொல்லிக் கொண்டே, கறை - நஞ்சுள்ள, அணல் - மேல்வாயையுடைய பாம்பாகிய, கங்கணத்த - கங்கணத்தையணிந்த, கையினால் - திருக்கரத்தால், செங்கை பிடித்தார்- திண்ணனது செங்கையைப் பற்றினார், உம்பர் - (இதைக்கண்ட) தேவர்கள், மண்புதைய - பூமிமறையும்படி, உறுநறை - மிக்க தேனையுடைய, பொலம் - அழகிய, பூமாரி - மலர்மழையை, பெய்தார் - பொழிந்தார்கள் எ-று.

கறையணல் அன்மொழித்தொகை. கொலைத்தொழில் இடையறாமையால் உதிரந்தோய்ந்த கையென்றற்கு செங்கையென்றார். (கஎங)

குன்றவர் பெருமான் கையிற் கூர்ங்கணை விட்டெறிந்து
கன்றிள மடமா னேந்துங் கண்ணுத லடிப்பூங் கஞ்சந்
தன்றலை மிசைபு னைந்தான் சைவவை திகனி றும்பூ
தொன்றிய வுளத்த னாகி யொருதனி முதல்வற் றாழ்ந்தான்.

(இ-ள்.) குன்றவர் பெருமான் - வேடர்பெருமானாகிய திண்ணன், கையில்-தன் கையிலிருந்த, கூர்கணை - கூர்மையாகிய அம்பை, விட்டெறிந்து - வீசியெறிந்து, கன்று இளமடமான் - மிக்க இளமையையுடைய மான்கன்றை, ஏந்தும் - தாங்குகிற, கண்ணுதல்-சிவபெருமானது, பூ அடி கஞ்சம் - அழகிய பாததாமரைமலரை, தன் தலைமிசை - தன் சிரசின்மீது, புனைந்தான் - தரித்துக்கொண்டான், (இதனை) சைவவைதிகன் - சிவகோசமுனிவன், இறும்பூது ஒன்றிய - ஆச்சரியமடைந்த, உள்ளத்தன் ஆகி-

மனத்தையுடையவனாகி, ஒரு தனிமுதல்வன் - ஒரு தனிமுதல்வனாகிய சிவ பெருமானை, தாழ்ந்தான் - வணங்கினான் எ-று.

ஈடெடுப்பில்லாதவனாதலால் சிவபிரானை ஒரு தனி முதல்வன் என்றார். (கஎச)

மைதிகழ் மணிமி டற்று வார்சடை யெம்பி ரானக்
கைதவ மிலாரை மிக்க கருணையங் கண்ணா னோக்கி
மெய்தழ னடுவ ணின்று விரிவற மனமொ டுங்கிச்
செய்தவர் தமக்குங் கிட்டாத் திருவுருக் கலந்து கொண்டான்.

(இ - ள்.) மைதிகழ் - கருமை விளங்குகிற, மணிமிடறு - நீலகண்டத்தையும், வார்சடை - நீண்ட சடையையுமுடைய, எம்பிரான்-எம்பெருமான், அ - அந்த, கைதவம் இல்லாரை - கபடமற்றவரை, மிக்க - மிகுந்த, கருணையங்கண்ணால் நோக்கி - கருணைக்கண்ணினால்பார்த்து, மெய் - உண்மையாக, தழல் நடுவண் நின்று - நெருப்பிடை நின்று, மனம் விரிவு அற ஒடுங்கி - மனம் விரியாமற் குவிந்து, செய்தவர் தமக்கும் - தவஞ்செய்வோர்க்கும், கிட்டா - கிடைக்காத, திருவுரு - தன் திருவுருவில், கலந்துகொண்டான் - கலந்துகொண்டருளினான் எ-று.

திருவுருக்கலந்து கோடலாவது சாயுஜ்ய பதவியை யருள்செய்தல். ()

அற்றைநாண் முதலா வையம் அண்ணல்கண் ணப்ப னென்று
சொற்றதே பெயராச் சொல்லுஞ் சுடர்மதிக் காந்தம் வேடர்
சிற்றிடை நலார்மு கத்தைத் திங்களென் றொழுக்குந் தெண்ணீ
ருற்றரு விகளாய்த் தாழு முயர்மலை காவ லற்கே.

(இ - ள்.) அற்றைநாள் முதலா - அந்த நாள் முதலாக, வையம்- உலகமானது, அண்ணல் - சிவபெருமான், கண்ணப்பனென்று சொற்றதே- கண்ணப்ப என்று சொன்னதே, பெயர் ஆ - பெயராக, சொல்லும்-சொல்லாநின்றது, (யாருக்கெனின்) சுடர்மதிக்காந்தம் - ஒளியுள்ள சந்த்ரகாந்தக்கல்லை, வேடர் - வேடரது, சிற்றிடைநலார் - நுண்ணிடையையுடைய மாதரது, முகத்தை - முகத்தினை, திங்கள் என்று - பூர்ணசந்திரன் என்று, ஒழுக்கும் - வீழ்த்துகிற, தெள் நீர் உற்று - தெளிந்த நீரைக்கொண்டு, அருவிகளாய் - அருவியாறுகளாய், தாழும் - ஒழுகாநின்ற, உயர் - உயர்ந்த, மலைகாவலற்கு - திண்ணனாற்கு எ-று.

வையம் - ஆகுபெயர். அண்ணலும் அது. (கஎசு)

கலித்துறை

என்னத் திங்கள் வேணி மறைத்த விறைவான் றோய்
சென்னிக் குன்றம் வாழ்நர்கள் கோமான் செயல்கூற
மன்னுட் களிகொண் டையய னடித்தா மரைசூடிப்
பன்னற் கினிய தோர்கதை யின்னும் பகர்கின்றான்.

(இ - ள்.) என்ன - என்று, திங்கள் வேணி மறைத்த - சந்த்ர சடா பாரத்தை மறைத்த, இறை - இறைவன், கூற - சொல்ல, வான்தோய் - ஆகாயத்தைத் தீண்டுகிற, சென்னி - சிகரத்தையுடைய, குன்றம் - மலையில், வாழ்நர்கள் - வாழ்வோர்களுக்கு, கோமான் - அரசனாகிய கண்ணப்பனது, செயல் - செய்கையை, கூற - சொல்ல, மன் - நிலைபெற்ற, உள் களிகொண்டு - மனமகிழ்ச்சிகொண்டு, ஐயன் - இறைவனது, அடித்தாமரை - பாததாமரைமலரை, சூடி - சிரசாவகித்து, இன்றும் - இன்னமும், பன்னற்கு அரியது - சொல்லுதற் கருமையானதாகிய, ஓர் கதை - ஒரு சரித்திரத்தை, பகர்க என்றான் - சொல்லக்கடவையென்றான் எ-று.

தாமரை ஆகுபெயர். பகர்க என்றான் எனற்பாலது பகர்கென்றானென நிலைமொழி ஈற்றகரம் தொகுத்தலாயிற்று. (கஎஎ)

கலிவிருத்தம்

தீதற வுரைத்தனஞ் சிலைவல் கண்ணப்பன்
காதைநக் கீரனார் கதைவி ளம்புதும்
யாதவ மனனமர்ந் தினிது கேளென
மாதவ வடிவருள் வள்ளல் கூறுவான்.

(இ - ள்.) சிலைவல் - விற்றொழிலில் வல்லவனாகிய, கண்ணப்பன் - கண்ணப்பரது, காதை - சரித்திரத்தை, தீது அற - குற்றமற, உரைத்தனம் - சொல்லினோம், (இனி) நக்கீரனார் காதை - நக்கீரனாரது சரித்திரத்தை, விளம்புதும் - சொல்லுவோம், யாதவ - யாதவமன்னனே, மனன் அமர்ந்து - மன விருப்பத்தோடு, இனிதுகேள் - இனிதாகக் கேட்கக்கடவை, என - என்று, மாதவவடிவு - பெரிய தவவேடம்பூண்ட, அருள் வள்ளல் - அருள் வடிவாகிய விடசங்கமன், கூறுவான் - சொல்வானாயினன் எ-று.

மாதவவடிவருள் வள்ளல் என்றது விடசங்கமனை. (கஎஅ)

கண்ணப்பச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கருரு.

---

பொத்தப்பி நாட்டிலே, உடுப்பூரிலே, வேடர்களுக் கரசனாக நாகனென்பவ னொருவனிருந்தான். அவன் தத்தையென்னு மனைவியோடு வாழ்ந்திருக்கு நாளிலே, புத்திரப்பேறின்மையால் நற்கதியின்றென மனைவியோடு வருந்தி, அது காரணமாக, குறிஞ்சிநிலத்திற் குரிமைபூண்டு தமது வழிபடு தெய்வமாய் விளங்கும் முருகக்கடவுளுக்கு இயைந்த ஆலயமொன்றியற்றி, நித்திய நைமித்திகங்களை நியமித்து, மயில்களையும் சேவல்களையும் விடுத்து, திருவிழாச் செய்வித்து, வேலன்மேற் சன்னதங் கொள்விக்க; முருகக்கடவுள் அவனிடத்தே தோன்றி, "அன்போடுசெய்த இச் சிறப்பிற்கு மகிழ்ந்தேம்; உலகமெல்லாம் புகழும் ஓர் புத்திரனைத் தருவேம்" என்றநுக்கிரகித்து, மறைந்தருளினர். அதுகேட்ட நாகன் மனைவியோடு நனிமகிழ்ந்து, அவ் வேலனுக்கும் சுற்றத்தாருக்கும் மிகு சிறப்பியற்றி வாழ்ந்திருந்தனன். அந் நாளிலே, அக் கடவுளருளியபடி ஒரு அரிய புதல்வருதிக்க; நாகன் தத்தையோடு சாலவுவந்து, முருகக்கடவுளுக்கு விசேஷ பூசையாதி நடத்துவித்தனன். அப்பொழுது நகரமுழுமையும் எண்ணெயாட்டணி நிகழத் தத்தையென்பவள் அப் புதல்வருக்கு வாச நீராட்டி, முலைப்பால் பெய்து நிலந்தேய்த்து நுதற்பொட்டணிந்து, பாலூட்டி, அலங்கரித்துக் கொடுக்க; நாகன் கையிலே தாங்கி, திண்ணென இருந்தமையால் அப் புதல்வருக்குத் திண்ணனெனத் திருநாமந் தரித்தனன்.

திண்ணனார் தொட்டிலுதைந்து தவழ்ந்து, குறுநடை பயின்று, தெருவிலே சிறுதேருருட்டி விளையாடியும், சிறிய வில்லம்பு கைக்கொண்டு, சிறார்களோடு காட்டிற் புகுந்து, மான் புலி கரடி முதலிய விலங்கின் குட்டிகளுள்ளே சிலவற்றை யெய்தும், சிலவற்றைக் கைக்கொண்டு வளர்த்தும், வளர்ந்து வந்தனர். அக்காலத்திலே, நாகன் வில்வித்தை கற்பிக்கும் பருவம் வரக் கண்டு, அத்தேசத்து வேடர்களையெல்லாம் அழைப்பித்து, வில்விழா நடாத்தி, பூர்வாசிரியனுக்கு வேண்டியவைகளை வெறுக்கக் கொடுத்து, "இவ் விளையோனுக்கு வில் வித்தையை அன்போடு கற்பிக்கவேண்டும்" எனப் பிரார்த்திக்க; அவன் நல்ல முகூர்த்தத்திலே, கிரமப்படி நற்சிலை பிடிப்பித்தனன். திண்ணனார் பிடித்தவுடனே வில்வித்தையனைத்து நிரம்பி, "வில்விஜயனே வேடர்குலத்தி லவதரித்தானோ!" என்று யாவருங் கூறும்படி அதிவல்லவராகியிருக்க; நாகன் இளவேட்டஞ் செய்விக்க விரும்பி, அதனை இடையூறின்றி முடிததற்பொருட்டு வனதேவதைகளுக்குப் பலி கொடுக்க வேண்டுமெனக் கருதி, வேடர்களோடு வனத்தையடைந்து, நீராடி பூக்கொய்து சென்று, அவ் வனதேவதைகளிருக்கும் ஆலமரத்தை யலங்கரிப்பித்து பூசைசெய்வித்து, குங்குலிய தூபத்தைக் கானக முழுமையுங் கமழ்வித்து, கடாக்களைப் பலியீர்ந்து, பிரசாதம்பெற்று உடுப்பூரை யடைந்தான்.

மற்றைநாளிலே, மைந்தரை யழைத்து, "ஐயனே, இன்று முதலாக நீயே மறவர்களுக்குத் தலைவனாகி, பகைவரையழித்து அவர் நிலங்கவர்ந்து,

வெற்றிபெற்று, பெரிது வாழ்வாயாக" என்றாசீர்வதித்து, வழிவழிவந்த வெற்றிச்சிலையைக் கைக்கொடுத்து, கழிபெருங் காதலால் தோள்குழையத் தழுவி, "நமது முருகக்கடவுளது திருவருளே துணையாகச்சென்று இளவேட்டம் வாய்த்துவருக" என விடையளிக்க; திண்ணனார் தந்தையைவணங்கி தாயைப்பணிந்தனர். அவள் எடுத்துப்புல்லி, முலைப்பால்சோர, நெஞ்சகுழைய, உச்சிமோந்து, "மகனே, நீ கடுங்காட்டிலே நுழையாமல் தண்ணிய சோலைவழியாகவே சென்று வேட்டமாடி முட்டீறலும் திருஷ்டிதோஷமுமில்லாமல் வேடர்களோடு திரும்புக" என்று நெற்றியிலே விபூதி தரித்தனள். திண்ணனார் மீண்டும் வணங்கி, அநுமதிபெற்றுநீங்கி, கச்சிறுக்கி, உடைவாளுங்கட்டி, வில்லம்பு கைக்கொண்டு, வேடர்கள் புடைசூழ வேட்டைநாய்களோடு காட்டையடைந்து, பல விலங்குகளும் பயிலுமிடமறிந்து, வலைகட்டி பறைமுழக்கி, அவைகளை உள்ளே நுழைவித்து, காடுகளை வெட்டிச்சரித்து, பார்வை மிருகங்களினது ஓசையால் அவையணுகிய வழி, மறைந்து நின்று, அம்புமுதலியவற்றாற் கொன்று, வேட்டைமுடித்து ஊரையடைந்தனர்.

இவ்வாறே பலகால் வேட்டமாடி, மாதாபிதாக்கள் மகிழ வாழுநாளிலே, ஒருநாள் ஒரு நெடுங்காட்டிற் புகுந்து, வேடர்களினின்று நீங்கி, தனித்துலாவி, மிகவும் இளைத்து, ஓர் மரநிழலிலே துயின்றனர். அவ்வேளையிலே, சிவபெருமான் வெண்ணீறணிந்து புலித்தோலுடுத்து சடைமுடிபுனைந்த கோலத்தோடு, அவரது கனவிலே தோன்றி, "மைந்தனே, இம்மலையிலே, பொன்முகரியாற்றங் கரையிலே, கல்லாலவிருக்ஷத்தடியிலே, ஒரு சிவலிங்கமுண்டு; அது துன்பமனைத்தையுமழித்து, பேரின்பத்தை யளிக்கும்: நீ சென்று அதை வணங்குவாயாக" என்றுரைத்து மறைந்தருள; உடனே கண்விழித்து ஆச்சரியமடைந்து, திக்கெங்கும் நோக்கி நின்றனர்; அச்சமயத்திலே, ஓர் பன்றி வேடரார்ப்பினாலெழுந்து வலையை யறுத்துக் கொண்டு அதிவேகமாக மலையிலே புகுதற்குச் செல்லுதலை நோக்கி, கடுங்கோபத்தோடு துரத்திச் சென்று, ஆலவிருக்ஷத் தடியிலே, சிவலிங்கத்தினருகே சென்றவுடன் மறையக் கண்டு, அதிசயப்புடையராகி, "அச்சோ! இப்பன்றி மறைந்தது தெரிந்தேயில்லை" என்று குறித்துப் பார்க்குங்கால் எதிரே சிவலிங்கமிருத்தலைக் கண்டனர்.

கண்டவுடனே ஸ்ரீகாளத்தியப்பரது திருவருட்பார்வையை இனிது பெற்று, பரிசனவேதியினெதிர்ப்பட்ட இரும்பானது அவ்வுருவமாறிப் பொன்னுருவமாவதுபோல் முற்குணங்கள்மாறி, அக்கடவுளிடத்து வைத்த அன்பே யுருவமாயினார். நெடுங்காலம் பிரிந்திருந்துவந்த தன் குழந்தையைக்கண்ட தாயைப்போலத் தாழாமல் விரைந்தோடி, தோள்களழுந்தத் தழுவி, மோந்து முத்தமிட்டார். அழலிடைப்பட்ட மெழுகுபோல, நெஞ்சநெக்குருக; கண்ணீர் சொரிய, உரோமாஞ்சங்கொள்ள நின்று, "குருடன் கையிலகப்பட்ட தெய்வமணிபோல இப்பெருமான் எனக் ககப்பட்டனர்"

என்று பேரானந்தமடைந்து சிரித்தார். பின்பு "எந்தையே, யானை புலி முதலிய விலங்குகள் திரியும் இக் காட்டிலே துணையுமில்லாமல் வேடர்கள் போலத் தனித்திருப்பதென்னே? நீர் அமுதுசெய்தற்கு இறைச்சி யாவர் கொண்டுவந்து கொடுப்பார். எமது ஊருக்கு வருவீரேல் தேன் தினைமா காய் கனி கிழங்கு முதலியவைகளும், மான் முயல் பன்றி முதலியவற்றின் மாமிசங்களும், யானே கொண்டுவந்து கொடுப்பேன். நல்ல வேடர் துணையுமுண்டு. நீர் இங்கே தனித்திருத்தற்கு என்மனந் துணியவில்லை. தேவரீர் திருவுளமிரங்கி இப்பொழுதே என்னோடு உடுப்பூருக்கு வருதல் வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தார். இவ்வாறுரைத்தும், இறைவர் ஒன்றும் கட்டளையிடாமையால், "இத் தெய்வசிகாமணிக்கு இவ்விடத்திலிருத்தலே திருவுளம்போலும். சிறியேன் இப்பெருமானை நீங்குவனேல் உயிர் வாழ்வனோ! வாழேன்" என்று மொழிந்து, உற்று நோக்குங்கால், அப்பெருமான் முடியிலே அபிஷேகஞ்செய்து நறுமணங்கமழு மலர்களும் வில்வத்தளிரும் சூட்டியிருத்தல் கண்டு, இச்செய்கையே சீகாளத்தியப்பருக்குப் பிரீதியாகும் என்று தெளிந்து, அப்பணியைக்கடைப்பிடித்தார்.

பின்பு "ஐயோ! பெரும்பகலாகியது. இறைவரோ மிகப் பசித்தார். இன்சுவை யிறைச்சி கொண்டுவந்து இடல்வேண்டுமென்று நீங்கினால் தீய விலங்குகள்வந்து யாது விளைக்குமோ!" என நனியிரங்கி, "குன்றிடை எனக்கு வாய்த்த குலமணிவிளக்கே, உமது தழற்பசி தணிப்ப மிகு சுவை யிறைச்சிகொண்டு தாமதியாமல் ஒருகணத்தில் வருவேன். கொடிய விலங்குகள் வருமென்று அஞ்சவேண்டா. வந்தால் என்னை விரைய அழைப்பீராக" என்று விண்ணப்பஞ்செய்து, அரிதினீங்கி, கன்றைவிட்டுப் பிரிந்த தலையீற்றுப் பசுப்போல அடிக்கடி திரும்பிநின்று, ஐயர்தனிமைக் கேங்கி, காட்டிற் புகுந்து, ஓர் பன்றியைக் கொன்று தானே யேந்தி, பொன்முகரியின் தீரத்தைச் சார்ந்தனர், சார்ந்து, தீக்கடைகோலினாலே தீயையுண்டாக்கி, அப்பன்றியை வதக்கி, வாளினாலரிந்து, இன்சுவையுடைய செந்தசைகளையெல்லாம் வேறெடுத்து, அம்பிற் கோத்து, பதமுறக் காய்ச்சி, வாயிலிட்டு, பல்லினாலே மெல்லமெல்லப் பலமுறை பதுக்கிப்பார்த்து, சுவையுடைய இறைச்சிகளையெல்லாம் தேக்கிலையினாற் றைக்கப்பட்ட கல்லையிலேவைத்து, கழிசுவையில்லாதவற்றைப் புறத்திலே உமிழ்ந்தார். அதன்பின்னர் தளிர்களையும் மலர்களையுங் கொய்து தலையிற் செருகி, திருமஞ்சனத்தை வாயிலே முகந்து, ஒரு கரத்திலே அமுதிட்ட கல்லையையும், மற்றொரு கரத்திலே வில்லம்புகளையும் எடுத்துக்கொண்டு, "ஆ கெட்டேன்! என்னுயிர்த் துணைவராகிய கடவுள் மிகுந்த பசியா விளைத்தாரோ! கொடிய விலங்குகளால் அச்சமுற்றாரோ!" எனப் பதைபதைத்து ஏங்கி, குஞ்சுக்கு இரையையூட்டத் தாழாமலோடும் பறவைபோல மனோகதியும் பின்னிடச் சென்று, சந்நிதியை யடைந்து சிவபெருமானது திருமுடியிலுள்ள பத்திர புஷ்பங்களைச் செருப்புக் காலினாலே மாற்றி, வாயிலுள்ள நீரால் பிரானது

திருமேனியும் உள்ளமுங் குளிர அபிஷேகித்து, பத்திரபுஷ்பங்களை முடி வளைந்து சூட்டி, திருவமுதை யெதிர்வைத்து, இனிய வார்த்தை பல சொல்லி ஊட்டி, பிரியாது அருகே நின்றனர்.

அவ்வேளையிலே வேடர்கள் திண்ணனாரைக் காணாமல் மிகுதியும் அச்சமுடையவராய்க் காடெல்லாந் தேடிவந்து, அருகடைந்து, "ஐயனே, நீர் எங்களை நீங்கி இம்மலையை யடைந்த தென்னே? யாங்கள் ஏதேனும் பிழைசெய்த துண்டோ, சூரியன் உச்சி கடந்தனன். பசித்திருக்கின்றீர். இங்கடைந்தது அறிகிலேம். யாங்கள் விரைய வாராததுபற்றி முனியாது உடன்வருக" என்று பலவாறுரைத்தும் எதிர்மொழி கொடாமையால் கவலையுற்று, "இங்கிருக்கும் இத்தெய்வம் இவரிடத்திலே ஏறியிருக்கின்றதோ! யாதோ! உணரேம். இதை நமது தலைவருக்கு உரைப்போமாயின் அவர் வந்து தக்கவகையியற்றுவர்" என்று துணிந்து செல்ல; சூரியனும் அஸ்தமனமாயினான். திண்ணனார் சிவபெருமானைத் தீயவிலங்குகள் அணுகுமென்றஞ்சி அம்புதொடுத்த வில்லோடு மறந்தும் கண்ணிமையாமல் நின்று காத்து, வைகறையிலே திருவமுதமைக்கச் சிந்தித்து, மலைச் சாரலை யடைந்தனர். இது நிற்க.

அறிவு அருள் அடக்கம் சிவபத்தி முதலியவைகளே ஒரு வடிவெடுத்தாற் போன்றவரும், நல்வினை தீவினைகளால் வரும் இன்பத்துன்பங்களைச் சமமாக எண்ணுபவரும், சௌந்தரிய மாதர்கள் வலிந்து தழுவினும் தாயென நாடுந் தபோதனரும், திருக்காளத்தியப்பரைத் தினந்தோறும் சிவாகம விதிப்படி அருச்சிப்பவருமாகிய சிவகோசரியாரென்பவர் பிராம முகூர்த்தத்திலே, எழுந்துசென்று, பொன்முகரியிலே ஸ்நானஞ்செய்து, தலையிலே திருமஞ்சனமும், கரத்திலே பத்திரபுஷ்பமுந் தாங்கி, சிவநாமத்தை யுச்சரித்துக்கொண்டு, சந்நிதியையடைந்து, அங்கே ஊன்கள் சிதறிக்கிடக்கக் கண்டு, உள்ளம் நடுநடுங்கி, பக்கத்திலே குதித்தோடினார். பின்பு "தேவாதிதேவரது திருமுன்னே அநுசிதமாகிய இக்கொடுஞ்செய்கையைக் கொலைத்தொழிலஞ்சாத வேட்டுவப்புலைஞரே செய்திருப்பார். அவர் இதுசெய்யத் தேவர்பிரான் திருவுள்ளமிசைந்தாரோ! இதை அன்புடையோர்கள் கண்டக்கால் உயிர்விடுவர். கொடுவினையேன் அங்ஙனஞ் செய்யாது உயிரோடு நிற்கின்றேன்" என்று வருந்தி, "யான் பூஜாகாலந் தவற நின்றதனால் யாதுபயன்!" என்று நினைந்து, இறைச்சிகளைத் திருவலகினாலேமாற்றி, கோமயந் தெளித்தனர். மீண்டு, பொன்முகரியிலே ஸ்நானஞ்செய்து வந்து வேதமந்திரத்தினாலே சுத்திபுரிந்து, உருத்திர சமக நமகத்தினால் அபிஷேகஞ்செய்து, பத்திரபுஷ்பங்களாலருச்சனையியற்றி, திருமுன்னே நின்று, கரங்களைச் சிரமேற் குவித்து, கண்களினின்றும் ஆநந்த பாஷ்பஞ் சொரிய, திருமேனியெங்கும் மயிர்பொடிப்ப, அக்கினியிற்பட்ட மெழுகுபோல மனம் உருகியிளக, நாத்தழும்ப, கீதநடையுள்ளதாகிய சாம வேதம்பாடி, பலமுறை பிரதக்ஷணஞ்செய்து நமஸ்கரித்து, அரிதினீங்கி, தமதாச்சிரமத்தை யடைந்தார்.

இப்பால் திண்ணனார் பன்றி, மான்முதலிய மிருகங்கள் பயிலுமிடமறிந்து, அம்பினாலே கொன்று, அவைகளின் இறைச்சியை முன்போலப் பக்குவப்படுத்தி, தேக்கிலையிலிட்டு, கொம்புத்தேனை நிரம்பவிட்டுக் கலந்து, முன்போலவே திருமஞ்சன முதலியவைகளைகொண்டு, இறைவர் பசித்திருப்பரென ஓடிவந்து, பூசைசெய்து, இறைச்சிக்கல்லையைத் திருமுன்னர் வைத்து, "இந்த இறைச்சி முன் கொண்டுவந்ததுபோலன்று. இவை பன்றி முயல் மான் கலை மரை கடமையென்பவைகளின் இறைச்சி. இவைகளை அடியேனும் சுவைத்துப் பார்த்திருக்கின்றேன். தேனுங் கலந்திருக்கின்றது. தித்திக்கும்" என்றுசொல்லி உண்பித்து, அவர் பக்கத்திலே, பிரியாது நின்றார். அந்தவேளையிலே, முதனாட்சென்ற வேடர்களால் இவர் செய்தியைக் கேள்வியுற்று ஊணுறக்கமின்றியிருந்த மாதாபிதாக்களிருவரும்போந்து, பற்பல வுபாயங்களால் வசப்படுத்தவும் வசமாகாமைகண்டு, மனம் புழுங்கி, "இனிச் செய்வதுயாது" எனத் தியங்கிச் சென்றனர். திண்ணனார் அவர்களடைந்ததும் மீண்டுச்சென்றதும் அறியாதவராகி, கடவுளிடத்தே பிணித்த கருத்தோடு பகற்காலத்திலே மிருகங்களைக் கொன்று ஊனையருத்தியும், இராக்காலத்திலே நித்திரை யில்லாமல் அருகே நின்றும், தொண்டுசெய்துவர; சிவகோச முனிவரும் தினந்தோறும் வந்து, திருமுன்னே ஊன்கிடக்கக்கண்டு அழுது வருந்தி, அவற்றையகற்றிச் சுத்திசெய்து, நாகலிங்கப்பெருமானைப் பூசித்து, இவ்வநுசிதத்தை ஒழித்தருளவேண்டுமெனப் பிரார்த்தித்து, துக்கசாகரத்திலே மூழ்கியிருந்தனர்.

சிவகோசமுனிவர் இங்ஙனமிருக்க; காளத்திநாதர் இவர் துயரையகற்றத் திருவுளங்கொண்டு ஐந்தா நாளிரவிலே, சொப்பனத்திலே தோன்றி, "அன்பனே, நீ நமதுமுன்னேகண்டது இறைச்சியென்று வருந்தாதே: அது, நாம் விரும்பி யருந்தும் பெறற்கரிய வமுதமாகும்: அதையுண்பிப்பவனது செயலைக் கூறுகின்றோம்; கேட்பாயாக. அவன் நம்மிடத்து வைத்த அன்பு எவ்வளவென்னில், பல தெய்வநதிகளில் மூழ்கியும், விரதங்களை யனுட்டித்தும், தானங்களைப் புரிந்தும், ஊழைக்கடந்து ஓர் புதல்வனைப்பெற்ற தாய்க்கு அப்புதல்வன்மேல் எவ்வளவன்பிருக்குமோ அவ்வளவேயாகும். அவன் நமது திருமுடியிலுள்ள பூக்களைச்செருப்புக்காலால் மாற்றுங்காலத்து, யாம் இளமகன் கையால் திருமுலைவருடப்பெற்ற மாதாவினது உள்ளம்போலப் பெரிதும் நெஞ்சமுருகுவேம். அவன் நம்மேலுமிழ்கின்ற நீர் உள்ளிருந்துபெருகிய பேரன்பாக இருத்தலால், ஆராய்ந்து பார்க்கின் அது ஆற்றினின்றுங் கொண்டுவரப்பட்ட நீரன்று; முனிவரபிஷேகிக்கும் மந்திரநீரினும் மிக இனிதென்று சொல்லலாம். அவன் கழுத்தை மிகவும் வளைத்துச் சூட்டும் மயிர்களொடு கலந்த மலர்கள், வியாக்கிரபாதமுனிவன் முதலியோர் விதிப்படியெடுத்து சகஸ்ரநாமங்களை யுரைத்தருச்சிக்கும் தேன்விரிந்த மலரினும் மிக நல்லவாகும். அவன் முன்னே தன் வாயிலிட்டு ஆராய்ந்தெடுக்கப்பட்டமுழுச்சுவையையும் இளஞ்சூட்டையுமுடைய இறைச்சியைத் தந்தபின்பு, தேவர்கள் இரத்தினபாத்திரங்களிலே நிவே

தித்த பாற்கடலமுதமுமே வேம்பும் விடமுமாயின. அவன்எமக்கு முன்னே நின்று பேரன்போடு வாய்திறந்துரைக்குஞ் சொற்கள்போல, அறிவு முதிர்ந்த ஜிதேந்திரியர்களாலே பாடப்படும் சாமவேத கானமும் இனிய தன்று. அவன்மனம் நமக்குக் கோயிலாகும். அவனுரைகளெல்லாம் வேத மாகும். அவன் செயல்களெல்லாம் அறச்செயல்களேயாகும். அவனியல் பைக் காட்டுகின்றேம். நீ நாளைவந்து அவனறியாத வண்ணம் அயலிலே ஒளித்திருப்பாயாக. இனித் துயரொழிக'' என்று கட்டளையிட்டு மறைந் தருளினர். அதுகேட்ட முனிவர் சொப்பனவஸ்தையை நீங்கிச் சாக்கிரா வஸ்தையையடைந்து, கடவுளார் தமக்கருளிச்செய்த வார்த்தைகளை நினைந்து நினைந்து அதிசயித்து உஷஸ்காலையிலேபோய் பொன்முகரிநதி யிலே ஸ்நானஞ்செய்து நித்தியகடனையியற்றி, அருச்சனை முடித்து, சிவ லிங்கப்பெருமானுக்குப் பின்னே தோன்றாது ஒளித்திருந்தனர்.

இவர் வருதற்கு முன்னரேசென்ற திண்ணனார் வேட்டையாடி இறைச் சியும் திருமஞ்சனமும் புஷ்பமும் முன்போல அமைத்துக்கொண்டு, அதி சீக்கிரமாகத் திரும்பி வரும்போது, பற்பல துர்ச்சகுனங்களைக்கண்டு, "இச் சகுனங்களெல்லாம் இரத்தங் காட்டுகின்றன. என்கண்மணிபோன்ற எம் பெருமானுக்கு யாது சம்பவித்ததோ! தெரியேன்'' என்று மனங்கலங்கி, அதிசீக்கிரமாக ஓடிவந்தார். அத் தருணத்திலே அருட்பெருமான் திண்ண னாருடைய அன்பு முழுதையும் சிவகோசரியாருக்குக் காட்டத் திருவுளங் கொண்டு, தமது வலக்கண்ணினின்றும் உதிரஞ்சொரியப் பண்ணினர். அதை தூரத்திலேநோக்கி விரைந்தோடிவந்து, உதிரஞ் சொரிதலைக் கண் டார். காணலும், வாயிலுள்ள திருமஞ்சனஞ் சிந்த, கையிலிருந்த இறைச்சி சிதற, அம்பும் வில்லும் புறத்தேவிழ தலைமயிரிலே செருகப்பட்ட புஷ்பங் கள் அலைந்து சோர, ஆட்டுகின்ற கயிறு அற்றபொழுது வீழ்கின்ற நாடக ப்பாவைபோலப் பதைபதைத்து, நிலத்திலே வீழ்ந்தார். நெடுநேரம் உள் ளுயிர்த்தலின்றி, இறந்தவர்போலக் கிடந்து, ஒருவாறு தெளிந்தெழுந்து, பலமுறை கையினாலே துடைத்து, உதிரமொழுகுதல் தவிராமைகண்டு, மீட்டும் வீழ்ந்து புரண்டெழுந்து, தமது முகமெல்லாம் உதிரஞ் சோரவும் மார்பு வீங்கவும் கைகளாலடித்துக்கொண்டார். தலை பிளக்கவும் கைகள் சிதையவும் கற்களோடு மோதினர். "எமது பெருமானுக்கு இத் தீங்கு விளைந்தது எனக்குப் பகைவர்களாகிய வேடுவர்களாலோ! அல்லது இம் மலையிற் சஞ்சரிக்கும் துஷ்ட மிருகங்களாலோ ! தெளியேன். அப்பகை யைக் காண்பேனாயின், உயிரைக் கவராது விடுவேனோ!'' என்று நெடுந் தூரம் ஓடிப்பார்த்தார். வேடர்களையும் விலங்குகளையும் காணாமையால் வருந்தி மீண்டார். "மலையிடை யெனக்குவாய்த்த மரகதமணியே உம்மு டைய கண்களில் உதிரஞ்சோர்தற்குக் காரணம் யாதோ? சிறிதும் திருவாய் மலர்ந்தருளுகின்றீரில்லை ! என்னைகொல்லோ!'' என்று தழுவிக்கொண்டு, வாய்விட்டுப் பெரிது மழுதார். இவ்வண்ணம் நெடுநேரங் கழித்து, பின்பு பச்சிலைமருந்து கொண்டுவந்து பிழிவோமாயின் இது தீருமென்று கருதி,

காமுழுமையுந் திரிந்து, கண்ட இலைகளையெல்லாம் பிடுங்கி, ஓடிவந்து பிழிந்தும், உதிரம் நில்லாமையை நோக்கி, உயிர் சோர்ந்து, "இனி யான் இதற்கு யாதுசெய்வேன்" என்று ஆலோசித்து நின்றார். நிற்க, "ஊனுக்கு ஊனிடல்வேண்டும்" என்னும் பழமொழி உள்ளத்திலே தோன்றியது.

உடனே இனி யான் என் கண்ணையிடந்து அப்பினால் இறைவர் கண்ணிலிருந்து பாயும் இரத்தம் தடைபடுமென்று தீர்மானித்து, தமது கண்ணைக் கணையினாலே களைந்து, இறைவர் கண்ணிலே அப்பினார். அப்பொழுதே அப்பெருமான் உதிரத்தை மாற்றியருள; அதனைக் கண்டு, அடங்குதற்கரிய சந்தோஷசாகரத்தி லமிழ்ந்திக் கூத்தாடினார் "நான் செய்த செய்கை நன்றாநன்று" என வியந்தார். இப்படி சந்தோஷ சாகரத்திலே உலாவுஞ்சமயத்தில், அவரது முதிர்ந்த பேரன்பைச் சிவகோசமுனிவருக்குப் பின்னுங் காட்டுதற்குத் திருவுளங்கொண்டு, மற்ற இடக்கண்ணினின்றும் உதிரஞ்சோர்விக்க; அது திண்ணனாருடைய எல்லையிறந்த சந்தோஷ சாகரத்தை உறிஞ்சியது. அக்கினிநிரயத்து வீழ்ந்து நெடுந்துன்பமுற்று நீங்கிச் சுவர்க்க இன்பமுற்றோரொருவன் பின்னும் அந்நிரயத்திலே வீழ்ந்தாற் போலத் திண்ணனார் உவகைமாறி, கரையில்லாத துன்பக்கடலிலேயழுந்தி ஏங்கி, ஒருவாறு தெளிந்து, "மருந்தைக் கைகண்டேன் எனக்கு இன்னுமொருகண் இருக்கிறது; ஆதலால், இதற்கஞ்சேன்" என்று துணிந்து, தம்முடைய கண்ணைக் களைந்த காலையில், சிவபெருமான் கண் இவ்விடத்திலிருக்கின்றது என்று தெரிதற்காக, ஒரு செருப்புக்காலை அப் பெருமான் கண்ணினருகே ஊன்றிக்கொண்டு, அம்பைத் தமதுகண்ணிலே வைத்தார்.

கிருபாசமுத்திரமாகிய பெருமான் அதைச் சகிக்கலாற்றாதவராகி, வேதாகமங்கள் தோன்றிய திருவாய்மலரைத் திறந்து, "நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்ப என்னன்புடைத் தோன்றல் நில்லுகண்ணப்ப" என்று மூன்றுமுறை இனிது மொழிந்துகொண்டே அவர் திருக்கரத்தைப் பிடித்துக் கொண்டனர். பிரமாதி தேவர்கள் மண்புதையும்படி கற்பகப் பூமாரி பொழிந்தார்கள். திண்ணனார் கையிலிருந்த அம்பை யெறிந்துவிட்டு, சீகாளத்திநாதருடைய திருவடித்தாமரைகளைச் சிரசிலே சூட்டிக்கொண்டனர். சிவகோசமுனிவரும் அத்தியந்த ஆச்சரியமுடையராகி, அம் முதல்வரை வணங்கினார். அப்பெருமான் இருவினையொப்பும் மலபரிபாகமுமுடைய அவ்விருவர்களுக்கும் கிருபாநோக்கமளித்து, அவர்களை அக்கினிமத்தியிலிருந்து அந்தக்கரணமொடுக்கிய அருந்தவர்க்கும் பெறற்கரிய தமது திருவுருவத்திலே கலந்துகொண்டார். அற்றைநாள் முதலாக ஆன்றோர் சிவபெருமானருளியவாறே திண்ணனாருக்குக் கண்ணப்பனெனத் திருநாமம் வழங்குகின்றனர். என்று ஆறுநாளிலே முத்திபெற்ற அந்நாயனார் சரித்திரத்தோடு சிவகோசமுனிவர் சரித்திரத்தையும் உபதேசித்து, அவ்வரசர் வேண்டுகோளின்படியே, நக்கீரதேவர் சரித்திரத்தைக் கூறத் தொடங்கினார்.

---

# நக்கீரச் சருக்கம்

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அமுதுறழ் தமிழொண் முத்த மையசந் தனமெல் வாசங்
கமழ்குளிர் தென்ற லென்று கரையரும் பொருள்ப டாம [த்
லிமிழ்கடல் வரைப்பெ லாந்தோன் றெண்பொருள் படுநா டெள்ளி
தமிழ்முதல் பிறக்கு நாடாய்த் தயங்குமாற் பாண்டி நாடு.

(இ - ள்.) பாண்டிநாடு - பாண்டிநாடானது, அமுது உறழ் - அமிர்தத்தை ஒத்த, தமிழ் - தமிழ்ப்பாஷையும், ஒள் முத்தம் - ஒளிபொருந்திய முத்துக்களும், ஐய - அழகிய, சந்தனம் - சந்தன மரங்களும், மெல்வாசம் கமழ் - மென்மையாகிய மணம் வீசுகிற, குளிர்தென்றல் - குளிர்ந்த தென்றல்காற்றும், என்று கரை-என்று சொல்லப்படுகிற, அருபொருள் படாமல் - அருமையாகிற பொருள்கள் உண்டாகாமல், இமிழ் - ஒலிக்கின்ற, கடல் வரைப்பு எல்லாம் - நெய்தல் நிலமெல்லாம், தோன்று-உண்டாகிற, எண்பொருள் - எளிய பொருள்கள், படும் - உண்டாகின்ற, நாடு - நாட்டினை, எள்ளி - இகழ்ந்து, தமிழ் முதல் - தமிழ் முதலாகிய பொருள்கள், பிறக்கும் - உண்டாகிற, நாடு ஆய் - நாடாகி, தயங்கும் - விளங்கும் எ-று.

ஆல் - அசை. உறழ்தல் - ஒத்தல். ஐ - அழகு. கரைதல் - சொல்லுதல். எள்ளல் - இகழ்தல். தயங்குதல் - பிரகாசித்தல். (க)

மேற்படி வேறு

தன்கால் சுமக்கு முறுப்பிலான் றன்னே வலரா னிலைகலங்கிப்
பொன்கா றிதலை முலைமடவார்ப் பொருத்து துணையா மாநிலத்து
வன்கா றரியா துழல்வாரைத் தலைபாற் சுமக்கு மலையைநகு
மின்கார் மழைதோய் முடிமலய விலங்க லுடைத்தத் திருநாடு.

(இ - ள்.) தன்கால் சுமக்கும் உறுப்பிலான்றன் - தன் காலினாற் சுமக்கப்பட்ட அனங்கனாகிய மன்மதனது, ஏ அலரால் நிலைகலங்கி-பாணமாகிய மலர்களாற் றமது நிலைகலங்கிய சுந்தரமூர்த்தி நாயனாரை, பொன்கால் திதலை முலைமடவார் - பொன்னொளியை வீசுகின்ற தேமல்படர்ந்த தனங்களையுடைய பரவை நாச்சியார் சங்கிலிநாச்சியார் என்னு மிருவரிடத்தும், பொருத்து துணையா - சேர்க்குந் தூதாக, மாநிலத்து வன்கால் தரியாது உழல்வாரை - பெரிய பூமியின்கண் வலிய கால் தங்காமலுழன்றவராகிய சிவபெருமானை, தலையால் சுமக்கும் மலையை நகும்-முடியினாற் சுமக்கின்ற கைலைமலையைப் பழிக்கும், மின்கார் மழைதோய் முடிமலய விலங்கல்-மின்

லையுடைய கரிய மேகங்கள் படிகின்ற சிகரத்தையுடைய பொதிய மலையை, அத்திருநாடு உடைத்து - அப்பாண்டிநாடுடையது எ-று.

காலென்பது தென்றலெனவும், பாதமெனவும், உறுப்பிலானென்பது மன்மதனெனவும், அங்கமில்லாதவனெனவும், ஏவலராலென்பது பாணமாகிய மலரெனவும் ஏவற்றொழிலினரெனவும் பொருள்படக் கூறுதலிற் சிலேடை. நிலைகலங்கி - வினைக்குறிப்புப்பெயர். பொன் ஒளியையுணர்த்தலின் ஆகுபெயர். நகுமலய விலங்கலென இயையும். இவ்வாறன்றி மேருவைப் பழிப்பதெனப் பொருள் கொள்ளின், நிலைகலங்கி என்பதை வலித்தல் விகாரமாகவுங் கொண்டு உறுப்பிலான் ஏவலரால் நிலைகலங்கி மடவாரைத் தமக்குப் பொருந்திய துணையாகக்கொண்டு மாநிலத்துக் கால் தங்காம்லுழலும் தேவர்களைத் தலையாற் சுமக்கும் மேருமலையை நகும்மலய விலங்கலென முடிக்க. உழல்வார் ஈமிடத்தும் காலமயக்கம். (உ)

வானோ ரமுதஞ் சாபத்தான் மண்ணிற் புனலா யொழுகியது
தானோ நிலத்தி னியல்பாற்றன் றன்மை திரியா வரம்பெற்ற
மானீ ரோமற் றிதுவென்ன மதுரங் குடிகொண் டெஞ்ஞான்று
மானா தொழுகும் பொருநையாற் றரசு முடைத்தத் திருநாடு.

(இ - ள்.) அ - அந்த, திருநாடு - திருநாடானது, வானோர் அமுதம்- தேவர்களது அமிர்தமானது, சாபத்தால் - சாபத்தினால், மண்ணில் - பூமியில், புனல் ஆய் - நீர்வடிவு ஆகி, ஒழுகியதுதானோ-ஒழுகினதோ, நிலத்தின் இயல்பால்-மண்ணின் இயற்கையால், தன்மை - தன்குணம், திரியா-மாறுபடாத, வரம்பெற்ற - வரம்பெற்றிருக்கிற, மால் நீரோ - பெரிய நீரோ, இது என்ன-இது என்று சொல்லும்படி, மதுரம் குடிகொண்டு - இனிமையானது குடிகொண்டு, எஞ்ஞான்றும் - எந்நாளும், ஆனாது-நீங்காமல், ஒழுகும் - ஒழுகுகின்ற, பொருநை - பொருநை என்கிற, யாற்றரசும் - நதிபதியையும், உடைத்து - உடைத்தாய் இருக்கின்றது எ-று.

இயல்பு - இயற்கை. திரிதல் - மாறுபடுதல். பொருநையாறு - தாமிரபர்ணிநதி. அரசு பண்பாகுபெயர். மானீரோவென்பதை மால் நீரோவெனப் பிரித்து திருமாலின் திருவடியிற்பிறந்த கங்கைநீரோ வென்றுரைத்தலுமாம். (௩)

கலிநிலைத்துறை

கறங்கு பன்மணி யருவியைத் துளியொடு கலந்து
நிறங்கொண் மாமணி சேணிடைச் சிதறிட நெடுங்கைப்
பிறங்கு வெண்பிறைக் கோட்டியா னைகண்மதப் பெருநீ
ரிறங்கு மாமுகத் தேற்பன குறிஞ்சியி னிடங்கள்.

(இ - ள்.) பல்மணி - பல மணிகளோடுகூடி, கறங்கு - ஒலிக்கிற, அருவியை - அருவியாற்றை, துளியொடு கலந்து - மழைத்துளியோடு கலந்து, நிறம்கொள் - நிறத்தைக்கொண்ட, மாமணி-பெரிய மணிகள், சேணிடை

சிதறிட - மிகுந்த தூரத்தில் தெறிக்கும்படி, நெடுங்கை-நெடிய துதிக்கையினையும், பிறங்கு - விளங்குகிற, வெள்பிறை - வெண்பிறைபோன்ற, கோடு - கொம்பினையுமுடைய, யானைகள்—, பெரு - மிக்க, மதநீர் - மதஜலமானது, இறங்கும் - இறங்குகிற, மாமுகத்து - பெரிய முகத்தினால், ஏற்பன - ஏற்றுக்கொள்வன, குறிஞ்சியின் இடங்கள் - குறிஞ்சி நிலத்தினிடங்கள் எ-று.

கறங்கல் - ஒலித்தல், கறங்கு அருவியென வியையும். சேண் - தூரம். குறிஞ்சி - மலையும் மலையைச்சார்ந்த இடமுமாம். சேணிடைச் சிதறிட வென்பதற்கு ஆகாயத்தை யளாவிச் சிந்தவென்றலுமாம். (ச)

கொன்றை பூத்துழை தன்னிடங் கொண்டுகூர்ங் கோட்டு
வென்றி யேறுபெற் றண்டரைத் தாங்குபு வியா
தென்றும் யாறுதன் றலைக்கொடு முக்கணெம் மிறைபோற்
றுன்று பல்பசுச் சேரிட மாய்முல்லை தோன்றும்.

(இ - ள்.) முல்லை - முல்லை நிலமானது, கொன்றை பூத்து-கொன்றை மலர்கள் மலரப்பெற்று, உழைதன்னிடம் கொண்டு-மானைத் தன்னிடத்தே கொண்டு, கூர்ங்கோட்டு வென்றி ஏறுபெற்று-கூர்மையாகிய கொம்புகளையும் வெற்றியையுமுடைய இடபத்தையுடையதாகி, அண்டரை தாங்குபு-இடையரைத் தன்னிடத்தே கொண்டு, துன்று பல்பசுசேர் இடமாய்-மிக்க பல பசுக்கள் சேரிடமாகி, முக்கண் எம் இறைபோல் - மூன்று கண்களையுடைய எம்மிறைவன்போல, தோன்றும் - காணப்படும் எ-று.

இது சிவபெருமானுக்கும் முல்லைநிலத்துக்கும் சிலேடை. கொன்றை பூத்து - கொன்றை மலரையணிந்து. உழைதன் இடம்கொண்டு - மானைத் தன் இடதுகையிற் கொண்டு. கூர்ங்கோட்டு வென்றி ஏறுபெற்று-கூர்மையாகிய கொம்பினையுடைய வெற்றியிடபத்தை யுடையனாய், அண்டரைத் தாங்குபு - தேவரைக்காத்து, வியாது என்றும் யாறு தன் தலைக்கொடு நீங்காமல் எந்நாளும் கங்கையாற்றைத் தலையிற்கொண்டு. துன்று பல் பசு சேர் இடமாய் - மிக்க பல்வகையாகிய உயிர்கள் யாவும் சேருமிடமாகி எனச் சிவபெருமானுக் குரைத்துக்கொள்க. முல்லை - காடும் காட்டைச் சார்ந்த நிலமுமாம். (ரு)

குழலி னோசையுந் தயிர்கடை யொலியுங்கொல் லேறு
தழுவு மார்ப்புமா னிரைமணி யரவமுந் தண்ணென்
செழும லர்க்கொன்றை படுசுரும் பிசையும்வெஞ் சினத்த
மழவி டைக்குலம் வாய்விடு முழக்கமு மாரு.

(இ - ள்.) (அந்த முல்லைநிலத்தின் இடங்கள்) குழலின் ஓசையும்-வேய்ங்குழலினோசையும், தயிர்கடை ஒலியும் - தயிர்கடையும் ஓசையும், கொல் ஏறு தழுவும் ஆர்ப்பும் - கொல்லுகிற இடபங்களை அணைக்கிற ஆர

வாரமும், ஆன் நிரை மணி அரவமும் - பசுக்கூட்டங்களணிந்திருக்கிற மணிகளின் ஓசையும், தண்ணென் - குளிர்ந்த, செழுமலர் கொன்றைபடு- செழுமையாகிய மலர்களில் மொய்க்கிற, சுரும்பு இசையும் - வண்டுகளின் ஓசையும், வெம்சினத்த-கொடுங்கோபத்தையுடைய, மழவிடைக்குலம்-இளமையுள்ள இடபத்தின் கூட்டங்கள், வாய்விடும் - வாய்திறக்கிற, முழக்கமும் - ஓசையும், மாறு - (எந்நாளும்) இடையறு துடையனவாயிருக்கும் எ-று.

குழல் - பொள்ளாங்குழல். ஆ-பசு, இது னகரச்சாரியைபெற்று ஆன் என்றாயிற்று. அரவம் ரவம் என்னும் வடசொற்றிரிபு. (சு)

போர்வி டைக்குல முயர்ந்தெழு புற்றுமண் சிதறக்
கூர்ம ருப்பினாற் குத்துபு துகளெழக் குளம்பா
லார ழற்சினத் தொடுநிலந் தொட்டிமி லசைய
மூரி வாய்விடு முழக்கம்விண் ணேற்றொடு முரணும்.

(இ - ள்.) (அந்த நிலத்தில்) போர்விடைக்குலம் - போர்செய்தற்குரிய இடபக்கூட்டம், உயர்ந்து எழு புற்று மண் - உயர்ந்தெழுகின்ற புற்றினது மண், சிதற - சிதறும்படி, கூர்மருப்பினால் - கூர்மையாகிய கொம்புகளால், குத்துபு - குத்தி, துகள் எழ - புழுதியெழும்படி, குளம்பால் - குளம்புகளால், ஆர் அழல் சினத்தொடு-மிகுந்த நெருப்புப்போன்ற கோவத்துடன், நிலம்தொட்டு - நிலத்தைக் கிண்டி, இமில் அசைய - முசுப்பு அசையும்படி, மூரிவாய்விடும் - வலிமையோடு ஆரவாரிக்கிற, முழக்கம் - பேரொலியும், விண்ணேற்றொடு - பேரிடியின் ஓசையோடு, முரணும்-மாறுபடும் எ-று.

குத்துபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். மருப்பு - கொம்பு. குளம்பு - காற்குளம்பு. தொடுதல்-கிண்டுதல். (எ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தாமரை குவளை யாம்பல் சங்குசை வலமீ னன்ன
மாமைவண் டரம்பை கன்னல் கமுகமென் றவைநி றைந்து
காமரு மருத மாதர் கவினுறுப் பமைப்போ னவ்வத் [கும்.
தோமின்மா திரிகையெல்லாந் தொகுத்ததோ ரிடத்தை யொக்

(இ - ள்.) காமருமருதம் - அழகிய மருதநிலமானது, தாமரை குவளை ஆம்பல் சங்கு சைவலம் மீன் அன்னம் ஆமைவண்டு அரம்பைகன்னல் கமுகம் என்றவை நிறைந்து—, மாதர்-பெண்களது, கவின் - அழகாகிய, உறுப்பு - அவயவங்களை, அமைப்போன் - செய்யத்தொடங்கினவனாகிய பிரமன், அவ்வத்தோம் இல்மாதிரிகை எல்லாம் - அந்தந்த அவயவங்களுக்குரிய குற்றமில்லாத மாதிரி கைகளையெல்லாம், தொகுத்தது - சேர்த்து வைத்ததாகிய, ஓர் இடத்தை—, ஒக்கும் - ஒத்திருக்கும் எ-று.

செந்தாமரைமலர் மாதர் முகத்துக்கும், தாமரையரும்பு தனத்துக்கும், கருங்குவளைமலரும் கருவண்டும் கண்களுக்கும், செவ்வல்லிமலர்

அதரத்துக்கும், சங்கும் கமுகமரமும் கழுத்துக்கும், சைவலம் கூந்தலுக்கும், கயல்மீன் கண்களுக்கும், வரால்மீன் கணைக்காலுக்கும், அன்னம் நடைக்கும், ஆமை புறவடிக்கும், அரம்பை தொடைக்கும், கருப்பஞ்சாறு சொல்லுக்கும் உவமையாதலால் இங்ஙனம் கூறினர். மாதிரிகை மாதிரி (விதம்.) உறுப்பமைப்போன் - சித்திரிப்பவன் எனினுமாம். (அ)

கலிவிருத்தம்

அன்ன மந்நலா ரணிநடை கற்கவேட் டனையர்
பின்னு ழன்றுழன் றடிசிவந் தும்பெரு மையினான்
மன்னு மெய்விளர்த் ததுபெற வனத்தினுட் பதும
மென்னு மாதனத் திடையிருந் திருந்தவ மியற்றும்.

(இ - ள்.) (அம் மருதநிலத்தில்) அன்னம் - அன்னப்பறவைகள், அந்நலார் - அந்நாட்டு மகளிரது, அணிநடை - அழகிய நடையை, கற்க - (தாம்) பயில, வேட்டு - விரும்பி, அனையர்பின் உழன்று உழன்று - அவர்கள் பின்னே திரிந்து திரிந்து, அடிசிவந்தும் - கால்கள் சிவக்கப்பெற்றும், பெருமையினால் - (அந்நடையைப்) பெறாததனால், மன்னும் மெய் விளர்த்து - பொருந்திய தம் உடம்பு வெளுக்கப்பெற்று, அது பெற - அந்நடையைப் பெறுதற்கு, வனத்தினுள் - காட்டில், (நீரில்) பதுமம் என்னும் ஆதனத்திடை - பதுமாசனத்தில், (தாமரைமலராகிய இருப்பிடத்தில்) இருந்து - தங்கி, இருந்தவம் - மிக்க தவத்தை, இயற்றும் - செய்யும் எ-று.

நல்லார் - குணமும் செய்கையும் அழகும் ஆகிய இவற்றினாற் சிறந்தவர். விரும்பியது பெறாதவர்க்கு அத் துன்பத்தாலும் வெட்கத்தாலும் நிறம் வெளுத்தல் இயல்பு. பதுமாசநமாவது இரு தொடைமேலும் இரண்டு உள்ளங்காலையும் மாறித் தோன்றவைத்தல். வனத்திற்சென்று பதுமாசநத்திருந்து செய்யப்படுகிற தவம். அன்னத்திற்கும் சிலேடையாற் சொல்லப்பட்டது. அன்னங்களின் இயற்கையாயுள்ள மகளிர்பின் திரிதற்கும், அடி சிவத்தற்கும், மெய் வெளுத்தற்கும், வனத்திற் பதுமாசநத்தி லிருத்தற்கும் காரணமாகாத மகளிர்நடை கற்க விரும்புதலையும், அவர்பின் திரிதலையும், திரிந்தும் அது பெறாமையையும், மீண்டும் அது பெறக் கருதினமையையும் காரணமாகக் குறித்தலாலே ஏதுத்தற் குறிப்பணி, அரச வன்னத்திற்கு மூக்கும் கால்களும் சிவந்து உடம்பு வெளுத்திருக்குமென்ப தியல்பு. (க)

கழனி யுட்புகுந் துறுவலிப் பகட்டினேர் கடவி
யுழுந ரோதையால் வெரீஇயெழுந் தும்பரிற் பறக்கு
மழகின் மென்சிறை யோதிமத் தணிசிறை யடித்த
லொழுகு வான்கங்கை வெண்டிரை யெறிந்திட லொக்கும்.

(இ - ள்.) கழனியுள் புகுந்து - கழனிகளிற்போய், உறுவலி - மிக்க வலியுள்ள, பகட்டின் - எருமைக்கடாக்களால், ஏர்கடவி - ஏர் செலுத்தி, உழுநர் - உழுவோரது, ஓதையால் - ஓசையால், வெரீஇ - அஞ்சி, எழுந்து - கிளம்பி, உம்பரின் - ஆகாயத்தில், பறக்கும் - பறக்கிற, அழகின் - அழகினையும், மெல்சிறை - மெல்லிய சிறகினையுமுடைய, ஓதிமத்து - அன்னங்களின், அணிசிறை - அழகிய சிறகுகள், அடித்தல் - அடித்துக்கொள்வது ஒழுகு - பெருகுகிற, வான்கங்கை - ஆகாயகங்கையின் வெள்திரை - வெண்மையாகிய அலைகளை, எறிந்திடல் ஒக்கும் - வீசுவதை யொத்திருக்கும் எ-று.

ஆகாயத்திற் பறக்கிற வெண்மையான அன்னப்பறவைகளின் சிறகுகள் அடித்துக்கொள்ளுதல் ஆகாய கங்கையின் வெண்மையாகிய அலைகள் வீசுதற்கு உவமம். (௧0)

சேல்க ளுண்டக டார்த்திய மென்சிறைச் செய்ய
கால வோதிமஞ் சிறுதிரை யசைக்குமென் கமலக்
கோல நாண்மலர்ச் சேக்கையிற் பெடைதழீஇக் கொண்டு
சாலும் வண்டிசை கேட்டுறங் குவமலர்த் தடங்கள்.

(இ - ள்.) மலர்த்தடங்கள் - புஷ்ப தடாகங்கள், சேல்கள் உண்டு - மீன்களையுண்டு, அகடு ஆர்த்திய - வயிற்றை நிரப்பின, மெல்சிறை - மெல்லிய சிறகுகளையும், செய்ய கால் - செவந்த கால்களையுமுடைய, ஓதிமம் - அரச வன்னங்கள், சிறுதிரை அசைக்கும் - சிறிய அலைகளால் அசைக்கப்படுகிற, மெல் - மென்மையாகிய, கோலம் - அழகிய, நாள் - புதிய, கமலமலர் - தாமரை மலராகிய, சேக்கையில் - படுக்கையில், பெடை - தம்பெடைகளை, தழீஇக்கொண்டு - அணைத்துக்கொண்டு, சாலும் - மிக்க, வண்டு இசை - வண்டுகளின் இசைப்பாட்டை, கேட்டு - கேட்டுக்கொண்டு, உறங்குவ - தூங்குவன எ-று.

சேல் ஈண்டைக்கேற்ப மீன் பொதுப்பெயரைக் குறித்தது. அலைகளால் அசைக்கப்படுகிற மலர்களில் ஆடுகிற ஊசலிற்போல உறங்கின வென்பதாம். (௧௧)

மாமலர்க்கணை யோன்சிலை யாயுயிர் வருத்து
தீமை யின்பய னுறலென மள்ளராற் செய்ய
காமர் தீங்கரும் பாலையா டப்படு கவ்வை
தாம யற்கணெற் போர்கடா விடுமொலி தாழ்க்கும்.

(இ - ள்.) மா - பெருமையுள்ள, மலர்க்கணையோன் - புஷ்ப பாணங்களையுடைய மன்மதனது, சிலையாய் - வில்லாகி, உயிர் - உயிர்களை, வருத்து - வருத்துகிற, தீமையின் பயன் - பாவத்தின் பயனை, உறல் என - அடைவதுபோல, செய்ய - செவந்த, காமர் - அழகிய, தீங்

கரும்பு - இனிய கரும்புகள், மள்ளரால் - உழவர்களால், ஆலை ஆடப்படு- ஆலையாட்டப்படுகிற, கவ்வை - ஒலி, தாம் —, அயற்கண் - பக்கத்தில், செற்போர் - செற்போரை, கடாவிடும் - போடுகிற, ஒலி - ஓசையை, தாழ்க்கும் - தாழ்த்திவிடும். எ-று.

சிவபெருமானது யோகநிலையைக் கலைத்ததனால் மலர்க்கணைக்கு மா வென்னும் விசேடணம் கொடுக்கப்பட்டது. (கஉ)

யாமு ழத்தியர் காற்கிணை யாயிழி வெய்தத்
தாமு லைத்தட மிடற்றொடு நிகர்த்துயர் தருக்குச்
சாமு ருக்குது மெனத்தெங்கின் காய்விழத் தாக்கிக்
காமர் நாகிளங் கமுகொடிப் பனவராற் கணங்கள்.

(இ - ள்.) வரால் கணங்கள் - வரால்மீன் கூட்டங்கள், யாம் - நாங்கள், உழத்தியர் - கடைசியரது, காற்கு இணையாய் - கணைக்கால்களுக்கு உவமை ஆகி, இழிபு எய்த - தாழ்வடைய, தாம் - இவைதாம், முலைத் தடம் - தனதடங்களோடும், மிடற்றொடும் - கழுத்தோடும், நிகர்த்து - ஒத்து, உயர் - மேன்மைபெறுகிற, தருக்கு - செருக்கு, சா - அழிய, முருக்குதும் - அழிப்போம், என - என்று, தெங்கின்காய் - தென்னங் காய்கள், விழ - விழும்படி, தாக்கி - (அவற்றின்மேல்) மோதி, காமர் - அழகிய, நாகு இளங்கமுகு - மிக்க இளங் கமுகமரங்களை, ஒடிப்பன - ஒடித்து விடுவன எ-று.

தென்னங்குரும்பை தனத்தோடும் கமுகு கழுத்தோடும் ஒத்திருக் கும் என்றதாயிற்று. நாகிளமை என்றது ஒருபொருட் பன்மொழி. (கங)

வரைக ளொப்பன போரொழுக் கியபுரி வரையி
னருவி யொப்பன சுற்றுபா கடுபுகை யவைசூழ்
கருமு கிற்குல மொப்பன தீங்கழைக் கரும்பின்
றிரள வற்றினைச் சூழ்ந்தகா டொப்பன செறிந்து.

(இ - ள்.) போர் - போர்கள், வரைகள் ஒப்பன - மலைகளை நிகர்ப் பன, ஒழுக்கிய புரிகள் - அவற்றை யிறுக்கின வைக்கோற் கயிறுகள், வரையின் - மலைகளினின்றும் ஒழுகுகிற, அருவி ஒப்பன - அருவியாற்றை நிகர்ப்பன, சுற்று - சுற்றிலும், பாகு அடுபுகை - பாகுகாய்ச்சுதலாலுண் டாகிற புகையானது, அவைசூழ் - அந்த மலைகளைச் சூழ்கிற, கருமுகில் குலம் ஒப்பன - கரிய மேகத்தொகுதியை நிகர்ப்பன, கரும்பின் திரள் - கரும்பின் கூட்டங்கள், அவற்றினை - அந்த மலைகளை, சூழ்ந்த - வளைந்த, காடு ஒப்பன - காட்டை நிகர்ப்பன எ-று.

அடுபுகை - வினைத்தொகை, இதனை காலங்கரந்த பெயரெச்ச மெனவுங் கூறுவர். புரி - முறுக்கு. அடுதல் - காய்ச்சுதல். கழைக்கரும்பு- கருப்பங்கழி. (கச)

நிரந்த மஞ்சள்கள் வாழையின் குலைதொடு நெடிய
வரம்பை பாளைவாய்க் கமுகெழிற் குலையினை யடுக்கு •
முரிஞ்சு மற்றவை தெங்கினொண் குலையையவ் வுயர்ந்த
குரும்பை நெட்டிலைத் தாழைதை வருமுகிற் குலத்தை.

(இ - ள்.) நிரந்த - வரிசையாயிருக்கிற, மஞ்சள்கள் - மஞ்சட் செடிகள், வாழையின் குலைதொடும் - வாழைத்தாறுகளைத் தீண்டும், நெடிய அரம்பை - உயர்ந்த வாழைமரங்கள், பாளைவாய் - பாளைகளையுடைய, கமுகு - கமுகமரங்களின், எழில் - அழகிய, குலையினை - குலையை, அடுக்கும் - கிட்டும், உரிஞ்சும் - உரிஞ்சுகிற, அவை - அக் கமுகுகள், தெங்கின் - தென்னையின், ஒள் - ஒட்பமாகிய, குலையை - குலையினைத் தொடும், அ - அந்த, உயர்ந்த - உயர்ந்திருக்கிற, குரும்பை நெடு இலை - குரும்பைகளையும் நெடிய இலைகளையுமுடைய, தாழை - தென்னமரங்கள், முகில் குலத்தை - மேகக் கூட்டத்தை, தைவரும் - தடவும் எ - று.

இன்குலை இனிய குலையெனினுமாம். குரும்பை - தென்னம்பிஞ்சு. தைவரல் - தடவல், பகுதி தைவா. (கரு)

கருந்திண் கோட்டன குவிமுலைச் செய்யகட் காரா
னிருந்தண் பன்மல ரிலஞ்சியுண் மேய்த்திடு மிளைஞர்
பெருந்தண் மாம்பழ மெறிகரும் பின்குணில் பிறங்கு
சுரும்புண் டாமரைத் தடத்துவீழ்ந் தனக்குழாந் துரக்கும்.

(இ - ள்.) கருந்திண் கோட்டன - கரிய வலிய கொம்பினையுடையனவாகிய, குவிமுலைச் செய்ய கண்காரான் - குவிந்த முலைகளையுஞ் சிவந்த கண்களையுமுடைய எருமைகளை, இருந்தண்பல் மலர் இலஞ்சியுள் - பெரிய குளிர்ந்த பலவகை மலர்களையுடைய குளங்களில், மேய்த்திடும் - மேய்க்கின்ற, இளைஞர் - சிறுவர்கள், பெருந்தண் மாம்பழம் - பெரிய இனிய மாங்கனிகளை, எறி - (விழும்படி) வீசுகின்ற, கரும்பின் குணில் - கருப்பந் துண்டுகள், பிறங்கு - விளங்குகின்ற, சுரும்பு உண் - வண்டுகள் தேனுண்கின்ற, தாமரைத் தடத்து - தாமரைத் தடாகங்களில், வீழ்ந்து - விழுந்து, (அங்குள்ள) அனம் குழாம் - அன்னக் கூட்டங்களை, துரக்கும் - ஓட்டும் எ - று.

குவிமுலை யென்றது பால்மடியை. குணில் - குறுந்தடி. துரத்தல் - ஓட்டுதல். (கசு)

குளிர்கொண் முத்தொடு முகையிற்செய் சிற்றிலிற் குழிசி
வளையு மிப்பியுங் கொண்டனத் தூவிமேல் வயங்கு
மொளிகொள் செந்துகிர்ப் பாவையை யிருத்திமற் றுள்ளங்
களிகொள் பேதைய ராடுவ புன்னையங் கானல்,

(இ - ள்) புன்னை - புன்னைமரங்களையுடைய, அங்கானல் - அழகிய நெய்தனிலத்தினிலங்கள், உள்ளங் களிகொள் பேதையர் - மனக்களிப்புக்கொண்ட அறியாத சிறுவர்கள், குளிர்கொள் முத்தொடு - குளிர்ச்சியைக்கொண்ட முத்துக்களாலும், முகையின் - அரும்புகளாலும், செய் - (தாம்) செய்த, சிற்றிலின் - சிறு வீடுகளில், குழிசி - பானையில், வளையும் - சங்குகளையும், இப்பியும் - முத்துச் சிப்பிகளையும், கொண்டு—, அனத் தூவிமேல் - அன்னப்பறவைகளின் சிறகின்மேலே, வயங்கும் ஒளிகொள் - விளங்குகின்ற பிரகாசத்தைக் கொண்ட, செந்துகிர்ப் பாவையை - சிவந்த பவளத்தாலாகிய பதுமையை, இருத்தி - வைத்து, ஆடுவ - விளையாடப் பெறுவன எ-று.

முகை - மலரும் பருவத்தரும்பு. இதனை மொட்டு என்றும் போது என்றுங் கூறுவதுண்டு. குழிசிவளையு மிப்பியுங்கொண்டு என்பதற்கு வளையையும் இப்பியையும் விளையாடுகிற சிறு குடமாகக் கொண்டு என்றுரைத்தலுமாம். கானல் - கடற்கரைச்சோலை. (கஎ)

ஒழுகு தீம்புனற் கொழுங்கய லொடுவரால் கொடுத்துக்
கழியு நுண்ணிடைக் கொடிச்சியர் கொடிச்சியர் கையிற்
பழுதி லின்சுவைக் குறிஞ்சித்தேன் சுடர்கெழு பசும்பொற்
குழைகட டந்தகட் கடைச்சியர் கடைச்சியர் கொள்வார்.

(இ - ள்.) கழியும் நுண் இடைக் கொடிச்சியர் - மெலிகின்ற நுண்ணிய கொடிபோன்ற இடையினையுடையவர்களாகிய, கொடிச்சியர் - குறிஞ்சி நிலத்துப் பெண்களின், கையில் - கைகளில், ஒழுகு தீம்புனல் - பெருகுகின்ற இனிய நீரிற் சஞ்சரிக்கின்ற, கொழுங்கயலொடு-கொழுத்த கயல் மீன்களையும், வரால் - வரால்மீன்களையும், கொடுத்து—, சுடர்கெழு பசும்பொன் குழை - ஒளிவிளங்குகின்ற பசிய பொன்மயமான காதணிகளை, கடந்த - தாண்டி நீண்டுசென்ற, கண் - கடைக்கண்களையுடையவர்களாகிய, கடைச்சியர் - மருதநிலத்துப் பெண்கள், பழுது இல் - குற்றமில்லாத, இன்சுவை, இனிய உருசியையுடைய, குறிஞ்சித்தேன்-குறிஞ்சிநிலத்திலுள்ள தேனை, கொள்வார் - பெற்றுக் கொள்வார்கள் எ-று.

கழிதல்-மெலிதல், ஒடிதல் எனினுமாம். கொடிச்சியர்-குறத்தியர். ()

முருந்தெ யிற்றிய ரெயிற்றியர் கருங்குழன் முல்லை
யரும்ப விழ்ந்தபூ முடிப்பர்க ளணிமுலை யாகும்
பெருங்கு டத்தியர் குடத்தியர் பிறங்குகோங் கரும்பு
விரிந்த பூவினுட் பொற்றுகள் பூசுவர் மெய்யில்.

(இ - ள்.) முருந்து எயிற்றியர் - மயிலிறகின் அடிபோன்ற பற்களையுடையவர்களாகிய, எயிற்றியர் - வேடப்பெண்கள், (குறிஞ்சி நிலத்துப்

பெண்கள்) கருங்குழல் - (தமது) கரிய கூந்தலில், முல்லை - முல்லைக் கொடியின், அரும்பு அவிழ்ந்த பூ-(முன்) அரும்பாகிப் (பின்) மலர்ந்த பூக்களை, முடிப்பர்கள் - சூட்டிக்கொள்வர், அணிமுலை ஆகும் பெருங்குடத்தியர்-பெரிய குடங்கள்போலும்தனங்களை யுடையவர்களாகிய, குடத்தியர்-இடைச்சிகள், (முல்லை நிலத்துப் பெண்கள்) மெய்யில் - (தம் உடம்பில்), பிறங்கு - விளங்குகின்ற, கோங்கு - கோங்கு மரத்தின், அரும்புவிரிந்த பூவினுள் - அரும்பாகி மலர்ந்த மலரினுள்ளே உள்ள, பொன்துகள் - பொற்பொடிபோன்ற மகரந்தப்பொடியை, பூசுவர்-பூசிக்கொள்வர் எ-று.

எயிற்றியர் என்பதற்கு ஆண்பால் எயினர். குடத்தியர் - என்பதற்கு ஆண்பால் குடவர். தயிர் பால் நெய் முதலிய நிறைந்த குடங்களை யுடையவராதலால் இவர்க்கு இப்பெயர் வாய்ந்ததுபோலும். (கக)

கொம்ப ரொத்தசிற் றிடையுழத் தியர்கள்கட் கொண்டு
பம்ப ரத்திய லாடவர் மனம்படப் பரந்த
சம்ப ரத்திய முலைப்பரத் தியர்தளர் மருங்கு
லம்ப ரத்தியர் பரத்தியர் விலைமுத்த மளப்பார்.

(இ - ள்.) கொம்பர் ஒத்த சிறு இடை - பூங்கொம்புபோன்ற சிறிய இடையினையுடைய, உழத்தியர்கள் - மருதநிலப் பெண்களிடத்தினின்றும், கள்கொண்டு - கள்ளைப்பெற்றுக்கொண்டு, ஆடவர்மனம் - புருஷர்களது நெஞ்சம், பம்பரத்து இயல்பட - பம்பரத்தின் தன்மை அடையும்படி (மிகச் சுழலும்படி), பரந்த—, சம்பர் அத்திய - எலுமிச்சம் பழங்களைப்போன்ற, முலைப்பாரத்தியர் - ஸ்தநபாரங்களை யுடையவர்களும், தளர்மருங்குல் அம்பரத்தியர் - ஆகாயம்போன்ற தளர்ந்த இடையினை யுடையவர்களுமாகிய, பரத்தியர் - நெய்தநிலத்துப் பெண்கள், முத்தம் - முத்துக்களை, விலை - கிரயமாக அளப்பர்-அளந்து கொடுப்பார்கள் எ-று.

பரந்தமுலையென வியைத்துரைத்துக் கொள்க. சம்பு எலுமிச்சை. இது ஜம்பீரம் என்னும் வடசொற்றிரிபு. அத்துதல் - ஒத்துதல். கட்புலனாகாமையால் இடைக்கு ஆகாயம் உவமை கூறலாயிற்று. இதனால் மருதநிலத்துக்கும் நெய்தநிலத்துக்கும் அண்மை கூறப்பட்டது. (உ0)

இன்ன தன்மைய வளங்கெழு பாண்டிநா டென்னு
மன்ன மன்னவ டிருமுக மண்டல மாகி
மன்னும் விண்ணவர் பொன்னக ரத்தினை மறுக்கும்
பொன்னி னன்மணி மாமதின் மதுரையம் புரமே.

(இ - ள்.) விண்ணவர் பொன் நகரத்தினை - தேவர்களது பொன்னுலகத்தை, மறுக்கும் - தடுக்கின்ற, பொன்னின் நல்மணி- பொன்னினு

லாகிய நல்ல இரத்தினங்களிழைக்கப்பட்ட, மாமதில் - பெரிய மதிலினை யுடைய, மதுரை அம்புரம்-அழகிய மதுரை நகரானது, இன்னதன்மைய- இப்படிப்பட்ட தன்மையையுடைய, வளங்கெழு - பல வளங்களும் நிறைந்த, பாண்டிநாடு என்னும் - பாண்டியநாடென்கின்ற, அன்னம் அன்னவள் - அன்னம்போன்ற (நடையினையுடைய) மகளினது, திருமுக மண்டலமாகி - அழகிய முகம்போன்ற தன்மையதாய், மன்னும் - நிலை பெறும் எ-று.

மறுக்கும் புரமென வியையும். பொன்னுலகத்தைத் தனக் குவமை யாகாதென மறுதலிக்கு மென்றவாறு. மதியொடு இயைத்து பொன் னுலகத்தையளாவிய மதில் என்றலுமாம். (உக)

தேடி நான்முகன் செங்கண்மால் காண்கிலான் றிங்கள்
சூடி னடி யார்மனத் தான்மறைத் தொகுதி
பாடி னருளாலறு பத்துநா லாட
லாடி னனதி லெனினதன் பெருமையா ரறைவார்.

(இ - ள்.) அதில் - அம்மதுரையில், நான்முகன் - பிரமதேவனும், செங்கண்மால் - சிவந்த கண்களையுடைய, ஸ்ரீ மஹாவிஷ்ணுவும், தேடிக் காண்கிலான் - தேடி அறியப்படாதவனும், திங்கள் சூடினன் - பிறைச் சந்திரனைச் (சடையில்) சூடியவனும், அடியார் மனத்தான் - (அன்பால் நினைக்கின்ற) அடியவர்களது உள்ளக்கமலத்தில் உள்ளவனும், மறைத் தொகுதி பாடினன் - வேதங்களின் கூட்டத்தாற் புகழப்பட்டவனு மாகிய சோமசுந்தரக்கடவுள், அருளால் - (உயிர்கள் மாட்டுக் காரண மின்றித் தன்னிலையில் தோன்றிய) திருவருளாலே, அறுபத்துநால் ஆடல் - அறுபத்துநான்கு திருவிளையாடல்களை, ஆடினன் எனின் - செய்தருளினனென்றால், அதன்பெருமை - அந்நகரத்தின் சிறப்பை, அறைவார்-சொல்லவல்லவர், யார் - யாவர் எவருமில்லை என்றபடி எ-று.

இதனால் அந்நகரம் பொன்னுலகத்தினுஞ் சிறந்ததென்பது கூறப் பட்டது. (உஉ)

மொய்வம் பார்மலர் மிகநனி போர்த்திசை முழுதுஞ்
செய்வண் டார்த்திட வொழுகுறும் வைகையின் செல்லு
மைவந் தாடொளிர் மணிசெய்பொன் மாடமா மதுரைத்
தெய்வஞ் சாத்திய பன்மலர் மாலையிற் றிகழும்.

(இ - ள்.) மொய் - நெருங்கிய, வம்புஆர் - வாசனை நிறைந்த, மலர் - பலவகைப் பூக்களை, மிகநனி - மிகவும் அதிகமாக, போர்த்து - (தன் மேல்) மூடப்பெற்று, இசைமுழுதுஞ் செய் - இசைப்பாட்டு முழு வதும் பாடவல்ல, வண்டு - வண்டுகள், ஆர்த்திட - ஆரவாரஞ்செய்

யும்படி, ஒழுகுறும் - பெருகுகின்ற, வைகை - வைகையாறுனது, விண் செல்லும் - ஆகாயத்துச் செல்லுகின்ற, மை - கரிய மேகங்கள், வந்து ஆடு - வந்து தங்கப்பெற்ற, ஒளிர் - விளங்குகின்ற, மணிசெய் - இரத்தினங்களிழைத்த, பொன் - பொன்மயமான, மாடம் - மாளிகைகளையுடைய, மா - பெரிய, மதுரை - மதுரை நகரத்துக்கு, தெய்வஞ் சாத்திய - தெய்வத்தாற் சூட்டப்பட்ட, பல்மலர் மாலையின் - பலவகை மலர்களால் தொடுத்த மாலைபோல, திகழும் - விளங்காநிற்கும் எ-று.

பொன்-அழகு என்றலுமொன்று. மதுரையில் எழுந்தருளியிருக்கிற சிவபெருமானுக்குச் சாத்தப்பட்ட மலர்மாலைபோல வெனினு மமையும். (உ௩)

நிலைபெ யர்ந்தயல் செல்கலாத் தாரகை நிரையி
னிலகி வம்பல ரிவையியங் காவகை யென்னென்
றலகில் விம்மித முறச்செயு மந்தரத் தகடு
தலையு ரிஞ்சுயர் கோபுரத் துறுசுடர்ச் சாலம்.

(இ - ள்.) அந்தரத்து அகடு - ஆகாயமத்தியில், தலை உரிஞ்ச - தன்சிகரம் பொருந்தும்படி, உயர் - உயர்ந்த, கோபுரத்து - (அந்நகரத்தின்) கோபுரத்தினது, உறு - மிக்க, சுடர்ச்சாலம் - ஒளிக்கூட்டம், நிலைபெயர்ந்து அயல் செல்கலா - (தமது) இடம் விட்டுப் பெயர்ந்து வேறிடங்களிற் செல்லாது ஓரிடத்தில் நிலையாய் நிற்கின்ற, தாரகை நிரையின் - நக்ஷத்திரக் கூட்டம்போல, இலகி - விளங்கி, வம்பலர் - புதியவர், இவை - இந் நக்ஷத்திரக் கூட்டங்கள்; இயங்காவகை - சஞ்சரியாத விதம், என் - என்ன, என்று—, அலகு இல் - அளவில்லாத, விம்மிதம் - ஆச்சரியத்தை, உற - அடையும்படி, செய்யும்—, எ-று.

விம்மிதம் விஸ்மிதம் என்னும் வடசொற்றிரிபு. தாரகை தாரகா என்னும் வடசொற்றிரிபு. நிரை வரிசையுமாம். சாலம் ஜாலம் என்னும் வடசொற்றிரிபு. (உ௪)

அங்கண் மாடத்தின் மேற்பயின் மடந்தைய ரனம்வான்
கங்கை யங்கம லத்திரள் வளையவூண் கருதிப்
பொங்கு மாசையிற் புகவதி னுறுமன மிவைக
டங்க டொல்குல மன்மையிற் றனித்தனி யிரியும்.

(இ - ள்.) அங்கண் மாடத்தின்மேல் - அழகிய இடத்தையுடைய அந்நகரத்து மாளிகையின்மேல், பயில் - பொருந்துகின்ற, மடந்தையர் - மகளிரது, அனம் - அன்னங்கள், வான்கங்கை - ஆகாச கங்கையிலுள்ள, அங்கமலத்திரள் - அழகிய தாமரைக்கூட்டத்தின், வளையம் - உட்சுருளாகிய, ஊண் - உணவை, கருதி - (பெறவேண்டுமென்று) நினைத்து,

பொங்கும் ஆசையின் - மிகுந்த ஆசையுடன், புக - (ஆகாயகங்கைக்குச்) செல்ல, அதில் உறும் அனம் - அக்கங்கையிலுள்ள அன்னங்கள், இவைகள் - இவ்வன்னங்கள், தங்கள் தொல்குலம் அன்மையின் - தங்கள் பழையகுலம் அல்லாமையால், (கண்டு அஞ்சி) தனித்தனி இரியும் - தனித் தனியே ஓடும் எ-று.

அங்கண் - அவ்விடம் எனினுமாம். மடந்தையர் பருவங் குறியாது பெண்பொதுவைக் குறித்தது. மடந்தையரனம் என்பதற்கு மகளிரால் ஊட்டி வளர்க்கப்படும் அன்னம் என்றலுமாம். வளையம் தாமரைத் தளிர்ச்சுருள். புதியவற்றைக் கண்டஞ்சுதல் பறவைகட் கியல்பு. இது ஞல் மாடங்களின் உயர்வு தோன்றிற்று. (உரு)

மெலிநு சுப்பினார் களிமயின் மாடத்தின் மேற்றந்
நலிப கைப்பெரும் பாம்புகள் வைகலு நடுங்க
வுலவ லாலிரு சுடர்களு நனியுள முவந்து
மலிபொன் மாடத்திற் றமகதிர் வேறுறு வழங்கும்.

(இ - ள்.) மெலிநுசுப்பினார் - மெலிந்த இடையினையுடைய மகளிரின், களிமயில் - களிப்பினையுடைய மயில்கள், மாடத்தின்மேல் - உப்பரிகைகளின் மேலே, தம்நலிபகை - தம்மை வருத்துகின்ற பகையாகிய, பெரும்பாம்புகள் - பெரிய பாம்புகள், (ராகு கேதுக்கள்) நடுங்க - அஞ்சி நடுங்கும்படி, வைகலும் - எந்நாளும், உலவலால் - உலாவுதலால், இருசுடர்களும் - சூரியசந்திரரிருவரும், நனி உளம் உவந்து - மிகவும் மனமகிழ்ந்து, மலிபொன் மாடத்தில் - பொன்மயமாகிய அம் மாடங்களில், தமகதிர் - தமது கிரணங்களை, வேறு உறு - மாறுமல், வழங்கும் - வீசுவர் எ-று.

சந்திர சூரியர்களைப் பற்றவந்த ராகு கேதுக்களென்கிற பாம்புகள் அம் மண்டலம் வரையி லுயர்ந்த மாடங்களின்மேலுள்ள மயில்களைக் கண்டு பயந்தோடுமென்ற தாயிற்று. வேறுறுமல் வழங்குதல் அஞ்சாது தம் அருகிலிருத்தல். மெலிதல் - இளைத்தல். (உசு)

விண்டொ டர்ந்தவே ரங்கடம் மேற்புறத் தாடும்
பண்ட ருங்குத லைப்பசுங் கிளிகடம் பணைத்தோட்
டொண்டை வாயினர் விழைதலிற் பிடித்திடத் தொடரும்
வண்டில் பூங்கண்ணி விஞ்சையர் சூழ்தர வயங்கும்.

(இ - ள்.) விண்தொடர்ந்த - ஆகாயத்தை அளாவிய, வேரங்கள் - செய்குன்றுகள், தம் மேற்புறத்து ஆடும் - தம்மேலிடத்தில் விளையாடுகின்ற, பண்தரும் - இசைப்பாட்டை ஒக்கின்ற, குதலை - மழலைச் சொற்களையுடைய, பசுங்கிளிகள் - பசிய கிளிகளை, தம் - தமது, பணைத்தோள் தொண்டைவாயினர் - மூங்கில்போலுந் தோள்களையுங் கொவ்வைக்கனி

போலும் ...ாயினையுமுடைய மனைவியர், விழைதலின் - விரும்புதலால், பிடித்திட -(அவற்றைப்)பிடிக்க, தொடரும் - பின் தொடர்கின்ற, வண்டு இல் பூங்கண்ணி விஞ்சையர் - வண்டுகளில்லாத பூமாலையையுடைய வித்தியாதரர்கள், சூழ்தர - சூழும்படி, வயங்கும் - விளங்கும் எ-று.

வேரம் - செய்குன்று, இது செல்வச் சிறுமியர் விளையாட்டயர்தற் பொருட்டுச் செய்யப்படுகிற செயற்கைமலை. தேவர்கள் தரிக்கிற மாலையில் வண்டுகள் மொய்க்காவாதலால் வண்டில் பூங்கண்ணி யென்றார். மாடங்களின்மேல் விளையாடுங் கிளிகள் வயங்கும் என்றலுமொன்று. (உஎ)

விண்ண கட்டினைத் தொடுமுடி யேறுதல் வேட்ட
வெண்ணி றப்புறாப் பறந்தரு கேசெல விளங்கு
மண்ணு றுத்திய செம்மணி வேரமா மலரி
னொண்ணி றத்தனந் தேடழற் றாணுவை யொக்கும்.

(இ - ள்.) விண் அகட்டினை - ஆகாய மத்தியை, தொடு - அளாவுகின்ற, முடி - (தன்) சிகரத்தில், ஏறுதல் - ஏறிச் செல்லுதலை, வேட்ட - விரும்பிய, வெண் நிறம்புறா - வெண்மையான நிறத்தையுடைய புறா, பறந்து அருகே செல - (தன்) அருகிற் பறந்து செல்லும்படி, விளங்கும் - விளங்குகின்ற, மண்ணுறுத்திய செம்மணி - அழகாகக் கடைந்து சீர் திருத்தப்பட்ட சிவந்த இரத்தினங்களிழைத்த, வேரம் - செய்குன்று, மாமலரின் - பெரிய தாமரை மலரில் வசிக்கின்ற, ஒள் நிறத்து - ஒள்ளிய நிறத்தையுடைய, அனம் - அன்னவுருவாகிய பிரமதேவனால், தேடு - (திருமுடி)தேடப்பட்ட, அழல் தாணுவை - அனற்பிழம்பி னுருவமாகிய பரமசிவனை, ஒக்கும்—, எ-று.

தாணு ஸ்தாணு என்னும் வடசொற்றிரிபு. செய்குன்று அனற் பிழம்பாகிய தாணுவுக்கும், புறா அன்னவடிவங்கொண்டு தேடிய பிரமனுக்கும் உவமம். இதில் செய் குன்று செந்நிற மணிகளால் ஆயது என்பது விளங்கும். (உஅ)

நெடிய வெண்சுதை மாடத்தின் விரிந்தவெண் ணிலவுங்
கடவுள் வான்கங்கை வெள்ளமும் வேற்றுமை காணப்
படுக லாமையிற் கங்கைவேட் டெய்திய பரிதி
வடிவ மென்சிறைப் புட்களோ டன்னங்கண் மருளும்.

(இ - ள்.) நெடிய - உயர்ந்த, வெள்சுதை மாடத்தின் - வெள்ளிய சுண்ணச்சாந்து தீற்றிய மாடங்களின்மேல், விரிந்த—, வெள் நிலவும் - வெள்ளிய சந்திரகாந்தியும், கடவுள் வான்கங்கை வெள்ளமும் - தெய்வத் தன்மையுள்ள ஆகாச கங்கையின் வெண்மையான பெருக்கமும், வேற்றுமை காணப்படுகலாமையின் - வேறுபாடு காணப்படாமையால், (ஒத்திருத்தலால்) கங்கைவேட்டு எய்திய - அக்கங்கையை விரும்பிவந்த, பரிதி

வடிவம் - சக்கரம்போன்ற வடிவத்தையுடைய, அன்னங்கள் - அன்னப் பக்ஷிகள், மெல்சிறைப் புட்களோடு - மெல்லிய சிறகுகளையுடைய மற்ற்றைப் பறவைகளுடன், மருளும் - (கங்கை இன்னதென்று அறியாது) மயங்கும் எ-று.

கங்கைக்குத் தெய்வத்தன்மை திருமாலின் திருவடியிற் பிறத்தலும் தன்னில் ஒருதரம் மூழ்கினவர்களையும் உயர்கதி யடைவித்தலும் முதலியன. பரிதி - வட்டம், அது அவ்வடிவினதாகிய சக்கரத்துக்காயினமையால் ஆகுபெயர். அன்னப் பறவைக்குச சக்கிவாகம் என்னும் வடமொழிப்பெயருண்டாதலால் பரிதி வட்டவடிவம் என்பது அன்னத்தோடு சேர்க்கப்பட்டது. இனி பரிதி வடிவமென் சிறைப்புள் - சக்கரவாகம் என்றலுமாம், புட்கள் - தம்பார்ப்புகளுமாம். (உக)

இருவி சும்புதோய் மாடமேற் சுருங்கையி லிருந்து
திருவி ளங்குமா நகரணி பார்த்திடுஞ் செய்ய
வரிநெ டுங்கணார் தோட்கிளி கொத்தலின் வளர்ந்த
வுருவி ளங்கமு கின்குலை செழும்பழ முதிர்க்கும்.

(இ - ள்.) இருவிசும்புதோய் - பெரிய ஆகாயத்தை யளாவிய, மாடமேல் - மாடங்களின்மேல், சுருங்கையில் - முன் இடங்களில், இருந்து - பொருந்தி, திருவிளங்கும் மாநகர் அணி பார்த்திடும் - திருமகள் விளங்குகின்ற பெரிய அந்நகரத்தின் அழகைப் பார்க்கின்ற, செய்யவரி நெடுங்கணார் - சிவந்த ரேகைகளையுடைய நீண்ட கண்களையுடைய மகளிரின், தோள்கிளி-தோள்களிலுள்ள கிளிகள், கொத்தலின்-(தம் அலகாற்) குத்துதலால், வளர்ந்த - (அம்மாடமளவு முயர்ந்து) வளர்ந்த, உரு இளங்கமுகின் - அழகிய இளைய பாக்குமரங்களின், குலை - குலைகள், செழும் பழம்-செழுமையான பழங்களை, (பாக்குகளை) உதிர்க்கும்-சிந்தும் எ-று.

உரு-நிறமெனினுமாம். சுருங்கை - நுழைவாயில் என்றலுமொன்று.

இனைய வாம்பெரு வளம்பல சிறந்தவவ் விணையி
லனக மாநகர் வெண்குடைச் செய்யகோ லரசன்
புனித வானவன் றலைக்கொளத் திங்களம் புத்தே
டனது தொல்குல விளக்கமோர் வழுதிபைந் தாரான்.

(இ - ள்.) இனைய ஆம் - இத்தன்மையவாகிய, பல பெருவளம் - பலவாகிய பெரிய வளப்பங்கள், சிறந்த - மிகுந்த, அ இணை இல் அனகமாநகர் - ஒப்பில்லாத குற்றமற்ற பெரிய அந் நகரத்தின், வெள்குடைச் செய்யகோல் அரசன் - வெள்ளிய கொற்றக்குடையையுஞ் செங்கோலையுமுடைய மன்னனாகிய, ஓர் வழுதி-ஒப்பற்ற பாண்டியன், புனிதவானவன்-பரிசுத்தனாகிய பரமசிவன், தலைக்கொள் - (தன்) தலையிற் சூடிய, அத்திங்கள் அம்புத்தேள் தனது - அப்படிப்பட்ட சந்திரதேவனது, தொல்குல

விளக்கம் - பழைய குலத்திற்கு விளக்குப்போன்றவன், பைந்தாரான் - பசிய மாலையையுடையவன் எ-று.

வெண்குடைசெய்யகோல் முரண்டொடை. அந்நகர்க் கரசனாகிய வழுதியென்க. அத் திங்களம்புத்தேள் என்பதில் அகரம் உலகறி சுட்டு. விளக்கானது தன்னொளியால் தானிருக்குமிடத்தை இருள் போக்கி விளங்கச் செய்தல்போல, தன் சிறப்பால் தான்தோன்றிய குலத்தைப் பகையறுத்து விளங்கச் செய்தலால் தொல்குல விளக்கம் என்றார். (௩௧)

கலிவிருத்தம்

நடுக்குஞ்சர தனமாமுடி நாகத்திறை வன்வாழ்
வெடுக்குஞ்சர வணமைந்தனொ டிணைவான்முகப் புகரா
முடுக்குஞ்சர மலையான்மலை யுறழ்தேர்பல வுடையான்
றொடுக்குஞ்சர மழையாற்பகை சுடுதீப்பல வவித்தான்.

(இ - ள்.) குஞ்சு அரதனம் நடு - கூட்டமாகிய இரத்தினங்களைப் பதித்தலையுடைய, மாமுடி - பெரிய கிரீடத்தை யணிந்த, நாகத்து இறைவன் - வானுலகத்திற்குத் தலைவனாகிய இந்திரனது, வாழ்வு - மேன்மைகளையெல்லாம், எடுக்கும் - காத்தருளின, சரவணமைந்தனொடு - முருகவேளோடு, இணைவான் - ஒப்பானவன், முகம்புகர் ஆம் உடு-நக்ஷத்திரங்கள் போன்ற தன்முகத்திலுள்ள புள்ளிகளையுடைய, குஞ்சரம் மலையான்-மலைபோலும் யானையை யுடையவன், மலை உறழ் - மலையை நிகர்த்த, தேர்பல உடையான் - பல தேர்களை யுடையவன், தொடுக்கும்-எய்கின்ற, சரமழையால் - பாணமழையினால், பகை - பகைவர்களாகிய, சுடுதீபல - சுடுநெருப்புக்களை, அவித்தான் - தணித்தவன் எ-று.

குஞ்சம் குச்சம் என்னும் வடசொற்றிரிபு. அரதநம் ரத்நம் என்னும் வடசொற்றிரிபு. பகை ஆகுபெயர். (௩௨)

மேற்படி வேறு

வரையா கத்தான் வளர்தோ ளான்செவ்
வரையா கத்தான் மதிபோல் குடையா
னரிமா னனையா ரணியேந் தல்பெறு
வரிமா னனையா ரலர்மா லையினான்.

(இ - ள்.) வரை ஆக - மலைகளுக்கு நிகராக, வளர் - வளர்ந்த, தோளான் - புயங்களையுடையவன், செவ்வரை ஆகத்தான் - செவந்த ரேகைகளையுடைய மார்பினையுடையவன், மதிபோல் குடையான் - பூர்ண சந்திரன்போலும் குடையை யுடையவன், அரிமான் அனையார் - சிங்கேறு போன்ற அரசருக்கு, அணி - அழகிய, ஏந்தல் - தலைவனாயிருப்பவன், அரி - வண்டுகள், மால் - மயக்கத்தைத் தருகிற, நனை - தேனை, பெறு - பெற்று, ஆர்-உண்கிற, அலர்மாலையினான்-பூமாலையை யுடையவன் எ-று.

தான் அசை. மார்பில் மூன்றுரேகை கிடத்தல் உத்தமலக்ஷண மாதலால், செவ்வரையாகத்தான் என்றார். 'வரையகன் மார்பிடை வரையு மூன்றுளவே". "ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற், செம்பொறி யாங்கிய" என்றார் பிறரும். பெற்று-பெற்று எனப் பொருடரலால் செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (௩௩)

தரவு கொச்சகக் கலிப்பா

மாமாலை வண்டுபண்ணின் வகைபாடுந் துழாய்மாலை
மாமாலை வண்டுபண்ணி மதில்களொரு மூன்றுமெய்த
காமாரி யீகைப்பூங் கழன்மறவாக் கருத்தினனீங்
காமாரி யீகைப்பூங் கரதலத்தான் கடற்படையான்.

(இ - ள்.) மா - கரிய, மாலை - வரிசையாகிய, வண்டு - வண்டுகள், பண்ணின் வகை - பண்ணின் விதங்களை, பாடும் - பாடுதற்கிடமாகிய, துழாய்மாலை - துளபமாலையைத் தரித்த, மா-பெருமையுள்ள, மாலை-திருமாலை, வண்டு பண்ணி-பாணமாகச் செய்துகொண்டு, மதில்கள் ஒரு மூன்றும் - மும்மதில்களையும், எய்த - எய்து அழித்த, காமாரி - சிவபெருமானது, ஈகை - பொன்மயமாகிய, பூ-அழகிய, கழல்-திருவடிகளை, மறவா-மறவாத, கருத்தினன் - மனமுடையவன், நீங்காமாரி-விடாமழைபோல, ஈகை - தானத்தையுடைய, பூ - தாமரைமலர்போன்ற, கரதலத்தான் - கைத்தலத்தை யுடையவன், கடல்படையான் - சேநா சமுத்ரத்தையுடையவன் எ-று.

காமாரி என்பது காம அரி எனப் பிரித்து காமனுக்குப் பகைவன் எனப் பொருள் கொள்ளப்படுவதோர் வடசொல். காமன் - ஆண் பெண் களுக்கு விருப்பத்தை யுண்டாக்குவோன். (மன்மதன்) மதில்களொரு மூன்று என்றது முப்புரங்களை. இவை பொன் வெள்ளி இரும்பு என்ப வற்றா னியன்றவை. இவை ஐங்கமபட்டணங்கள் எனப்படும். (௩௪)

கலித்துறை

ஆட லந்திரு வொடுநில மகள்விளை யாடு
நீடு செய்குன்ற மாந்தடந் தோளினு னிலவும்
பாட னங்கையா டரங்கமா நாவினன் பதும
வாடு நுண்ணிடை மடந்தையத் தாணியா மார்பன்.

(இ - ள்.) ஆடல் - விளையாடலை விரும்பிய, அம் - அழகிய, திரு வொடு - திருமகளும், நிலமகள் - நிலமகளும், விளையாடும்-விளையாடுகிற, நீடு - உயர்ந்த, செய்குன்றம் ஆம் - செய்குன்றங்களாகிய, தடம் தோளி னன்-பெரிய புயங்களையுடையவன், நிலவும்-விளங்குகிற, பாடல் நங்கை-சரசுவதிக்கு, ஆடு அரங்கம் ஆம்- நடநசபையாகிய, நாவினன் - நாவை யுடையவன், பதுமம் - தாமரை மலரிலுள்ள, வாடும் நுண் இடை - தளர்

நின்ற நுண்ணிய இடையையுடைய, மடந்தை - திருமகளுக்கு, அத்தாணி ஆம் - அரசிருக்கையாகிய, மார்பன் - மார்பினையுடையவன் எ-று.

மற்ற மலைகள்போலப் படைப்புக்காலத் துண்டானவையன்றி விளையாடும்பொருட்டுச் செய்யப்படுவதாதலால் செய்குன்று எனப்பட்டது.

கலச யோனியா முனிவரன் குடித்தவக் கார்கோ
ளலைபெ ரும்புனன் மறித்துவிட் டானென்ப ரதுபொய்
புலமை யந்தணர் பெறத்தரு பொருளொடப் பொன்மா
மலைய னன்பொழி தானநீர் நிறைந்தன்று மன்னோ.

(இ - ள்.) கலசம் - குடத்தை, யோனி ஆம் - (தனக்கு) பிறப்பிடமாகவுடைய, முனிவரன் - முனிசிரேஷ்டனாகிய அகத்தியன், குடித்த-பருகின, அ - அந்த, கார்கோள் - கடலின், அலை - அசையாநின்ற, பெரும் புனல் - மிகுந்த நீரை, மறித்தும் - மீட்டும், விட்டான்-வெளியே உமிழ்ந்தான், என்பர் - என்று சொல்லுவர், அதுபொய் - அது பொய்யாகும், (உண்மை யாதோவெனின்) அ - அந்த, மா - பெரிய, பொன்மலை அன்னன் - பொன்மலையை நிகர்த்தவனாகிய அரசன், புலமை-நல்லறிவுடைய, அந்தணர் - வேதியர்கள், பெற - பெறும்படி, தரு - தானஞ் செய்கிற; பொருளொடு - திரவியத்துடன், பொழி - வார்க்கிற, தானநீர் - தான நீரால், நிறைந்தன்று - நிறைந்தது எ-று.

கலசம் - வடசொற்றிரிபு. யோநி - பிறப்பிடம். முநிவரன் - வடசொற்றிரிபு. முநி என்பதற்கு - மாநசீலன் என்பது பொருள். கார்கோள் மேகத்தினால் முகக்கப்படுதலின் வந்த பெயர். இதனை ஆகுபெயர் என்பர். "கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை" என்றார் பிறரும். பொன்மாமலையென்றது மேருமலையை. தானநீர் - தாரைவார்க்கும் நீர். அந்தணர் அழகிய தட்பத்தினையுடையவர். நிறைந்தது என்றதற்கு அகத்தியமுனிவரால் குடிக்கப்பட்டு வற்றிப்போன கடல் நிறைந்தது என்றுரைத்துக்கொள்க. (௩௬)

திரைநெ டுங்கடற் றானையவ் வரசர்கோன் செந்நா
வரிநெ டுங்கணார் புலவியாற் பொய்ம்மையு மறியும்
பெரிய வந்தணர் மந்திர சேனையாற் பிறங்கு
மெரிம ணிப்பொலந் தொடிக்கைகளேற்றலு மறியும்.

(இ - ள்.) திரை - அலைகளையுடைய, நெடுங்கடல் - பெரிய கடல் போன்ற, தானை - சேனையையுடைய, அ-அந்த, அரசர்கோன் - ராஜாதிராஜனாகிய பாண்டியனது, செந்நா - நல்ல நாவானது, அரி - செவ்வரி பரந்த, நெடுங்கண்ணார் - நீண்ட கண்களையுடைய மாதரது, புலவியால் - ஊடலை நீக்குதலால், பொய்ம்மையும் - பொய்யையும், அறியும் - அறிந்து கொள்ளும், பிறங்கும்-விளங்குகிற, எரி - ஒளியையுடைய, மணி-அரதன

யிழைத்த, பொலம்தொடி-பொன்வளையலையணிந்த, கைகள்—, பெரிய அந்தணர் - சிறந்த வேதியர்கள் கொடுக்கிற, மந்திரசேடையால்-மந்த்ர சூதையைப் பெறுதலால், எற்றலும் - எற்குந் தொழிலையும், அறியும் - தெரிந்துகொள்ளும் எ-று.

பொய் சொல்வதினும் பாவத்தைத் தருவது வேறொன்றில்லையாகினும், விவாக சமயத்திலும், புணர்ச்சிக்காலத்திலும், பிராணாபத்காலத்திலும், எல்லாப் பொருளும் பிறரால் கவரப்படுகிற காலத்திலும். அந்தணர் பொருட்டாகவும் சொன்னால், அந்தப் பொய் பாவத்தை யுண்டாக்காதென்பது நூற்றுணிபாதலால் இவ்வாறு கூறினார். "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்" என்றார் பெருநாவலரும். தொடி - கைவளை. ஊடல் - புணர்ச்சிக்காலத் துண்டாகிற பிணக்கம். சேடை - சேஷையென்னும் வடசொற்றிரிபு. (௬௭)

உலவி லண்டமாம் புதுநறு வூற்றிருந் தொழுகு
மலரி னோன்வனை பொற்குட நிறைந்துமேல் வழியப்
புலவ ராமெகி னக்குழா நனிதவப் புரியு
நிலவு தன்பெரும் புகழெனும் பாலினா னிறைத்தான்.

(இ - ள்.) புது நறு - புதிய தேன், ஊற்றிருந்து ஒழுகும்-ஊற்றெடுத்துப் பெருகுகிற, மலரினோன் - தாமரை மலரிற் பிறந்த பிரமனாகிய குயவன், வனை - செய்த, உலவு இல் - கெடுதலில்லாத, அண்டம் ஆம்-அண்டகோளமாகிய, பொன்குடம் - அழகிய குடம், நிறைந்து - நிரம்பி, மேல் வழிய - மேலே வழியும்படி, புலவர் ஆம் - புலவர்களாகிய, எகினம் - அன்னங்களின், குழாம் - கூட்டம், நனிதவ - மிகவும் அதிகமாக, புரியும்-விரும்புகிற, நிலவு - பிரகாசிக்கிற, தன் - தனது, பெரும்புகழ் என்னும்-பெருங்கீர்த்தி யென்கிற, பாலினால் - பாலைக்கொண்டு, நிறைத்தான்-நிரப்பினான் எ-று.

பாலையும் நீரையும் வேறுபிரித்துப் பாலைமாத்திரம் பருகி நீரை விட்டொழிக்கும் அன்னம்போல, நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து, நன்மையைக் கைக்கொண்டு தீமையை விலக்குதலால், புலவரா மெகினக் குழாம் என்றார். புகழ் வெண்ணிறமென்பது கவிமரபாதலால் புகழெனும் பால் என்றார். உலவு - உலப்பு (அழிவு). வனைதல்-செய்தல். நனிதவ - ஒருபொருட் பன்மொழி. புரிதல் - விரும்புதல். (௬௮)

திரைய கன்கட லிடத்துறுந் துகிர்க்கொடி சேண்போய்
வரைக ளுக்கொளிர் செந்நிறத் தாதுமா திரத்தெண்
கரிக ளுக்கெழிற் சிந்தூர மாகுமக் கழற்கா
லரசர் தம்பிரான் றனதடற் றோளொளி யன்றே.

(இ - ள்.) கழல் - வீரக்கழலையணிந்த, கால் — பாதத்தினையுடைய, அ - அந்த, அரசர் தம்பிரான்-அரசர்க்கரசனாகிய பாண்டியனது, அடல்-

வெற்றியுடன்: தோன்று - வெளிப்படுகிற, ஒளி - பிரதாபமானது, திரை-அலைகளையுடைய. அகன்-அகன்ற, கடலிடத்து-கடலினிடத்திற்கு, உறும்-பொருந்திய, துகிர்கொடி-பவளக்கொடியும், சேண்தொடு-ஆகாயத்தைத் தீண்டுகிற, வரைகளுக்கு - மலைகளுக்கு, ஒளிர் - விளங்குகிற, செந்நிறத் தாது - செவந்த நிறத்தையுடைய காவிக்கல்லும், மாதிரத்து - எட்டுத் திக்குகளிலுமுள்ள, எண்கரிகளுக்கு - அஷ்டதிக் கஜங்களுக்கு, எழில் சிந்தூரம் - அழகிய செவந்த நெற்றித்திலகமும், ஆகும்-ஆகும் எ-று.

திரை ஆகுபெயர். துகிர் - பவளம். தாது - காவிக்கல். மாதிரம்-திக்கு. சிந்தூரம் - திலகம். (௩௯)

வெற்றி வேற்படை யவன்பிர தாபமாம் வெய்யோ
னுற்ற வார்திரைப் பெரும்புனற் குவலய முவப்ப
மற்ற வன்றரி யார்வசை யிருளொடு வயங்கும்
பற்று தீக்கதிர்ச் சுடரொடு மறுதலைப் பட்டு.

(இ - ள்.) வெற்றி-வெற்றியைத் தருகிற, வேல்படை - வேலாயுதத்தையுடைய, அவன் - அந்த அரசனது, பிரதாபம் ஆம் - ப்ரதாபமாகிற, வெய்யோன் - சூரியன், பற்று - பற்றுகிற, தீ-நெருப்புப்போன்ற, கதிர் - ஒளியையுடைய, சுடரொடு - சூரியனோடு, மறுதலைப்பட்டு - மாறுபட்டு, உற்ற-பொருந்திய, வார் - நீட்சியாகிய, திரை-அலைகளையுடைய, பெரும் புனல்-கடலாற் சூழப்பட்ட, குவலயம் - பூமண்டலம், (நீரிலுள்ள குவலை) உவப்ப - மகிழும்படி, அவன் - அவனது, தரியார் - பகைவர்களுக்குள்ள, வசை - நிந்தையாகிய, இருளொடு - இருளுடனே, (பகைவரிடத்துப் பழியிருள் நிலைபெறும்படி) வயங்கும் - விளங்கும் எ-று.

வெய்யோன் - வெப்பத்தையுடையவன். தரியார் - பிறராக்கம் பொறுதார் (பகைவர்). உவத்தல் - மகிழ்தல், பகுதி உவ. மறுதலைப் பட்டு - பகைத்து எனினுமாம். (௪0)

இத்த கைப்பெரும் பெயர்முடி வேந்தர்கோ னிலங்கு
நித்தி லத்தனிக் கவிகையா னிலமெலா நிழற்றி
மெய்த்த செய்யகோ றடையற நடாய்த்திசை மேவு
மத்த வாரண முகங்களிற் கயற்பொறி வரைந்து.

(இ - ள்.) இத்தகை - இப்படிப்பட்ட தன்மையையுடைய, பெரும் பெயர் - மிக்க கீர்த்தியையுடைய, முடிவேந்தர்கோன் - முடிமன்னர் மன்னனாகிய பாண்டியன், இலங்கு - விளங்குகிற, தனி - ஒப்பற்ற, நித்திலக் கவிகையால் - முத்துக் குடையால், நிலம் எல்லாம் - நிலவுலகமுழுதும், நிழற்றி - நிழலைச்செய்து, மெய்த்த - உண்மையான, செய்யகோல்-செங்கோலை, தடை அற - தடையில்லாமல், நடாய் - செலுத்தி, திசைமேவும்-அஷ்டதிக்குக்களிலுமுள்ள, மத்தவாரணம்-மதயானைகளின், முகங்களில்-முகங்களிலே, கயல்பொறி-தன் மீனக்கொடியை, வரைந்து - எழுதி எ-று.

பெயர் என்றது கீர்த்தியைக் குறித்தது. நடாய் என்பதற்குப் பகுதி நடாவு. பொறி - அடையாளம். கவிகை - குடை. நிழற்றல் - நிழலைச் செய்தல். வாரணம் - வடசொல். (சக)

குருமணிக்குவால் பொற்குழை விலையில்பூண் குவவு
முரண்மணிப்பொலந் தேர்த்திரண் மனத்தினு முந்தும்
பரியணிக்குழாம் பிறைமருப் பீர்ங்கவுட் பரூஉத்தா
ளருவரைக்களிற் றினத்திறை யரசர்க ளளக்க.

(இ - ள்.) அரசர்கள் - வேற்றரசர்கள், குரு-பருத்த, மணிகுவால்-அரதனக் கூட்டமும், பொன்குழை - பொற்குவியலும், விலை இல் பூண் - விலையில்லாத ஆபரணங்களும், குவவு - திரட்சியாகிய, முரண - வலிய, மணி - மணிகளாலும், பொலம் - பொன்னினாலும் அலங்கரிக்கப்பட்ட, தேர் திரள் - தேர்த் தொகுதியும், மனத்தினும் முந்தும் - மநோவேகத்தினும் முற்படுகிற, அணி - அழகிய, பரிகுழாம் - குதிரைக் கூட்டமும், பிறைமருப்பு - பிறைபோன்ற தந்தங்களையும், ஈர்கவுள் - நனைந்த கபோலத்தையும், பரூஉதாள் - பருத்த கால்களையுமுடைய, அருவரை - அரிய மலைபோன்ற, களிறு இனம் - யானைகளின் கூட்டமும் ஆகிய, திறை- கப்பங்களை, அளக்க - (கொண்டுவந்து) அளந்து கொடுக்கும்படி எ-று.

விலையில் பூண் என்றது விலைமதிக்கப் பெறாத உயர்ந்த ஆபரணம் என்றபடி. மனத்தினு முந்தும் பரியென்றதனால் குதிரைகளின் வேக மிகுதி கூறியவாறாயிற்று. பிறைமருப்பு என்றது வளைவாகிய கொம்பு என்றபடி. பரியணி - குதிரைப் பந்தியுமாம். பகைவர் படைக்கலங்களுக் கிளைக்காத என்றதற்கு அருவரைக் களிற்றினம் என்றார். (சஉ)

வெளிறி லுண்புல மந்திரிக் கிளையொடு மேவி
யளவில் போகந்துய்த் தினிதுவீற் றிருந்தன னந்நா
ணெளிதி ரைக்கட லுலகெலாந் தம்புகழ் நிறீஇய
தளர்வில் கேள்விநக் கீரனார் முதலிய சான்றோர்.

(இ - ள்.) வெளிறு இல் - அறியாமை யில்லாத, நுண்புலம் - நுண்ணறிவையுடைய, மந்திரி கிளையொடும்-மந்திரிகளாகிய உறவினருடனே, மேவி - கூடியமர்ந்து, அளவு இல் - அளவற்ற, போகம் - இன்பங்களெல்லாவற்றையும், துய்த்து - அநுபவித்து, இனிது - இனிமையாக, வீற்றிருந்தனன் - பெருமையடைந்திருந்தான், அந்நாள் - அந்தக்காலத்தில், நெளி - தவழ்கிற, திரை - அலைகளையுடைய, கடல்-கடலாற் சூழப்பட்ட, உலகு எல்லாம் - உலக முழுதும், தம்புகழ் - தமது கீர்த்தியை, நிறீஇய - நிலைபெறச்செய்த, தளர்வு இல் கேள்வி-குறைவில்லாத நூற்கேள்விகளையுடைய, நக்கீரனார் முதலிய - நக்கீரனார் முதலிய, சான்றோர் - பெரியோர் எ-று.

இந்தக் கவியில் சான்றோர் என்பது முற்கவிகளில் மகிழ்ந்து புணர்ந்து, புனைந்து வளர்ந்து வாழ்ந்தாரென முடியும். அறிவுக்குக் குற்றம் ஐயமும், திரிபும். இவற்றை வடநூலார் சந்தேஹ விபரீதங்கள் என்பர். மந்திரி-ஆலோசனையையுடையவன். "ஆலம் வீழ்போலு மமைச்சன் என்பவாகலின்" மந்திரிக்கிளையென்றார். நிறீஇய - நிறுவிய, வறுமையானுதல் அறிவின்மையானுதல் மனம்தளர்வுழி, அத்தளர்ச்சியை நூற்கேள்வி நீக்குமாதலால், தளர்வில் கேள்வி என்றார். நக்கீரனார் என்பதில் ஆர் விகுதி சிறப்புப்பொருட்டு. (சங)

அன்ப ரெண்ணிய வெண்ணியாங் கந்நிலை யளிக்கும்
பின்பு தாழ்சடைப் பெருந்தகை யருளினாற் பெற்ற
பொன்பி றங்கிய தெய்வதப் பலகைதம் புலமை
வன்ப றிந்திடந் தரவதி லிருந்துள மகிழ்ந்து.

(இ - ள்.) அன்பர் - (தன்னிடத்தில்) அன்புள்ள அன்பர்கள், எண்ணிய - (பெற) நினைத்த பொருள்களை, எண்ணியாங்கு - (தாம்) நினைத்தபடியே, அந்நிலை - அப்பொழுதே, அளிக்கும் - கொடுத்தருளுகிற, பின்பு தாழ்சடை பெருந்தகை - பின்புறத்தில் தொங்குகிற சடையையுடைய பரமசிவனது, அருளினால் - கருணையால், பெற்ற - தாம் பெற்ற, பொன்- பொன்மயமாய், பிறங்கிய - விளங்கிய, தெய்வதம் - தைவிகமுள்ள, பலகை - சங்கப்பலகை, தம்புலமை வன்பு - தமது கல்வியறிவின் வன்மையை, அறிந்து - தெரிந்து, இடம்தர - இடங்கொடுக்க, அதில் - அந்தச் சங்கப் பலகையில், இருந்து - வீற்றிருந்து, உள்ளம் மகிழ்ந்து - மனங்களித்து எ-று.

நக்கீரர் முதலிய கடைச்சங்கப் புலவர்கள் நாற்பத்தெண்மரும் கடவுளை யடைந்து, எங்களிடத்தில் எல்லாரும் வந்து வீண்வாதஞ் செய்கிறார்கள். அப்படி செய்யாமல், அவரவர் புலமையையும் அளவிடுங்கருவியாக சங்கப்பலகை யொன்று தந்தருள்க என்று பிரார்த்திக்க, கடவுள் புலவருருக்கொண்டெழுந்தருளி, சதுரமாய் முழ அளவுள்ளதாகிய ஒரு பலகையைத் தந்து, இது நும்போல்வார்க் கெல்லாம் முழம் வளர்ந்து இடங் கொடுக்கும் என்று கட்டளையிட்டருளினனென்றறிக (சச)

யாக்கை பெற்றவர்க் குறுதியா மறம்பொரு ளின்பம்
போக்கி லுண்பொரு ளிலறப் புதுமொழி புணர்த்துத்
தாக்கி னம்பல பலபுனை தெறிதிரை சுருட்டு
மாக்க ருங்கட லுலகிடைத் தமிழினை வளர்த்தே.

(இ - ள்.) யாக்கை பெற்றவர்க்கு-உடம்பு பெற்றவர்களுக்கு, (மானுடர்களுக்கு) உறுதி ஆம் - நன்மையைத் தருவனவாகிய, அறம்பொருள்

இன்பம் போக்கில் - தர்மார்த்தகாம மோக்ஷங்களாகிய, நன் - நுட்பமாகிய, பொருள் - சதுர்வித புருஷார்த்தங்களையும், அரில் அற - குற்றமில்லாமல், புதுமொழி புணர்த்து - புதியசொற்களைச் சேர்த்து, தூக்கு இனம் பலபல - பற்பல பிரபந்தங்களை, புனைந்து - செய்து, எறிதிரை சுருட்டும் - வீசுகிற அலைகளைச் சுருட்டுகிற, மா - பெரிய, கருங்கடல் - கருங்கடல் சூழ்ந்த, உலகில் - இந்த நிலவுலகத்தில், தமிழினை வளர்த்து - தமிழை வளரச்செய்து எ-று.

போக்கில் - யாவரும் அடையத் தகுந்த இடம். தூக்கு - செய்யுள். இனம் - கூட்டம். (௬௩)

வெள்ளைத் தாமரைச் செல்விதன் பெண்மையை விடுத்திட்
டெள்ளற் பாடிலா ணுருவெடுத் தெனமுடி யேந்தும்
பிள்ளைப் பான்மதி யான்றமி ழொருவனும் பெருஞ்சீர்
வள்ளற் பாண்டியற் காருயிர்த் துணைவராய் வாழ்ந்தார்.

(இ - ள்.) வெள்ளைத்தாமரைச் செல்வி - வெண்டாமரை மலரில் வாழ்கின்ற சரசுவதி தேவியானவள், தன் பெண்மையை விடுத்திட்டு - தன் பெண்ணுருவத்தை விட்டு, எள்ளற்பாடு இல் - பழிக்கப்படுதலில்லாத, ஆண் உரு - ஆணுருவத்தை, எடுத்து என - கொண்டு அவதரித்தாற்போல, முடி ஏந்தும் பிள்ளைப்பால் மதியான் - (தன்) முடியிற் சூடிய வெண்மையாகிய இளஞ்சந்திரனையுடைய பரமசிவன்தானே, தமிழ் ஒருவனும் - (இறையனு என்னுந் திருநாமத்தோடு) ஒரு தமிழ்ப்புலவராய் (த்தங்களுக்குள்ளே) வீற்றிருக்கப்பெற்று, பெருஞ்சீர் வள்ளல் பாண்டியற்கு - மிக்க சிறப்பினையும் வரையாது கொடுக்குந் தன்மையையுமுடைய பாண்டிய மன்னனுக்கு, ஆருயிர்த்துணைவராய் - அரிய பிராண சினேகராய், வாழ்ந்தார் - வாழ்ந்திருந்தார் எ-று.

செல்வி - கல்வியாகிய கேடில்விழுச் செல்வத்துக்குத் தலைவி. பாண்டியன் இப்புலவர்களுக்கு வேண்டிய சிறப்புக்களைச் செய்து வந்தமையால் அவனை வள்ளற் பாண்டியன் என்றார். (௬௪)

இன்ன வாறவர் வாழுநா ளோர்பக லெரிகான்
மின்னு வாட்படைச் சேல்வல னுயர்த்ததார் வேந்தன்
பொன்னின் மாடத்தின் மேனிலைக் குழையடர் பூங்க
ணன்ன மன்னவ ளோடினி தேறின னமர்ந்தான்.

(இ - ள்.) இன்ன ஆறு - இப்படி, அவர் - அப்புலவர்கள், வாழு நாள் - வாழ்ந்துவருங்காலத்தில், ஓர் பகல் - ஒருநாள், எரிகால் - நெருப்பைக் கக்குகின்ற, மின்னுவாள் படை - விளங்குகின்ற வாளாயுதத்தையுடைய, சேல்வலன் உயர்த்த - மீனக்கொடியை வலப்பக்கத்தில் உயர்த்

கட்டிய, தார்வேந்தன் - வெற்றிமாலையை யுடைய அப் பாண்டியன், பொன்னின் மாடத்தின் - பொன்மயமான (தன்) மனையினது, மேல் நிலை - மேல் மாளிகையில், குழை அடர் பூங்கண் - காதணியை அளாவி நீண்ட பூப்போலுங் கண்களையுடைய, அன்னம் அன்னவளொடு - (நடையால்) அன்னம்போன்ற (தன்) மனைவியுடன், ஏறினன் - ஏறி, இனிது - இனிமையாக, அமர்ந்தான் - தனித்திருந்தான் எ-று.

வேந்தன் என்றது வங்கிய சூடாமணி யென்னும் பெயரையுடைய பாண்டியனை. உயர்த்தல் - உயரக்கட்டுதல். பூங்கண் என்பதில் பூ வென்றது நீலப்பூவை. ஏறினன் - முற்றெச்சம். (சஎ)

ஆய காலையின் மந்தமா ருதத்தொடு மரிக்கண்
வேயை வென்றதோ ளணங்கின்வார் குழன்மணம் வீசச்
சேய னான்குவி முகிழ்முலைச் செய்யவாய்த் தேவி
மாயி ருங்குழ லின்மண மாமென மதித்தான்.

(இ - ள்.) ஆயகாலையின் - அப்பொழுது, மந்தமாருதத்தொடும் - இளந் தென்றற் காற்றுடனே, அரிக்கண் - செவ்வரிபரந்த கண்களையும், வேயை வென்றதோள் - மூங்கிலை வெற்றிகொண்ட தோள்களையுமுடைய, அணங்கின் - (தன்) மனைவியினது, வார்குழல் - நீண்ட கூந்தலின், மணம் - வாசனை, வீச—, சேய் அனான் - முருகக்கடவுளைப் போன்ற அப்பாண்டியன், (அவ்வாசனையை) குவிமுகிழ் முலை - குவிந்த அரும்பு போன்ற தனங்களையும், செய்யவாய் - சிவந்த அதரத்தையுமுடைய, தேவி - (தன்) மனைவியது, மா இருங்குழலின் - கரிய பெரிய கூந்தலின், மணம் ஆம் என - இயற்கை வாசனை யாகுமென்று, மதித்தான் - கருதினான் எ-று.

மாருதத்தோ டிசைந்து மணம்வீசவென் றியையும். மந்தமாருதம் - இளங்காற்று (தென்றற்காற்று). இது வடசொல். முலையென மேல் வருதலால் முகிழ் என்றது கோங்கரும்பை யென் றுரைத்துக் கொள்க. "கோங்கிற் பொலியரும்போய் கொங்கை பங்கன்" என்பது மணிவாசகர் திருவாக்கு. மதித்தான் பெயரடியாகப் பிறந்த வினை. (மதி - பெயர்.) (சஅ)

மதித்த காவல னதுமனங் கொண்டுதன் மனத்திற்
றதைத்த நுண்பொரு டரவொரு செய்யுள்செய் புலவ
ரிதைக்கொள் கென்றுபொன் னாயிர மொருகிழி யியற்றி
யதைப்பொற் சங்கமண் டபத்தின்முற் றூக்கின னன்றே.

(இ - ள்.) மதித்தகாவலன் - (அங்ஙனங்) கருதிய அவ்வரசன், அது மனங்கொண்டு - அதனை (த்தன்) மனத்தில் அடக்கிக்கொண்டு (பிறர்க்குப் புலப்படுத்தாமல், தன் மனத்தில் ததைத்த-தன் மனத்திற் பொருந்

திய, நுண் பொருள் - சூக்ஷமமாகிய விஷயத்தை, தர - விளக்கும்படி, ஒரு செய்யுள்செய் புலவர் - ஒரு செய்யுளைச் செய்கின்ற புலவர், இதைக் கொள்க என்று - இதனைப் பெறுவாராகவென்று, பொன் ஆயிரம் - ஆயிரம் பொன்னை, ஒரு கிழி இயற்றி - ஒரு முடிப்பாக்கி, அதை —, பொன் சங்க மண்டபத்தின்முன் - பொன்மயமான தமிழ்ச்சங்க மண்டபத்தின் முன்னே, தூக்கினன் - உயரக் கட்டிவைத்தான் எ-று.

செய்யுள் - செய்யப்படுவது, தொழிலாகுபெயர் புலவர் - அறிவுடையோர், (புலம் - அறிவு). கிழி - முடிப்பு. தூக்குதல் - தொங்கக் கட்டுதல்.

புலவர் யாவருந் தாங்கண்ட வாறுபாப் புனைந்து
தலைவன் முன்புபோய்ச் சாற்றிய வனைத்தையுந் தண்டார்
மலைகொ டோளினன் மறுத்தலின் வறிதகன் றனரவ்
விலகு பொற்கிழி யிருந்ததங் கறுப்பவ ரின்றி.

(இ - ள்.) புலவர் யாவரும் —, தாங் கண்டவாறு - தத்தமக்குத் தோன்றியபடி, (வெவ்வேறு பொருள்களை அமைத்து) பாப்புனைந்து - பாடல்களை இயற்றி, தலைவன் முன்புபோய் - அரசன் முன்னர்ச்சென்று, சாற்றி - சொல்லி, அவ் அனைத்தையும் - அவைகளெல்லாவற்றையும், தண்தார் - குளிர்ந்த மாலையையுடைய, மலைகொள் தோளினன் - மலைகள் போன்ற தோள்களையுடைய அவ்வரசன், மறுத்தலின் -(அன்றென) மறுத்ததனால், வறிது அகன்றனர் - பயனின்றிச் சென்றார்களாக, அ இலகு பொற்கிழி - விளங்குகின்ற அப்பொன்முடிப்பு, அறுப்பவர் - அறுத்துக் கொள்பவர், இன்றி - இல்லாமல், அங்கு இருந்தது, எ-று.

புலவர் பாப்புனைந்து சாற்றி வறிதகன்றன ரென்க. பாப்புனைதல் - செய்யுள் செய்தல். பொற்கிழி யறுப்பவரின்றி யங்கிருந்தது என்றியையும் (௬௦)

கால மங்கதி லுரோணியிற் கரியவன் புகுத
வால வெவ்வர வடுத்தவீ ருவாவினு மழன்று
கோல வெஞ்சுடர் தண்சுட ரிரண்டும்வாய்க் கொள்ள
ஞால மைந்தனும் வெள்ளியு மிகல்பட நடந்தார்.

(இ - ள்.) காலம் அங்கு அதில் - அப்படியிருக்கிற காலத்தில், கரியவன் - சனி, உரோணியில் - உரோகணி நக்ஷத்திரத்தில், புகுத - பிரவேசிக்க, ஆலம் - விஷத்தையுடைய, வெவ்வரவு - கொடிய பாம்புகள், அடுத்த ஈர் உவாவினும் - அடுத்துவந்த அமாவாசை பூர்ணிமைகளில், அழன்று - சினந்து, கோலம் - அழகிய, வெஞ்சுடர் தண்சுடர் இரண்டும் - சூரியன் சந்திரன் என்னும் இருவரையும், வாய்க்கொள்ள - விழுங்க, ஞால மைந்தனும் - பூ புத்திரனாகிய அங்காரகனும், வெள்ளியும் - சுக்ரனும், இகல்பட நடந்தார் - மாறுபட நடந்தார்கள் எ-று.

உரோணி - வடசொற்றிரிபு. கரியவன் - கருநிறமுடையவன். சூரிய கிரகணமும் சந்திர கிரகணமும் அடுத்து வருதல் பஞ்சத்திற்குக் காரணமென்பதனை. "அருக்கனையுஞ் சோமனையு மைம்மூன்று நாளிற், பெருக்கலராத் தீண்டிற் பேசுங்கால்—செருக்களத்தில், மன்னர் மடிவார் மடியாரே யாமாயின், அன்ன மரிதாய் விடும்" என்பதனாலறிக. பிறவும் இவ்வாறே காண்க. ஞாலமைந்தன் - குஜன் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. (கு - பூமி, ஜன் - பிறந்தவன்). வெள்ளி - வெண்ணிறமுடையவன். இகல்படல் - மாறுபடல்; அதாவது செவ்வாய் முற்பட்டுச் சுக்கிரன் பிற்படுதல். (௩௧)

காலை தண்பனி சொரிதலு நண்பகற் கால
நீல வான்புதை முகிலினம் பெய்வபோ னின்று
மாலை தோன்றுமுன் மலர்தலை வான்கழீ இயது
போல நீங்கலு நிகழ்ந்தன மழைவளம் பொன்ற.

(இ - ள்.) காலை - விடியற்காலத்தில், தண்பனிசொரிதலும் - குளிர்ந்த பனி பெய்தலும், நண்பகற் காலம் - நடுப்பகற் பொழுதில், நீலவான் புதை - கரிய ஆகாயத்தில் நெருங்கிய, முகில் இனம் - மேகக்கூட்டம், பெய்வபோல் - (மழை) பெய்வனபோல, நின்று - (முழங்கி) நின்று, மாலை தோன்றுமுன் - மாலைப்பொழுதில், மலர் தலைவான் - பரந்த இடத்தையுடைய ஆகாயம், கழுவியதுபோல - கழுவப்பட்டதுபோல (நிர்மலமாம்படி), நீங்கலும் - (அம்முகிலினம்) நீங்கிப் போதலும், (ஆகிய இவை) மழைவளம் பொன்ற - மழையின் வளப்பம் அழியும்படி, நிகழ்ந்தன - நடந்தன எ - று.

புதைதல் - நெருங்குதல். மலர்தலை யென்பதில் தலை இடம் என்னும் பொருள் குறித்து நின்றது. (௩௨)

பெயல்வ றந்தபைங் கூழெலாம் பீளொடு கரிந்த
பயம்வ றந்தன மரங்களு மலைகளும் பனிநீர்க்
கயம்வ றந்தன கள்ளியும் பெண்ணையுங் கதிரின்
வெயிலின் வெந்துதம் பசுமைபோ யுலர்ந்தன மிகவும்.

(இ - ள்) பெயல் - மழைத்துளிகள், வறந்த - இல்லையாயின (ஆதலால்) பைங்கூழ் எலாம் - பசிய பயிர்களெல்லாம், பீளொடு - இளங்கதிரோடு, கரிந்த - கருகின, மரங்களும்—, பயம் வறந்தன - பயனில்லையாயின, மலைகளும்—, பனிநீர்க்கயம் வறந்தன - குளிர்ந்த நீரையுடைய சுனைகள் வறளப்பெற்றன, கள்ளியும் - கள்ளிமரமும், பெண்ணையும்-பனைமரமும், கதிரின் வெயிலின் - சூரியகாந்தியால், வெந்து —, தம் பசுமை போய் மிகவும் உலர்ந்தன, எ-று.

வறத்தல் இல்லையாதல், (பெய்யாதொழிதல்) பிள் - இளங்கதிர் இளங் குழவியை. ''பீட்பிதுக்கிப் பிள்ளையைத் தாயலறக் கோடலால்'' என்பது நாலடியார். கூழ் ஆகுபெயர். பயம் - பயன் (போலி). வறப்பினும் வளந்தரூஉம் வண்மையையுடைய மலைகளும் வறந்தன வென்றற்கு மலைகளும் பனிநீர்க்கயம் வறந்தன என்றார். மழைவளம் வேண்டாது கானலின் வளர்கின்ற கள்ளியும் பனையும் உலர்ந்தவென வெயிலின் கடுமை கூறியவாறு. (கூ)

உண்ப தின்பன நனிமிகக் குறைந்தன வொருங்கு
வெண்க லங்களும் வெள்ளியுஞ் செம்பொனும் விளங்கு
மண்கொ ளொன்பது வகையநன் மணிகளு மலிந்த
வெண்ப தம்பெற லரியதா யிற்றுமன் யார்க்கும்.

(இ - ள்.) உண்ப - உண்ணப்படுவனவும், தின்பன - தின்னப்படுவனவும், நனிமிக - மிகவும் அதிகமாக, குறைந்தன - இல்லையாயின, வெண்கலங்களும்—, வெள்ளியும்—, செம்பொனும்—, விளங்கும் - விளங்குகின்ற, மண்கொள் - பூமியிலுள்ள, ஒன்பது வகைய நல்மணிகளும் - ஒன்பதுவகையாகிய நல்ல ரத்தினங்களும், ஒருங்கு - ஒருசேர, (ஏககாலத்தில்) மலிந்த - நிறைந்தன, யார்க்கும்-யாவருக்கும், எண்பதம்-எளிய அறுகம் புல்லும், பெறல் அரிதாயிற்று - பெறுதற்கரிதாயிற்று எ-று.

உண்ப தின்பன என்றது மற்றப் பருகுவன நக்குவன என்பவற்றிற்கும் உபலக்ஷணம் மலிதல் - சுலபக்ரயத்துக்குக் கிடைத்தல். ஓறி வுயிரும் இல்லையென்பார். எண்பதம்பெற வரியதாயிற்று என்றார். ''விசும்பிற் றுளிவீழி னல்லன்பற் றாங்கே, பசும்புற் றலைகாண் பரிது'' என்றார் பெருநாவலரும். எண்பதம் எள்ளளவுணவு எனினுமாம். (கூச)

நீடுந் தீப்பசி யாற்குடர் கொளுந்திய நிலத்தோ
ராடுந் தின்கலா வடகுதின் றனர்நில னகழ்ந்து
வாடும் வல்வகைக் கந்தமுந் தின்றனர் மக்கள்
காடுங் குன்றமு நிரம்பினர் தின்பன கருதி.

(இ - ள்.) நீடும் - மேன்மேல் வளர்கின்ற, தீப்பசியால் - பசித்தீயால் (ஜடராக்கினியால்), குடர் கொளுந்திய - குடலெரிந்த, நிலத்தோர் - பூமியிலுள்ளவர்களாகிய, மக்கள் - ஜனங்கள், ஆடுந்தின்கலா அடகு - ஆடுந்தின்னுப்பாலைச் செடியின் தழைகளையும், தின்றனர்—, தின்பன கருதி - உணவை (ப்பெற) நினைத்து, காடுங்குன்றமும் - காடுகளிலும் மலைகளிலும், நிரம்பினர் - நிறைந்தவர்களாய், நிலன் அகழ்ந்து - நிலத்தைத்தோண்டி, வாடும் - வாடிக்கிடக்கின்ற, புல்வகைக் கந்தமும் - பலவகைக் கிழங்குகளையும், தின்றனர்—, எ-று.

பலவகைத் தழைகளையும் பறித்து மேய்கிற ஆடுகளுந் தின்னாத அடகு என அதன் கசப்பின் கடுமை கூறியவாறு. (௯௫)

சிறுவர் கையன தாயர்தாம் பறித்தனர் தின்றார்
முறுகு தீப்பசி பொறுக்கலார் மக்களூன் முதலா
வுறுப சுந்தசை யாவையுந் தின்றன ருலகத்
தறைப ழஞ்சொலைப் புதுக்கினர் மானமாண் பற்றார்.

(இ - ள்.) தாயர் - தாய்மார்கள், சிறுவர்கையன - (தம்) மக்கள் கையிலுள்ளனவற்றை, தாம்பறித்தனர்-தாம்பிடுங்கி, தின்றார்—, முறுகு தீப்பசி - மிக்க கொடிய பசியை, பொறுக்கலார் - சகிக்கமாட்டாதவர்கள், மக்கள் ஊன்முதலா - நரமாமிசம் முதலாக, உறு - பொருந்திய, பசுந்தசை யாவையும் - பசசை மாம்சங்களை யெல்லாம், தின்றனர்—, உலகத்து அறை - உலகத்திற் சொல்லப்படுகின்ற, பழஞ்சொலை - "எல்லாம், பசிவந்திடப் பறந்து போம்" என்னும் பழமொழியை, புதுக்கினர் - புதிதாக்கினவராய் (வழக்கத்திற் கொண்டுவந்தவர்களாய்) மானம் மாண்பு அற்றார் - மானமுதலிய நற்குணங்க ளழிந்தார்கள் எ-று.

"மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவமுயற்சி தாளாண்மை - தேனின், கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும், பசிவந்திடப் பறந்து போம்." (௯௬)

வழியெங் கும்பிண மிடறுமிவ் வார்கடற் கப்பாற்
பொழிலின் கண்ணுமுற் றுலாயது நாற்றநீள் போழ்வாய்
முழைவெங் கூற்றுயி ருண்டற வெறுத்தது முள்வாய்க்
கழுகுங் காக்கையு ஞமலியு நரிகளுங் களித்த.

(இ - ள்.) வழி எங்கும் - வழி முழுவதும், பிணம்—, இடறும் - இடறப்படும், நாற்றம் - (அதன்) துர்க்கந்தம், இவ்வார் கடற்கு அப்பால் - இந்த நீண்ட கடலுக்கு அப்புறத்திலுள்ள, பொழிலின் கண்ணும் - உலகங்களிலும், உற்று உலாயது-சென்று வீசிற்று, நீள் போழ் வாய்முழை - நீண்ட பிளவுபட்ட மலைக்குகைபோலும் வாயையுடைய, வெங்கூற்று - கொடிய கூற்று, உயிர் உண்டு - uயிர்களைப் )பருகி, அற வெறுத்தது - மிகவும் வெறுப்படைந்தது, முள்வாய் - முள்ளைப்போலும் கூரிய அலகையுடைய, கழுகும்—, காக்கையும்—, ஞமலியும் - நாய்களும், நரிகளும்—, களித்த - களிப்படைந்தன எ-று.

பிணம்-சவம். (உயிர்நீங்கின உடம்பு). இடறல்-தடுக்குதல். பொழில்-உலகம். போழ்வாய் - பிளவுபட்டவாய். அலகு - பறவை மூக்கு ஞமலி - நாய். (௯௭)

சிலர்பி ழைத்தவவ் வற்கடத் திறையையர்ச் சிக்குந்
தலைமை பெற்றவன் றருமியென் பவனுட றளர்ந்தி
இலையு யிர்க்கர ணினிநடந் தெத்திசை யேனு
மலிவி லைத்துநா டெய்துவ மெனமனம் வலித்தான்.

(இ - ள்.) சிலர் பிழைத்த-(பலர் மடிந்து) சிலர்மாத்திரமே ஜீவித்த, அவ்வற்கடத்து - அப் பஞ்சக்காலத்து, இறையை - சோமசுந்தரக் கடவுளை, அர்ச்சிக்கும் - பூசிக்கின்ற, தலைமை - சிறப்பை, பெற்றவன் - அடைந்தவனாகிய, தருமி என்பவன் —, உடல் தளர்ந்து —, இனி —, இங்கு - இவ்விடத்தில், உயிர்க்கு —, அரண் - ஒருகாவல், இலை - இல்லை, எத்திசையேனும் நடந்து-எந்தத் திக்கிலாயினுஞ் சென்று, மலி விலைத்து - நிறைந்த விலையுள்ளதாகிய, (செழிப்புடைய) நாடு - ஒரு தேசத்தை, எய்துவம் - (போய்ச்) சேருவோம், என - என்று, மனம் வலித்தான் - மனந் துணிந்தான் எ-று.

வற்கடம் - பஞ்சகாலம். வலித்தல் - துணிதல். (௯௮)

கோயில் சென்றடைந் தருட்பெருங் கடவுளைக் குறுகித்
தாயி லன்புடை யாயிவ ணுறிலினிச் சாவேன்
றேய முய்வதற் கேற்றது புகுந்துறீஇச் செழுமை
யாய பின்பிவ ணடைகுவ லெனத்தொழு தழுதான்.

(இ - ள்.) கோயில் சென்று அடைந்து —, அருள்பெருங் கடவுளை - கருணைக்குப் பெரிய கடவுளாகிய சோமசுந்தரக்கடவுளை, குறுகி - அணுகி, தாயின் அன்பு உடையாய் - தாயினும் மிக்க அன்பினையுடையவனே, இனி —, உறின்-(யான்) இங்கு இருப்பேனாகில், சாவேன் —, (ஆதலால்) உய்வதற்கு - ஜீவித்தற்கு, ஏற்றது தேயம் - தக்க தேசத்தில், புகுந்து உறீஇ - போயிருந்து, இவண் - இவ்விடத்தில், செழுமை ஆயபின் - செழித்த பின்பு, அடைகுவல் - வந்து சேருவேன், என - என்று, தொழுது - வணங்கி, அழுதான் - புலம்பி முறையிட்டான் எ-று.

உறீஇ - உற, பகுதி உறல். குறுகல் - கிட்டுதல் (சமீபித்தல்). தாயின் என்பதில் இன் என்னும் ஐந்தனுருபு உறழ் பொருளில் வந்தது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

குழவியந் திங்கள் வேணிக் குரிசின்மற் றதனைக் கேளா
வழுதகங் குழையல் வாழி யன்பவொன் றறைவல் கேட்டி [ன்று
வழுதிதாக் கினனோர் பாத்தன் மனங்கொள வுரைத்தோர்க் கெ
கிழியதா யிரம்பொன் சங்கக் கிளர்மணி மண்ட பத்தே.

(இ - ள்.) குழவி அந்திங்கள் வேணிக் குரிசில் - அழகிய இளம் பிறையைச் சடையிற் சூடிய சோமசுந்தரக் கடவுள், அதனைக் கேளா - அதுகேட்டு, (அருள்கொண்டு) அன்ப - அன்பனே, வாழி - வாழ்வாயாக, (நீ) அழுத —, அகங் குழையல் - மனம் வருந்தாதே, ஒன்று உறைவல் - (யான்) ஒரு உபாயஞ் சொல்வேன், கேட்டி - கேட்பாயாக, வழுதி - பாண்டியன், தன் மனங்கொள - தன் மனத்திற் கொண்ட கருத்து விளங்க, ஓர் பா உரைத்தோர்க்கு என்று - ஒரு செய்யுள் செய்யும் புலவருக்காக வென்று, ஆயிரம் பொன் கிழி அது-ஆயிரம் பொன்னையுடைய ஒரு முடிப்பை, சங்கக்கிளர் மணிமண்டபத்து - விளங்குகின்ற இரத்தினங்களிழைத்த சங்கமண்டபத்தில், தூக்கினன் - உயரக்கட்டி யிருக்கின்றான் எ-று.

குழவியந்திங்கள் - பாலசந்திரன். (இளம்பிறை) கேளா - செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். மணிமண்டபம் - ரத்ந மண்டபம், இது வடசொல். (௬௰)

அங்கதை யிப்பா வேந்தற் கறைந்தனை பெறுதி யென்று
கொங்குதேர் வாழ்க்கை யென்னுங் கோதிறூக் கீந்து விட்டான்
பொங்கிய களிப்பி னானும் போய்த்தொடர் பமுதந் தன்னைத்
திங்கள்வெண் குடையி னான்றன் செவிப்புலத் தூற்றி னானால்.

(இ - ள்) வேந்தற்கு - அரசனுக்கு, இப் பா அறைந்தனை-இப் பாடலைச் சொல்லி, அங்கு - அவ்விடத்தில், (தூக்கிய) அதை - அப் பொற்கிழியை, பெறுதி-பெறுவாயாக, என்று-என்று கட்டளையிட்டு, கொங்குதேர்வாழ்க்கைஎன்னுங் கோது இல் தூக்கு-"கொங்குதேர் வாழ்க்கை யஞ் சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ, பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற், செறியெயிற் றரிவை கூந்தலி, னறியவு முளவோ நீ யறியும் பூவே" என்னுங் குற்றமில்லாத பாசுரத்தை, ஈந்துவிட்டான் - அளித்தருளினார், பொங்கிய களிப்பினானும் - (அது பெற்று அதனாற்) களிப்பு மிகுந்த அத்தருமியும், போய் —, திங்கள் வெண் குடையினான் தன் - பூர்ண சந்திரன்போன்ற வெள்ளிய குடையினையுடைய அவ்வரசனது, செவிப்புலத்து - இரு செவிகளிலும், தொடர்பு அமுதந்தன்னை - அப் பாடலாகிய அமிர்தத்தை, ஊற்றினான்-வார்த்துப் புகட்டினான் எ-று.

அரசனிடத்திற் சொன்னான் என்பதாம். அறைந்தனை முற்றெச்சம். தூக்கு - பாடல். தொடர்பு - பாடல். (௬௧)

மற்றது கேட்டுத் திங்கண் மருகன்றா னினைந்த வண்ணஞ்
சொற்றலி னினிது வந்து தொகுசங்கத் தவர்பாற் போயிப்
பொற்[illegible] றான் பொருக்கெனத் தருமி சென்று
[illegible] கவிகள்கேட் டுளமு வந்தார்.

(இ - ள்.) திங்கள் மருகன்-சந்திரகுலத்தில் தோன்றிய அவ்வரசன், அதுகேட்டு—, தான் நினைந்தவண்ணஞ் சொற்றலின் - தான் கருதியபடி சொல்லியிருத்தலால், இனிது உவந்து - இனிமையாக மகிழ்ந்து, இப் பொற்றபாட்டு - இந்த அழகிய பாடலை, தொகு சங்கத்தவர்பால்-கூட்ட மாகச்சேர்ந்த சங்கப்புலவர்கள் பக்கல், போய்—, இசைவி-அரங்கேற்றி அங்கீகரிக்கச் செய்வாயாக, என்றான்—, (என்று சொல்ல) தருமி—, பொருக்கெனச்-சரேலென்று,சென்று—, கற்றவர் அவைமுன்-அப் புலவர் கள் சபையில், சொன்னான்—,(சொல்ல) கவிகள்-அப் புலவர்கள்,கேட்ட லும் - கேட்ட அளவில், உவந்தார் - மகிழ்ந்தார் எ-று.

மருகன் - வழித்தோன்றியவன். பொற்ற-பொன்னென்பத டியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். பொருக்கென - விரைவுக் குறிப்பிடைச் சொல். இசைவித்தல் - ஏற்றுக்கொள்ளச் செய்தல். (சுஉ)

ஆங்கவர் தம்முட் கீர னரும்பெறுங் கல்விச் செல்வத்
தோங்கிய தருக்கி னாலிவ் வுரைத்தபாக் குற்ற மென்றான்
றாங்கிய வுவகை சிந்தித் தருமிதான் றுனைவிற் போந்து
தேங்கமழ் கடுக்கை வேணிச் செல்வனோ டிதனைச் சொன்னான்.

(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது, அவர்தம்முள்-அப் புலவர்களுள், (தலைமைபெற்ற) கீரன்-நக்கீரன், பெறல் அரு - பிறரால் பெறுதற்கரிய, கல்விச்செல்வத்து - கல்வியாகிய ஐசுவரியத்தைப் பெற்றதனால், ஓங்கிய- மிகுதியாய் உண்டான, தருக்கினால்-கருவத்தால், இ உரைத்தபா - சொ ன்ன இப்பாட்டு, குற்றம் - பிழையுடையது, என்றான்—, (அதுகேட்ட) தருமி—, தாங்கிய உவகை சிந்தி-(தான்) கொண்ட களிப்பை இழந்து, துனைவின் - விரைவில், போந்து - புறப்பட்டுப்போய், தேங்கமழ் கடுக் கைவேணிச் செல்வனோடு-தேன் மணக்கின்ற கொன்றைமாலையையணி ந்த (கபர்த்த மென்னுஞ்) சடையையுடைய பரமசிவனிடத்தில், இதனைச் சொன்னான் - இவ்வரலாற்றை விண்ணப்பஞ் செய்தான் எ-று.

கடுக்கை - இருமடியாகுபெயர். வேணிச்செல்வன் - சடையும் திரு முடியும் சேர்ந்த சேர்த்தியாலுண்டான அழகினையுடையவன். (சுங)

கேட்டலு மங்க யற்கட் கிளியுறழ் கிளவி பங்கன்
பாட்டியற் புலவ னாகிப் பாவலர் தம்பாற் போயெங்
கோட்டமில் கவிக்குக் குற்றங் கூறின ரியாவ ரென்றா
னாட்டிய புகழ்நக் கீர னானெனத் தருக்கிச் சொன்னான்.

(இ - ள்.) அங்கயல்கண் - அழகிய கயல்மீன் போன்ற கண்களையும், கிளி உறழ் கிளவி - கிளிமொழி போன்ற சொற்களையுமுடைய பார்வதி தேவியை, பங்கன்-(தன் இடது) பாகத்திற்கொண்ட பரமசிவன், கேட்

டலும் - (அவ்வரலாற்றைக்) கேட்டவுடனே, பாட்டு இயல் புலவன் ஆகி- பாடுந் தன்மையையுடைய (கவியாகிய) ஒரு புலவனுருவங்கொண்டு, பாவலர்பால் போய் - சங்கப் புலவரிடத்துச் சென்று, எங்கோட்டம் இல் கவிக்கு - குற்றமில்லாத எமது செய்யுளுக்கு, குற்றங்கூறினர் - குற்றஞ் சொன்னவர்கள், யாவர்—, என்றான் - என்று வினவினன், நாட்டியபுகழ் - (உலக முழுவதும்) நிலைநிறுத்திய கீர்த்தியையுடைய, நக்கீரன்—, நான் என் - (கூறியவன்) யானேயென்று, தருக்கிச் சொன்னான் - செருக்கிக் கூறினன் எ-று.

அங்கயற்கட் கிளியுறழ் கிளவி யென்றது மீனாக்ஷியம்மையை, இது அன்மொழித் தொகை. கிளி - ஆகுபெயர். பங்கன் - இடப்பாகத்திலுடையவன். (௩௪)

சொல்லலும் குற்றம் யாது சொல்லெனை நெடுங்க ணல்லார்
சில்லிருங் குழற்கு நாற்றஞ் செயற்கையன் றியற்கை யுண்டோ
வில்லது கூற லான்மற் றிதுகுற்ற மென்றா னண்ணல்
மல்லல்விண் மகளிர் கூந்தன் மணமியல் பன்றோ வென்றான்.

(இ - ள்.) சொல்லலும் - (அங்ஙனம் நக்கீரன்) சொன்னவளவில், (சிவபெருமான்) குற்றம் யாது சொல் என—, (கீரன்) நெடுங்கண் நல்லார் - நீண்ட கண்களையுடைய அழகிய மகளிரது, சில் இருங்குழற்கு - குளிர்ந்த பெரிய கூந்தலுக்கு, நாற்றம் - வாசனை, செயற்கை அன்று - செயற்கையாலல்லாமல், இயற்கை உண்டோ - இயற்கையாக உளதோ? (இல்லையே), இல்லது கூறலால் - இல்லாததைச் சொல்லுதலால், இது குற்றம் - இக்கவி குற்றமுடைத்து, என்றான்—, அண்ணல் - பெருமான், மல்லல் விண்மகளிர் கூந்தல் - வளப்பத்தையுடைய தேவலோகத்துப் பெண்களின் கூந்தலுக்கு, மணம்—, இயல்பு அன்றோ - இயற்கையாக உள்ளதன்றோ, என்றான்—, எ-று

அன்று அன்றியென்னும் வினையெச்சத் திரிபு. செயற்கை அதிற் பூக்கை பூட்டல், பூமுடித்தல் முதலாயின. (௩௫)

என்றலு மரம்பை யர்க்கு மிருங்குழ னறிய நாற்ற
மின்றென வுரைத்தா னையனிறைவியென் றுலக மேத்துங்
குன்றிறை பயந்த செல்வி கூந்தலெற் றென்றான் கீரன்
றன்றனித் தருக்கா லம்மை தனதுகூந் தலுமற் றென்றான்.

(இ - ள்.) என்றலும்-என்று (கடவுள்) சொன்னவளவில், (நக்கீரன்) அரம்பையர்க்கும் - அரம்பைமுதலிய தெய்வமகளிர்க்கும், இருங்குழல் - பெரிய கூந்தல், நறிய நாற்றம் இன்று - நறுநாற்றத்தை (இயற்கையாக) உடையதன்று, என உரைத்தான்—, ஐயன்-பெருமான், இறைவி என்று -

தலைவி யென்று, உலகம் ஏத்தும் - உலகத்தவர் யாவரும் வழிபட்டு வணங்குகின்ற, குன்று இறை பயந்த செல்வி - மலையரசனாகிய இமயமலை பெற்ற பார்வதிதேவியினது, கூந்தல் —, ஏற்று - எத்தன்மையது? என்றான் - என வினவினான், கீரன் —, தன் தனித்தருக்கால் - ஒப்பில்லாத தன் செருக்கினால், அம்மை தனது கூந்தலும் —, அற்று - அத்தன்மையதே, என்றான் —, எ-று.

தெய்வமகளிர் கூந்தலும் கற்பகமலரோடு சேர்தலால் உண்டாகிற செயற்கை மணமுடையதேயாமென்றான். செல்வி - அம்மை. (ஞானப்பூங்கோதை) அம்மை - அம்பா என்னும் வடசொற்றிரிபு. (௬௬)

ஏற்றினா னெற்றிக் கண்ணு மெரிமருள் சடையுங் காட்ட
மாற்றரு மருட்சி யான்கண் வடிவெலாங் காட்டி னானுஞ்
சாற்றிய செய்யுள் குற்றஞ் சடைகொண்டு வெருட்டல் வேண்டா
தோற்றிலனிதனுக் கென்றான் றொலைவிலான் வெகுண்டு சொல்வான்

(இ - ள்.) (பரமசிவன்) நெற்றிக்கண்ணும் ஏற்றினான் - நெற்றியிலுள்ள நெருப்புக்கண்ணையும் விழித்து, எரிமருள் சடையும் - தீப்பிழம்பு போன்ற சடையையும், காட்ட - காண்பிக்க, மாற்றரு மருட்சியான் - நீக்குதலரிய விபரீத ஞானத்தினையுடைய நக்கீரன், வடிவு எலாம் (நெற்றியில் மாத்திரமே யன்றி) உருவ முழுவதும், கண் - கண்களை, (இந்திரனைப்போல) காட்டினாலும் —, சாற்றிய செய்யுள் - (நீர்) சொன்ன பாடல், குற்றம் - பிழையுடையதேயாம், சடைகொண்டு வெருட்டல் வேண்டா - சடையைக் கொண்டு அஞ்சுவிக்கவேண்டியதில்லை, இதனுக்கு - இவற்றினுக்கு, தோற்றிலன் - (அஞ்சி என் கொள்கையை) விடுவேனல்லேன், என்றான் - என்று சொன்னான், தொலைவு இலான் - அழிவற்ற கடவுள், வெகுண்டு - கோபித்து, சொல்வான் —, எ-று.

அது மேற்கூறுகின்றார். ஏற்றினான் முற்றெச்சம். எரிமருள்சடையென்பதில் மருள் உவமவுருபு. மருட்சி செருக்கெனினுமாம், மருட்சி - மயக்குதலுமாம். (௬௭)

எம்மொடு முரணி வான்றோ யிமயமால் வரைப்பூங் கொம்பின்
மைம்மலி மறைசொல் லானா மணங்கமழ் குழல்ப ழித்த
செம்மைகொ ளறிவி லாய்நீ தீர்ப்பருங் குட்ட நோய்கொண்
டிம்மையி லலைக வென்றா னிறப்பநக் கீர னஞ்சி.

(இ - ள்.) எம்மொடு முரணி - எம்முடன் மாறுபட்டு, மறைச்சொல் ஆனா - வேதமொழிகளால் இடைவிடாது புகழப்படுகின்ற, வான்தோய் இமயமால் வரைப்பூங் கொம்பின் - ஆகாயத்தை அளாவிய பெரிய இமயமலையின் மகளாகிய பூங்கொம்புபோன்ற அம்பிகையினது, மைமலி -

கருநிற மிருந்த, மணங்கமழ் - இயற்கை வாசனை வீசுகின்ற, குழல் - கூந்தலை, பழித்த - (செயற்கை மணமுடையதென்று) இழித்துக் கூறிய, செய்மை கொள் அறிவு இலாய் - பேரறிவில்லாதவனே, நீ—, தீர்ப்பரும் குட்டநோய் கொண்டு - நீக்குதலரிய குஷ்டமென்னும் வியாதியை அடைந்து, இம்மையில் - இப்பிறப்பில், அலைக - அலைவாயாக, என்றான் - என்று சொன்னான், (என்ற அளவில்) நக்கீரன்—, இறப்ப அஞ்சி - மிகப் பயந்து எ-று.

அஞ்சியென்னும் எச்சம் மேற்பாட்டில் என்றான் என்பதனோடு முடியும். (கூ அ)

முழுமெயும் பனித்தி ரங்கி முருகலர் கமலம் வென்ற
கழலடி வீழ்ந்தி றைஞ்சிக் கருணையங் கடலே யெந்தா
யிழிபுடை நாயி னன்னே னிலங்கறி விலாது செய்த
பிழைபொறுத் தருளிச் சாபப் பிணிகெட வருள்வா யென்றான்.

(இ - ள்.) முழுமெயும் பனித்து-உடம்பு முழுவதும் நடுங்கி, இரங்கி-மனநெகிழ்ந்து, முருகு அலர் கமலம் வென்ற-வாசனை வீசுகின்ற தாமரை மலரை வெற்றிகொண்ட, கழல் அடி - வீரக்கழலணிந்த திருவடிகளில், வீழ்ந்து இறைஞ்சி - விழுந்து வணங்கி, கருணையங்கடலே - கிருபா சமுத்திரமே! எந்தாய்-என்தந்தையே! இழிபு உடைநாயின் அன்னேன் - இழிந்த தன்மையையுடைய நாய்போலக் கடையனாகிய யான், இலங்கு அறிவு இலாது - உண்மை விளங்குகின்ற ஞானமில்லாமல், செய்த—, பிழை - குற்றத்தை, பொறுத்தருளி - பொறுத்துக்கொண்டு, சாபப் பிணிகெட - சாபநோய் நீங்கும்படி, அருள்வாய் - திருவருள் புரிவாய், என்றான் - என்று சொன்னான் எ-று.

பனித்தல் - நடுங்கல். சாபப்பிணி - சாபமாகிய கட்டு என்றலுமாம். (கூகூ)

என்றலுங் கருணை வள்ள லெரிசினந் தணிந்து கீர
சென்றுநீ கயிலை காணிற் றீருமிக் கொடுநோ யென்று
குன்றுறழ் புரிசை விண்டோய் கோயிலிற் புகுந்தொ ளித்தான்
றென்றலம் பொதிய வெற்பிற் றென்னர்கோ னதிச யித்தான்.

(இ - ள்) என்றலும் - என்று பிரார்த்தித்த அளவில், கருணைவள்ளல் - அருளையுடைய வரையாது கொடுக்குந் தன்மையையுடைய கடவுள், எரிசினந் தணிந்து - எரிகின்ற கோபம் ஆறி, கீர - நக்கீரனே! நீ சென்று - நீ போய், கயிலைகாணின் - திருக்கைலாசத்தைக் காண்பையாயின், இக்கொடுநோய் தீரும் - இந்தக் கொடியவியாதி நீங்கும், என்று - என்று அநுக்கிரகித்து, குன்று உறழ் புரிசை - மலைபோன்ற மதிலினையுடைய, விண்தோய் - ஆகாயத்தை யளாவிய, கோயிலில் - ஆலயத்தில்

புகுந்து ஒளித்தான் - போய் மறைந்தான், தென்றல் அம் பொதிய வெற்பின் - தென்றற் காற்றையுடைய அழகிய மலயமலையையுடைய, தென்னர்கோன் - தென்னாட்டவர்க்கு அரசனாகிய பாண்டியன், அதிசயித்தான் - வியப்படைந்தான் எ-று.

வள்ளல்-வரையாது கொடுப்போன். தென்னர்கோன் - தென்னாட்டரசர்கட் கரசனாகிய பாண்டியன் அதிசயித்தான் என்பதற்குப் பகுதி அதிசயி. (எ0)

பொற்குவை தருமி யேற்றுப் பொலிந்தினி திருந்தான் வெய்ய
வற்கடந் தீர வெங்கு மழைவளஞ் சுரந்த திப்பாற்
சிற்குணன் றந்த சாபத் தீப்பிணி யுடலம் போர்ப்ப
நற்கவி னிகந்து கீர நாவலன் சிந்தை செய்வான்.

(இ - ள்.) தருமி —, பொன்குவை - பொற் குவியலையுடைய கிழியை, எற்று - பெற்றுக்கொண்டு, பொலிந்து - பொலிவு பெற்று, இனிது இருந்தான் - இனிமையாகக் களித்திருந்தான், எங்கும் - எவ்விடமும், வெய்ய வற்கடம் தீர - கொடிய பஞ்சம் நீங்கும்படி, மழைவளஞ் சுரந்தது - மழைவள மிகுந்தது, இப்பால் - இவ்விடத்து, கீரநாவலன் - நக்கீரதேவன், சிற்குணன் தந்த - ஞானசுவரூபியாகிய கடவுள் இட்ட, சாபத் தீப்பிணி - சாபத்தாலாகிய கொடிய நோய், உடலம் போர்ப்ப - உடம்பை மூடிக்கொண்டதனால், நல் கவின் இகந்து - நல்ல அழகு கெட்டு, சிந்தைசெய்வான் - ஆலோசிப்பானாயினன் எ-று.

சிற்குணன்-சித்குணன் என்னும் வடசொற்றிரிபு. ஞானகுணமுள்ளவன் என்பது பொருள். (எக)

விரனிரை யழுகி நைந்து வீழ்ந்துகால் குறையா முன்ன
மிருகையும் விரல்கு றைந்திட் டெரிபுகு துடுப்பொவ் வாமு
னுருவினுண் புழுக்கள் சோர வொழுகுசீ நாறச் சேணில்
வருதல்கண் டவரு மிழ்ந்து வழிவில கினர்செல் லாமுன்.

(இ - ள்.) விரல்நிரை-விரல்களின் வரிசை, அழுகிநைந்து வீழ்ந்து—, கால் குறையா முன்னம்-கால்கள் குறைதற்கு முன்னமே, இருகையும் - இரண்டு கைகளும், விரல் குறைந்திட்டு - விரல்கள் குறைந்துவிட்டு, எரி புகு துடுப்பு ஒவ்வாமுன் - நெருப்பிற் போடுகின்ற துடுப்புப்போல ஆவதற்கு முன்னமே, உருவின் - உடம்பினின்றும், நுண் புழுக்கள் - சிறு புழுக்கள், சோர - வெளிப்பட, ஒழுகு சீ நாற—, சேணில் வருதல் கண்டவர்-தூரத்தில் வருதலைப் பார்த்தவர்களும், உமிழ்ந்து—, வழிவிலகினர் செல்லாமுன் - வழிவிட்டு விலகிப் போதற்கு முன்னமே, (இந்நோய் முதிர்தற்கு முன்னம்) எ-று.

முன்னின்று வினையெச்சங்கள். மேற்கவியில் ஒழிக்குவம் என்னும் வினைகொண்டு முடியும். (எஉ)

பலப்பல நாடி றந்து படரொளிக் கயிலை யென்னு
முலப்பில்குன் றெய்தி யிந்நோ யொழிக்குவ மெனத்து ணிந்தான்
விலக்கரு நண்பி னோரை விட்டக றற்கு நெஞ்சங்
கலக்கமுற் றழுதி ரங்கிக் கரையில்பே ரஞரு ளாழ்ந்தான்.

(இ - ள்.) பலப்பல நாடு இறந்து - பற்பல தேசங்களைக் கடந்து சென்று, படர் ஒளி - பரவுகின்ற ஒளியினையுடைய, கயிலை என்னும் - கைலாசமென்கின்ற, உலப்பு இல் குன்று - கேடில்லாத திருமலையை, எய்தி - அடைந்து, (சுவாமி தரிசனஞ்செய்து) இந்நோய் ஒழிக்குவம் - இந்த நோயைப் போக்கிக் கொள்ளுவோம், எனத் துணிந்தான் - என்று மனதில் நிச்சயித்து, விலக்கரு நண்பினோரை-விலக்குதற் கரிய சினேகத்தையுடைய புலவர்களை, விட்டு அகறற்கு-விட்டு நீங்க, நெஞ்சங் கலக்கம் உற்று - மனக் கலக்கமடைந்து, அழுது—, இரங்கி—, கரை இல்பேர் அஞருள் -அளவில்லாத பெரிய துன்பக்கடலில், ஆழ்ந்தான் - அழுந்தினன் எ-று.

இறத்தல் - கடத்தல், பகுதி இற. உலப்பு - அழிவு, பகுதி உல. அஞர் - துக்கம், அது துக்கசாகரத்தைக் குறித்தலால் ஆகுபெயர். (எங)

தடையில்பே ரறிஞர் தம்மைத் தனித்தனி விளித்து நும்மோ
டுடனுறை வாழ்வு நீங்கு மொருபெரும் பாவி யேனை
மடனறு நமரங் காணீர் மறவன்மி னென்று தன்மெய்ப்
படுபிணி நோக்கி மார்பம் படத்தழு வாது நின்றான்.

(இ - ள்.) தடை இல் பேர் அறிஞர் தம்மை - தடையில்லாமற் செல்லுகின்ற மிக்க ஞானத்தையுடைய அப் புலவர்களை, தனித்தனி விளித்து - தனித்தனியே அழைத்து, மடன் அறு நமரங்காள் - அறியாமையில்லாத நம்மவர்களே! நும்மோடு - உங்களுடன், உடன் உறை வாழ்வு - கூட வசிக்கின்ற வாழ்வை, நீங்கும் - இழக்கின்ற, ஒரு பெரும் பாவியேனை - ஒப்பில்லாத மிக்க பாபியாகிய என்னை, நீர் மறவன்மின் - நீங்கள் மறவாதிருங்கள், என்று - என்று சொல்லி, தன் மெய்ப்படு பிணி நோக்கி - தன் உடலிற் பொருந்திய நோயைக் கருதி, மார்பம் படத் தழுவாது - மார்புமேற் படும்படி தழுவிக் கொள்ளாமல், நின்றான் - விலகி நின்றான், எ-று.

தடை - ஐயந்திரிபுகள். தன்னைப்போலன்றிக் கடவுள் செய்த செய்யுட் கருத்தை யறிந்து மகிழ்ந்த பேரறிவு தோன்ற மடனறு நமரங்காள் என்றார். மரங்காள் - ஈற்றயல் நீண்ட விளி. அம்-சாரியை. (எச)

நாவல ரதைய றிந்து நண்ணிமார் பிறுகப் புல்லி
யோவில்கண் ணருவி பாய வுளங்குழைந் தழுது நல்லோய்
மேவரு நின்னை நீத்து வெறுவிய மிருப்ப நின்ற
வாவல்வல் வினையு ளார்யா மல்லதிவ் வுலகத் தியாரே.

(இ - ள்.) நாவலர் - அப் புலவர்கள், அதை - வியாதி காரணமாக விலகி நிற்பதை, அறிந்து - தெரிந்து, நண்ணி - நெருங்கி, மார்பு இறுகப் புல்லி - மார்பழுந்தும்படி அணைத்துக்கொண்டு, ஓவு இல் கண் அருவி - ஒழிதலில்லாத கண்ணீர் வெள்ளம், பாய-பெருகும்படி, உளம் குழைந்து-மனமிரங்கி, அழுது - அழுது, நல்லோய் - நல்லறிவும் நற்குணமுமுடையவனே! மேவரு - பெறுதற்கரிய, நின்னை - உன்னை, நீத்து - இழந்து, வெறுவியம் இருப்ப - பயனற்றவர்களாகி யிருக்க, நின்ற - பொருந்திய, ஆவல் வல்வினையுளார் - சூழ்ந்த வலிய தீவினையுடையவர்கள், யாம் அல்லது-யாங்களே யல்லாமல்,இவ்வுலகத்து-இந்த உலகத்தில், யார்-(வேறு) யாவருளர்? (எவருமில்லை) எ-று.

நாவலர் - நாவன்மை யுள்ளவர் (புலவர்). புல்லல் - தழுவுதல், பகுதி புல். வெறுமியம் - பயனற்றவராகிய யாம். யாரேயென்னு மேகாரம் எதிர் மறை. (எ௲)

என்றன ரிரங்க மேலோ னெதிர்தழீஇத் தழுவி யாறிக்
குன்றனீர் சிறியற் காகக் குழைந்தழ றமியேன் செல்வல்
பொன்றலி னட்பி னுக்குப் புணர்வொடு பழகல் வேண்டா
நின்றநல் லுணர்ச்சி தானே நிறைக்குமென் றுணர்ந்த நல்லீர்.

(இ - ள்.) என்றனர் இரங்க - என்று சொல்லிப் புலவர்கள் கலங்க, மேலோன் - நக்கீரன், எதிர் - எதிரில், தழீஇத்தழுவி - (அவர்களைத்) தனித்தனி அணைத்துக்கொண்டு, ஆறி - (சிறிது) தேறி, குன்று அனீர் - மலைபோன்றவர்களே! பொன்றல் இல் நட்பினுக்கு - அழிதல் இல்லாத சினேகத்துக்கு, புணர்வொடு - ஓரிடத்து இருத்தலும், பழகல்-பலதரங் கண்டு பேசுதலும் (ஆகிய காரணங்கள்), வேண்டா - வேண்டுவதில்லை, நின்றநல் உணர்ச்சிதானே - (இருவர்க்கும்) ஒத்துநின்ற அறிவு தானே, நிறைக்கும் - (நட்பாம் உரிமையை) நிரப்பும், என்று உணர்ந்த - என்றறிந்த, நல்லீர் - நல்லவர்களே! சிறியற்காக - சிறுமையையுடைய என் நிமித்தமாக, குழைந்து அழல் - வருந்தி அழவேண்டாம், தமியேன் - தனியனாகிய யான், செல்வல் - போவேன் எ-று.

மேலோன் - மேன்மையுடையவன். அளக்கலாகாத கல்வியளவும் பல்வகை நூற்பொருளும் எப்படிப்பட்ட புலவராலும் அளந்தறியப் படாத கல்வியறிவி னிலையும் நெடுங்தூரத்தி லுள்ளார்க்கும் புலப்படுகிற பர்ச்சியும், பொருள்வரவு சுருங்கினகாலத்திலும் மாணுக்கருக்கு அழி

யாத கல்விப் பொருளைக் கொடுக்கும் கொடையும், புலவர்க்கிருக்கவேண்டிய குணங்களாதலால், மலை அவர்க்கு உவமையாயிற்று. அழல் அல்லீற்று எதிர்மறை வியங்கோள். (எசு)

என்றுபஃ றிறத்தாற் கூறி யிணையிலா னரிதி னீங்கிச்
சென்றனன் புலவர் கண்ணுஞ் சிந்தையுந் தொடர்ந்து செல்லத்
தன்றிரைக் கையான் மோதித் தான்றியங் குலையு திர்க்கு
மன்றலம் புதுநீர் வைகை வடகரை கடந்து மன்றே.

(இ - ள்.) என்று - என்று, இணை இலான் - ஒப்பில்லாத நக்கீரன், பல் திறத்தால் - பலவகையால், கூறி - சொல்லி, அரிதின் - அருமையாக, நீங்கி - பிரிந்து, புலவர்கண்ணுஞ் சிந்தையும் - அப்புலவர்களது கண்ணும் மனமும், தொடர்ந்து செல்ல - பின்தொடர்ந்து வராநிற்க, தன் திரைக் கையால் - தனது அலைகளாகிய கைகளால், மோதி - தள்ளி, தான்றி அங்குலை - தான்றி மரத்தின் காய்க்குலைகளை, உதிர்க்கும் - உதிர்க்கின்ற, மன்றல் அம் புதுநீர் - வாசனையையுடைய அழகிய புதிய வெள்ளத்தையுடைய, வைகை - வையையாற்றின், வடகரை - வடக்குக் கரையை, கடந்து - தாண்டி, சென்றனன் - போனான் எ-று.

பஃறிறம் - குறில்வழி லவ்வாதலாதலால் தவ்வணைய ஆய்தமாயிற்று. நீர்க்கழகு இன்சுவைத்தாதல். (எஎ)

என்றினி மதுரை காண்பே மெப்பகல் சவுந்த ரேசன்
றன்றிரு வடிகள் காண்பேந் தாயையெஞ் ஞான்று காண்பேம்
வென்றிவேற் றரும வேந்தர் வேந்தனை யெந்நாட் காண்பே [ம்.
மொன்றுயிர்த் துணையாஞ்சங்கத் துறவையெப்பொழுது காண்பே

(இ - ள்.) இனி - இனிமேல், மதுரை - இம் மதுரை நகரத்தை, என்று - எக்காலத்தில், காண்பேம் - காணப் பெறுவேம், எப்பகல் - எக்காலத்தில், சவுந்தரேசன் தன் - சோமசுந்தரக் கடவுளது, திரு அடிகள் - திருவடிகளை, காண்பேம் - காணப் பெறுவேம், தாயை - அங்கயற்கண்ணம்மையை, எஞ்ஞான்று - எக்காலத்தில், காண்பேம் - காணப் பெறுவேம், வென்றிவேல் - வெற்றியைத் தருகின்ற வேலையுடைய, தரும வேந்தர்வேந்தனை - அறநெறிதவறாத அரசர்க்கரசனாகிய பாண்டியனை, எந்நாள் - எக்காலத்தில், காண்பேம் - காணப்பெறுவேம், ஒன்று உயிர்த்துணை ஆம் - பொருந்திய உயிரோடொத்த நண்பினராகிய, சங்கத்து உறவை - சங்கப்புலவர்களாகிய சுற்றத்தை, எப்பொழுது - எக்காலத்தில், காண்பேம் - காணப் பெறுவேம் எ-று.

சவுந்தரேசன்-சோமசுந்தரக்கடவுள். தாய் என்றது அங்கயற் கண்ணம்மையை. வேந்தர் வேந்தன்-அரசர்க்கரசன். உறவு-சுற்றம். (எஅ)

நுணங்குமா ணறிவின் மிக்க நூல்வலார் மறப்பர் கொல்லோ
வணங்குதேர்த் தானை மன்னர் மணிமுடி யுழுக ழற்கா
லணங்குடை யரிமான் றுப்பி னரசர்கோ னினையான் கொல்லோ
யிணங்குநூற்புலவர்நாற்பானெழுவரென் றுரைக்குங் கொல்லோ.

(இ - ள்.) நுணங்கும் மாண் அறிவின் - மாட்சிமைப்பட்ட சூக்ஷ்ம புத்தியில், மிக்க - மிகுந்த, நூல்வலார் - கல்வியில் வல்ல புலவர்கள், மறப்பர் கொல் - (என்னை) மறந்துவிடுவர்களோ, வணங்கு - (தன்னை) வணங்குகின்ற, தேர்த்தானை மன்னர் - தேர் முதலிய சேனையையுடைய அரசர்களின், மணிமுடி - இரத்தினகிரீடம், உழு - உராயப்பெற்ற, கழல்- வீரக்கழலையுடைய, கால் - பாதங்களையும், அணங்கு உடை - (பகைவர்க்கு) அச்சந் தருதலையுடைய, அரிமான் துப்பின் - சிங்கவேறுபோன்ற வலிமையையுடைய, அரசர்கோன் - ராஜாதிராஜனாகிய பாண்டியன், நினையான் கொல் - (என்னை மீண்டும்) நினைக்கமாட்டானோ, இணங்குநூல் புலவர் - பொருந்திய கல்வியையுடைய புலவர்கள், நாற்பான் எழுவர் என்று - நாற்பத்தேழுபேரென்று, உரைக்கும் கொல் - (உலகஞ்) சொல்லுமோ எ-று.

நுணங்கல்-நுட்பமாதல். நுணங்கு மறிவை ஸூக்ஷ்ம புத்தியென்பர் வடநூலார். மறப்பர்கொல்லோவென்னு மோகாரம் எதிர்மறை. அரிமான் இருபெய ரொட்டு. சிங்கம் என்பது பொருள். மா என்பது னகாரச்சாரியை பெற்று மான் என்றாயிற்று. துப்பு - வலிமை. (எசு)

இனித்தமி ழினிமை யாவர்க் கெடுத்திசைத் திடுவ மன்னோ
வெனப்பல பலவு மெண்ணி யினைந்துவெஞ் சுரமி றந்து
புனற்றிரு நாடு புக்குப் பொருந்திரைப் பெண்ணை நாடு
தனைக்கடந் தந்தண் பாலித் தண்ணடை கண்டு சென்றான்.

(இ - ள்.) இனி—, தமிழ் இனிமை - தமிழின் இனிமையை, யாவர்க்கு - எவர்க்கு, எடுத்து இசைத்திடுவம் - எடுத்துச் சொல்லுவோம், அன்னோ - அந்தோ, என - என்று, பலபலவும் - பலப்பலவற்றையும், எண்ணி - நினைத்து, இனைந்து - வருந்தி (பிரயாணப்பட்டு) வெஞ்சுரம் இறந்து - கொடிய காடுகளைக்கடந்து, புனல்திரு நாடுபுக்கு - நீர் வளப்பமிக்க சிறந்த சோழநாட்டில் பிரவேசித்து, (கடந்து) பொருந்திரைப் பெண்ணை நாடுதனை - மோதுகின்ற அலைகளையுடைய பெண்ணையாற்றையுடைய நடுநாட்டை, கடந்து - தாண்டி, அந்தண் பாலித்தண் நடை - அழகிய குளிர்ந்த பாலியாற்றையுடைய (தொண்டைநாட்டின்) குளிர்ந்த இடத்தை, கண்டு - பார்த்து, சென்றான்-(அப்பாற்) போனான் எ-று.

தண் அடையெனப் பிரித்து குளிர்ந்த கரை யென்றலுமாம். இனைதல் - வருந்தல், பகுதி இனை. (அ0)

அரவணைச் செல்வன் வாழு மந்தமிழ் நிலத்தி னெல்லைத்
திருமலை கண்டு கண்டோர் செறிவினைத் தொடர றுக்கும்
பெருவரை கண்டி றைஞ்சிப் பிறங்குவெள் ளருவி தாழும்
பொருவரு மேம கூடப் பொருப்பினை யினிது கண்டான்.

**(இ - ள்.)** அரவு அணை - சர்ப்ப சயனத்தையுடைய, செல்வன் - திருமால், வாழும் - எழுந்தருளியிருக்கிற, அம் - அழகிய, தமிழ் நிலத்தின் எல்லை - தமிழ் நிலத்துக்கு எல்லையாகவுள்ள, திருமலை - திருமலையை, கண்டு - நோக்கி, கண்டோர் - சேவித்தவர்களுடைய, செறி - மிக்க, வினைத்தொடர் - வினைத்தொடர்ச்சியை, அறுக்கும் - சேதிக்கிற, பெருவரை - பெரிய மலையை, கண்டு - தரிசித்து, இறைஞ்சி - வணங்கி, பிறங்கு - விளங்குகிற, வெள் அருவி - வெண்மையாகிய அருவியாறுகள், தாழும் - பாய்கிற, பொருவு அரு - ஒப்பற்ற, ஏமகூடப் பொருப்பினை - ஏமகூடப் பருவதத்தை, இனிதுகண்டான் - நன்றாகத் தரிசித்தான் எ-று.

வேங்கடம் தமிழ் நிலத்துக்கு வடவெல்லை யென்பதனை "வடவேங்கடம் தென்குமரியா யிடைத்தமிழ்கூறு நல்லுலகத்து" என்பதனாலறிக. இனி கண்டோர் செறிவினைத் தொடரறுக்கும் என்பதனை மத்திம தீபமாகக்கொண்டு திருமலையோடும் கூட்டுக. ஏமகூடம் -பொற்சிகரத்தை யுடையது. ஏமம் - பொன். கூடம் - சிகரம். அரவு என்றது சர்ப்ப ராஜனாகிய ஆதிசேஷனை- செல்வியைத் தன் வலத் திருமார்பிலுடையவனாதலால் திருமாலைச் செல்வன் என்றார். அல்லதூஉம் உபய விபூதி நாயகனாதலால் செல்வன் என்றலுமொன்று. பொருப்பு-மலை. தொடர்-கட்டு எனினுமாம். (அக)

அருணெடுங் கடலா நந்தி யடிகள்வந் தவத ரித்து
முரணுறு சமண்கு றும்பு முருக்குபு சைவ மென்னுந்
திருநில முழுது மாண்டு செல்வமோ டினிதி ருந்த
பொருவில்கல் யாண மென்னும் பொன்மதி னகரங் கண்டான்.

**(இ - ள்.)** அருள் நெடுங் கடல் ஆம் - பெரிய கருணைக் கடலாகிய, நந்தி அடிகள் - நந்தியடிகளென்பவர், வந்து அவதரித்து - வந்து திருவவதாரஞ்செய்து, முரண் உறு - மாறுபாடுமிகுந்த, சமண் குறும்பு-சமண சமயமாகிய குறுநிலவேந்தர் கூட்டத்தை, முருக்குபு - வென்று, சைவம் என்னும் - சைவம் என்று சொல்லப்படுகிற, திருநிலம்-அழகிய நாட்டை, முழுதும் - முற்றும், ஆண்டு - அரசாட்சிசெய்து, செல்வமோடு-செல்வத்துடன், இனிது இருந்த - இனிதாக வாழ்ந்திருந்த,-பொருவு இல்-ஒப்பில்லாத, கல்யாணம் என்னும் - கல்யாணமென்று சொல்லப்படுகிற, பொன்மதில் - பொன்மதில் வளைந்த, நகரம் - நகரத்தை, கண்டான் - பார்த்தான் எ-று.

அவதரித்தல் - ஜநிமித்தல். முருக்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். நகரம் - பட்டணம். (அஉ)

உரைபெயர் பலதே யங்க ளொருபொழு திருந்தவ் வூரின்
னொருபொழு திராமற் சென்றே யொளிவளை மணிகொ ழிக்கு
மிரைதிரைக் கங்கை யாடி யிறந்தவர் பிறவா வின்பந்
தருதிரு நகரி றைஞ்சித் தடவரை நாடு புக்கான்.

(இ - ள்.) உரை பெயர் - சொல்லப்படுகிற பெயர்கள், பல - அநேகமாகவுடைய, தேயங்கள் - தேசங்களில், ஒருபொழுது இருந்த - ஒருநாள் தங்கின, ஊர் - ஊரில், பின் - பிறகு, ஒருபொழுது இராமல் - ஒருநாள் தங்காமல், சென்று - போய், ஒளி - பிரகாசத்தையுடைய, வளை-சங்குகள் ஈன்ற, மணி - முத்துக்களை, கொழிக்கும் - ஒதுக்குகிற, இரை-ஒலிக்கிற, திரை - அலைகளையுடைய, கங்கை ஆடி - கங்கா ஸ்நாநஞ்செய்து, இறந்தவர் - இறந்தவர்களுக்கு, பிறவா - பிறவாமையாகிய, இன்பம் - இன்பத்தை, தரு - தருகிற, திருநகர் - அழகிய காசி நகரத்தை, இறைஞ்சி - வணங்கி, தடம் - பெரிய, வரைநாடு - மலைநாட்டில், புக்கான் - பிரவேசித்தான் எ-று.

ஆடி மூழ்கியென்றலுமாம். கங்கை கங்கா என்னும் வடசொற்றிரிபு. பிறவாவின்பம் - மோக்ஷம். கங்கையாடியென்ற குறிப்பால் திருநகர் என்றது அழகிய காசிக்ஷேத்திரத்தை. (அ௯)

கண்ணுத றிருக்கே தாரங் கண்டுதண் பனிது தைந்த
விண்ணக டணவு கோட்டு வியனெடுங் குன்றத் தாறவ்
வண்ணற னருளா றுப்பே ராற்றலாற் சென்று னன்றேற்
பண்ணவர் தமக்குஞ் சேறற் பாலவோ பனிமாக் குன்றம்.

(இ - ள்.) கண்ணுதல் - நெற்றிக்கண்ணையுடைய பரமசிவனது, திருகேதாரம் - திருக்கேதாரம் என்னும் க்ஷேத்ரத்தை, கண்டு - பார்த்து, தண்பனி - குளிர்ந்த பனியானது, துதைந்த - நெருங்கிய, விண் - ஆகாயத்தின், அகடு - நடுவிடத்தை, அணவு - அளாவுகிற, கோடு - சிகரத்தையுடைய, வியன் - விசாலமாகிய, நெடு - நீண்ட, குன்றத்து - இமயமலையின், ஆறு - வழியில், அ - அந்த, அண்ணல் - பரமசிவனது, அருள்-திருவருள், ஆறு-நீங்காத, பேராற்றலால் - சர்வசக்தியினால், சென்றான்-போனான், அன்றேல் - அல்லவாயின், பனிமாகுன்றம் - பெரிய இமயமலையின் வழிகள், பண்ணவர் தமக்கும் - தேவர்களுக்கும், சேறற்பாலவோ - போதற்பாலனவோ (அன்று) எ-று.

கண்ணுதல்-வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. அண்ணல் என்றது சோமசுந்தரக் கடவுளை. பண்ணவர் தமக்

குஞ் சேறற்பால வல்லாத பனிமாக்குன்ற வழியில் இவர் சென்றது சிவனருளாலேயன்றி வேறொன்றாலன் றென்பதாம். (அச)

மடங்கலெண் குழுவை பன்றி வாரண முளவுள் ளிட்ட
கொடுஞ்சின மாவ ழங்கு குன்றமுஞ் செறிமுட் காடு
முடம்புறு பிணிவ ருத்த வுள்ளங்கால் வெள்ளென் பாகக்
கடந்துசெல் வழிக்கண் டானாற் கடல்புரை தடமொன் றம்மா.

(இ - ள்.) மடங்கல் - சிங்கங்களும், எண்கு - கரடிகளும், உழுவை - புலிகளும், பன்றி - பன்றிகளும், வாரணம் - யானைகளும், முளவு - முட் பன்றிகளும், உள்ளிட்ட - முதலாகிய, கொடுஞ்சினம் மா - கொடுங் கோ வத்தையுடைய மிருகங்கள், வழங்கு - சஞ்சரிக்கிற, குன்றமும் - மலை களையும், செறிமுள் - மிக்க முட்களையுடைய, காடும் - காடுகளையும், உடம்பு உறு - உடம்பிற் பொருந்திய, பிணி-குட்டநோயானது, வருத்த- வருத்தவும், உள்ளங்கால் - உள்ளங்கால்கள், வெள் என்பு ஆக - வெள் ளெலும்பாகவும், கடந்து செல் - (தான்) கடந்துபோகிற, வழி-மார்க் கத்தில், கடல்புரை - கடலையொத்த, தடம் ஒன்று - ஒரு தடாகத்தை, கண்டான் - பார்த்தான் எ-று.

கடல்புரை தடம் என்றதனால் இதனிற் பெருந்தடம் உலகத்தில் ஒன்றில்லை யென்றதாயிற்று. (அ௫)

சிறந்தவாங் கலைவி ளங்கித் தெளிநறு வொழுகச் செவ்வாய்
திறந்தசெந் தாம ரைத்தண் டேமலர் மாலை தாங்கிப்
பிறந்தநாட் டொடங்கி யானுப் பிறங்குநன் னீர்பு ணர்ந்திட்
டறந்தவா மறைவ லாள ரனையதத் தடந்தான் மன்னோ

(இ - ள்.) அ- அந்த, தடம் - தடாகமானது, சிறந்த ஆம் - சிறந்தன வாகிய, கலை-சாஸ்திரங்கள், விளங்கி - (தம்மிடத்தில்) விளங்கப்பெற்று, தெளி நறு ஒழுக - தெளிந்த தேன் ஒழுகும்படி, செவ்வாய் - செந்நிற முடையனவாய், செறிந்த - நெருங்கிய, தண் - குளிர்ந்த, தேம் - வாசனை யுள்ள, செந்தாமரைமலர் - செந்தாமரை மலர்களின், மாலை - மாலையை, (வரிசையை) தாங்கி - தரித்து, பிறந்தநாள் தொடங்கி - பிறந்தநாள் முதற்கொண்டு, ஆனு - நீங்காது, பிறங்கு - விளங்குகிற, நல்நீர் - நல் லொழுக்கத்தை, (நல்லநீரை) புணர்ந்திட்டு - உடையதாகி, அறம்தவா- தருமநெறி தவறாத, மறைவல்லாளர் அனையது - வேதியரை யொத் திருந்தது எ-று.

சிறந்த அவாது கலையெனப் பிரிந்து, சிறப்புற்று யாவரும் விரும்பு கிற கலையெனினுமாம். கலை - மகரமீன். தாமரை மலர்மாலை அந்த ணர்க் குரியதாதல் "பைங்கமலத் தண்டெரியற் பட்டர்கோன்" என்பது

ஞலறிக. இனி இலக்கவரையாய் தாமரைமணிமாலையுமாம். மறைவல்லாளர் - வேதங்களை ஓதுதலும் ஓதுவித்தலும் வல்லவர் (பிராமணர்). (அசு)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மாண்டவா ரணத்தோ டரசிய லோதி
மந்திரி வளம்பெரி தமைந்தே
யீண்டிமே லெழுந்து வந்தமே வலர்தம்
மினநிலை தளர்ந்திட வலைத்துக்
காண்டக விளங்கி யுயிர்த்தொகை புரந்து
களியளி யுளர்நறுந் தண்டார்த்
தூண்டரு தடந்தோட் புலவுவேற் றடக்கைச்
சுடர்முடி வேந்தர்போற் றோன்றும்.

(இ - ள்.) மாண்ட - மாட்சிமைப்பட்ட, ஆரணத்தோடு - வேதங்களுடன், அரசு இயல் - ராஜநீதிகளையும், ஓதி - படித்து, மந்திரிவளம் - மந்திரிகளின் வளப்பம், பெரிது அமைந்து - மிகுதியாகப் பொருந்தப் பெற்று, மாண்ட - மாட்சிமைப்பட்ட, வாரணத்தோடு-நீர்க்கோழிகளும், அரசு இயல் ஓதிமம் - அரச அன்னங்களும், திரி - உலாவுகிற, பெரிது வளம் அமைந்து-செழிப்பு மிகுதியும் அமையப்பெற்று, ஈண்டி-நெருங்கி, மேல் - தம்மேல், எழுந்துவந்த - படையெடுத்துவந்த, மேவலர் தம் - பகைவருடைய, இனம் - கூட்டம், நிலைதளர்ந்திட-நிலைகுலைய, அலைத்து-வருத்தி, ஈண்டி - திரண்டு, மேலெழுந்துவந்த - நீரின்மேல் தோன்றி வெளிவந்த, மேவு அலர்தம் - விரும்பப்படுகிற மலர்களின், இனம் - கூட்டம், நிலை தளர்ந்திட - நிலைபெறாமல் அசையும்படி, அலைத்து - அலையெறிந்து, காண்டக-(யாவரும்) காணும்படி, விளங்கி-விளக்கமடைந்து, உயிர்த்தொகை - உயிர்க்கூட்டத்தை, புரந்து - காத்து, களி அளி உளர்-தேனுண்ட களிப்பினையுடைய வண்டுகள் கிண்டுகிற, நறுதண்தார் - மணமுள்ள குளிர்ந்த மாலையையுடைய, தூண்தரு - தூண்போலத் திரண்டிருண்ட, தடம் தோள் - பெரிய தோள்களையும், புலவுவேல்-புலால் நாற்றம் வீசுகிற வேற்படையையுடைய, தடம்கை - பெரிய கைகளையும், சுடர்முடி - பிரகாசிக்கிற கிரீடத்தையுமுடைய, வேந்தர்போல் - அரசரைப்போல, தோன்றும் - காணப்படும் எ-று.

அரசியல் ராஜலக்ஷணநூல் எனினுமாம். அலைத்தல் - வருத்தல், பகுதி அலை. புரத்தல் - காத்தல்; பகுதி புர. (அஎ)

வளரிள வளைய வெள்ளியும் பொருட்டு
மாசறு செம்பொனுந் தும்பி
யுளர்கமழ் பதுமப் பதுமரா கமுந்தே
னுறுநறு நீலநீ லமும்பச்

இளவடை யொளிசெய் மரகத மணியு
மெகினிழற் காற்கொழுந் துகிரு
மொளிகிளர் வளைவெண் டாமரை மணியு
முடைமையின் வணிகரே யொக்கும்.

(இ-ள்) வளர் - வளர்கின்ற, இள - இளமையாகிய, வளையம் - தாமரையுட் சுருளாகிய, வெள்ளியும் - வெள்ளியையும், பொகுட்டு - தாமரைக்கொட்டையாகிய, மாசு அறு செம்பொன்னும் - குற்றமற்ற செம்பொன்னையும், தும்பி - வண்டுகள், ஊர் - கிண்டுகிற, கமழ் - பரிமளிக்கிற, பதுமம் - செந்தாமரைமலராகிய, பதுமராகமும் - பத்மராகம் என்னும் ரத்நத்தையும், தேன் உறு - தேன்மிகுந்த, நறுநீலம் - நறிய நீலோத்பல மலராகிய நீலரத்நத்தையும், பசு இள அடை - பசிய இளமையாகிய இலைகளாகிய, ஒளிசெய் - ஒளிவீசுகிற, மரகதமணியும் - மரகத ரத்நத்தையும், எகின் - அன்னங்களின், நிழல்கால்-ஒளியையுடைய கால்களாகிய, கொழுதுகிரும் - செழிய பவளத்தையும், ஒளிகிளர்-ஒளிமிகுந்த, வளை - சங்குகளும், வெள்தாமரை - வெண்டாமரை மலருமாகிய, மணியும் - முத்தினையும், உடைமையின் - உடைத்தாயிருத்தலால், வணிகர் - வைசியர்களை, ஒக்கும் - நிகர்க்கும் எ-று.

வணிகர் - வர்த்தகஞ்செய்வோர். வளை வெண்டாமரை மணியும் என்பதற்கு சங்கிலும் தாமரை மலரிலும் உண்டாகிற முத்து என்றலுமாம். (அஅ)

கலிவிருத்தம்

பூமி மங்கையைப் பொற்புறுத் திப்பல
வேம வன்னந் தருமேர் வளம்பெறுக்
காமர் பூவிளை வித்தலி னக்கயந்
தோமில் பின்னவர் போன்மெனத் தோன்றுமே.

(இ-ள்.) அ- அந்த, கயம் - தடாகம், பூமி மங்கையை - நிலமகளை, பொற்புறுத்தி - பொலிவுபெறச்செய்து, (பூமிக்கு ஒரு அலங்காரமாய்) பல - அநேகமான, ஏமம் - அன்னம், தரும் - இனிமையாகிய உணவைத் தருகிற, ஏர்வளம் - ஏர்களின் வளப்பத்தை, பெறு - பெற்று, காமர்பூ - அழகாகிய நிலத்தை, விளைவித்தலின் - விளையச்செய்தலால், (பல - பலவாகிய, ஏமம் அன்னம் தரும் - பொன்னிறமான அன்னங்கள் தங்குகிற, ஏர்வளம் - அழகின் மிகுதியை, பெறு - பெற்று, காமர்பூ - அழகிய மலர்களை, விளைவித்தலின் - தோன்றுவித்தலால்,) தோம் இல் - குற்றமில்லாத, பின்னவர் போன்மென - வேளாளரை யொத்திருக்கும் என்று சொல்லும்படி, தோன்றும் - காணப்படும் எ-று.

பின்னவர்-நான்காம் வருணத்தவராகிய சூத்திரர். போன்ம் - போலும் என்னும் செய்யுமென் முற்றின் விகாரம். (அகூ)

வெளிய செய்ய கரியவொள் வீபொருட்
டிளைய பாசடை யென்றிவை துன்னிய
தெளிபு னற்றடஞ் செய்யவ ளமர
ரொளிகொள் சித்திரக் கம்பல மொக்குமே.

(இ - ள்.) வெளிய செய்யகரிய - (முறையே) வெண்ணிறமுடையன வும் செந்நிறமுடையனவும் கருநிறமுடையனவுமாகிய, ஒள்-ஒட்பமாகிய, வீபொருட்டு இளைய பசு அடை - (தாமரையின்) மலர்களும் கொட்டைக ளும் இளைய பச்சிலைகளும், என்ற இவை - என்று சொல்லப்பட்ட இவை கள், துன்னிய - நெருங்கிய, தெளிபுனல் - தெளிவாகிய நீருள்ள, தடம்- அந்தத் தடாகம், செய்யவள் அமர - திருமகள் வீற்றிருக்கிற, ஒளி கொள் - ஒளியையுடைய, சித்திரக்கம்பலம் - சித்ரகம்பலத்தை ஒக்கும்- ஒத்திருக்கும் எ-று.

வெளிய செய்ய கரிய என்பன - வெண்மை செம்மை கருமை யென் னும் பண்படியாகப் பிறந்த பெயரெச்சங்கள். பசுமை அடை-பசு அடை என்றாயிற்று. என்ற இவை யென்பதில் நிலைமொழி யீற்றகரம் தொ குத்தலாய் என்றிவை யென்றாயிற்று. சித்திரக்கம்பலம் - சித்திரவேலை யமைந்த பல நிறங்களோடு கூடிய கம்பளி. (௰)

சால வூடிய தன்பெடை மீன்கொளற்
காலு மொண்சிரல் வீழொலி யச்சுற
மாலு மன்னமவ் வச்சமே வாயிலாக்
கோல மென்சிற காற்றழீஇக் கொள்ளுமே.

(இ - ள்.) மீன் கொளற்கு- மீனைக் கொத்தி யெடுத்தற் பொருட்டு- ஆலும் - அசைகிற, ஒள்சிரல் - ஒள்ளிய சிச்சிலிக் குருவிகள், வீழ் ஒலி - வீழ்கிற ஓசையால், சால - மிகவும், ஊடிய - பிணங்கிய, தன்பெடை - தனது பெட்டையன்னம், அச்சு உற - பயப்பட, மாலும் அன்னம்- (பிணக்குத்தீர்க்க வேறுபாய மறியாது காமநோயால்) மயங்குகிற ஆண் அன்னம், அ - அந்த, அச்சம்-பயத்தையே, வாயில் ஆ - (பிணக்குத் தீர்க் கும்) உபாயமாகக் கொண்டு, கோலம் - அழகாகிய, மெல்சிறகால்-மெல் லிய சிறகினால், தழீஇக்கொள்ளும் - (தன் பெட்டை அன்னத்தை) தழு விக்கொள்ளும் எ-று.

ஊடலைப் புலவியென்றும் வழங்குவர். அச்சு முதனிலை திரிந்த தொழிற்பெயர். (௧௧)

மைத்த வண்டிசை வண்சிறைப் புள்ளிசை
தத்து பஃறவ ளைக்குரல் சங்கொலி
முத்த வெண்மருப் பியானைநீர் மொள்கலி
யித்தி றத்தினாற் பென்று முடைத்தரோ.

(இ - ள்.) (அந்தத் தடாகம்) மைத்தவண்டு இசை - கரிய வண்டினங்களின் பாட்டொலியும், வள்சிறை புள்இசை - அழகிய சிறகுகளையுடைய பறவைகளின் ஒலியும், தத்து - குதிக்கிற, பல் - அநேகமாகிய, தவளைக் குரல் - தவளைகளின் தொனியும், சங்கு ஒலி - சங்கின் ஓசையும், முத்தம் - முத்துக்களையுடைய, வெள் மருப்பு - வெண்மையாகிய கொம்புகளோடு கூடிய, யானை - யானைகள், நீர்மொள் - நீரை மொள்ளுகிற, கலி - ஆரவாரமும் (ஆகிய), இத்திறத்தின் ஆர்ப்பு - இவ்வகையவாகிய ஆரவாரங்களை, என்றும் - எந்நாளும், உடைத்து - உடைத்தாயிருக்கின்றது எ-று.

சிறை - சிறகு. சங்கு-சங்கம் என்னும் வடசொற்றிரிபு. முத்தம் முக்தம் என்னும் வடசொற்றிரிபு. (கஉ)

பொருவி லாவகன் பூந்தடத் தின்கரை
மரக தக்குவ டொப்பது வான்றிசை
விரிவ ளக்கும் வியன்சினைத் தூன்றும்வீழ்த்
திரள தோரார்ற் றிருமா னிகர்க்குமால்.

(இ - ள்.) பொருவு இலா - ஒப்பில்லாத, அகல் - அகன்ற, பூதடத்தின் - அழகிய அந்த தடாகத்தின், கரை - கரையில் (உள்ள), மரகதக் குவடு ஒப்பது - மரகத மலைபோல்வதும், வான்திசை விரிவு - பெரிய பத்துத் திசைகளின் பரப்பையும், அளக்கும்-அளவிடுகிற, வியன்சினைத்து - பெரிய கிளைகளையுடையதும், ஊன்றும் - நிலத்தில் ஊன்றிய, வீழ்திரளது-விழுதின் கூட்டத்தையுடையதும், (ஆகிய) ஓர் ஆல்-ஒரு ஆலமரம், திருமால் - த்ரிவிக்ரமாவதாரஞ்செய்த ஸ்ரீமஹாவிஷ்ணுவை, நிகர்க்கும் - ஒத்திருக்கும் எ-று.

நிறத்தாலும் திசைவிரி வளக்கும் வளர்ச்சியாலும் ஆல் உவமையாயிற்று. திருமால் விசுவரூப மெடுத்த திருமால் எனினுமாம். (கங)

காற்ற ழுங்கு கழற்கம லத்தினாற்
சாற்று மீரேழ் தலமு மளந்தவவ்
வாற்றன் மாய னறிதுயில் கொள்ளுதற்
கேற்ற பைந்தளி ரீட்ட முடைத்தரோ.

(இ - ள்.) (அந்த ஆலமரம்) தழங்கு கழல் - ஒலிக்கிற கழலையுடைய, கால்கமலத்தினால் - பாததாமரையினால், சாற்றும் - சொல்லப்படுகிற, ஈர் ஏழ் தலமும் - பதினான்கு உலகங்களையும், அளந்த - அளவிட்ட, அ - அந்த, ஆற்றல் - வல்லமையுள்ள, மாயன் - திருமால், அறிதுயில் கொள்ளுதற்கு - யோகநித்திரை செய்தற் பொருட்டு, ஏற்ற - தகுதியாகிய, பை - பசுமையாகிய, தளிர் ஈட்டம்-தளிர்க்கூட்டத்தையும், உடைத்து - உடைத்தாயிருக்கிறது எ-று.

பிரளயகாலத்தில் அந்தப் பிரளயநீரில் திருமால் வடபத்திரத்தில் பள்ளி கொள்ளுதலால் இங்ஙனம் கூறினாராயிற்று. அரோ - அசை. தழங்கல்-முழங்கல், பகுதி தழங்கு. கமலம்-ஆகுபெயர். (கச)

திசையி னின்ற தெறுசின வாரண
மசைத டக்கையி னுன்முறித் தாரழற்
பசிகெ டத்தினும் பாசிலை மென்சினை
யொசிவி னீள்பணைக் கோடி யுடையதால்.

(இ - ள்) திசையில் - அஷ்டதிக்குகளிலும், நின்ற - நிலைபெற்றிருக்கிற, தெறு - (பகைவரை) கொல்லுகிற, சினம் - கோவத்தையுடைய, வாரணம் - யானைகள், அசை - அசையாநின்ற, தடம்-பெரிய, கையினுல்-துதிக்கையினுல், முறித்து - ஒடித்து, ஆர் - மிகுந்த, அழல் - நெருப்பை யொத்த, பசி - பசிநோயானது, கெட - தணியும்படி, தின்னும்-தின்கிற, பசு இலை - பச்சைநிற இலைகளையும், மெல்சினை - மெல்லிய கிளைகளையும் உடைய, ஒசிவு இல் - ஒடிதலில்லாத, நீள் - நீண்ட, பணை - பருத்த, கோடி உடையது - நுனியையுடையது எ-று.

தெறல் - கொல்லுதல், பகுதி தெறு. ஒசிதல்-ஒடிதல், பகுதி ஒசி. ()

தூங்கு வீழ்நுனித் தொத்தி வருமுலை
வாங்கு நுண்ணிடைச் சூரர மாதர்தாந்
தாங்கு மூசலி னுழித் தடமுடி
யோங்கு வெற்பி னுதைந்துதைந் தாடுவார்.

(இ - ள்.) வரும்முலை - வளர்கிற தனத்தையும், வாங்கும்-வளைகிற, நுண் இடை - நுட்பமாகிய இடையையும் உடைய, சூர் அரமாதர்-தெய்வப் பெண்கள், தாம் - தாங்கள், தூங்கு - கீழேயிறங்குகிற, வீழ் நுனி - விழுதுகளின் நுனியில், தொத்தி - பிடித்து ஏறி, தாங்கும் - தாங்குகிற, ஊசலின் - ஊசற்பலகையிற்போல, தடமுடி ஓங்கு - பெரிய கொடுமுடிகள் உயரப்பெற்ற, ஆழிவெற்பில் - சக்ரவாள மலையில், உதைந்து உதைந்து - (கால்களால்) உதைந்து உதைந்து, ஆடுவார் - ஆடிக்கொண்டிருப்பார்கள் எ-று.

சூர்-தெய்வீகம். அரமாதர் அமரமாதர் என்பதன் விகாரம். அரம்பை மாதர் என்பதன் விகாரம் என்றலுமாம். ஆழி - சக்கரம். வெற்பு-மலை. (சக்ரவாளகிரி) (கசு)

வேட்டு மெய்குளிர் மென்னிழ னின்றமாத்
தாட்ட டக்கைத் தழைசெவி யானைமேற்
கோட்டி னம்பொற் குடம்புரை செங்கனி
கூட்டு னும்புட் குலங்க ளுதிர்க்குமே.

(இ - ள்.) வேட்டு- விரும்பி, மெய்குளிர் - உடம்பு குளிர்தற்குக் காரணமான, மெல் - மென்மையாகிய, நிழல்- (அந்த ஆலமரத்தின்) நிழ

வில், நின்ற - பொருந்திய, மாத்தாள் - பெரிய கால்களையும், தடம் கை- பெரிய துதிக்கையினையும், தழை செவி-தழைத்த காதுகளையும் உடைய, யானைமேல் - யானைகளின்மேல், கோடு இனம் - கிளைகளின் கூட்டத்தில் உள்ள, பொன்குடம் புரை - பொற்குடத்தை யொத்திருக்கிற, செம் கனி - செவந்த பழங்களை, கூட்டுணும்-கொள்ளையடித் துண்ணுகிற, புள் குலங்கள் - பறவைக் கூட்டங்கள், உதிர்க்கும் - உதிர்த்துவிடும் எ-று,

வேட்டல்-விரும்பல், பகுதி வேள். யானையென மேல் வருதலால் கையென்றது துதிக்கையினைக் குறித்தது. புரைதல் - ஒத்தல். கூட் டுணல் - கொள்ளையடித் துண்ணல், பகுதி கூட்டுண். (கஎ)

நீரில் வீழ்ந்தன நீர்பயின் மீன்களாம்
பாரில் வீழ்ந்த பறவைக ளாங்கதிர்த்
தேரின் மேற்செல் சினைப்பஃ றலையரா
வூரில் வேரூன் றுயரா லிலையெலாம்.

(இ - ள்.) கதிர் - சூரியனது, தேரின்மேல் - ரதத்தின்மீது, செல் - செல்லுகிற, சினை-கிளைகளையும், பல்தலை - பல தலைகளையுடைய, அரா ஊரில் - ஆதிசேஷனது பாதாள லோகத்தளவும், ஊன்று - ஊன்றின, வேர் - வேர்களையுமுடைய, உயர் - உயர்ந்த, ஆல் இலை எல்லாம் - அந்த ஆலமரத்தின் இலைகளெல்லாம், நீரில் வீழ்ந்தன-நீரில் விழுந்தவை, நீர்பயில் - நீரில் சஞ்சரிக்கிற, மீன்கள் ஆம்-மீன்களின் உருவாகமாறும், பாரில் வீழ்ந்த - நிலத்தில் விழுந்தவை, பறவைகள் ஆம்-பக்ஷிகளினுருவமாக மாறும் எ-று.

பயிலல் --வாழ்தலெனினுமாம். பறவை - பறக்கின்றவை. கதிர் என்றது முச்சுடரிற் சிறந்த சூரியனைக் குறித்தது. பல்தலையராவூர் - நாகலோகம். (கஅ)

அனைய வாற்கீ ழருந்தமிழ் நாவலன்
மனன மர்ந்து வதிந்தன னங்கொரு
சினையி னீங்கிலை பாதி திரைப்புன
னனைய வீழ்ந்தது நன்புனற் றீரமே

(இ - ள்.) அனைய - அத்தன்மைத்தாகிய, ஆல்கீழ் - ஆலமரத்தின் கீழ், அரு - அருமையாகிய, தமிழ் நாவலன்-தமிழ்ப்புலவனாகிய நக்கீரன், மனன் அமர்ந்து - மனமமைந்து, வதிந்தனன் - தங்கினன், ஆங்கு - அப் பொழுது, ஒரு சினையின் - ஒரு கிளையினின்று, நீங்கு - விழுகின்ற, இலை- இலையானது, பாதி-அரைப்பங்கு, திரைப்புனல் நனைய - அலைகளையுடைய நீரில் நனையும்படி, நல் - நல்ல, புனல் தீரம் - அந்த நீர்க்கரையில், வீழ்ந் தது - விழுந்தது எ - று.

அந்த மரத்திலிருந்து ஒரு இலையானது பாதி சலத்திலும், பாதி நிலத்திலுமாக விழுந்த தென்பதாம். (கக)

மேற்படி வேறு

வீழ்ந்தது பறவையு மீனு மாகியங்
காழ்ந்திடு புனலினு மகன்க ரைக்கணுஞ்
சூழ்ந்திடு முலகினுந் துறவின் பாலினுந்
தாழ்ந்திடு மனமெனத் தம்மி லீர்த்தவே.

(இ - ள்.) வீழ்ந்தது - (நிலத்திலும் சலத்திலுமாக) விழுந்த இலையானது, பறவையும் மீனுமாகி-பறவையுருவும் மீனுருவும் அடைந்து, அங்கு-அவ்விடத்தில், ஆழ்ந்திடு புனலினும் - ஆழமாகிய நீரிலும், அகல்கரைக் கண்ணும் - அகன்ற கரையிலும், சூழ்ந்திடும் உலகினும்-சூழ்கின்ற உலக இன்பத்திலும், (இல்லறத்திலும்) துறவின்பாலினும் - துறவறத்திலும், தாழ்ந்திடும் - செல்லுகிற, மனம் என - மனம்போல, தம்மில்-தமக்குள், ஈர்த்த - ஒன்றையொன்று இழுத்தன எ-று.

நீரில் விழுந்த பாகம் மீனும், நிலத்தில் விழுந்த பாகம் பறவையு மாகி, இல்லறத்திலும் துறவறத்திலும் இழுக்கும் மனம்போல, மீன் நீரிலும், பறவை கரையிலுமாக இழுத்தனவென்பதாம். (௪00)

அனையதோர் புதுமைகண் டதிச யத்தனுய்த்
தனியொரு தானவண் டரித்து வைகினு
னினைவரு குறுமுனி யிலக்க ணம்பெறப்
புனைதரு மிலக்கியப் புலவர் சிங்கமே.

(இ - ள்.) இனைவு அரு - குற்றமற்ற, குறுமுனி - அகத்தியமுனிவர் செய்தருளின, இலக்கணம் - தமிழிலக்கணங்களுக்கு, பெற - பொருந்த, புனைதரும் - செய்தருளின, இலக்கியம் - இலக்கியங்களையுடைய, புலவர் சிங்கம் - புலவர் சிங்கமாகிய நக்கீரன், அனையது ஓர் புதுமை - அதனையொத்ததாகிய ஒரு புதுமையை, கண்டு - பார்த்து, அதிசயத்தனாய் - அதிசயித்தவனாகி, தனி ஒரு தான் - தன்னந்தனியனாய், அவண் - அவ்விடத்தில், தரித்து வைகினன் - (தன்) தியானநிலைதவறித் தங்கியிருந்தான் எ-று.

குறுமுனி - உருவத்தாற் குறுகிய முனிவர், இவரது உருவம் அங்குஷ்டப் பிரமாணமென்பர். அகத்தியரருளிய தமிழ் இலக்கணங்களுக்குப் பொருத்தமாகத் தமிழ் இலக்கியங்கள் பலவற்றையுஞ் செய்தவராகிய புலவர் தலைவர் என்பதாம். புதுமை - நூதனம், (வியப்பு-அதிசயம்). சங்கப்புலவர்களுட் சிறந்தவராதலால் இவரைப் புலவர் சிங்கம் என்றார்.

பரிதியந் தகன்றனைப் பயந்த பின்னர்வல்
லிருணுகர்ந் தனையவ னிளவ லாமெனக்
கருவிருந் தின்றன காட்சித் தாகிய
வொருபெரும் பூதமங் குடன்று வந்ததே.

(இ - ள்.) பரிதி - சூரியன், அந்தகன் தன்னை - யமனை, பயந்தபின் னர் - பெற்றபிறகு, வல் இருள் நுகர்ந்து - வலிய இருளை விழுங்கி, கரு இருந்து - வயிறு வாய்த்திருந்து, அனையவன் - அந்தயமனுக்கு, இளவல் ஆம் என - தம்பியாமென்று சொல்லும்படி, ஈன்றன்ன-பெற்றாற்போன்ற, காட்சித்து ஆகிய - தோற்றமுடையதாகிய, ஒரு பெரும்பூதம்-ஒரு பெரிய பூதமானது, அங்கு - அவ்விடத்தில், உடன்று வந்தது - கோவித்து வந்தது எ-று.

அந்தகன் - உயிர்களை முடிவுசெய்கிறவன். இருளை நுகர்ந்து கரு விருந்து பெற்றாற்போன்ற காட்சியதெனக் கருநிற மிகுதியும் அந்தகன் இளவலெனக் கொடுந்தன்மையும் கூறினார். பரிதி அந்தகன் என்பன வடசொற்கள். உடன்று என்பதற்குப் பகுதி உடல். (௪0௨)

வாரியை வயிற்றுறும் வடவை யோடொரு
பாரிய வுருவுசெய் தென்னப் பார்மிசைக்
காரினை யிடியொடு கவர்ந்து பங்கய
னோருரு வமைத்தென வுருவ மிக்கதே.

(இ - ள்) (அந்தப் பூதம்) வாரியை - கடல்நீரை, வயிறு உறும் - தன்வயிற்றில் அடக்குகிற, வடவையோடு - வடவைத் தீயோடு, ஒரு, பாரிய - பெரிய, உருவுசெய்தென்ன - உருவெடுத்தாற்போலவும், பார்மிசை - பூமியின்மீது, காரினை-மேகத்தை, இடியொடு - இடியுடனே, கவர்ந்து - பறித்துக்கொண்டுவந்து, பங்கயன் - பிரமன், ஓர் - ஒரு, உரு - வடிவை, அமைத்தென்ன - அமைத்தாற்போலவும், உருவம் மிக்கது - மேலான உருவமுடையது எ-று.

வடவாக்கினி-பசிக்கும். கார் மேகத்துக்கும், இடி-முழக்கத்துக்கும் உவமை. வாரி - வடசொல். வடவைபாடப என்னும் வடசொற்றிரிபு. கார்-ஆகுபெயர். பங்கயன் - தாமரைமலர்த் தவிசி லிருப்பவன், திருமாலின் திருவுந்தித் தாமரையிற் றோன்றினவன் எனினுமாம். (௪0௩)

இருளறி யாதவல் லிரவி யும்பெறு
தெருளறி யாதவா ணவமுந் தீர்தலின்
மருளறி யாதவோர் சிவமு மானவே
யருளறி யாதத னகமெஞ் ஞான்றுமே.

(இ - ள்.) (அது) இருள் அறியாத - இருட்டைக்கண்டறியாத, வல் இரவியும் - வலிய சூரியனையும், பெறு - பெறுகிற, தெருள் அறியாத - ஞானத்தைச் சிறிதும் அறியாத, ஆணவமும் - ஆணவமலத்தையும், தீர்தல் இல் - நீங்குதல் இல்லாத, மருள் - மயக்கத்தை, அறியாதது - சிறிதும் அறியாததாகிய, ஓர் - ஒப்பற்ற, சிவமும் - பரமசிவத்தையும், மான -

நிகர்க்கும்படி, தன் அகம் - தன் மனதில், என்ஞான்றும் - எந்நாளும், அருள் - கருணை யென்பதை, அறியாதது - சிறிதும் அறியாதது எ-று.

ஆணவம் - மும்மலங்களுள் ஒன்று. அது அறியாமையோடு கூடிய அகங்காரம். நான்காமடியில் அறியாத வென்பது விகாரம். இரவி-ரவி யென்னும் வடசொற்றிரிபு. சூரியன் என்பது பொருள். (௧0௪)

அடுதிற லுடையவப் பூத மாயிடை
வடநிழ லமர்தரும் வள்ளற் கீரனை
நடைதள ருழையிளங் கன்று நச்சியோர்
கொடுவரி கவர்ந்தெனக் கொண்டு சென்றதே.

(இ - ள்.) அடு - கொல்லுகிற, திறல் உடைய-வல்லமையையுடைய, அ பூதம் - அந்தப் பூதம், ஆயிடை - அவ்விடத்தில், வடம் நிழல் - ஆலமரத்தின் நிழலில், அமர்தரும் - தங்கியிருக்கிற, வள்ளல் கீரனை - உதார குணத்தையுடையவனாகிய நக்கீரனை, நடைதளர்-தளர்நடையையுடைய, உழை - மானினது, இளங்கன்று - இளங்கன்றை, நச்சி - விரும்பி, ஓர் - ஒரு, கொடுவரி - புலியானது, கவர்ந்தென - இழுத்துக்கொண்டு போனாற்போல, கொண்டு சென்றது - தூக்கிக்கொண்டு போயிற்று எ-று.

கீரனுக்கு வள்ளன்மை நினைத்தளவில் ஆயிரக்கணக்கான அருங்கவிகளை அருளுந்தன்மை. அவ்விடை ஆயிடையென விகாரமாயிற்று. வடம்-வடசொற்றிரிபு. ஆலமரம் என்பது பொருள். (௧0௫)

ஆங்கொரு மலைமுழை யவிர்ச டைப்பிரான்
பூங்கழ லடிநிழல் பொருந்தி னோர்தமை
நீங்கிய வாணவ சத்தி நித்தமா
யீங்குறு மெனநனி யிருளொ டொன்றுமால்.

(இ - ள்.) ஆங்கு - அவ்விடத்தில், ஒரு மலைமுழை - ஒரு மலைக்குகை, அவிர் - பிரகாசிக்கிற, சடை - சடாபாரத்தையுடைய, பிரான் - சிவபெருமானது, கழல் - கழலணிந்த, பூ - தாமரைமலர்போன்ற, அடி-திருவடிகளின், நிழலில்-நீழலில், பொருந்தினோர் தமை-வந்தடைந்தவர்களாகிய அடியார்களை, நீங்கிய-விட்டு நீங்கின, ஆணவசத்தி - ஆணவமென்னும் வலியமலம், நித்தமாய் - அழிவில்லாமல், ஈங்கு உறும் - இங்குப் பொருந்தியிருக்கும், என-என்று சொல்லும்படி, நனி இருளொடு-மிகுந்த இருட்டுடனே, ஒன்றும் - கூடியிருக்கும் எ-று.

ஆணவசத்தியைக் கரிதாகக் கூறுதல் மரபாதலால் இங்ஙனங் கூறினார். அவிர்தல் - விளங்குதல் எனினுமாம். சடை - ஜடா என்னும் வடசொற்றிரிபு. பிரான் உபகாரகுணமுள்ளவன். நித்தம் நித்யம் என்னும் வடசொற்றிரிபு. (௧0௬)

பகலிடை மெலிதலும் பரந்த வல்லிடை
மிகுதலு மிலையிருள் வெற்பி னம்முழை
மகிழ்வுசெய் வாழ்வினும் வறுமை யின்கணுந்
தகுதியா மனமொரு தன்மைத் தாதல்போல்.

(இ - ள்.) தகுதி ஆம் - நல்லொழுக்கத்திற் செல்வதாகிய, மனம் - மனமானது, மகிழ்வு செய் - களிப்பையுண்டாக்குகிற, வாழ்வினும் - செல்வவாழ்க்கை நேர்ந்த காலத்திலும், வறுமையின் கண்ணும்-வறுமை நேர்ந்த காலத்திலும், ஒரு தன்மைத்து ஆதல்போல் - ஒரு தன்மையையே யுடையதாதல்போல, அ - அந்த, வெற்பின் முழை - மலைக்குகையில், இருள் - இருட்டு, பகலிடை - பகற்காலத்தில், மெலிதல் - குறைதலும், பரந்த அல் இடை - பரவிய இராக்காலத்தில், மிகுதலும் - வளர்தலும், இலை - இல்லை எ-று.

பகலிடை அல்லிடை என்பவற்றிலுள்ள இடை ஏழனுருபு. வாழ்வு-செல்வம். (வாழ்ச்சிக்குக் காரணமானது. ஆகு பெயர்) வறுமை-இன்மை (பொருளின்மை). கண்ணும் என்புழியும் கண் ஏழனுருபு. (௧0எ)

உண்ணிறை யிருண்முழை யொன்றில் பத்துநூ
றெண்ணுறு தொகையரா யிருந்து ளோருட
னண்ணலை யுள்புக வடைத்துப் பூதநீர்க்
கண்ணிய வுளமொடு கயத்திற் போயிற்றே.

(இ - ள்.) பூதம் - அந்தப் பூதமானது, உள்நிறை - உள்ளே நிறைந்திருக்கிற, இருள் - இருளையுடைய, முழை ஒன்றில்-ஒரு மலைக்குகையில், பத்து நூறு எண் உறு தொகையர் ஆய் - ஆயிரமென்னுங் கணக்கினையுடையராகி, இருந்துளோருடன் - இருந்தவர்களோடு, அண்ணலை - நக்கீரனை, உள்புக - உள்ளே புகும்படி, அடைத்து - மூடிவைத்து, நீர் - நீராடலை, கண்ணிய - நினைத்த, உளமொடு - மனத்துடனே, கயத்தில் - தடாகத்துக்கு, போயிற்று - சென்றது எ-று.

மிகுதிபற்றி பத்துநூறெண்ணுறு தொகையர் என்றாராயினும் அந்தக் குகையிலிருந்தவர் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மர் என்பது புராணகதை. நீர்க்கண்ணிய வுளமொடு கயத்தில் போயிற்று என்றது தனது நியமப்படி நீராடப் போயிற்றென்றபடி. (௧0அ)

போயின காலையிற் புலவ னோடவண்
மேயின ரினைவுறீஇ விளம்பன் மேயினோர்
நீயிவண் வருதலாற் குறைநி ரம்பியே
யாயிர மெனுங்கணி தத்த ராயினோம்.

(இ - ள்.) போயின காலையில் - (அப்படி பூதம்) போனகாலத்தில்; அவண் - அவ்விடத்தில், மேயினர் - முன்னமே அடைபட்டிருந்தவர்கள்,

இனைவு உற்று - துன்பமடைந்து, புலவனோடு - நக்கீரனோடு, விளம்பல் மேயினர் - சொல்வாராயினர், நீ—, இவண் வருதலால் - இங்கு வந்ததனால், குறை நிரம்பி - ஒன்றில்லை யென்னுங் குறை நிறைந்து, ஆயிரர் என்னும் - ஆயிரவர் என்கிற, கணிதத்தர் ஆயினேம் - தொகையுடையவராயினோம் எ-று.

இனைவு - துன்பம். அதாவது, நாம் நெடுங்காலமாகச் சிறைப்பட்டிருந்தும், இந்தப் பூதத்தினால் உணவாகிகளைப் பெற்றுப் பிழைத்திருந்தோம். இன்று இவனாலே இந்தப் பூதத்துக்கு இரையாகுங்காலம் வந்துவிட்டதே யென்பது. புலவன் - புலமையிற் சிறந்தவன். புலமை-கல்வியறிவு. கணிதம் - கணக்கு, (தொகை). (கoகூ)

இனியுயிர் செகுத்துநம் யாக்கை யால்வயிற்
றனலினை யவிக்குமாங் கதுவென் றுள்ளுடை
நினைவொடு முரைத்தனர் நிரம்பு தங்களால்
வினைவழி புலவன்வந் தமைவி ளங்கிலார்.

(இ - ள்.) அது - அந்தப் பூதம், இனி - இனிமேல், (உடனே) உயிர் செகுத்து - நமது உயிரை யொழித்து, நம் யாக்கையால் - நமது உடம்பினால், வயிற்று அனலினை - பசித்தீயை, அவிக்கும் - தணிக்கும், என்று—, உள் உடை நினைவொடும் - மனமழிகிற நினைவோடு, உரைத்தனர் - சொன்னார்கள், நிரம்பு - நிறைந்த, தங்கள் - தங்களுடைய, நல்வினை வழி - புண்ணியப்பயனால், புலவன் - நக்கீரன், வந்தமை - வந்ததனை, விளங்கிலார் - அறியாத அவர்கள் எ-று.

வயிற்றனல் என்றது பசியை. அவித்தல் - தணித்தல். நல்வினை நிகழ்ந்த பிறகு நேர்வதாதலால் புண்ணியத்தை வழியென்றார். (கக0)

கீரனங் கவர்மொழி கேட்டு மாழ்கில
னாருநெ ரய்தலு மார்வ மெய்தலு
மோருட லியற்கையென் றுள்ளி யாங்குளார்
பேரிட ரகற்றுமோர் பெற்றி யெண்ணினான்.

(இ - ள்.) கீரன் - நக்கீரன், அங்கு - அப்பொழுது, அவர் மொழி கேட்டு - அவர் சொன்ன சொற்களைக் கேட்டு, மாழ்கிலன் - மனமயங்காதவனாய், ஆர்-மிகுந்த, அஞர் எய்தலும்-துன்பமடைதலும், ஆர்வம் எய்தலும்-இன்பமடைதலும், ஓர் உடல்-ஒவ்வொரு உடம்புக்கும், (எல்லார்க்கும்) இயற்கை-இயல்பேயாகும், என்று உன்னி-என்று நினைத்து, (பிறகு) அங்கு உள்ளார்-அவ்விடத்தில் இருப்பவர்களுடைய, பேர் இடர்-பெருந்துன்பத்தை, அகற்றும் - ஒழித்தற்குரிய, பெற்றி - உபாயத்தை, எண்ணினான்-ஆலோசித்தான் எ-று.

மாழ்கல் - மயங்கல், பகுதி மாழ்கு. மாழ்கிலன் முற்றெச்சம். உன்னல் - நினைத்தல், பகுதி உன். பெற்றி-தன்மை, அது ஈண்டைக் கேற்ப உபாயத்துக்காயிற்று. (கக்க)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

வரைபுணர் குறிஞ்சி மன்னன் வரைபக வெறிந்த செவ்வேண்
முருகல ரலங்கற் றிண்டோண் முருகனென் றவன்பொற் றண்டை
திருவடி மலரி றைஞ்சிற் றீவினைச் செல்லன் முற்றும்
பரிதியங் கடவுட் கண்ட பனியென வகன்று போமால்.

(இ - ள்.) வரைபுணர் - மலையைச்சார்ந்த, குறிஞ்சி - குறிஞ்சி நிலத்துக்கு, மன்னன் - தலைவனும், வரை - கிரௌஞ்சமலையானது, பக - பிளக்கும்படி, எறிந்த - வேலெறிந்த, செவ்வேள் - செவ்வேள் என்னுந் திருநாமமுடையவனும் ஆகிய, முருகு அலர் - மணம் வீசுகிற, அலங்கல் - மாலையையுடைய, திண்தோள் - வலிய புயத்தையுடைய, முருகன் என்றவன்-முருகனென்று சொல்லப்படுவோனாகிய சுப்பிரமணியக் கடவுளது, பொன் தண்டை - பொற்றண்டையை யணிந்த, திருவடிமலர் - திருவடித் தாமரைமலரை, இறைஞ்சின் - வணங்கினால், தீவினை - தீவினைப்பயனாகிய, செல்லல் முற்றும் - துன்பமுழுதும், பரிதியங்கடவுள் கண்ட - சூரிய பகவானைக்கண்ட, பனி என-பனிபோல, அகன்றுபோம்- ஒதுங்கிப்போகும் எ-று.

பகல் - பிளத்தல், பகுதி பகு. அலங்கல் ஆகுபெயர், தீவினையும் அது. பரிதியங்கடவுள் என்பதில் அம் அழகு என்றேனும் சாரியையென்றேனும் உரைத்துக்கொள்க. பனி என - பனி ஒதுங்கிப் போவதுபோல. (கசஉ)

ஆறிரு தடந்தோ ளண்ண லாறெழுத் தினையு மோதில்
வேறொரு பிணிபோ மென்கை வியப்பதோ பிறவி யென்னு
மாறரு மனாதி நோயு மாறிவே தாக மங்கள்
கூறரு மின்ப வீட்டிற் குடிபுகுந் திருப்ப ரன்றே.

(இ - ள்.) தடம் - பெரிய, ஆறிருதோள் - பன்னிரண்டு புயங்களையுடைய, அண்ணல் - முருகக்கடவுளது, ஆறு எழுத்தினையும் - ஷடாக்ஷரத்தையும், ஓதில் - உச்சரித்தால், (உச்சரிப்பவர்களது) வேறு ஒரு பிணி - மற்றொரு துன்பம், போம் என்கை நீங்குமென்று சொல்லுதல், வியப்பதோ - ஆச்சரியமோ, (உச்சரித்தவர்கள்) பிறவியென்னும் - பிறப்பாகிய, மாறு அரு - நீங்குதற்கரிய, அநாதிநோயும் - பழமையாகிய துன்பமும், மாறி - நீங்கப்பெற்று, வேதாகமங்கள்-வேதாகமங்களாலும், கூறு அரு - சொல்லுதற்கரிய, இன்பம் - பேரின்பத்தைத் தருகிற, வீட்டில்- முத்தியுலகத்தில், குடிபுகுந்து இருப்பர் - குடிபுகுந்து வீற்றிருப்பார்கள் எ-று.

அநாதி - தொடக்கமில்லாதது (தொன்றுதொட்டுள்ளது). அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். (பரமசிவனுக்குப் பிரணவார்த்தம்





நக்கீரர் முருகக்கடவுள் காக்ஷிப்ப பொய்கையில்

போதித்தபெருமை). ஆறெழுத்து குருமுகத்தா லறிதற்பால தாதலால் ஈண்டு விரித்திலம். வியப்பதோ என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி

ஐம்பெரும் பூத வாயி னகப்படு முயிரை மீட்டுச்
செம்பொனஞ் சிறுச தங்கைத் திருவடி நிழலில் வைக்கு
நம்பிநங் குமர வேட்கிந் நாளொரு சிறுபூ தத்தா
லிம்பரிங் குறுநோய் தீர்த்த லெளிதலா லரிய தன்றே.

(இ - ள்.) ஐம்பெரும் பூதவாயில் - பஞ்ச மஹாபூதங்களின் வாயில், அகப்படும் - சிக்கி வருந்துகிற, உயிரை - உயிர்களை, மீட்டு - (அவற்றினின்றும்) விடுவித்து, செம்பொன்-செம்பொன்னாலியன்ற, சிறுசதங்கை-சிறிய சதங்கையணிந்த, திருவடிநிழலில் - தன் சீர்பாதத்தின் நிழலில், வைக்கும் - வைக்கிற, நம்பி - நம்புதற்குரியவனாகிய, நம் குமரவேட்கு - நமது முருகக்கடவுளுக்கு, இந்நாள் - இன்றைக்கு, ஒரு சிறு பூதத்தால் - ஒரு சிறிய பூதத்தினால், இம்பர் - இவ்வுலகத்தில், இங்கு - இப்பொழுது, உறு - நேரிடுகிற, நோய் - துன்பத்தை, தீர்த்தல் - ஒழித்தல், எளிது அல்லால் - எளிய காரியமேயன்றி, அரியது அன்றே - அருமையாகிய காரியமல்லவே எ-று.

பூதவாய் என்றது பொறிகளையும், புலன்களையும். நம்பி - குணபூர்ணன். (௧௧௪)

இன்னன நினைந்து கீர னிலங்கிலை நெடுவேற் செம்மல்
பன்னிரு செவியு மாரப் பருகமு தாகி யோதி
லுன்னிய வுன்னி யாங்கிங் குதவுவ தாகிப் பாவுண்
முன்னுற வந்து நிற்கு முருகாற் றுப் படைமொ ழிந்தான்.

(இ - ள்.) (கீரன்) இன்னன - இவைபோல்வனவாகிய வற்றையும், நினைந்து - எண்ணி, இலங்கு இலை - விளங்குகிற இலைவடிவினதாகிய, நெடுவேல் - நெடிய வேற்படையையுடைய, செம்மல் - பெருமையிற் சிறந்தோனாகிய முருகக்கடவுளது, பன்னிரு செவியும் - பன்னிரண்டு காதுகளும், ஆர - திருப்தியடையும்படி, பருகு - குடிக்கிற, அமுது ஆகி - அமிர்தமாகியும், ஓதில்-எவர்கள் படித்தாலும், (அவர்களுக்கு) உன்னிய - அவர் நினைத்த பொருள்களை, உன்னியாங்கு - நினைத்தபடியே, இங்கு - இப்பொழுதே, உதவுவது ஆகி - கொடுப்பதாகியும், பாவுள் - செய்யுட்களில், முன்னுறவந்துநிற்கும் - முந்தினதாகி வந்து நிற்கிற, முருகாற்றுப்படை - திருமுருகாற்றுப்படையென்னும் நூலை, மொழிந்தான் - சொன்னான் எ-று.

இனி பத்துப்பாட்டுள்ளே முதன்மைத்தாய் வந்து நிற்கும் முருகாற்றுப்படையென்னும் பாட்டு என்றலுமாம். பருகல் - குடித்தல், பகுதி பருகு. முருகாற்றுப்படை - திருமுருகாற்றுப்படை. (௧௧௫)

பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலைக் கருங்கண் வள்ளி
கன்னலு மமுதுந் தேனுங் கைக்குமின் றீஞ்சொன் மாற்றித்
தன்னிகர் புலவன் கூறுந் தமிழ்செவி தாழ்த்துக் கேளா
வந்நிலை மனங்க ளிப்புற் றறுமுகம் படைத்த கோமான்.

(இ - ள்.) அறுமுகம்படைத்த கோமான்-ஆறு திருமுகங்களையுடைய அந்த முருகக்கடவுள், பொன் அவிர் - பொற்பொடிபோல விளங்குகிற, சுணங்குபூத்த - தேமல் படர்ந்த, புணர்முலை - நெருங்கிய தனங்களையும், கருங்கண் - கரிய கண்களையுமுடைய, வள்ளி - வள்ளிநாயகியாரது, கன்னலும் - கருப்பஞ்சாறும், அமுதும் - அமிர்தமும், தேனும்—, கைக்கும்-தன் சுவையால் கசப்பிக்கிற, இன் தீஞ்சொல் - மிக்க இனிமையாகிய சொல்லையும், மாற்றி - நீக்கி, தன் நிகர்புலவன் - தனக்குத்தானே நிகர்க்கின்ற புலவனாகிய நக்கீரன், கூறும் - சொல்லுகிற, தமிழ் - தமிழ் தோத்திரத்தை, செவிதாழ்த்துக் கேளா - திருச்செவி சாய்த்துக் கேட்டு, அந்நிலை-அப்பொழுது, மனம் களிப்புற்று-திருவுளமிகமகிழ்ந்து எ-று.

களிப்புற்று இவர்ந்து வந்து தோன்றி மோதி முடிதகர்த்து வீட்டிவிடுத்தனன் என நான்கு கவிகளுக்கும் ஒரே முடிபாதலறிக. பொன் ஆகுபெயர். புணர்தல் - நெருங்குதல், பகுதி புணர். கரும்பு ஆகுபெயர். கேளா-செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். (கககூ)

துயின்மலி திருமால் வீழ்ந்து துணுக்கென வெழுந்து நிற்ப
வெயின்மணி யணைமு டக்கு மெய்நிமிர்ந் தோட வாடு
மயின்மிசை யலையிற் றோன்றும் வளரிளம் பரிதிப் புத்தே
ளியன்மலி யுருவந் தோன்ற விவர்ந்தறு முகமி லங்க.

(இ - ள்.) துயில் மலி - (தன்மீது) யோகநித்திரை செய்கிற, திருமால் - ஸ்ரீ மஹாவிஷ்ணு, வீழ்ந்து - கீழே விழுந்து, துணுக்கென-அஞ்சி, எழுந்து நிற்ப - எழுந்து நிற்கும்படி, வெயில் மணி அணை - (அவர்க்குச் சயநமாகிய) சூரியகாந்திபோன்ற ஒளியை வீசுகிற மாணிக்கத்தையுடைய ஆதிசேஷன், முடக்கு மெய் - (தன்) வளைந்த உடம்பு, நிமிர்ந்து ஓட - நிமிர்ந்து ஓடும்படி, ஆடும் - நடிக்கின்ற, மயில் மிசை-மயிலின்மேல், அலையில் தோன்றும்-கடலில் உதிக்கிற, வளர்-மேன்மேல் வளர்கிற, இளம்பரிதிப் புத்தேள் - இளஞ் சூரியபகவானது, இயல்மலி - இயற்கைமிகுந்த, உருவம் - தன் வடிவம், தோன்ற - தோன்றும்படியாகவும், அறுமுகம் இலங்க - ஆறு முகங்களும் விளங்கும்படியாகவும், இவர்ந்து-ஏறி எ-று.

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு, ஓவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி" என்பது திருமுருகாற்றுப்படை. மணியென்னும் பொதுப்பெயர் ஈண்டைக் கேற்ப மாணிக்கத்தையே குறித்து நின்றது. (ககள)

பன்னிரு கதிருந் தோன்றும் பன்னிரு மலைகள் போலு
மின்னவிர் குழைக டாழ்ந்து விளங்குறு குவவுத் திண்டோட்
பொன்னரி மாலை தாழப் பொலங்கழல் புனைந்து வந்தென்
சென்னியின் மலர்ந்த கஞ்சந் திகழ்தர வந்து தோன்றி.

(இ - ள்.) பன்னிரு கதிரும் - பன்னிரண்டு சூரியரும், தோன்றும் - உதிக்கிற, பன்னிரு மலைகள் போலும் - பன்னிரண்டு மலைகள் போன்ற, மின் அவிர் - ஒளியை வீசுகிற, குழைகள் - குண்டலங்கள், தாழ்ந்து, விளங்குறு - தொங்கி விளங்கப்பெற்ற, குவவு - திரட்சியாகிய, திண்தோள் - வலிய புயங்களில், பொன் அரிமாலை - பொன்மயமானதொரு ஆரம், தாழ - தொங்க, பொலம் கழல் - பொற்கழலை, புனைந்து - தரித்து, என் சென்னியில் - என் தலைமீது, வந்து அலர்ந்த - வந்து மலர்ந்த, கஞ்சம் - தாமரை மலர்கள், திகழ்தர - விளங்கும்படி, வந்து தோன்றி - வந்து எழுந்தருளி எ-று.

கதிர் குழைக்கும் மலை புயத்துக்கும் உவமை. அவிர்தல் - விளங்குதல். தாழ்தல் - தொங்குதல். பொன்னரிமாலை - பொன்னை யரிந்து செய்த மாலை யெனினுமாம். புனைதல் - தரித்தல். கஞ்சம் வடசொல். இதற்கு நீரில் பிறப்பது என்பது பொருள். (கம்-நீர். ஜம்-பிறப்பது.) ()

பூதநா தனுக்கங் காமப் புலவனைப் பூத முண்ணுங்
காதலா னணுகும் போதோர் கதையினா லலகி லண்ட
மோதினா னெனவே மோதி முடிதகர்த் ததனை வீட்டி
மேதையாம் புலவ னோடும் விடுத்தனன் முழையு ளோரை.

(இ - ள்.) அங்கு - அப்பொழுது, பூதநாதனுக்கு - உயிர்களுக்குத் தலைவனாகிய கடவுளுக்கு, ஆம் - அடிமையாகிய, அ - அந்த, புலவனை - நக்கீரனை, பூதம் - அந்தப் பூதம், உண்ணும் காதலால் - தின்னவேண்டுமென்னும் விருப்பத்துடன், அணுகும்போது - கிட்டிவரும்போது, ஓர் கதையினால் - ஒரு கதாயுதத்தால், அலகு இல் அண்டம் - அளவற்ற (பெரிய) அண்டகோளத்தை, மோதினான் எனவே - அடித்தவன் போலவே, மோதி - அடித்து, முடிதகர்த்து - தலையைப் பிளந்து, அதனை - அந்தப் பூதத்தை, வீட்டி - கொன்று, மேதை ஆம் - அறிவிற் சிறந்தவனாகிய, புலவனோடு - நக்கீரனோடு, முழை உள்ளோரை - குகையிலுள்ளவரையும், விடுத்தனன் - சிறை விடுவித்தான் எ-று.

அணுகல் - நெருங்கல், பகுதி அணுகு. கதை - தண்டு. வீட்டல் - கொல்லல், பகுதி வீட்டு. மேதை - மேதா என்னும் வடசொற்றிரிபு. இதற்குப் பேரறிவு என்பது பொருள். இது அதனை யுடையவனை யுணர்த்தலால் ஆகுபெயர். (கஉக)

பாரிடம் விழுங்கப் பட்ட பலரையும் வாய்தி றந்திங்
கோரிடம் விடுப்ப வந்த தொத்தவ ணிருந்தோ ரெல்லாம்
போரிட மலைவேல் போற்றும் புலவனை யடுத்த வாற்றாற்
காரிட மெனும்ப ராரைக் கன்முழை நின்றும் போந்தார்.

(இ - ள்.) பாரிடம் - பூதத்தால், விழுங்கப்பட்ட - விழுங்கத்தக்க, பலரையும் - பலபேரையும், வாய்திறந்து - அதன் வாயைத் திறந்து, இங்கு ஓர் இடம் - இங்கே ஓரிடத்தில், விடுப்ப-விடுவிக்க, வந்தது ஒத்து-வந்தது போன்று, அவண் இருந்தோர் எல்லாம் - அங்கே யிருந்தவரெல்லாரும், போர் இட - (பூதத்தோடு) போர் செய்ய, மலை - கொல்லுந் தொழிலையுடைய, வேல் - வேலாயுதத்தை, போற்றும் - புகழ்ந்த, புலவனை - நக்கீரனை, அடுத்த ஆற்றால் - அடுத்த காரணத்தால், கார் - கரிய, இடம் என்னும் - இடமென்கிற, பராரை - பருத்த பொருக்குக்களையுடைய, கல்முழை நின்றும் - கற்குகையினின்றும், போந்தார் - வெளிப்பட்டு வந்தார்கள் எ-று.

மலைவேல் - போர் செய்தற்குரிய வேல் என்றலுமாம். (கஉ0)

பெரியவர் சங்க மெய்தப் பெற்றிடி னன்மை யென்ன
வுரைசெயப் பட்ட வற்று ளொன்றுமெய் தாத தில்லை
புரைதரும் வினைக டம்முட் போயுகா வினையு மற்றே
வரையுறழ் குவவுத் திண்டோண் மழைமத யானை வேந்தே.

(இ - ள்.) வரை உறழ் - மலையை நிகர்த்த, குவவு - திரட்சியாகிய, திண்தோள் - வலிய புயங்களையுடைய, மழைமதம் - மதமழையைச் சொரிகிற, யானை - யானைகளையுடைய, வேந்தே - வேந்தனே, பெரியவர் சங்கம் - பெரியோர்களது கூட்டத்தை, எய்தப் பெற்றிடின் - ஒருவர் கிடைக்கப்பெற்றால், (அவர்க்கு) நன்மை என்ன - நன்மை என்று, உரை செய்டப்பட்டவற்றுள் - சொல்லப்பட்ட வற்றுள்ளே, எய்தாதது-கிடைக்கப் பெறாதது, ஒன்றும் இல்லை - (எல்லா நன்மைகளும் உண்டாகும்), புரைதரும் வினைகள் தம்முள் - தீமையைத் தருகிற தீவினைகளுள்ளே, போய் உகா வினையும் - போயொழியாத தீமைகளும், அற்றே-அத்தன்மைத்தேயாம், (ஒன்றுமில்லை, தீமைகளெல்லாம் ஒழிந்தேபோகும்) எ-று.

சங்கம் - ஸங்கம் என்னும் வடசொற்றிரிபு. யானைவேந்து - யானை போலும் வேந்தெனினுமாம். புரை - குற்றமுமாம். (கஉக)

மணிமுடி யரசர் வாழ்வு மக்கட்பே றாதி நல்கிப்
பிணிமிடி பகையி டுக்கண் பேயினுக் கனவு கள்வர்

பணிவிட மொழிக்கு மாற்றுப் படைமொழி புலவர் சிங்க
மணிகிளர லங்கற் றிண்டோ ளாறுமுகற் றொழுது சொல்வான்.

(இ - ள்.) (தன்னைக் கற்றவர் கேட்டவர்களுக்கு) மணிமுடி - ரத்ந கிரீடத்தையுடைய, அரசர் வாழ்வு-அரசரது செல்வவாழ்க்கை, மக்கட் பேறு - புத்ரபாக்யம், ஆதி - முதலியவற்றை, நல்கி - கொடுத்து, பிணி - வியாதியையும், மிடி - வறுமையையும், பகை - பகைகையையும், இடுக்கண் - துன்பத்தையும், பேய் - பேயையும், இன்னாக்கனவு - கெட்ட கனவை யும், கள்வர் - திருடர்களையும், பணிவிடம்-பாம்பின் விஷத்தையும், ஒழிக் கும் - ஒழித்துவிட வல்லதாகிய, ஆற்றுப்படை - திருமுருகாற்றுப்படை யென்னும் நூலை, மொழி - பாடின, புலவர் சிங்கம் - புலவர் சிங்கமாகிய நக்கீரன், அணிகிளர் - அழகு விளங்குகிற, அலங்கல் - கடப்பமலர்மாலை யை யணிந்த, திண்டோள்-வலிய (பன்னிரு) தோள்களையும், அறுமுகன்- ஆறு திருமுகங்களையுமுடைய முருகக்கடவுளை, தொழுது - வணங்கி, சொல்வான் - சொல்லுவானாயினன் எ-று.

வாழ்வு ஆகுபெயர். சமயகப்புலவர்களுட் சிறந்து விளங்குவோனாத லால் நக்கீரனை புலவர் சிங்கம் என்றார். அலங்கல் என வாளா கூறினா ரேனும் அறுமுகன் என மேல்வருதலால் கடப்பமலர்மாலையென்றுரைக் கலாயிற்று. அலங்கல் ஆகுபெயர். (கஉஉ)

அடியனேன் செருக்கா லைய வாலவா யமல னென்றன்
வடிவெலாங் கவரு மிந்நோய் வரப்புகன் றனன்யா னஞ்சிக்
கொடியனேன் பிழைபொ றுத்தாட் கோடியென் றனனீ தின்றாங்
கடிவிலாக் கயிலை காணி னென்றனன் கருணை வள்ளல்.

(இ - ள்.) ஐய - தலைவனே, அடியனேன் செருக்கால் - அடியவ னாகிய எனது கருவத்தை நோக்கி அதனால், ஆலவாய் அமலன் - திரு வாலவாயென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான், (கோபங்கொண்டு) என்தன் - எனக்கு, வடிவு எலாங் கவரும் - உருவ முழுவதையுங் கவர்ந்து குறைக்கின்ற, இந்நோய் - இக் குட்டநோயை, வர - வரும்படி, புகன்றனன் - சாபங்கூறினான், யான்—, அஞ்சி - (அச் சாபத்திற்குப்) பயந்து, கொடியனேன் பிழை - கொடுந்தொழிலை யுடை யவனாகிய எனது குற்றத்தை, பொறுத்து - க்ஷமித்துக்கொண்டு, ஆட் கோடி - அடிமையாகக் கொள்ளுவாய், என்றனன் - என்று பிரார்த்தித் தேன், கருணைவள்ளல் - அருளையுடைய அவ்வெம்பெருமான், (என் வேண்டுகோளுக்கிரங்கி) கடிவு இலாக்கயிலை - குற்றமில்லாத திருக்கை லாசத்தை, காணின் - தரிசித்தால், ஈது இன்றாம் - இந்த நோய் இல்லை யாகும், (நீங்கும்) என்றனன் - என்று அருள் செய்தான் எ-று.

ஆலவாய் - மதுரை. கடிவு - ஒழித்தல். செருக்கு - கர்வம். அம லன் - பரிசுத்தன் (மலரஹிதன்). கோடி - கொள்ளுதி என்பதன் விகா ரம். கவர்தல்-கிரஹித்தல். கருணைவள்ளல் - சிவபெருமான். (கஉக)

ஆதலாற் கயிலை காண்பா னடைந்திவ ணிருந்த காலைப்
பூதமா ரஞரி ழைப்பப் போற்றினர்க் குதவி செய்யும்
வேதநா யகநீ யென்பால் விழுமமிங் கனைத்துந் தீர்த்தாய்
சோதிமா கயிலை காட்டித் தொலைத்தருள் பிணியு மென்றான்.

(இ - ள்.) ஆதலால்—, (யான்) கயிலைகாண்பான் - கைலாசத்தைத் தரிசிக்கும் பொருட்டுப் (புறப்பட்டுவந்து), இவண் அடைந்திருந்தகாலை- இவ்விடத்திற் சேர்ந்திருந்தபொழுது, பூதம் - பூதமானது, என்பால் - என்னிடத்தில், ஆர் அஞர் இழைப்ப - நீக்குதற்கரிய துன்பத்தைச் செய்ய, போற்றினர்க்கு உதவிசெய்யும் - (தன்னைத்) துதித்து வழிபட்டவர்க்கு நன்றி செய்தருளுகின்ற, வேதநாயக-வேதங்களுக்குத் தலைவனே, நீ—, இங்கு-இவ்விடத்தில்வந்து தோன்றி, விழுமம் அனைத்தும் - துன்பம் முழுவதையும், தீர்த்தாய் - நீக்கினாய், சோதிமாகயிலை - ஒளியினையுடைய பெரிய கைலாசத்தையும், காட்டி - தரிசிப்பித்து, பிணியும் - இந்நோயையும், தொலைத்தருள் - தீர்த்தருள்வாயாக, என்றான் - என்று பிரார்த்தித்தான் எ-று.

காண்பான் - செயவெனும் வாய்பாட்டு. பான் ஈற்று வினையெச்சம். இழைத்தல் - செய்தல், பகுதி இழை. போற்றுதல்-வழிபடுதல். விழுமம் - துன்பம். (கஉச)

செந்தமி ழாளி யின்ன செப்பலுங் கருணை கூர்ந்து
கந்தவே டிசைபு ணர்த்திக் கயிலையென் றால வாயி
லெந்தைகூ றாமை யானின் றிலங்குதென் கயிலை யானு
முந்துநோய் தீரு மென்ன முன்னின னிதனைச் செய்தான்.

(இ - ள்.) செந்தமிழ் ஆளி - செந்தமிழ்ப் புலவர் தலைவனாகிய நக்கீரன், இன்ன செப்பலும் - இவ் வார்த்தைகளைச் சொன்னவளவில், கந்தவேள் - முருகக் கடவுள், கருணை கூர்ந்து - அருள் மிகுந்து, ஆலவாயில் எந்தை - திருவாலவாயி லெழுந்தருளி யிருக்கின்ற என் தந்தை (பரமசிவன்), திசை புணர்த்தி - திக்கைக்காட்டி, கயிலையென்று - இன்ன கைலாசமென்று, கூறாமையான் - சுட்டிச் சொல்லாமற், (பொதுப்படக் கயிலையென்று கூறியதனால்) இன்று-இப்பொழுது, இலங்குதென் கயிலையானும் - விளங்குகின்ற தெற்குக் கைலாசத்தாலும், முந்துநோய் தீரும்- முதிர்கின்ற இந்நோய் நீங்கும், என்ன முன்னினன் - என்று எண்ணினவனாய், இதனைச் செய்தான் - இவற்றைச் செய்தனன் எ-று.

செந்தமிழ் ஆளி என்பதற்கு செந்தமிழ்ப் புலவர்களாகிய யானைகளுக்கு அச்சம் விளைக்கும் ஒரு சிங்கம் போன்றவன் எனினுமாம். கூர்ந்து என்பதற்கு பகுதி கூர். முன்னல் - நினைத்தல், பகுதி முன். முன்னினன் முற்றெச்சம். (கஉரு)

கரைபொரு திரைநீர்ப் பொய்கை காட்டியொன் றிதன்கண் மூழ்கின்
விரைபடு கொன்றைவேணி வெற்பினைக்காண்பை யென்றான் [கின்
வரைபக வெறிந்த வைவேன் மணிமருள் கலாப மஞ்ஞைக்
குரைகழ லறுமு கத்தெங் குடிமுழு தாளுங் கோமான்.

(இ - ள்.) வரை - கிரவுஞ்சமலையை, பக - பிளவுபடும்படி, எறிந்த - எறிந்த, வைவேல் - கூரிய வேலாயுதத்தையும், மணிமருள் - மாணிக்கம் போன்ற, கலாபம் - தோகையையுடைய, மஞ்ஞை - மயிலையும், குரை கழல் - ஒலிக்கின்ற கழலணியையும், அறுமுகத்து - ஆறுமுகங்களையு முடைய, எங்குடிமுழுது ஆளுங் கோமான் - எமது குலமுழுவதையும் ஆளுகின்ற அக் குமாரக்கடவுள், கரைபொரு - கரைகளை மோதுகின்ற, திரைநீர் - அலைகளையுடைய நீரினையுடைய, பொய்கை ஒன்று - ஒரு தடாகத்தை, காட்டி - காண்பித்து, இதன்கண் - இத் தடாகத்தில், மூழ்கின்- (நீ) ஸ்நானஞ்செய்தால், விரைபடு கொன்றைவேணி - வாசனை பொருந்திய கொன்றை மலரைச் சூடிய சடையினையுடைய பரமசிவனது, வெற்பினை - கைலாசகிரியை, காண்பை - காண்பாய், என்றான் - என்று சொன்னான் எ - று.

பகவெறிந்த வைவேல் என மேல் வருதலால் வரை என்றது கிரவுஞ்சமலையைக் குறித்தது. இதன்கண் - என்பதிலுள்ள கண் என்பது ஏழனுருபு இடப்பொருளது. மூழ்கில் - செயின் எனும் வாய்பாட்டு வினையெச்சம். மூழ்கு - பகுதி கொன்றை ஆகுபெயர். வேணி-வடசொல். வெற்பு - மலை. பொய்கை - இயற்கையான நீர்நிலை. கோமான்- ஒரு பொருட் பன்மொழி. குரைத்தல் - ஒலித்தல், பகுதி - குரை. ()

தன்றலை யான டந்த தாய்க்கலாற் கயிலைக் குன்ற
மின்றிரு தாளா லெய்த றனக்கெளி தோநல் யானைக்
கன்றொடு பிறந்த சிங்கங் கருணையாற் பணித்த வாறு
நன்றெனு வுளங்கொண் டங்க ணல்லிசைப் புலவ னென்பான்.

(இ - ள்.) அங்கண் - அப்பொழுது, நல் இசைப் புலவனென்பான்- நல்ல புகழினையுடைய புலவனென்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற நக்கீரன், கயிலைக்குன்றம் - கைலாசமலை, தன் தலையால் நடந்த தாய்க்கு அலால் - தனது தலையாலே நடந்துசென்ற காரைக்காலம்மையாருக் கல்லாமல், இன்று - இன்றைக்கு, இருதாளால் - இரண்டு தாள்களால், எய்தல் தனக்கு - அடைதற்கு, எளிதோ - எளியதோ, நல்யானைக் கன்றொடு பிறந்த சிங்கம் - நல்ல இளயானையுடன் தோன்றிய சிங்கம்போன்ற சுப்பிரமணியக்கடவுள், கருணையால் - அருளினால், பணித்த ஆறு - கட்டளையிட்டவிதம், நன்று - நல்லது, என - என்று, உளங்கொண்டு - மனதிற் கொண்டு எ - று.

தாய் - அம்மை. தன் தலையால் நடந்த என்னும் விசேடணத்தால் காரைக்காலம்மையை யுணர்த்திற்று. பணித்தல் - கட்டளையிடுதல், பகுதி பணி. நல்லிசைப் புலவன் என்ற அடைமொழியால் நக்கீரனை யுணர்த்திற்று. எனிதோ என்னும் ஓகாரம் எதிர்மறை. நல்யானைக் கன்று என்றது விநாயகக் கடவுளை. சிங்கம் என்றது முருகக் கடவுளை. எல்லா உறுப்புக்களிலும் சிறந்த உறுப்பாகிய தலை யானைத்தலை யாதலால் யானைக்கன்றென்றே கூறினர். போர்த்தல்-மறைத்தல், பகுதி போர். ()

முருகனைத் தொழுது சென்று மூழ்கினு னத்த டத்தி
லிருவினைக் குறும்பு கொல்லு மிலங்குதென் கயிலை தோன்றப்
பொருதிரைக் கங்கை நாணும் பொன்முக ரியினி னெழுந்தான்
சுரர்கண் மொய்த் தலர்பூ மாரி சொரிந்தனர் விசும்பு போர்ப்ப.

(இ-ள்.) (நக்கீரன்) முருகனை-சுப்பிரமணியரை, தொழுது-வணங்கி, அத்தடத்தில்-அந்தத் தடாகத்தில், சென்று மூழ்கினன்-போய் ஸ்நானஞ் செய்தான், (செய்த அளவில்) இருவினைக் குறும்பு - இருவினைகளின் தீமையை, கொல்லும் - அழிக்கின்ற, இலங்கு தென்கயிலை-விளங்குகின்ற தென்கைலாசமாகிய சீகாளத்தி, தோன்ற - (எதிரிற்) காணும்படி, சுரர்கள் - தேவர்கள், மொய்த்து - நெருங்கி, அலர்பூமாரி - அன்று மலர்ந்த புஷ்பவருஷத்தை, சொரிந்தனர் - பெய்தவர்களாய், விசும்பு - ஆகாயத்தை, போர்ப்ப - மறைக்க, பொருதிரைக் கங்கை - மோதுகின்ற அலைகளையுடைய கங்காநதியும், நாணும் - வெள்குகின்ற, பொன்முகரியின் - பொன்முகரி நதியினின்றும், எழுந்தான் - தோன்றினன் எ-று.

அத் தடத்தில் மூழ்கி, தென்கயிலை தோன்றப் பொன்முகரியினி னெழுந்தானென்க. பொன்முகரியின் பெருமையை நோக்கி, தன்பெருமை அதன்பெருமைக்கு ஒப்பாகாமையால் கங்கை வெள்கும் என்றபடி. ()

அருந்தமிழ்ப் புலவன் பொன்னை யாற்றிலிட் டொருகு ளத்திற்
பொருந்துவித் தவன்ப யந்த புதல்வனோர் புலவன் றன்னைத்
திருந்துறக் குளத்தின் மூழ்கச் செய்தொரு நதியின் வந்து
விரைந்தெழப் புரிந்த தன்மை வியந்திடப் பட்ட தன்றே.

(இ - ள்.) அருந்தமிழ்ப் புலவன் - அரிய தமிழ்ப் புலவராகிய சுந்தரமூர்த்தி நாயனார், பொன்னை - தன் செல்வத்தை, ஆற்றில் இட்டு - மணிமுத்தாநதியிற் போட்டு, ஒரு குளத்தில்—, பொருந்துவித்தவன் - மீண்டும் பெறச்செய்த பரமசிவன், பயந்த - பெற்ற, புதல்வன் - குமாரக்கடவுள், ஓர் புலவன் தன்னை - ஒப்பற்ற புலவனாகிய நக்கீரனை, திருந்துற - தன் நோய்நீர்ந்து பரிசுத்தமாம்படி, குளத்தில் - ஒரு பொய்கையில், மூழ்கச்செய்து - மூழ்குவித்து, ஒரு நதியின் - பொன்முகரி நதியினின்றும், விரைந்துவந்து எழ - விரைவில்வந்து தோன்றும்படி, புரிந்த தன்மை - செய்தவிதம், வியந்திடப்பட்டது - யாவராலும் அதிசயித்துத் துதிக்கப்பட்டது எ-று.



நக்கீரர் பொன்முகரிற்றோன்றல்.



நக்கீரர் சுவாமியைத்தோத்திரஞ்செய்தல்.



நக்கீரருக்கு சுவாமி தரிசனங்கொடுத்தல்

ஒரு தமிழ்ப்புலவன் தன்பொன்னை ஓராற்றிற் போட்டு ஒரு குளத்தில் மீண்டும் பெறும்படி அநுக்கிரகித்தவனது புத்திரன். ஒரு புலவனை ஒரு குளத்தில் மூழ்கச்செய்து ஓராற்றினின்றும் எழுந்திருக்கச் செய்த தன்மை அற்புதமாயிருக்கின்றதெனக் கவி சாதுரியமாகக் கூறினர். ()

தாழ்ந்தபொன் முகரி தன்னைச் சார்தலாற் றணந்த தென்ன
வாழ்ந்ததென் கயிலை தன்னைக் காண்கையான் மாய்ந்த தென்னச்
சூழ்ந்ததன் மேனி மாநோய் தொலைந்தெழுந் தனன்மேல் வேலை
வீழ்ந்தவெங் கதிர்கு ணாது வேலையூ டெழுந்த தென்ன.

(இ - ள்.) தாழ்ந்த - ஆழமான, பொன்முகரிதன்னை - பொன்முகரியாற்றை, சார்தலால் - சேர்ந்ததனால், தணந்தது - நோய் நீங்கிற்று, என்ன-என்று சொல்லும்படியாகவும், வாழ்ந்த தென்கயிலை தன்னை-(பரமசிவன்) எழுந்தருளப்பெற்ற தென் திருக்கைலாசத்தை, காண்கையால்-தரிசித்தலாலே, மாய்ந்தது - நோயழிந்தது, என்ன - என்று சொல்லும்படியாகவும், தன்மேனி சூழ்ந்த மாநோய் - தனது உடம்பைக் கவர்ந்த பெரிய குட்டநோய், தொலைந்து - நீங்கப்பெற்று, மேல்வேலை வீழ்ந்த வெங்கதிர் - (தன் ஒளிகுறைந்து) மேற்குக்கடலில் மூழ்கி அஸ்தமித்த வெப்பமாகிய கிரணங்களையுடைய சூரியன், குணாது வேலையூடு-கிழக்குக் கடலில், எழுந்தது என்ன- (அவ்வொளி நிறைந்து) தோன்றி உதித்தது போல, எழுந்தனன் - குட்டநோயால் உடம்பு குறைந்து பொய்கையில் மூழ்கிய நக்கீரன் அந்நோய் நீங்கிப் பொன்முகரியினின்றும் எழுந்தான்.

குணக்குள்ளது - குணாது, மரூஉமொழி. (௬௰)

மாசுறு மணியை மாசு தீர்தர மணணி யாங்குத
தேசுறு முருக னாகித் திருந்துபொன் முகரி மூழ்கி
யாசறு கவிதொ டுத்த வரும்பொரு ளெதிர்ந்தான் போற்கண்
கூசுறு மொளிகொண் மேனிக் குமரன்றா தையையெ திர்ந்தான்.

(இ - ள்.) மாசுறுமணியை-அழுக்குப்பிடித்து ஒளி மறைந்து கிடந்த ரத்தினத்தை, மாசுதீர்தர - அவ்வழுக்கு நீங்கும்படி, மண்ணி ஆங்கு-கடைந்து பரிசுத்தம் செய்ததுபோல, தேசு உறு முருகன் ஆகி - ஒளி மிக்க முருகக்கடவுளுக்கு ஒப்பானவனாகி, திருந்து பொன்முகரி - பரிசுத்தமான பொன்முகரி நதியில், மூழ்கி—, ஆசு அறு கவிதொடுத்த - குற்றமற்ற பாமாலை சூட்டப்பெற்ற, அரும்பொருள் - கிடைத்தற்கரிய பொருளை, எதிர்ந்தான் போல் - (கண்ணுக்கெதிரில்) காணப்பெற்றவன் போல, கண்கூசுறும் - கண் கூச்சமடைவதற்குக் காரணமான, ஒளிகொள் - பிரகாசத்தைக்கொண்ட, மேனி - திருமேனியையுடைய, குமரன்தாதை - குமாரக்கடவுளின் தந்தையாகிய பரமசிவனை, எதிர்ந்தான் - கண்ணுக்கு எதிரிற் காணப்பெற்றான் எ-று.

குமரன் - குமாரனென்பதன் விகாரம். (௬௰௧)

மேற்படி வேறு

நெஞ்சக் குளமன் பெனும்புனலா னிறைந்து கடைவிட் டெனவி
விஞ்சக் கரங்க டலைகூப்பி விளங்கு திருக்கா ளத்திமலை [ழிநீர்
நஞ்சக் கரிய மிடற்றமுதை ஞானக் கொழுந்தைத் தொழுதிறை
யஞ்சக் கரமு மனத்தெண்ணி யமையா வன்பு மயமாகி. [ஞ்சி

(இ - ள்.) நெஞ்சக்குளம் - மனமாகிய தடாகம், அன்பு எனும் புனலால் - அன்பு என்கிற நீரால், நிறைந்து—, கடைவிட்டென - கண்வழியாய் வெளியிற் பெருகி வழிந்தாற்போல, விழிநீர் - கண்ணீர், விஞ்ச- அதிகரிக்க, கரங்கள்-கைகளை, தலைகூப்பி-தலைமேற் குவித்துக்கொண்டு, விளங்கு - விளங்குகின்ற, நஞ்சம் கரிய மிடறு அமுதை - விஷத்தாற் கறுத்த கண்டத்தையுடைய அமிர்தம்போலினிய நாகலிங்கப்பெருமானையும், ஞானக்கொழுந்தை - ஞானப்பூங்கோதை யம்மையையும், தொழுது- வணங்கி, இறைஞ்சி - துதித்து, அஞ்சக்கரம் - பஞ்சாக்ஷர மந்திரத்தையும், மனத்து எண்ணி - மனத்தில் தியானஞ்செய்துகொண்டு, அமையா அன்புமயமாகி - அடங்காத அன்பின் மயமாய் எ-று.

கடைவிடுதல்-கோடிபோதல், கடை-நீர் நிறைந்தபின் வெளிவழியும் வழி, கண்ணீர் பெருகுதல். அன்பினுலுண்டான ஆனந்தத்தால். ஆகி என்னும் எச்சம். மேற்கவியில் பாடினுன் என்னும் வினைகொண்டு முடியும். ()

கயிலை வேறு காளத்தி வேறென் றெண்ணுங் கருத்திலனுய்க்
கயிலை பாதி காளத்தி பாதி யாகக் கலந்துறழ்ந்து
மயலில் கரும்பா மொழிபாகன் மகிழ வெண்பா வந்தாதி
மயிலில் வருவோன் பேரருளால் வந்த புலவன் பாடினுன்.

(இ - ள்.) மயிலில் வருவோன் - மயில் வாகனத்தில் வருகின்ற முருகக் கடவுளின், பேரருளால் - பெருங்கருணையால், வந்த - சீகாளத்திக்கு வந்து சேர்ந்த, புலவன் - நக்கீரன், கயிலை வேறு காளத்தி வேறு—, என்று எண்ணும் - என்று நினைக்கின்ற, கருத்து இலனுய் - எண்ணமில்லாதவனுய், கயிலைபாதி காளத்திபாதி ஆக - திருக் கைலாசமலை பாதிப் பாட்டினும் சீகாளத்திமலை பாதிப்பாட்டினும் வரும்படி, கலந்து உறழ்ந்து- கலந்து ஒற்றுமைப்படுத்து, மயல் இல் கரும்பு ஆம் மொழிபாகன் - அசாரமாகிய சத்தையில்லாமல் முழுவதுஞ் சாரமேயாகிய கரும்பின் சாறுபோலினிய சொற்களையுடைய பார்வதி தேவியாரைத் தன் இடதுபாகத்திற் கொண்ட பரமசிவன், மகிழ - மகிழும்படி, வெண்பா வந்தாதி - ஒரு வெண்பா வந்தாதியை, பாடினுன்—, எ-று.

மயல் - தூரால், இது இப்பொருளதாதல் கண்டு கைவிட்டமயல் என்னு மிடத்துங் காண்க. வெண்பாவந்தாதி - நூறு வெண்பாக்களால் அந்தாதித் தொடையாற் கூறும் நூல். இது இங்கே கயிலைபாதி காளத்தி பாதி யந்தாதியை. (௧௫௫)

பாடும் புலவன் றனக்கொருதான்
    பரிசு கொடுப்பத் திருவுளங்கொண்
டாடும் பெருமா னெதிர்நின்றே
    யறைதி வேண்டிற் றெனவுடம்பு
கூடும் பிணியிங் கொழித்தவருட்
    குன்றே யென்றும் பேரறிவை
மூடும் பிணியுங் களைந்துனது
    முளரித் தாட்கீ ழிருத்தென்றான்.

(இ - ள்) ஆடும் பெருமான் - நர்த்தனஞ் செய்கின்ற பரமசிவன், பாடும் புலவன்தனக்கு - பாடிய அப் புலவனுக்கு, ஒரு பரிசு கொடுப்ப - ஒப்பில்லாத வெகுமதி கொடுக்க, திருவுளங்கொண்டு - திருவுள்ளத்திற் கொண்டு, (எண்ணி) எதிர் நின்று - எதிரில் தரிசனந் தந்து, வேண்டிற்று அறைதி - (உனக்கு) வேண்டிய வரத்தைச் சொல்லு, என - என்று சொல்ல, உடம்பு கூடும் பிணி - (எனது) உடம்பைக் கவிந்த நோயை, இங்கு - இப்பொழுது, ஒழித்த - போக்கியருளிய, அருட்குன்றே - கருணை மலையே, (இவ்வுடற்பிணியை ஒழித்ததுபோலவே) என்றும் - எந்நாளும், பேரறிவை - பெரிய அறிவை, மூடும் - மறைக்கின்ற, பிணியும் - ஆணவ நோயையும், களைந்து - போக்கி, உனது—, முளரித்தாள் கீழ் - தாமரை மலர்போலுந் திருவடி நிழலில், இருத்து - வைத்தருள், என்றான் - என்று பிரார்த்தித்தான் எ-று.

பரிசு - பரிசில், நன்கொடை. திருவுளங்கொண்டு-எண்ணி. ஆடும் பெருமான் - நடேசன். அறைதல் - சொல்லுதல், பகுதி அறை. அறிவை மூடும் பிணி என்றதனால் ஆணவமலம் என்பது விளங்கும். முளரி-ஆகுபெயர். (கஙச)

அந்த மாதி யிலாக்கயிலை யமர்ந்த பெருமா னந்தாதிச்
சந்த மாலைப் புலவனது சத்தி பாதத் துயர்ச்சியாற்
பந்த பாச மறமாற்றிப் பன்றி யுருவாய்க் காண்பதற்கு
வந்த மாலு மறியாத மலர்த்தா ணிழலி லிருத்தினான்.

(இ - ள்.) அந்தம் ஆதி இலா - இறுதியும் முதலுமில்லாத, கயிலை அமர்ந்த பெருமான் - தென் கைலாசத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவ பெருமான், அந்தாதிச் சந்தமாலைப் புலவனது-கைலைபாதி காளத்திபாதி யந்தாதித் தொடைப் பாமாலையாகிய அழகிய மாலையைச் சாத்திய நக்கீரனது, பந்தபாசம் - இருவினையாகிய கயிற்றின்கட்டை, சத்திபாதத்து உயர்ச்சியால் - (தனது) திருவருட் சத்திநி பாதத்தின் பெருமையால், அற - முழுதும், மாற்றி - ஒழித்து, பன்றி உருவாய்க் காண்பதற்கு வந்த மாலும் - பன்றி உருவெடுத்து காணவந்த திருமாலும், அறியாத-தேடிக்

காணாத, மலர்த்தாள் நிழலில்-தாமரை மலர்போலும் திருவடி நிழலிலே, இருத்தினன் - இருக்கச் செய்தான் எ-று.

சத்திபாதம் - அருள்வைத்தல். (௩௩௬)

என்று திருக்கா ளத்திமலை யெழுந்த ஞானச் செழுஞ்சுடரிற்
சென்று புகுந்த கீரனார் செய்தி யனைத்துங் கையிளமான்
கன்று கரந்த பரன்கூறக் கழற்கால் வேந்தன் கதையின்னு
மொன்றுகருணைப் பெருங்கடலேயுரையா யடியேற்கெனத்தாழ்ந் [தான்.

(இ - ள்.) என்று—, திருக்காளத்திமலை எழுந்த - சீகாளத்தியில் தோன்றிய, ஞானச் செழுஞ்சுடரில்-ஞானசொரூபமாகிய மிக்க ஒளியில், சென்று புகுந்த - போய் அடைந்த, (ஐக்கியமான) கீரனார் - நக்கீரதேவரது, செய்தி அனைத்தும்-எல்லாச் செய்கையையும், கை இளமான் கன்று கரந்த பரன் - இடது கையில் இளைய மான்கன்றை மறைத்து விடசங்கமத் திருவுருவங் கொண்டுவந்த பரமசிவன், கூற - சொல்ல, கழல்கால் வேந்தன் - வீரக்கழலை யணிந்த பாதங்களையுடைய யாதவமன்னன், கருணைப் பெருங்கடலே - பெரிய கிருபாசாகரமே, அடியேற்கு - அடியேனுக்கு, இன்னும் ஒன்று கதை - இன்னும் ஒரு கதையை, உரையாய் - சொல்லியருளுவாய், என-என்று, தாழ்ந்தான்-வணங்கி வேண்டினான்.

கரத்தல் - ஒளித்தல், பகுதி - கர. பரன் - மேன்மையுடையவன். இது பரஃ என்னும் வடசொற்றிரிபு. தாழ்தல்-வணங்குதல், பகுதி தாழ்.

கலிவிருத்தம்

தீதறு கவிவரன் செயலு ரைத்தனங்
கோதையர் கயிலைசேர் கொள்கை கூறுதும்
யாதவ மனனமர்ந் தினிது கேளென
மாதவ வடிவருள் வள்ளல் கூறுவான்.

(இ - ள்.) மாதவ வடிவு அருள் வள்ளல் - மிக்க தவத்தையுடைய, விடசங்கமத் திருவுருவங் கொண்டுவந்த பரமசிவன், தீது அறு கவிவரன் செயல் - குற்றமற்ற புலவர் பெருமானாகிய நக்கீரனது செய்கையை, உரைத்தனம் - சொல்லி முடித்தோம், (இனி) கோதையர்-கன்னியர்கள், கயிலை - தென் திருக்கைலாசத்தை, சேர் - சேர்ந்த, கொள்கை - வரலாற்றை, கூறுதும் - சொல்வோம், யாதவ - யாதவ மன்னனே, மனன் அமர்ந்து - மனம் விரும்பி, இனிதுகேள் - இனிமையாகக் கேட்பாயாக, என-என்று, கூறுவான் - சொல்வானாயினான் எ-று. (௩௩௭)

நக்கீரச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௭௬௨.

---

பாண்டிநாட்டிலே, சோமசுந்தரக் கடவுள் அறுபத்துநான்கு திருவிளையாடலியற்றிய மதுரைப் பதியிலே சாஸ்வதியவதாரமாக விளங்கி உலகமுழுமையும் தம்புகழை நாட்டிப் பொய்யடிமையில்லாப்புலவர் எனப் பெயர்பெற்ற நக்கீரதேவர், கபிலதேவர், பரணதேவர் முதலிய நாற்பத்தெண் புலவர்களும், ஒருநாள் அக்கடவுளை யடைந்து, "எம்பெருமானே, எங்களிடத்து யாவரும் வந்து வீண்வாதஞ் செய்கின்றார்கள்; அங்ஙனஞ் செய்யாது அவரவர் புலமையையும் அளவிடுங் கருவியாக சங்கப்பலகை யொன்று தந்தருள்க" என்று பிரார்த்திக்க; கடவுள் புலவுருக்கொண்டெழுந்தருளி, சதுரமாய் முழ அளவினதாகிய ஓர் பலகையை யளித்து, "இது நம்போல்வார்க்கெல்லாம் முழம் வளர்ந்து இடங்கொடுக்கும்; இதை அளவுகோலாக வைத்துக்கொள்க" என்று கட்டளையிட்டு மறைந்தருளினார். அப் புலவர்கள் திருவுளமகிழ்ந்து, ஆலயத்தினது வடமேற்கிலே வங்கியசேகரனாற் றங்கள்பொருட்டுக் கட்டுவிக்கப்பட்ட சங்கமண்டபத்திலே, அப்பலகையிலிருந்துகொண்டு, உயிர்க்குறுதியாகிய அறம் பொருளின்பம் வீடென்னும் நால்வகைப் பொருள்களையும் புதுமொழிகளுள்ளே புணர்த்தி, நவரசங்களும் யாண்டுந் துலங்க பல பிரபந்தங்களை அருளிச்செய்ததுமன்றி, சிவபெருமானே இறையனாரென்னுந் திருநாமத்தோடு தங்களுள்ளே ஓர் புலவராய் வீற்றிருந்து ஐயந்திரிபுகளை அகற்றியருளச் செந்தமிழைத் தேசமெங்கும் பரவச்செய்தனர்.

அக்காலத்திலே, இவர்களை உயிர்த்துணைவராகக் கொண்டு வேண்டிய சிறப்புக்களை நடாத்தி அத்தியந்த அன்புடையனாயொழுகும் வங்கிய சூடாமணியென்னும் பாண்டியன், வசந்தகாலத்திலே, ஒருநாள் மேல்மாளிகையிலே, மனைவியோடு தனித்து இனிதிருந்தனன். அத்தருணத்திலே, சிறிய தென்றலோடுகலந்து, ஒரு திவ்வியமணம் வீச; அவன் அதை தனது மனைவியினது கூந்தலின் மணமென மதித்து, விம்மிதமடைந்து, "இவ்வாசம் கூந்தலுக்கு இயற்கையோ! செயற்கையோ!" என ஐயமுற்று, இதைப் பிறர்க்குப் புலப்படுத்தாது தன்மனத் தடக்கிக்கொண்டு, "யான் ஐயுற்றபொருள் விளங்கச் செய்யுளியற்றும் புலவர்கள் இதைக் கொள்க" என்று ஆயிரம்பொன்னை ஓர் முடிப்பாக்கி, அதைச் சங்கமண்டபத்தின் முன்னே தூக்கினான். புலவர் பலரும் அரசன்கருத்து விளங்காமையால் வெவ்வேறு பொருள்களையமைத்து பாடல்களையியற்றி, அரசன் முன்னருரைத்து, அவைகள் அன்றென மறுக்கப்பட்டமையால் வறிதகன்றிருக்க; அக்கிழி அறுப்பவரின்றியிருந்தது. இருக்கும் நாளிலே, உரோகணி நக்ஷத்திரத்தில் சனிபிரவேசிக்க, சூரியகிரகணமும் சந்திரகிரகணமும் அமாவாசை பௌர்ணிமைகளிலே அடுத்துவர, செவ்வாய் முற்பட்டுச் சுக்கிரன் பிற்பட்டமையால், மழையில்லாமல், தானியவிளைவுகுன்றி, பசிப்பிணி வருத்த; அதனால் உணவின்றி மடிந்தவரொழிய, பிழைத்தவருள்ளே சிலர் நரமாமிசங்களையும் அருந்தத் துணிந்தனர்.

அந்நாளிலே, மதுரையில் சோமசுந்தரக்கடவுளை வழிபடும் ஆதிசைவர்களுள்ளே ஒருவராகிய தருமியென்பவர் தமக்குப் பொருள்வருவின்மையால் கவலையுற்று, இனி யாம் செழிப்புடைய ஓர் தேசத்திற்சென்று ஜீவிப்பதே தகுதியெனத் துணிந்து, ஆலயத்தை யடைந்து, சோமசுந்தரக்கடவுளை வணங்கி, "தாயினுமினிக்க தயாநிதியே, யான் இனி இங்கு இருப்பேனாயின் சாதலையடைவேன். ஆதலால், தக்க தேயத்திற் போயிருந்து, ஈண்டுச் செழித்தபின்னர் வருகின்றேன்" என்று முறையிட; சோமசுந்தரக்கடவுள் திருவருள் சுரந்து, "அன்பனே, நீ வருந்தேல்; பாண்டியனானவன் தனது கருத்தை விளக்கி ஒரு செய்யுள் செய்யும் புலவர் கைக்கொள்ளும்படி ஆயிரம்பொன்னையமைத்த ஓர் கிழியை சங்கமண்டபத்திற்கு முன்னே தூக்கியிருக்கின்றான். இப் பாடலையுரைத்து அதைப் பெற்றுக்கொள்வாயாக" என்று கட்டளை யிட்டு "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ, பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற், செறியெயிற றரிவை கூந்தலி, னறியவு முளவோநீ யறியும் பூவே" என்னும் திருப்பாசுரத்தை அளித்தருளினார். அதுபெற்ற தருமியென்பவர் பெருமிதமுற்றுச் சென்று, அச்செய்யுளமுதத்தை அவ்வரசனது இருசெவிகளிலும் புகட்ட; அரசன் தனது கருத்தை விளக்கியிருத்தலால் இனிது உவந்து, "இப் பாடலை சங்கப்புலவர்கள்பாற் சென்று அரங்கேற்றுவீராக" என் றுரைத்தனன். தருமி சென்று, அப்புலவர்கள்பாலுரைக்க; அவர்கள் கேட்டு மகிழுந் தருணத்திலே, நக்கீரதேவர் கல்விச்செல்வத்தினா லதிகரித்த இறுமாப்பினால், "இப்பாடல் குற்றமுடைத்து" என் றுரைத்தனர்.

அதுகேட்ட தருமியார் வாட்டமுற்று, சோமசுந்தரக்கடவுள் சந்நிதியையடைந்து, "ஒப்புயர்வில்லாத பெருமானே, சில்வாழ்நாளையும் சிற்றறிவையுமுடைய ஓர்புலவர் தேவரீர் செய்யுட்குக் குற்றங்கூறினார்" என விண்ணப்பிக்க; அப்பெருமான் புலவர் வடிவங்கொண்டு, சங்கமண்டபத்தைச் சார்ந்து, "குற்றமற்ற நமது செய்யுளுக்குக் குற்றங் கூறினவர் யாவர்?" என்று வினாவினார். உடனே நக்கீரதேவர் "யானே கூறினேன்" என்று தருக்கி மொழிதலும், பெருமான் "குற்றம் யாது?" என்று வினவ; அவர் "கூந்தலுக்கு செயற்கையாலல்லது இயற்கையாக மணமில்லையே? அங்ஙனமிருக்க, இயற்கையென இல்லாததைக் கூறினமையே குற்றம்" என்று கூறி, மீட்டும் அப்பெருமான் "அரம்பையர் கூந்தலுக்கு மணம் இயற்கையன்றோ?" என்று கூறியவழியும், "அதுவும் மந்தாரமலரொடு கலந்து மணத்தலால் செயற்கையே" என்றனர். சோமசுந்தரக்கடவுள் "நீவழிபட்டேத்தும் காளத்திநாதரது பாகத்தமர்ந்த ஞானப்பூங்கோதையம்மையினது கூந்தல் எத்தன்மையது?" என வினவி, அதுவும் செயற்கையதேயெனச் சாதித்தல் கண்டு, நெற்றிக்கண்ணையும் சடைமுடியையுங் காட்டியருள; நக்கீரதேவர் விபரீத உணர்ச்சியால்

கடவுளை நோக்கி, "நீர் வடிவமுழுமையும் கண்களைக் காட்டினும் உமது பாடல் குற்றமே; சடைகொண்டு மயக்கவேண்டுவதில்லை. இதற்குப் பயந்து எனது கொள்கையை விடேன்" என்றுரைத்தனர். கடவுள் அவரை நோக்கி, "அறிவிலாதவனே, வேதங்களாற் புகழப்படும் அம்பிகையினது கூந்தலை எம்மோடு மாறுபட்டுப் பழித்தாயாதலால் நீ குட்டநோய்கொண்டு அலைக" எனக் கட்டளையிடுதலும், நக்கீரதேவர் மிகவும் பயந்து நடுங்கி, திருவடிகளில் வீழ்ந்து பணிந்து, "கிருபாசமுத்திரமே, நாயிற் கடையேன் அறிவிலாது செய்த பிழையைப்பொறுத்தருளி இந்தச்சாபப்பிணி நீங்கத் திருவருள் புரிவீராக" என்று பிரார்த்திக்க; **பெருமான்** திருவுளமிரங்கி, "**நக்கீரனே,** நீ சென்று கைலையைக் காணின் இக் கொடுநோய் நீங்கும்" என்று பணித்து ஆலயத்துட் புகுந்து மறைந்தருளினார். தருமியார் பொற்கிழி பெற்றுக் களித்திருந்தனர். வறுமைதீர எங்கும் மழைவளஞ் சுரந்தது.

இப்பால், நக்கீரதேவர் சிவபிரான் தந்த சாபத்தீப்பிணி திருமேனியிற் கவிதலால் இனி இந்நோய் முதிருதற்கு முன்னமே கைலையையடைந்து தரிசித்து நிவர்த்தித்துக்கொள்ளல் வேண்டும் எனத் துணிந்து, புலவர்களைத் தனித்தனி யழைத்து, "நட்பினர்களே, உங்களோடு உடன் வசிக்கும் வாழ்வை யிழக்கின்ற பாபியாகிய என்னை மறவாதீர்" என் றுரைத்து, வியாதி காரணமாக விலகிநிற்க; அவர்கள் அதை யறிந்து, நெருங்கியணைத்து, கண்ணீர் பெருக உளந்தளைந் தழுது, "பெறுதற்கரிய பெருந்தகையே, நுண்ணிய உணர்ச்சிமிக்க நும்மை யிழந்து பயனற்றோமாகி இருக்கும் பாபமுதிர்ச்சியை யுடையார் யாங்களேயன்றி வேறு யாவருளர்" என்று கலங்கினர், **நக்கீரதேவர்** அவர்களைத் தனித்தனித் தழுவி, "நட்பிற்கு ஒருதேயத்தராய் உடன் கலந்து பழகுதல் வேண்டுவதில்லை: உணர்ச்சியொத்தலே சிறப்பு. என உணர்ந்த பெரியீர், சிறியேன் பொருட்டுத் தியங்கற்க. யான் செல்கின்றேன்" என்று கூறி, அவர்களுடைய கண்ணும் மனமும் தொடர்ந்து செல்ல, அரிதினீங்கி, இனி **இம்மதுரையையும், சோமசுந்தரக்கடவுளையும், அங்கயற்கண்ணம்மையையும், பாண்டியனையும், சங்கப்புலவர்களையும்** எக்காலங் காணப்பெறுவேமெனவும், தமிழினினிமையை எடுத்து எடுத்து யாவர்க் குணர்த்துவேமெனவும், நினைந்து நினைந்து, வருந்தி வழிக்கொண்டு, சோழநாடு மகதநாடு தொண்டைநாடு என்பவற்றிலுள்ள தலங்களையும், **பருப்பதம் விருபாக்ஷம் கல்லியாணபுரம் காசி திருக்கேதார** முதலிய வடநாட்டுத் தலங்களையும் தரிசித்து, ஒருதினமிருந்தவூரில் மற்றொருதினந் தங்காது விரைந்து,சிவகிருபையால் மனிதர்களா லடைதற்கரிய இமயமலையை யடைந்து, திருமேனியிலே பிணி மிகவும் வருத்தவும் உள்ளங்கால்கள் வெள்ளெலும்பாகத் தேயவும் செல்லும் வழியிலே, கடலையொத்த ஓர் தடாகத்தைக் கண்டு, நீராடி நியதி முடித்து, அதன் கரையிலே, தெய்வீகம் பெற்றதாய்ப் பணைத்துத் தழைத்திருக்கும் ஒரு ஆலவிருக்ஷத் தடியிலே, தியானத்திருந்தனர்.

அச் சமயத்திலே, அவ் வாலமாத்திலிருந்து, ஓரிலை பாதி ஜலத்திலும் பாதி கரையிலுமாக வீழ்ந்து, ஜலத்தில் விழுந்த பாகம் மீனும், கரையில் விழுந்தபாகம் பறவையுமாகி, மீன் ஜலத்திலும் பறவை கரையிலுமாக இழுக்க; **நக்கீரதேவர்** அப் புதுமையைக் கண்டு, அதிவியப்புடையராகி, தியானநிலை தவறியிருந்தனர். இருக்குங்கால், வடவாக்கினிபோலும் உதராக்கினியுடையதாய் இடியைப்போலுங் கடிய முழக்கமுடையதாய் அருளென்பது சிறிதும் அணுகப் பெறாததாயுள்ள ஒரு கரிய பூதம், அவ்விடத்திலே சிவபூசையாதிகளில் வழுவினவர்களாகிய தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரை ஒரு இருட்குகையிலே அடைத்து வைத்துக்கொண்டு, இன்னும் ஒருவன் வேண்டுமெனக் காத்திருந்து, இவரைக் கண்டவுடனே தூக்கிச் சென்று, அக் குகையினுள்ளே யடைத்து ஆயிரவராக்கி, தன் னியமப்படி நீராடுதற்குத் தடாகத்திற் செல்ல; முன்னர் அடைபட்டிருந்தவர்கள் தங்களுடைய பூர்வபுண்ணிய முதிர்ச்சியினால் நக்கீரதேவ ரெழுந்தருளியதை உணராது, அவரை நோக்கி, "நாங்கள் நெடுங்காலமாகச் சிறையிலகப்பட்டிருந்தும் இப் பூதத்தினால் உணவு முதலியவைகளைப் பெற்றுப் பிழைத்திருந்தோம்; இன்றைக்கு உம்மாலே இதற் கிரையாகுங்காலம் சமீபித்தது" என்று அழுதார்கள். **நக்கீரதேவர்** அவ் வாக்கியங்களைக் கேட்டு மனஞ் சலிப்பில்லாமல் யாவர்க்கும் இன்பமெய்தலும், துன்பமெய்தலும் இயற்கையே. ஆயினும், இவர்களது துக்கத்தை நிவர்த்தித்தலே நமக்குத் தகுதி எனத் துணிந்து, சிந்திப்பாராயினர்.

குறிஞ்சிநிலத் தலைவனாய் விளங்கும் **குமரகுருபரனை** வழிபடில் துன்பமனைத்தும் சூரியனைக்கண்ட பனியெனத் தொலையும். அம்மட்டோ! அப்பெருமானது **ஆறெழுத்தையும்** உச்சரித்தோர் அநாதி தொடங்கியே, அகலுதற் கரிதாய்த் தொடர்ந்த பிறவிநோயையுமகன்று வேதாகமங்களால் விளம்புதற்கரிய மெய்யின்ப வீட்டிலே வீற்றிருக்கப் பெறுவர். இங்ஙனமாயின், இவ் வாறெழுத்தையும் உச்சரிப்போரை யணுகிய பல வேற்றுமைப் பிணிகளும் விளிந்தொழியு மென்பது ஓர் வியப்பாகுமோ! ஐந்து பெரும் பூதங்களினுடைய வாய்களிலே அகப்பட்டு மாழ்கும் ஆன்மாக்களை அவற்றினீக்கிச் செம்பொற் சிறுசதங்கையணிந்த திருவடி நிழலிலே வைக்கும் எமது **குமரவேளுக்கு** இப்பொழுது இங்கே இச் சிறு பூதத்தாலணுகிய இந்நோயைத் தவிர்த்தல் எளிதேயன்றி அரியதாகுமோ! என இன்னன பல நினைந்து, அக்கடவுளுடைய பன்னிரு செவிகளும் ஆரப்பருகும் அமுதமாகியும், யாவரோதினும் சிந்தித்த பொருள்களைச் சிந்தித்தவண்ணமே அச் சனனத்திற்றானே அளிப்பதாகியும், செய்யுள்களினுள்ளே பெரிதும் சிறந்தது யாதெனை ஆராயுங்கால் இணையின்றி எவற்றிற்கு முன்னிற்பதாகியும் விளங்கும் **திருமுருகாற்றுப்படையை** அருளிச்செய்தனர்.

அன்பர் துயரை யகற்றும் **அறுமுகக் குரிசில்** வள்ளிநாய்ச்சியாரது கன்னலுமமுதமுங் கைக்கும் இனிய மொழியையு மகற்றி, தங்கிகர் **பெருமான்**

கூறும் தமிழ்த் துதியைத் திருச்செவியி லேற்றருளி, சாலமகிழ்ந்து, பசுங் கடலினிடத்தே தோன்றிய செஞ்ஞாயிறுபோல மயில்வாகனத்தி லெழுந் தருளி, புலவர்பெருமானையுண்ண அப்பூதம் அணுகுங்கால் கதையினால் மோதி, முடியைத் தகர்த்து வீட்டி, யாவரையுஞ் சிறைவிடுவித்து, திருவருள் பாலித்தனர். உடனே நக்கீரதேவர் எமது குலமுழுதையும் ஆளும் அக் கோமானை வணங்கி, "அடியனேன் செருக்கை நோக்கி ஆலவாயமலர் முனிந்து இப்பிணி முதிர இசைத்தருளினர். யான் பயந்து கொடியனேன் பிழையைப் பொறுத்தாட்கொள்க என்று பிரார்த்தித்தவழி, கைலையைத் தரிசிக்கின் இது நீங்கும் எனத் திருவருள் புரிந்தனர். அதுகொண்டு திருக் கைலையைத் தரிசிக்க வந்து இவணிருந்த காலையில் இப்பூதம் இவ்வாபத்தை விளைக்க தேவரீர் எழுந்தருளி நிவர்த்தித்தருளினீர். இனிக் கைலையையும் தரிசிப்பித்து இந்நோயையு மகற்றியருள்க" என்று பிரார்த்திக்க; **கந்தவேள்** கருணைகூர்ந்து, **ஆலவாயெந்தை** இன்ன கைலையென்று சுட்டியுரையா மையால் **தென்கைலையினாலும்** தீப்பிணி தீருமெனத் திருவுளங்கொண்டு, பொய்கையொன்று காட்டி, "இதில் மூழ்குவையேல் திருக்கைலையைக் காண் பாயெனவும், எம்மைத் துதித்த இப் பிரபந்தத்தை யோதினோர் இஷ்ட சித்தி களை அடைவரெனவும், கட்டளையிட்டு, மறைந்தருளினர்.

நக்கீரதேவர் **அத்தழகனை** வணங்கி, அப் பொய்கையிலே மூழ்கி, மேற் கடலிற்படிந்த சூரியன் கீழ்க்கடலி லெழுந்தாற்போல **தென்கைலைதோன் றப்** பொன்முகரியி லெழுந்தார். தேவர்கள் விண்மறையக் கற்பகப்பூமாரி சொரிந்தனர். நக்கீரதேவர் வியாதியகன்று, கடைந்தெடுத்த மணிபோலத் திருமேனி விளங்க, நெஞ்சி லன்புபெருக, விழிகளில் நீர்சொரிய, கரங்களைச் சிரமேற் குவித்து, **நாகலிங்கப் பெருமானையும் ஞானப்பூங்கோதை யம்மை யையும்** பலமுறை பணிந்தெழுந்து, **ஐந்தெழுத்தையும்** அகலா துச்சரித்து, அன்புமயமாகி, **கைலைவேறு காளத்திவேறு** என்னுஞ் சிந்தனையின்றி, **கைலை பாதி காளத்திபாதியாகக்** கலந்து, ஒற்றுமைப்படுத்தி, ஒரு வெண்பா வந்தா தியைப் பாடியருளினர். அதைத் திருச்செவியேற்று மகிழ்ந்த **காளத்தி நாதர்** தரிசனந்தந் தளித்து, "வேண்டியவரம் யாது?" என வினவியவழி, "எளியேனது உடலைக் கவிந்த இப்பிணியை ஒழித்தருளியது போலவே அறி வைக் கவிந்த ஆணவப் பிணியையும் அகற்றியருளல் வேண்டும்" என வேண்டிக்கொள்ள; பெருமான் சத்திநிபாதத்தால் பந்தபாசத்தை முற்றக் களைந்து, திருவடி நிழலிலே இருத்தியருளினர் என்றுரைத்தருளி, அவ்வா சர் வேண்டுகோளின்படியே, [illegible]ன்னியர்கள் சரித்திரத்தைக் கூறத் தொடங்கினர்.

# வேலையசுவாமிகள்

அருளிச்செய்தது

# கன்னியர்ச் சருக்கம்

---

## காப்பு

### நேரிசை வெண்பா

பின்னவனு முன்னவனும் பேசு கதைநிரப்பத்
தன்னைநிகர் காளத்தி தன்னில்வாழ் — முன்னவவென்
னெஞ்சந் தியங்காம லீயென் னுளத்திருந்தே
யஞ்சந்தி யானே யருள்.

(**இ-ள்.**) தன்னைநிகர் - தன்னைத்தானே நிகர்க்கிற, காளத்தி தன்னில் வாழ் - திருக்காளத்தியி லெழுந்தருளி யிருக்கிற, முன்னவ - முதல்வனே, அஞ்சந்தியானே - அஞ்சந்தி விநாயகமூர்த்தியே, பின்னவனும் - எனக்குப் பின்பிறந்தவனும், முன்னவனும் - முன்பிறந்தவனும், பேசு - சொல்லத் தொடங்கின, கதை - கதையை, நிரப்ப - அடியேன் பூர்த்திசெய்தற்கு, என் நெஞ்சம் - என் மனமானது, தியங்காமல் - மயங்காமல், நீ என் உள்ளத்து இருந்து - நீ என் மனத்தில் வீற்றிருந்து, அருள் - அருள்புரியவேண் டும் எ-று.

பின்னவன் என்றது கருணைப் பிரகாச சுவாமிகளை. முன்னவன் என்றது சிவப்பிரகாச சுவாமிகளை. தன்னைநிகர் காளத்தியென்றது தனக்கு நிகராவதோர் தலமில்லையென்றபடி. பின்னவனு முன்னவனும்பேசுகதை யென்றது சீகாளத்திப் புராணத்தை. அஞ்சந்தியான்-பஞ்சஸந்தி விநாயக: என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. (க)

## அவையடக்கம்

### அறுசீரடியாசிரியவிருத்தம்

நல்லியற் புலவ ராகு நவையறு காட்சி யுள்ளோர்
சொல்லிய தொடர்பி னேடென் சொற்குறைக் கவியு மேவுஞ்
செல்விதன் னிடத்தேர் கூராச் சேயிழை மடநல் லாரு
மெல்லிதழ்க் கமலப் போதின் மேவுபுல் லியுமே போன்று.

(இ - ள்.) செல்வி தன் இடத்து - திருமகளிடத்தில் அவளைச் சூழ்ந்திருக்கிற, ஏர் கூராத - அழகுமிக்கிராத, சேயிழை - செவ்விய ஆபரணங்களையணிந்திருக்கிற, மடநல்லாரும் - இளம்பெண்களையும், மெல் இதழ்-மெல்லிய இதழ்களையுடைய, கமலப்போதில் - தாமரைமலரில், மேவு - அமைந்து சூழ்ந்திருக்கிற, புல்லியும் - புறவிதழ்களையும், போன்று - ஒத்து, நல் - சிறந்த, இயல்புலவர் ஆகும் - இயற்றமிழ்ப் புலவர்களாகிய, நவை அறு - குற்றமற்ற, காட்சி உள்ளோர் - அறிஞர்கள், சொல்லிய - சொன்ன, தொடர்பினோடு - பாடல்களோடு, என் - எனது, சொல்குறை - தாழ்ந்த சொற்களால் அமைக்கப்பட்ட, கவியும் - பாடலும், மேவும் - ஒத்திருக்கும் எ-று.

நல்லியல் - நல்லியற்கை யெனினுமாம். புலவர் - புலமையுள்ளோர். தொடர்பு - பாட்டு. கூர்தல் - மிகுதல், பகுதி கூர். போது - மலர். பேரரும்பு என்றலுமாம். புல்லி-புறவிதழ். அகவிதழை அல்லியென்பர். (உ)

கலித்துறை

மல்லன் ஞாலமோர் முடிமிசைக் கிடத்தலை மறந்த
தொல்லை நாகமொன் றழகிய சொக்கனா ரருளா
லெல்லை காணிய சூழ்கிடந் தனையவிஞ் சியின்மே
லல்லு லாமதி தவழ்திரு வாலவா யதன்கண்.

(இ - ள்) மல்லல் - வளமிகுந்த, ஞாலம் - உலகமானது, ஓர் - ஒப்பற்ற, முடிமிசை - தன் தலையின்மேல், கிடத்தலை - கிடப்பதை, மறந்த - மறந்திருக்கிற, தொல்லைநாயகம் ஒன்று - பழமையாகிய பாம்பு ஒன்று, அழகிய - அழகாகிய, சொக்கனார் அருளால் - சொக்கநாதரது திருவருளால், எல்லை காணிய - எல்லையைக் காண்பதற்குரியதாய், சூழ்கிடந்தனைய-வளைந்து கிடந்தாற்போன்ற, இஞ்சியின்மேல் - மதிலின்மீது, அல் உலாம் மதி - இரவிற் சஞ்சரிக்கிற சந்திரன், தவழ் - ஊர்கிற, திரு ஆலவாயதன்கண் - திருவாலவாயினிடத்து எ-று.

நாகம் என்றது இங்கு ஆதிசேடனைக் குறித்தது. காணிய - செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். கிடந்தாலனைய வென்றபாலது கிடந்தனையவென விகாரமாயிற்று. இஞ்சி - மதில். திருவாலவாய் - மதுரை. ஆலவாய் என்பதனை ஆலாஸ்யம் என்பர் வடநூலார். (ங)

திங்கள் வான்குடைக் கீழுல காணையிற் செலுத்துந்
துங்க மாமதன் றுறவெனும் பகைகெடத் துரப்பான்
றங்கு பாசறை யெனவுல காயத சமய
மெங்கள் வாழ்பத மெனக்கணி கையர்மறு கிலங்கும்.

(இ - ள்.) வான் - மேலாகிய, திங்கள் குடைக்கீழ்-சந்திரனாகிய குடையின்கீழ், அமைத்து - அமைத்து, உலகு - எல்லாவுலகங்களையும், ஆணையில்.

தனது ஆணையின்கீழ்ப் படிந்து நடக்கும்படி, செலுத்தும்-அவற்றை நடத்து கிற, துங்கம் - உயர்வாகிய, மா - பெருமை பொருந்திய, மதன் - மன்மத னைவன், துறவு என்னும்-துறவென்கிற, பகைகெட - பகையொழிய, துரப் பான் - துரக்க, தங்கு - சென்று தங்கியிருத்தற்குரிய, பாசறை என - படை வீடுபோல, உலகாயத சமயம்- லோகாயத சமயமானது, எங்கள் வாழ்பதம் என-எங்கள் வாஸஸ்தாநமென்னும்படி, கணிகையர் மறுகு-வேசையர் வீதி, இலங்கும் - விளங்கும் எ-று.

ஆணை ஆஜ்ஞா என்னும் வடசொற்றிரிபு. துறவு-ஸாத்யாஸம் என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு. துரத்தல் - ஓட்டுதல். பாசறை - படை வீடு. இதனை கூடாரம் எனவும் வழங்குவர். கணிகை - கணிகா என்னும் வடசொற்றிரிபு. உலகாயத சமயம் - புறச்சமயம் ஆறனுளொன்று. அது, சார்வாகக் கோட்பாட்டின்படி உலக இன்பமே சிறந்ததென்று வாதிக்கிற ஓர் நிரீச்சுரவாதமாம். இதன் விரிவெல்லாம் பெருநூல்களிற் காண்க. ()

சிற்ற ரும்புபே ரரும்புநாண் மலரொடு செம்மல்
பெற்றி டுந்தட மெனப்பரு வங்களாற் பேத
முற்றி டுந்தெரி வையரொடு படுமறு குண்ண
முற்றி டுங்களி வண்டினு டவர்குழா மொய்க்கும்.

(இ - ள்.) சிறு அரும்பு - சிறுமொட்டு, பேரரும்பு - பெருமொட்டு, நாள் மலர் ஒடு - அன்றலர்ந்த பூவோடு, செம்மல்-பழம்பூ, (ஆகிய இவற்றை) பெற்றிடும் - கொண்டிருக்கிற, தடம் என - தடாகம்போல, பருவங்களால் - அவரவர் பருவங்களாலே, பேதம் உற்றிடும் - வேறுபாடடைகிற, தெரிவைய ரொடு - மகளிரோடு, படும் - கூடியிருக்கிற, மறுகு - வேசையர் வீதியில், உண்ண - உண்ணும்பொருட்டு, முற்றிடும் - சூழ்ந்து கொள்ளுகிற, களி - களிப்பையுடைய, வண்டின் - வண்டினம்போல, ஆடவர் குழாம் - ஆடவர் தொகுதி, மொய்க்கும் - மொய்த்துக்கொள்ளும் எ-று.

சிற்றரும்பை மொட்டு என்றும்,பேரரும்பைப் போது என்றும் வழங்குத லுண்டு. சிற்றரும்பு முதலியவற்றை மதுவுண் வேட்கையால் மொய்க்கும் வண்டுக் கூட்டம்போல பருவவேறுபாடுடைய மகளிரின்பத்தை நுகரவேண் டுமென்னும் விருப்பமுள்ள ஆடவர் கூட்டம் மொய்த்துக்கொள்ளு மென்பது கருத்து. பருவங்கள் - பேதைப்பருவம் முதலியவை. வண்டின் என்பதில் இன் ஒப்புப்பொருட்டு. (௫)

வீதி யாயிடை யரசிளங் குமரர்தம் வேழ
மாத ராரிள முலையெழி லிரவலில் வாங்கக்
காத லான்மனந் தளர்ந்துசோம் பொடுதலைக் கடைமுன்
சேர்த லாற்பெயர் தூங்கலென் றுலகுரை செய்யும்.

(இ - ள்.) வீதி ஆயிடை - அந்தத் தெருவில், அரசிளங் குமரர்தம் வேழம் - ராஜகுமாரர்களுடைய யானைகள், மாதரார் - மகளிருடைய, இள

முலை எழில் - இளமுலைகளின் அழகை, இரவலின் வாங்க - இரவலாக வாங்கும்பொருட்டு, காதலால் - ஆசையால், மனம் தளர்ந்து - மனமெலிந்து, சோம்பொடு - சோம்பலோடு, தலைக்கடைமுன் - தலைவாயிலில், சேர்தலால் - சேர்ந்திருத்தலால், உலகு - உலகமானது, பெயர் - அந்த யானைகளுக்குப் பெயர், தூங்கல் என்று உரைசெய்யும் - தூங்கலென்று சொல்லும் எ-று.

ஆயிடை - அவ்விடையென்பதன் விகாரம். தூங்கல் என்று யானைக்கோர் பெயருண்மையால், இங்ஙனங் கற்பித் துரைத்தார். உரைசெய்யும் ஒரு சொன்னீரது. உரைக்கும் என்பது பொருள். (சு)

**கரிய நீலவொண் கட்பொது மாதரைக் கண்ணுற்**
**றரிய மாதவ வேடம்விட் டணைந்தவ ரனேக**
**ருரிய மாநிதி யனைத்துமீந் திரப்பதற் குன்னிப்**
**பரியு மாதவ வேடமுற் றகன்றவர் பலரே.**

(இ - ள்.) கரிய - கருமையாகிய, நீலம் - நீலமலர்போன்ற, ஒள் - அழகிய, கண் - கண்களையுடைய, பொதுமாதரை - பொதுப்பெண்டிரை, கண்ணுற்று - கண்டு, அரிய - அருமையாகிய, மாதவவேடம் விட்டு - பெரிய தவவேடத்தை நீக்கி, அணைந்தவர் - (அம்மாதரை) தழுவினவர், அநேகர் - பலர், உரிய - தமக்குரிய, மாநிதி அனைத்தும் ஈந்து - பெரும்பொருள் முழுதும் அந்தப் பொதுமாதருக்குக் கொடுத்து, இரப்பதற்கு உன்னி - வறக்கநினைத்து, பரியும் - (யாவரும்) அன்பு செய்தற்குரிய, மாதவவேடம் உற்று - பெரிய தவவேடம்பூண்டு, அகன்றவர் - (இல்லறத்தை) விட்டு நீங்கினவர், பலர் - அநேகர் எ-று.

நீலம் - கருங்குவளைமலர். பலர்க்கும் உரியவரா யிருத்தலால் வேசையரைப் பொதுமாதர் என்றார். கண்ணுற்று ஒருசொல். ஈந்து என்பதற்குப் பகுதி ஈ. இரத்தல்-யாசித்தல். உன்னல் - நினைத்தல், பகுதி உன். (எ)

**பரிந்த வாடவர் பொன்னெலா மொருங்ககப் படுக்கப்**
**பொருந்து பார்வைபோ லுறுப்பெலாஞ் செய்யபொன் புனைந்**
**கரந்து மான்விழி நோக்குநர் பொற்படாங் கரக்குந்** [துட்
**குரும்பை மாமுலை மடந்தையர் குழாத்திறஞ் சிறக்கும்.**

(இ - ள்.) பரிந்த - இச்சித்த, ஆடவர் - ஆண்மக்களுடைய, பொன் எல்லாம் - பொன் முழுதும், ஒருங்கு - ஒருமிக்க, அகப்படுக்க - கவர்தற்பொருட்டு, பொருந்துபார்வைபோல்-பொருத்தமாகிய பார்வைபோல, உறுப்பு எல்லாம் - அவயவங்கள் எல்லாவற்றையும், செய்ய - செவ்விய, பொன் - பொற்பணிகளால், புனைந்து - அலங்கரித்து, உள் - தமது கருத்தை, கரந்து - மறைத்து, மான்விழி - மானினது நோக்கத்தை, நோக்குநர்-பார்ப்பவருடைய,

பொன்படாம் கரக்கும் - பொற்படாத்தினால் மறைக்கும், குரும்பை-குரும்பை போன்ற, மாமுலை - பெரிய தனங்களையுடைய, மடந்தையர் - மாதரது, குழாத்தினால் - கூட்டத்தால், சிறக்கும் - (அந்த வேசையர் வீதி) சிறந்து தோன்றும் எ-று.

பரிதல் விரும்புதலுமாம். புனைதல்-அலங்கரித்தல், பகுதி புனை. கரத்தல் - மறைத்தல், பகுதி கர. பொற்படாம்-அழகிய ஆடையுமாம். படம்-வடசொல். ஆடையென்பது பொருள். கரத்தல் - ஒளித்தல். பகுதி கர. மடந்தையர் என்றது பருவங்குறியாது பெண்பொதுவைக் குறித்தது. குழாம்-கூட்டம். குரும்பை - தென்னம் பிஞ்சு. (அ)

பொன்னு ளார்பெறு குவர்கழைக் கரும்பிடைப் பூந்தே
னென்ன வாடக மிலார்கலைத் தண்மதி யேந்துஞ்
சென்னி மால்வரை விடரகத் தமைந்தபைந் தேன்போ
லந்ந லார்தமைப் பெறுகிலர் நோக்கிநெஞ் சழிவார்.

(இ - ள்.) கழை கரும்பு இடை - மூங்கிலும் கரும்பிலும் வைக்கப்பட்டிருக்கிற, பூந்தேன் என்ன - பூந்தேன் போல, அந்நலார் தமை - அந்தப் பொதுமாதரை, பொன் உள்ளார் - பொன்னுடையவர், பெறுகுவர் - எளிதிற் பெறுவார்கள், ஆடகம் இலார்கள் - பொன்னில்லாதவர்கள், கலைதண்மதி ஏந்தும் - கலைநிறைந்த குளிர்ச்சியையுடைய சந்திரனைத் தாங்குகிற, சென்னி - சிகரத்தையுடைய, மால்வரை - பெரிய மலைமேலுள்ள, விடர் அகத்து அமைந்த - வெடிப்பினுள்ளிருக்கிற, பைதேன்போல் - பசிய தேன்போல, பெறுகிலர் - பெறாதவர்களாய், நோக்கி - கண்ணினால் பார்த்து, தமக்கு அவர்களுடைய இன்பங் கிடைக்காமையால், நெஞ்சு அழிவார் - மனமழிவார்கள் எ-று.

கழையினும் கரும்பினும் உள்ள பூந்தேன் எளிதிற் பெறுமாறுபோல பொதுமாதர் இன்பத்தைப் பொன்னுடையார் எளிதிற் பெறுவர் என்பதும், உயர்ந்தமலைச்சிகரத்து வெடிப்பிலுள்ள தேன் கிடைத்தல் அரிதாதல்போல பொன்னில்லார் அம்மாதரின்பத்தைப் பெறுதல் அரிதென்பதும் இச் செய்யுட் கருத்து. (கூ)

தெளித்த வொண்கலைப் பொருளினைத் தெளிதரச் சிந்தை
களித்து வந்தவர் மதியள வறைந்துமேற் காட்டா
தொளித்தி டுங்குரு பரனென விளங்குமொள் ளிழையா
ரளித்தி டும்பொரு ளளவறிந் தன்புசெய் குவரால்.

(இ - ள்.) தெளித்த - தேர்ந்தெடுக்கப்பட்ட, ஒள் - ஒட்பமாகிய, கலைப் பொருளினை - சாஸ்திரார்த்தங்களை, தெளிதர - தெளிவாக, சிந்தைகளித்து வந்தவர் - மனமகிழ்ந்து வந்தவராகிய மாணவகரது, மதியளவு - புத்தியினள

வாக, அறைந்து - போதித்து, மேல் - மேலுள்ள அர்த்தத்தை, காட்டாது - காட்டாமல், ஒளித்திடும் - மறைக்கிற, குருபரன் என - குருபரன்போல, ஒள் இழையார் - அழகிய ஆபரணங்களை யணிந்த அந்தப் பொதுமாதர், அளித்திடும் - (ஆடவர்) தருகிற, பொருள் அளவு அறிந்து - பொருளின் அளவைத் தெரிந்துகொண்டு, அன்பு செய்குவர் - அன்பு செய்வார்கள் எ-று.

தெளித்தல் - தேர்ந்தெடுத்தல். மதி - புத்திநுட்பம். குருபரன் - ஆசாரிய சிரேஷ்டன். இழை - ஆபரணம். அன்பு செய்குவர் என்பது இன்பங் கொடுப்பார்கள் என்றபடி. பொருளளவறிந்தின்பம் தருவார் என்றும் பாடம். (௧௦)

உரைத்த வத்தெரு முலையிலை மாதரு ளொருத்தி
நிரைத்த முத்தவெண் ணகைத்துவர் வாய்க்கரு நீலம்
வருத்து மைக்கண்மா ணிக்கவல் லிப்பெயர் மாது
திருத்த மிக்கபெண் ணரசென வுலகவாஞ் சிறப்பாள்.

(இ - ள்.) உரைத்த - சொல்லப்பட்ட, அ - அந்த, தெரு - தெருவில் வாழ்கிற, முலைவிலை மாதருள் ஒருத்தி - பொதுப்பெண்களுள் ஒருத்தி, நிரைத்த - வரிசையாய் வைக்கப்பட்ட, முத்தம் - முத்துப்போன்ற, வெள்நகை - வெண்மையாகிய பற்களையும், துவர்வாய் - பவளம்போன்ற அதரத்தையும், கருநீலம் - கருநீலமலரை, வருத்தும் - வருத்துகிற, மைக்கண் - அஞ்சனமெழுதிய கண்களையுமுடைய, மாணிக்கவல்லிப் பெயர் - மாணிக்கவல்லி யென்னும் பெயரையுடைய, மாது - பெண்ணானவள், திருத்தம்மிக்க - திருத்த மிகுந்த, பெண்ணரசு என - பெண்ணரசியென்று, உலகு அவாம் - உலகமுழுதும் அவாவுதற்குரிய, சிறப்பாள் - சிறப்பினையுடையவள் எ-று.

முத்தம் - முக்தம் என்னும் வடசொற்றிரிபு. மாது ஆகுபெயர். அழகுள்ளவள் என்பது பொருள். அவாவும் எனற்பாலது அவாம் என விகாரமாயிற்று. (௧௧)

கொங்கை மாநிதி யாசைபோன் றவளிடை கொடுப்போர்
தங்கண் மீதுசெய் யன்புபோன் றவளிளந் தளிர்க்கைக்
கங்குல் வார்குழற் கயன்மருட் டரிமழைக் கருங்கட்
டிங்கள் வாண்முகப் பவளவாய் மடந்தையர் திலகம்.

(இ - ள்.) இளந்தளிர் - இளந்தளிர்போன்ற, கை - கையினையும், கங்குல் - ராத்திரிபோன்ற, வார்குழல் - நீண்ட கூந்தலையும், கயல் - சேல்மீன்களை, மருட்டு - வெருட்டுகிற, அரி - வரிபரந்த, மழை - குளிர்ந்த, கருங்கண் - கருங்கண்களையும், திங்கள் - பூர்ணசந்திரன்போன்ற, வாள் - ஒளியுள்ள, முகம் - முகத்தையும், பவளவாய் - பவளம்போன்ற வாயினையும் உடைய, மடந்தையர் திலகம் - பெண்களுக்குத் திலகம் போன்றவளாகிய மாணிக்க

வல்லியானவள், கொங்கை - தனங்களாகிய, மாநிதி - பெரும் பொருளின் மீதுள்ள, ஆசைபோன்று - அவாவினளவுபோல, அவள் இடை - அவளிடத்தில், கொடுப்போர் தங்கள் மீதுசெய் - கொடுப்பவர்மேல் தான் செய்கிற அன்பு போன்றவள் எ-று.

கொடுப்போர் - தருவோராகிய ஆடவர். தளிர் - மாந்தளிர். கங்குல் இருட்டெனினுமாம். முகம் உவமையாதலால் திங்கள் என்றது பூர்ணசந்திரனைக் குறித்தது. வாய் என்றது அதரத்தை. மடந்தையர் என்றது பருவங்குறியாது பெண்பொதுவைக் குறித்தது. (கஉ)

குனித்த விற்றிற லரசிளங் குமரராங் குடத்தை
யனிச்ச மெல்லடிக் குவியிள முலையவ ளழகாந்
தனிக்க யிற்றினிற் பூட்டிவிட் டனுதினந் தாழ்ந்த
மனைக்கி ணற்றினிற் பொருட்சலம் வறந்திட முகப்பாள்.

(இ - ள்.) அனிச்சம் - அனிச்சம் பூப்போன்ற, மெல் அடி - மிருதுவாகிய பாதங்களையும், குவி இளமுலை - குவிந்த இளமுலைகளையுமுடைய, அவள் - அந்த மாணிக்கவல்லியானவள், குனித்த - வளைத்த, வில் - வில்லினையும், திறல் - வெற்றியையுமுடைய, இள - இளமைப்பருவமுள்ள, அரசகுமரராம் - ராஜகுமாரர்களாகிய, குடத்தை - கும்பத்தை, அழகு ஆம் - தனது அழகென்கிற, தனி - ஒப்பற்ற, கயிற்றினில்-கயிற்றில், பூட்டிவிட்டு-கட்டிவிடுத்து, அநுதினம் - தினந்தோறும், தாழ்ந்த - ஆழ்ந்த, மனைக்கிணற்றினில் - அவர்களுடைய வீடாகிய கிணற்றிலுள்ள, பொருள்சலம் - பொருளாகிய நீர், வற்றிட - வறந்து போம்படி, முகப்பாள் - மொண்டு கொள்வாள் எ-று.

குனித்தல் - வளைத்தல். பகுதி குனி. இது தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாதல் பற்றிப் பொதுவினைப் பகுதியெனப்படும். அனிச்சம் - ஆகுபெயர். தாழ்தல் - ஆழ்தல், பகுதி தாழ். வறத்தல் - வற்றுதல், பகுதி வற. முகத்தல் - மொள்ளல், பகுதி முக. (கங)

இனைய ளாகிய மாணிக்க வல்லிபுண் ணியநல்
வினையி னிளமுலைமுகங் கறுப்பமெய் விளர்ப்ப
நினைவெ லாமறத் தெழுகுறி நல்லன நிகழத்
தனைய லாலினி யனையிலாக் கருப்பமுட் டரித்தாள்.

(இ - ள்.) இனையள் ஆகிய - இத்தன்மையளாகிய, மாணிக்கவல்லி—, புண்ணியம் - புண்ணியமென்கிற, நல்வினையினால் - ஸத்கர்ம பலத்தால், இளமுலை முகம் கறுப்ப - இளமுலைநுனி கறுக்கவும், மெய்விளர்ப்ப - சரீரம் வெளுக்கவும், நினைவு எல்லாம்-நினைக்கும்போதெல்லாம், அறத்து எழுகுறி - புண்ணியவசத்தால் தோற்றுகிற குறிகள் யாவும், நல்லன நிகழ - நல்லவையாய்த் தோற்றலும், தன்னை அல்லால்-தன்னையன்றி, இனி அனை இல்லா_

இனி வேறு உவமையில்லாத, கருப்பம் - கர்ப்பத்தை, உள் தரித்தாள் - தன் வயிற்றினுள்ளே தாங்கினாள் எ-று.

குறிகள் - சகுநங்கள். அனே - உவமை. (கச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

தீமைக் கொலைசெய் வாளிரதந்
தீண்டச் செம்பொ னயதுபோற்
காமக் கிழத்தி மெய்ஞ்ஞானக்
கருப்ப மடைந்த தன்மையாற்
றூய்மைக் குணத்தி யாயினா
டொல்லை மரபோ ரெல்லாரு
மேமப் பதஞ்சென் றடைவரெனி
லிவடா னின்பம் பெறலரிதோ.

(இ - ள்.) தீமை கொலை செய்வாள் - தீமையாகிய கொலையைச் செய்பவள், இரதம் தீண்ட - இரதத்தினால் தொடுதலும், செம்பொன் ஆயது போல் - செம்பொன் ஆனதுபோல, காமக்கிழத்தி - காமக்கிழத்தியாகிய மாணிக்கவல்லி, மெய்ஞானம் - உண்மை ஞானமாகிய, கருப்பம் அடைந்த தன்மையால் - கர்ப்பம் அடைந்த தன்மையினால், தூய்மை-பரிசுத்தமாகிய, குணத்தி ஆயினாள் - குணமுடையவளானாள், தொல்லை - பழமையாகிய, மரபோர் எல்லாரும் - சந்ததியார் யாவரும், ஏமம் - தமக்காதாவாகிய பதம் - முத்திப்பதத்தை, சென்று அடைவர் எனின் - போய்ச் சேர்வரென்றால், இவள் - இந்த மாணிக்கவல்லியானவள், இன்பம்பெறல் - சுகமடைவது, அரிதோ - அருமையாமோ எ-று.

இரதம் - பாதரசம். ஸ்பர்ஸவேதி - காமக்கிழத்தி. காம சுகாநுபவத்துக்குரியவள். ஏமப்பதம் என்றது முத்திப்பதத்தை. அரிதோவென்னு மோகாரம் எதிர்மறை. (கரு)

செல்வ மாதுங் கலைமாதுஞ்
சிவமெய்ஞ் ஞான மாதரா
யல்ல றீர விருகிலத்தி
லடைந்தா ரென்ன மாணிக்க
வல்லி பூத்த விரட்டைமணி
மலரே யெனவே தாகமங்கள்
சொல்லு ஞான மலையாமற்
சொல்வா னிவண்வந் தனவென்ன.

(இ - ள்.) செல்வமாதும் - திருமகளும், கலைமாதும்-சரசுவதியும், மெய் - உண்மையாகிய, சிவஞான மாதராய் - சிவஞானப் பெண்களாய், அல்லல்

மெள்ளக் கவிழ்ந்து நிலத்திருந்து
விலங்கித் தவழ்ந்து நடந்தோடிப்
பிள்ளைப் பிறைபோல் வளருமிவர்
பேதைப் பருவங் கடந்துமுகி
ழெள்ளத் தமைப்போ லொன்றுபடு
மிளமென் முலைகண் மார்பின்முகங்
கொள்ளப் பெதும்பைப் பருவமுறீஇக்
குழலு மவிழ முடித்தனரால்.

(இ - ள்.) மெள்ளக்கவிழ்ந்து—, நிலத்து இருந்து—, விலங்கி - விலகி, தவழ்ந்து-ஊர்ந்து, நடந்து—,ஓடி—, பிள்ளை பிறைபோல்-பாலசந்திரன்போல, வளரும்-வளர்கிற, இவர் - இவ் விருபெண்களும், பேதைப் பருவம் கடந்து—, முகிழ் - கோங்கரும்புகளையும், எள்ள - இகழும்வண்ணம், தமைப்போல் - தம்மைப்போலவே, ஒன்றுபடும் - ஒருமித்து, இளமெல் முலைகள் - இளமை யாகிய மெல்லிய முலைகள், மார்பில் - மார்பினிடத்தே, இடம் கொள்ள—, பெதும்பைப் பருவம் உறீஇ - பெதும்பைப் பருவத்தை யடைந்து, குழலும் அவிழ - கூந்தலும் அவிழாநிற்க, முடித்தனர் - முடித்துக் கொண்டார் கள் எ-று.

பேதைப் பருவம் - எழுவயதுள்ள பருவம். பெதும்பைப் பருவம் - ஒன் பது வயதுள்ள பருவம். (உ0)

கலிவிருத்தம்

கண்டு செம்மணி வல்லி கவிரிதழ்க்
கண்டு மெல்மொழி யார்கல வித்தொழில்
கண்டு கொண்டது கற்கு முபாயமுட்
கண்டு நெஞ்சங் களித்திது செய்குவாள்.

(இ - ள்.) கண்டு - பெண்களைப் பார்த்து, செம்மணிவல்லி - மாணிக்க வல்லியானவள், கவிர் - முருக்கமலர் போன்ற, இதழ் - அதரத்தையும், கண்டு-கற்கண்டுபோலும், மெல்மொழியார்-மிருது வசநத்தையுமுடைய வர்க ளுடைய, கலவித்தொழில் கண்டுகொண்டு - புணர்ச்சித் தொழிலைக் கண்டு கொண்டு, அது - அத்தொழிலை, கற்கும் உபாயம் உள் கண்டுகொண்டு - கற் கும் உபாயத்தையும் மனத்தால் கண்டுகொண்டு, நெஞ்சம் களித்து - மன மகிழ்ந்து, இது செய்குவாள் - இதனைச் செய்வாளாயினள் எ-று.

கவிர் - ஆகுபெயர். ஊ என்பதும் அது. இது என்றது இனிச் செய் யப்புகுங் காரியத்தை. (உக)

அண்ணலைங்கணை யம்பு புகக்குழீஇப்
பெண்ணினல்லவர் பெய்வளை மேகலை
வண்ணமென்றுகின் மானங் கழன்றருள்
பண்ணுகென்று பணிபவ ராகவும்.

(இ - ள்.) அண்ணல் - பெருமையுள்ள, ஐங்கணை அம்பு புக - பஞ்சபாணங்கள் பட்டுருவுதலால், குழீஇ - கூட்டங்கூடி, பெண்ணின் - பெண்டன்மை வாய்ந்த, நல்லவர் - பெண்கள், பெய்வளை - இடப்பட்ட வளையலையும், மேகலை - மேகலையையும், வண்ணம் - அழகிய, மெல்துகில் - மெல்லிய ஆடையையும், மானம் - மானத்தையும், கழன்று - விடப்பெற்று, அருள் பண்ணுக என்று - அருள்செய்யக் கடவையென்று, பணிபவர் ஆகவும் - வணங்குவோராகவும் எ-று.

அண்ணல் - மன்மதன் எனினுமாம். ஐங்கணையாவன :— தாமரைமலர், அசோகமலர், மாமலர், முல்லைமலர், நீலமலர் என்பன. குழீஇ - சொல்லிசை யளபெடை. மேகலை - இடையணிகளி லொன்று. (௨௨)

கலைக வர்ந்திடு கண்ணன் மரச்சினைத்
தலையி வர்ந்துறத் தையலர் கையினு
மலையி னுந்தம தற்ற மறைத்துள
நிலைத ளர்ந்தவ ணிற்பவ ராகவும்.

(இ - ள்.) கலை - ஆடைகளை, கவர்ந்திடு-கவர்ந்துகொண்ட, கண்ணன்-கண்ணபிரான், மரச்சினை - மரக்கிளையின், தலை - நுனியில், இவர்ந்து உற-ஏறிநிற்க, தையலர் - கோபிகாஸ்த்ரீகள், கையினும் - தமது கையினாலும், அலையினும் - நீரினாலும், தமது - தங்களுடைய, அற்றம்-மர்மஸ்தாநத்தை, மறைத்து - மூடி, உள்ளம் நிலைதளர்ந்து - மனநிலை தளர்வடைந்து, அவண்-அவ்விடத்தில், நிற்பவர் ஆகவும் - நிற்கிறவர்களாகவும் எ-று.

கலை - ஆடை, அது கோபிகைகளின் ஆடையைக் குறித்தது. கண்ணன் - க்ருஷ்ணன் என்னும் வடசொற்றிரிபு. இவர்தல் - ஏறுதல், பகுதி இவர். தையலர் - பெண்கள் (கோபிகாஸ்த்ரீகள்). கையினும் அலையினும் என்பவற்றில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப் பொருளில் வந்தது. அற்றம் - ரஹஸ்யஸ்தாநம் (நிதம்பம்). (௨௩.)

செங்கை யொன்று செழுந்தர ளப்பெருங்
கொங்கை யொன்றைக் குழைப்ப வொருகையான்
மங்கை தன்புறம் புல்லினன் வாயமு
தங்க ருந்துறு மாண்டகை யாகவும்.

(இ - ள்.) செங்கை ஒன்று - ஒரு செங்கையானது, செழு - செழிய, தாளம் - முத்துமாலையை யணிந்த, பெரு - பெரிய, கொங்கை ஒன்றை-ஒரு

ஸ்தநத்தை, குழைப்ப - பிசைய, ஒரு கையால் - ஒரு கையினால், மங்கை - மங்கைப் பருவப் பெண்ணானவள், தன்புறம் - தன் முதுகை, புல்லினன் - தழுவி, வாய் அமுது - அதராம்ருதத்தை, அங்கு - அவ்விடத்தே, அருந்து றும் - பருகுகிற, ஆண்தகை ஆகவும் - ஆண்மகனாகவும் எ-று.

செங்கை - செவந்தகை. தரளம் - வடசொல். குழைத்தல் - வளைத் தலுமாம். மங்கை பெண்பொதுவைக் குறித்த தெனினுமாம். வாயமுது என்பதில் வாய் அதரத்தைக் குறித்தது. அதரம் - கீழுதடு. புல்லினன்- முற்றெச்சம். (உச)

மாறில் காதலன் வந்திசை வண்டினம்
மேறு நாண்மலர்த் தாண்மு னிறைஞ்சவும்
வேறு மாதை விரும்பினை யென்றுளஞ்
சீறி யேகுந் திருந்திழை யாகவும்.

(இ - ள்.) மாறு இல் - ஒப்பில்லாத, காதலன் - நாயகன், வந்து—, இசை - இசை பாடுகிற, வண்டு இனம் - வண்டின் கூட்டம், ஏறு - ஏறி மொய்த்துக் கொண்டிருக்கிற, நாள் - புதிய, மலர் - தாமரை மலர்போன்ற, தாள் முன் - பாதத்தில், இறைஞ்சவும் - வணங்கவும், வேறு மாதை - வே றொரு பெண்ணை, விரும்பினையென்று - இச்சித்தாயென்று, உள்ளம் சீறி ஏகும் - மனத்திற் கோவங்கொண்டு போகிற, திருந்து இழை ஆகவும் - ஒரு பெண்ணாகவும் எ-று.

மாறு - மாறுபாடு எனினுமாம். காதலன் - ஆசைநாயகன். தாள் என மேல் வருதலால் வண்டினம் ஏறுநாள் மலர் என்றது தாமரை மலரைக் குறித்தது. திருந்திழை வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர். (உரு)

இருந்து நின்றுங் கிடந்து மெதிர்தழீஇப்
பரந்த மென்மலர்ப் பஞ்சணைப் பள்ளியிற்
குரும்பை மென்முலைக் கோதையர் தங்களைப்
பொருந்து மாறு புணர்பவ ராகவும்.

(இ - ள்.) இருந்தும் - உட்கார்ந்திருந்தும், நின்றும் - நின்றிருந்தும், கிடந்தும் - படுத்தும், எதிர்தழீஇ - எதிர்நின் றணைத்து, பரந்தமெல்-விரிந்த மெல்லிய, மலர் - மலர்பரப்பின, பஞ்சணை பள்ளியில் - பஞ்சணைச் சேக்கை யில், குரும்பை - தென்னங் குரும்பைபோன்ற, மென்முலை-மெல்லிய தனங் களையுடைய, கோதையர் தங்களை - மாதரை, பொருந்துமாறு-தமக் கிசைந்த வண்ணம், புணர்பவர் ஆகவும் - கூடுவோராகவும் எ-று.

பள்ளி - சேக்கை (சயநம்). குரும்பை - கோங்கரும் பெனினுமாம். கோதையர் - பூமாலையையணிந்த மாதர். தம் - சாரியை. புணர்தல் - கூடுதல், பகுதி புணர். (உசு)

ஓவி யங்க ளொளிர்மணி மாளிகை
மேவு றும்படி தான்வரை வித்தனள்
காவி யங்கட் கதிர்மணிப் பூண்முலை
வாவி யம்புய வாண்முக வல்லியே.

(இ - ள்.) ஓவியங்கள் - (இவ்வாறு பலவகையாகிய) சித்திரங்களை, ஒளிர் - விளங்குகிற, மணி - ரத்நங்களிழைத்த, மாளிகை - மாளிகையில், மேவுறும்படி - பொருந்தும்படி, தான் - தானிருந்துகொண்டு, வரைவித்தனள் - எழுதுவித்தாள், (அவள் யாரெனின்) காவி அம்கண் - நீல மலர்போலும் அழகிய கண்களையும், கதிர்மணி பூண்முலை - ஒளிவீசுகிற ரத்நாபரணங்களைத் தரித்த ஸ்தனங்களையும், வாவி - தடாகத்திற் பூத்த, வாள் - ஒளி பொருந்திய, அம்புயமுகம் - தாமரை மலர்போலும் முகத்தையுமுடைய, வல்லி - மாணிக்கவல்லியே யாவள் எ-று.

ஓவியம் - சித்திரப்பாவை. வரைவித்தல் - எழுதுவித்தல், பகுதி வரைவி. பூண் ஆகுபெயர். வாவி அம்புயம் முகம் இம் மூன்றும் முறையே வாபீ அம்புஜம் முகம் என்னும் வடசொற் றிரிபுகள். (உஎ)

தோகை மாமயி றூதைப் புறமுதற்
போக வோசை பயிற்றுறு புட்களும்
பாக வாமொழிப் பாவையர் கற்பன
வாக யாழ்முத லாயவு மீட்டினாள்.

(இ - ள்.) தோகை மாமயில் - கலாபத்தையுடைய அழகிய மயில்கள், தூதைப்புறா - தூதையுண்கிற புறா, முதல் - முதலாகிய, போக ஓசை - புணர்ச்சி யோசையை, பயிற்றுறு - கற்பிக்கிற, புட்களும் - பறவைகளும், பாகு அவாம் - பாகு விரும்புகிற, மொழி - சொற்களையுடைய, பாவையர் - மாதர்கள், கற்பன ஆக - கற்கும் பாவனைபோல, யாழ்முதலாயவும் - வீணை முதலாயவற்றையும், ஈட்டினாள் - சம்பாதித்தாள் எ-று.

தூதை - பருக்கைக்கல். இனிமை மிக்க மொழியென்றதற்கு பாகவா மொழி யென்றார். தோகை மாமயில் முதலிய புட்களின் ஓசை. புணர்ச்சிக் காலத்தி னிகழ்வன. ஈட்டல் - சம்பாதித்தல், பகுதி ஈட்டு. (உஅ)

காமக் கல்வியுங் கானத் திறங்களும்
வாமச் செம்மணி வல்லி பயிற்றினா
ளீமத் தாடி யிடத்தெழு மன்பினைச்
சேமித் துள்ளநற் சிந்தை மகளிரை.

(இ - ள்.) ஈமத்து - சுடலையில், ஆடியிடத்து - நடிப்பவனாகிய சிவபிரானிடத்தில், எழும் - உண்டாகிற, அன்பினை - அன்பை, சேமித்து உள்ள -

பத்திரஞ்செய்து வைத்திருக்கிற, நல்சிந்தை - நல்லெண்ணத்தையுடைய, மகளிரை - பெண்களை, காமக்கல்வியும் - காமவித்தையையும், கானத்திறங்களும் - கானவகைகளும், வாமம் - அழகிய, செம்மணிவல்லி - மாணிக்கவல்லியானவள், பயிற்றினாள் - பழக்கினாள் எ-று.

கானம் - இசை. திறம் - வகை. ஈமம் - மயானம். சர்வசங்காரகாலத்தில் சிவபிரான் மயானத்தில் நடிப்பாரென்பது சைவாகமத் துணிபாதலால் அவரை ஈமத்தாடி யென்றார். சேமித்தல் - பத்திரப்படுத்தல், பகுதி சேமி.

இன்ன வாறு பயிற்றினு மேந்திழைக்
கன்னி மார்வறுங் காமம் பயின்றிலர்
துன்னு பேரிரு ளோடு சுடரவன்
றன்னை யாவர் பயிற்றிடத் தக்கவர்.

(இ - ள்.) இன்னவாறு - இவ்விதமாக, பயிற்றினும் - பழக்கினும், ஏந்து இழை - ஆபரணங்களைத் தாங்கிய, கன்னிமார் - (அந்த) பெண்கள், வறும்காமம் பயின்றிலர் - பயனற்ற காமநடை பழகிலர், துன்னு-நெருங்கின, பேர் இருளோடு - பெரிய அந்த காமத்துடன், சுடரவன் தன்னை - சூரியனை, பயிற்றிடத்தக்கவர் - பழகுவிக்கத் தகுந்தவர், யாவர் - எவர் எ-று.

விவாக முடியாதவர் என்பது தோன்ற கன்னிமார் என்றார். எவர் என்னும் வினா ஒருவருமிலர் என்பது தோன்ற நிற்றலால் எதிர்மறைப் பொருட்டு. (௫௦)

சிந்தை நின்று சிவபெரு மான்சிவ
தந்தி ரப்பெயர்த் தக்க வபரமும்
பந்த பாசம் பரியும் பரமுமா
மூந்து ஞான முழுது மளித்தனன்.

(இ - ள்.) சிந்தை நின்று-மனத்தி லிருந்துகொண்டு, சிவபெருமான்—, சிவதந்திரப்பெயர் தக்க - சிவாகமமென்னும் பெயரையுடைய, அபரமும்—, பந்தபாசம் பரியும் - பிறவிக்கட்டு அறுதற்கேதுவாகிய, பரமும்—, ஆம் - ஆகிய, ஞானமுழுதும் - பூர்ண ஞானத்தையும், அளித்தனன் - கிருபை செய்தான் எ-று.

சிந்தை சிந்தா என்னும் வடசொற்றிரிபு. தந்திரம் - நூல். சிவதந்திரம் - சிவாகமம். ஞானம் - பரஞானம், அபரஞானம் என இருவகைப்படும். அபரஞானம் - நூலாராய்ச்சியா லுண்டாவது, பரஞானம் - அநுபவத்தா லுண்டாவது. இவற்றின் விரிவெல்லாம் ஈண்டு விரிக்கிற் பெருகுமாதலால் நிறுத்தப்பட்டது. பந்தம் - கட்டு (பிறவிக்கட்டு). பாசம் - கயிறு (ஆசைக் கயிறு). அளித்தல் - கிருபைசெய்தல், பகுதி அளி. (௫௧)

கண்ணிற் காண்பன கேட்ப கருத்தினி
லெண்ணப் பட்டன யாவுஞ் சிவமென
நண்ணப் பட்டனர் நங்கையர் மாயையாற்
பண்ணப் பட்ட பலவு மெதிர்ந்திலார்.

(இ - ள்.) நங்கையர் - அந்தப் பெண்களிருவரும், கண்ணின் காண்பன- கண்ணினாற் பார்க்கப் படுவனவும், கருத்தினில் - மனத்தினால், எண்ணப்பட்டன - நினைக்கப்பட்டனவும் ஆகிய, யாவும் - எல்லாம், சிவம் என-சிவசொரூபமே யென்று, நண்ணப்பட்டனர் - அமையப்பெற்றனர், மாயையால் பண்ணப்பட்ட - மாயையால் செய்யப்பட்டனவாகிய, பலவும் - பலவற்றையும் எதிர்ந்திலார் - ஏற்றுக்கொண்டிலர் எ-று.

கண்ணின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றாவதன் கருவிப் பொருளைக் குறித்தது. (௩௨)

தேடித் தேடித் திசைதொறு மெய்ச்சிவ
வேடத் தார்தம் விழியெதி ரப்பெறிற்
பாடிப் பாடிப் பரவிப் பதமலர்
சூடிச் சூடித் தொழுஞ்செயன் மிக்குளார்.

(இ - ள்.) திசைதொறும் - திக்குகளிலெல்லாம், தேடிதேடி—, மெய்-உண்மையாகிய, சிவ வேடத்தார் - சிவவேடத்தையுடையவர், தம் - தமது, விழி - கண்களுக்கு, எதிரப்பெறின் - நேரிடப்பெற்றால், பாடிபாடி—, பரவி-துதித்து, பதமலர் - (அவர்களுடைய) பாததாமரைமலர்களை, சூடிசூடி - பலகால் சிரசில் ஏற்று, தொழும் - வணங்குகிற, செயல் - செய்கையே, மிக்கு உள்ளார் - மிகுதியாயுள்ளவராயினர் எ-று.

தேடித்தேடித் திசைதொறு மெய்ச் சிவவேடத்தார் தம்விழி யெதிரப் பெறின் என்றமையால், பொய்ச்சிவ வேடந்தாங்கித் திரிபவர் என்பதும், பெறின் என்றதனால் பெறலருமையும் விளங்கிற்று. (௩௩)

விழிய றிந்தில வேட்கைக் குறிப்பினை
மொழிய றிந்தில வஞ்ச மொழியினைப்
பழிய றிந்தில நெஞ்சம் பவநடை
வழிய றிந்தில மற்றவர் கால்களே.

(இ - ள்.) அவர் - அந்த மாதருடைய, விழி - கண்கள், வேட்கைக் குறிப்பினை - காமக்குறிப்பை, அறிந்தில - தெரிந்தில, வஞ்சமொழியினை - கபடவார்த்தைகளை, மொழி - அவருடைய வார்த்தைகள், அறிந்தில - தெரிந்தில, நெஞ்சம் - அவருடைய மனம், பழி அறிந்தில-பழிக்கப்படும் எண்ணங்களை, அறிந்தில - தெரிந்தில, கால்கள் - அவருடைய கால்கள், பவநடைவழி அறிந்தில - பிறவிக்குச் செல்லும் நடைவழியைத் தெரிந்தில எ-று.

வேட்கைக் குறிப்பு - காமக் குறிப்பு. வஞ்சமொழி - வஞ்சனை மறைந்திருக்கும் இன்சொல். பழி - பழிக்கப்படும் கெட்ட எண்ணம். மற்று - அசை. (௩௪)

ஊமை யாவ ருலகுரைக் கங்கண
னாம வாய்மையி னாமக ளாகுவர்
காமி யாவர் கருணைக் கடலினுக்
காமை யாகுவ ரைந்து மடக்கலால்.

(இ - ள்.) உலகு உரைக்கு - உலகத்தாருடைய சொற்களுக்கு, ஊமை ஆவர் - ஊமருமாகுவர், அங்கணன் - சிவபெருமானது, நாமவாய்மையில் - திருநாமோச்சாரணத்தால், நாமகள் ஆகுவர் - சரசுவதியாகுவர், கருணைக் கடலினும் - க்ருபா சமுத்ரமா யிருக்கவேண்டு மென்பதிலும், காமி ஆவர் - விருப்பமுடையவராகுவர், ஐந்தும் அடக்கலால் - ஐந்துறுப்புக்களையும் அடக்குதலால், ஆமை ஆகுவர் - ஆமையையும் நிகர்ப்பர் எ-று.

உலகு ஆகுபெயர். அங்கணன் - கிருபைக் கண்ணன், ஐந்தும் என்றது ஐம்பொறிகளை. ஆமைக்கு ஐந்துறுப்புக்களாவன: கால்கள் நான்கும் கழுத்தொன்றும். (௩௫)

பேதை யாவர் பெதும்பைய ராகியு
மாத ராரிவ் வுலக வழக்கினி
லாதி யாரை யறியு மறிவினி
லோது பேரிளம் பெண்ணென வோங்குவார்.

(இ - ள்.) பேதையாவர் - பேதைப்பருவத்தினராகிய இப் பெண்கள், பெதும்பையர் ஆகிய மாதரார் - பெதும்பைப் பருவத்தையுடைய பெண்கள், இ - இந்த, உலக வழக்கினில் - உலக வழக்கத்தில், ஆதியாரை - முதன்மையுடையவரை, அறியும் - அறிகிற, அறிவினில் - அறிவில், ஓது - சொல்லப்பட்ட, பேரிளம் பெண் என - பேரிளம் பெண்ணென்று சொல்லும்படி, ஓங்குவார் - விருத்தியடைந்து வருவாராயினர் எ-று.

பேதை - ஏழுவயதுப் பெண். பெதும்பையர் - ஒன்பதுவயதுப் பெண்கள். பேரிளம் பெண் - முப்பத்திரண்டு வயதுப்பெண். பேரிளம் பெண் என பேரிளம் பெண்போல எனினுமாம். (௩௬)

மங்கை மாரிவர் தங்கள் வளநகர்ச்
சங்க மேவு தமிழ்ப்பெரு நாவலன்
றிங்கள் வேணிதன் றெங்கயி லாயமுற்
றங்கு ஞானவந் தாதிய றைந்ததும்.

(இ - ள்.) மங்கைமார் இவர் தங்கள் - மங்கைப் பருவப் பெண்களாகிய இவர்களுடைய, வளநகர் - செல்வப்பெருக்குள்ள நகரத்தில், சங்கம் மேவு -

மதுரைத் தமிழ்ச்சங்கத்திலிருந்த, பெரு - பெரிய, தமிழ் நாவலன் - தமிழ் வித்வானாகிய நக்கீரன், திங்கள் வேணிதன் - சந்த்ரஜடாதரனாகிய சிவபெருமானது, தென் கயிலாயம் உற்று - தென் கயிலாயமாகிய திருக்காளத்தியை அடைந்து, அங்கு - அவ்விடத்தில், ஞான அந்தாதி அறைந்ததும் - ஞானத்தைத் தருகிற கயிலைபாதி காளத்திபாதி அந்தாதியைப் பாடினதும்.

திங்கள்வேணிதன் றென்கயிலாயம் உற்று அந்த ஞானவந்தாதி யறைந்ததும் என மேல் வருதலால், சங்கமேவு தமிழ்ப்பெரு நாவலன் என்றது நக்கீரனைக் குறித்தது. வேணி வடசொல். (௩௭)

காத லாற்றிருக் காளத்தி வாழ்பரஞ்
சோதி யோடு கலந்ததுந் தொண்டராற்
கீத வாய்மொழிக் கன்னியர் கேட்டுளத்
தோதொ ணாத வுவகையுற் றாரரோ.

(இ - ள்.) காதலால் - விருப்பத்தால், திருக்காளத்திவாழ் - திருக்காளத்தியில் வாழ்கிற, பரஞ்சோதியோடு-பேரொளியாகிய சிவலிங்கப் பெருமானோடு, கலந்ததும்-ஐக்கியமானதும், தொண்டரால் - அடியார்களால், கீதம் - கீதம்போலும், வாய்மொழி - வாய்ச்சொல்லினையுடைய, கன்னியர் கேட்டு - கன்னிப்பெண்கள் கேள்விப்பட்டு, உள்ளத்து - தமது மனத்தில், ஓதொணாத - சொல்ல வொண்ணாத, உவகை உற்றார் - மகிழ்வடைந்தார்கள் எ-று.

காதல் அன்பு எனினுமாம். அரோ - அசை. கன்னியர் - கலியாணமாகாத பெண்கள். (௩௮)

சென்று வானுயர் தென்கயி லாயம்யா
மென்று காண்குவ மென்னுங் கருத்தொடு
நின்று ஞானவந் தாதி நியமமா
மன்ற நாடொறு மங்கைய ரோதுவார்.

(இ - ள்.) மங்கையர் - அந்தக் கன்னியர் இருவரும், சென்று - போய், வான் உயர் - ஆகாயமட்டும் உயர்ந்த, தென்கயிலாயம் - தென்கயிலாயத்தை, யாம் - நாம், என்று - எந்நாள், காண்குவம் என்னும் கருத்தொடு - தரிசிப்போமென்கிற அபிப்பிராயத்தோடு, நின்று - நிலைபெற்று, ஞான அந்தாதி - ஞான அந்தாதியை, நியமமா - நியமமாக, நாள்தொறும் - தினந்தோறும், ஓதுவார் - பாராயணம் பண்ணுவாராயினர் எ-று.

மன்ற உரையசை யிடைச்சொல். ஞான அந்தாதி யென்றது கயிலைபாதி காளத்திபாதி யந்தாதியை. நியமம் - ஏற்பாடு (தவறாமல்). (௩௯)

கண்ணிற் காணுமக் கண்ணப்ப னும்பரன
வண்ணத் தோகையர் காளத்தி மால்கொடுங்

உண்ணப் பூச வுடுப்ப நினைகலா
வெண்ணத் தாற்பித் தலைவுற் றிருந்தனர்.

(இ - ள்.) கண்ணின் காணும் - கண்ணினாற் கண்ட, அ - அந்த, கண்ணப்பனார் என - கண்ணப்பனார்போலவே, வண்ணம் - அழகாகிய, தோகையர் - அந்தப் பெண்கள், காளத்தி மால்கொடு - காளத்தி விருப்பம்கொண்டு, அங்கு - அவ்விடத்தில், உண்ண - உண்ணவும், பூச - பூசவும், உடுப்ப - உடுக்கவும், நினைகலா - நினையாத, எண்ணத்தால்-நினைவினால், பித்து அலைவுற்று - பைத்தியங் கொண்டு, இருந்தனர் - இருந்தார்கள் எ-று.

தோகையர் ஆகுபெயர். மால் - மிகு விருப்பம். உண்ண வென்றது உணவு முதலியவற்றை. பூச வென்றது சந்தந முதலியவற்றை. உடுப்ப வென்றது - உயர்ந்த ஆடை முதலியவற்றை. பித்தலைதல் - பைத்தியம் கொள்ளல். (௪0)

சாதி நீதி தணந்தது மாதுமை
பாதி பாலுறு பற்று மறிந்தனை
காதி மாதரைக் கள்ளுணி கள்ளுணார்க்
கோது மாறென வோதுதன் மேயினாள்.

(இ - ள்.) சாதிநீதி - சாதிநியமம், தணந்தது - ஒழிந்தது, மாது உமை பாதியான் - சிவபெருமானது, உறுபற்று மறந்தது - மிகுந்த பத்தியும் மறிபட்டது, (அப்பொழுது மாணிக்கவல்லியானவள்) மாதரை - பெண்களை, காதி - கோவித்து, கள் உண்ணி - கள்ளுண்போன், கள் உண்ணார்க்கு - கள்ளுண்ணாதவர்க்கு, ஓதுமாறு என - புத்தி சொல்வதுபோல, ஓதுதல் மேயினாள் - சொல்லத்தொடங்கினாள் எ-று.

தணத்தல் - நீங்கல், பகுதி தண. மாதுமை பாதியான்-உமாதேவியை யிடப்பாகத்திலுடையவன். காதல் - கோவித்தல், பகுதி காது. (௪௧)

மேற்படி வேறு

தாளுழவர் கொல்லையொரு தண்மழை பொழிந்த
வேலையது கண்டுவிதை வித்திடுத லேபோற்
காலையர்கள் வந்துகவி காலைபொருள் கொள்ளீர்
நாளைவரு மோவிளமை நங்கையிர் நுமக்கே.

(இ - ள்.) தாள் - முயற்சியுள்ள, உழவர் - உழுநர்கள், ஒரு தண்மழை பொழிந்த வேலையது கண்டு - ஒரு குளிர்ந்தமழை பொழிந்த சமயம் பார்த்து, கொல்லை - தமது கொல்லையில், விதை - விதையை, வித்திடுதலேபோல் - விதைப்பதுபோலவே, காலையர்கள் வந்து - யவ்வநிகள் வந்து, கவிகாலை - (உங்களைச்) சூழ்ந்து கொள்ளுங் காலத்தில், பொருள்கொள்ளீர் - பொருளைச்

சம்பாதியாதிருக்கிறீர்கள், நங்கைமிர் - பெண்களே, நுமக்கு - உங்களுக்கு, இளமை - இளமைப் பருவமானது, நாளைவருமோ-நாளைக்கு வருமோ எ-று.

உழவர் - உழுது பயிர்செய்வோர். கொல்லை - விளைநிலம். வருமோ என்னு மோகாரம் எதிர்மறை. (சஉ)

என்றுவளர் வீர்முலைக ளென்றுபெறு வீர்நீ
ரென்றுபயில் வீர்கலைக ளென்றிசைகள் கற்பீ
ரென்றுதவு வீரென விருந்துகவல் வுற்றேற்
கென்றுதவு வீருதவி யிவ்வளவ தேயோ.

(இ - ள்.) என்று வளர்வீர் - என்று வளர்வீர்கள், என்று முலைகள் பெறுவீர் - என்று ஸ்தநங்களை யுடையீராவீர்கள், கலைகள் என்று பயில்வீர்-காமக் கலைகளை என்று கற்பீர்கள், இசைகள் என்று கற்பீர்—, என்று உதவுவீர் - எனக்கு என்று உதவுவீர்கள், என இருந்து - என் றெண்ணியிருந்து, கவல் வுற்றேற்கு - கவலையடைந்திருந்த எனக்கு, என்று உதவுவீர் - என்று உதவப் போகிறீர்கள், உதவி - நீங்கள் செய்யுமுதவி, இவ்வளவதேயோ - இவ் வளவினதுதானே எ-று.

கலைகள் என்றது மதநாகமங்களை. இசைகள் - சங்கீத சாஸ்திரங்கள். (சங)

சீரிளைஞர் மார்புபொரு செய்கையறி யாநும்
பாரமுலை யீகையிலி பானிலைய பொன்னும்
பேரவையை யஞ்சுமொரு பேதைபெறு நூலும்
வீரமறு பேடிகையில் வேலுநிக ராமால்.

(இ - ள்.) சீர் - சிறந்த, இளைஞர் - வாலிபரது, மார்பு பொரு - நெஞ்சோடு போரிடுகிற, செய்கை - தொழிலை, அறியா - அறியாத, நும் - நுமது, பாரம் முலை - பெருமுலைகள், ஈகை இலிபால் - கொடையில்லாதவனிடத்தில், நிலைய-நிலைத்திருக்கிற, பொன்னும்-பொன்னையும், பேர் அவையை அஞ்சும் - பெரிய சபைக்கு அஞ்சுகிற, ஒரு பேதையது நூலும் - ஒரு அறிவிலியினிடத்துள்ள நூலறிவும், வீரம் அறு - வீரமில்லாத, பேடிகையில் - பேடியின் கையிலுள்ள, வேலும் - வேற்படையும், நிகர் ஆம் - சமானமாகும் எ-று.

ஈகையிலி-லோபி. அவையை யஞ்சும்-அவைக் கஞ்சும்(உருபுமயக்கம்). பேடி - அலி. (சச)

காணினுனை வாழுமுயிர் கண்டில னெனிற்போ
மாணையுன தென்றுவிழி யாறுற வொழுக்கி
நீணிதிகொ ளாடவரை நேயம்வரு விக்கு
மாணறிவி லாதொரு மரப்பொறி நிகர்த்தீர்.

(இ - ள்.) உன்னைகாணில் - உன்னைக் கண்டால், உயிர்வாழும் - உயிர் நிற்கும், கண்டிலன் எனில் - காணேனாயின், போம் - (உயிர்) நீங்கும், உனது

ஆணை என்று - உன் ஆணையென்று சொல்லி, விழி - கண்ணீரை, ஆறு உற ஒழுக்கி - யாறுபோலச் சிந்தி, நீள் நிதிகொள் - பெரும் பொருள் வைத்திருக் கிற, ஆடவரை - புருடர்களை, நேயம் வருவிக்கும்-ஆசையை யுண்டாக்குகிற, மாண் - மாட்சிமைப்பட்ட, அறிவு இலாத - அறிவற்ற, ஒரு மரப்பொறி - ஒரு மரப்பாவையை, நிகர்த்தீர் - நிகர்த்திருக்கிறீர் எ-று.

கண் ஆகுபெயர். நேயம் - நேசம். இலாதவொரு எனற்பாலது இலா தொரு என நிலைமொழி யீற்றகரம் தொகுத்தலாயிற்று. பொறி - யந்திரம் எனினுமாம். (சஞ)

> வந்துகரு வுற்றெனது வாயிடைமண் ணிட்டீர்
> முந்துற வுதித்தழகு முற்றையு மழித்தீர்
> மைந்தரை மயக்கியவர் மாநிதி கவர்ந்து
> தந்துமை யளித்தது தனக்குறுதி செய்யீர்.

(இ - ள்) வந்து கருஉற்று - என் கர்ப்பத்தில்வந் தடைந்து, எனது வாயிடை - என்வாயில், மண் இட்டீர் - மண் போட்டீர், முந்துற உதித்த - முற்படப் பிறந்த, அழகு முற்றவும் அழித்தீர்-அழகு முழுதும் அழித்துவிட் டீர், மைந்தரை - வாலிபரை, மயக்கி - மயங்கச்செய்து, அவர் - அவர்களு டைய, மாநிதி - பெரும்பொருளை, கவர்ந்து தந்து - கிரகித்துக் கொடுத்து, உம்மை அளித்தது தனக்கு - உங்களை வளர்த்ததற்கு, உறுதி செய்யீர் - (எனக்கொரு) ஆதரவு செய்யக்கடவீர் எ-று.

வந்து என்பதற்கு என் தீவினைப்பயனாக வந்து என்பது பொருள். கரு வுறல் - கருப்பமடைதல் (சூலாதல்). உதித்த அழகு உதித்தழகு என ஈறு திரிந்தது. மைந்தர் - பாலியர் (பலமுள்ளவர்). மயக்கல் - உணர்வழித் தல். (சசு)

> மந்திர மருந்துமணி மற்றுமுள வாய
> வெந்திர மெனப்படு மிவற்றுள மடுத்து
> மைந்தர்பொருள் வவ்வில்வரு மாதவர் தமக்குந்
> தந்தியத ளாடையர் தமக்குமுத வாதோ.

(இ - ள்.) மந்திரம்—, மருந்து—, மணி—, மற்றும் உள ஆய - மற்று முண்டாகிய, எந்திரம் - யந்திரம், எனப்படும் - என்று சொல்லப்படுகிற, இவற்று - இவற்றால், உள்ளம் அடுத்து - மனத்தினால் அபேக்ஷித்து, மைந்தர் பொருள் - வாலிபரது பொருளை, வவ்வில் - வவ்வினால், வரும் - உங்களை நாடிவருகிற, மாதவர் தமக்கும் - பெரிய தபோதனர்க்கும், தந்தி - தந்தியின், அதள்-தோலை, ஆடையர் தமக்கும்-ஆடையாகவுடைய சிவனடியார்களுக்கும், உதவாதோ - உதவமாட்டாதோ எ-று.

மணி - குளிகை. எந்திரம் - குலிசம். வவ்வல் - கவர்தல், பகுதி வவ்வு. தந்தி அதள் ஆடையர். யானைத்தோலை ஆடையாகவுடையவர் (சிவபெரு

மாணுர்). (தந்தீ - தந்தத்தையுடையது. அதள் - தோல்.) தந்தி அதள் - ஆடையர் தமக்கு முதவாதோ என்றது மாதவர் முதலியோர்க் குபகரித்தற் காகுமே யென்றபடி. உதவாதோவென்னும் ஒகாரம் உடன்பாட்டுப் பொருட்டு. (௬௭)

செல்வமுறு நாளுறவு செல்லலுற வாழா
நல்குரவின் வந்துகிளை நண்ணுமவ ரேபோ
லொல்குறு மருங்குலுற வொண்முலைவி ழுந்தாற்
கல்விமட வீரிளைஞர் காமுறுவ ரோதான்.

(இ - ள்.) செல்வம் உறும் நாள் - பொருள் மிக்கிருக்கிற காலத்தில், உறவு - (உறவினர்) சுற்றத்தார், செல்லல் உற - துன்பமடைய, வாழா - வாழ்ந்து, நல்குரவில் - வறுமைக்காலத்தில், வந்து—, கிளை - உறவினரை, நண்ணுமவரேபோல் - சேர்வோரைப்போல, ஒல்குறும் - அசையாநின்ற, மருங்குல் உற - இடையைச்சேர, ஒள்முலை - அழகிய தனங்கள், விழுந்தால்- தொங்குங்காலம் நேர்ந்தால், கல்விமடவீர் - கல்வியறிவினையுடைய பெண்காள், இளைஞர் - வாலிபர், காமுறுவரோ-உங்களை விரும்புவார்களோ எ-று.

உறவு ஆகுபெயர். செல்லல் - துன்பம். நல்குரவு - வறுமை (தரித் திரம்). கிளை ஆகுபெயர். ஒல்கல் - அசைதல், பகுதி ஒல்கு. விழுந்தால் என்றது ஈண்டைக்கேற்பத் தொங்கினுல் என் றுரையுரைக்கப்பட்டது. காமுறல் - இச்சித்தல், பகுதி காமுறு. காமுறுவரோ வென்னும் ஒகாரம் எதிர்மறை. (௬௮)

ஓரழகி லாதவரு மொள்ளணி யணிந்து
கூரழகு செய்துசிலர் கொள்ளமயல் செய்வார்
பேரழகி னுலகு பித்தளை தல் செய்து
நீரழகி லார்களென நிற்பதறி வன்றே.

(இ - ள்.) ஓர் அழகு இல்லாதவரும் - சிறிதும் அழகில்லாத மாதரும், ஒள் அணி - அழகாகிய ஆபரணங்களை, அணிந்து - தரித்து, கூர் அழகு செய்து - (தம்மை) மிக்க அழகுள்ளவராகச் செய்துகொண்டு, சிலர் - சில ஆடவர்கள், மயல்கொள்ளச்செய்வர் - மயக்கங்கொள்ளச் செய்வார், (அப்படியிருக்க) பேர் அழகினுல் - மிக்க அழகினுல், உலகு - உலகம், பித்து அளைதல் செய்தும் - பைத்தியங் கொள்ளச் செய்தும், நீர் - நீங்கள், அழகு இல்லார்கள் என - அழகில்லாதவர்கள் போல, நிற்பது - நிற்கிறது, அறிவு அன்றே - அறிவல்லவே எ-று.

ஓர் அழகு என்பதில் ஓர் என்பது எண்ணுப்பொருள் குறியாது சிறுமைப் பொருள் குறித்து நின்றது. இலாதவரும் என்றவும்மை இழிவு சிறப்பு. இவர்கள் அழகுடையராய் ஆடவரை மயங்கச்செய்வ தெங்ஙனமென்னும் வினவுக்கு விடையாக ஒள்ளணி யணிந்து என்றார். இயற்கை யழகில்லாதவரும் செயற்கை யழகினுல் சில ஆடவரை மயலூட்டச்செய்தே, நீங்கள்

இயற்கையழகு செயற்கையழகு என்னு மிரண்டும் ஒருங்கே உடையராயிருந்தும் நீங்கள் இவ்வாறு நிற்பது அறிவின் றென்பது தோன்ற, பேரழகினுலகு பித்தளைதல் செய்தும் நீரழகிலார்களென நிற்பது அறிவன்றே யென்றார். (௬௯)

இல்லைபிழை யாயினு மியைத்தொர்பிழை தன்னைச்
சொல்லியணை யாதெதிர் துணித்தழு துதைத்து
மெல்லுண வொழிந்துசிலர் வேண்டுற விருந்து
நல்லிளைஞர் கொள்ளமய னங்கையர் களிப்பார்.

(இ - ள்.) பிழை இல்லை ஆயினும் - தவறு இல்லையானாலும், ஓர் பிழை இயைத்து - ஒரு குற்றத்தைக் கற்பித்து, சொல்லி-அதைச் சொல்லி, அணையாது - தழுவாமல், எதிர் - எதிரே நின்று, துணித்து - பிணங்கி, அழுது உதைத்து - அழுது உதைத்து, மெல் உணவு ஒழிந்து - மென்மையாகிய உண்டியை வெறுத்து, சிலர் வேண்டுற - சிலர் வேண்டிக்கொள்ளும்படி, விருந்து—, நல் இளைஞர் மயல்கொள்ள - அழகிய வாலிபர் மையல்கொள்ள, நங்கையர் களிப்பார் - மாதர்கள் மகிழ்வார்கள் எ-று.

இயைத்தல் - கற்பித்தல், பகுதி இயை. துணித்தல் - பிணங்குதல், பகுதி துணி. நல்லிளைஞர் என்பதில் நன்மை வஞ்சமின்மையைக் குறித்தது. (௭0)

ஆடவர்மு னுடையை யவிழ்த்தன ருடுத்துங்
கூடுமுலை தூசொடு குலுங்குற நடந்து
நாடக நடித்துமிசை நல்லன பயின்றும்
வீடலரி தாயமயல் வேலையு ளமிழ்ப்பார்.

(இ - ள்.) ஆடவர்முன் - ஆண்மக்களுக்கெதிரே, ஆடையை அவிழ்த்தனர் உடுத்தும் - புடவையை அவிழ்த்து உடுத்தும், கூடும் - ஒன்றோடொன்று நெருங்கின, முலை - தனங்கள், தூசொடு குலுங்குற - உத்தரியத்தோடு குலுங்க, நடந்தும்—, நாடகம் நடித்தும்—, நல்லன இசைபயின்றும் - இனிமையாகிய இசைகளைப் பாடியும், வீடல் அரிது ஆய - விடுதற்கரிதாகிய, மயல் - மையலாகிய, வேலையுள் - கடலினுள்ளே, அமிழ்ப்பார் - ஆழ்த்திவிடுவார்கள் எ-று.

அவிழ்த்தனர் முற்றெச்சம். தூசு - ஆடை. அது ஈண்டைக் கேற்ப உத்தரியத்தைக் குறித்தது. நாடகம் - நாட்டியம். மயல் - காமமயக்கம். வேலை - வேலா என்னும் வடசொற்றிரிபு. (௭௧)

மாளரிய செல்வமுத மைந்தரொனும் வேழ
நீளுமுகி ரங்குச முறுத்தினர் நிறுத்தித்

தோளெனு மிருந்தொடர் தொடக்கிநம ரெல்லா
நாளும்வளர் கொங்கையெனு நற்றறி பிணிப்பார்.

(இ - ள்.) மாள் அரிய - தொலையாத, செல்வம் - செல்வமாகிய, மதம் - மதத்தையுடைய, மைந்தர் என்னும் - வாலிபர் என்கிற, வேழம் - யானையை நீளும் - நீண்ட, உகிர் - நகமாகிய, அங்குசம் - தோட்டியால், உறுத்தினர் - குத்தி நிறுத்தி, தோள் என்னும் - தோள்களென்கிற, இருந்தொடர் - பெரிய விலங்கினால், தொடக்கி - கட்டி, நமர் எல்லாம் - (தமது) சிநேகரை யெல்லாம், நாளும் - தினந்தோறும், வளர் - வளராநின்ற, கொங்கை என்னும் - (தமது) தனங்களென்கிற, நல்தறி - நல்ல கட்டுத் தறியில், பிணிப்பார் - கட்டுவார்கள் எ-று.

உறுத்தினர் - முற்றெச்சம். பிணித்தல் - கட்டுதல், பகுதி பிணி. ()

என்றினைய தன்றரும மாய்ப்பல விசைக்குங்
கன்றுமொழி யாவுமொர் கவிழ்த்தகுட மீது
நின்றுபொழி மைம்முகிலி னீரென நிலாமற்
சென்றொழிய மாசுதபு சிந்தைய ருரைப்பார்.

(இ - ள்.) என்று இனைய - என்றித்தன்மையவாய், தன் தருமமாய் - தன் தருமநெறியாக, பல இசைக்கும் - பல சொற்களைச் சொல்லுகிற, கன்றும் - மனம் வருந்துதற்குரிய, மொழியாவும் - சொற்கள் எல்லாவற்றையும், கவிழ்த்த - கவிழ்த்துவைத்த, குடமீது - குடத்தின்மேல், நின்று பொழி - நிலைத்துப் பொழிகிற, மைமுகிலின் நீர் என - கருமையாகிய மேகஜலம் போல, நிலாமல் - நிற்காமல், சென்று ஒழிய - போயொழிய, மாசு தபு - களங்கமற்ற, சிந்தையர் - மனமுள்ளவர்களாகிய கன்னியர்கள், உரைப்பார் - சொல்வாராயினர் எ-று.

இசைத்தல் - சொல்லுதல், பகுதி இசை. கன்றுதல் - வருந்துதல், பகுதி கன்று. முகில் - மேகம். தபுதல் - கெடுதல், பகுதி தபு. (௫௩)

மேற்படி வேறு

மின்னின்மா யுடம்பினை வளர்த்தல் வேண்டியே
யன்னைநீ விழுங்கியண் ணுத்தல் செய்கலா
வின்னல்கூர் நிரயம்புக் கிளைக்குந் தீவினை
தன்னையாஞ் செய்திடச் சாற்ற லாகுமோ.

(இ - ள்.) மின்னின் - தோன்றி யுடனேயழிகிற மின்னலைப்போல, மாய் - தோன்றி உடனே யழிகிற, உடம்பினை - சரீரத்தை, வளர்த்தல் வேண்டியே - வளர்க்க விரும்பியே, அன்னை நீ - எமக்குத் தாயாகிய நீ, விழுங்கி அண்ணுத்தல் செய்கலா - விழுங்கி உமிழாத, இன்னல் கூர் நிரயம் புக்கு - துன்ப மிகுந்த நரகத்திற் புகுந்து, இளைக்கும் - மெலிதற் கேதுவாகிய

தீவினை தன்னை - தீவினையை, யாம் செய்திட - நாங்கள் செய்யும்படி, சாற்றல் ஆகுமோ - சொல்லத்தகுமோ எ-று.

மின்னின் என்பதில் இன் என்னும் ஐந்தனுருபு ஒப்புப்பொருளது. அண்ணாத்தல் - வாய்திறத்தல், பகுதி அண்ணா. ஆகுமோ வென்னு மோகாரம் எதிர்மறை. (௫௪)

இப்பியிற் பிறந்தமுத் திப்பிக் கென்செயு
மெய்ப்படு மணிபவர் தம்மை மேவியே
யப்பரி சுன்றனக் கியாமு மாயினந்
துப்புறழ் சடிலமெய்ச் சோதி சேர்துமே.

(இ - ள்.) இப்பியில் - முத்துச் சிப்பியில், பிறந்த - உண்டான, முத்து - முத்துக்கள், மெய்ப்பட - தம்முடம்பிற் படும்படி, அணிபவர் தம்மை மேவி - தரிப்பவரைப் பொருந்தி, இப்பிக்கு என் செய்யும்—, யாமும் - நாமும், உன்றனக்கு - உனக்கு, அப்பரிசு ஆயினம் - அத்தன்மையரே யானோம், (இனி) துப்பு உறழ் - பவளத்தை யொத்த, சடிலம் - சடையையுடைய, மெய் - நித்தியமாகிய, சோதி - (பரஞ்சோதி) பேரொளியை, சேர்தும் - அடைவோம் எ-று.

என் செயும் என்னும் வினா யாதும் செய்யாதென்னும் பொருள் தந்து நின்றது. துப்புறழ் சடிலமெய்ச் சோதி யென்றது சிவலிங்கப் பெருமானை. (௫௫)

சந்திர மௌலியை யழைத்துத் தந்தரு
ளந்திரு வஞ்செழுத் தறையு மெங்கள்வாய்
நந்தரும் வினையுடை நரகை யுய்த்திடு
மந்திர மறைகில மறப்புற் றேனுமே.

(இ - ள்.) சந்திரமௌலியை - சந்த்ரஜடாதாரியை, அழைத்து தந்தருள் - அழைத்துத் தருகிற, அம் - அழகிய, திரு அஞ்செழுத்து - ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை, அறையும் - உச்சரிக்கிற, எங்கள் வாய் - எமது வாயானது, நந்து அரு - கெடாத, வினை உடை - தொழிலையுடைய, நரகை உய்த்திடும் - நரகிற் செலுத்துகிற, மந்திரம் - பிறமந்திரத்தை, மறப்புற்றேனும் - மறந்தாயினும், அறைகில - உச்சரிக்க மாட்டா எ-று.

அறைதல் - சொல்லுதல், பகுதி அறை. உய்த்தல் - செலுத்தல், பகுதி உய். (௫௬)

ஆயிரங் கலனுடம் பனைத்துந் தாங்கினு
மாயிரும் பொறையலால் வருவ துண்டுகொ

ஞயகன் விழிமணி யொன்றொர் நாளுடன்
மீயணிந் திடில்வினை யாவும் வீயுமே.

(இ - ள்.) ஆயிரம் கலன் - ஆயிரம் அணிகளை, உடம்பு அனைத்தும் - உடம்பு முழுதினும், தாங்கினும் - சுமந்திருந்தாலும், மா இரும்பொறை அல்லால் - மிக்க பாரமேயன்றி, வருவது - உண்டாகும் பயன், உண்டுகொல் - உளதோ, நாயகன் விழிமணி ஒன்று - உருத்திராக்கமணி ஒன்றை, ஓர் நாள் - ஒருநாள், உடல்மீ - உடம்பின்மேல், அணிந்திடின் - தரித்துக்கொண்டால், வினையாவும் - எல்லாவினைகளும், வீயும் - ஒழிந்திடும் எ-று.

கலன் - ஆபரணம். உண்டுகொல் என்னும் வினா இல்லையென்னும் பொருளது. நாயகன் - உருத்திரன். விழி அக்கம் (உருத்திராக்கமணி). வீதல் - அழிதல், பகுதி வீ. (ருஎ)

புழுகுசெஞ் சாந்திவை புனைந்து புன்மல
மொழுகுமொன் பான்றுளை யுடம்பை யென்றுநீ
யழகுசெய் திடின்மல மகலு மோபரன்
முழுகுவெண் ணீறிடின் முற்று மாயுமே.

(இ - ள்.) புழுகு - புனுகு, செஞ்சாந்து - செஞ்சந்தனம், (ஆகிய) இவை - இவற்றை, புனைந்து - பூசிக்கொண்டு, புன் மலம் ஒழுகு - அற்பமாகிய மலமொழுகாநின்ற, ஒன்பான் துளை - ஒன்பது தொளைகளையுடைய, உடம்பை - உடலை, என்றும் - எந்நாளும், நீ அழகு செய்திடின் - நீ யழகு செய்தால், மலம் அகலுமோ - மலம் நீங்குமோ, பரன் - பரமசிவன், முழுகு - முழுகாநின்ற, வெண்ணீறு இடின் - திருவெண்ணீற்றை யணிந்தால், முற்றும் - வினைமுழுதும், மாயும் - ஒழியும் எ-று.

துளை - த்வாரம். அகலுமோ வென்னும் வினா அகலாது என்னும் பொருள் தந்து நின்றது. (ருஅ)

இளம்பிறை தவழ்முடி யிறைவி ருக்குமெம்
முளம்புகு மோவுணர் வொழிக்குங் காமநோய்
துளங்கொளி வளர்செழுஞ் சுடரி லங்குறும்
வளங்கெழு மனைபுக வல்ல தோவிருள்.

(இ - ள்.) இளம்பிறை தவழ் - இளம்பிறை தவழ்கிற, முடி - சடைமுடியையுடைய, இறை - இறைவன், இருக்கும் - வீற்றிருக்கிற, எம் - எமது, உள்ளம் - மனத்தில், உணர்வு ஒழிக்கும் - அறிவை யழிக்கிற, காமநோய் - காமநோயானது, புகுமோ - பிரவேசிக்குமோ, துளங்கு - அசைகின்ற, ஒளி வாய் - ஒளிமிகுந்த, செழு - செழுமையாகிய, சுடர் இலங்குறும் - சூரியன் பிரகாசித்துக் கொண்டிருக்கிற, வளம் கெழுமனை - செல்வம் நிறைந்த வீட்டில், இருள் - இருட்டானது, புக வல்லதோ-பிரவேசிக்க வல்லதோ எ-று.

இளம்பிறை யென்றது ஒரு கலையாகிய சந்திரனை. புகுமோ - புக வல்லரோ என்பவற்றீற் றோகாரங்கள் எதிர்மறைப் பொருளது. (ருக)

தத்துவ மகன்றவோர் தனியி டத்தினிற்
பைத்தலை யரவணி பதியைப் புல்லிய
மெய்த்துறு மின்பினேம் விடய வின்பினை
பொய்த்தழி மனிதரைப் புணர்ந்து கொள்வமோ.

(இ - ள்.) தத்துவம் - தத்துவங்கள் யாவும், அகன்றது-ஒழிந்ததாகிய, ஓர் - ஒரு, தனி இடத்தினில் - ஏகாந்த ஸ்தலத்தில், பைதலை அரவு - படத்தோடு கூடிய தலையையுடைய பாம்பினை, அணி - அணிகிற, பதியை - இறைவனை, புல்லிய - சேர்ந்த, மெய்த்துறும் - உண்மைமிக்க, இன்பினேம் - ஆநந்தத்தை யுடையேமாகிய யாங்கள், விடய இன்பினை - விஷயாநந்தத்தையும், பொய்த்து அழி - பொய்யாயழிகிற, மனிதரை - மனிதரையும், புணர்ந்து கொள்வமோ - தழுவிக்கொள்வமோ எ-று.

தத்துவம் என்றது தொண்ணூற்றாறு தத்துவங்களை. அவையாவன: ஆன்மதத்துவம் - உச, நாடி - கO, அவத்தை - ரு, மலம் ங, குணம் ங, மண்டலம் - ங, பிணி - ங, விகாரம் - அ, ஆதாரம் - சு, தாது - எ, வாயு - கO, கோசம் - ரு, வாயில் - க. (சுO)

சங்கர தருமமே சார்ந்து ளோமினி
யுங்குல தருமமுற் றொழுகு வேங்கொலோ
வெங்களி யானையை விரும்பி யேறுந
ரிங்கொரு கரமிவர்ந் திடநி னைப்பரோ.

(இ - ள்.) சங்கரதருமமே - சிவதருமத்தையே, சார்ந்துளோம் - பெற்றிருக்கிற யாம், இனி—, உம் குலதருமம் உற்று - உமது குலாசாரத்தைப் பற்றி, ஒழுகுவேம் கொலோ - நடப்போமோ, வெம்-கொடிய, களியானையை-மதயானைமேல், விரும்பி ஏறுநர் - விரும்பி யேறுவோர், இங்கு - இவ்வுலகில், ஒருகரம் - ஒரு கழுதைமீது, இவர்ந்திட - ஏற, நினைப்பரோ - எண்ணுவரோ எ-று.

சங்கரன் - வடசொல். இதற்கு ஜீவர்களுக்கு இதஞ்செய்வோ னென்பது பொருள். ஒழுகுவேம் கொலோ வென்னு மோகாரம் எதிர்மன்ற. நினைப்பரோ வென்னு மோகாரமும் அது. கரம் - வடசொல். இவர்தல் - ஏறுதல், பகுதி இவர். (சுக)

இம்மையு மறுமையு மின்ப நல்குறுந்
தொம்மைவெம் முலையொரு கூறற் போற்றுவே

மும்மைவெந் துயர்பெறு மூட வேந்தரைப்
பொய்ம்மையம் பொருளினாற் புகழ்வ மோசொலாய்

(இ - ள்.) இம்மையும் - இம்மையிலும், மறுமையும்-மறுமையிலும், இன்பம் - சுகத்தை, நல்குறும் - கொடுக்கவல்ல, கொம்மை வெம்முலை - உமா தேவியை, ஒரு கூறன் - ஒருபாகத்தி லுடையவனாகிய சிவபெருமானை, போற்றுவேம் - வழிபடுவோமாகிய யாம், மும்மை - மும்மையிலும், வெம் துயர் பெறும் - கொடிய துன்பத்தை யநுபவிக்கிற, மூடவேந்தரை - மூட அரசர்களை, பொய்ம்மை - பொய்த்தன்மையுள்ள, பொருளினால் - பொருள் காரணமாக, புகழ்வமோ - புகழ்வோமோ, சொலாய் - கூறுவாயாக எ-று.

இம்மை - இவ்வுலகம். மறுமை - அவ்வுலகம். நல்கல் - கொடுத்தல், பகுதி நல்கு. கொம்மை வெம்முலை அன்மொழித் தொகை. திரட்சியாகிய விருப்பத்தைத் தருகிற தனத்தையுடையவள் என்பது பொருள். புகழ்வமோ வென்னு மோகாரம் எதிர் மறை. (கூஉ)

உணுஞ்சுவை யமுதையு முயர்வொ ழித்திடும்
பிணம்படு முடம்பினைப் பேணித் தீத்தொழி
லிணங்குபு திரிதரு மிழுதை மாந்தரைப்
பணிந்திடின் மக்களிற் பதடி யென்பரால்.

(இ - ள்.) உண்ணும் - உண்டற்குரிய, சுவை - சுவை மிக்க, அமுதையும் - அமிர்தத்தையும், உயர்வு ஒழித்திடும் - உயர்வை நீக்குகிற, பிணம்படும் உடம்பினை - பிணமாகப்போகிற வுடம்பை, பேணி - காப்பாற்றி, தீத்தொழில் இணங்குபு - தீச்செயல்களையே யடைந்து, திரிதரும் - திரிகிற, இழுதை மாந்தரை - மூடமனிதரை, பணிந்திடின் - வணங்கினால், (அவர்களை) மக்களில் - மனிதர்களுள், பதடி என்பர்-பதர் என்று சொல்லுவர் (அறிஞர்) எ-று.

பேணல் - வளர்த்தல், பகுதி பேண். இணங்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். மாந்தர் - சித்தியபஹுவசநம். (கூ௩)

திருந்தற மிளமையிற் செயாம லாடவர்ப்
பொருந்தின நிலையறு பொருளை யீட்டினாற்
குரங்கென வுடலமுட் கூனு நாளினிற்
புரிந்திடு செயலெது புகறி யெங்கட்கே.

(இ - ள்.) இளமையில் - இளமைப்பருவத்தில், திருந்து அறம் - திருத்தமாகிய தருமத்தை, செயாமல்-பண்ணாமல், ஆடவர்-ஆண்மக்களை, பொருந்தி-கூடி, நிலை அறுபொருளை - நிலையற்ற திரவியத்தை, ஈட்டினால் - சம்பாதித்தால், குரங்கு என - குரங்குபோல, உடலம் - உடம்பானது, உள்கூனும் நாளினில் - உள் வளையுங்காலத்தில், புரிந்திடு - செய்தற்குரிய, செயல் எது - செய்கையாது, எங்கட்கு புகறி - எமக்குச் சொல்லக்கடவை எ-று.

ஈட்டல் - சம்பாதித்தல், பகுதி ஈட்டு. புரிதல் - செய்தல், பகுதி புரி. புகறி - புகலுதி யென்பதன் விகாரம். (கூ௩)

உள்ளுற விலாவெளி யுறவு செய்துதான்
றெள்ளுறு மிளைஞர்தந் திருவெ லாங்கவர்ந்
தெள்ளுறு நரகினு மிடுத லால்வெறுங்
கள்ளரிற் கொடியவர் கணிகை மாதரே.

(இ - ள்.) உள் உறவு இல்லா - உள்ளுறவில்லாத, வெளிஉறவுசெய்து-வெளியுறவுபண்ணி, தெள்ளுறும்-தெளிவடைந்த, இளைஞர்-வாலிபரது, திரு எல்லாம் - செல்வமுழுதும், கவர்ந்து - கிரகித்துக்கொண்டு, எள்ளுறும்-இகழ்தற்பாலதாகிய, நரகினும் இடுதலால் - நரகலோகத்திலும் செலுத்துதலால், வெறும் கள்ளரின் - வெறுந்திருடரினும், கணிகைமாதர் - வேசையர், கொடியர் - கொடியவராவர் எ-று.

எள்ளல் - இகழ்தல், பகுதி எள். வெறுங்கள்ளர் - கள்ளத்தைவிட வேறொன்றையும் அறியாதவர். கணிகை கணிகா என்னும் வடசொற்றிரிபு. ()

நடிக்குறு முங்கள்பொய்ந் நாட கத்தினை
வடிக்குறு மொழியினை மறத்தி யுங்கள்வெங்
குடிக்குண மருவிலங் குடம்பை யொன்றில்வாழ்
கொடிக்குலம் பயிலுமோ கோகி லங்களே.

(இ - ள்.) நடிக்குறும் - நடிக்கிற, உங்கள் - உங்களுடைய, பொய் நாடகத்தினை - பொய்யாகிய நாடகத்தையும், வடிக்குறும் - வசிகரிக்கிற, மொழியினை - சொல்லையும், மறத்தி - மறக்கக்கடவை, உங்கள் - உங்களுடைய, வெம் - கொடிய, குடிக்குணம் மருவிலம்-குடிக்குணத்தைப் பொருந்திலேம், குடம்பை ஒன்றில் வாழ் - ஒரு கூட்டில் வாழ்கிற, கொடிக்குலம் - காக்கைக் கூட்டத்தை, கோகிலங்கள் - குயில்கள், பயிலுமோ - சிநேகிக்குமோ எ-று.

வடித்தல் - வசிகரித்தல், பகுதி வடி. கொடி - காக்கை. கோகிலம் - குயில். (கூகூ)

என்றினை யனபல விகழ்ந்து கூறலுந்
தன்றளர் முலையெனத் தலைவ ளைந்துதாழ்
புன்றொழி லன்னைதன் புந்தி வெந்துயர்
தின்றிட மகளிரைச் சீறிக் கூறுவாள்.

(இ - ள்.) என்று—, இனையன பல - இத்தன்மையவாகிய பலவற்றை, இகழ்ந்து கூறலும் - இகழ்ந்து சொல்லுதலும், தன் - தனது, தளர்முலையென - தளர்ந்த முலைகள்போல, தலைவளைந்து-தலைகுனிந்து, தாழ்-தாழ்ந்து, புன்தொழில் அன்னை - இழிதொழிலையுடைய தாயானவள், புந்தி-மனத்தை, வெம்துயர் தின்றிட - கொடிய துன்பமானது தின்ன, மகளிரை - தன் பெண்களை, சீறி - கோவித்து, கூறுவாள் - சொல்வாளாயினள் எ-று.

தளர்முலை - தொங்குமுலை. சீறல் - கோவித்தல், பகுதி சீறு. (சுஎ)

வந்தியு மாயிலேன் மக்கட் பேற்றிறைற்
சிந்தைநன் மகிழ்வு றாஉந் திருவு மாயிலேன்
முந்துநல் வினைப்பயன் முற்றி னோரலாற்
றந்ததம் புதல்வரா லுதவி சார்வரோ.

(இ - ள்.) வந்தியும் ஆயிலேன் - மலடியுமானேனல்லன், மக்கள் பேற்றினால் - மக்களைப் பெறுகையால், சிந்தை - மனமானது, நல்மகிழ்வு உறாஉம் - மிகு மகிழ்ச்சியை யடைதற்குரிய, திருவும் ஆயிலேன் - செல்வியுமானேனல்லன், முந்து - முற்பிறப்பிற்செய்த, நல்வினைப்பயன் - அறப்பயனை, முற்றினோர் அல்லால் - முற்றப்பெற்றோரல்லாமல், தந்த - தாம்பெற்ற, தம் புதல்வரால் - தம் மக்களால், உதவி சார்வரோ - உதவி பெறுவார்களோ எ-று.

வந்தி வந்த்யா என்னும் வடசொற்றிரிபு. சிந்தை சிந்தா என்னும் வடசொற்றிரிபு. நல்வினைப்பயன் - புண்ணியம். சார்வரோ வென்னு மோகாரம் எதிர்மறை. (சுஅ)

மந்திர மருந்துநன் மணிக ளாலிவர்
சிந்தையைத் தெளிவுறத் தெருட்டிக் காமமேற்
புந்தியை மீட்பவர் பொருட ராமலே
செந்திரு வனையவர்ச் சேர்க வென்றனள்.

(இ - ள்.) மந்திரம்—, மருந்து—, நல்மணிகளால்—, இவர் சிந்தையை - இவர்கள் மனத்தை, தெளிவுற தெருட்டி - தெளியத் தெளிவித்து, காம மேல் - காமமீது, புந்தியை - (இவர்களது) புத்தியை, மீட்பவர் - திருப்புவோர், பொருள் தராமலே - பொருள் கொடாமலே, செந்திரு அனையவர்ச் சேர்க - இலக்குமியை நிகர்த்தவராகிய இக் கன்னியரை, சேர்க-புணர்வாராக, என்றனள் - என்று சொன்னாள் எ-று.

தெருட்டல் - தெளிவித்தல், பகுதி தெருட்டு. (சுகூ)

அன்னைதன் கருத்தினை யறிந்து ஞானமாக்
கன்னிய ரென்றுதென் கயிலை காண்குது
மென்னவவ் வுழியிருந் தெண்ணி நைந்தனர்
பன்னக வாயிடைப் பட்ட தேரைபோல்.

(இ - ள்.) ஞானம் - பேரறிவையுடைய, மா - பெருமையுள்ள, கன்னியர்—, அன்னை கருத்தினை அறிந்து - தாயின் எண்ணத்தைத் தெரிந்துகொண்டு, தென்கயிலை - சீகாளத்தி யென்னுந் திருப்பதியை, என்று காண்குதும் என்று - எக்காலத்தில் தரிசிக்கப் போகிறோமென்று, அவ்வுழி இருந்து எண்ணி - அவ்விடத்திலேயிருந்து எண்ணமிட்டு, பன்னகவாயிடைபட்ட - பாம்பின்வாயி லகப்பட்ட, தேரைபோல் - தவளைபோல, நைந்தனர் - மனம் வருந்தினார்கள் எ-று.

தன் சாரியை. வடகயிலையென் றொன்றிருத்தலால் சீகாளத்தியைத் தென்கயிலை யென்றார். உழி எழனுருபு இடப்பொருளது. பன்னகம் பந்நகம் என்றும் வடசொற்றிரிபு. இதற்கு காலினால் நடவாதது என்பது பொருள். கன்னியர் சேனைபோல் நைந்தனர் என வியையும். (எ0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அனையதோர் காலத் தோதி யரிவையர் திருக்கா ளத்தி
நினைவொடு மீன்றாட் டப்பி நீங்குவா னிருந்த வாறு
வினைமிகு மிருவர் கள்வர் விளங்குற வறிந்திட் டன்னோர்
புனையிழை கவருஞ் சூழ்ச்சி யிதுவெனப் புந்தி செய்து.

(இ - ள்.) அனையது ஓர் காலத்து - அப்படிப்பட்ட வொருகாலத்தில், ஓதி அன்னவர் - ஞானமே யுருவெடுத்தாற் போன்ற அக் கன்னியர், திருக்காளத்தி நினைவொடும் - திருக்காளத்தியின்மீதே நினைவொடும், ஈன்றாள் தப்பி - தாயைவிட்டு, நீங்குவான் - நீங்க, இருந்தவாறு-இருந்த வரலாற்றை, வினைமிகும் - தமது காரியத்தில் கருத்து மிகுந்த, இருவர் கள்வர் - இரண்டு திருடர்கள், விளங்குற அறிந்திட்டு - நன்றாயறிந்துகொண்டு, அன்னோர் - அந்தக் கன்னியர், புனை - அணிந்திருக்கிற, இழை - ஆபரணங்களை, கவரும் - கவர்ந்துகொள்ளத் தகுந்த, சூழ்ச்சி - உபாயம், இது என-இதுவேயாமென்று, புந்திசெய்து - அறிவினால் ஆராய்ந்து எ-று.

ஓதி - ஞானம் (பேரறிவு). நீங்குவான் செயவென் வாய்பாட்டு வினையெச்சம். கவர்தல் - பறித்துக்கொள்ளல் (அபகரித்தல்). புந்திசெய்து ஒருசொல், ஆலோசித்து என்றபடி. (எக)

நான்மறை பரவு மீச னற்றவ வேடம் புக்குப்
பான்மறை விடமு மின்றீம் பழமறை புழுவுஞ் செய்ய
வூன்மறை தூண்டிற் பொன்னும் விலங்கின முயிர்செ குப்பான்
கான்மறை மறவ ரும்போற் கள்வர்தா மறைந்து சென்று.

(இ - ள்.) நான்மறை - சதுர்வேதங்களாலும், பரவும் - துதிக்கப்படுகிற, ஈசன் - ஈச்சுரனது, நல் - சிறந்த, தவவேடம் புக்கு - தவவேஷத்தைப் பூண்டு, பால்மறை விடமும் - பாலில் மறைந்திருக்கிற நஞ்சும், இன் தீ பழம் மறைபுழுவும் - மிக்க இனிமையுள்ள பழத்தில் மறைந்திருக்கிற புழுவும், செய்ய ஊன்மறை தூண்டில் பொன்னும் - செவந்த மாமிசத்தில் மறைந்திருக்கிற தூண்டிலிரும்பும், விலங்கினின்-மிருகங்களின், உயிர்செகுப்பான் - உயிரை வாங்கும்பொருட்டு, கான்மறை-காட்டில் மறைந்திருக்கிற, மறவரும் போல் - வேடரும்போல, கள்வர் மறைந்து சென்று - திருடர் மறைந்து போய் எ-று.

நான்மறை-நான்கு வேதங்கள். அவையாவன: இருக்குவேதம், யஜுர் வேதம், சாமவேதம், அதர்வணவேதம் என்பன. பொன் - கரும்பொன்

(இரும்பு). வெள்ளியை வெண்பொன் என்றும், பொன்னை செம்பொன் என்றும் பசும்பொன் என்றும் வழங்குவர். செகுத்தல் கொல்லுதல், பகுதி செகு. (எஉ)

கன்னிய ரமர்ந்த வில்லிற் காளத்தி காக்க நம்மை [போற்
யென்னுநன் மொழியோ டெய்த வாய்மொழி கேட்ட சேய்
பன்னரு முவகை பூத்துப் பசும்பொன் மாளிகையி னுய்த்துத்
தன்னிகர் சிறப்புச் செய்து தையலர் சாற்ற லுற்ருர்.

(இ - ள்.) கன்னியர் அமர்ந்த இல்லில் - கன்னியர் அமர்ந்திருக்கிற வீட்டில், காளத்தி - ஸ்ரீகாளத்தி நாதர், நம்மை - உங்களை, காக்க - காக்கக் கடவர், என்னும் - என்கிற, நல்மொழியோடு எய்த - நற்சொல்லோடு அடைய, ஆய்மொழிகேட்ட சேய்போல் - தாய்ச்சொல்லைக்கேட்ட குழந்தைபோல, பன் அரும் - சொல்லுதற் கரிதாகிய, உவகை பூத்து - மகிழ்வடைந்து, பசும் பொன் மாளிகையில் உய்த்து - பசும்பொன்னு லியன்ற மாளிகையிற் கொண்டுபோய், தன் நிகர் சிறப்புசெய்து - தனக்குத்தானே நிகராகிய சிறப் புச்செய்து, தையலர் - சன்னியர், சாற்றலுற்ருர் - சொல்லத் தொடங்கி ஞர் எ-று.

காளத்தி - ஆகுபெயர். பன்னுதல் - சொல்லுதல், பகுதி பன். உவகை - தொழிற்பெயர், பகுதி உவ. (எங)

யாண்டுளீர் யாண்டுச் செல்வீ ரடிகணீ ரியம்பு மென்ன
வேண்டுநர் வேண்டி யாங்கு விழைந்தருள் பரனி டங்கள்
காண்டர வுலகிற் சூழ்வோங் காளத்தி காணும் வேட்கை [ர்.
பூண்டனஞ் செல்கின் ரேமங் கென்றனர் பொருள்விழைந்தா

(இ - ள்.) யாண்டு உள்ளீர் - எங்கேயிருப்பவர், யாண்டுச் செல்வீர் - எங்கே போகின்றீர், அடிகள் நீர்-சுவாமிகளாகிய தேவரீர், இயம்பும் என்ன- சொல்லுமென்று கேட்க, வேண்டுநர் வேண்டியாங்கு - விரும்புவோர் விரும் பினபடியே, விழைந்தருள் - கருணைசெய் தருளுகின்ற, பரன் - சிவபெருமா னது, இடங்கள் - திருப்பதிகளை, காண்தர - சேவிக்க, உலகில் - உலகத் தில், சூழ்போய் - சுற்றிவந்து, காளத்தி-திருக்காளத்தித் தலத்தை, காணும் - தரிசிக்க வேண்டுமென்கிற, வேட்கை - விருப்பத்தை, பூண்டனம் - அடை ந்து, செல்கின்ரேம் - போகின்ரேம், என்றனர் - என்ருர்கள், பொருள் விழைந்தார் - பொருளை விரும்பினவர்கள் எ-று.

காண்டர-ஒரு சொல். பூண்டனம் முற்றெச்சம். விழைதல்-விரும்பு தல், பகுதி விழை. (எச)

என்றலு மடியில் வீழா யாங்களுங் கயிலை காண்பா
னின்றனெ மெமைநும் மோடு நீவிர்கொண் டேகு வீரே [ஞோர்
லொன்ருெரு கைம்மா றுண்டோ வுமக்கென வுரைப்ப வன்
னன்றென வுளங்க ளித்து ஞானமங் கையர்க்குச் சொல்வார்.

(இ - ள்.) என்றலும் - என்று சொல்லுதலும், அடியில் வீழா - திருவடியில் விழுந்து, யாங்களும் - நாங்களும், கயிலை - தென் கயிலாயத்தை, காண்பான் - தரிசித்தற் பொருட்டே, நின்றனம் - நிற்கிறோம், எம்மை - எங்களை, நும்மொடு - உம்முடனே, கொண்டு - அழைத்துக்கொண்டு, ஏகுவீரேல் - போவீர்களானால், ஒன்று - அதற்குப் பொருத்தமான, ஒரு கைம்மாறு உண்டோ - பிரதியுபகார முளதோ, உமக்கு - உங்களுக்கு, என உரைப்ப - என்றுசொல்ல, அன்னோர் - அவர்கள், நன்று என - நல்லதென்று, உள்ளம் கனிந்து - திருவுளமிரங்கி, ஞானம் - ஞானத்தையுடைய, மங்கையர்க்கு - அந்தக் கன்னியர்க்கு, சொல்வார் - சொல்வாராயினர் எ-று.

வீழா செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். காண்பான் - செயவென் வாய்பாட்டு வினையெச்சம். ஏகுவீரேல் என்பதில் ஏல் எனின் என்பதன் மரூஉ. (எரு)

கதிர்மணி விளக்க லாமற் கனல்கெழு மொருவி ளக்குப்
புதிதுறு மனையிற் சென்று புகினுமெய் வெதும்பி நீங்கு
மதிநுதன் மடவீர் புக்கு வருந்துநர் விழியி னன்றி
யெதிர்புன லறுசு ரத்தை யெங்ஙனங் கடக்க வல்லீர்.

(இ - ள்.) கதிர் - ஒளியுள்ள, மணிவிளக்கு அல்லாமல் - ரத்தினதீபமேயன்றி, கனல் கெழும் - நெருப்பினால் உண்டாக்கப்பட்ட, ஒரு விளக்கு - ஒரு தீபம், புதிது - நூதனமாக, உறு - பொருந்திய, மனையில் - வீட்டில், சென்று புகினும்-போய் நுழைந்தாலும், மெய்வெதும்பி-சரீரம் வெதுப்புற்று, நீங்கும் - ஒழியும், மதிநுதல் - சந்திரன்போன்ற நெற்றியையுடைய, மடவீர் - பெண்களே, புக்கு - நுழைந்து, வருந்துநர்-துன்பப்படுவோர்களுடைய, விழியினன்றி-கண்களில் அல்லாமல், எதிர் - எதிரிலுள்ள, புனல் அறு - நீர் அற்ற, சுரத்தை - பாலை நிலத்தை, எங்ஙனம் - எவ்வாறு, கடக்கவல்லீர் - தாண்ட வல்லீர் ஆவீர் எ-று.

மணி - மாணிக்கத்தைக் குறித்தது. மதி என்றது ஈண்டைக் கேற்ப பூர்வபக்ஷத்து அஷ்டமி சந்திரனைக் குறித்தது. மடவீர் - அண்மைவிளி. எங்ஙனம் கடக்கவல்லீர் என்ற வினா கடக்கவல்லீ ரல்லீரென எதிர்மறைப் பொருடந்து நின்றது. (எசு)

அன்றியு முலகங் கூறு மவமொழி தனையு நும்மை
முன்றவ மனைத்து மாற்றி முற்றிய பயனு னீன்றாள்
கன்றினை யிழந்த தாய்போற் கலங்குமென் பதையு மஞ்சி
நின்றன மின்னு மொன்று நிகழ்த்துவ துளது கேண்மின்.

(இ - ள்.) அன்றியும் - அல்லாமலும், உலகம் கூறும் - உலகத்தவர் சொல்லுகிற, அவமொழிதனையும் - பழிச்சொல்லையும், நும்மை - உங்களை, முன் - முற்காலத்தில், தவம் அனைத்தும் - தவம் முழுதும், ஆற்றி - செய்து,



கன்னியர் தவவேடங் கொண்டவர்களை வணங்கல்.

கன்னியர் தபசிகளை உபசரித்தல்.



முற்றிய - முடித்த, பயனால் ஈன்றாள் - பயனாலே பெற்றவள், கன்றினை இழந்த - கன்றையிழந்த, தாய்போல் - தாய்ப்பசுவைப்போல, கலங்கும் என்பதையும் - மனங் கலங்குமென்பதற்கும், அஞ்சி - பயந்து, நின்றனம் - நிற்கிறோம், இன்னும் - மேலும், ஒன்று - ஒரு செய்தியை, நிகழ்த்துவது உளது - சொல்ல வேண்டுவதுண்டு, கேண்மின் - அதனையுங் கேளுங்கள் எ-று.

உலகம் ஆகுபெயர். ஆற்றல்-செய்தல், பகுதி ஆற்று. ஈன்றாள் என்பதற்குப் பகுதி ஈன். என்பதை உருபு மயக்கம். நிகழ்த்தல் - சொல்லல், பகுதி நிகழ்த்து. (௭௭)

**காளத்தி காணப் பெற்ற கண்களே கண்களென்றுங்**
**காளத்தி நகரிற் சேருங் கால்களே கால்களென்றுங்**
**காளத்தி புகுங்கருத்தே கருத்தென்றுங் கயிலை நாமக்**
**காளத்தி புகழு நாவே நாவென்றுங் கற்றோர் சொல்வர்.**

**(இ - ள்.)** காளத்தி - காளத்தியை, காணப்பெற்ற - காணக்கிடைத்த, கண்களே கண்கள் - விழிகளே விழிகள், என்றும்—, காளத்தி - காளத்தியென்கிற, நகரிற்கு ஏகும் - நகரத்துக்குப்போகிற, கால்களே கால்கள் - பாதங்களே பாதங்கள், என்றும்—, காளத்தி - காளத்திக்கு, புகும் - போகவேண்டுமென்கிற, கருத்தே - எண்ணமே, கருத்து - எண்ணம், என்றும்—, கயிலைநாமம் காளத்தி - கயிலையென்னும் பேரையுடைய காளத்தியை, புகழும் - புகழ்கிற, நாவே - நாக்கே, நா என்றும்—, கற்றோர் சொல்வர் - அறிவுடையோர் சொல்வார்கள் எ-று.

காளத்தியென்றது சீகாளத்தியை. கயிலை - தென்கயிலை. (௭௮)

**நரவடிவொடுசென்றெய்த நண்ணுதென் கயிலைப் போக்கை**
**யொருவர்தம் மாடலின்க ணுரைப்பினுங் கயிலை சேர்வர்**
**விரவுதம் மாடலாலச் செலவினை விலக்கி னோரு**
**மிரவியு மதியும் வாணா ளிருப்பர்வெந் நிரய மெய்தி.**

**(இ - ள்.)** நரவடிவொடு - நரரூபத்துடன், சென்று - போய், எய்த - அடைய, நண்ணு - பொருந்துகின்ற, தென்கயிலைப் போக்கை - தென்கயிலாய யாத்திரையை, ஒருவர் - ஒருத்தர், தம் - தமது, ஆடலின்கண் - விளையாட்டில், உரைப்பினும் - சொன்னாலும், கயிலை சேர்வர் - கயிலாசபதவியை அடைவர், விரவு - பொருந்திய, தம் - தமது, ஆடலால் - விளையாட்டினால், அ - அந்த, செலவினை - யாத்திரையை, விலக்கினோரும் - தடுத்தவரும், இரவியும் - சூரியனும், மதியும் - சந்திரனும், வாணாள் - வாழும்நாள் வரையும், வெம் - கொடிய, நிரயம் எய்தி இருப்பர் - நரகத்தை அடைந்து இருப்பார்கள் எ-று.

வடிவு - உருவம். கயிலைபோக்கு - கயிலாய யாத்திரை. ஆடல்-விளையாட்டு. செலவு - யாத்திரை. இரவி - ரவி என்னும் வடசொற்றிரிபு. வாணாள் - வாழ்நாள் (ஆயுள்). (எக)

ஆதலா லன்னை மீர்நும் மணிகிளர் திருக்கா ளத்திக்
காதல்கூர் செலவிந் தெம்மாற் கடிந்திடப் படுவ தன்றென்
றோதினா ரவர்ம னத்தோ டுரைத்தில ரெனினு மச்சொன்
மாதரார் தமக்கு நன்கு வாய்மையா வாய்த்த வன்றே.

(இ - ள்.) ஆதலால் - ஆகையால், அன்னைமீர் - தாய்மாரே, நும்-உமது, அணிகிளர் - அழகுமிகுந்த, திருக்காளத்தி - திருக்காளத்திதலத்தின், காதல் கூர் - ஆசை மிகுந்த, செலவு - போக்கு, இந்து - இப்பொழுது - எம்மால் - எங்களால், கடிந்திடப்படுவது அன்று - தடுக்கப்படுவது அல்ல, என்று ஓதினார் - என்று சொன்னார்கள், அவர் மனத்தோடு - அவர்கள் தம் கருத்துடன், உரைத்திலர் எனினும் - சொல்லிலர் ஆயினும், அச்சொல்-அந்த வார்த்தை, மாதரார்தமக்கு - அந்த பெண்களுக்கு, நன்கு - நன்றாக, வாய்மையா - உண்மையாக, வாய்த்த - இருந்தன எ-று.

அன்று - ஏ அசை. கடிதல் - விலக்குதல். வாய்மை-உண்மை. (அ0)

அனையவர் மொழிகேட் டம்பொ னணியிழை மகளிர் முக்கட்
கனியினை யடையப் பெற்றாற் கதிரிளம் பரிதி முன்னர்ப்
பனிநிக ருடலம் யாது படினுமென் னுலக ரெல்லா [கொல்.
மினையரென் றிகழி லென்மற் றிகழ்ந்திலர் புகழ்ந்தா லென்

(இ - ள்.) செம்பொன் - செம்பொன்னாற் செய்யப்பட்ட, அணி - அழகாகிய - இழை - ஆபரணமணிந்த, மகளிர் - பெண்கள், அனையவர்மொழி கேட்டு - அவர்கள் சொன்ன சொல்லைக் கேட்டு, முக்கண்-மூன்று கண்களையுடைய, கனியினை - பழத்தை, அடையப்பெற்றால்-அடையப்பெறின், கதிர்-கிரணங்களையுடைய, இளம்பரிதி முன்னர் - பாலசூரியனுக்கெதிரே, பனிநிகர் - பனியை நிகர்த்த, உடலம் - உடம்பு, யாதுபடினும் - என்ன துன்பப் பட்டாலும், என் - என்ன, உலகர் எல்லாம் - உலகத்தாரெல்லாரும், இனையர் என்று - இத்தன்மையரென்று, இகழில் என்-இகழ்ந்தாலென்ன, இகழ்ந்திலர் - இகழாமல், புகழ்ந்தால் என் - புகழ்ந்தாலென்ன எ-று.

முக்கட்கனி யென்றது சிவபெருமானை. இவர் தம் அன்பருக்குக் கனிபோ லினியராத னோக்கிக் கனியெனப் பட்டார். இகழ்ந்திலர் முற்றெச்சம்.

எம்மையெவ் வகையி னானு மிறைவன்றென் கயிலை சேர்ப்பா
னும்மையின் றிரக்கின் றோமென் றுவரவ ரெதிரி றைஞ்ச
வம்மற வர்கணன் றென்னா வனையறி யாம லல்லில்
வம்மினெம் பின்ன ரென்றார் மகிழ்ந்துள மிருவர் தாமும்.

(இ - ள்.) எம்மை - எங்களை, எவ்வகையினானும் - எவ்விதத்திலாயினும், இறைவன்-சிவபெருமானது, தென்கயிலை-தென்கயிலாசத்தைச், சேர்ப்பான் - சேர்க்கும் பொருட்டு, உம்மை - உங்களை, இன்று - இப்பொழுது, இரக்கின்றோம் என்று - வேண்டுகின்றோ மென்று, அவர்-அந்தப் பெண்கள், அவரெதிர் - அவர்க்கெதிரே நின்று, இறைஞ்ச - வணங்க, அ - அந்த, மாவர்கள் - மாவர், நன்றென்று - நல்லதென்று, அன்னை அரியாமல் - தாய் அறியாதபடி, அல்லில் - இரவில், இருவரும் - கன்னியர்கள் இருவரும், உள மகிழ்ந்து - மனமகிழ்ச்சிகொண்டு, என்பின் - எனக்கு பின்னே, வம்மின் என்றார் - வாருங்களென்று சொன்னார்கள் எ-று.

தாம் - சாரியை. இன்னதற்கு இறைவன் என்னுமையால் எல்லாவற்றிற்கும் இறைவன் என்றாயிற்று. சேர்ப்பான் செய்யாவென் வாய்பாட்டு வினையெச்சம். இரத்தல் - பிரார்த்தித்தல், பகுதி இர். இன்று செய்யா வென் வாய்பாட்டு வினையெச்சம். அனை - அன்னை என்பதன் விகாரம். அல் - இராப்பொழுது. (அரு)

இருவர்த நிழலும் போன்ற விருவர்குற் றேவன் மாதர்
பொருவரும் வளஞ்சு மந்து போதரக் கள்வர் தம்பா
லரையிருள் யாமத் தெய்தி யதரிடை யிருகா தத்திற்
பரவையின் முகட்டெ ழுந்த பரிதிவா னவனைக் கண்டார்.

(இ - ள்.) இருவர் - இருவருடைய, நிழலும் - சாயையையும், போன்ற - ஒத்த, இருவர் - இருவராகிய, குற்றேவர் மாதர் - பணிவிடை செய்தற் குரிய பெண்கள், பொருவு அரு - ஒப்பு இல்லாத, வளம் சுமந்து - வளமான பொருள்களை தாங்கிக்கொண்டு, போதா - போகாநிற்க, கள்வர் - திருடர்கள், தம்பால் - தம்மிடத்து, அரையிருள் யாமத்து-இருளையுடைய நடுச்சாமத்து, எய்தி - வந்து, அதரிடை - வழியில், இருகாதத்தில்-இரண்டு காதத்தில், பரவையின் முகட்டு - கடலின் உச்சியில், எழுந்த - உதித்த, பரிதிவானவனை - சூரியபகவானை, கண்டார் - பார்த்தார்கள் எ-று.

பொருவு - ஒப்பு. அதர் - வழி. பரவை - கடல், இது தொழில் ஆகு பெயர். முகடு - உச்சி. (அஉ)

வெயின்முதி ரளவு மேகி வியன்பதி யொன்றிற் றங்கிக்
கயன்மலி விழியார் சின்னாள் செலவொரு கரகநீரால்
வயன்மலி செந்நெ லோங்கி வளர்வள நாடு கண்ணுற்
றயன்மலி தலங்க ளிற்புக் கமலனை வணங்கி யேகி.

(இ - ள்.) வெயில்முதிர் அளவும் - வெயில் முதிர்கிறவரைக்கும், ஏகி - போய், வியன் - விசாலமான, பதி ஒன்றில் தங்கி - ஒரு ஊரில் தங்கி, கயல் - சேல்மீன் போல, மலி - விளங்குகிற, விழியார் - கண்களையுடைய மாதர்கள், சின்னாள் செல்ல-சில நாட்கள் கழிய, ஒரு கரகநீரால்-ஒரு கமண்

டல நீரினால், வயல்மலி - வயல்களில் மிகுந்த, செந்நெல் ஓங்கிவளர் - செந்நெல் உயர்ந்து வளர்கிற, வளம்நாடு - வளமுள்ள தேசத்தை, கண்ணுற்று - கண்டு, அயல் - பக்கங்களில், மலி - மிகுந்திருக்கிற, தலங்களில் - திருப்பதிகளில், புகுந்து - பிரவேசித்து, அமலனை - சிவபிரானை, வணங்கி ஏகி - வணங்கிக்கொண்டு சென்று எ-று.

கண்ணுற்று-ஒருசொல், பகுதி கண்ணுறு. அமலன் - மலரஹிதன், இது வடசொல். (அச)

காவிரி யொழுகு வல்லி கால்களொண் கிளைய வற்றின்
மேவிய சிறுகால் காம்பு விளைவய றளிர்கள் போன்ற
பூவிரி யிளந்தண் சோலைப் புகழ்வள நாட்டி னுக்கோர்
கோவென விளங்கா நின்ற குடந்தைமா நகரங் கண்டார்.

(இ - ள்.) காவிரி - காவேரி நதியானது, ஒழுகுவல்லி - நீண்ட கொடியையும், கால்கள் - வாய்க்கால்கள், ஒள்கிளை - அழகிய கிளைக்கால்களையும், அவற்றின் - அவைகளின், மேவிய - உண்டாகிய, சிறுகால் - தென்றற் காற்றானது, காம்பு - காம்பு, விளை - பயிர் விளைகின்ற, வயல் - வயல்கள், தளிர்கள் - தளிர்களையும், போன்ற - ஒத்திருக்கிற, பூ - மலர்கள், விரி - விகசிக்கின்ற, இளந்தண்சோலை - இளமையும் குளிர்ச்சியும் உள்ள சோலைகள் சூழ்ந்த, புகழ் - கீர்த்திபெற்ற, வள - வளமாகிய, நாட்டினுக்கு - நாட்டுக்கு, ஓர் - ஒப்பற்ற, கோவென - அரசனைப்போல, விளங்காநின்ற - பிரகாசியாநின்ற, மா - பெருமைபொருந்திய, குடந்தை நகரம் - திருக்குடந்தை என்னும் நகரத்தை, கண்டார் - பார்த்தார்கள் எ-று.

கோ-அரசன் என்னும் பொருள் குறித்த ஓரெழுத்தொருமொழி. னகரச்சாரியை பெற்று கோன் எனவும் வழங்கும். குடந்தைமா நகரம் - கும்பகோணம். (அரு)

பன்னிரு பருவத் தோர்காற் பவந்தெறு கங்கை யெய்துந்
தன்னிகர் தடங்கோ றற்குச் சார்வினை யிலரே யாயும்
பொன்னனை யவர்தா மூழ்கிப் புராரியை யிடங்க டோறுஞ்
சென்னியின் வணங்கி வைகிச் சென்றனர் தில்லை நோக்கி.

(இ - ள்.) பன்னிரு பருவத்து - பன்னிரண்டு வருஷத்துக்கு, ஓர்கால் - ஒருதரம், பவம்தெறு - பிறவியை அழிக்கின்ற, கங்கை - கங்கா நதியானது, எய்துவ - அடைகின்ற, தன்னிகர் - தன்னைத்தானே நிகர்க்கின்ற, தடம் - ஓர் தடாகத்தை, கோறற்கு-கோலுதற்கு, சார்-பொருந்திய, வினை-தொழில், இலரே ஆயும் - இல்லாதவரே ஆகியும், பொன் அனையவர்-திருமகளை நிகர்த்தவராகிய அந்தப் பெண்கள், மூழ்கி - நீராடி, புராரியை - சிவபெருமானை, இடங்கள் தோறும் - எல்லா விடங்களிலும், சென்னியின்-தமது சிரசினால்,

வணங்கி - தொழுது, வைகி - தங்கியிருந்து, தில்லைநோக்கி - திருத்தில்லையை நோக்கி, சென்றனர் - போயினர் எ-று.

பருவம் - வருடம். பவம் - பிறவி, இது வடசொற்றிரிபு. கங்கை - கங்கா என்னும் வடசொற்றிரிபு. கோறற்கு - கொல்தற்கு எனப் பிரித்துக் கொள்க. புராரி --என்பதை புர அரி எனப் பிரித்து திரிபுரங்களுக்கு சத்துரு என பொருள் உரைத்துக்கொள்க. தாம் என்பது சாரியை. (அசு)

பிறைதவழ் மவுலி யெம்மான் பிறபதி களும்வ ணங்கி
மறுவறு மதிமு கத்து மங்கைநல் லவர டைந்து
குறைவறு பரமா னந்தக் கோதில்செந் தேன டிக்கப்
பெறுநக ரெல்லை யிற்றாழ்ந் தெய்தினர் பெரிது வந்து

(இ - ள்.) பிறை தவழ் - பிறை தவழாநின்ற, மவுலி - முடியையுடைய, எம்மான் - எம்பெருமானது, பிறபதிகளும் - வேறு தலங்களையும், வணங்கி - சேவித்து, மறுவறு - குற்றமற்ற, மதிமுகத்து - பூரணசந்திரனைப்போன்ற முகத்தினையுடைய, மங்கை நல்லவர் - அழகிய மாதர்கள், அடைந்து - சேர்ந்து, குறைவறு - குறைநீங்கிய, பரமானந்தம் - பேரின்பம், கோதில் - குற்றமற்ற, செந்தேன் - சிவபெருமானனவர், நடிக்கப்பெறு - நடனஞ்செய்யப் பெற்ற, நகர் - நகரத்தின், எல்லை - எல்லையில், பெரிதுவந்து - மிகவும் சந்தோஷித்து, தாழ்ந்து - வணங்கி, எய்தினர் - அவ்வீட்டிலிருந்தார்கள் எ-று.

பிறை என்றது ஒரு கலையாகிய சந்திரனை. மவுலி - மௌலி என்னும் வடசொற்றிரிபு. பிறைதவழ் மவுலி எம்மான் என்ற விசேடணத்தால் எம்மான் என்றது சிவபெருமானைக் குறித்தது. பரமானந்தம் வடசொல். இதனை பரமும் ஆனந்தமும் எனப் பிரித்து மேலான இன்பம் என பொருள் உரைத்துக் கொள்க. கோதில் நடிக்கப்பெறு என்னும் விசேடணங்களால் செந்தேன் என்றது சிவபெருமானை உணர்த்திற்று. நடித்தல் - நடனஞ் செய்தல். "மாற்றே னெனவந்த காலனை யோலமிட வார்த்த கோற்றேன்" என்றார் மணிவாசகரும். (அஎ)

வேலையிற் சுருதி யார்க்கும் வீதியை வலஞ்சூழ்ந்
தாலயத் தெதிர்வ ணங்கி யணிவலம் புரிவுற் றால
மூலநற் பொருளை யேத்தி மும்முறை வணங்கிச் சென்று
மாலயற் கரியா னாடு மன்றெதிர் சென்று புக்கார்.

(இ - ள்.) வேலையின் - கடல்போல, சுருதி - வேதங்கள், ஆர்க்கும் - முழங்குகின்ற, வீதியை - தெருவை, வலஞ்சூழ்ந்து - பிரதக்ஷணஞ் செய்து, எகி - சென்று, ஆலயத்து எதிர் - சன்னிதிக் கெதிரே நின்று, வணங்கி - தொழுது, அணி - அழகாக, வலம்புரிவுற்று-வலம் வந்து, ஆலமூலம்-கல்லாலின்கீழே எழுந்தருளி இருக்கிற, நல் - சிறந்த, பொருளை - வஸ்துவை, ஏத்தி - துதித்து, மும்முறை - மூன்றுதரம், வணங்கிச் சென்று - தொழுது

கொண்டேபோய், மால் அயற்கு - திருமாலுக்கும் பிரமனுக்கும், அரியான் - அருமையானவனாகிய சிவபெருமான், ஆடும் - நடிக்கின்ற, மன்று எதிர் சென்று - பொன்னம்பலத்திற் கெதிரே சென்று, புக்கார் - பிரவேசித்தார்கள் எ-று.

வேலை - வேலா என்னும் வடசொற்றிரிபு. சுருதி - ஸ்ருதி என்னும் வடசொற்றிரிபு. ஆர்த்தல் - முழங்குதல், பகுதி ஆர். ஆலயம் - வடசொல். ஆலம் - ஆலமரம். மூலம் - அடி. ஏத்தல் - துதித்தல். பகுதி ஏத்து. மன்று சாரியை. இது மாலயற்கரியானாடும் என்ற விசேடணத்தால் மன்று என்றது பொன்னம்பலத்தைக் குறித்தது. (அஅ)

### மேற்படி வேறு

சிறப்புலியுங் கோட்புலியுஞ் செழுமலர்தூ
யருச்சனையே செய்யா நின்ற
வறப்புலியுங் கண்டுகொளும் பெருமானைக்
கண்டுமிகு மன்பா லோடி
மறப்புலியி னதண்மருங்கி னசைத்தருளும்
பெருங்கருணை வள்ளால் யாங்கள்
பெறப்புலியூர் மன்றினடம் புரிந்தாயென்
றிறைஞ்சியுளம் பெரிது வந்தார்.

(இ - ள்.) சிறப்புலியும்—, கோட்புலியும்—, செழுமலர் தூய் - செழுமையாகிய மலர்களைத் தூவி, அருச்சனை செய்யாநின்ற - அர்ச்சியாணின்ற, அறப்புலியும்—, கண்டுகொளும் - தரிசிக்கிற, பெருமானை - சிவபெருமானை, கண்டு - தரிசித்து, மிகும் அன்பால் - மிக்க அன்பினாலே, ஓடி - விரைந்து சென்று, மறம் - கோபத்தையுடைய, புலியின் - புலியினது, அதள்-தோலை, மருங்கின் - இடையில், அசைத்தருளும் - கட்டியருளிய, பெருங்கருணைவள்ளால் - பெருங்கருணை வள்ளலே, யாங்கள் பெற - நாங்கள் அடையும் வண்ணம், புலியூர் - திருப்புலியூரிலுள்ள, மன்றில் - பொற்சபையில், நடம் புரிந்தாய் - நடனஞ்செய்தாய், என்று - என்று துதித்து, இறைஞ்சி - வணங்கி, பெரிது - மிகுதியாக, மனம் உவந்தார் - உள்ளம் மகிழ்ந்தார் எ-று.

சிறப்புலி - சிறப்புலி நாயனார். கோட்புலி - கோட்புலி நாயனார். அறப்புலி-வியாக்ரபாதர். மருங்கு-அரை. அசைத்தல் - கட்டுதல். வள்ளால் - ஆண்மைவிளி. புலியூர்-வியாக்ரபாதரால் பூசிக்கப்பெற்ற ஊர். மன்று - சபை, அது இவ்விடத்திற் கேற்ப பொற்சபையைக் குறித்தது. நடம்-வடசொற்றிரிபு. இதற்கு நடித்தல் என்பது பொருள். இதற்கு பகுதி நடி. புரிதல் - செய்தல், பகுதி புரி. உவத்தல்-மகிழ்தல், பகுதி உவ. (அகூ)

பெண்படைத்த வொருபாக னைந்தொழினா
டகவமுதம் பேணித் தாங்கள்
கண்படைத்த பயன்பெறக்கண் டுவந்துமீண்
டந்நகரிற் களித்துச் சின்னாள்
பண்படைத்த மொழிமடவா ரிருந்துசிவ
கங்கையினும் படிந்து மன்றில்
வண்படைத்த வரவணிவோற் றொழுதுகட
லாடுதற்கு வழிக்கொண் டாரால்.

(இ - ள்.) பெண்படைத்த - பெண்ணைக்கொண்டிருக்கிற, ஒரு பாகன் - ஒரு பாகத்தையுடையவனும், ஐந்தொழில் - ஐந்து தொழில்களையும், நாடகன் - தனக்கு விளையாட்டாக உடையவனும் ஆகிய, அமுதம் - அமிர்தவுருவாய் இருக்கின்ற சிவபெருமானை, பேணி - விரும்பி, தாங்கள் கண்படைத்த - தாங்கள் கண்படைத்ததினால் உண்டாகிய, பயன் - பயனை, பெற - அடையுமாறு, கண்டு - தரிசித்து, உவந்து - மகிழ்ந்து, மீண்டு - மீண்டுவந்து, அ - அந்த, நகரில் - நகரத்தில், சில்நாள் களித்து - சிலநாள் மனமகிழ்ந்து, பண்படைத்த - பண்போன்ற, மொழி - இன்சொல்லையுடைய, மடவார் - அந்தப் பெண்கள், இருந்து - தங்கி, சிவகங்கையெனும் - சிவகங்கை யெனும் தீர்த்தத்தினும், படிந்து - மூழ்கி, மன்றில் - பொற்சபையிலுள்ள, வண்படைத்த - வளம்பெற்றிருக்கிற, அர - சர்ப்பாபரணத்தை, அணிவோன் - தரிப்பவனாகிய சிவபெருமானை, தொழுது - வணங்கி, கடலாடுதற்கு - சமுத்திர ஸ்நாநஞ் செய்வதற்கு, வழிக்கொண்டார் - பிரயாணப்பட்டார் எ-று.

ஆல் - அசை. பெண்படைத்த ஒரு பாகன் என்பது உமாதேவியாரைக் கொண்டிருக்கிற இடப்பாகத்தை யுடையவன். ஐந்தொழில் ஐந்தொழில்களாவன: சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்பன. என்றும் அழியாத நித்தியனாதலால் சிவபிரானை அமுதம் என்றார். பயன் - பிரயோசனம். பண்படைத்த - பண்போன்ற. படிதல் - மூழ்குதல், பகுதி படி. வழிக்கொண்டார் என்பதற்கு பிரயாணப்பட்டார் என்பது பொருள். (கூ0)

இந்திரனை யஞ்சிமுனம் புக்கொளித்துக்
கிடந்தமலை யிருஞ்சுறமீன்
வந்தருகு முட்புதைய வடிப்பமக
பதிவயிர வாட்டாக் கென்று
சிந்தைகவல் வுறவெழுந்து செந்துகிர்கண்
டுதிரமெனத் தியங்கி மூழ்கு
முந்துதிரை வாரிதிகண் டதின்மூழ்கி
மகளிர்மகிழ் வுற்று மீண்டு,

(இ - ள்) முனம் - முற்காலத்தில், இந்திரனை அஞ்சி - இந்திரனுக்குப் பயந்து, புக்கு - போய், ஒளித்து கிடந்து - மறைந்து கிடந்த, மலை - மலை, இரு - பெரிய, சுராமீன் - சுராமீன், அருகு வந்து - சமீபத்தில் வந்து, மூள் - மூள்ளானது, புதைய - அழுந்தும்படி, அடிப்ப - தாக்க, மகபதி - இந்திரனது, வயிரவாள் - வஜ்ஜிராயுதத்தின், தாக்கு என்று - அடியென்று, சிந்தை கவல்வுற - மனம் வருந்த, எழுந்து - மேல்வந்து, செந்துகிர் கண்டு - பவளக் கொடிகளைக் கண்டு, உதிரமெனத் தியங்கி - ரத்தமென்று மயங்கி, மூழ்கும்-மீட்டும் நீரில் குளிக்கின்ற, உந்து - தள்ளப்பட்ட, திரை - அலைகளையுடைய, வாரிதி - சமுத்திரத்தை, கண்டு - நோக்கி, மூழ்கும் - குளிக்கின்ற, மகளிர் - பெண்கள், மீண்டு - மறுபடியும், மகிழ்வுற்று - களிப்பு மிகுந்து எ-று.

இந்திரனை - உருபு மயக்கம். மகபதி - யாகங்களுக்குத் தலைவன். தாக்கு - அடி. கவல்வுறல் - வருந்துதல், பகுதி கவல்வுறு. துகிர் - பவளம். வாரிதி - வடசொல் இதற்கு நீர் பெருக்கையுடையது என்பது பொருள். (கக)

தில்லைநகர் மணிமன்றத் தெம்பெருமான்
றனைமறித்துஞ் சென்று தாழ்ந்து
முல்லைநகை மடமாதர் தென்கயிலை
காணுமவா முந்த வப்பாற்
செல்லமிடை கருங்காட்டி னுடன்போது
கள்வரனர் செய்யா வண்ணந்
தொல்லைமறை புகழ்பரம னருளினாற்
பலர்வந்து சூழ்வ ரன்றே.

(இ - ள்.) தில்லைநகர் - தில்லைநகரத்தில் உள்ள, மணிமன்றத்து - ரத்தின சபையில் நடிக்கிற, எம்பெருமான்றனை-சிவபெருமானை, மறித்தும்-மீண்டும், சென்று தாழ்ந்து - போய் வணங்கி, முல்லை - அரும்புபோன்ற, நகை - பற்களையுடைய, மடமாதர் - அந்த இளம்பெண்கள், தென்கயிலை - தென் கயிலாயத்தை, காணும் - தரிசிக்கவேண்டுமென்கிற, அவா-ஆசையானது, முந்த-முற்பட, அப்பால்-அப்புறம், செல்லும்-போகின்ற, மிடை-நெருங்கின, கருங்காட்டில் - கரிய வனத்தில், உடன் - கூடவே, போது - வருகின்ற, கள்வர் - திருடர்கள், அனர் செய்யாவண்ணம்-துன்பம் செய்யாதபடி, தொல்லை - பழமையாகிய, மறை - வேதங்கள், புகழ் - புகழ்கின்ற, பரமன் - சிவபெருமானது, அருளினால் - கிருபையினால், பலர் - பலபேர், வந்து - வந்து, சூழ்வர்-வளைந்துகொள்வார், அன்று ஏ - அசை. எ-று.

மன்றம் - சபை. தாழ்தல் - வணங்குதல். முல்லை - ஆகுபெயர். பரமன் - வடசொற்றிரிபு. இதற்கு மேலானவன் என்பது பொருள். சூழ்தல் - வளைதல். (கஉ)

கங்குறொறுந் தங்குமிடங் களில்வந்து
மாதவராய்க் கலந்து சூழ்வன்
சங்கரனின் னணமாத ருட்பகைஞ
ராந்தவராற் றப்பி யேகி
மங்கையுமை தவம்புரியுங் காஞ்சிமா
நகரிறையை வணங்கி யேத்தித்
திங்கண்முடி யமர்ந்ததிருக் காளகிரி
கண்டுவந்து சென்று சேர்ந்தார்.

(இ - ள்.) கங்குல் தொறும் - இராக்காலங்கள் தோறும், தங்கும் இடங்களில் வந்து - தங்கியிருக்கு மிடங்களில் வந்து, மாதவர் ஆய் - பெரிய தபோதநராய், கலந்து சூழ்வன் - கலந்து வளைந்திருப்பன், சங்கரன் - சிவபெருமான், இன்னணம் - இந்தப்படியே, மாதர் - அந்தப் பெண்களுடைய, உட்பகைஞர் ஆம் - உட்பகைவர்களாகிய, தவரால் தப்பி ஏகி - தவசிகளுக்குத் தப்பிச் சென்று, மங்கை உமை - உமாதேவியானவள், தவம்புரியும் - தவம்செய்கிற, காஞ்சிமாநகர் இறையை - திருக்கச்சிமா நகரத் திறைவனை, வணங்கி ஏத்தி - தொழுது துதித்து, திங்கள் முடி அமர்ந்த - சந்திரன் சிகரத்தில் தங்குகிற, திருக்காளகிரி - திருக்காளகிரியை, கண்டு - தரிசித்து, உவந்து - மகிழ்ந்து, சென்று சேர்ந்தார் - போய்ச் சேர்ந்தார்கள் எ-று.

இன்னணம் - இன்னவண்ணம் என்பதன் விகாரம். சூழ்தல் - வளைதல், பகுதி சூழ். எக்காலத்தும் இளையவளா யிருத்தலால் உமாதேவியை மங்கை யென்றார். காளகிரி - வைரவக்கடவுள்மலை. காரிசைலம் காரிகரை எனப் பிறநூல்களிற் கூறப்படுவதும் இதுவே. காளன் காரி என்பன ஒருபொருட் சொற்கள். (கூ)

சுத்தமுட லுயிர்பெறச்செய் தருளுநதிப்
புனன்மூழ்கித் தூய நெஞ்சச்
சித்தகணந் தொழுதேத்து மருட்சித்தி
வடுகனடி சென்று தாழ்ந்து
புத்தியொடு முத்திதரு சிவலிங்கந்
தனைவணங்கிப் புறத்து வந்து
மெய்த்தவொரு புராணிகனை யத்தலத்தின்
பெருமையெலாம் வினவி நின்றார்.

(இ - ள்.) உடல் உயிர் - உடம்பும் உயிரும், சுத்தம்பெறச் செய்தருளும் - பரிசுத்தம்பெறச் செய்தருளுகின்ற, நதி - அந்த நதியின், புனல் - நீரில், மூழ்கி - குளித்து, தூய - பரிசுத்தமாகிய, நெஞ்சம் - மனத்தையுடைய, சித்தர்கணம் - சித்தர் கூட்டம், தொழுது ஏத்தும் - வணங்கித்

அருள் - கருணையுள்ள, சித்திவடுகன் - சித்திவடுகனது, அடி - திருவடியில், சென்று - சேர்ந்து, தாழ்ந்து - வணங்கி, புத்தியொடு - புக்தியொடு, முத்தி தரும் - முத்தியையும் கொடுக்கின்ற, சிவலிங்கந்தனை - சிவலிங்கத்தை, வணங்கி - தொழுது, புறத்துவந்து - வெளியேவந்து, மெய்த்த - உண்மையான, ஒரு புராணிகனை - ஒரு புராணபிரசாரகனை, அ - அந்த, தலத்தின் - தலத்தினது, பெருமையெலாம் - மேன்மை முழுதும், வினவி - வினாவி, நின்றார் - நின்றனர் எ-று.

புக்தி - இகலோக சௌக்யம். முக்தி - மோக்ஷப்ராப்தி. புராணிகன்- புராணப்ரசங்கி. (கஉ)

**கலிவிருத்தம்**

வினவி நின்ற விளங்கிழை மாதரை
மனம கிழ்ந்து மறையவ னோக்கியே
வனைத ரும்புக ழித்தல மான்மியந்
தனையி யம்புவல் யானெனச் சாற்றினான்.

(இ - ள்.) வினவி நின்ற - கேட்டுநின்ற, விளங்கிழை மாதரை - பிரகாசிக்கிற ஆபரணமணிந்த அந்தப் பெண்களை, மறையவன் - வேதியன், மனம் மகிழ்ந்து - மனமுவந்து, நோக்கி - பார்த்து, வனைதரும் - அலங்கரித்தற்குரிய, புகழ் - கீர்த்தியையுடைய, இத்தலம் - இந்தத் தலத்தினது, மான்மியம் - பெருமையை, யான் இயம்புவல் என-நான் சொல்வேனென்று, சாற்றினான் - சொல்லினான் எ-று.

வனைதரல் - அலங்கரித்தல், பகுதி வனைதா. மான்மியம் மஹாத்மியம் என்னும் வடசொற்றிரிபு. (கரு)

முன்ன ணைந்து முழுவலி வாலிதான்
றன்னி லிங்கமித் தண்கயத் தின்கரை
மன்னு றும்படி வைத்தருச் சித்தனன்
பன்ன ருந்துதி பாடின னாடினன்.

(இ - ள்) முழுவலி - பூர்ணபலத்தையுடைய, வாலி - வாலியானவன், முன் அணைந்து - முற்காலத்தில் வந்து, தன் இலிங்கம் - தனது இஷ்டலிங்கத்தை, இ - இந்த, தண் - குளிர்ச்சியையுடைய, கயத்தின்கரை - தடாகத்தின் கரையில், மன்னுறும்படி - நிலைபெற்றிருக்கும்படி, வைத்து - ஸ்தாபித்து, அருச்சித்தனன் - அர்ச்சனை செய்தான், (அன்றியும்) பன் அரு - சொல்லுதற்கரிய, துதிபாடினன் - தோத்திரங்களைப் பாடி, ஆடினன் - கூத்தாடினன் எ-று.

மன்னுறல் - நிலைபெறல், பகுதி மன்னுறு. பாடினன் - முற்றெச்சம். ஆடுதல் - கூத்தாடுதல், இது மனக்களிப்பின் மிகுதியாலென்க. "ஆடுகின்றிலை கூத்து" என்றார் மணிவாசகரும். (கசு)

முடித்த ருச்சனை முன்பெனப் பெட்டகத்
தெடுத்தி ருத்திட வெண்ணி யெடுத்தன
னடுத்த வத்த னசைந்தில னாதலாற்
பிடித்தெ டுத்தனன் பேர்த்திரு கையினும்.

(இ - ள்.) அருச்சனைமுடித்து - அர்ச்சனையைப் பூர்த்திசெய்து, முன்பு என - முன்போலவே, எடுத்து - தூக்கி, பெட்டகத்து வைத்திட எண்ணி - பெட்டியில் வைக்க நினைத்து, எடுத்தனன் - தூக்கினான், அடுத்த - சமீபத்திலுள்ள, அத்தன் - சிவலிங்கப்பெருமான், அசைந்திலன் ஆதலால் - அசைந்திலனாகையால், பேர்த்து - மீட்டு, இருகையினும் - இரண்டு கைகளாலும், பிடித்து எடுத்தனன் - பற்றியெடுத்தான் எ-று.

அடுத்த - ஆசிரயித்த எனினுமாம். பேர்த்து - அடியோடு பெயர்த்து எனினு மமையும். (கன)

பின்னு மெந்தை பெயர்ந்திலன் றன்னரு
டன்னை யன்றித் தனித்தோர் துரும்பையு
மன்னி நின்ற வளியு மசைக்கரி
தென்னி னம்பனை யாவ ரசைப்பவர்.

(இ - ள்.) பின்னும் - பிறகும், எந்தை - சிவலிங்கப்பெருமான், பெயர்ந்திலன் - நிலைபெயரா திருந்தனன், தன் - தனது, அருள் தன்னை அன்றி - அருளையல்லாமல், தனித்து - ஒன்றியாய், ஓர் துரும்பையும் - ஒரு திரணத்தையும், மன்னி நின்ற - நிலைத்துநின்ற, வளியும் - காற்றும், அசைக்க அரிதென்னின் - அசைக்கமாட்டாதெனின், நம்பனை - சிவலிங்கப் பெருமானை, அசைப்பவர் யாவர் - அசைக்கவல்லவர் எவர் எ-று.

எந்தை என் தந்தை யென்பதன் மரூஉ. தன் சாரியை. வளி-காற்று. யாவர் என்னும் வினா எதிர்மறையாய் ஒருவரும் இல்லையெனப் பொருள்பட்டு நின்றது. (கஅ)

கண்டு வாலி கலங்குபு வாலினாற்
றுண்ட நாண்மதி வேணியற் சுற்றினன்
கொண்டு காலிற் குனிந்துகை யூன்றிநின்
றண்ட கூட மளவு நிமிர்ந்தனன்.

(இ - ள்.) வாலி - வாலியானவன், கண்டு - பார்த்து, கலங்குபு - மனங் கலங்கி, வாலினால் - தன் வாலைக்கொண்டு, நாள் - புதிய, துண்டமதி - பிறை மதியை, வேணியன் - சடைமுடியிற்றரித்த சிவபெருமானை, சுற்றினன் - சுற்றி, காலிற்கொண்டு - காலினாற் பற்றிக்கொண்டு, குனிந்து - வளைந்து, கை ஊன்றி நின்று - கையை நிலத்திலூன்றி நின்று, அண்டகூடமளவும் - அண்டமுகட்டளவும், நிமிர்ந்தனன் - நிமிர்ந்து நின்றான் எ-று.

கலந்துபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வேணி - சடா பாரம். இது வடசொல். சுற்றினன் முற்றெச்சம். (கக)

இன்ன வாறிங் கெடுப்பவும் வந்திலன்
முன்ன மாது முலைத்தழும் புற்றருண்
மன்னன் மேனியில் வாற்றழும் புற்றது
பின்னர் வால்விட் டுயிர்த்திது பேசினன்.

(இ - ள்.) இன்னவாறு - இந்தப் பிரகாரம், இங்கு - இங்கே, எடுப்பவும் - தூக்கவும், வந்திலன் - வந்திலனாயினன், முன்னம் - முற்காலத்தில், மாது - உமாதேவியின், முலைத்தழும்பு உற்றருள் - முலைச்சுவடு பொருந்தின, மன்னன் - இறைவன், மேனியில் - திருமேனியில், மால் தழும்பு உற்றது - பெரிய சுவடு உண்டாயிற்று, பின்னர் - அதன் பிறகு, வாய்விட்டு - வாய்திறந்தலறி, உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, இது - இதனை, பேசினன் - சொல்லினன் எ-று.

மாது என்றது காமாக்ஷியம்மையை. உயிர்த்தல் - பெருமூச்செறிதல், பகுதி உயிர். (க00)

தரவு கொச்சகக்கலிப்பா

நீயே கருணை நினைந்துவந்தா லன்றியுனைப்
பேயேன் வலிதிற் பெறுதற் கெளியையோ
தாயேநின் மேனி தழும்புபடத் தீங்கிழைத்தேன்
தீயேனென் செய்வேனென் செய்வேனென் றுள்ளுடைந்து.

(இ - ள்.) நீயே - நீரே, கருணை நினைந்து - கிருபையால் திருவுளம் பற்றி, வந்தாலன்றி - எழுந்தருளினாலன்றி, உன்னை - தேவரீரை, பேயேன் - பேயினேன், வலிதின் - வலிமையாக, பெறுதற்கு - அடைதற்கு, எளியையோ - சுலபனோ, தாயே - அன்னையே, நின்மேனி - உன் திருமேனி மீது, தழும்புபட - வடுவுண்டாக, தீங்கு இழைத்தேன் - தீமை செய்தேன், தீயேன் - தீயனேன், என்செய்வேன் என்செய்வேன் - யாதுசெய்ய வல்லேன் யாதுசெய்ய வல்லேன், என்று - என்று வாயினாற் சொல்லி, உள் உடைந்து - மனமுடைந்து எ-று.

எளியையோ வென்னும் வினா எதிர்மறைப் பொருளது. (க0க)

ஆவா விளமகவை யன்னைகருங் காட்டுநடு
மேவா வருளால் விடுத்த தகைபோலக்
காவா தடியேனைக் கைவிட் டிவணிருந்தாய்
தேவாதி தேவயான் செய்த பிழையுளதோ.

(இ - ள்.) ஆவா - ஐயோ, இளமகவை - சிறுகுழந்தையை, அன்னை - தாயானவள், கருங்காட்டு நடு - கரிய காட்டினடுவில், மேவா - போய், அரு

ளால் - கிருபையினால், விடுத்த - விட்ட, தகைபோல - தன்மைபோல, காவாது - காப்பாற்றாமல், அடியேனை - தொண்டனேனை, கைவிட்டு - கை நழுவவிட்டு, இவண் இருந்தாய் - இங்கே யிருந்தாய், தேவாதிதேவ-தேவாதி தேவனே, யான்செய்த பிழை உளதோ - நான்செய்த குற்றம் ஏதாயினு முண்டோ எ-று.

மேவா செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். உளதோவென்னு மோகாரம் ஐயம். (க0உ)

என்னுயிர்நீ யென்றுணைநீ யென்னுடைய வாழ்வுநீ
என்னையுநீ யத்தனுநீ யாரிங் குறவெனக்குப்
பொன்னனைய வேணிப் பொருப்பே யருட்கடலே
நின்னை யலதாவி நில்லாது நில்லாதே.

(இ - ள்.) என் உயிர் நீ - என் பிராணன் நீ, என் துணை நீ - என் சகாயன் நீ, என்னுடைய வாழ்வு நீ - என் செல்வம் நீ, என்னையும் நீ - என் தாயும் நீ, அத்தனும் நீ - என் தந்தையும் நீ, இங்கு - இவ்வுலகில், உறவு - உறவாவார், எனக்குயார் - எனக்கு யாரிருக்கின்றனர், பொன் அனைய - பொன்னை நிகர்த்த, வேணி - சடாபாரத்தையுடைய, பொருப்பே - மலையே, அருள் கடலே - கருணைசமுத்ரமே, நின்னை அல்லது-உன்னையன்றி, ஆவி நில்லாது நில்லாது - என்னுயிர் நிற்காது நிற்காது எ-று.

என்னன்னை யெனற்பாலது என்னையென விகாரமாயிற்று. சலியாமை பற்றி பொருப்பேயென்றார். நில்லாது நில்லாது என்னு மடுக்கு உறுதிப் பொருட்டு. (க0௩)

என்று பலமுறையு மேத்தி யவனிரப்பக்
கொன்றை மலர்புனையுங் கூத்தப் பிரானெதிர்தா
னின்று மணிபுரையிந் நீர்த்தடத்தின் காட்டிருப்பை
நன்று மனம்விழைந்தோ நாமென் றிதுபுகன்றான்.

(இ - ள்.) என்று—, பலமுறையும் ஏத்தி - பலதரமும் துதித்து, அவன் இரப்ப - அவன் வேண்டிக்கொள்ள, கொன்றைமலர் புனையும் - கொன்றைப் பூமாலையைத் தரித்த, கூத்தப்பிரான் - நடராஜன், எதிர் நின்று - எதிரே நின்று, மணிபுரை - மணிபோன்ற, இ - இந்த, நீர்த்தடத்தின் காட்டு இருப்பை - நீர் நிறைந்த தடாகமுள்ள காட்டினிருப்பை, என்றும் - எப்பொழுதும், யாம் - நாம், மனம் விழைந்தோம் - விரும்பினோம், என்று இது புகன்றான் - என்றிதனைச் சொல்லினன் எ-று.

கொன்றைமலர் ஆகுபெயர். இருப்பு - இருத்தல். புகன்றான் என்ப தற்குப் பகுதி புகல். (க0௪)

உள்ளமதி லென்று முவந்திருந்து நின்பூசை
கொள்ளு மியல்பேங் குழைந்திடே லென்றுரைத்துத்
துள்ளு மிளமான் சுமந்ததிருக் கையுடைய
தெள்ளமுத மன்னன் சிவலிங்கத் துற்றொளித்தான்.

(இ - ள்.) உள்ளமதில் - இதயத்தில், என்றும் - எந்நாளும், உவந்திருந்து - மகிழ்ந்திருந்து, நின்பூசை - உன்பூசையை, கொள்ளும் - ஏற்றுக்கொள்ளுகிற, இயல்பேம் - இயற்கையையுடையேம், குழைந்திடேல் என்று - வருந்தாதே யென்று, உரைத்து - சொல்லி, துள்ளும் - துள்ளுகிற, இளமான் சுமந்த - மான்கன்றை யேந்தின, திருக்கையுடைய - திருக்கரத்தையுடைய, தெள் - தெளிவாகிய, அமுதம் அன்னன் - அமிர்தத்தை நிகர்த்தவன், சிவலிங்கத்து - சிவலிங்கத்தில், உற்று ஒளித்தான் - முற்றிலும் மறைந்துவிட்டான் எ-று.

உவத்தல் - மகிழ்தல், பகுதி உவ. குழைதல் - வருந்தல், பகுதி குழை. ஒளித்தல் - மறைதல், பகுதி ஒளி. (க0ௐ)

### கலித்துறை

கங்கை யாறுதன் முடிமிசைக் கரந்துகொண் டதிலோ
ரங்கை நீர்சொரி பவர்க்குமே லுலகினை யளிக்கும்
பொங்கு நீர்நசை யாளியத் தடங்கரை பொருந்தி
யங்கெ ழாவுள மறிந்தனன் வாலியென் பவனே.

(இ - ள்.) கங்கையாறு - கங்காநதியை, தன் முடிமிசை - தன் முடிமீது, கரந்துகொண்டு - மறைத்துக்கொண்டு, அதில் - அதன்கண், ஓர் அங்கை நீர் - ஒரு அங்கை நீரை, சொரிபவர்க்கு - பெய்வோர்க்கு, மேல் உலகத்தை அளிக்கும் - மேலான வுலகத்தைக் கொடுக்கிற, பொங்கும் - மிகுந்த, நீர் நசையாளி - நீர் விருப்பமுள்ளவன், அ - அந்த, தடம்கரை பொருந்தி - பெரிய கரையையடைந்து, அங்கு எழா - அங்கு நின்றும் எழாமைக்குக் காரணமாகிய, உள்ளம் - உள்ளக்கருத்தை, வாலியென்பவன்—, அறிந்துகொண்டான் - தெரிந்துகொண்டான் எ-று.

கரத்தல் - ஒளித்தல், பகுதி கர. மேலுலகு - விண்ணுலகு, முத்தியுலகு எனினுமாம். நசை - ஆசை. உள்ளம் - திருவுள்ளக்கிடை (கருத்து).

ஈச னென்னை விடுத்திவ ணிருந்தது இத் தடத்தி
னாசை யாலல தில்லையிதை யழிப்பலென் றதிர்த்துத்
தேசு லாமதி தவழ்பெருங் குடுமியஞ் சிலம்பொன்
றோசி லாமிகு வீரனங் கெடுத்தெறிந் திட்டான்.

(இ - ள்.) ஈசனார் - சிவலிங்கப் பெருமானவர், என்னை விடுத்து - என்னை விட்டு, இவண் இருந்தது - இவ்விடத்தே யிருந்தது, இத்தடத்தின்

ஆசையால் அல்லது - இவ்விடத்தின்மீதுள்ள விருப்பத்தாலன்றி, இல்லை - வேறில்லை, இதை - இதனை, அழிப்பல் என்று - அழித்துவிடுவேனென்று, அதிர்த்து - ஆரவாரஞ்செய்து, தேசு உலாம் - ஒளிபொருந்திய, மதி - சந்திரன், தவழ் - ஊர்கின்ற, பெருங்குடுமி-பெரிய சிகரத்தையுடைய, அம் சிலம்பு ஒன்று - அழகிய மலையொன்றினை, எசு இலா - பழிப்பற்ற, மிகுவீரன் - மிக்க வீரத்தன்மை யுள்ளவனாகிய வாலியானவன், அங்கு - அப்பொழுது, எடுத்து எறிந்திட்டான் - எடுத்து வீசினான் எ-று.

இத்தடம் - இம் மலையெனினு மமையும். அதிர்த்தல் - ஆரவாரித்தல், பகுதி அதிர். மதி - மதுவையுடையது. மது - அமிர்தம். (க0எ)

எடுத்து வாலியென் பவன்பெரு வலியினா லிட்ட
வடுக்கல் வீழ்தலுந் தடத்தினி லெழுந்தபே ரரவம்
பிடிக்கு மாறுபின் றொடர்ந்தென வெழுந்தொரு பிரமன்
படைக்கும் வான்முடி யளவுமுற் றனதுளி பலவும்.

(இ - ள்.) வாலி என்பவன்—, பெரு வலியினால் எடுத்து - மிக்க பலத்தினாலெடுத்து, இட்ட - எறிந்த, அடுக்கல் - மலையானது, வீழ்தலும் - வீழ்ந்தவுடன், தடத்தினில் எழுந்த - அத் தடாகத்தினின்று முண்டான, பேர் அரவம் - பெரிய ஓசையும், துளிபலவும் - பல துளிகளும், பிடிக்குமாறு - அதைத் தொடர்ந்து பிடிக்க, பின் தொடர்ந்தென - பின்பற்றிச் செல்வது போல, எழுந்து - மேலே கிளம்பி, ஒரு பிரமன் படைக்கும் - ஒப்பற்ற பிரமன் சிருட்டிக்கிற, வான்முகடு அளவும் - ஆகாய முகட்டளவும், உற்றன - அடைந்தன எ-று.

அரவம் - ரவம் என்னும் வடசொற்றிரிபு. (க0அ)

சென்று வான்மிசை நுண்டுளி யுடம்பெலாந் தெறிப்ப
நின்று வான்முகில் கீழுற நீர்சொரி கின்ற
தன்றி மேல்வரப் பெய்வது முளதுகொ லறியே
மென்று வானவ ரியாவரு மருண்டன ரிருந்து

(இ - ள்.) வான்மிசை சென்று - ஆகாயத்தின்மீது போய், நுண்துளி - சிறு துளிகள், உடம்பு எல்லாம் தெறிப்ப - சரீரமுழுதும் தெறிக்க, வான் முகில் நின்று - மேலான மேகங்கள் நின்று, கீழ் உற - கீழே விழும்படி, நீர் சொரிகின்ற தன்றி - நீரைப் பொழிவதே யல்லாமல், மேல்வர - மேலே வரும்படி, பெய்வதும் உளது கொல்-பெய்வது முண்டோ, அறியேம் என்று - யாம் அறிந்திலேமென்று, வானவர் இயாவரும்-தேவர்களெல்லாரும், இருந்து மருண்டனர் - இருந்து மயங்கினர் எ-று.

கொல் ஐயப்பொருளது. (க0க)

விலங்கு வீழ்ந்தன புட்பறந் தோடின விசும்பிற்
கலங்கி வீணையர் திசைதொறு மிரிந்தனர் கடிதி
னிலங்கு மாமணி யருவிகள் சிதறின வெங்குங்
குலுங்கு பாதப மலருதிர்ந் தனகுலை குலைந்தே.

(இ - ள்.) விலங்கு வீழ்ந்தன-மிருகங்கள் விழுந்தன, புள் பறந்து ஓடின- பறவைகள் பறந்தோடின, விசும்பில் - ஆகாயத்திலுள்ள, வீணையர் - கந்தருவர்கள், கலங்கி - மனங்கலங்கி, திசைதொறும் - திக்குகள்தோறும், கடிதின்- விரைவாக, இரிந்தனர் - ஓடினார்கள், அருவிகள் - அருவியாறுகள், இலங்கு - பிரகாசிக்கிற, மாமணி - பெரிய ரத்நங்களை, சிதறின - சிந்தின, எங்கும் - எவ்விடத்திலும், குலுங்கு - குலுங்குகிற, பாதபம் - மரங்களிலுள்ள, மலர் - புட்பங்கள், குலை குலைந்து - மிகவும் அசைந்து, உதிர்ந்தன - சிந்திப்போயின எ-று.

விசும்பு - ஆகாயம். இரிதல் - ஓடுதல், பகுதி இரி. கடிது - விரைவு. குலுங்கல் - மிக்கசைதல். பாதபம் வடசொற்றிரிபு. (கக0)

மருந்து மாமலை யுள்ளன சிதர்ந்திட மண்ணி
லரந்தை நோயினர் புண்ணினர் வடுவின ரவைதீர்ந்
தொருங்கு வாழ்ந்தனர் மரித்தவ ருயிர்பெறீஇ யுய்ந்தார்
வருந்து மூப்பினர் காளைய ராயினர் மன்னோ.

(இ - ள்.) மாமலை உள்ளன - அந்தப் பெரிய மலையிலுள்ளனவாகிய, மருந்து - மருந்துகள், சிதர்ந்திட - நசுங்கிப்போக, மண்ணில் - நிலத்திலுள்ள, அரந்தை நோயினர் - தொழுநோயினரும், புண்ணினர் - புண்ணுளர்கள், வடுவினர் - தழும்பாளர்கள், அவைதீர்ந்து - அவைகள் நீங்கப்பெற்று, ஒருங்கு வாழ்ந்தனர் - ஒருமிக்க வாழ்ந்திருந்தார்கள், மரித்தவர் - இறந்தவர்கள், உயிர் பெறீஇ - உயிர் பெற்று, உய்ந்தார் - பிழைத்தார்கள், வருந்தும் - வருந்துதற் கேதுவாகிய, மூப்பினர் - முதியர், காளையர் ஆயினர்-வாலிபராஞர்கள் எ-று.

மன் ஓ - அசைகள். ஓ அசை யெனக்கொண்டு, மன் மிகுதியாகவென் றுரைப்பினுமாம். அரந்தை - துன்பம். தொழுநோய் குட்டம் முதலாயின. மரித்தல்-இறத்தல், பகுதி - மரி. பெறீஇ சொல்லிசை யளபெடை, பகுதி பெறு. (கசக)

இனைய வாறது வீழ்தலும் வாலிமுன் னெடுத்த
புனிதன் வாழ்வதின் றெற்குமா நதியதாய்ப் பொங்கி
யனைய வாலிவெற் பிழைத்ததீங் கரசனுக் கறையு
நினைவி னேடல்போ லோடிய திரைந்துமுந் நீரில்.

(இ - ள்.) அது - அந்த மலையானது, இனையவாறு - இந்தப் பிரகாரமாக, வீழ்தலும் - விழுந்தவுடனே, வாலிமுன் எடுத்த - வாலியானவன்

முன்னே தூக்கின, புனிதன் - சிவலிங்கப்பெருமான், வாழ்வது - வீற்றிருப்பது, இன் - இனிய, தெற்கு - தெற்கே, மாநதியதாய் - பெரிய யாறாக, பொங்கி - மேலெழுந்து, அனையவாவி - அந்தத் தடாகமானது, வெற்பு இழைத்த - மலைசெய்த, தீங்கு - தீமையை, அரசனுக்கு அறையும் - அரசனுக்குச் சொல்லவேண்டுமென்கிற, நினைவின் - நினைவோடும், ஓடல் போல் - ஓடுதல்போல, முந்நீரில் - கடலிலே, இசைந்து ஓடியது - பொருந்தி யோடிற்று எ-று.

புனிதன் - பரிசுத்தன். இழைத்தல்-செய்தல், பகுதி இழை. அறைதல் - சொல்லல், பகுதி அறை. முந்நீர் - கடல். மூவகை நீரையுடையதாதலால் கடலை முந்நீர் என வழங்குவர். மூவகை நீர்களாவன: ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்பன. (கசஉ)

வாவி தூர்த்திடப் புகுந்தொரா றியற்றினன் வான்
பாவை பாதியன் றிருவரு ளுற்றிடப் பட்டான்
மேவு தீத்தொழில் வழியினு நன்மையாம் விளம்பிற்
றாவி னற்றொழில் வழியினுந் தீமைசார் தருமால்.

(இ - ள்.) வாவி - தடாகத்தை, தூர்த்திடப்புக்கு - தூர்க்கப் புகுந்து, அது - அதனை, ஓர் ஆறு இயற்றினன் - ஒரு நதியாகச் செய்தனன், வான் - மேலான, பாவைபாதியன் - உமாதேவிபங்கனது, திருவருள் உற்றிடப்படலால் - திருவருளையடையப் பெறுதலால், மேவு - பொருந்திய, தீத்தொழில் வழியினும் - தீச்செய்கை வழியினும், நன்மை ஆம் - நன்மையுண்டாகும், விளம்பில் - சொல்லுமிடத்தில், தாவு இல் - கெடுதலில்லாத, நல்தொழில் வழியினும் - நற்செய்கை மார்க்கத்திலும், தீமை சார்தரும் - கேடுண்டாகும் எ-று.

ஆல் - அசை. தூர்த்தல் - மூடுதல், பகுதி தூர். பாவை ஆகுபெயர். பாவைபாதியன் - சிவபெருமான். சார்தரும் என்பதற்குப் பகுதி சார்தா. ()

மண்டு நீர்த்தட மாறதாய் முற்றிய வண்ணங்
கண்டு வாலியெம் பிரான்கருத் திதுவெனிற் கருதிக்
கொண்டு நான்செய்வ தென்னென மனநிலை குலைவுற்
றண்டர் நாயகன் றனைப்பணிந் தேகினா னன்றே.

(இ - ள்.) அது - அவ்விடம், மண்டு - மிகுந்த, நீர்த்தடம் ஆய் - நீரையுடைய தடாகமாகி, முற்றியவண்ணம் கண்டு-முடிந்த விதத்தைப் பார்த்து, வாலி - வாலியானவன், எம்பிரான் - எம்பெருமானது, கருத்து - திருவுளம், இது எனின் - இதுவாயின், கருதிக்கொண்டு - எண்ணிக்கொண்டு, நான் செய்வது என் என-யான் செய்யத்தக்கது யாதென்று, மனநிலை குலைவுற்று -

மனநிலை கலங்கி, அண்டர் நாயகன் தன்னை - தேவநாயகனை, பணிந்து - வணங்கி, ஏகினன் - போயினன் எ-று.

அன்று ஏ மற்று அசைகள். முற்றல - முடிதல், பகுதி முற்று. என என்னும் வினை ஒன்று மில்லையென்னும் பொருளது. குலைவுற்று என்பதற்குப் பகுதி குலைவுறு. அண்டம் - விண்ணுலகம். அங்குள்ளார் அண்டர் (தேவர்). நாயகன் - தலைவன். நாயகன்றனை யென்பதில் தன் சாரியை பணிதல் - வணங்குதல், பகுதி வணங்கு. (கக௩)

இந்த நீர்முழு குநர்பவக் கடற்கரை யேறி
வந்து வீடடை குவருண்மை யுண்மையவ் வாலி
தந்த மாநதி யிதுபெரு மறையெலாந் தள்ளு
நிந்தை மாவினை மயற்குநீர் வடிவமா நெருப்பு.

(இ - ள்.) இந்த நீர் - இந்த நதியில், முழுகுநர் - மூழ்குவோர், பவக்கடல் கரை ஏறிவந்து - பிறவிக் கடற்கரையைத் தாண்டிவந்து, வீடு அடைகுவர் - முத்தி யடைவார், உண்மை - இது சத்தியம், உண்மை - இது சத்தியம், அவ் வாலி தந்த - அந்த வாலியினாலுண்டாக்கப்பட்ட, மாநதி இது - பெரிய நதி யாகிய இது, பெருமறை எல்லாம் - பெரிய வேதங்களெல்லாம், தள்ளும் - விலக்குகிற, நிந்தை - பழித்தற்குறிய, மாவினை - பெரிய தீச்செயல்களாகிய, மயற்கு - திரணத்திற்கு, நீர் வடிவம் ஆம் - நீருருவாகிய, நெருப்பு - நெருப்பாகும் எ-று.

நீர் ஆகுபெயர். பவம்-வடசொற்றிரிபு. மறையெலாம் தள்ளும் நிந்தை மாவினை யென்றது பாவத்தை. திரணம்-செத்தை, (துரும்பு - தூரல்). ()

வாலி நாதனைக் கண்டொரு நாளடி வணங்கி
னூலி னாலொழி வுரைத்திடப் படாதன நூறு
மூல மாகிய பாதக மாயினு முருக்கிச்
சூல பாணித னுலகடைந் தின்பமே துய்ப்பார்.

(இ - ள்.) வாலிநாதனை—, ஒரு நாள் கண்டு - ஒருதினம் தரிசித்து, அடிவணங்கின் - திருவடியை வணங்கினால், நூலினால் - நூல்களால், ஒழிவு - பிராயச்சித்தம், உரைத்திடப்படாதன - சொல்லப்படாதனவாகிய, நூறு - நூறென்னு மிலக்கத்தையுடைய, மூலமாகிய பாதகம் ஆயினும் - (பிறவிக்கு) காரணமாகிய பாவங்களாயினும், முருக்கி - கொன்று, சூலபாணி - சிவபெருமானது, உலகு - உலகத்தை, அடைந்து - சேர்ந்து, இன்பமே துய்ப்பார் - சுகத்தையே யநுபவிப்பார் எ-று.

நூல் - முதனூல் வழிநூல் சார்பு நூல் என்பன. (வேதமுதலிய நூல்கள்). பாதகம் - வடசொல் (பாவம்). முருக்கல் - கொல்லல், பகுதி முருக்கு. சூலபாணி-சூலப்படையைத் திருக்கரத்தி லேந்தினவன். துய்த்தல் - நுகர்தல், பகுதி துய். தன் - சாரியை. (கக௫)

கயிலை போலவிம் மலைமிசைக் கண்ணுதற் கடவுள்
சயில மாதொடு கணங்களேத் தெடுப்பவாழ் தருவன்
பயிலு மாதவர் சித்தர்வித் தியாதரர் பலரு
மயலி லாவிதன் மருங்குவிட் டகன்றிடார் மன்னோ.

(இ - ள்.) கண்ணுதற்கடவுள் - சிவபெருமான், கயிலைபோல - கயிலாயம்போல, இ - இந்த, மலைமிசை - மலைமீது, சயிலமாதொடு - உமாதேவியோடு, கணங்கள் - சிவகணங்கள், எத்தெடுப்ப-துதிக்கும்படி, வாழ்தருவன் - வீற்றிருப்பன், பயிலும் - நெருங்கின, மாதவர் - பெரிய தபோதனர், சித்தர்—, வித்தியாதரர்—, (ஆகிய) பலரும்—, மயல் இல் - குற்றமற்ற, ஆவி மருங்குவிட்டு - தடாகக்கரையைவிட்டு, அகன்றிடார் - நீங்கமாட்டார் எ-று.

கண்ணுதல் - நெற்றிக்கண்ணையுடையவன். கடவுள் - (தத்துவங்களெல்லாவற்றையும்) கடந்தவன். தத்துவாதீதன். சயிலம் - சைலம் என்னும் வடசொற்றிரிபு. கல்லானியன்றதென்பது இதன் பொருள். எத்தெடுப்ப என்றது ஒருசொல், பகுதி எத்தெடு. சித்தர் வித்தியாதரர் என்பன வடசொற்றிரிபுகள். மன் ஒ இரண்டும் அசைகள். (௧௪௭)

இத்த லத்தியல் பிதுவென வந்தண னியம்ப
நித்தி லத்திரு நகைமட வார்மன நெக்குக்
கைத்த லத்தலர் கொண்டடி வணங்கினர் கண்ணான்
முத்த லைப்படை யொருவனை யெதிர்ந்தவர் முறைபோல்.

(இ - ள்.) இ - இந்த, தலத்து இயல்பு - தலத்தின் பெருமை, இது என - இதுவாமென்று, அந்தணன் இயம்ப - வேதியன் சொல்ல, நித்திலம்-முத்துப்போன்ற, திரு - அழகாகிய, நகை - பல்லையுடைய, மடவார் - மாதர், மனம்நெக்கு - மனம் உருகி, கைத்தலத்து - (தமது) கரதலத்தில், அலர் கொண்டு - மலர்களைக் கொண்டு, அடிவணங்கினர் - திருவடியைப் பணிந்தார், கண்ணால் - கண்ணினால், முத்தலைப்படை - முத்தலைச் சூலத்தையுடைய, ஒருவனை-ஒப்பற்றவனாகிய சிவபெருமானை, எதிர்ந்தவர் முறைபோல்-எதிர்ந்தவரது தன்மைபோல எ-று.

இயல்பு ஈண்டுப் பெருமைப்பொருளது. அந்தணன் - அழகிய தட்பத்தினையுடையவன். நகை - ஆகுபெயர். நெக்கு என்பதற்குப் பகுதி நெகு.()

காலை யங்கதிற் பூட்டையங் கடமொன் றமிழ
மேலெ ழுந்துசெல் கின்றதோர் குடமென மேலை
வேலை வெங்கதி ரமிழ்ந்துற முழுமதி விண்ணின்
பாலெ ழுந்தது விரிகதி ருலகெலாம் பரப்பி.

(இ - ள்.) காலை - காலைப்பொழுதில், அதில் - அதன்கண், பூட்டையங் கடமொன்று—, அமிழ - முழுக, மேல் எழுந்து செல்கின்றது - மேலே

கிளம்பிப் போவதாகிய, ஓர் குடம் என - ஒரு குடம்போல,மேலைவேலை-மேற்றிசைக் கடலில், வெங்கதிர் - சூரியனானவன், அமிழ்ந்துற-முழுகிப்போக, முழுமதி - பூர்ணசந்திரன், விண்ணின்பால்-ஆகாயத்தினிடத்தில், விரிகதிர் - தன் விரிந்த கிரணங்களை, உலகு எல்லாம் பரப்பி - உலகமுழுதும் விரித்து, எழுந்தது - தோன்றிற்று எ-று.

பூட்டையங் கடமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. முழுமதி - நிறைமதி. பால் - ஏழனுருபு. (௧௧௯)

குளிர்செய் கின்றசெவ் வந்திமா லையைத்தலைக் கொண்டு
களிசெய் கங்குலம் பெண்வர வாலிமுன் கண்ட
வொளிசெய் நம்பனை யிறைஞ்சினர் சென்றக மொன்றிற்
றெளிசெய் நெஞ்சக மங்கையர் தங்கினர் சிறந்து.

**(இ - ள்)** குளிர்செய் - குளிர்ச்சியைச் செய்கிற, செவ்வந்திமாலையை—, தலைக்கொண்டு - சிரமேற்கொண்டு, களிசெய் - களிப்பை யுண்டாக்குகிற, கங்குல் அம் பெண்வர - இரவாகிய அழகிய பெண்வர, வாலி - வாலியான வன், முன் கண்ட - முன்னே கண்ட, ஒளிசெய்-ஒளியைச் செய்கிற, நம்பனை- சிவபெருமானை, இறைஞ்சினர் - வணங்கி, சென்று - போய், அகம் ஒன்றில்- ஒரு வீட்டில், தெளிசெய் நெஞ்சகம் - தெளிவையுடைய மனத்தினையுடைய வராகிய, மங்கையர் - மாதர், சிறந்து தங்கினர் - மேன்மையுடையவராய்த் தங்கினார் எ-று.

செவ்வந்திமாலை - செவ்வந்திமலர்மாலை. செவந்த அந்திப்பொழுதாகிய மாலைக்காலம் என் றிருபொருளுரைத்துக்கொள்க. தலைக்கொண்டு என்பதற்கும் சிரசிற்சூடி உச்சியிற்றாங்கி என் றிருவகைப்பொருள் விரிக்க. இறைஞ்சினர் முற்றெச்சம். (௧௨0)

திருந்து மாடக முகரியென் கின்றகட் செவியின்
விரிந்த வேலையம் படத்திடை யிருளெலாம் விழுங்கிப்
பொருந்து மாமணி யென்னவந் தெழுந்தது புட்க
ளருந்து வாரிச மலர்முக மலர்ந்திட வலரி.

**(இ - ள்.)** திருந்தும் - திருத்தமாகிய, ஆடகமுகரி என்கிற - பொன் முகரியென்று சொல்லப்படுகிற, கட்செவியின் - பாம்பினின்றும், விரிந்த - பரந்த, வேலையம் படத்திடை - கடலாகிய படத்தின்கண், இருள் எல்லாம் விழுங்கி - இருள் முழுதும் உண்டு, பொருந்தும்-பொருந்தியிருக்கிற, மாமணி யென்ன - மாணிக்கம்போல, புட்கள் அருந்து - வண்டுகள் தேனுண்டற் கிடமாகிய, வாரிசமலர் - தாமரை மலரானது, முகமலர்ந்திட - முகமலரும்படி, அலரி - சூரியன், வந்து எழுந்தது - வந்து தோன்றிற்று எ-று.

ஆடகம் ஹாடகம் என்னும் வடசொற்றிரிபு. பொன் என்னும் பொருளது. கட்செவி கண்ணே செவியாகவுடையது. வேலை வேலா என்னும்



சிவபெருமான் கோளக்கிப் பிள்ளையைக் காண்பித்தல்.

வடசொற்றிரிபு. மணியென்றது ஈண்டைக்கேற்ப மாணிக்கத்தைக் குறித்தது. வாரிசம் - வாரிஜம் என்னும் வடசொற்றிரிபு. இதற்கு நீரிற் பிறப்பதென்பது பொருள். (வாரி - நீர், ஜம் - பிறந்தது). (கஉக)

மாயை மாயிருள் கழிந்துநின் றிலகுகண் மாத
ராய காலையி லெழுந்துகா ளத்தியை யடுக்கு
நேய மோடுசென் றன்றொரு பதியிடை நின்று
போயி னார்மற்றை ஞான்றுதென் கயிலையைப் பொருந்த.

(இ - ள்.) மாயை - மாயையாகிய, மா இருள் - பெரிய அந்தகாரம், கழிந்து நின்று - ஒழிந்து நின்று, இலகு - விளங்குகிற, கண் - அறிவையுடைய, மாதர் - அந்தப் பெண்கள், ஆயகாலையில் - அந்தக்காலத்தில், எழுந்து—, காளத்தியை அடுக்கும் - காளத்தியை யடுக்கவேண்டுமென்கிற, நேயமோடு சென்று - ஆசையுடனே போய், அன்று - அன்றைக்கு, ஒரு பதியிடை நின்று - ஒரு ஊரில் தங்கி, மற்றை ஞான்று - மறுநாள், தென்கயிலையைப் பொருந்த - தென்கயிலாயத்தை நெருங்க, போயினார் - சென்றார்கள் எ-று.

நேயம் - நேசம். தென்கயிலை - காளத்தி. (கஉஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இனிநகர் குறுகிற் றப்பா லிலைநமக் கிடனிக் காட்டிற்
றனியத ரிடையிம் மாதர் தமையெலா முயிர்செ குத்துப்
புனையிழை கவர்து மென்று பொதிந்துமுன் வைத்த பொல்லா
நினைவினை வெளிப்ப டுத்து நின்றனர் தொடர்ந்த கள்வர்.

(இ - ள்.) இனி—, நகர் குறுகிற்று - நகர் சமீபித்தது, அப்பால் - அப்புறம், நமக்கு இடன் இல்லை - நமக்கு இடமில்லை, இ - இந்த, காட்டில் - காட்டின்கண், தனி அதர் இடையில் - தனிவழியில், மாதர் தமையெல்லாம் - பெண்களையெல்லாம், உயிர் செகுத்து - உயிரைக்கொன்று, புனை - அவர்கள் அணிந்திருக்கிற, இழை - ஆபரணங்களை, கவர்தும் என்று - கவர்வோமென்று, முன் - முன்பு, பொதிந்துவைத்த - சேமித்துவைத்த, பொல்லா நினைவினை - பொல்லாத நினைவை, வெளிப்படுத்து நின்றனர் - வெளியாக்கி நின்றார்கள், தொடர்ந்த கள்வர் - தொடர்ந்துவந்த திருடர்கள் எ-று.

குறுகல் - கிட்டல், பகுதி குறுகு. இடன் ஈற்றுப்போலி. அதர்-வழி. கவர்தல் - பறித்தல். (கஉஙு)

கொடியவர் நிலைகண் டுள்ளங் குலைகுலைந் திளையா ணம்மை
முடிவுசெய் வதனுக் கின்னோர் முயன்றன ரென்ன மூத்தாள்
கடிகமழ் மலர்த்தண் சோலைக் காளத்தி யண்ணல் காப்பவ்
விடுபவ னல்ல னெங்காய் வெருவனீ வெருவ லென்றாள்.

(இ - ள்.) கொடியவர் - கொடியோராகிய கள்வரது, நிலைகண்டு - நிலையை நோக்கி, இளையாள் - இளையவள், உள்ளம் குலை குலைந்து - மனம் நடுநடுங்கி, இன்னோர் - இவர்கள், நம்மை முடிவு செய்வதனுக்கு - நம்மைக் கொல்வதற்கு, முயன்றனர் என்ன - முயன்றார்களென்று சொல்ல, (கேட்ட) மூத்தாள் - மூத்தவள், கடிகமழ் - வாசனை வீசுகிற, தண் - குளிர்ச்சியை யுடைய, மலர் சோலை - பூஞ்சோலைகள் சூழ்ந்த, காளத்தி - திருக்காளத்தியி லெழுந்தருளியிருக்கிற, அண்ணல் - இறைவன், காப்பன் - காப்பாற்றுவன், விடுபவன் அல்லன் - கைவிடுவோ னல்லன், எங்காய்-எங்கையே, நீ வெருவல் வெருவல் என்றாள் - நீ அஞ்சாதை அஞ்சாதை யென்றாள் எ-று.

முடிவுசெய்தல் - முடித்தல் சொல்லுதல், பகுதி முடிவுசெய். முயன் றனர் என்பதற்குப் பகுதி முயல். எங்காய் அண்மைவிளி. என் தங் கையே யென்பது பொருள். (கஉச)

துணையிலை யென்று தீயர் துணிந்துசெல் பொழுதிற் றோன்றாத்
துணையெனுந் திருக்கா ளத்தித் தோன்றலைக் கண்ட நல்லார்
பணமலி யரவின் வாயிற் பட்டமென் றேரை போலக்
கணைபுரை கள்வர் கைப்பட் டிருப்பினுங் கவன்றா ரல்லர்.

(இ - ள்.) துணையில்லையென்று - உதவியில்லையென்று, தீயர் - கொடி யவர், துணிந்து - நிச்சயித்து, செல்பொழுதில் - போம்பொழுது, தோன்றாத் துணையென்னும் - தோன்றாத் துணையென்று சொல்லப்படுகிற, திருக்காளத் தித் தோன்றலைக்கண்ட-திருக்காளத்தி நாதரைக்கண்ட, நல்லார்-மாதர்கள், பணம்மலி - படத்தையுடைய, அரவின் வாயில்பட்ட - பாம்பின்வாயிலகப் பட்ட, மெல்தேரைபோல - மெல்லிய தேரைபோல, கணைபுரை - அம்பை நிகர்த்த, கள்வர்கைப்பட்டிருப்பினும் - திருடர்கையிற் சிக்கியிருந்தாலும், கவன்றார் அல்லர் - கவன்றிலர் எ-று.

தோன்றல் - பெரியோன். பணம் வடசொற்றிரிபு. அரவு - பாம்பு. அரா என்பது அர எனக் குறுகி உகரச்சாரியையேற்று அரவு என்றாயிற்று. தேரை - தவளை. கவன்றார் என்பதற்குப் பகுதி கவல். (கஉரு)

அரவின் வாய்த் தேரைதன்னை யகற்றிநின் றளிப்பான் போலக்
கரவரி னின்று நீக்கிக் கன்னியர் தம்மைக் காக்கத்
திருவுளங் கொண்டு மிக்க தென்கயி லாயத் தெம்மான் [றே.
விரைவொடு மலர்கொய் தொண்டர் வேடமுற் றடைந்தானன்

(இ - ள்.) அரவின்வாய் - பாம்பின்வாயிற் சிக்கின, தேரை தன்னை - தவளையை, அகற்றிநின்று - விடுவித்து நின்று, அளிப்பான்போல - காப் பாற்றுவோன் போல, கரவரில் நின்று நீக்கி - கள்வரினின்று விடுவித்து, கன்னியரை காக்க - கன்னியரைக் காப்பாற்றும் பொருட்டு, மிக்க திருவு

ளம் கொண்டு - மிகவும் திருவுளம்பற்றி, தென்கயிலாயத்து - தென்கயிலாயத்தி லெழுந்தருளியிருக்கிற, எம்மான்-எம்பெருமான், விரைவொடு - விரைவாக, மலர்கொய் - பூப்பறிக்கிற, தொண்டர் - அடியாருடைய, வேடம் உற்று - வேடந்தாங்கி, அடைந்தான் - எழுந்தருளினன் எ-று.

அன்று ஏ அசைகள். தேவை தன்னை யென்பதில் தன்னென்பதும், கன்னியர் தம்மை யென்பதில் தம்மென்பதும் சாரியைகள். திருவுளங் கொண்டு - நினைத்து. தென்கயிலாயம் - சீகாளத்தி. (கஉசு)

**கன்னியர் பொருள்வி ழைந்த கள்ளவே டத்த ரந்தக்**
**கன்னியர் தமைவி ழைந்த கள்ளவே டத்தற் கண்டு**
**கன்னியர் தம்மை விட்டுக் கதுமென விரிந்து போனார்**
**கன்னிய ரருகு வந்தான் கறைமிட றொளித்து நின்றான்.**

**(இ - ள்.)** கன்னியர் - கன்னியரது, பொருள்-திரவியத்தை, விழைந்த - இச்சித்த, கள்ள வேடத்தர் - திருட்டு வேடத்தையுடையவர், அந்த கன்னியரை விழைந்த - அந்தக் கன்னியரை யிச்சித்த, கள்ளவேடத்தர் - திருட்டு வேடத்தையுடையவர், கண்டு - பார்த்து, கன்னியர் தம்மைவிட்டு - கன்னியரைவிட்டு, கதுமென - விரைவாக, இரிந்துபோனார் - ஓடிப்போனார், (போதலும்) கறைமிடறு - விஷகண்டத்தை, ஒளித்து நின்றான் - மறைத்து நின்றவனாகிய சிவபெருமான், கன்னியர் அருகுவந்தான் - கன்னியர் சமீபத்தில் வந்தான் எ-று.

கள்ளவேடத்தர் இரண்டனுள் முன்னையது திருட்டுவேடர் என்றும், பின்னையது திருடர்வேடந் தாங்கினவர் என்றும் பொருள்படுமாறுய்த்துணர்க. இரிதல் - ஓடல், பகுதி இரி. கறை-நஞ்சு. மிடறு-கண்டம் (கழுத்து). ()

**மாதவ வடிவங் கொண்டு வந்தருள் வள்ள றன்னை**
**யாதுலர் நிதிய வைப்பை யெதிர்ந்தென வெதிர்ந்து போற்றிப்**
**பாதபங் கயமி றைஞ்சிப் பரிவொடு நிற்ப வையன்**
**கோதையீ ரெங்கு வந்தீர் கூறுமி னென்னச் சொல்வார்.**

**(இ - ள்.)** மாதவவடிவம் கொண்டு - மாதவவேடம் பூண்டு, வந்தருள் - எழுந்தருளின, வள்ளல்தன்னை-வள்ளலை, ஆதுலர் - வறியர், நிதிய வைப்பை- பொருட்புதையலை, எதிர்ந்தென - கண்டாற்போல, எதிர்ந்து - கண்டு, போற்றி - துதித்து, பாதபங்கயம் இறைஞ்சி - (அவரது) திருவடித் தாமரைமலரை வணங்கி, பரிவொடு நிற்ப-அன்புடனே நிற்க, ஐயன்-இறைவன், (கன்னியரை நோக்கி) கோதையீர் - கன்னியரே, எங்குவந்தீர்-எங்கே வந்தீர்கள், கூறுமின் என்ன - சொல்லுங்களென்று கேட்க, சொல்வார் - (கன்னியர்) சொல்வாராயினர் எ-று.

மாதவவடிவங் கொண்டுவந்தருள் வள்ளல் என்றது சிவபெருமானை. இவர்க்கு வள்ளன்மை யாதெனின், பெரும்பேறாகிய முத்தியை வழங்கல் என்க.

பங்கயம் பங்கஜம் என்னும் வடசொற்றிரிபு. இதற்குச் சேற்றிற் பிறப்ப தென்பது பொருள். (பங்கம் - சேறு, ஜம் - பிறப்பது). (கஉஅ)

**திங்கள்வெண் கண்ணி வேய்ந்த செஞ்சடைச் சிவன மர்ந்த**
**மங்குறோய் மதிலு டுத்த மதுரைமா நகர்வந் தின்னோர்**
**கங்கைசூ டிறைவன் வாழுங் காளத்தி நகரிற் சென்றே**
**யுங்களை விடுப்போ மென்னு வுறுதியா மொழி மொழிந்தார்.**

(இ - ள்.) திங்கள் - பாலசந்திரனாகிய, வெண்கண்ணிவேய்ந்த - வெள்ளிய மாலையைத் தரித்த, செஞ்சடை - செஞ்சடையையுடைய, சிவன் - சிவபெருமான், அமர்ந்த - எழுந்தருளியிருக்கிற, மங்குல்தோய் - மேகத்தைத் தீண்டுகிற, மதில் உடுத்த - மதில் சூழ்ந்த, மதுரைமாநகர் - மதுரைமாநகரத்தில், வந்து-பிறந்து, இன்னோர்-இன்னொரு, கங்கைசூடு-கங்கையைத் தரித்த, இறைவன் வாழும் - கடவுளானவன் வாழ்கின்ற, காளத்தி நகரில் சென்று - திருக்காளத்தி நகரத்திற்குப்போய், உங்களை விடுப்போம் என்னு - உங்களை விடுவோமென்று, உறுதிஆம் - உறுதியாகிய, மொழி - சொல்லை, மொழிந்தார்- சொன்னார் எ-று.

கண்ணி - மாலை. வேய்தல் - சூடுதல், பகுதி வேய். என்னு - செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (கஉகூ)

**ஆதலி னடிச்சி யேமன் னவருட னடைந்தே மிங்ஙன் [ப்**
**றீதிழைத் தெமைப்பொ லங்கொண் டேகிடச் செறிந்த காலை**
**பூதர வில்லிக் கன்பு பொருந்துநீ ரிவண்வந் தெய்தப்**
**போதலு மவர்ப யந்தே போயின ரைய வென்றார்.**

(இ - ள்.) ஆதலின் - ஆதலால், அடிச்சியேம் - அடியோம், அன்னவருடன் அடைந்தேம் - அவரோடு வந்தோம், இங்ஙன் - இவ்வாறு, தீது இழைத்து - தீமைசெய்து, எம்மை - எங்களை, பொலம்கொண்டு - பொன்னைக் கவர்ந்துகொண்டு, ஏகிட-போய்விட, செறிந்தகாலை - நெருங்கின காலத்தில், பூதரவில்லிக்கு - மலைவில்லிக்கு, அன்பு பொருந்தும் நீர் - அன்பு பூண்ட நீங்கள், இவண் - இவ்விடத்தை, வந்து எய்தபோதலும் - வந்தடையப் பெறுதலும், அவர் - அந்தக் கள்வர், பயந்து - அஞ்சி, போயினர் - போய்விட்டார்கள், ஐய - ஐயனே, என்றார் - என்று சொன்னார்கள் எ-று.

இழைத்தல் - செய்தல், பகுதி இழை. பொலம் - பொன். பூதரம் - மலை (பொன்மலை). வில்லி - வில்லுடையவன். (கங0)

**மாதர்சொல் வினவிக் கள்ள வடிவுடை வள்ள லாருங் [ைப்**
**கோதையீ ருமைக் காளத்தி கொணர்ந்துபோய் விடுது மென்**
**பாதபங் கயம்வ ருத்திப் பார்மக டவத்தி னாலே**
**யேதமி லவரைக் கொண்டே யேகின ரெம்பி ரானார்.**

(இ - ள்.) மாதர்சொல்-கன்னியர் சொல்லை, வினவி - கேட்டு, கள்ள வடிவு உடை - கள்ளவேடத்தையுடைய, வள்ளலாரும் - சிவபெருமானாரும், கோதை நீர் - பெண்களே, உம்மை - உங்களை, காளத்தி - திருக்காளத்தியில், கொணர்ந்துபோய் - கொண்டுபோய், விடுதும் என்று - விடுவோமென்று, பாதபங்கயம் வருத்தி - திருவடித்தாமரையை வருத்தி, பார்மகள் தவத்தினாலே - நிலமடந்தைசெய்த தவத்தினாலே, ஏதம் இல் - குற்றமில்லாத, அவரைக்கொண்டு - அவர்களையுடன் கொண்டு, எம்பிரானார் - எம்பெருமானார், ஏகினார் - சென்றார் எ-று.

வருத்தி - வருந்தச்செய்து (நோவச்செய்து). (கக௧)

அதரிடை யவர்ந டக்க வவ்வனத் தருக்க ளெல்லா
முதிருமன் புடையர் போல முகிழ்பெறு நகைய வாகித்
ததைமலர்க் கண்ணீர் மல்கத் தாழ்ந்துபூப் பதத்திற் பெய்து
மதகரி யுடைபு னைந்த வள்ளல்பா னின்ற வன்றே.

(இ - ள்.) அதர் இடை - வழியில், அவர்நடக்க - அவர் நடந்துசெல்ல, அவ்வனம் - அந்த வனத்திலுள்ள, தருக்கள் எல்லாம் - மரங்களெல்லாம், முதிரும் - மிகுந்த, அன்பு உடையர்போல - அன்புடையவர்போல, முகிழ் பெறு நகைய ஆகி - அரும்பாகிய சிரிப்புடையவாகி, ததை - நெருங்கிய, மலர் - மலர்களாகிய, கண் - கண்களினின்றும், நீர்மல்க - நீர் ததும்ப, தாழ்ந்து - வணங்கி, பூ - மலர்களை, பதத்தில் பெய்து - பாதத்தில் தூவி, மதகரி - மதயானையின், உடை புனைந்த-தோலைப் போர்த்த, வள்ளல் பால் - சிவபிரானிடத்தில், நின்ற - நின்றன எ-று.

அன்று ஏ அசைகள். அதர் - வழி. தரு வடசொல். நகை - சிரிப்பு. ததைதல் - நெருங்குதல், பகுதி ததை. கண்ணீர் - கள் நீர் எனவும் பிரியும், தேனாகிய நீர் என்பது பொருள். மல்கல் - நிறைதல், பகுதி மல்கு. பதம் வடசொற்றிரிபு. கால் என்பது பொருள். மதகரியுடை புனைந்த என்னும் விசேடணத்தால் வள்ளல் என்றது சிவபெருமானைக் குறித்தது. பால் - ஏழனுருபு. (கக௨)

கலிவிருத்தம்

புன்னை மாயவன் போன்றன பூத்தொளிர்
கன்னி கார மடுத்த கமலனை
மன்னு பூவை மகபதி யொத்தன
வென்னை யாளிறை செல்லு மிடத்திலே.

(இ - ள்.) வென்னை ஆள் - வெள்விடையையுடைய, இறை - இறைவன், செல்லும் இடத்தில் - போகுமிடத்தில், புன்னை - புன்னைமரங்கள், மாயவன் போன்றன - திருமாலை நிகர்த்தன, பூத்து ஒளிர் - மலர்ந்து விளங்குகிற, கன்

ணிகாரம் - கன்னிகாரமரங்கள், கமலனைகடுத்த-பிரமனை நிகர்த்தன, மன்னு-நிலைபெற்ற, பூவை - பூவைகள், மகபதி ஒத்தன-இந்திரனை நிகர்த்தன எ-று.

மாயைக்கு அதிதேவதை யாதலால் திருமாலை மாயவன் என்றார். கமலன் - பத்மாஸநத்திலிருப்பவன், இவன் பொன்னிறமுடையவனாதலால் கன்னிகாரங் கடுத்த என்றார். மகபதி - யாகங்களுக் கதிபனாதலால் இந்திரனுக்கு மகபதியெனப் பெயராயிற்று. மகம் - யாகம். பதி - தலைவன். இவன் கருநிறமுடையவன் என்றற்கு பூவை மகபதியொத்தன என்றார். பூவை - காக்கணம் பூ. வென்னை ஆள் - வெண்ணிறமுள்ள இடபம். ஆ எனற்பாலது னகரச்சாரியைபெற்று ஆன் என்றாயிற்று. (கஙஙு)

கரிய வின்குயில் காகள மார்த்தன
வரிய நல்மயி லாட வரிக்கணம்
பிரிய மோடிசை பெட்ப விசைத்தன
கரிய தாடைக் கடவுளைக் கண்டரோ.

(இ - ள்.) கரிய - நிறத்தாற் கரியவும், இன்-குரலால் இனியவுமாகிய, குயில் - குயில்கள், காகளம் ஆர்த்தன - காகளம் ஊதின, அரிய நல்மயில் ஆட - பச்சைநிறமிகுந்த மயில்கள் நடனஞ்செய்ய, அரிக்கணம் - வண்டுக் கூட்டம், பிரியமோடு - அன்போடு, பெட்ப - யாவரும் விரும்பும்படி, இசை இசைத்தன - இராகம் பாடின, கரிய தாடை - நீலகண்டத்தையுடைய, கடவுளை - தெய்வத்தை, கண்டு - பார்த்து எ-று.

காகளம் - ஊதுகொம்பு (எக்காளம்) அரி - வண்டு. கணம் வடசொற் றிரிபு. பிரியம் ப்ரியம் என்னும் வடசொற்றிரிபு. பெட்ப-பெட்பு என்னும் பெயரடியாகப் பிறந்த செயவென் வாய்பாட்டு வினையெச்சம். தாடை - கண்டம். கரியதாடை என்னும் விசேடணத்தால் கடவுள் என்றது சிவபிரானைக் குறித்தது. (கஙச)

நாவ லூர்வரு நம்பியோர் நாரிபா
லேவ வேகிய வெந்தை யிவணிரு
பூவை மாருடன் போந்தனன் காணெனாத்
தாவி லாக்கிளி தன்பெடைக் கோதுமால்.

(இ - ள்.) நாவலூர் - திருநாவலூரில், வரு - அவதரித்த, நம்பி - சுந்தரர், ஓர் நாரிபால் - ஒரு பெண்ணினிடத்திற்கு, ஏவ - அனுப்ப, ஏகிய - சென்ற, எந்தை - எமது தந்தையாகிய சிவபெருமான், இவண் - இவ்விடத்தில், இரு பூவைமாருடன் - இரண்டு பெண்களோடு கூடி, போந்தனன் என்னா - வந்தானென்று, தாவு இல்லா - கெடுதியில்லாத, கிளி - கிளியானது, தன்பெடைக்கு - தன் பெடைக்கிளிக்கு, ஓதும் - சொல்லும் எ-று.

நம்பி - சுகுணபூர்த்தியுள்ளவன். நாரி - வடசொல். எந்தை - என் தந்தை யென்பதன் மரூஉ. பூவைமார் - உவமை யாகுபெயர். காண் முன்னிலை யசையிடைச்சொல். பார்ப்பாயாக வென் றுரைத்தலுமாம். (கஙரு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மாந்தளி ரடிய தாக மற்றதன் வடுக்கண் மான [ட்டப்
வேந்தெழிற் கொங்கை கோங்கா விணைக்கரங் காந்தள் கா
பூந்துகிர் வண்ண வாடை புனைந்துபொற் புடைக்கான் மாது
தேந்துளி சிதறிப் பூத்தூய்ச் சிறப்பொடு பணிந்து நின்றாள்.

(இ - ள்.) மாந்தளிர் - மாந்தளிரானது, அடியதாக-கால்களாக, அதன் வடு - அதன் வடுவானது, கண்மான - கண்ணை நிகர்க்க, ஏந்து எழில் - அழகையுடைய, கோங்கு - கோங்கரும்பானது, கொங்கை ஆ - தனமாக, காந்தள் - காந்தள்மலர், இணைக்கரம் காட்ட - இரண்டு கையைக் காட்ட, பூ - அழகாகிய, துகிர் - பவளமாகிய, வண்ண ஆடை புனைந்து-அழகுள்ள ஆடையைத் தரித்து, பொற்பு உடை - அழகையுடைய, கானமாது - வனமாகிய பெண், தேம்துளி சிதறி - தேன் துளிகளைச் சிந்தி, பூ தூய் - மலர்களைத் தூவி, சிறப்பொடு - மேன்மையோடு, பணிந்து நின்றாள் - வணங்கி நின்றாள் எ-று.

அடியதாக என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. வடு - பிஞ்சு. கோங்கு - ஆகுபெயர். கரம் - வடசொல். புனைதல் - தரித்தல், பகுதி புனை. தூய் என்பதற்குப் பகுதி தூவு. பணிதல் - வணங்குதல், பகுதி பணி. (கஙசு)

வெள்ளில்பூங் கொன்றை யாத்தி விரைமலர் வேங்கைசேவால்
வள்ளிலை மருதி ரத்தி வாகைபுன் னாக நாவல்
கள்ளவிழ் மலர்க்கு ருந்து காசைபூங் கடம்பு கோளி
யுள்ளவவ் வனத்திற் சென்றே யொப்பிறென் கயிலைக் குற்றான்.

(இ - ள்.) வெள்ளில் - விளா, பூங்கொன்றை - அழகிய கொன்றை, —, விரைமலர் வேங்கை - மணமலர்களையுடைய வேங்கை, சே—, ஆல்—, வள் இலை மருது - வளவிய இலைகளையுடைய மருது, இரத்தி—, வாகை—, புன்னாகம்—, நாவல்—, கள் அவிழ் மலர்குருந்து - தேனேடு மலர்கிற குருந்து, காசை - காயா, பூ கடம்பு - மலர்களையுடைய கடம்பு, கோளி—, (ஆகிய யாவும்) உள்ள—, அ - அந்த, வனத்தில் சென்று - காட்டிற் போய், ஒப்பு இல் - நிகரில்லாத, தென் கயிலைக்கு - தென் கயிலையை, உற்றான் - அடைந்தான் எ-று.

சே - சேமரம். ஆல் - ஆலமரம். கோளி - பூவாது காய்க்கு மரம். ()

புரத்தய லடைந்தெம் பெம்மான் பொன்னனார் தம்மை நோ
வரக்கிரி யிதுவே வெள்ளி மலையது தூர்க்கை வெற்பு [க்கி
பருத்தவம் மலைதா னீலப் பருப்பத மணிநீ ராறு
தெரித்தபொன் முகரி யீது சிறந்திடு மயூர தீர்த்தம்.

(இ - ள்.) எம்பெம்மான் - எம்பெருமான், புரத்து அயல் அடைந்து - நகரத்தின் அயலிற் சேர்ந்து, பொன் அன்னார் தம்மைநோக்கி - அந்தப் பெண்களைப் பார்த்து, வரம் - மேன்மையுள்ள, கிரி இதுவே - இந்த மலையே, வெள்ளிமலை —, அது—, தூர்க்கை வெற்பு - தூர்க்கைமலை, பருத்த - பெருத்திருக்கிற, அம்மலைதான் - அந்த மலையே, நீலப்பருப்பதம் - நீலகிரி, மணி நீர் ஆறு - அழகிய நீரையுடைய இந்த யாறுனது, தெரித்த பொன்முகரி - முன்னே நான் சொன்ன பொன்முகரி யாறும், ஈது - இது, சிறந்திடும் - சிறந்த, மயூர தீர்த்தம் - மயில் தீர்த்தம் எ-று.

பொன் அன்னார் - திருமகளை நிகர்த்தவர். பொன்னனார் தம்மை யென்பதில் தாம் சாரியை. வரம் - வடசொல். கிரியென்பதும் அது. பருப்பதம் பர்வதம் என்னும் வடசொற்றிரிபு. (கா-அ)

**என்றுமற் றுளவுங் கூறி யிறைமறைந் தேக நின்று**
**பொன்றிகழ் மேனி யாரும் பொள்ளெனத் திசைக ணோக்கி**
**யின்றிவண் விடுத்துச் சென்றா ரிறையெனத் தெளிந்து சால**
**நன்றுநன் றெமக்கி ரங்கி நணுகிய தென்று நைந்தார்.**

(இ - ள்.) என்று—, மற்று உளவும் கூறி - மற்றுள்ளவற்றையுஞ் சொல்லி, இறை - இறைவர், மறைந்து ஏக - மறைந்துபோக, பொன் திகழ் - பொன்போல விளங்குகிற, மேனியாரும் - மேனியையுடையவராகிய பெண்களும், பொள்ளென - விரைவாக, திசைகள் நோக்கி - திக்குகளைப் பார்த்து, இன்று—, இவண் விடுத்துச்சென்றார் - இவ்விடத்தில் விட்டுப்போனவர், இறை என - இறைவரே யாமென்று, தெளிந்து - தேறி, எமக்கு - எங்களுக்கு, இரங்கி - இரக்கமடைந்து, நணுகியது - (இறைவர்) வந்தது, சால நன்று நன்று என்று - மிகவும் நன்று நன்றென்று, நைந்தார் - மனம் வருந்தினார்கள் எ-று.

இறை அருபெயர். பொன்திகழ் மேனியார் என்பதற்கு, பொன்போல விளங்குகிற காந்தியுள்ளவர் என்றும், திருமகள்போல விளங்குகிற வடிவுள்ளவர் என்றும், உரைத்துக்கொள்க. சென்றார் வினையாலணையும் பெயர். நணுகியது என்பதற்குப் பகுதி நணுகு. (காக)

**அமிழ்தினு மினிய மூவ ரருந்தமி ழுவந்த வெம்மான்**
**கமழ்குலை யரம்பை சூழிக் காளத்தி நகரி னின்று**
**தமிழசங் கமராய் வந்தார் தம்மருட் பெருக்கா லென்று**
**குமிழ்செறி தடங்க ணல்லார் குறைவிலா வியப்ப முற்றார்.**

(இ - ள்.) குமிழ் - குமிழம்பூவை நிகர்த்த நாசியை, செறி - அடர்க்கிற, தடம்கண் - பெருங் கண்களையுடைய, நல்லார் - பெண்கள், மூவர் - மூவர் அருளிச்செய்த, அமிழ்தினும் இனிய - அமிர்தத்தினும் இனிமையுள்ள,

அரு - அருமையாகிய, தமிழ் - தமிழ்ப்பாடல்களை, உவந்த - கேட்டு மகிழ்ந்த, எம்மான் - எம்பெருமான், கமழ் - பரிமளிக்கிற, குலை - குலையையுடைய, அரம்பை - வாழைக் கொல்லைகள், சூழ் - வளைந்த, இ - இந்த, காளத்தி நகரில் நின்று - திருக்காளத்தி நகரத்திலிருந்து, தம் - தமது, அருள் பெருக்கால் - கருணைமிகுதியால், தமிழ் சங்கமர் ஆய் - தமிழ்ச்சங்கம வடிவினையுடையராய், வந்தார் - எழுந்தருளினார், என்று - என்று சொல்லி, குறைவு இல்லா - மிகுந்த, வியப்பும் உற்றார் - ஆச்சரியத்தையும் அடைந்தார்கள் எ-று.

மூவர் என்றது அப்பர், சுந்தரர், சம்பந்தர் என்னுஞ் சமயாசாரியர் மூவரை. அப்பருக்குத் திருநாவுக்கரசர் என வேறொரு பெயருமுண்டு. இவரை வாகீசர் என்பர் வடநூலார். குமிழ் ஆகுபெயர். வியப்பு தொழிற் பெயர், பகுதி விய. (கசo)

மாமணி பெற்றி ழந்த வறிஞனு மமுதைக் கையாற்
பூமணிற் றவறி வீழ்த்த புந்தியில் லவனுந் தேனு
வேமமார் கற்ப கத்தை யெய்தியும் பயன்கொ ளாத [தார்.
தீமைகொள் பவரு மொத்தோ மென்றுபின் மனந்தெ ளிர்ந்

(இ - ள்.) மாமணி - பெருமையுள்ள சிந்தாமணியை, பெற்று - கிடைக்கப்பெற்று, இழந்த - இழந்துபோன, வறிஞனும் - தரித்திரனும், அமுதை - அமிர்தத்தை, கையால் - கையினால், பூமணில் - பூமியிலுள்ள மண்ணில், தவறி வீழ்த்த - தவறிக் கொட்டிவிட்ட, புந்தி இல்லவனும் - புத்தியில்லாதவனும், தேனு - காமதேனுவையும், ஏமம் ஆர் கற்பகத்தை - ஆதரவாகிய கற்பகத்தருவையும், எய்தியும் - பெற்றிருந்தும், பயன் - அவற்றினாலடைதற்குரிய பயனை, கொளாத - அடையாத, தீமை கொள்பவரும் - தீங்கையே யடைபவரையும், ஒத்தோம் என்று - நிகர்த்திருந்தோமென்று சொல்லி வருந்தி, பின் - பிறகு, மனம் தெளிந்தார் - மனந்தேறினார் எ-று.

வறிஞன் வறுமைப் பண்படியாகப் பிறந்த பெயர். புந்தி புத்தியென்னும் வடசொற்றிரிபு. (கசக)

அருட்பெரு வாரி யாய வண்ணலார் தாமிவ் வூரிற் [வென்
பொருட்பொருட் பெறவு ணர்த்திப் போயினர் நமக்கென் றாழ்
திருட்செறி மிடற்றோன் றம்முன் னெய்திய தெண்ணி யெண்ணி
மருட்கொடும் பிறவி நீக்கு மாறில்பொன் முகரி யுற்றார்.

(இ - ள்.) அருள்பெரு வாரி ஆய - அருட்பெருங் கடலாகிய, அண்ணலார் - சிவபெருமானார், இ ஊரில் - இந்த ஊரில், பொருள் பொருள்பெற - செல்வப்பொருளைப் பெறும்படி, உணர்த்தி - அறிவித்து, போயினர் - சென்றனர், நமக்கு - எமக்கு, தாழ்வு என் என்று - குறைவு யாதென்று

சொல்லிக்கொண்டு, இருள்செறி மிடற்றோன் - இருள் மிகுந்த கண்டத்தை யுடைய பரமசிவன், தம்முன் எய்தியது - தமக்கெதிரே யெழுந்தருளியதை, எண்ணி எண்ணி - நினைத்து நினைத்து, மருள் - மயக்கத்தைத் தருகிற, கொடும்பிறவி - கொடிய ஜந்ம பரம்பரையை, நீக்கும் - ஒழிக்கிற, மாறு இல் - ஒப்பில்லாத, பொன்முகரி உற்றார் - பொன்முகரி யாற்றை யடைந்தார்கள் எ-று.

வாரி - வடசொல். பொருட்பொருள் - செல்வப் பொருள். இருள் - விஷக்கறை. மிடறு - கண்டம். மாறு - ஒப்பு. (கசஉ)

சீதநீர் மூழ்கிப் பின்னர்த் திருவெண்ணீ றணிந்து சால
நாதர்கண் மணிபு னைந்து நவின்றிறை யஞ்செ ழுத்துங்
கோதிலந் தாதி தன்னைக் கொள்கையி னோதிச் சென்றார்
மாதொரு பாகன் றன்பான் மறிவிழி மடநல் லாரே.

(இ - ள்.) மறிவிழி - மானின் நோக்கம்போலும் நோக்கத்தையுடைய, மடநல்லார் - இளம்பெண்கள், சீதம் நீர் - குளிர்ச்சியையுடைய பொன்முகரி யாற்றின் நீரில், மூழ்கி - முழுகி, பின்னர் - பிறகு, திருவெண்ணீறு அணிந்து - திருவெண்ணீறு தரித்து, சால-மிகுதியாக, நாதர் கண்மணி - இறைவரது கண்மணியை, புனைந்து - பூண்டு, இறை - இறைவரது, அஞ்செழுத்தும் நவின்று - ஐந்தெழுத்தையு முச்சரித்து, கோது இல் - குற்றமற்ற, அந்தாதி தன்னை - அந்தாதியை, கொள்கையின் - முறைப்படியே, ஓதி - படித்து, மாது - உமாதேவியை, ஒரு பாகன்பால் - ஒரு பாகத்திலுடைய சிவபெருமானிடத்திற்கு, சென்றார் - போயினர் எ-று.

சீதம் - ஶீதம் என்னும் வடசொற்றிரிபு. நீர் - நீரம் என்னும் வடசொற்றிரிபு. நாதர்கண்மணி - உருத்திராக்கம். அஞ்செழுத்து - ஸ்ரீபஞ்சாக்ஷரம். அந்தாதி - கைலைபாதி காளத்திபாதி யந்தாதி. மறி - மான். ()

களிப்பொடு நகையி லார்க்குக் களிப்பொடு நகைவந் தெய்த
வுளத்திலா னந்த முற்றி யுடலொளி யுடன்வி ளங்கக்
களத்தினஞ் சுடைய வெம்மான் சந்நிதி கடித டைந்தா
ரளப்பரு மன்பி னாலே யாடினர் பாடி னாரால்.

(இ - ள்.) களிப்பொடு நகையில்லார்க்கு - மகிழ்வும் சிரிப்பு மில்லாதவர்க்கு, களிப்பொடுநகை வந்து எய்த - மகிழ்வும் சிரிப்பும்வந்து தோன்ற, உள்ளத்தில் - மனத்தில், ஆனந்தம் முற்றி - இன்ப மிகுந்து, உடல்-உடம்பு, ஒளியுடன் விளங்க - ஒளியுடனே பிரகாசிக்க, களத்தில் - கண்டத்தில், நஞ்சு உடைய - விடத்தையுடைய, எம்மான் - எம்பெருமானது, சந்நிதி-சந்நிதியை, கடிது அடைந்தார்-விரைவாயடைந்தார்கள், அளப்பு அரு - அளவிடற்கரிதாகிய, அன்பினாலே - பத்தியினால், ஆடினர் பாடினர்-ஆடிப்பாடினார்கள் எ-று.

ஆனந்தம் வடசொல். களம் வடசொற்றிரிபு. சக்தி வடசொற்றிரிபு. ஆல் - அசை. (க௪௪)

**அன்னவர் தமக்கவ் வண்ண லவ்விலிங் கத்தின கண்ணே**
**தன்னொரு பாக முற்ற சங்கரி யுடன்வி ளங்கி**
**யுன்னரு மொளியி ரண்டா வொன்றுபட் டிருக்கக் கண்டு**
**கன்னிய ரடைந்த வன்பை யிற்றெனக் கழற லாமோ.**

(**இ - ள்.**) அன்னவர் தமக்கு - அந்தக் கன்னியர்களுக்கு, அ - அந்த, அண்ணல் - சிவபெருமான், அ - அந்த, இலிங்கத்தின் கண்ணே - இலிங்கத்தினிடத்திற்றானே, தன் - தனது, ஒரு பாகம் உற்ற - ஒரு பாகத்தை யடைந்திருக்கிற, சங்கரியுடன் விளங்கி - உமாதேவியோடு விளங்கி, உன் அரு - நினைத்தற்கரிதாகிய, ஒளி இரண்டா - ஒளியிரண்டாய்த் தோன்றி, ஒன்றுபட்டிருக்கக் கண்டு-ஒருருவாயிருக்க நோக்கி, கன்னியர் - அந்தக் கன்னியர், அடைந்த அன்பை - அடைந்த பத்தியை, இற்று என - இத்தன்மைத்தென்று, கழறல் ஆமோ - சொல்லுதல் கூடுமோ எ-று.

பாகம் வடசொற்றிரிபு. பங்கு என்பது இதன் பொருள். சங்கரி - ஸங்கரி யென்னும் வடசொற்றிரிபு. இதற்கு ஆன்மகோடிகளுக்கு ஹிதம் செய்பவன். கழறலாமோ வென்னும் வினா எதிர்மறைப் பொருளது. (க௪௫)

**வையக முழுது முள்ள மாமணி யொளிக்கும் பச்சைத்**
**துய்யநன் மரக தத்தின் சோதியுள் ளெவைக்கு மேலாம் [த்**
**பொய்யில்கா ரணமாய்த் தோன்றும் புகலரும் வடிவை நோக்கி**
**தையல ரிருவ ருந்தாழ்ந் தெழுந்தொளி தன்முன் னின்றார்.**

(**இ - ள்.**) வையகம் முழுதும் உள்ள - உலகமுழுதிலு முள்ள, மா - பெருமையையுடைய, மணி ஒளிக்கும் - மாணிக்கத்தின் ஒளிக்கும், துய்ய-பரிசுத்தமான, நல் - அழகாகிய, பச்சை - பச்சைநிறமுள்ள, மரகதத்தின் - மரகதமணியின், சோதி உள்ள - ஒளியுள்ள, எவைக்கும் - எவற்றுக்கும், மேல் ஆம் - மேலாகிய, பொய் இல் - உண்மையாகிய, காரணமாய் - மூலமாகி, தோன்றும் - காணப்படுகிற, புகல் அரு-சொல்லுதற் கரிய, வடிவைநோக்கி-உருவத்தைப்பார்த்து, தையலர் இருவரும் - கன்னியர் இருவரும், தாழ்ந்து எழுந்து - வணங்கி யெழுந்து, ஒளிமுன் நின்றார் - அந்தச் சோதிக்கு எதிரில் நின்றனர் எ-று.

சோதி ஜ்யோதி என்னும் வடசொற்றிரிபு. தையலர் - கைபுனையப்பட்டவர். தாழ்ந்து என்பதற்குப் பகுதி தாழ். தன் - சாரியை. (க௪௬)

**நின்றிடு மணங்க ளுரை நிருமல னருளி னாலே**
**தன்றனி யொளியி னூடே தயங்கிடத் தானுட் கொண்டான்**
**பொன்றிகழ் மணியார் புள்ள புங்கவன் முதலோர் போற்றக்**
**கன்றணி கரத்தெம் மன்னைக் கன்மக ளுண வன்றே.**

(இ - ள்.) நின்றிடும் - நிற்கிற, அணங்கு அன்னாரை - தெய்வப் பெண்களை நிகர்த்த அந்தக் கன்னியரை, நிருமலன் - நிர்மலனாகிய சிவபிரான், அருளினாலே - தன் கருணையால், தன்-தனது, தனி-ஒப்பற்ற, ஒளியினூடே-ஒளிக்குள்ளே, தயங்கிட - விளங்கும்படி, தான் உட்கொண்டான் - தான் விழுங்கினன், பொன்திகழ்-திருமகள் விளங்குகிற, மணி-மணியைத் தரித்த, மார்பு உள்ள - மார்பையுடைய, புங்கவன் முதலோர் - விட்டுணு முதலாகிய தேவர்கள், போற்ற - வணங்காநிற்க, கன்று அணி-வளையலணிந்த, கரத்து-கையினையுடைய, எம் அன்னை - எமது தாயாகிய, கல்மகள் - மலைமகள், நாண - நாணும்படி எ-று.

அன்று ஏ அசைகள். நிருமலன் - நிர்மலன் என்னும் வடசொற்றிரிபு. இதற்கு மலரஹிதன் என்பது பொருள். பொன் அழகு எனினுமாம். மணி-கௌஸ்துபமணி. புங்கவன் - தேவன். பொன்றிகழ் மணிமார்புள்ள என்னும் விசேடணத்தால் திருமாலைக் குறித்தது. கல் - மலை. (கசஎ)

இறையொளி யுருவ டக்கி யிலிங்கநல் வடிவா யுற்றான்
பிறைநுதற் றைய லார்தம் பின்வருந் தாதி மார்கள்
கறைமிடற் றிறைவன் பாற்போங் கன்னியர் வந்தா ரில்லை
யுறைவிட மெங்கென் றெண்ணி யொய்யெனத் துருவி னாரால்.

(இ - ள்.) இறை - இறைவனானவன், ஒளி உரு அடக்கி-சோதியுருவை மறைத்து, நல் - அழகாகிய, இலிங்கவடிவாய் உற்றான் - சிவலிங்க ரூபத்தை யடைந்தான், பிறைநுதல்-பிறைபோலும் நெற்றியையுடைய, தையலார்பின் - அந்தக் கன்னியர்பின்னே வந்த, தாதிமார்கள் - தோழிகள், கறைமிடறு - விஷகண்டத்தையுடைய, இறைவன்பால் - இறைவனிடத்தே, போம் - சென்ற, கன்னியர் வந்தார் இல்லை - பெண்கள் வரவில்லை, உறைவிடம் - அவர்களிருக்குமிடம், எங்கு என்று எண்ணி - எங்கேயென்று நினைத்து, ஒய்யென - விரைவாக, துருவினார் - தேடினார்கள் எ-று.

அடக்கல் - மறைத்தல், பகுதி அடக்கு. கறை - விடம். மிடறு - கண்டம். பால் ஏழனுருபு. உறைதல்-வாழ்தல், பகுதி உறை. துருவல்-தேடல், பகுதி துருவு. (கசஅ)

ஈசனா ரிடமு நாடி யெங்கணு நாடி நாடிக்
காசணி யல்கு லாரைக் கண்டிலோ மெனக்க லங்கக்
கேசரத் தொலியன் னோர்கள் கிடைத்தனர் முத்தி நீவிர்
பாசம தகற்றி லிங்கம் பதிட்டியு மவர்கள் பேரால்.

(இ - ள்.) ஈசனார் இடமும் நாடி - இறைவரது இடத்திலும் தேடி, எங்கணும் நாடி நாடி - மற்றுள்ள எவ்விடத்தும் தேடித்தேடி, காசு அணி அல்குலாரை - கன்னியரை, கண்டிலோம் - கண்டோமில்லை, என - என்று, கலங்கி - மனநடுங்கி, கேசரத்து ஒலி - வண்டி னோசையானது, அன்னோர்

கள் - அந்தக் கன்னியர்கள், முத்திகிடைத்தனர் - முத்தியடைந்தார்கள், நீவிர் - நீங்கள், பாசம் அகற்று - பாசத்தை யொழிக்கிற, இலிங்கம் - சிவ லிங்கத்தை, அவர்கள்பேரால் - அந்தக் கன்னியர் பெயரினால், பதிட்டியும் - பிரதிஷ்டை செய்யுங்கள் எ-று.

காசு அணி அல்குலார் - மேகலாபரணத்தை யணிந்த நிதம்பத்தை யுடையவர். கேசரம் - வண்டு. பதிட்டித்தல் - ப்ரதிஷ்டை செய்தல். இது வடசொற்றிரிபு (தாபித்தல்). (கசக)

என்னவிண் வாணி கூற வெழின்மட வார்போ யுற்றுப்
பின்னிரண் டிலிங்க நாட்டிப் பெய்வளை யினர்பே ரிட்டார்
நன்னில வேந்த வென்று நவின்றுசங் கமரி ருப்ப
வந்நிலை யாத வன்றா னதிசய முடன்க ளித்தான்.

(இ - ள்.) என்ன - என்று, விண்வாணி கூற - ஆகாசவாணி சொல்ல, எழில் - அழகுள்ள, மடவார் போய் உற்று - தாதிப்பெண்கள் சென்றடைந்து, பின் - பிறகு, இரண்டு இலிங்கம் நாட்டி - இரண்டு லிங்கங்களைப் பிரதிஷ் டைசெய்து, பெய் வளையினர்பேர் இட்டார் - அந்தக் கன்னியர் பேரிட்டார் கள், நல் - நல்ல, நிலவேந்த என்று - நிலவுலகத் தரசனேயென்று, நவின்று - சொல்லி, சங்கமர் இருப்ப - சங்கமரானவர் இருத்தலும், அந்நிலை - அந்த நிலை மையில், யாதவன் - யாதவவேந்தன், அதிசயமுடன் களித்தான் - அதிசயத் தோடு களிப்பையு மடைந்தான் எ-று.

விண்வாணி=விண் - ஆகாயம். வாணி - சொல். பெய்வளையினர் - வளையலணிந்தவர். சங்கமர் - விடசங்கமர். (கருப)

ஒளிமணிப் பொலம்பூண் மார்ப னொப்பில்சங் கமரைத் தாழ்ந்
களிபெறு மடிக ளின்னு மடியனே னுய்யு மாற்றான் [திங்
முளிபுதற் சிலந்தி முன்ன முற்பிறப் புணர்த்து கென்னக்
களிபெறு மனத்தா னெற்றிக் கண்கரந் தவனி யம்பும்.

(இ - ள்.) ஒளி - பிரகாசத்தையுடைய, மணி - அரதநங்களிழைத்த, பொலம்பூண் - பொன்னுபரணமணிந்த, மார்பன் - மார்பினையுடையவனாகிய யாதவவேந்தன், ஒப்பு இல் - நிகரில்லாத, சங்கமரை தாழ்ந்து - விடசங்க மரை வணங்கி, இங்கு - இவ்வுலகில், அளிபெறும் அடிகள் - கருணைமிக்க சுவாமீ, இன்னும் - இன்னமும், அடியனேன் - அடியேன், உய்யும் ஆற்றான் - பிழைக்கும் வழியாக, முளிபுதல் - உலர்ந்த புதல்களிற் சஞ்சரிக்கிற, சிலந்தி முன்ன - சிலந்தி முதலாயினவற்றின், முற் பிறப்பு - முற் சநநத்தின் வர லாற்றை, உணர்த்துக என்ன - தெரிவிக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, நெற்றிக்கண் - நெற்றிக்கண்ணை, கரந்தவன் - மறைத்து வந்தவனாகிய விட சங்கமன், களிபெறு மனத்தான் - சந்தோஷ சித்தனாகி, இயம்பும் - சொல்ல லாயினன் எ-று.

பொலம் - பொன். மணி - நவரத்நங்கள். அளி - கருணை. உணர்த்துக என்ன எனற்பாலது உணர்த்துகென்ன வென நிலைமொழி யீற்றகரம் தொகுத்தல் பெற்றது. கரத்தல் - மறைத்தல், பகுதி கர. (ட

கலிவிருத்தம்

கோதையர் கதைநலங் கூறி னோமினி
யேதமி லுலண்டின்முற் கதையி யம்புதும்
யாதவ மனனமர்ந் தினிது கேளென
மாதவ வடிவருள் வள்ளல் கூறுவான்.

(இ - ள்.) மாதவவடிவு - மாதவவுருக்கொண்டு வந்த, அருள் வள்ளல் - அருட் கொடையாளியாகிய விடசங்கமன், கோதையர் - கன்னியரது, கதை நலம் - சரித்திரத்தின் நன்மையை, கூறினோம்-சொன்னோம், இனி—, ஏதம் இல் - குற்றமற்ற, உலண்டின் - சிலந்தியின், முற்கதை - பூர்வ சரித்ரத்தை, இயம்புதும் - சொல்லுவோம், யாதவ - யாதவ வேந்தனே, மனன் அமர்ந்து - மனமமைந்து, இனிது - நன்றாக, கேள் என - கேட்கக் கடவாயென்று, கூறுவான் - சொல்வானாயினன் எ-று.

உலண்டு - சிலந்தி. இதனை உலண்டம், கோற்புழு எனப் பிறபெயர்களாற் கூறலுமுண்டு. அருள்வள்ளல் - அருட்கொடையாளி. (விடசங்கமவுருக்கொண்டுவந்த சிவபெருமான்). (கஙஉ)

கன்னியர்ச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கஙச.

---

மதுரைப்பதியிலே, பரத்தையர் குலத்திலே, பெண்ணியற்கை முழுதும் அமைந்த **மாணிக்கவல்லி** யென்பவள் ஒருத்தி யிருந்தாள். அவள் அரசிளங் குமரரென்னும் குடங்களை அழகென்னும் கயிற்றாற் பூட்டி, அவர்கள் மனையினுள்ள பொக்கிஷசாலை யென்னும் கிணற்றிலே விடுத்து, பொருளென்னும் ஜலம் வற்றும்படி நாடோறும் முகந்து முகந்து, மிக்க பொருளீட்டி, வாழுநாளிலே, பூர்வ புண்ணிய முதிர்ச்சியால் கருப்பமுடையளாகி, திருமகளும் கலைமகளுமே சிவஞான மாதர்களாகி அவதரித்தாரெனவும், வேதாகமங்களே சிவஞானத்தை விளக்க ஓருருக்கொண்டு வந்தன எனவும், உலகினுள்ளோர் உவப்பவும், மன்மதனது செருக்கு அழியவும், இரண்டு புத்திரிகளைப் பெற்று, சந்தோஷ சாகரத்திலே மூழ்கி, சீராட்டி, முலைப்பாலூட்டி, பற்பல அணிகளைப் பூட்டி, தொட்டிலிலிட்டுத் தாலாட்டி, திருஷ்டிதோஷ மணுகா வண்ணம் இரண்டு கண்மணியும்போல வளர்த்து வந்தனள். அந்நாளிலே அப்புதல்வியர் பெண்ணிலக்கண முழுது மமைந்து, இலக்குமியினும் பேரழகுடையராகி, மெள்ளக் கவிழ்ந்து, நிலத்திலிருந்து, தவழ்ந்து, நடந்து, ஓடி, பிள்ளைப் பிறைபோல நாளுக்குநாள் வளர்ந்து, பேதைப்பருவங் கடந்து, பெதும்பைப்பருவ முடையராகி, பற்பல கலைகளையும் கற்கும் நிலைமையையடைய, அதைக் கண்ட **மாணிக்கவல்லி** மனங்களித்து, தமக்குரிய கலவித்தொழில்களை அவரறிந்து கற்கும் உபாயத்தை உள்ளே சிந்தித்து, விரகமிகுதற் கேதுவாகிய சிற்சில லீலைகளை மாடமுழுமையும் சித்திரித்தும், போகவோசை பயிற்றுகின்ற மயில்முதலிய பறவைகளையும் யாழ்முதலிய கருவிகளையும் மிகச் சேகரித்தும், சூரியனிடத்திலே இருளைப் பழகுவித்தல்போல அவர்களுக்கு காமக் கல்விகளையும் கானத் திறங்களையும் கற்பித்தனள்.

அவள் இவ்வாறு மிக முயன்று கற்பித்தும், அவர்கள் உள்ளத்திலே சிவபிரான் வெளிப்பட்டு நின்று **சிவாகமங்களென்னும் அபரஞான** உணர்ச்சியையும், பந்தபாசத்தைப் பற்றறக்களையும் அநுபவமாகியுள்ள **பரஞான** உணர்ச்சியையும், தந்தளித்தலால், அவர்கள் வறிய காமத்திலே பயிலாது, **கரணங்களுக்கு** விஷயமாகிய யாவும் சிவமெனக் கண்டு, வேறு மாயாவிசித்திரத் தோற்றம் இல்லாதவராகி, இவ் வநுபவம் நிலைபெறுதற் பொருட்டு சிவனடியார்களைத் தேடித் தேடி, காணப்பெறின் துதித்துத் துதித்து, அவர்கள் திருவடிகளை சிரசிலே சூடிச்சூடி வணங்கும், தொண்டிலே மிகுந்தவ ராயினர். அன்றியும், வேட்கைக் குறிப்புகள் வஞ்சமொழிகள் பழிப்புச் சிந்தனைகள் பாவச்செயல்கள் முதலியவற்றுள்ளே ஒன்றும் பற்றாதவராகி, பெதும்பைப் பருவமடைந்த அக்காலத்திற்றானே, உலகவாக்கியங்களிலே ஊமையர்போலாகி **ஐந்திந்திரியங்களையும்** அடக்கிப் பேதையராகியும், சிவவாக்கியங்களை உச்சரித்தலில் நாமகள் போன்ற நல்வாக்குடையராய் ஆசை முதிர்ந்து பேரிளம் பெண்ணென ஒங்கியுமிருந்தனர். இங்ஙன மிருக்குங்கால், கடைச்சங்கத் தலைமைப் புலவராகியிருந்த **நக்கீரதேவநாயனார்** தென்கயிலையை யடைந்து, கைலைபாதி காளத்திபாதியாக ஞானவந்தாதி பாடியதையும், சீகாளத்தியப்

பரது சோதிசொரூபத்திற் கலந்ததையும் தொண்டராற் கேள்வியுற்று, பேரானந்தமுடையராய், நாடோறும் அந்த ஞானவந்தாதியைப் பாராயணஞ்செய்துகொண்டு, **நாகலிங்கப்பெருமானைக்** கண்ணிற்கண்ட **கன்னப்பநாயனார்** போலவே கேள்வியினாலேயே பூசல் புனைதல் உண்ணல் உடுத்தலாதிகளில் வெறுப்புடையராகி, காளத்தியைத் தரிசிக்கவேண்டுமென்னும் அவாவையே மேற்கொண்டிருந்தனர்.

அதுகண்ட **மாணிக்கவல்லி** மகளிரை நோக்கி, "பெண்களே, மழைபொழிந்த காலத்திலே விதைத்துப் பயன்கொள்ளும் உழவர்போலக் காளையர்கள்வந்து கவிகின்ற இளமைபெற்ற இக்காலத்திலே பொருள் பறியாது விடுத்தால் நுங்களுக்கு இளமைப்பருவம் பின்னர் வாய்க்குமா? கல்வியினாலும் கட்டழகினாலும் முதிர்ச்சியுடையராகி எக்காலம் பயன்படுவீரென்று காத்திருந்த எனக்கு, நீவிர் செய்யுமுதவி இவ்வளவுதானோ? பயன்படாத உங்களிடத்திலே பெண்ணிலக்கணமுற்றும் அமைந்திருத்தல் ஈகையில்லாதவனிடத்திலே பொன்னும், அவையையஞ்சுவோனிடத்திலே அரிய கல்வியும், வீரமற்ற பேடிகையிலே வேலும், வாய்த்திருத்தல் போலாம். நீவிர், இளமைப் பருவத்திலேயே என்பாலுதித்து எனது அழகு முழுமையுங் கெடுத்ததேயன்றி, உங்கள் பொருட்டுச் செலவிட்ட திரவியத்திற்கு உதவியொன்றும் புரிந்தீரில்லை. மணிமந்திர ஔஷதங்களாலும் பலவகை யந்திரங்களாலும் ஆடவரை மயக்கி அவர்பொருளைக் கவர்ந்தால் சிவபெருமானுக்கும் சிவனடியார்களுக்கும் உதவியாகாதா? அழகு சிறிதுமில்லாதவரும் அணி முதலியவற்றால் அலங்கரித்துக்கொண்டு தம்மை அழகுடையர்போலக் காட்டியும், பிழையில்லாத ஆடவரையும் பிழையுடையராக்கி பொய்யன்பு பாராட்டி உணவையொழிந்து அவர் பலமுறை வேண்ட இருந்தும், நாடகத்தாலும் நல்லிசைகளாலும் மயக்கியும், பொருளீட்டிக் களியாநிற்பர். நீவிர் எவற்றினும் சிறந்திருந்தும் இங்ஙனஞ்செய்து பொருளீட்டாது இளமையைக் கழித்துவிடின் மூப்பு முதிர்ந்தவழி உம்மை இளைஞர் விரும்புவரோ?" என்று இன்னனவாகிய தன் குலச்செயல்களை யுரைக்க; அவை யாவும் கவிழ்த்த குடமீது விடாதுபொழியும் மழைநீர்போலச் சிறிதும் நுழையாது புறங்கழிய நின்ற கன்னியருரைப்பாராயினர்.

"அன்னையே, மின்னல்போலத்தோன்றியழியும் இவ்வுடம்பை வளர்க்க விரும்பி கொடிய தீவினைகளை இயற்ற எமக்கிசைப்பது நினக்குத் தகுதியா? இப்பியிலுதித்த முத்தானது அந்த இப்பிக்கு ஒருதவியையும் புரியாது தம்மை அணியத்தக்கவர் மேனியை அடையும்; அதுபோலவே, நின்பாலுதித்த யாங்களும் நினக்கு ஒருதவியையும் புரியாது சிவபிரான் றிருமேனியிலே கலத்தலை யடைவேம்: பரமனையழைத்துத் தரும் பஞ்சாக்ஷரத்தை யுச்சரிக்கும் எங்களுடைய வாய் மனிதரை யழைத்துத்தரும் மந்திரங்களை மறந்தும் உச்சரியா: பற்பல அணிகளைச் சுமக்கினும் பாரமேயன்றிப் பயனுண்டோ? ஓர் உருத்திராக்கத்தை ஒருதினம் உடலிலணியில் வினையாவும் விட்டொழி

யுமே? கஸ்தூரி சந்தனமுதலிய கலவைகளைக் கலந்து கலந்து ஓய்வில்லாமல் உடலிற் புனைந்தாலும் சிறிது மலம் அகலுமோ? விபூதியை விரும்பியணியில் அம்மலம் யாவும் விளிந்தொழியுமோ? மிக்கவொளிபடைத்த தீபத்தையுடைய வீட்டிலே இருள் நுழையுமோ? அதுபோலவே, எம்பிரானிருக்கும் எங்களுள்ளத்தில் அறிவையொழிக்கும் காமநோயணுகுமா? தத்துவங்களுக்கு அதீதமாகிய தனியிடத்திலே விமலனைக் கலந்து மெய்ம்மை யின்பம் அனுபவித்த யாங்கள் மாண்டுபோகும் மனிதனைக் கலந்து பொய்ம்மை யின்பத்தைப் பொருளெனக் கொள்வமா? களிப்பை விளைக்கும் யானையை விரும்பி யேறுவோர் கழுதையையேற விரும்புவரோ? அதுபோல, **சிவதருமங்களை** மேற்கொண்ட யாங்கள் உம்முடைய குலதருமங்களை மேற்கொள்வமா? இம்மை மறுமை இன்பங்களைப் பயக்கும் எம்பெருமானை வழிபடும் யாங்கள் பொய்ம்மைப்பொருளை நாடி, புல்லியவரசனைப் புகழ்வமா? இளமையி லறங்களை இயற்றாது பொருளீட்டில் மூப்பு முதிர்ந்தக்கால் முறைப்படி அறங்களை இயற்ற முடியுமா? நீயே சொல்வாயாக. உண்டசுவை யமுதையும் உடனே மலமாக்குகின்ற உடலை வளர்க்கு நிமித்தம் தீயதொழில்களை யியற்றித்திரிதரும் மனிதர்களை மக்களுள்ளே பதரென்று மதிவல்லோர் கூறுவர். கணிகைமாதர்கள் உள்ளுறவில்லாமல் வெளியுறவுபாராட்டி செல்வமனைத்தையுங் கவர்ந்துகொண்டு நம்பிய ஆடவரை நரகத்து மிகுதலால் கள்ளரினும் கொடியவரே ஆவர். குயிலானது காக்கையோடு ஒரு கூட்டிலே கலந்திருப்பினும் அக்காக்கையின் செய்கையிலே பழகாததுபோல உம்மோடு யாங்கள் ஒருங்கிருப்பினும் உமது தொழிலிற் பயிலேம்: ஆகையால், எங்களை வசப்படுத்த நினைவை யின்றே மறப்பாயாக" என வற்புறுத்தினர்.

அது கேட்ட கொடிய தாய் மனம் புழுங்கி, மகளிரைச் சீறி, "யான் மலடியுமாயினேனில்லை: மக்களைப்பெற்று மகிழ்ச்சியுறும் சிறப்பையுமடைந்தேனில்லை. நல்வினை புரிந்தோரேயன்றி வினையோர் தம்புதல்வரா லுதவி பெறுவரோ"? என்று துக்கித்து, பின்பு "தியங்கிக் கிடக்கும் இவர்களுடைய சித்தத்தை மணிமந்திர ஔஷதங்களாலே தெளிவித்துக் காம இச்சையிலே திருப்புவோர் பொருள் கொடாமலே இவரை அனுபவிக்கக்கடவர்" என்று யாவர்க்கும் வெளிப்படுத்த; இதையறிந்த இருவரும் இவளை நீங்கி என்று **தென்கயிலையைத்** தரிசிக்கப் பெறுவோமென்னும் சிந்தனையோடு பாம்பின் வாய்ப்பட்ட தேரைபோல இருந்தனர். அக்காலத்திலே, இவர் கருத்தையறிந்த இரண்டு கள்வர்கள் இவரணிந்திருக்கும் ஆபரணங்களைக் கவரவேண்டுமென்னுங் கருத்துடையராய், பாலிலே மறைந்த நஞ்சுபோலவும் பழத்திலே மறைந்த புழுப்போலவும் தவவேடத்தை மேலேபூண்டு, தங்கள் நிலைமை வெளிப்படாவண்ணம் கன்னியர்களிருக்கும் இல்லத்திலே வந்து, "நம்மைக் காளத்திகாக்க" என்னும் மொழியோடு நுழைய; அக் கன்னியர்கள் தாய்மொழிகேட்ட சேய்போலப் பெருங்களிப்படைந்து வணங்கி, அவரையழைத்துச்சென்று, மிகவும் உபசரித்து, "சுவாமிகாள், நீவிர் எங்குள்ளீர்?

எங்குச் செல்கின்றீர்?'' என்று வினவினர். அக் கள்வர்கள் "யாங்கள் இஷ்ட சித்திகளைப் பாலிக்கும் எம்பெருமான் வீற்றிருக்கின்ற தலங்களையெல்லாம் தரிசித்து வருவேம்; தற்காலம், காளத்தியைத் தரிசிக்கவேண்டுமென்னுங் காதலால் அங்குச் செல்கின்றேம்'' என்றுரைக்க; அக்கன்னியர்கள் " அங்ஙனமாயின் யாங்களும் காளத்தியைத் தரிசிக்க விரும்பியுள்ளோம்; எம்மையும் உடன்கொண்டு செல்வீரேல் உமக்கியற்றும் வேகம்மாறுண்டோ?'' என்றுரைத்தனர்.

அக் கள்வர்கள் உள்ளங்கூர்ந்து, கன்னியர்களை நோக்கி, "மங்கையர்களே, மெல்லிய சரீரத்தினையுடைய நீங்கள் வெப்பமுதிர்ந்த பாலைநிலமுதலிய கடிய நிலங்களை எவ்வாறு கடப்பீரென்பதையும், நுங்களை அழைத்துச் சென்றால் பழிமொழி மிக விளையுமே என்பதையும், நும்மைப்பெற்ற தாயானவள் கன்றையிழந்த பசுப்போலக் கலங்குமே என்பதையும், நினைந்து, அஞ்சுகின்றேம், ஆயினும், காளத்தி காணப்பெற்ற கண்களே கண்களென்றும் காளத்திநகருக் கேகும் கால்களே கால்களென்றும் காளத்திதன்னை யுன்னும் கருத்தொன்றே கருத்தென்றும் காளத்தி புகழுநாவே நாவென்றுங் கற்றோர் சொல்வர். அன்றியும், இச்சரீரத்தோடு அடைதற்குரிய தென்கயிலைக்கு யான்செல்கின்றேனென்று ஒருவர் விளையாட்டாலுரைப்பினும் கயிலைப் பதவியையடைவர். அங்ஙனம் செல்பவரை விளையாட்டாற் றடுப்பவரும் சூரியசந்திரர் உள்ளமட்டும் கடுநிரயமெய்தித் துன்புறுவர். ஆதலால், அன்னையர்களே, நீவிர் காளத்திக்குச் செல்லவேண்டுமென்னுங் கருத்தை விலக்குதற்கு யாம் உடன்படோம்'' என்றுரைத்தனர். அவ்வார்த்தையை அக் கள்வர் மனதோடு உரைத்திலரேனும், அம் மங்கையர் வாய்மையாகவே கொண்டு, "யாங்கள் சிவபிரானை அடையப்பெறின் இச் சரீரம் யாது படினும் என்? உலகோர் இகழ்ந்தாலென்? புகழ்ந்தாலென்? எம்மை எவ்வகையாலேனும் தென்கயிலை சேர்ப்பீராக'' என்று வணங்கி வேண்டிக்கொள்ள; அக் கள்வர் நன்றென இசைந்து அர்த்தயாமத்திலே, அன்னை யறியாமல் இன்ன இடம் வந்து சேருவீராக'' என்று குறிப்பிட்டுரைத்துச் சென்றனர்.

கன்னியர்கள் தங்கள் நிழல்போன்ற இரண்டு சேடியர்கள் வேண்டிய திரவியங்களை உடன்கொண்டுவர, அர்த்தயாமத்திலே குறித்த இடஞ் சார்ந்து, கள்வரோடு, விடியும் முன்னரே இருகாதங் கடந்து, மறுதினமுதல் இடையிலுள்ள தலங்களை யெல்லாம் தரிசித்துக்கொண்டு, சோழநாட்டையடைந்து, **கும்பகோணமுதலிய** தலங்களை யிறைஞ்சி, **சிதம்பரத்தை** யடைந்தனர். அங்கே திருவெல்லையை வணங்கி, வீதிவலம் வந்து, ஆலயத்தெதிரே பணிந்து, பிரதக்ஷிணம் புரிந்து, **ஸ்ரீமூலட்டானேசுரரையும் பஞ்சகிருத்திய நடனம்** புரிந்தருளும் **சிற்சபாநாயகரையும் சிவகாமியம்மையையும் கண்படை**த்த பயன் பெறக்கண்டு, தரிசித்து, பரவசப்பட்டுத் துதித்து, அத் தலத்திலுள்ள **சிவகங்கை குய்யதீர்த்தமுதலிய** தச தீர்த்தங்களிலும் ஸ்நானம்செய்து,

காலந்தோறும் சுவாமி தரிசனம் செய்துகொண்டு, சின்னாள் வசித்திருந்தார். பின்பு பிரியாவிடைகொண்டு நீங்கி, இடையிலிருக்கும் தலங்களை வணங்கி, **காஞ்சீபுரத்தைச்** சார்ந்து, **திருவேகம்பநாதரைத்** தரிசித்துத் துதித்து, **திருக்காளகிரியென்னும்** தலத்தை யடைந்து, நதியிலே ஸ்நானம்செய்து, சித்தகணங்கள் வழிபடும் **சித்திவைரவரை** வணங்கி, வலம்புரிந்து, யாவருக்கும் போகமோக்ஷங்களைப் பாலிக்கும் **வாலிநாதரைத்** தரிசித்துப் பரவி, புறத்தே வந்து, ஒரு புராணிகரைக்கண்டு நமஸ்கரித்து, அத்தலமான்மியத்தை வினவ; அவர் சொல்வாராயினார்.

“மங்கையர்களே, முற்காலத்திலே முழுவலிபடைத்த **வாலியென்பவர்** தமது **ஆன்மார்த்தலிங்கத்தை** இத் தடாகத்தின் கரையிலேவைத்து, திருமஞ்சன முதலியவற்றாற் பூசித்து, தோத்திரஞ்செய்து, அன்புமேலிட்டு ஆனந்தக் கூத்தாடி, வழக்கப்படியே பூசைப் பேடகத்தில் எழுந்தருளுவித்தற்குக் கரத்தாலெடுக்க, பெருமான் அசையாமைகண்டு, இருகையினும் இறுகப் பிடித்தெடுத்தனர். அங்ஙனம் எடுத்தும் அசையாமையால் மனங் கலங்கி, அப்பெருமானை வாலினாலே மிகவும் சுற்றிக்கொண்டு, கரங்களை யூன்றி, அண்டகூடமளவும் நிமிர்ந்து பெயர்க்கவும், பெயராமை நோக்கி, வாலை விடுவித்து, பெருமூச்செறிந்து, துதிக்கத் தொடங்கினார். “தேவாதிதேவரே, தேவரீர் திருவருள்வைத்து வந்தாலல்லது பேயேன் வலிந்து பெறுதற் கெளியீரோ! வாலினாலே உமது திருமேனியில் தழும்புபடத் தீங்கிழைத்தேன்! தீயேன் என்செய்வேன்! என்செய்வேன்!! ஆ ஆ! இளம்புதல்வனை அன்னையானவள் கடுங்காட்டினடுவே அருளின்றி விடுத்த தன்மைபோல அடியேனைக் காவாமல் கைவிட்டு இங்கே வீற்றிருக்கின்றீர். யான்செய்த பிழையுண்டோ ! கிருபாசமுத்திரமே! என்னுயிர் நீ, என்றுணை நீ, என்னுடைய வாழ்வு நீ, அன்னையுநீ, அத்தனுநீ, இங்கு எனக்கு உறவாக வேறு யாவர் உளர்? நின்னை நீங்கில் எனதுயிர் நில்லாது; நில்லாது” என்று பரிந்து வேண்ட; அப் பிரான் பிரசன்னராகி, “அன்பனே, யாம் இவ்வனத்திலே இத் தடாகக்கரையிலே வீற்றிருத்தலை விரும்பியுள்ளேம்; இதுபற்றிக் கவலையடையேல்: இன்றுமுதல் உனதுள்ளத்திலே வீற்றிருந்து நின் பூசையை அங்கீகரித்தருளுவேம்” என்று ஆஞ்ஞாபித்து, சிவலிங்கத்திலே மறைந்தருளினார்.

அதுகேட்ட வாலியென்பவர் இப்பெருமான் என்னைவிட்டு இவணிருந்தது இத் தடாகத்தினது ஆசையாலன்றி வேறில்லை. ஆகையால், இதை அழித்துவிடுவேனென அதிர்த்து, ஒரு பெருமலையையெடுத்து, நீர்த்திவலைகள் மேலுலகமுற்றுஞ் செல்லும்படி ஓங்கியெறிந்தனர். எறிந்தவழி, அம்மலையினின்றும் சிதறிய மருந்துக்களால் அனேகர் உயிர்பிழைத்தல் முதலிய நலங்களையடைய; அத்தடாகமும் அழிவில்லாமல் யாவர்க்கு முதவியாகப் பெரிய நதியாகி பெருகிச் செல்லுதலை வாலிகண்டு, இப்பிரான் றிருவுளம்

இதுவேயாயின் யான் செய்வது யாதெனப் பணிந்து சென்றனர். ஆகையால், இந்நதியில் மூழ்குவோர் பவக்கடலைக் கடந்து முத்தியாகிய கரையை யடைவர். இது தீவினையென்னும் செத்தைக்கு நீர்வடிவமாயிருக்கும் நெருப்பாகும். கைலைபோலவே இம்மலையிலும் **வாலிநாதர் உமாதேவியோடு** வீற்றிருக்கின்றார். இப்பெருமானை வணங்குவோர் செறிந்த பாதகமனைத்தையு மழித்துச் சிவகதி யெய்தப்பெறுவர். இத் தலமான்மியம் இதுவாகும்'' என்றுரைக்க: கன்னியர்களிசிறந்து, அவரை மலர்கொண்டருச்சித்து வணங்கி அன்றிரவிலும் வாலிநாதரைத் தரிசித்து, ஒருமனையிலே தங்கியிருந்தார். இவ்வாறு தங்குமிடந்தோறும் இவர்களுக்குக் கள்ளரால் ஆபத்து விளையாவண்ணம் சிவபெருமான் பல அடியவர்வேடம் தாங்கிவந்து நாடோறுங் காத்தருளினார்.

தங்கிய மங்கையர் அருணோதயத்திற்கு முன்னரெழுந்து, நியதி முடித்துச்சென்று, அன்று ஒருபதியிலே தங்கி, மறுதினம் தென்கைலைக்குச் சமீபமாகச் செல்லுங்கால், கள்வர்கள் இனி நகரங் குறுகிவிட்டது; இதுகடந்தால், நமக்கு இடம் வாய்க்காது: ஆகையால், தனித்த இவ்வனத்திலே இந்நால்வரையும் உயிர்போக்கி ஆபரணாதிகளைக் கவர்வோமென்று உட்கொண்டிருந்த பொல்லர் நினைவை வெளிப்படுத்த; அந்நிலைகண்ட இளையவள் உள்ளம் நடுநடுங்கி, "தமக்கையே, இவர்கள் நம்மை முடித்தற்கு முயல்கின்றனர் என்று அறிவித்தனள். அதுகேட்ட மூத்தாள் "தங்கையே, இவ்வளவுங் காத்துவந்த காளத்தியண்ணலார் இனிக் காவாதுவிடார்: நீ அஞ்சேல்; அஞ்சேல்'' எனத் தேற்றி, கவலையற்று நிற்குந் தருணத்திலே, தென்கைலாயப்பெருமான் பாம்பின்வாய்த்தேரையை விடுவித்துப் பாதுகாப்பார்போலக் கள்வரினின்றும் நீக்கிக் கன்னியரைக்காக்கத் திருவுளங்கொண்டு, மலர்கொய்து தொடுக்கும் தொண்டர்வேடந்தாங்கி அணுகினார், அவரைக் கண்டவுடனே கள்வர்கள் விரைந்தோட; பெருமானருகுவந்து, தம்மை அன்பொடுவணங்கிநின்ற கன்னியரைநோக்கி, நீவிர், எங்கிருந்துவந்தீர்?''என்று வினவ: அவர் நடந்தயாவும் விண்ணப்பம் செய்தனர். பெருமான் "மங்கையீர், உம்மைக் காளத்தியிற் சேர்க்கின்றோம்; வருவீராக'' என்றழைத்துக்கொண்டு நிலமகள் தவத்தால் திருவடிகள் நிலந்தோயச்சென்று, தென்கைலையைச் சார்ந்தார், கன்னியரைநோக்கி, "இதுவே **கைலைமலை**; அது **துர்க்கைவெற்பு**; அம்மலை **நீலப்பருப்பதம்**; இந்நதி **பொன்முகரி**; இது **மயூரதீர்த்தம்**'' என மற்றவைகளையும் அறிவித்து, மறைந்தருளினார்.

கன்னியர் திசைகளை நோக்கி, பெருமானைக் காணாமையால், இங்கே விடுத்துச்சென்றவர் இறைவரெனத் தெளிந்து, "ஆ! ஆ! தெலுங்கு வழங்கும் இத்தலத்திலே நம்பெருமான் தமிழ்சங்கமராய் நணுகியது சால நன்று நன்று'' என வியந்தும், "அந்தோ! முதல்வன் அணுகப்பெற்றும் முத்தியின்பம் பெறாமல், மணிபெற்றிழந்த வறிஞனையும் அமுதம்பெற்றிழந்த அறிவிலாதவனையும் நிகர்த்தோமே!'' என்று துன்புற்றும் மயங்கி நின்று, பின்பு

"ஓகோ! இங்குள்ள சிறப்புக்களையெல்லாம் அருட்பெருமானே தனித்தனி விளக்கி அருளப்பெற்றோம்; நமக்கு என்னகுறை" எனத் தெரிந்தனர், அதன் பின்னர் பொன்முகரியிலே ஸ்நானஞ்செய்து, திருவெண்ணீறணிந்து உருத்திராக்கவட மிகப்புனைந்து, **பஞ்சாக்ஷரங்களை** யுச்சரித்து, நியமப்படி **ஞானவந்தாதியைப்** பாராயணஞ்செய்துகொண்டு, சந்நிதியையடைந்து, நமஸ்கரித்து, பிரதக்ஷிணஞ்செய்து, அளவிடப்படாத அன்பினாலே நடனம்புரிந்து துதித்து, பரவசப்பட்டு நிற்க; பெருமான் றிருவருள்கூர்ந்து, அச்சிவலிங்கத்தின் கண்ணே அரிய செவ்வொளியும் மரகதவொளியுமாக **அம்பிகையோடு** தரிசனந்தந்தளித்து, அவர்களது உழுவலன்பைநோக்கி, திருவுளமகிழ்ந்து, விஷ்ணுவாதிதேவர்கள்வணங்கவும், உமாதேவியார் நாணவும், அவ்விருவரையும் தம்முள்ளே கலப்பித்தருளி, முன்போல வீற்றிருந்தனர். அப்பொழுது, அவர்கள் பின்வந்த தாதியார்களிருவரும் கடவுளிடத்துச் சென்ற கன்னியர் வந்தாரில்லையே எங்கிருக்கின்றாரென்று தேடித் தியங்கியவழி, "அவர் முத்தியையடைந்தனர். நீங்கள் அவர்கள் பேரால் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்வீராக" என்று அசரீரிவாக்கியமெழ; அதுகேட்டு, அவர் **கன்னியிலிங்கமென** இரண்டு இலிங்கப்பிரதிஷ்டைசெய்து, நற்கதி யடைந்தனர் என்று சங்கமேசர் உபதேசித்து, அவ்வரசர் வேண்டுகோளின்படியே **சிலந்திமுதலியவைகளின்** பூர்வ ஜன்மசரித்திரங்களைப் புகலத் தொடங்கினார்.

# சிலந்தி முதல முற்கதைச் சருக்கம்

### கலிவிருத்தம்

தண்ணந் தாமரை சார்ந்துறை நான்முக
னண்ணுந் தோற்ற நவிற்றி யிருக்கவும்
விண்ணின் மேவகி லத்தொழில் வீறுளான்
கண்ணில் வந்திடு காதல்செய் கான்முளை.

(இ - ள்.) தண் அம் தாமரை சார்ந்து உறை - குளிர்ச்சியும் அழகுமுள்ள தாமரைத் தவிசில் வீற்றிருக்கிற, நான்முகன்-சதுர்முகனாகிய பிரமதேவன், நண்ணும் தோற்றம் - ஏற்பட்டிருக்கிற படைப்புத் தொழிலை, நவிற்றியிருக்கவும் - செய்தே யிருக்கவும், விண்ணில் மேவு - விண்ணுலகில் வாழ்கிற, அகிலத்தொழில் வீறு உள்ளான் - விசுவகர்மாவினது, கண்ணில் வந்திடு - கண்ணிற் பிறந்த, காதல்செய் கால்முளை - விருப்பத்தைத் தருகிற புதல்வனாக எ-று.

தோற்றம் - படைப்பு. கால்முளை - ஒருசொல். கால் புதல்வனென்னும் பொருடந்து நின்றது. (கால் - சந்ததி, முளை - பிறந்தவன்).

உற்ற மாதவ வூற னெனப்பெயர்
பெற்ற வன்னய னோடு முரணுபு
சற்று மெண்ணில னாய்ச்சகந் தந்திடச்
செற்ற மோடயன் சிந்தையி லெண்ணினன்.

(இ - ள்.) உற்ற - பொருந்திய, மாதவவூறன் என - மாதவவூறனென்று, பெயர் பெற்றவன் - பேர் பெற்றவன், அயனோடு - பிரமனோடு, முரணுபு - பகைத்து, சற்றும் - சிறிதும், எண்ணிலனாய் - மதியாதவனாய், சகம் - உலகத்தை, தந்திட - படைக்க, அயன் - பிரமதேவன், செற்றமோடு - கோவத்துடன், சிந்தையில் - தன் மனத்தில், எண்ணினன்-ஆலோசித்தான் எ-று.

முரணுபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இது தந்திடவென்னும் வினைகொண்டு முடிந்தது. அயன் அஜ: என்னும் வடசொற்றிரிபு. சகம் - ஜகம் என்னும் வடசொற்றிரிபு. இதற்கு தோன்றியழியுமியல்பின தென்பது பொருள். செற்றம் - செறு, என்னும் வினைப்பகுதியடியாகப் பிறந்த பெயர். எண்ணினன் என்பதற்...

அன்ன வூர்தி யழைத்த தறிந்தவன்
முன்னர் வந்துற முற்ற வெகுண்டுநீ
சின்ன நூல்செய் சிலந்திய தாகென
வின்ன லெய்தின னேத்தி யிறைஞ்சினான்.

(இ - ள்.) அன்ன ஊர்தி - அன்னவாகனனாகிய பிரமதேவன், அழைத்தது - அழைத்ததை, அவன் அறிந்து - அவன் தெரிந்துகொண்டு, முன்னர் வந்து உற - எதிரேவந்து நிற்க, (பிரமதேவன் அவனை நோக்கி) முற்ற வெகுண்டு - மிகுதியாகக் கோவித்து, நீ—, சின்ன நூல் செய் - சிறுநூலை யிழைக்கிற, சிலந்தி ஆக என - சிலந்தியாய்ப் பிறக்கக்கடவை யென்று சபிக்க, (அவன்) இன்னல் எய்தினன் - துன்பமடைந்தவனாய், ஏத்தி - துதித்து, இறைஞ்சினான் - வணங்கினான் எ-று.

வெகுண்டு என்பதற்குப் பகுதி வெகுள். சிலந்தியது என்பதில், அது பகுதிப்பொருள் விகுதி. இன்னல் - துன்பம், (இன் அல் எனப் பிரித்து இனிமை யல்லாதது எனப் பொருள் கொள்க). (௯)

கமல நான்முகன் கண்டு வெருவனீ
விமலன் மேவிய வேழ வனத்திடை
யமலும் வில்ல வனத்தி லடைந்ததி
லமைவி லாவுலண் டாயவண் வைகியே.

(இ - ள்.) கமலம் - தாமரைமலரில் வீற்றிருக்கிற, நான்முகன் - சதுர்முகனாகிய பிரமதேவன், கண்டு - நோக்கி, நீ வெருவல் - நீ அஞ்சாதே, விமலன் - நிர்மலனாகிய சிவபிரான், மேவிய - எழுந்தருளியிருக்கிற, வேழவனத்திடை - கயாரணியத்தில், அமலும் - பொருந்திய, வில்வவனத்தில்—, அடைந்து - சேர்ந்து, அதில் - அதனிடத்தில், அமைவு இல்லா - அமைதியில்லாத, உலண்டு ஆய் - சிலந்தி யுருவாகி, அவண் வைகி - அவ்விடத்தில் தங்கி எ-று.

வெருவல் என்பதற்குப் பகுதி வெருவு. வேழம் - யானை. வனம் - காடு (கயாரணியம்). இது கஜாரண்யம் என்னும் வடசொற்றிரிபு. அமலல் - அமர்தல், பகுதி அமல். வைகி யென்பதற்குப் பகுதி வைகு. (௰)

தேவ தேவனைத் தென்கயி லாயனை
யாவ லோடு மருச்சித் தருங்கதி
மேவு வாயென வெண்ணிற வாணியை
நாவின் வைத்திடு நான்முகன் கூறினான்.

(இ - ள்.) தேவதேவனை - தேவர்க்குந் தேவனாயிருப்பவனை, தென்கயிலாயனை - தென்கயிலையில் எழுந்தருளியிருப்பவனை, ஆவலோடும் - அன்புடனே, அருச்சித்து - அர்ச்சனை செய்து, அரு - அருமையாகிய,

முத்தியை, மேவுவாய் என - அடையக் கடவையென்று, வெண்ணிற வாணியை - வெண்ணிறத்தையுடைய சரசுவதியை, நாவில் வைத்திடும் - தனது நாவில் வைத்திருக்கிற, நான்முகன் - நான்கு முகங்களையுடையவனாகிய பிரமதேவன், கூறினன் - சொன்னான் எ-று.

தென்கயிலாயம் - சீகாளத்தி. வாணி - வடசொல், இதற்கு வாக்தேவதை யென்பது பொருள். (ரு)

அனைய பான்மையி னன்னோன் சிலம்பியாய்த்
தனைநி கர்த்திடு தற்பரன் பூசையால்
வினைய கற்றுபு வீடடைந் தானெனா
வனைநி கர்க்கு மருந்தவ னோதினன்.

(இ - ள்.) அனையபான்மையின் - அத்தன்மையாகவே, அன்னோன் - அவன், சிலம்பியாய் - உலண்டாகி, தனை நிகர்த்திடு - தன்னைத்தானே நிகர்க்கிற, தற்பரன் பூசையால் - சிவபெருமான் பூஜையால், வினை - வினைகளை, அகற்றுபு-ஒழித்து, வீடு அடைந்தான் எனா-முத்தியடைந்தானென்று, அன்னை நிகர்க்கும் - தாயை நிகர்த்த, அருந்தவன் ஓதினன்-அரிய தவத்தையுடையவன் சொன்னான் எ-று.

வினை - நல்வினை தீவினை யென்பன. இவ்விரண்டும் பிறவிக்குக் காரணமாதலால் வினையகற்றுபு எனப் பொதுப்படக் கூறினார். இவ் விருவினைகளும் பொன் விலங்கும் இரும்பு விலங்கும் போல்வன. (சா)

பாம்பின் முற்பிறப் போதுதும் பார்த்திப
வேம்ப லோடினிக் கேளென் றிறைசொல்வான்
கூம்பி லாத கொடுமுடி கொண்டுயர்ந்
தோம்பு பூத முடைத்தங் கயிலையே.

(இ - ள்.) பாம்பின் - பாம்பினது, முற்பிறப்பு - முற்சநநத்தை, ஓதுதும் - சொல்வோம், பார்த்திப - அரசனே, இனி - இப்பொழுது, ஏம்பலோடு கேள் என - மகிழ்வுடனே கேட்கக் கடவையென்று, இறை சொல்வான் - இறைவன் சொல்வானுபினன், கூம்பு இலாத - குவியாத, கொடுமுடி கொண்டு - கொடுமுடிகளைக் கொண்டு, உயர்ந்து—, ஓம்பு - காக்கிற, பூதம் - பூதங்களை, அக்கயிலை - அந்தக் கயிலையானது, உடைத்து - உடைத்தாயிருக்கின்றது எ-று.

பார்த்திபன் - வடசொல். ஏம்பல் - களிப்பு. இனி நிகழ்காலங் குறித்தது. ஓம்பல் - காத்தல், பகுதி ஓம்பு. (எ)

மேற்படி வேறு

பதியெனப் படுமிறை பண்டு கொண்டிடு
மதிசய சத்துவ மகன்று யர்ந்தொளி
காட்டி
மதிபல கோடியோர் வடிவுற் றென்னவும்.

(இ - ள்.) பதி எனப்படும் - பதியென்று சொல்லப்படுகிற, இறை - இறைவன், பண்டு கொண்டிடும் - பூர்வத்தில் கொண்டிருந்த, அதிசயம் - ஆச்சர்யகரமாகிய, சத்துவம் - சத்துவ குணத்தை, அகன்று - நீங்கி, உயர்ந்து - உயர்வடைந்து, ஒளிகதுவிட நின்றிடு-ஒளி வீசாநிற்கிற, காட்சி என்னவும் - காட்சிபோலவும், மதி பலகோடி - பலகோடி சந்திரர்கள், ஓர் வடிவுற்றென்னவும் - ஒருரு வெடுத்தாற் போலவும் எ-று.

கதுவல் - வற்றல், பகுதி கதுவு. காட்சி - தோற்றம். உற்றால் என்ன வெனற்பாலது உற்றென்ன வென விகாரமாயிற்று. (௮)

ஒள்ளொளி தேங்கியே யொப்பி லாதொளிர்
வெள்ளிய துருவென விளங்கித் தோன்றுமா
லெள்ளலி லிருந்தவ ரிதயத் தெய்தியே
வள்ளலோ டிருந்திடும் வளங்கொ ளம்மலை.

(இ - ள்.) எள்ளல் இல் - இகழ்ச்சியற்ற, இருந்தவர் - பெரிய தபோதனரது, இதயத்து - இருதயத்தில், எய்தி - பொருந்தி, வள்ளலோடு - சிவபெருமானுடனே, இருந்திடும் - இருக்கிற, வளம்கொள் - வண்மையைக் கொண்ட, அ - அந்த, மலை - மலையானது, ஒள் - அழகாகிய, ஒளி - பிரகாசம், தேங்கி - நிறைந்து, ஒப்பு இல்லாது ஒளிர் - நிகரற்று விளங்குகிற, வெள்ளியது - வெண்ணிறத்தது, உரு என - வடிவென்னும்படி, விளங்கி தோன்றும் - விளக்கமடைந்து காணப்படும் எ-று.

ஆல் - அசை. தேங்கல் - நிறைதல், பகுதி தேங்கு. எள்ளல் - இகழ்தல், பகுதி எள். இதயம் - ஹ்ருதயம் என்னும் வடசொற்றிரிபு. (௯)

ஆழியங் கிரியினை யங்கை யிட்டுயர்
பாழிமா மேருவைப் பறித்து மார்பணிந்
தூழியோர் கணமென வுன்னு வெங்கணஞ்
சூழ்தருங் கயிலையைத் துன்னு காவலாய்.

(இ - ள்.) ஆழியங்கிரியினை - சக்ரவாளமலையை, அங்கை இட்டு - அகங்கையிலேந்தி, உயர் - உயர்ந்த, பாழி - பெருமையுள்ள, மாமேருவை - மகம்மேரு மலையை, பறித்து - வேரோடு பிடுங்கி, மார்பு அணிந்து - மார்பில் தரித்து, ஊழி - உகாந்த காலத்தை, ஓர் கணம் என உன்னு - ஒரு கணப்பொழுதாக மதிக்கிற, வெம் - கொடிய, கணம் - பூதகணங்கள், துன்னு காவலாய் - மிக்க காவலாய், கயிலையை - கயிலை மலையை, சூழ்தரும் - சூழாநிற்கும் எ-று.

ஆழியங்கிரி யென்பதில் அம் சாரியை. அகங்கை அங்கையென விகாரமாயிற்று. கணம் க்ஷணம் என்னும் வடசொற்றிரிபு. உன்னு என்பதற்குப் பகுதி உன். வெம் என்னும் விசேடணத்தால் கணம் பூதகணத்தைக் குறித்தது. சூழ்தரும் என்பதற்குப் பகுதி சூழ்தா. (௧௦)

நதிபல கோடிக ணண்ணு நண்ணுநர்
பதிபல கோடிகள் பாங்க ருற்றிடு
மதிசய வனங்களு மனந்த கோடியாம்
புதுமதி மிலேந்தவன் பொற்றை மீதரோ.

(இ - ள்.) புதுமதி மிலேந்தவன் - பாலசந்திரனைச் சடையிற் றரித்தவனாகிய பரமசிவனது, பொற்றைமீது - மலையின்மேல், பலகோடி நதிகள் நண்ணும் - அநேககோடி யாறுகள் இருக்கின்றன, நண்ணுநர் - வருவோருடைய, பாங்கர் - பக்கத்தில், பலகோடி பதிகள் - அநேககோடி நகரங்கள், உற்றிடும் - சூழ்ந்திருக்கின்றன, அதிசயம் - ஆச்சர்யகரமான, வனங்களும் - சோலைகளும், அனந்தகோடி ஆம் - முடிவற்ற கோடிகள் உண்டு எ-று.

வனங்கள் காடுகள் எனினுமாம். அநந்தம் - வடசொல், இது முடிவில்லை யென்னும் பொருள்தருஞ் சொல். மிலேதல் - சூடுதல், பகுதி மிலே. பொற்றை - மலே. (கக)

கற்பக மரங்களுங் காமர் வல்லியும்
பொற்புறு புதல்களும் புணர்ந்த டைந்தவ
ருற்பவ முதலிய வோட்டு மென்றிடின்
வெற்பது வளந்தனை விளம்பல் வேண்டுமோ.

(இ - ள்.) கற்பகமரங்களும் - கற்பக விருக்ஷங்களும், காமர் வல்லியும் - காமர்வல்லிக் கொடியும், பொற்புஉறு புதல்களும் - அழகு மிகுந்த புதல்களும், புணர்ந்து - நெருங்கி, அடைந்தவர் - வந்தவரது, உற்பவ முதலிய - பிறவி முதலியவற்றை, ஓட்டும் என்றிடின் - ஒழிக்கும் என்றால், வெற்பு - அந்த மலேயின், வளத்தை - வண்மையை, விளம்பல் வேண்டுமோ - சொல்லல் வேண்டுமோ எ-று.

காமர்வல்லி-கற்பகத்தின்மேற் படர்கின்ற கொடி. புணர்தல் - நெருங்கல், பகுதி புணர். உத்பவம் - உற்பவம் என்னும் வடசொற்றிரிபு. வெற்பது வளம் என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. வளந்தனை யென்பதில் தன் சாரியை. வேண்டுமோ வென்னு மோகாரம் எதிர்மறை. (கஉ)

நள்ளிடைச் சிவபுர நணுகு மன்னதைக்
கள்ளவிழ் கமலநற் கடவுள் கூறிடி
னெள்ளுத லிலேயெனைப் போலு மேழைய
ருள்ளினும் வசையலா துயர்வுண் டாகுமோ.

(இ - ள்.) நள்ளிடை - நடுவில், சிவபுரம் - சிவபுரமானது, நணுகும் - அமைந்திருக்கும், அன்னதை - அதனை, கள் - தேனோடுகூடி, அவிழ் - மலர்கிற, நல்-சிறந்த, கமலக் கடவுள்-பிரமதேவன், கூறிடின்-சொன்னால், எள்ளு

தல் இல்லை - இகழ்ச்சியில்லை, என்னைப்போலும் ஏழையர்-என்னைப்போன்ற அறிவிலிகள், உள்ளினும் - நினைத்தாலும், வசை அல்லால் - இகழ்ச்சியன்றி, உயர்வு உண்டாகுமோ - உயர்ச்சி யுளதாகுமோ எ-று.

நள் இடை - நடுவிடம். சிவபுரம் - சிவலோகம். எள்ளல் - இகழ்தல், பகுதி எள். உள்ளல் - நினைத்தல், பகுதி உள். (கங)

அப்பெரும் புரமது வரத னத்தினு
லொப்பில்பொன் வெள்ளியா லுஞற்று மாடங்க
டிப்பிய மதில்கள்செய் குன்று கோபுர
மிப்படி தொகையள வின்றி யோங்குமால்.

(இ - ள்.) அ - அந்த, பெரும்புரம் - பெரிதாகிய சிவபுரமானது, அரதனத்தினுல் - மணிகளாலும், ஒப்பு இல் - நிகரில்லாத, பொன் வெள்ளியால் - பொன் வெள்ளிகளாலும், உஞற்றும் - செய்யப்பட்ட, மாடங்கள்—, திப்பியம்-திவ்யமாகிய, மதில்கள்—, செய்குன்று—, கோபுரம்—, இப்படி - இவ்வாறு, தொகை அளவு இன்றி - தொகை அளவுகளில்லாமல், ஓங்கும்-உயர்ந்திருக்கும் எ-று.

ஆல் அசை. புரமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. அரதனம் - ரத்நம் என்னும் வடசொற்றிரிபு. உஞற்றல் - செய்தல், பகுதி உஞற்று. திப்பியம் திவ்யம் என்னும் வடசொற்றிரிபு. கோபுரம் - வடசொல். (கச)

அன்னதி னடுவணெம் பிரானுக் காலய
மின்னதன் மையதென வெவருங் கூறுணு
துன்னத வுயர்ச்சியா யொப்பின் மாமணி
தன்னெடு மமைந்தொளி தங்கி யோங்குமால்.

(இ - ள்.) அன்னதின் - அத்தன்மைத்தாகிய மலையின், நடுவண் - நடுவிடத்தில், எம்பிரானுக்கு - எம்பெருமானுக்கு, ஆலயம் - கோயிலானது, இன்னதன்மையது என - இத்தன்மைத்தென்று, எவரும் - யாவராலும், கூறுணது - சொல்லக்கூடாது, உன்னத உயர்ச்சியாய்-மிக்க வுயர்வுடையதாய், ஒப்பு இல் - நிகரில்லாத, மாமணி தன்னெடும் - பெரிய மணிகளாலும், அமைத்து - அமைக்கப்பெற்று, ஒளி தங்கி - ஒளி பொருந்தி, ஓங்கும் - உயர்ந்திருக்கும் எ-று. ஆல் - அசை.

ஆலயம்-வடசொல். உன்னதம்-உந்நதம் என்னும் வடசொற்றிரிபு. ()

அதின்மறை முடிவென வன்ப ருள்ளென
விதுவுரு விதுகுண மென்னெ ணுதவன்
மதுமலர்க் குழலுமை மணுள னென்னவும்
பதியென வியம்பவும் பட்டி ருப்பனுல்.

(இ - ள்.) அதில் - அதனிடத்தில், மறை முடிவு என - வேதாந்த மென்றும், அன்பர் உள் என - அன்பரது ஹ்ருதயமென்றும், இது உரு - இது வடிவம், இது குணம் - இதுகுணம், என் ஒண்ணாதவன் - என்று சொல்லக் கூடாதவன், மது-தேனுள்ள, மலர் - பூவணிந்த, குழல்-கூந்தலையுடைய, உமை மணாளன் - உமாநாயகன், என்னவும் பட்டு - என்று சொல்லவும் பட்டு, பதி என இயம்பவும் பட்டு - பதியென்று சொல்லவும்பட்டு, இருப்பன் - இருப்பான் எ-று.

உள் ஆகுபெயர். மணவாளன் என்றபாலது மணாளன் என மரூஉவாயிற்று. பதி யென்றது தேவர் முதலிய எல்லாப் பொருள்கட்கும் இறைவன் என்னும் பொருட்குருவழ்தார் வடசொல். (கசு)

அவ்வுழி யமரரு மருங்க ணங்களுந்
திவ்விய முனிவருஞ் சிறந்த பூதரு
மெவ்வமில் கருடரு மியக்கர் நாகரும்
பவ்வம தாமெனப் படர்ந்து போற்றுவார்.

(இ - ள்.) அவ்வுழி - அவ்விடத்தில், அமரரும்-தேவர்களும், அருங்கணங்களும் - அருமையாகிய கணங்களும், திவ்விய முனிவரும்—, சிறந்த-மேலான, பூதரும்—, எவ்வம் இல் கருடரும் - குறைவற்ற கருடரும், இயக்கர் நாகரும்-யக்ஷரும் நாகரும், பவ்வம் ஆம் என - கடல்போலும் என்னும்படி, படர்ந்து போற்றுவார் - பரவி நின்று வணங்குவார்கள் எ-று.

உழி ஏழனுருபு, இடப்பொருட்டு. அமரர் - இறவாதவர். இறப்பவராகிய தேவரை இறவாதவர் என்றது மங்கலவழக்கு. கணங்கள்-சிவகணங்கள். திவ்வியம் - திவ்யம் என்னும் வடசொற்றிரிபு, இதற்கு தைவிகம் என்பது பொருள். முனிவர் - மௌனசீலர். இயக்கர் யக்ஷர் என்னும் வடசொற்றிரிபு. பவ்வமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. (கஎ)

ஒன்றொரு தினந்தனி லொப்பி லாதவ
னன்றிகொ ளரியணை நணுக வெண்ணியே
தன்றிரு மேனியிற் சாத்து மாடைகள்
குன்றலி லணிபெறப் புனைந்து கொண்டபின்.

(இ - ள்) ஒன்றொரு தினம் தனில் - ஒரோவொரு தினத்தில், ஒப்பு இல்லாதவன் - நிகரில்லாத சிவபெருமான், நன்றிகொள் - அழகைக்கொண்டிருக்கிற, அரி அணை நணுக-சிங்காதனத்தில் எழுந்தருள, எண்ணி-திருவுளம் பற்றி, தன் திருமேனியில் - தனது திவ்யதேகத்தில், சாத்தும் - தரிக்கிற, ஆடைகள் - வஸ்திரங்களை, குன்றல் இல் - குறைவில்லாத, அணிபெற - அழகுபெற, புனைந்து கொண்டபின் - அலங்கரித்துக் கொண்டபிறகு எ-று.

அரி - சிங்கம். இது ஹரி என்னும் வடசொற்றிரிபு. புனைந்து என்பதற்குப் பகுதி புனை. குன்றல் - குறைதல், பகுதி குன்று. புனைதல் என்பதற்குப் பகுதி புனை. (கஅ)

ஆயிர மணிமுடி யனந்த னேமுத
மாயிரும் பணிபணி யாக வைகிடக்
காய்பெருங் காமநோய் கனற்றக் காளனே
ராயணி மகளிர்பா லடைந்து வைகி

(இ - ள்) ஆயிரம் மணிமுடி - ஆயிரம் ரத்னகிரீடங்களணிந்த, அநந்தன் முன்ஆம் - ஆதிசேடன் முதலாகிய, மா இரு - மிகப்பெரிய, பணி-பாம்புகள், பணியாக - தொண்டாக, வைகு இடம் - தங்குமிடம், (அதில்) காய்-சுடுகிற, பெருங்காமநோய் - பெரிதாகிய காமவியாதியானது, கனற்ற - சுடுதலால், காளன் - காளனென்னும் பாம்பு, ஆய - ஆராய்ந்து செய்த, அணி - ஆபரண மணிந்த, ஓர்மகளிர்பால் அடைந்து-ஒரு மகளிரிடத்தில் சென்று, வைகினன்- தங்கினன் எ-று.

அநந்தன்-வடசொல். பணி-வடசொல். பணத்தையுடையது, (பணம்- படம்) கனற்ற என்பதற்குப் பகுதி கனல். வைகினன் என்பதற்குப் பகுதி வைகு. (கக)

வாளணி யாவையும் வனைந்து வள்ளலுங்
காளனைக் காண்கிலன் கருதும் வேலையி
னீள்பெருங் காமநோய் நெஞ்சிற் கொண்டுபோ
யாளணி மகளிர்பா லடைந்த தன்மையை.

(இ - ள்) வாள் - ஒளியுள்ள, அணியாவையும் - எல்லா அணிகளையும், வனைந்து - அலங்கரித்துக்கொண்டு, வள்ளலும் - சிவபெருமானும், காளனை காண்கிலன் - காளனை காணாதவனாய், கருதும் வேலையில் - அவனை நினைக்கும் பொழுதில், நீள்பெருங் காமநோய் - மிகப் பெரிய காமநோயை, நெஞ்சில் கொண்டுபோய் - மனத்திற் கொண்டு சென்று, ஆள் அணி மகளிர்பால் - ஆளணி மாதரிடத்தில், அடைந்த தன்மையை - சென்ற செய்கையை எ-று.

காண்கிலன் - முற்றெச்சம். அணிமகளிர் - பொதுமாதர். (உ0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

உயிர்த்தொகை யனைத்து முற்ற வொருவனு முணர்ந் தழைத்துச்
செயிர்த்திலன் காம நோயாற் சிந்தனை கலங்கிச் சென்றாய்
கயப்பெய ரடவி மேவிக் காளநீ பாம்பா கென்று
பெயர்த்துமா ரருளி னாலே பிறைமுடிக் கடவுள் கூறும்.

(இ - ள்.) உயிர்த்தொகை அனைத்தும் - சீவராசி யெல்லாவற்றினுள் ளும், உற்ற - (அந்தர்யாமியாய்) பொருந்தி யிருக்கிற, ஒருவனும் - ஒப் பற்றவனாகிய சிவபெருமானும், உணர்ந்து - அறிந்து, அழைத்து - அவனை வரவழைத்து, செயிர்த்திலன் - கோவியாதவனாய், காமநோயால் - காமப்பிணி

யால், சிந்தனைகலங்கி சென்றாய் - மனநிலை கலங்கிப் போயினை, (ஆதலால்) கயப்பெயர் அடவிமேவி - கயாரணியத்தை யடைந்து, காள - காளனே, நீ பாம்பு ஆகு என்று - நீ பாம்பாகக் கடவையென்று சொல்லி, பிறைமுடிக்கடவுள் - பிறைசூடிய சடாமகுடத்தையுடைய பரமசிவன், ஆர் அருளினாலே - பெருங்கருணையாலே, பெயர்த்தும் கூறும்-மீட்டும் சொல்வாரும்பினன் எ-று.

செயிர்த்தல் - கோவித்தல், பகுதி செயிர். செயிர்த்திலன் முற்றெச்சம். (உக)

தென்கயி லாயந் தன்னிற் செறிந்துபாம் புருவாய் நீதான்
கொன்பயி லிலிங்கந் தன்னைக் குறுகியர்ச் சிக்கு நாளி
லன்படைந் தொருமால் யானை யதுவும்பூ சிக்க வெய்து
முன்புநீ முயன்று கொல்ல முடிந்துபின் முத்தி சேர்வீர்.

(இ - ள்.) தென்கயிலாயம் தன்னில் - தென்கயிலையில், செறிந்து - சேர்ந்து, பாம்பு உருவாய் - பாம்பு வடிவாகி, நீ—, கொன்பயில் - பெருமை மிக்க, இலிங்கம் தன்னை-சிவலிங்கத்தை, குறுகி-கிட்டி, அர்ச்சிக்கும் நாளில் - அர்ச்சனை செய்யுங் காலத்தில், அன்பு அடைந்து - அன்புடையதாகி, ஒரு—, மால்யானை அதுவும் - மதமயக்கத்தையுடைய யானையாகிய அதுவும், பூசிக்க எய்தும் - பூசைசெய்ய வரும், (அது) நீ—, முன்பு - முன்னே, முயன்று கொல்ல - முயற்சிசெய்து கொல்ல, முடிந்து - இறந்து, பின் - பிறகு நீயும் இறந்து, (இருவரும்) முத்திசேர்வீர் - முத்தியடைவீர்கள் எ-று.

இலிங்கந்தன்னை யென்பதில் தன் சாரியை. மால்யானை-பெரிய யானை யெனினுமாம். முடிதல் - இறத்தல், பகுதி முடி. (உஉ)

எனப்புகன் றிறைவ னேவ வெறுழ்வலிப் பாந்த ளேகி
வனத்தினு ளுயர்ந்த யானை வனத்திடைப் பாம்பா யிற்றான்
மனத்துயர் கொடுக்குங் காம மாற்றிட வல்லார்க் கன்றி
யுனற்கரும் பிறவித் துன்ப மொழித்திடற் கெளிது கொல்லோ.

(இ - ள்.) எனப் புகன்று-என்று சொல்லி, இறைவன் - கடவுள், ஏவ - ஏவுதலும், எறுழ்வலி - மிக்க வலியை யுடைய, பாந்தள் - பாம்பானது, ஏகி - போய், வனத்தினுள் - காட்டில், உயர்ந்த யானைவனத்திடை - சிறந்த கயாரணியத்தில், பாம்பு ஆயிற்று - பாம்புருவாயிற்று, மனத்துயர் கொடுக்கும் - மனக்கவலையை யுண்டாக்குகிற, காமம் - காமநோயை, மாற்றிட வல்லார்க்கு அன்றி - நீக்க வல்லவர்க்கே யல்லாமல், உன்னற்கு அரு - நினைத்தற்கரிய, பிறவித்துன்பம் - ஜன்மதுக்கம், ஒழித்திடற்கு-நீக்கிக்கொள்வதற்கு, எளிது கொல்லோ - எளிதாகுமோ எ-று.

புகன்று என்பதற்குப் பகுதி புகல். கயாரண்யம் - கஜாரண்யம் என்னும் வடசொற்றிரிபு. இதில் கஜம் என்பது கயம் என்றாயிற்று. ஆல் - அசை. உன்னற்கு என்பதன் பகுதி உன். எளிது கொல்லோ வென்று மோகாரம் எதிர்மறை. (உங)

ஆனைமுற் பிறப்புக் கூறி லண்ணலார் கயிலா யத்தின்
மேனைதன் மகளுந் தாமும் வீற்றிருந் தருள வுள்ளி
லூனமில் கணத்து ளத்தி யெனும்பெயர்த் தலைவ னுற்றி
யானிறை தன்பா லேக விடுமென வாயில் காப்போர்.

(இ - ள்.) ஆனை - யானையினது, முன் பிறப்பு - முற்பிறப்பின் சரித்திரத்தை, கூறின் - சொல்லுமிடத்து, அண்ணலார் - பரமசிவனனவர், கயிலாயத்தில்—, மேனை - மேனை யென்பவளது, மகளும் - மகளாகிய உமாதேவியும், தாமும் - தாமுமாக, வீற்றிருந்தருள - வீற்றிருந்தருளாநிற்க, உள்ளில் - நெஞ்சில், ஊனம் இல் - களங்கமில்லாத, கணத்துள்-சிவகணங்களில், அத்தி யென்னும் பெயர் - அத்தியென்னும் பெயரையுடைய, தலைவன் - கணாதிபதி யானவன், உற்று - அவ்விடத்தடைந்து, யான் - நான், இறைபால் ஏக-இறைவனிடத்திற்குப் போக, விடும் என - விடக்கடவீர் என்று சொல்ல, வாயில் காப்போர் - வாயிற் காவலாளர் எ-று.

மேனை - மலையரையன் மனைவி. தாமும் என்றது சிவபெருமானை. மேனைதன் மகள் என்றது உமாதேவியை. தன் சாரியை. (உ௪)

கலிவிருத்தம்

பவள மேனியிற் பாவ விருடெறுந்
தவள நீறணி சங்கரன் றற்பரன்
றுவளு நுண்ணிடைத் தோகையுந் தானுமா
யுவள கந்தனி லுற்றிருந் தானரோ.

(இ - ள்.) பவளம் - பவளம்போன்ற, மேனியில் - தன் திருமேனியில், பாவம் இருள் - பாவமாகிய அந்தகாரத்தை, தெறும் - ஒழிக்கிற, தவளம் - வெண்மையாகிய, நீறு-விபூதியை, அணி - தரிக்கிற, சங்கரன்—, தற்பரன்—, துவளும் - துவளாநின்ற, நுண் இடை - நுட்பமாகிய இடையையுடைய, தோகையும் - உமாதேயும், தானும் ஆய் - தானுமாக, உவளகம் தன்னில் - அந்தப்புரத்தில், உற்றிருந்தான் - வீற்றிருந்தான் எ-று.

பவளமேனி - செந்நிறமேனி. பவளம் - ப்ரவாளம் என்னும் வடசொற்றிரிபு. தவளம் வடசொற்றிரிபு. தோகை-ஆகுபெயர். உவளகம் - அந்தப்புரம். (உ௫)

அங்க ணேகல டாதுனக் கையநீ
யிங்க ணில்லென வின்மொழி கூறவுந்
துங்க மேவு கணேசன் றனுக்கெனச்
சங்க ரன்னுறு தானந டந்தனன்.

(இ - ள்.) அங்கண் - அவ்விடத்திற்கு, ஏகல் - நீ போவது, அடாது - அடுக்காது, ஐய - ஐயனே, நீ—, இங்கண் - இவ்விடத்தே, நில் என - நில்

லென்று, இன்மொழி கூறவும் - இன்சொற் சொல்லவும், துங்கம்மேவு - பரிசுத்தம் பொருந்திய, கணேசன் - கணநாதனானவன், துணுக்கென - விரைவாக, சங்கரன் உறு - சிவபிரான் எழுந்தருளியிருக்கிற, தானம் - இடத்தை நோக்கி, நடந்தனன் - நடந்து போயினன் எ-று.

அடாது - தகாது எனினுமாம். கணேசன் - கணம் ஈசன் எனப் பிரியும், இது வடசொல். தானம் - ஸ்தாநம் என்னும் வடசொற்றிரிபு. (உசு)

நடந்த காலை நகமகள் சீறியிங்
கடைந்த வத்திநீ யத்திய கென்றனண்
மிடைந்த வூழை விலக்குந ருண்டுகொ
லுடம்பு நானெனு வுத்தமர்க் கன்றியே.

(இ - ள்.) நடந்தகாலை - நடந்த காலத்தில், நகமகள் - மலைமகளாகிய பார்வதீ தேவியானவள், சீறி - கோபித்து, இங்கு அடைந்த - இங்கே வந்த, அத்தி-அத்தியென்னும் கணநாதா, நீ—, அத்தியாக என்றனள்-யானையாகக் கடவையென்று சபித்தாள், மிடைந்த - நெருங்கின, ஊழை - ஊழ்வினைப் பயனை, விலக்குநர் - விலக்கிக்கொள்ள வல்லவர், உண்டுகொல் - உண்டோ, உடம்பு நான் எனு - இவ்வுடம்பை நானென்றபிமானியாத, உத்தமர்க்கன்றி - உத்தமர்க்கே யல்லாமல் எ-று.

நகம் - மலை, இது வடசொல். இதற்கு நடவாதது என்பது பொருள். அத்தி ஹஸ்தி யென்னும் வடசொற்றிரிபு. உண்டு கொல் என்னும் வினா எதிர்மறைப் பொருளது. உடம்பு நானெனு உத்தமர் - தேஹாபிமாநமில்லாத ஞானியர். (உஎ)

ஆய காலை யருங்கண நாதனும்
பாய வெம்பய மெய்திப் பரமனோ
டாயை வந்தனை யாற்றி மருளினாற்
பேய னேன்செய் பிழைபொறுப் பீரெனு.

(இ - ள்.) ஆயகாலை - அந்தக்காலத்தில், அரு - அருமையாகிய, கணநாதனும் - கணேசனும், பாய - மிக்க, வெம் - கொடிய, பயம் எய்தி - அச்சத்தையடைந்து, பரமனோடு - பரமசிவனோடு, ஆயை - தாயாகிய உமாதேவியையும், வந்தனை ஆற்றி - வந்தித்து, மருளினால் - அஞ்ஞான மயக்கத்தினால், பேயனேன் செய் - பேயேன் செய்த, பிழை - குற்றத்தை, பொறுப்பீர் எனு - பொறுக்கக் கடவீர் என்றுசொல்லி எ-று.

ஆய் - தாய், இது யாய் என்பதன் மரூஉ. வந்தனை - ஆராதனை. (உஅ)

நொந்து வேண்டி நுவல விறைவனார்
தந்தி மாவனத் தந்தி யுருவெடுத்
தந்த வெல்லை யமர்தரு நாள்களின்
முந்தி யோர்பணி முத்திலிங் கத்தினை.

(இ - ள்.) நொந்து - மனம் வருந்தி, வேண்டி - பிரார்த்தித்து, நுவல - சொல்ல, இறைவனும்—, மா - பெரிய, தந்திவனம் - கயாரணியத்தில், தந்தி உரு எடுத்து - யானைவடிவெடுத்து, அந்த எல்லை - அந்த எல்லையில், அமர் தரும் நாள்களில் - அமர்ந்திருக்குங் காலத்தில், முந்தியோர் - முன்னோர், பணி - வைத்து வழங்கின, முத்தி லிங்கத்தினை - முத்தி லிங்கத்தை எ-று.

நுவலல் - சொல்லல், பகுதி நுவல். அமர்தரு - ஒருசொன்னீரது, பகுதி அமர்தா. முந்தியோர் - முந்தினோர். (உகூ)

அன்பு கொண்டருச் சித்திடு மவ்வயின்
பின்பு நீயு மருச்சித்துப் பேதியா
வின்ப மார்கதி யெய்துவிர் போவெனு
மின்பி றங்கிய வேணி விளம்பினன்.

(இ - ள்.) அன்புகொண்டு - அன்புடையனாய், அருச்சித்திடும் - அர்ச்சிக்கிற, அவ்வயின் - அவ்விடத்தில், பின்பு - இந்தப் பிற்காலத்தில், நீயும்—, அருச்சித்து - அர்ச்சனை செய்து, பேதியா - ஒருகாலத்தும் வேறுபடாத, இன்பம் ஆர் - சுகம் பொருந்திய, கதி - முத்தியுலகிற்கு, எகுவீர் - செல்வீர், போ எனு - போவென்று, மின்பிறங்கிய - மின்னல்போலப் பிரகாசிக்கிற, வேணி - சடாபாரத்தையுடைய பரமசிவன், விளம்பினன்-சொன்னான் எ-று.

அன்புகொண்டு என்பதில் கொண்டு மூன்றாவதன் சொல்லுருபு. வேணி ஆகுபெயர். வேணியையுடைய பரமசிவனைக் குறித்தலால். (ந0)

ஆன தாலவ் வருங்கண நாதனு
மானை யாகி யருச்சித் தடைந்தனன்
மான முத்தி யெனமகிழ்ந் தோதினன்
வான நாடு வணங்கு மகேசனே.

(இ - ள்.) ஆனதால் - ஆகையால், அ - அந்த, அருங்கண நாதனும் - அரிய கணேசனும், ஆனை ஆகி - யானையாகி, அருச்சித்து - அர்ச்சனை செய்து, மானம் - பெருமையுள்ள, முத்தி - மோக்கத்தை, அடைந்தனன் - அடைந்தான், என - என்று, மகிழ்ந்து - மனமகிழ்ந்து, ஓதினன் - சொல்லினன், (யார் எனின்) வானநாடு - விண்ணாட்டார் யாவரும், வணங்கும் - வணங்குதற் குரியனான, மகேசன் - மஹேசுவரன் எ-று.

வானநாடு - விண்ணாடு. அங்குள்ளாரை யுணர்த்தலால் ஆகுபெயர். மானம் - மேன்மையுமாம். (நக)

திண்ண னார்முற் பிறப்பினிச் செப்புதும்
வண்ண வேலவ கேட்டி மகிழெனப்
புண்ண வாமொழிப் பாவையோர் பாகனு
முண்ணி லாவரு ளாண்டவ னோதுவான்.

(**இ - ள்.**) திண்ணனார் - கண்ணப்ப நாயனாரது, முற்பிறப்பை - முற்சநநத்தில் கதையை, இனி செய்யுதும் - இனிச் சொல்லுவோம், வண்ணம் - அழகையுடைய, வேலவ - வேற்படையை யுடையவனே, கேட்டுமகிழ் - கேட்டு மகிழக்கடவை, என - என்று, பண் - பண்கள், அவாம் - விரும்புதற்குரிய, மொழி - சொற்களையுடைய, பாவை - உமாதேவியை, ஓர் பாகனும் - ஒரு பாகத்திலுடையவராகிய பரமசிவனுகிய, உள் கலாவு அருள் - கருணை மானது மனத்தில் நிலைபெற்றிருக்கிற, ஒள் தவன் - சிறந்த தவவேடம் பூண்ட விடசங்கமன், ஓதுவான் - சொல்லுவாரானினன் எ-று

பிறப்பு ஆகுபெயர். வண்ணம் - அழகு. பண்ண ஆம் மொழி எனக் கண்ணழிவு செய்து, பண்களின் நன்மையாகிய சொல் எனினுமாம். பாவை உவமையாகுபெயர். (௯௨)

பாண்டு மைந்தருட் பார்த்தன் பகைஞர்மேற்
றூண்டி வென்றிடச் சூர்ப்பகைத் தாதையை
வேண்டி யோர்கணை வாங்குதும் வெய்தென
மாண்ட விந்திர நீல மலையின்மேல்.

(**இ - ள்.**) பாண்டு மைந்தருள் - பாண்டு புத்திரர்களுக்குள்ளே, பார்த்தன் - அர்ஜுநன், பகைஞர்மேல் - சத்துருக்களின்மீது, தூண்டி - எவி, வென்றிட - அவர்களை வெல்லும்பொருட்டு, சூர்ப்பகை தாதையை - முருகவேளின் தந்தையாகிய பரமசிவனை, வேண்டி - பிரார்த்தித்து, ஓர் கணை - ஒப்பற்ற அஸ்திரத்தை, வெய்து என - (கண்டவர்) கொடிதென்று சொல்லும்படி, வாங்குதும் - பெறுவோம் என்று, மாண்ட - மாட்சிமைப்பட்ட, இந்திர நீல மலையின்மேல் - இந்திரநீல கிரியின்மீது எ-று.

பார்த்தன் - ப்ருதையின் புத்ரன். ப்ருதை - குந்திதேவி. தூண்டல் - ஏவுதல், பகுதி - தூண்டு. சூர்ப்பகை - சூரபன்மனுக்குப் பகைவன் (முருகக்கடவுள்). சூர்ப்பகைத் தாதையை வேண்டி வாங்கின கணையை பாசுபதாஸ்த்ரம் என்பர் வடநூலார். பாசுபதாஸ்த்ரம் - பசுபதியருளின அஸ்த்ரம். பசுபதி - பரமசிவன். (௯௩)

உற்றோர் நல்லிட மொன்றில் வதிந்ததில்
வற்றி லாப்புன லாடி மடியுடுத்
தெற்றை ஞான்று மிடுந்திரு நீறுமெய்
முற்று மேவப் புனைந்து முடிவினே.

(**இ - ள்.**) உற்று - சேர்ந்து, ஓர் நல் இடம் ஒன்றில் - ஒப்பற்ற நல்லிடமொன்றில், வதிந்து - தங்கி, அதில் - அதனிடத்துள்ள, வற்றிலா புனல் ஆடி - வற்றாத நீரில் மூழ்கி, மடி உடுத்து - மடியுடுத்துக்கொண்டு, எற்றை ஞான்றும் - எந்நாளும், இடும் - அணிதற்குரிய, திருநீறு - திருவெண்ணீற்றை,

மெய்முற்றும் - உடம்பு முழுதிலும், மேவ - பொருந்த, புனைந்து - அணிந்து, முடிவில் - இறுதியில் எ-று.

வதிதல் - தங்குதல், பகுதி வதி. வற்றிலாப்புனல் - சுனைநீர். மடி - தோய்த்துலர்த்திய ஆடை. பொய்யுடம்பை மெய் என்றது மங்கலவழக்கு. ()

அக்க மாமணி யன்பிற் றரித்தபின்
முக்க ணன்மனு வோதி முறையினின்
மிக்க வேறிடத் தெய்தி விழைந்ததிற்
றக்க வாதன மொன்றிற் றரித்தரோ.

(இ - ள்.) மா - பெருமையுள்ள, அக்கமணி - உருத்திராக்கமணியை, அன்பின் - அன்போடு, தரித்தபின் - தரித்தபிறகு, முக்கணன்மநு - ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை, முறையினில் - கிரமமாக, ஓதி-ஜபித்து, மிக்க-மேலான, வேறு இடத்து எய்தி - வேறிடத்திற் சேர்ந்து, விழைந்து - விரும்பி, அதில் - அவ்விடத்தில், தக்க - தகுதியாகிய, ஆதநம் ஒன்றில் - ஒரு ஆசநத்தில், தரித்து - தங்கி எ-று. அரோ - அசை.

முக்கணன் - மூன்று கண்களையுடையவனாகிய பரமசிவன். மநு - மந்திரம். முக்கணன் மநு என்றது திருவைந்தெழுத்தை, இதனை ஸ்ரீபஞ்சாக்ஷரம் என்பர் வடநூலார். விழைதல்-விரும்புதல், பகுதி விழை. ஆதநம் ஆஸநம் என்னும் வடசொற்றிரிபு. (௩௫)

இயங்கும் வாயு விடம்வல மெய்திடா
தயங்க வேநடு நாடியுள் ளோட்டியே
வியங்கொ ளாறிட மேற்றலை மீச்செல
வயங்கு மவ்வொளி யின்மன மாற்றினன்.

(இ - ள்.) இயங்கும் - சஞ்சரிக்கிற, வாயு - வாயுவானது, இடம்-இடப் பக்கத்திலும், வலம் - வலப்பக்கத்திலும், எய்திடாது உயங்க - செல்லாது மயங்கும்படி, நடுநாடி - நடுநாடியை, உள் ஓட்டி - உள்ளே ஓடுவித்து, வியம் கொள் - பெருமையைக்கொண்ட, ஆறு இடமேல் - ஆறிடங்களுக்கு மேலான இடத்தில், தலைமீசெல்ல - தலைமேற் செல்லும்படி, வயங்கும் - விளங்குகிற, அ - அந்த, ஒளியில் - பிரகாசத்தில், மனம் - தன்மனத்தை, மாற்றினன் - ஒடுக்கினன் எ-று.

வாயு - ப்ராணவாயு. இடம் வலம் என்றது இடைபிங்கலை நாடிகளை. நடுநாடியென்றது சுழுமுனை இது ஸுஷும்நா என்னும் வடசொற்றிரிபு. ஆறிடம் என்றது மூலாதாரம், சுவாதிஷ்டாநம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஜ்ஞேயம் என்பவற்றை. இவ்வாறிடங்களையும் ஷடாதாரம் என்பர் வடநூலார். இவ்விடயம் ஈண்டு விரிப்பிற் சுருங்காது விரியுமாதலால் இம்மட்டில் நிறுத்தலாயிற்று. (௩௬)

இந்த வாறங் கிருந்து தனஞ்சய
னந்தி லாத்தவ மாற்றி நணுகிட
முந்து நாளின் மூகாசுர னென்பவன்
வந்து பன்றி வடிவொடு வைகினான்.

(இ - ள்.) இந்தவாறு - இந்தப் பிரகாரம், அங்கு - அவ்விடத்தில் தனஞ்சயன் இருந்து - அர்ஜுநனிருந்து, நந்திலா - குறையாத, தவம் ஆற்றி நணுகிட - தவஞ் செய்துகொண்டிருக்க, முந்துநாளில் - முற்காலத்தில், மூகாசுரன் என்பவன் - மூகாசுரன் என்று சொல்லப்பட்டவனாகிய ஓர் அசுரன், வந்து - அவ்விடத்தில் வந்து, பன்றி வடிவொடு - பன்றி யுருவோடு, வைகினான் - தங்கியிருந்தான் எ-று.

நந்தல் - கெடுதல் எனினுமாம், பகுதி நந்து. தவம் தபஸ் என்னும் வடசொற்றிருபு, ஆற்றல் - செய்தல், பகுதி ஆற்று. மூகாசுரன் - மூகன். அசுரன் எனப் பிரித்து மூகன் என்னும் அசுரன் எனப் பொருளுரைத்தற் குரிய வடசொல். மூகாசுரன் எனற்பாலது முகாசுரன் எனக் குறுக்கல் பெற்றது. (கஎ)

அனைய கானி லருந்தவர் யாவரு
மினைய வேயவ் வெறுழி யியற்றலான்
மனந டுங்கி வதிந்தன ரன்னது
பினையு மோர்பகற் பேதுற வந்ததால்.

(இ - ள்.) அனையகானில் - அந்தக் காட்டில், அரு - அருமையாகிய, தவர் யாவரும் - தவசிகளெல்லாரும், இனைய - வருந்தும்படி, அ - அந்த, எறுழி - பன்றி, இயற்றலால் - செய்தலால், (அங்குத் தவஞ்செய்யும் தவசிகளெல்லாரும்) மனம் நடுங்கி வதிந்தனர் - மனங்கலங்கி யிருந்தார்கள், அன்னது - அந்தப் பன்றியானது, பின்னையும் ஓர்பகல் - பின்னுமொருநாள், (அங்குள்ளோர் யாவரும்) பேதுற-மனங்கலங்க, வந்தது-அங்கு வந்தது எ-று.

இனைதல் - வருந்துதல், பகுதி இனை. பேதுறல்-மயங்கலெனினுமாம், பகுதி பேதுறு. (கஅ)

நீல மாமலை நித்த வுயிர்பெறீஇக்
கோல மாகிக் குறுகிய தென்னவுங்
கால னவ்வுருக் கொண்டு கடத்திடைச்
சால வேதிரிந் தென்னவுந் தக்கது.

(இ - ள்.) (அந்தப் பன்றியானது) மா - பெரிய, நீலமலை - நீலகிரியானது, நித்த உயிர் பெறீஇ - அழியாத வுயிரைப்பெற்று, கோலம் ஆகி-பன்றியாகி, குறுகியது என்னவும் - வந்ததென்று சொல்லும்படியாகவும், காலன் - யமன், அவ்வுருகொண்டு - அந்தப் பன்றியுருவங்கொண்டு, கடத்திடை -

அந்தக்காட்டில், சால - மிகுதியாக, திரிந்தென்னவும் தக்கது - திரியாநின்ற தென்று சொல்லவுந் தகுந்திருந்தது எ-று.

நித்தம் நித்யம் என்னும் வடசொற்றிரிபு. இதற்கு அழியாமையெனப் பொருள் கூறுவர் வடநூலார். பெறீஇ - சொல்லிசையளபெடை. பகுதி பெறு. கோலம் - பன்றி. கடம் - காடு. குறுகுதல் - வருதல், பகுதி குறுகு. (நக)

வெந்நு ரிஞ்சிடும் விண்ணின் முகட்டினைத்
துன்னு யிர்ப்பிற் றுளங்குங் கிரியெலா
மின்ன கேழ லெறுழ்வலி மாற்றிடப்
பொன்னை நேர்சடைப் புங்கவன் முன்னினான்.

(இ - ள்.) வெந் - (அந்தப் பன்றியின்) முதுகானது, விண்ணின் முகட்டினை - ஆகாயமுகட்டை, உரிஞ்சிடும் - தடவும், துன் - மிக்க, உயிர்ப்பின் - அதன் சுவாசத்தால், கிரியெல்லாம் - மலைகளெல்லாம், துளங்கும்-அசையும், இன்ன - இத்தன்மைத்தாகிய, கேழல் - பன்றியின், எறுழ்வலி - மிக்க வலியை, மாற்றிட-ஒழிக்கும்பொருட்டு, பொன்னைநேர் சடை - பொன்வீழினை நிகர்த்த சடாபாரத்தையுடைய, புங்கவன் - பரமசிவன், முன்னினான் - திருவுளம் பற்றினான் எ-று.

வெந் - முதுகு. உயிர்ப்பு - பெருமூச்சு எனினுமாம். துளங்கல் - அசைதல், பகுதி துளங்கு. கிரி - வடசொற்றிரிபு. புங்கவன் - தேவன் (பரமசிவன்). முன்னல் - நினைத்தல், பகுதி முன். (சo)

அருட்பெ ருங்கட லாகி யமர்ந்தவ
னிருட்செ றிந்த மிடற்றி னுருவெடா
மருட்கொ டும்பிணி மாற்று மலரடி
பொருட்பெ றுந்தொடு தோலொடு பொற்புற.

(இ - ள்) அருள்பெருங்கடல் ஆகி அமர்ந்தவன் - பெரிய அருட்கடலாயிருக்கிற பரமசிவன், இருள் செறிந்த - இருள் மிகுந்த, மிடற்றின் - கண்டத்தையுடைய, உரு - உருவத்தை, எடா - எடுக்காமல், மருள் - மயக்கத்தையுடைய, கொடு - கொடிய, பிணி - பிறவிநோயை, மாற்றும் - ஒழிக்கிற, மலர் அடி - தாமரை மலர்போலுந் திருவடியில், பொருள் பெறும் - பொருள்பெற்ற, தொடுதோலொடு - செருப்புடனே கூடி, பொற்பு உற - அழகு மிகாநிற்க எ-று.

அருட்பெருங்கடல் என்றது பேரருளுடையவன் என்றபடி. இருள் - நஞ்சக்கறை. மிடறு - கண்டம். தொடுதோல் - செருப்பு. இதனைப் பாதரக்ஷா என்பர் வடநூலார். (சக)

அரைத னிற்றுகி லொன்றசைத் தன்னதிற்
புரையி லாமற் புலியதள் வீக்கியோர்
சுரிகை தோன்றிட வார்த்துத் துகளிலா
மரும மீது கவடிய மாலையும்.

(இ - ள்.) அரைதனில்-திருவரையில், துகில் ஒன்று - ஒரு ஆடையை, அசைத்து - கட்டி, அன்னதில் - அதனிடத்தில், புரை இல்லாத - குற்ற மற்ற, புலி - புலியின், அதள் - தோலை, வீக்கி - கட்டி, ஓர் சுரிகை - ஒரு சுரிகையை, தோன்றிட - எல்லார்க்கும் தோன்றும்படி, ஆர்த்து - கட்டி, துகள் இல்லா - குற்றமில்லாத, மருமம்மீது - மார்பின்மேல், கவடிய - கவடிகளால் கோக்கப்பட்ட, மாலையும் - மாலையையும் எ-று.

அரைதனில் என்பதில் தன் சாரியை. அசைத்தல் - கட்டுதல். அதள் - தோல். வீக்குதல் - கட்டுதல், பகுதி வீக்கு. சுரிகை - சிறுகத்தி. ஆர்த்தல் - கட்டுதல், பகுதி ஆர். மருமம் - மர்மம் என்னும் வடசொற்றிரிபு. கவடி - பலகறை. (சஉ)

குன்றி வேய்ந்திடு கோதையுந் தோளள
வன்றி மேவ வணிந்து களமிசைத்
துன்று சங்க மணியுந் துலங்கிட
நன்றி பெற்ற சிகழி நலம்பெற.

(இ - ள்.) குன்றி - குன்றி மணிகளால், வேய்ந்திடு - தொடுக்கப்பட்ட, கோதையும் - மாலையும், தோள் அளவு அன்றி - தோளளவைக் கடந்து, மேவ - தொங்க, அணிந்து - தரித்து, களம்மிசை - கண்டத்தில், துன்று - நெருங்கின, சங்கமணியும் - சங்குமணி மாலையும், துலங்கிட - விளங்க, நன்றிபெற்ற - அழகுபெற்ற, சிகழி-முடி, நலம்பெற-நன்றாய் விளங்க எ-று.

தோள் அளவு அன்றிமேவ - என்பதற்குத் தோளளவைப் பொருந்தி விளங்கவென் றுரைத்தலுமாம். களம் - கண்டம், இது வடசொற்றிரிபு. சிகழி - மயிர்முடி. (சங)

ஆத்தி கொன்றை யவையொரு வாமலே
சாத்தி யோர்சது ரத்துகி றாழ்ந்திட
வேத்து மண்ண லெழில்புனைந் தங்கையின்
மூத்த மூங்கின் முளியும் பிடித்தனன்.

(இ - ள்.) ஆத்தி - ஆத்திமலர்மாலை, கொன்றை-கொன்றைமலர்மாலை, (என்கிற) அவை-அவற்றை, ஒருவாமல் சாத்தி-இடையறாமலணிந்து, ஓர்-ஒரு, சதுரத்துகில் - சதுரமாகிய ஆடை, தாழ்ந்திட - தொங்க, ஏத்தும் - யாவரும் துதித்தற்குரிய, அண்ணல் - பெரியோன், எழில் புனைந்து - அழகாகத் தரித்து, அங்கையில் - அகங்கையில், மூத்த - முதிர்ந்த, மூங்கில் முளியும் - மூங்கிற்றண்டையும், பிடித்தனன்-பிடித்தான் எ-று.

ஆத்தி கொன்றை யென்பன ஆகுபெயர்கள். ஒருவாமல் - நீங்காமல். மூத்த என்பதற்குப் பகுதி மூ. மூங்கில் முளி - மூங்கிற்றடி. (சுச)

மண்டி ணாத மணிக்கணை மன்னிடும்
பண்டி லாவொரு தூணி பரித்துவெந்
நண்டர் நாயக னம்பு வலக்கரங்
கொண்டு கோலமிவ் வாறுகொண் டானரோ.

(இ - ள்.) மண் தின்னாத - மண்ணை யுண்ணாத, மணிக்கணை - அழகாகிய அம்பு, மன்னிடும் - நிலைபெற்றிருக்கிற, பண்டு இல்லா - முற்காலத்தில்லாத, ஒரு தூணி - ஒரு அம்புக்கூடு, வெந் - முதுகில், பரித்து - தாங்கி, அண்டர் நாயகன் - தேவநாயகனது, அம்பு - அஸ்திரத்தை, வலக்கரம் கொண்டு - வலக்கையிலேந்தி, இவ்வாறு - இவ்விதமான, கோலம் கொண்டான் - வேடங்கொண்டான் எறு.

அரோ - அசை. மண் தின்னாத மணிக்கணை-விட்டுணு வில்லாத அழகிய அம்பு. அண்டர்நாயகன் அம்பு - பாசுபதாஸ்திரம். (சரு)

இமைய மீன்றரு ளன்னையு மெம்பிரான்
சமையும் வேட வடிவு தனக்குநே
ரமைவு பெற்றிட் டதற்கியை பாகவே
யிமையொ டுங்குமுன் னெய்தின ளென்பவே.

(இ - ள்.) இமையம் - இமையமலையானது, ஈன்றருள் - பெற்றருளின, அன்னையும் - தாயும், எம்பிரான் - எம்பெருமான், சமையும் - சமைந்த, வேடவடிவு தனக்கு - வேட வுருவத்திற்கு, நேர் - நிகராக, அமைவு பெற்றிட்டு - அமைந்து, அதற்கு இயைபு ஆகவே - அதற்குப் பொருத்தமாகவே, இமை ஓடுங்குமுன் - இமை முடியுமுன்னே, எய்தினள் - வந்தாள், என்ப - என்று சொல்லுவர் (அறிஞர்) எ-று.

ஏ - அசை. இமையம் ஈன்றருளன்னை யென்றது உமாதேவியை. ()

இயன்ற கோல மிருவரு மெய்தியே
முயன்று முன்னவன் முன்செல நம்மனை
வியன்ற கானில் விரைந்துபின் போயினாள்
பயன்ற ரும்பர மேசன் பணிப்பவே.

(இ - ள்.) இருவரும் - உமாமகேசராகிய இருவரும், இயன்ற கோலம் எய்தி - பொருத்தமாகிய வேடவேடம் தாங்கி, முயன்று - முயற்சி செய்து, முன்னவன் முன் செல்ல - பரமசிவன் முன்னே போக, நம் அன்னை - எமது தாயாகிய உமாதேவி, வியன்ற கானில் - பெரிய காட்டின்கண்,

பயன் தரும் - பயன் கொடுக்கிற, பரமேசன் பணிப்ப - பரமசிவன் கட்டளையிட, விரைந்து-விரைவாக, பின் போயினாள்-பின்றொடர்ந்து சென்றாள் எ-று.

யாவர்க்கும் முன்னுள்ளவனாதலால் பரமசிவனை முன்னவன் என்றார். "மூப்பா னிளையவன் முன்னவன் பின்னவன்" என்னும் திருக்கோவைப் பாடல் ஈண்டு ஆராயத்தக்கது. வியன்ற வியன் என்னும் உரிச்சொலடியாகப் பிறந்த பெயரெச்சம். பணித்தல் - நியமித்தல். (சஎ)

றத்தி னிறைவனக் கேழலை
யத்தி ரத்தி னகனிலஞ் சாய்த்திடச்
சித்த மீதுனிச் சென்றிடக் கண்டவஃ
தத்த னாெதி ரார்த்தங் கடைந்ததே.

(இ - ள்.) இத்திறத்தின் - இத்தன்மையுடைய, இறைவன் - சிவபிரான், அ - அந்த, கேழலை - பன்றியை, அத்திரத்தின் - அம்பினால், அகல் நிலம் - விரிந்த பூமியின்மேல், சாய்த்திட-வீழ்த்தலும், சித்தம் மீது உன்னி - திருவுளத்தில் நினைத்து, சென்றிடக்கண்ட அஃது - போகக்கண்ட அப்பன்றியானது, அத்தனார் எதிர் - சிவபிரானுக் கெதிரில், ஆர்த்து - ஆரவாரம் பண்ணிக்கொண்டு, அங்கு அடைந்தது - அவ்விடத்தைச் சேர்ந்தது எ-று.

ஏ - அசை. கேழல் - பன்றி. அத்திரம் - அஸ்த்ரம் என்னும் வடசொற்றிரிபு. சித்ரம் - வடசொல் (தத்ஸமம்). (சஅ)

மாலெ டுத்த வெறுழி வடிவனை
கோல முற்றிடக் கோபமி லாதரன்
சால வெய்கிலன் றொரு லீலையா
னேல வெய்தன னின்கணை யொன்றினால்.

(இ - ள்.) அன்ன கோலம் - அந்தப் பன்றியானது, மால் - விட்டுணு, எடுத்த-(முற்காலத்தில்) எடுத்த, எறுழி-பன்றியின், வடிவு-உருவத்தை, உற்றிட - அடைதலும், அரன் - சிவபிரான், கோபம் இல்லாது - கோவமில்லாமல், சால எய்கிலன் - கடுமையா யெய்யாமல், ஒரு லீலையான் - ஒரு விளையாடலாக, இன் கணை ஒன்றினால் - இனிய ஓரம்பினால், ஏல - பொருந்த, எய்தனன் - எய்தான் எ-று.

லீலை - லீலா என்னும் வடசொற்றிரிபு. இன்கணை - வருத்தாத அம்பு. (சக)

வைகொ ளுங்கணை வந்து படுதலும்
பெய்யு மாமுகி லென்னப் பெரிதுகூ
யைய னைவெரீஇ யாரனாப் பன்றிதா
னெய்யெ னுமறிந் தோடி யொளித்ததே.

(இ - ள்.) வைகொள்ளும் - கூர்மையைக் கொண்ட, கணை - அம்பானது, வந்து படுதலும்—, பெய்யும் - மழை பெய்கிற, மாமுகில் என்ன - பெரிய மேகம்போல, பெரிது கூய் - பெருங் கூச்சலிட்டு, ஐயனை வெரீஇ - சிவபிரானுக்கு அஞ்சி, ஆர் அஞர்-மிகத் துன்பமடைந்த, பன்றி—, ஒய்யென மறிந்து - விரைந்து திரும்பி, ஓடி ஒளித்தது - ஓடி மறைந்தது எ-று.

வெரீஇ - சொல்லிசை யளபெடை. ஏ - ஈற்றசை. (௫0)

ஒப்பி லாதவ னோடியக் கேழலைத்
தப்பு றாமற் றொடர்தரச் சாய்ந்தது
வெய்ப்பி லாத முனிவ ரிடத்தெய்த
வொப்ப வோடின ரொய்யென யாருமே.

(இ - ள்) ஒப்பு இல்லாதவன் - ஒப்பற்றவனாகிய பரமசிவன், ஓடி—, அ - அந்த, கேழலை - பன்றியை, தப்பு உறாமல் - தவறுதலில்லாதபடி, தொடர்தர - தொடர்ந்துபோக, அது - அந்தப் பன்றியானது, சாய்ந்து - இளைத்து, எய்ப்பு இல்லாத-சோர்வில்லாத, முனிவர் இடத்து - முனிவரிடத்தில், எய்த - போய்ச் சேர்தலும், யாரும் - அந்த முனிவரெல்லாரும், ஒப்ப - ஒருமிக்க, ஒய்யென ஓடினர் - விரைவாக ஓடினார்கள் எ-று.

கேழல் - பன்றி. தொடர்தர ஒருசொல், பகுதி தொடர்தா. (௫௧)

மெய்வெ யர்த்து விசய னிருந்துழி
யையர் யாரு மடைய வவனெழீஇக்
கையில் லேந்திக் கணைகொடு போயினன்
சைய மாமெனச் சார்ந்த வெறுழிமேல்.

(இ - ள்.) மெய் வெயர்த்து - உடம்பு வேர்த்து, விசயன் - அருச்சுனன், இருந்துழி - இருந்த இடத்தில், ஐயர் யாரும் - முனிவரெல்லாரும், அடைய - வந்து சேர, அவன் - அந்த அர்ஜுநனானவன், எழீஇ - எழுந்து, கையில் ஏந்தி - கையில் வில்லைத் தாங்கி, கணைகொடு போயினன் - அம்புகளையும் கொண்டு சென்றான், (எங்கே யெனின்) சையம் ஆம் என - மலையென்னும் படி, சார்ந்த - வந்தடைந்த, எறுழிமேல் - பன்றியின்மீது எ-று.

பொய்யுடம்பை மெய்யென்றது மங்கலவழக்கு. எழீஇ - சொல்லிசை யளபெடை. சையம் - மலை, குடகமலை யெனினுமாம். (௫௨)

வெய்ய கோலம் விழிகள் சிவந்திட
வெய்யில் வன்மயி ரெங்கு நிமிர்ந்துற
வைய மீதிடி வந்தென வந்திட
மையில் வீரன் வடவையி னேர்ந்தனன்.

(இ - ள்.) வெய்யகோலம் - கொடிய பன்றியானது, விழிகள் சிவந்திட - கண்கள் செவக்க, எய் இல் - முட்பன்றிபோல, வன்மயிர் - வலிய மயிர்கள்,

எங்கும் - உடம்பு முழுதும், நிமிர்ந்துற - சிலிர்த்திருக்க, வையமீது - பூமியின் மேல், இடிவந்தென - இடிவந்தாற்போல, வந்திட - வர, மை இல் - குற்றமில்லாத, வீரன் - விசயனெனவன், வடவையின் - வடவைத் தீப்போல, நேர்ந்தனன் - சென்று எதிர்ந்தான் எ-று.

கோலம் - பன்றி. எல் - முட்பன்றி. மையில் வீரன் என்றது வீரத்தன்மையிற் குறையாதவன் என்றபடி. வடவையின் என்பதில் இன் என்னும் ஐந்தனுருபு ஒப்புப் பொருளது. வடவை - வடவைத்தீ, இது கடல்நீர் எல்லே கடவாதிருக்கும்படி கடலினிடையே பெட்டைக்குதிரை யுருவாகப் படைப்புக்காலத்தில் படைத்தமைக்கப்பட் டிருப்பதோர் பெருநெருப்பு. ()

வாங்கி வில்லினை வல்லே கணைதொடுத்
தோங்கி வீழ்தர வெய்தன னொன்னலா
ரேங்கி யோட விருஞ்சமர் முற்றிடுந்
தீங்கி லாத விசயன் றிறலினான்.

(இ - ள்.) ஒன்னலார் - பகைவர், ஏங்கி ஓட - அழுதுகொண்டோடும்படி, இரு - பெரிய, சமர் முற்றிடும் - போரை முடிக்கிற, தீங்கு இல்லாத - குற்றமற்ற, விசயன் - அர்ஜுநன் என்கிற, திறலினான் - மஹாவீரன், வில்லினை - தனது வில்லை, வாங்கி - வளைத்து, வல்லே - விரைவாக, கணைதொடுத்து - அம்புதொடுத்து, ஓங்கி—, வீழ்தர - (அந்தப்பன்றி) விழும்படி, எய்தனன் - எய்தான் எ-று.

வாங்கல் - வளைத்தல், பகுதி வாங்கு. ஏங்கல் - அழுதல், பகுதி ஏங்கு. சமர் - ஸமரம் என்னும் வடசொற்றிரிபு. (௫௪)

பன்றி வீழப் பரமனும் வந்துநான்
கொன்ற னன்னிதை யென்றுரை கூறலு
முன்றன் வாளி யுருவுவ தோவிதை
நன்று கூறினை நன்றியில் வேடனே.

(இ - ள்.) பன்றி - பன்றியானது, வீழ - விழுதலும், பரமனும் வந்து - பரமசிவனும் வந்து, இதை - இந்தப் பன்றியை, நான் கொன்றனன் என்று - நான் கொன்றேனென்று, உரைகூறலும் - சொன்னமாத்திரத்தில், (அர்ஜுநன் பரமசிவனைநோக்கி) நன்றி இல் வேடனே - நன்மையற்ற வேடனே, நன்று கூறினை - நன்றாகச் சொன்னாய், இதை - இந்தப் பன்றியை, உன்றன் வாளி-உன் அம்பானது, உருவுவதோ-தைத்துருவிச் செல்லவல்லதோ எ-று.

பரமன் - எல்லாத் தேவரினும் மேன்மையுடையவன். தத்துவங்களெல்லாவற்றையும் கடந்தவன் எனினுமாம். உருவுவதோவென்னு மோகாரம் எதிர்மறை. (௫௫)

நான்வி டுத்திடு மம்பு நணுகவுங்
கான டுத்த கடுந்தொழில் வேட்டுவ
வூன முற்றிடு முன்னுடை யாடினை
கூனல் விற்கொடு போவுன் குறிச்சியில்.

(இ - ள்.) கான் அடுத்த - காட்டில் வாழ்கிற, கடுந்தொழில் - கொடுந் செய்கையையுடைய, வேட்டுவ - வேடனே, நான் விடுத்திடும் - நான் [illegible], அம்பு - கணை, நணுகவும் - வந்துதைக்கவும், [illegible], உன் உடை அடியினை - உன் [illegible], கூனல் [illegible] - (உன்) வளைவாகிய வில்லைக் கைக்கொண்டு, [illegible] சிக்க, போ - செல்லக்கடவை. எ-று.

ஊனமுற்றிடும் உடை - [illegible] சொன்னது. உடைத்தனை [illegible]. குறிச்சி - [illegible] னைப் பட்டியென்றுங் கூறுப. (ருசு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

என்று மாதவம் புரிந்திடும்
  விசயனு மிறைவனு மிகலெய்தி
நன்று வீரமா திருந்திடு
  தனுவினை நாரியின் கொனைநீக்கிச்
சென்று மோதின ரிருவருஞ்
  செருச்செயத் தனஞ்சய னதுகாலைக்
குன்ற வில்லிதன் முடிமிசைத்
  தாக்கினன் குழகனு மதுகொண்டான்.

(இ - ள்.) என்று - என்று சொல்லி, மாதவம் புரிந்திடும் - பெரிய தவத்தைச் செய்கிற, விசயனும் - அர்ஜுநனும், இறைவனும் - சிவபெருமானும், இகல் எய்தி - பகைகொண்டு, வீரமாது - வீரலக்ஷ்மியானவள், நன்று இருந்திடு - வீற்றிருக்கிற, தநுவினை - வில்லை, நாரியின் கொனை நீக்கி - நாணின் நுனியைக் கழற்றி, சென்று மோதினர் - சென்று தாக்கினர், இருவரும் - இருவரும், செருச்செய - போர்செய்ய, தனஞ்சயன் - அர்ஜுநன், அதுகாலை - அந்தச் சமயத்தில், குன்றவில்லி - மலைவில்லியின், முடிமிசை - சிரத்தின் மேல், தாக்கினன் - அடித்தான், குழகனும் - பரமசிவனும், அது கொண்டான் - அந்த அடியை ஏற்றுக்கொண்டான் எ-று.

தனு - தநு வென்னும் வடசொற்றிரிபு. கொனை திசைச்சொல். குன்றவில்லி - மேருமலையாகிய வில்லையுடையவன். குழகன் - அழகன். (குழகம் - அழகு). (ருஎ)

உலக னைத்தையு மாக்கிடு
மொருவனு மோதிம வடிவெய்தி
யலகி றந்துள நாளெலாந்
தேடியு மறிவதற் கரிதாகி
யிலகு றுந்திரு முடியினி
லேற்றனன் விற்றழும் பினையென்று
னலமு றும்மடி யவர்களுக்
கெளியவ னவிற்றிலம் முகன்றானே.

(இ - ள்.) நலம் உறும்படி-நன்மையடையும்படி, அடியவர்களுக்கு எளியவன்—, நவிற்றில் - சொல்லுமிடத்தில், ஐம்முகன் - ஐந்து திருமுகங்களையுடையவனாகிய பரமசிவன், உலகு அனைத்தையும் - உலகமுழுதினையும், ஆக்கிடும் - படைக்கிற, ஒருவனும் - ஒப்பற்றவனாகிய பிரமனும், ஓதிமவடிவு எய்தி - அன்னவுருவையடைந்து, அலகு இறந்துள - அளவுகடந்துள்ள, நாள் எல்லாம் தேடியும் - நாள்களெல்லாம் தேடியும், அறிவதற்கு அரிது ஆகி இலகுறும் - அறிதற்கரிதாய் விளங்குகிற, திருமுடியினில்-திருமுடியின்மீது, வில்தழும்பினை - விற்சுவட்டினை, ஏற்றனன் என்றான் - ஏற்றுக் கொண்டேனென்றான் எ-று.

ஓதிமம் - அன்னம். (ருஅ)

மீண்டு மற்றொழில் விளைத்தனர்
விமலனும் விசயனும் விளையாட்டாற்
பாண்டு மைந்தனும் பாலனைக்
கிரீடியைப் பரிவொடு நலமாகத்
தீண்டி யாடினன் சிவனருட்
செயலினை யாவரே தெரிகிற்பா
ராண்டு தன்னுருக் காட்டின
னமரரு மரகர வெனமாதோ.

(இ - ள்.) மீண்டும் - மறுபடியும், விமலனும் - சிவபெருமானும், விசயனும் - அர்ஜுநனும், விளையாட்டால் - விளையாடலாய், மல்தொழில் விளைத்தனர் - மற்போர் செய்தனர், பாண்டுமைந்தன்ஆம் - பாண்டுபுத்திரனாகிய, பாலனை - பாலகனை, கிரீடியை - அர்ஜுநனை, பரிவொடு - அன்போடு, நலமாக - நன்றாக, தீண்டி - தொட்டு, ஆடினன் - விளையாடினன், சிவன் - சிவபெருமானது, அருள் செயலினை - திருவருட் செய்கையை, யாவரே தெரிகிற்பார் - தெரிந்துகொள்ளவல்லவர் யாவர், ஆண்டு - அவ்விடத்தே, அமரரும் - தேவர்களும், அர அர என - அரகரவென்று துதியாநிற்க, தன் உருகாட்டினன் - தன் உருவத்தைத் தோற்றுவித்தருளினான் எ-று.

மாது ஓ அசைகள். விளைத்தல் - உண்டாக்கல், பகுதி விளை, இது பொதுவினைப் பகுதி. விமலன் - மலரஹிதன். (இயல்பாகவே மலராஹித்யமுடையவன்). பரிவு - அன்பு. யாவரேயென்னு மேகாரம் எதிர்மறை. (ருக)

முக்க ணெம்பிரான் முதல்வியுந்
தானுமாய் மூரிவெள் விடையேறிச்
சக்க ரத்தரி முதலிய
தேவர்க டனித்தனி புகழ்ந்தேத்த
மிக்க பேரருட் டலைமையி
னிற்பதை விசயனு மிகக்கண்டா
னக்க ணத்தினி லவன்செய
லிதுவென வறைந்திட வார்வல்லார்.

(இ - ள்.) **முக்கண்** - மூன்று கண்களையுடைய, **எம்பிரான்** - எம்பெருமான், **முதல்வியும் தானும் ஆய்** - உமாதேவியும் தானுமாக, **மூரி**-வலியுள்ள, **வெள்விடை** - வெள்ளெருதின்மீது, **ஏறி** - ஆரோகணித்து, **சக்கரத்து** - சக்ராயுதத்தையுடைய, **அரிமுதலிய தேவர்கள்** - விட்டுணுமுதலிய தேவர்கள், **தனித்தனி** - தனித்தனியே நின்று, **புகழ்ந்து ஏத்த** - புகழ்ந்து துதிக்க, **மிக்க** - மிகுதியாகிய, **பேரருள் தலைமையில் நிற்பதை** - அருட்பெருக்கத்தின் முதன்மையில் நிற்பதை, **விசயனும்**-அர்ஜுநனும், **மிகக் கண்டான்** - மிகுதியாகப் பார்த்தான், **அக் கணத்தினில்** - அந்த க்ஷணத்தில், **அவன் செயல் இதுவென** - அவன் செய்கை யிதுவென்று, **அறைந்திட** - சொல்ல, **வல்லார் ஆர்** - வல்லவர் யாவர் எ-று.

மூரி - பெருவலி. இப் பெருவலியுள்ள வெள்விடை யீண்டைக்கின்றியமையாததாயிற்று. முதல்வியுந் தானும் இவர்தற் கென்க. அறைந்திட என்பதற்குப் பகுதி அறை. ஆர் வல்லார் என்ற வினு ஒருவரும் வல்லரல்லார் என்பதை விளக்கிநின்றது. (௬0)

மெய்ந டுங்கினன் வெயர்த்தன
னயர்த்தனன் மிக்கவன் புளநீங்கிச்
செய்ய கண்வழி பாய்ந்தன
வானந்தச் செழும்புன லாறொக்க
வைய மேல்விழுந் தெழுந்தனன்
மயங்கின னுயங்கினன் மனந்தேறி
யைய னேயடி யேன்பிழை
பொறுப்பதுன் னருளினுக் கணியென்றான்.

(இ - ள்.) **மெய் நடுங்கினன்** - சரீரம் நடுங்கினான், **வெயர்த்தனன்** வேர்த்தான், **அயர்த்தனன்**-சோர்ந்தனன், **மிக்க**-மிகுதியாகிய, **அன்பு**—, **உள்**

ளம் நீங்கி - மனத்தைவிட்டு, செய்ய கண்வழி - செவந்தகண் வாயிலாக, பாய்ந்தன - ஒழுகின, ஆனந்தச் செழும்புனல் - ஆநந்தமாகிய செழிய நீரா னது, ஆறு ஒக்க - யாற்றை நிகர்க்க, வையம்மேல் விழுந்து எழுந்தனன்-நிலத் தின்மீது வீழ்ந்து எழுந்தான், மயங்கினன்—, உயங்கினன்—, மனம் தேறி - மனந் தெளிந்து, ஐயனே—, அடியேன் - தொண்டனேனது, பிழை - குற் றத்தை, பொறுப்பது - க்ஷமித்தருள்வது, உன் அருளினுக்கு - உன் திருவரு ளுக்கு, அணி என்றான் - அழகாகுமென்றான் எ-று.

வெயர்த்தல் - வேர்த்தல், இதற்குப் பகுதி வெயர். தேறி யென்பதற் குப் பகுதி தேறு. (சுக)

மேற்படி வேறு

கார்முக வுழவன் சொன்ன கட்டுரை யனைத்துங் கேட்டுக்
கூர்முக வயில்வேற் பிள்ளை கூறிய தொத்த தஞ்சேல்
பார்முக வரச வேண்டும் பரிசுசொற் றருது மென்று
வார்மிகு கொன்றை வேய்ந்த வண்ணலா ரருளிச் செய்தார்.

(இ - ள்) கார்முகம் உழவன்சொன்ன - அர்ஜுனன் சொல்லிய, கட் டுரை அனைத்தும் கேட்டு - உறுதிச்சொற்க ளெல்லாவற்றையும் செவி யேற்று, கூர்முகம் - கூர்மையாகிய நுனியையும், அயில்வேல்-அயில்வேலையு முடைய, பிள்ளை - புதல்வன், கூறியது ஒத்தது - சொன்னதை யொத்தது, அஞ்சேல் - அஞ்சற்க, பார்முகம் அரச-மண்ணுலகத்துக் கரசனே, வேண்டும் பரிசுசொல் - உனக்கு வேண்டும் பரிசு சொல்லக்கடவை, தருதும் என்று - தருவோமென்று, ஆர்-ஆத்திமலர்மாலையையும், மிகு கொன்றை-மிகுதியாகிய கொன்றைமலர் மாலையையும், வேய்ந்த - சூடின, அண்ணலார்-பெருமானை வர், அருளிச் செய்தார்—, எ-று.

அருச்சுனனை கார்முகவுழவன் என்றது அவனது விற்றிறம் விளக்குதற் கென்க. கூர்முகவயில் வேற்பிள்ளை யென்றது முருகக்கடவுளை. ஆர் கொன்றை என்பன ஆகுபெயர்கள். (சுஉ)

கலிவிருத்தம்

பத்தியிற் பணிந்துபின் பாண்டு மைந்தனு
மெத்தவெம் பவத்தினான் மிகவு நொந்தன
னத்தநின் னருளினா லடிய னேனுய்ய
முத்தியை யருளென முதல்வன் கூறிடும்.

(இ - ள்) பின் - பிறகு, பாண்டு மைந்தனும் - அர்ஜுனனும், பத்தியின்- பக்தியினால், பணிந்து - வணங்கி, மெத்த வெம்பவத்தினால் - மிகக் கொடிய பிறவிகளால், மிகவும் நொந்தனன் - மிகுதியாய் வருந்தினேன், அத்த - எமது தந்தையே, நின் அருளினால் - உன் கருணையால், அடியேன் உய்ய -

அடியேனுய்யுமாறு, முத்தியை அருள் என - மோக்கத்தைத் தாக்கடவை யென்று வேண்ட, முதல்வன் - பரமசிவன், கூறிடும் - சொல்வானாயி னன் எ-று.

பத்தியின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப் பொருள் குறித்தது. பவம் - வடசொற்றிரிபு. முத்தி - முக்தியென்னும் வடசொற்றிரிபு. (௬௩)

வாங்குவிற் றடக்கையாய் வாரி சூழ்நிலத்
தோங்கிய பகைஞரை யொறுக்கு மாற்றினற்
றீங்கறு கணைபெறச் சிந்தை செய்துநீ
யோங்கிய தவமிக வுஞற்றி வைகினய்.

(**இ - ள்.**) வாங்கு - வளைத்த, வில் - வில்லைத் தாங்கிய, தடம் - பெரிய, கையாய் - தோளினையுடையவனே, வாரி சூழ் - கடல் சூழ்ந்த, நிலத்து - நிலவுலகத்தில், ஓங்கிய - மிகுந்திருக்கிற, பகைஞரை - சத்ருக்களை, ஒறுக்கும் ஆற்றினல் - வெல்லுதற்குரிய வகையால், தீங்கு அறு - தீமையற்ற, கணைபெற - அஸ்திரத்தைப் பெறும்பொருட்டு, சிந்தை செய்து - நினைத்து, நீ—, ஓங்கிய - உயர்ந்த, தவம் - தவத்தை, மிக - மிகுதியாக, உஞற்றி - செய்து, வைகினய் - ஈண்டுத் தங்கினய் எ-று.

வாங்கல் - வளைத்தல், பகுதி வாங்கு. வாரி - வடசொல். நீரையுடைய தென்பது பொருள் (வார் - நீர்). ஒறுத்தல் - வெல்லல், பகுதி ஒறு. சிந்தைசெய்து ஒருசொல். (சிந்தித்து) உஞற்றல் - செய்தல், பகுதி உஞற்று. (௬௪)

முன்னிய பகழிநீ கோடி முன்னெனத்
தன்னிகர் சங்கரன் றான ளித்தெமை
யின்னல்செய் வேடனென் றிகழ்ந்து கூறினை
யன்னதால் வேட்டுவ வரச னாகியே.

(**இ - ள்.**) முன்னிய - நீ உத்தேசித்து வந்த, பகழி - அஸ்திரத்தை, முன் - முன்னதாக, நீ கோடி - நீ கொள்ளக்கடவை, என - என்று சொல்லி, தன் நிகர் - தன்னைத்தானே நிகர்க்கிற, சங்கரன் - சிவபிரான், அளித்து - அர்ஜுனனுக்குக் கொடுத்து, எம்மை—, இன்னல்செய் - துன்பஞ்செய்கிற, வேடன் என்று—, இகழ்ந்து கூறினை—, அன்னதால் - அந்தக் காரணத் தால், வேட்டுவ அரசன் ஆகி - வேடராஜனுகி எ-று.

முன்னல் - நினைத்தல், பகுதி முன். கொள்ளுதி யென்பது கோடி யென விகாரமாயிற்று. இன்னல் - கொலை யெனினுமாம். (௬௫)

தென்றிசைக் கயிலையைச் சென்று சேர்ந்துநீ
குன்றலி லன்புறுக் கொண்டு நம்மய
நன்றிகொ ளிலிங்கபூ சனைநற் பத்தியா
லொன்றையு முணர்ந்திடா துவந்து செய்தரோ.

(இ - ள்.) தென்திசை கயிலையை - தென் கைலாயத்தை, நீ சென்று சேர்ந்து - நீ போய்ச் சேர்ந்து, குன்றல் இல் - குறைதலில்லாத, அன்பு உரு கொண்டு - அன்பே வடிவாகப் பெற்று, நம்மயம் - எம் உருவாகிய, நன்றி கொள் - நன்மையைக் கொண்ட, இலிங்கபூசனை - லிங்கபூசையை, நல்பத்தியால் - மிக்க பக்தியினால், ஒன்றையும் உணர்ந்திடாது - ஒன்றையும் அறியாமல், உவந்து செய்து - நீ மகிழ்ந்து செய்து எ-று.

அரோ - அசை. தென்றிசைக்கயிலை - காளத்தி. மயம் - உரு. ஒன்றையும் உணர்த்திடாது - எல்லாவற்றையும் மறந்து. (கூகூ)

கோலமே முதலிய விலங்கு கொன்றுநீ
சாலவே தசையமு தருத்திச் சாருநா
ளேலவே முத்தியு மீதும் போவென
நீலமார் களத்திறை நீங்கி னனரோ.

(இ - ள்) கோலம் முதலிய - பன்றி முதலாகிய, விலங்கு-மிருகங்களை, கொன்று—, நீ—, சால - மிகுதியாக, தசை அமுது-மாமிசவுணவை, அருத்தி-எமக்கு ஊட்டி, சாரும் நாள் - வரும் நாளில், முத்தியும் - மோக்கத்தையும், ஈதும் - கொடுப்போம், போ என - போவென்று சொல்லி, நீலம் ஆர் களத்து-நீலகண்டத்தையுடைய, இறை - இறைவன், நீங்கினன் - நீங்கிப் போயினன் எ-று.

அரோ-அசை. முத்தியும் என்னும்மை இறந்தது தழீஇயது, களம்-வடசொற்றிரிபு. கண்டம் என்பது பொருள். இறை அகுபெயர். (கூஎ)

அன்ன தன் மையினருச் சுனனும் வேடனாய்
முன்னவன் பூசனை முயன்று செய்துபின்
கன்னிபங் குடையகா ளத்தி நாதனா
தன்னரு ளாலுயர் முத்தி சார்ந்தனன்.

(இ - ள்.) அன்ன தன்மையின் - அத்தன்மையாகவே, அருச்சுநனும்—, வேடன் ஆய்—, முன்னவன் - முதல்வனது, பூசனை - பூசையை, முயன்று செய்து—, பின் - பிறகு, கன்னிபங்கு உடைய - பெண்பாகத்தையுடைய, காளத்தி நாதனார் அருளால்—, உயர் - உயர்ந்த, முத்தி சார்ந்தனன் - மோக்கத்தையடைந்தான் எ-று.

முயன்று - முயற்சித்து. தன் சாரியை. முத்தி முக்தியென்னும் வடசொற்றிரிபு. (கூஅ)

கட்செவிப் பணிகொள்கா ளத்தி நாதனா
ருட்செறி கருணையா லொப்பில் சங்கமக்
கட்செறி வடிவொடு கழறு மிக்கதை
புட்செறி வேலிறை புந்தி தாங்கினன்.

(இ - ள்.) கட்செவி - பாம்பாகிய, பணி - ஆபரணத்தை, கொள் - பூண்ட, காளத்தி நாதனூர்—, உள் - தமது திருவுளத்தில், செறி - மிகுந்த, கருணையால் - கிருபையினால், ஒப்பு இல் - நிகரற்ற, சங்கமம் - ஜங்கமமாகிய, கட்செறி வடிவொடு—, கழறும் - சொன்ன, இ - இந்த, கதை - சரித்திரத்தை, புள்செறி - பறவை தங்கிய, வேல்-வேற்படையையுடைய, இறை - மன்னன், புந்தி தாங்கினன் - புத்தியினால் கிரகித்தான் எ-று.

கட்செவி - கண்ணினையே செவியாகவு முடையது (பாம்பு). சங்கமக் கட்செறிவடிவு - விடசங்கமவுரு. புட்செறிவேல் இறையென்றது யாதவ வேந்தனை. (சுக)

என்னையோர் பொருளென வெண்ணி யெம்பிரா
னன்னைபோ லருளினா லருளிச் செய்தனை
முன்னையான் முயறவ மூள வென்றிறை
பொன்னைநேர் சேவடி புனைந்து சென்னிமேல்.

(இ - ள்.) என்னை—, ஓர் பொருள் என எண்ணி - ஒரு பொருளாக மதித்து, எம்பிரான் - எம்பெருமானே, அன்னைபோல் - தாய்போல, அருளினால் - கருணையால், அருளிச் செய்தனை - அருள் செய்தாய், முன்னை - முற்காலத்தில், யான் - நான், முயல்தவம் மூள என்று - முயன்றுசெய்த தவம் மூளலாமென்று சொல்லி, இறை - இறைவனது, பொன்னைநேர் - பொன்னை நிகர்த்த, சேவடி - திருவடியை, சென்னிமேல் புனைந்து - சிரசின் மீது சூட்டிக்கொண்டு எ-று.

சேவடி - செவந்த திருவடி. புனைதல் - சூடல். பகுதி புனை. (எ0)

கைபிணைத் தெதிருற நின்ற காலையின்
மைமிடற் றிறையமர் மாசில் காளத்தி
யெய்தியப் பிறைமுடிக் கியன்ற கோயின்முன்
செய்வியென் றியம்பியத் தேவன் போயினான்.

(இ - ள்.) கைபிணைத்து-கைகட்டிக் கொண்டு, எதிர் உற நின்ற காலையில் - எதிரில் நின்றபோது, மை - கரிய, மிடறு - கண்டத்தை யுடைய, இறை - இறைவர், அமர் - எழுந்தருளியிருக்கிற, மாசு இல் - குற்றமற்ற, காளத்தி எய்தி - திருக்காளத்தியை யடைந்து, அ - அந்த, பிறை முடிக்கு - பிறை முடியார்க்கு, இயன்ற - தகுதியாகிய, கோயில் - திருக்கோயிலை, முன்- முன்னே, செய்வி என்று - செய்விப்பாயென்று, இயம்பி - சொல்லி, அ - அந்த, தேவன் - கடவுள், போயினான் - சென்றான் எ-று.

பிணைத்தல் - கட்டுதல், பகுதி பிணை. எய்தியென்பதற்குப் பகுதி எய்து. பிறைமுடியார் என்றற்கு பிறைமுடி யென்றது வடசொல் வழக்கு. "அளிகுலவேணி, பல்லவபாணி" என்றற் றொடக்கத்தன காண்க. (எக)

மறைந்திட மன்னவன் மண்ணிற் றாழ்ந்தெழுந்
தறைந்திட வரியவா மதிச யத்துடன்
பிறந்திடு பயன்மிகப் பேசி யின்பமே
நிறைந்தன னவன்செய னிகழ்த்தற் பாலதோ.

(இ - ள்.) மறைந்திட - (இறைவர்) மறைந்து போதலும், மன்னவன் - அரசன், மண்ணில் - பூமிமேல் விழுந்து, தாழ்ந்து - வணங்கி, எழுந்து—, அறைந்திட அரிய ஆம் - சொல்லுதற்கரிதாகிய, அதிசயத்துடன் - ஆச்சரியத்தோடு, பிறந்திடு - (மானுடப் பிறவியாக) பிறந்ததனு லடைந்த, பயன் - பயனை, மிகப்பேசி - மிகுதியாகச் சொல்லி, இன்பமே நிறைந்தனன் - ஆனந்தமே நிறையப் பெற்றான், அவன் செயல் - அவனது செய்கை, நிகழ்த்தற் பாலதோ - சொல்லற்பாலதோ எ-று.

அறைதல் - சொல்லல், பகுதி அறை. நிகழ்த்தல் - சொல்லல், பகுதி நிகழ்த்து. நிகழ்த்தற்பாலதோ வென்னு மோகாரம் எதிர்மறை. (எ௨)

தென்பெருங் கயிலையிற் றேவ னேயிவண்
மன்பெருஞ் சங்கம வடிவந் தாங்கின
னென்பதை யுணர்ந்திடு மிறைவன் சாலவுங்
கொன்புனை தவமுள கொம்பைக் கும்பிடா.

(இ - ள்.) பெரு - பெரிய, தென்கயிலையில் - தென்கயிலாயத்தில் வீற்றிருக்கிற, தேவனே - கடவுளே, இவண் - இவ்விடத்தில், மன்-நிலைபெற்ற, பெரு - பெரிய, சங்கம வடிவம் தாங்கினன் என்பதை-சங்கம ரூபங்கொண்டு எழுந்தருளினன் என்பதை, உணர்ந்திடும் - அறிந்துகொண்ட, இறைவன் - அரசன், சாலவும் - மிகவும், கொன்புனை - பெருமைபெற்ற, தவம் உள - தவப்பயனடைந்த, கொம்பை-பணிப்பெண்ணை, கும்பிடா-கும்பிட்டு எ-று.

தேவனே யென்னும் ஏகாரம் தேற்றம். கொம்பு ஆகுபெயர். கும்பிடா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (எ௩)

ஆடையு மணிகளு மனைத்து நல்கினன்
றேடரு மன்னைநீ செல்வ மோடுற்றீஇ
நீடிய பணியினை நீக்கென் றோதினு
னாடக மலையன வருந்த வத்தினன்.

(இ - ள்) ஆடையும் - வஸ்திரமும், அணிகளும் - ஆபரணங்களும் ஆகிய, அனைத்தும் - எல்லாப் பொருள்களையும், நல்கினன் - கொடுத்து, தேடு அரு அன்னை நீ - தேடுதற்கரிய தாயாகிய நீ, செல்வமோடு உற்றீஇ - செல்வத்தைப்பெற்று, நீடியபணியினை - பெரிய பணித்தொழிலை, நீக்கு என்று ஓதினன் - ஒழித்துவிடக் கடவையென்று சொன்னான், ஆடகமலை அன்ன - பொன்மலையை நிகர்த்த, அரு - அரிய, தவத்தினன் - தவச்செல்வத்தையுடையவனாகிய அரசன் எ-று.

நல்கல் - கொடுத்தல், பகுதி நல்கு. நல்கினன் முற்றெச்சம். உ-றீ -(இ) - சொல்லிசை யளபெடை. ஆடகம் - பொன். (எச)

எல்லையில் களிப்புட னெழுந்து மற்றைநாள்
வல்லையிற் சேனைகள் வருக வென்றனன்
வில்லயி றோமரம் விரைவிற் றாங்கியே
பல்லிய முழங்கிடப் பரந்த சேனையே.

(இ - ள்.) எல்லை இல் - அளவில்லாத, களிப்புடன் - மகிழ்ச்சியோடு, எழுந்து—, மற்றைநாள் - மறுநாள், வல்லையில் - விரைவாக, சேனைகள்—, வருக என்றனன்—, (என்றலும்) வில்—, அயில்—, வேல்—, தோமரம்—, (என்பவற்றை) விரைவில் - விரைவாக, தாங்கி - எடுத்துக்கொண்டு, பல் இயம் - பலவகை வாத்தியங்களும், முழங்கிட - முழங்க, சேனை - சேனைகள், பரந்த - பரவிச் சென்றன எ-று.

தோமரம் - ஓராயுதவிசேடம். பல்லியம் ஒரு சொல்லெனக் கோடலு மாம். இதற்கும் வாத்தியம் என்பதே பொருள். சேனை பரந்தவெனவியையும். (எரு)

சிவிகையி லேறினன் செல்வ மன்னவன்
கவிகையும் பிச்சமுங் கதலி வர்க்கமுஞ்
சவிதிக ழாதவன் றனைம றைத்தன
புவியுயிர் மன்னவன் போது மெல்லையில்.

(இ - ள்.) செல்வம் - செல்வப்பெருக்குள்ள, மன்னவன் - அரசன், சிவிகையில் ஏறினன் - பல்லக்கிலேறினான், (ஏறலும்) கவிகையும் - குடைகளும், பிச்சமும்—, கதலிவர்க்கமும்—, சவிதிகழ் - ஒளியோடு விளங்குகிற, ஆதவனை - சூரியனை, மறைத்தன—, புவி - பூலோகத்திலுள்ள, உயிர் - உயிர்போன்ற, மன்னவன் - அரசன், போதும் எல்லையில் - புறப்படுஞ் சமயத்தில் எ-று.

பிச்சம் - பீலிக்குஞ்சம், கதலிவர்க்கம். ஆதவன் ஆதபம் என்னும் வடசொற்றிரிபு. தன் - சாரியை. (எசா)

மேற்படி வேறு

மேரு வொத்து விளங்கிடு தேர்களுங்
காரை யொத்த கடுந்திறல் யானையும்
பாரை முற்றிடும் வாசிப் பரிகளும்
வீரர் யாவரும் வேலைசென் றாலென.

(இ - ள்.) மேரு ஒத்து - மேருமலையை நிகர்த்து, விளங்கிடு - பிரகாசிக்கிற, தேர்களும்—, காரை ஒத்த - கரிய மேகத்தை நிகர்த்த, கடுந்திறல் - பெருவலியுள்ள, யானையும்—, பாரை - பூமியை, முற்றிடும் - முடித்தற்குரிய,

வாசிப்பரிகளும் - குதிரைகளும், வீரர் யாவரும் - வீரர் எல்லாரும், வேலை சென்றால் என - கடல் கடந்தாற்போல எ-று.

வாசி - வாஜி யென்னும் வடசொற்றிரிபு. வேலை வேலா என்னும் வடசொற்றிரிபு. (எஎ)

எழுந்து சென்றிட வேந்தலு மேகிவான்
குழைந்த வெண்பிறை சூடுங் குழகனை
ரொழுங்கின் ஞான மலருமை யோடுவாழ்
தழைந்த சோலைத் தனிநகர் சார்ந்தனன்.

(இ - ள்.) எழுந்து சென்றிட - எழுந்து நடவாநிற்க, ஏந்தலும் - அரசனும், ஏகி - போய், வான் - மேன்மையுள்ள, குழைந்த - வளைந்த, வெள்பிறை - வெள்ளிய பிறைமதியை, சூடும் - தரித்த, குழகனர் - சிவபெருமானார், ஒழுங்கின் - ஒழுங்காக, ஞானமலர் உமையோடு வாழ் - ஞானப்பூங்கோதையம்மையுடன் வாழ்கிற, தழைந்த சோலை - தழைத்த சோலை சூழ்ந்த, தனி - ஒப்பற்ற, நகர் - நகரத்தை, சார்ந்தனன் - அடைந்தான் எ-று.

ஏந்தல் - பெருமையிற் சிறந்தோன் (அரசன்). குழைதல் - வளைதல், பகுதி குழை. குழகு - அழகு. குழகன் - அழகன். (எஅ)

பாச வேரை யறுக்கும் பராபரன்
வாச மாமிடம் வந்து வணங்கினு
னேச நெஞ்ச னிகரி றலத்திடை
யேசி லாவிடத் தெய்தி யிருந்தனன்.

(இ - ள்.) பாசவேரை - பாசமூலத்தை, அறுக்கும் - சேதிக்கிற, பராபரன்—, வாசம் ஆம் இடம் - எழுந்தருளியிருக்குமிடத்தை, வந்து வணங்கினன்—, நேசம் - அன்புள்ள, நெஞ்சன் - மனத்தை யுடையவனாய், நிகர்இல் - நிகரற்ற, தலத்திடை - தலத்தில், ஏசு இலா - குற்றமற்ற, இடத்து - இடத்தில், எய்தி இருந்தனன் - பொருந்தியிருந்தான் எ-று.

பாசவேர் - பிறவித்தளை. வணங்கினன் முற்றெச்சம். ஏசிலாவிடம் - பரிசுத்தமான இடம். (எகூ)

பொன்பெய் மாரி யனைய புரவலன்
மின்செய் செஞ்சடை வேதியன் மேவிட
மன்செ யுங்கரு விற்கரை மண்டப
முன்செய் மண்டப முற்று மியற்றினன்.

(இ - ள்.) பொன் பெய் - பொன்னைச் சொரிகிற, மாரி அனைய - மாரியை நிகர்த்த, புரவலன் - அரசன், மின்செய் - மின் கொடிகள் போன்ற, செஞ்சடை - செவந்த சடாபாரத்தையுடைய, வேதியன் - அந்தணன், மேவிட - எழுந்தருளியிருக்க, மன்செயும் - நிலைபெற்ற, கருவிற்கரை மண்டபம் - கருப்பக்கிருக மண்டபமும், முன்செய் மண்டபம் - கோபுரமும் ஆகிய, முற்றும் இயற்றினன் - முழுதும் செய்வித்தான் எ-று.

பொன்பெய்மாரி - பொன்னைப் பொழிகிற மேகம் எனினுமாம். மின்செய் செஞ்சடை வேதியன் என்றது சிவபிரானை. "பொலிந்திலங்கு மின்வண்ண மெல்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை" என்றார் பிறரும். (௨0)

அருளு மம்பிகைக் கோயிலு மைங்கரத்
தொருப ரஞ்சுட ருற்றிடு மாலயங்
குருப ரன்குகன் செவ்வேள் குமரன்றன்
னரிவை மாரொ டமரு நிலயமும்.

(இ - ள்.) அருளும் - அருள்செய்கிற, அம்பிகை கோயிலும் - உமாதேவியின் கோயிலும், ஐங்கரத்து - ஐந்து திருக்கைகளையுடைய, ஒரு - ஒப்பற்ற, பரஞ்சுடர் - பரஞ்சோதியாகிய விநாயக மூர்த்தியானவர், உற்றிடு - வீற்றிருத்தற்குரிய, ஆலயம் - கோயிலும், குருபரன்—, குகன்—, செவ்வேள்—, குமரன்—, தன் அரிவைமாரொடு - தன் தேவிமாரோடு, அமரும் - வீற்றிருத்தற்குரிய, நிலயமும் - ஆலயமும் எ-று.

அம்பிகை அம்பிகா என்னும் வடசொற்றிரிபு. குருபரன் - குருஸ்ரேஷ்டன், சிவபெருமானுக்கு ப்ரணவப்பொருளுபதேசித்ததனால் இப்பெயர் உண்டாயிற்று. அரிவைமார் என்றது வள்ளியம்மை தெய்வயானையம்மையென்பவரை. (௨௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

மாலய னிரவி யிந்து வயிரவன் றுர்க்கை சண்டி
கோலமார் நந்தி யின்னோர் கோயில்கள் பிறவு மாற்றிப்
பாலினோங் கெயிலே கம்பம் பலியிடும் பீடஞ் செய்து
தூலமா மிலிங்க மென்னுந் துகளில்கோ புரமு மாக்கி.

(இ - ள்) மால்-விட்டுணு, அயன் - பிரமன், இந்து - சந்திரன், வயிரவன்—, துர்க்கை—, சண்டி—, கோலம் ஆர் நந்தி - அழகு பொருந்திய நந்தி, இன்னோர் - இவர்களுடைய, கோயில்கள்—, பிறவும் - பிறவற்றையும், ஆற்றி - உண்டாக்கி, பாலின் - பக்கங்களில், ஓங்கு - உயர்ந்த, எயில் - மதில், கம்பம் - த்வஜஸ்தம்பம், பலியிடும் பீடம் - பலிபீடம், செய்து - உண்டாக்கி, தூலம் ஆம் இலிங்கம் என்னும் - ஸ்தூலலிங்க மென்கிற, துகள் இல் - குற்றமற்ற, கோபுரமும் ஆக்கி-கோபுரத்தையும் உண்டாக்கி எ-று.

அயன் அஜன் என்னும் வடசொற்றிரிபு. இந்து - வடசொற்றிரிபு. வைரவன் துர்க்கை யென்பனவும் பைரவன் தூர்க்கா என்னும் வடசொற்றிரிபுகளே. கம்பம் - ஸ்தம்பம் என்னும் வடசொற்றிரிபு. பலிபீடம் என்பதும் அது, கோபுரமும் அது. (௨௨)

மையக வையங் கொண்ட வானவன் றனக்குத் தேருஞ்
சையமா மகளுக் கேற்ற சயந்தனம் பிள்ளை யார்க்கு
மையறு மிரத மெங்கள் வள்ளிநா யகற்குச் சீர்சால்
செய்யபொற் சகடஞ் சண்டி சேர்சிறு தேருஞ் செய்தான்.

(இ - ள்.) வையகம் - பூமியாகிய, வையம் - தேரை, கொண்ட—, வான வன் தனக்கு-கடவுளுக்கு, தேரும் - ரதமும், மா - பெரிய, சையமகளுக்கு - மலைமகளுக்கு, ஏற்ற - தகுந்த, சயந்தனம் - தேரும், பிள்ளையார்க்கு - விநாயகருக்கு, மை அறும் இரதம் - குற்றமற்ற தேரும், எங்கள் வள்ளி நாயகற்கு - எங்கள் வள்ளிமணாளனுக்கு, சீர்சால் - சிறப்புமிக்க செய்ய - செவ்விய, பொன் சகடம் - பொற்றேரும், சண்டி - துர்க்கை, சேர்-சேர்தற் குரிய, சிறு தேரும் செய்தான்—, எ-று.

வையகவையங்கொண்ட வானவன் - பரமசிவன். இவர் வையக வையங்கொண்டது த்ரிபுரதகந காலத்தில். சையம் - மலை. சையமகள் - உமாதேவி. சயந்தநம்-வாய்ந்தநம் என்னும் வடசொற்றிரிபு. வள்ளிநாயகன்- முருகவேள். சகடம் - ஸகடம் என்னும் வடசொற்றிரிபு. (அங)

உந்தியை யொதுக்கி யூரு மொப்பில தெனவி யற்றிச்
செந்திரு வமரங் காடித் தெருவொடு தேரு லாவு
மந்தமில் வளமு டைத்தாம் வீதியு மணியி னாக்கி
யிந்திர நகரு நாண வியற்றின னிணையி லாதான்.

(இ - ள்.) உந்தியை - கடலொலியை, ஒதுக்கி - விலக்கி, ஊரும் - பரவுகிற, ஒப்பு இலது என - ஒப்பற்ற தென்னும்படி, இயற்றி - செய்து, செந்திரு - திருமகள், அமர் - அமர்ந்திருக்கிற, அங்காடித் தெருவோடு - கடைத்தெருவுடன், தேர் உலாவும் - தேர்கள் உலாவுகிற, அந்தம் இல் - முடிவற்ற, வளம் உடைத்து ஆம் - செல்வமுடைத்தாகிய வீதியும், அணியின் ஆக்கி - அழகுடைத்தாகச் செய்து, இந்திர நகரும் நாண-ஸ்வர்க்கலோகமும் நாணும்படி, இணையிலாதான் - இணையற்றவன், இயற்றினன் - செய்வித்தான் எ-று.

இந்திரநகர் - அமராவதி நகர். இணையிலாதான் என்றது யாதவமன்னனை. (அச)

நித்திய நைமித்தி யத்தா னிகழ்தரு பூசை யாற்றி
யத்தனுக் கணிவி ழாவு மன்புட னியற்றி மிக்க
பத்திசெய் யாத வன்று ன் பரிவொடு முலக மாண்டு
முத்தியங் கயிலை யிற்போய் முதலுடன் வீற்றி ருந்தான்.

(இ - ள்.) நித்தியநைமித்யத்தால் - நித்தியநைமித்யங்களால், நிகழ்தரு- நடக்கவேண்டிய, பூசை ஆற்றி - பூசைகளைச் செய்து, அத்தனுக்கு - சிவபிரானுக்கு, அணிவிழாவும் - அழகிய திருவிழாவையும், அன்புடன் இயற்றி - அன்போடு செய்து, மிக்க பத்திசெய் - மிகுதியாகிய பக்தியைச் செய்கிற, யாதவன் - யாதவமன்னன், பரிவொடும் - அன்புடனே, உலகம் ஆண்டு - உலகத்தை யாண்டு, முத்தி - முக்தியென்கிற, அம் - அழகிய, கயிலையில் போய் - கைலாசத்திற் சென்று, முதலுடன் வீற்றிருந்தான் - முதல்வனோடு வீற்றிருந்தான் எ-று.

நித்யம் - நாடோறுஞ் செய்யும் பூசை. நைமித்திகம் - நித்யபூசையில் நேருங் குற்றமொழியச் செய்யும் வருஷாந்தர பூசை. விழா - உத்ஸவம். முதல் ஆகுபெயர். (அ௫)

மேற்படி வேறு

இனைய தாகிய தென்கயி
லாயம்வா ழிறைபெரும் புராணத்தை
மனமகிழ்ந் துநன் றோதினர்
கேட்டவர் மாறில்வண் பொருள்சொன்னோர்
மனையு மைந்தரு மாநிதி
வளத்தொடு மாநிலந் தனில்வாழ்ந்து
தனைநி கர்த்திடு மிறைவன்வாழ்
கயிலையிற் சார்ந்தினி திருப்பாரால்.

(இ - ள்.) இனையது ஆகிய - இத்தன்மைத்தாகிய, தென்கயிலாயம் வாழ் - தென்கயிலையில் வாழ்கின்ற, இறை - இறைவரது, பெரும் புராணத்தை—, மனமகிழ்ந்து—, நன்று ஓதினர்—, கேட்டவர்—, மாறு இல், - விரோதமில்லாத, வண்பொருள் சொன்னோர்—, மனையும்—, மைந்தரும்—, மாநிதிவளத்தொடு—, மாநிலந்தனில் வாழ்ந்து—, தனை நிகர்த்திடும் - தன்னைத்தானே நிகர்க்கிற, இறைவன் வாழ் - முதல்வன் வாழ்கிற, கயிலையில் சார்ந்து - கைலாயத்திற் சேர்ந்து, இனிது இருப்பார் - இனிதாக வீற்றிருப்பார் எ-று.

இறை ஆகுபெயர். மனையும் அது. (அ௬)

மேற்படி வேறு

வையக முழுதும் வாழ்க மாதமும் மாரி பெய்க
செய்யகோ லரசன் செய்க திருவறஞ் செய்வோ ரோங்க
தையலோர் பாக னன்பர் தரணியின் மிகவு மோங்க
வையஞ கமநூல் கூறு மருந்தவர் வாழ்க மிக்கே.

(இ - ள்.) வையகம் முழுதும் வாழ்க—, மாதம் மும்மாரிபெய்க—, அரசன்—, செய்யகோல் செய்க - செங்கோல் செலுத்துக, திரு அறம் செய்வோர் ஓங்க—, தையல் ஓர் பாகன் அன்பர் - சிவனடியார், தரணியில் - பூவுலகில், மிகவும் ஓங்க—, ஐயன் ஆகமநூல் கூறும் - சிவாகம நூல்கள் சொல்லுகிற, அருந்தவர் - அரிய தபோதனர், மிக்கு வாழ்க - மிகுந்து வாழ்க எ-று.

மும்மாரி - மூன்று மழை. திருவறம் - சிறந்த தருமம். தையலோர் பாகன் - உமாதேவியை யொருபங்கி லுடையவன். தரணி - வடசொற் றிரிபு. (அ௭)

சிலந்திமுதல முற்கதைச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௪0௬௪.

## சிலந்தி

**பிரமதேவர்** படைத்தற்றொழிலை நடத்திக்கொண்டிருக்கவும், விசுவகன்மனது கண்ணிலுதித்த **மாதவவூறனென்பவன்**, அப்பிரமதேவரை மதியாது, தானும் உலகங்களைப் படைக்க; அவர் அவன் வரும்படி சிந்தித்து, அக்கணமே வந்து நின்ற அவனைநோக்கிக் கடுங்கோபங்கொண்டு, "நீ, சிறியநூலினையுண்டுபண்ணும் **சிலந்தியாகுக**" என்று சபித்தனர். பின்னர் அவன் வணங்கிப் பெரிதும் பிரார்த்தித்தலால், உளங்கனிந்து, "பிள்ளாய் நீ அஞ்சேல்; விமலர் வீற்றிருக்கும் கயாரணியத்திலுள்ள வில்வவனத்தையடைந்து, சிலந்தியாகித் **தென்கயிலாயப் பெருமானைப்** பூசித்து, அருங்கதி யடைவாயாக" என்று அநுக்கிரகிக்க; அம் மாதவவூறன் அவ்வண்ணமே சிலந்தியாகி, ஆலயமமைத்து வழிபட்டு, வினையையொழித்து வீட்டையடைந்தனன்.

## பாம்பு

பதிப்பொருளின் சத்துவகுணங்களும் பற்பலகோடி சந்திரர்களும் ஒருருவெடுத்தாலொத்த **திருக்கைலையிலே**, அநேக விம்பிதங்களோடு நிகரின்றி விளங்கும் **சிவபுரத்திலே**, ஒருதினம் எம்பெருமான் சிங்காதனத்திலெழுந்தருளத் திருவுளங்கொண்டு, திருமேனியிலே புலித்தோலாடை முதலிய புனைந்து, ஆதிசேடன் முதலிய பாம்புகளை ஆபரணமாக அணியும்போது, **காளனென்னும்** பாம்பைக் காணாது, சிந்தித்து நோக்குங்கால், அது விரகங்கொண்டு மகளிர்பாலடைந் திருத்தலையறிந்து, அதை யழைத்து, "**காளனே**, நீ கயாரணியத்தையடைந்து பாம்பாகுக" என்று பணித்தனர். பின்னரும் கருணையோடு நோக்கி, நீ பாம்பாகியிருக்குங்கால், ஒரு **யானையும்** பூசிக்க எய்தும். அப்பொழுது நீ பகைகொண்டு கொல்ல, இருவரும் மடிந்து முத்தியை யடைவீர்" என்று கட்டளையிட; அங்ஙனமே உதித்து, எம்பெருமானை இரத்தினங்களினால் வழிபட்டுக்கொண்டிருந்தது.

## யானை

இருக்கும் நாளிலே, திருக்கைலையில் **அத்தியென்னும்** கணத்தலைவன் சிவபெருமான் சந்நிதிவாயிலையடைந்து, "யான் பிரானைவணங்க விடுவீராக" என்றுரைக்குங்கால், வாயிற்காவலர், "பெருமான் உமாதேவியும் தானுமாகத் தனித்து வீற்றிருக்கின்றார்; அங்கே செல்லுதலடாது: இங்கே நிற்க என' உரைக்கவும், கேளாது உட்சென்றனன். **அம்பிகை** முனிந்து, "அத்தியே, நீ யானையாகுக" என்று கட்டளையிட்டு, பின்னரும் அக் கணநாதனது பிரார்த்தனைக் கிரங்கி, "நீ கயாரணியத்திலே, **யானையுருக்கொண்டு** தென்கைலாயப்பெருமானை வழிபடுங் காலத்திலே, நினக்கும் அப்பரனை வழிபடும் ஓர் பாம்புக்கும் பகைமை நிகழ; இருவரு மடிந்து, முத்தியை யடைவீர்: செல்க" என்று ஆஞ்ஞாபிக்க; அக் கணநாதன் அவ்வாறே யானையாகி, திருமஞ்சன பத்திர புஷ்பாதிகளாற் பெருமானை வழிபட்டு, பாம்போடு முத்தியையடைந்தனன்.

## கண்ணப்ப நாயனர்

பாண்டவர்களுக்குள்ளே அருச்சுனனென்பவன், துரியோதனன் முதலிய பகைவரை வெல்லும்பொருட்டு, பரமனை வேண்டிப் பாசுபதாஸ்திரம் பெற விரும்பி, இந்திரகீலமலையை யடைந்து, சுனைநீராடி, மடியுடுத்து, வெண்ணீறணிந்து, உருத்திராக்கமணி புனைந்து ஐந்தெழுத்தையு முச்சரித்து, நியதி முடித்து, வேறு தனியிடத்தையடைந்து, உரிய ஒரு ஆசனத்திலே தங்கி' பிராணவாயுவை இடைகலை பிங்கலையின்வழிச் செல்லாது சுழுமுனை வழியாகச் செலுத்தி, ஆறு தாரங்களையுங் கடந்து, பிரமரந்திரத்திலே விளங்கும் ஜோதிசொரூபத்தில் மனத்தை லயப்படுத்தி அருந்தவம் புரிந்து கொண்டிருந்தனன். இங்ஙன மிருக்குங்கால், இவனைக் கொல்லுதற் பொருட்டுத் துரியோதனனு லேவப்பட்ட மூகாசுரனென்பவன், கொடிய பன்றியுருக்கொண்டு, அக்காட்டிலே முனிவர் முதலியோர்க்குக் கடுந்துயர் விளைத்துக்கொண்டிருக்க; சிவபெருமான் அர்ச்சுனனுக்கு ஆபத்து விளையாவண்ணம் அதனை மடிக்கத் திருவுளத்திலுன்னி, ஒரு வேடவுருக்கொண்டு, புலித்தோலிறுக்கி, உடைவாள் செருகி, கவடி குன்றி சங்கமணி ஆத்தி கொன்றை முதலிய மாலைகள் புனைந்து, அம்புத்தூணியை முதுகிலேகட்டி, வில்லம்பு கைக்கொண்டு, தமக்கியைய அவ்வேடவுருவெடுத்த அம்பிகையோடு, அக்காட்டையடைந்து, அப்பன்றியை நெருங்கி, ஒரு திருவிளையாடலாக ஒரு கூரிய கணையை மெல்ல விடுத்தனர், அதுபடுதலும், அப்பன்றி யஞ்சி, மேகம்போலப் பெரிது முழங்கி மறைந்து, முனிவரிருக்கு மிடத்தை யணுக; அவர்கள்பயந்து, மெய்வெயர்க்கவோடி, விஜயனையடைந்தனர். அவனெழுந்து வில்லம்பு கைக்கொண்டு சென்று, தன்னையெதிர்த்த அப்பன்றிமீது கடுங்கணையொன்று தூண்டி, பூமியிலே வீழ்விக்க: அத்தருணத்திலே, அதைத் தொடர்ந்துவந்த சிவபிரான் சமீபித்து, இப்பன்றியை "யான் மடித்தனன்" என்று கூறினர். அருச்சுனன் பிரானை நோக்கி, "வேடனே, நின்பாணம் இதையுருவும் ஆற்றலுடையதோ? யான் விடுத்தபாணம் உருவி மடியச்செய்ததுகண்டும், பயனற்ற வார்த்தை பேசுகின்றாய், இனிவில்லைக் கைக்கொண்டு விரையச் செல்வாயாக" என்றுரைக்க: இவ்வண்ணம் வாதிடுதலால் கலகம் விளைந்தது

இருவரும் கணைகளை பொழிந்து யுத்தஞ் செய்யுங்கால் அருச்சுனன் சினந்து, தனது நாணற்ற வில்லைக்கொண்டு அதிர்த்துத் தாக்க; அவ்வடி சராசரங்களெல்லாம் படும்படி அடியவர்களுக் கெளியராகிய பெருமானும் திருமுடியி லேற்றருளி, உடனே விஷ்ணுவாதிதேவர்கள் அரகரவென்று கரங்குவித்து வணங்க, உமாதேவியாரோடு இடபவாகனருடராய்க் காட்சி தந்தருளினர். அர்ச்சுனன் கண்களிக்கக்கண்டு, மெய் நடுங்கி வெயர்த்துச் சோரவும், உள்ளிருந்தெழுந்த அன்பின் பெருக்கம்போலக் கண்ணீர் பெருகவும், பலமுறை வீழ்ந்து, நமஸ்கரித்தெழுந்து, மயங்கி நின்று, பின்னர்த் தெளிந்து, "ஐயனே, சிறியேன்செய்த பிழையைப் பொறுப்பது தேவரீர்திருவருளுக்குக் கடமையாகும்" என்று பிரார்த்தித்தனன். பெருமான் திருவருள்சுரந்து

"மைந்தனே, அஞ்சேல்; நீ கூறிய மொழியனைத்தும் நமது குமரனது மொழி போல அங்கீகரித்தனம்: உனக்கு வேண்டும் வரம் யாது? விண்ணப்பிப்பையேல், தந்தருளுவேம்" என வினவ; பார்த்தன் பத்திபிற்பணிந்து, "அத்தனே, வெந்துயர்ப் பிறவியால் மிகவு மெலிந்தனன்; இனி வீட்டினையருள்க" என வேண்டிக்கொண்டனன். முதல்வனார் தனஞ்சயனே, நீ பகைவரை யழிக்கப் பாசுபதாஸ்திரத்தை விரும்பித் தவம்புரிந்தாயாதலின் முன்னர் அதனைப் பெற்றுக்கொள்வாயாக" என்று கைக்கொடுத்து, பின்பு "நம்மை வேடனென்று இகழ்ந்து கூறினையாதலால் நீ வேட்டுவ அரசனாகி, தென்கைலையைச் சார்ந்து, அன்பே உருவமாகி, வேறு சிந்தனையின்றி, நாகலிங்கத்தை நன்கு பூசித்து, பன்றிமுதலிய விலங்குகளின் தசையைப் பரிந்து உண்பித்து, வாழுநாளிலே, முத்தியைத் தந்தளிப்போம்" என்றுரைத்து, மறைந்தருளினார். அவ்வாறே அர்ச்சுனனும் **திண்ணனாராக** அவதரித்து, திருக்காளத்தியப்பரைப் பூசித்து, சிவகதியடைந்தனன்.

ஆதலால், இத்தலம் யாவர்க்கும் இகபரமோக்ஷங்களைப் பாலித்து, எத்தலங்களிலும் சிறந்ததாகி, உலகிற் சிவபுரமென விளங்காநின்றது என்று சங்கமேச ருபதேசித்தருள; யாதவமஹாராஜா கேட்டு, பேரானந்தமடைந்து, "எம்பெருமானே, தேவரீர் என்னை யொருபொருளாகக் கருதி இவ்வற்புத சரித்திரங்களையெல்லாம் இசைத்தருளினீர்; யான் என்ன தவம் புரிந்தேன்" என்று திருவடிகளைச் சிரமேற் சூடிக்கொண்டு, கைகட்டி எதிரேநிற்க; சங்கமேசர் அரசனைநோக்கி, "நீ காளத்தியை யடைந்து, நம்பெருமானுக்குத் தக்கபடி ஓராலய மியற்றுவாயாக" என ஆஞ்ஞாபித்து, மறைந்தருளினார் அதுகண்ட அரசர் பெருந்தகை அத்தியந்த ஆச்சரியத்துடன் திக்குநோக்கிப் பலமுறை நமஸ்கரித்து, இச்சனனமே நற்சனனமெனக் களிகூர்ந்து, பின்பு "ஆ ஆ! எம்பெருமானே, சங்கமவுருவந்தாங்கி எழுந்தருள இம் மங்கை என்ன தவம் புரிந்தாள்" என்று வியந்து, அக்கலந்திருத்தும் பெண்ணை வணங்கி, ஆடையணி முதலிய அனைத்தையு நல்கி, "அன்னையே, நீ இன்றுமுதல் முந்திய குற்றேவலை விடுத்து அரியசெல்வங்களை அனுபவித்துக்கொண்டு வாழ்வாயாக" என்று வகுத்தனர். மறுதினத்திலே, நால்வகைச் சேனைகளும் புடைசூழ்ந்து வர சிவிகையிலேறி, **கயாரணியத்தை** யடைந்து, **நாகலிங்கப்பெருமானைத்** தரிசித்து, அப்பெருமானுக்கும், **ஞானப்பூங்கோதையம்மை**முதலிய மூர்த்திகளுக்கும், கர்ப்பக்கிருகம் அர்த்தமண்டபம் மஹாமண்டபம் மதில் கோபுரம் துஜஸ்தம்பம் பலிபீட முதலியவைகளைத் தக்கபடி யமைத்து, பஞ்சமூர்த்திகளுக்கும் இரதம் வாகனம் ஆபரணாதிகளையும் வகுத்து, பொன்முகரி நதியை யொதுக்கி, நகரமும் நிகரில்லாமலுண்டாக்கி, ஆலயத்திற்கு நித்தியநைமித்திகங்களையும் திருவிழாவையும் நியமித்து நடாத்தி, சிலநாளரசாண்டிருந்து, திருக்காளத்திநாதருடைய திருவடி நீழலை யடைந்தனர்.

**சீகாளத்திப்புராணம் முற்றுப்பெற்றது**